*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

## திருமூலர் அருளிய

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை {II}


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

நிறுவன வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



Enable | Enlighten | Enrich

KARPAGAM UNIVERSITY

(Under Section 3 of UGC Act 1956)

**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

**கற்பகம் பல்கலைக்கழகம்**

ஈச்சநாரி, கோவை - 21

## நூற்குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **திருமந்திரம் பத்தாம் திருமுறை (II)** |
| ஆசிரியர் | : | **திருமூலர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **49** |
| முதற்பதிப்பு | : | **2016** ஆகஸ்ட் |
| பக்கங்கள் | : | 768 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | டெமி 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>அலைபேசி : 98431 74238 |



# திருமூலர் அருளிய
# திருமந்திரம்
# பத்தாம் திருமுறை

*(நான்கு, ஐந்து மற்றும் ஆறாம் தந்திரங்கள்)*

## பொருளடக்கம்

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமூலர் அருளிய திருமந்திரம்
(*நான்கு, ஐந்து மற்றும் ஆறாம் தந்திரங்கள்*)

## வழிபாட்டுக் கருத்தரங்கம்

(27.08.2016, 28.08.2016 **சனி**, **ஞாயிறு**)

**உள்ளத்தும் உள்ளன் புறத்துளன் என்பவர்க்**
**குள்ளத்தும் உள்ளன் புறத்துளன் எம்மிறை**
**உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்**
**குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே. – திருமந்திரம் 1512.**

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள் (10)

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) சிவத்தைத் தவிர மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

> இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை
> இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
> இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்
> இல்லடைந் தானுக்கில் லாத்தில் லானையே.

– திருமந்திரம் 1399

அன்புடையீர், வணக்கம்.

இறையுணர்வுடையவர்கள் எப்பொழுது எழுதத் தொடங்கினாலும் முதலில் 'உ' என்ற பிள்ளையார் சுழி என்னும் எழுத்தை எழுதி விட்டுத்தான் தாங்கள் எழுத எடுத்துக்கொண்ட தலைப்பிற்கு உரியவற்றை எழுதுதற்குத் தலைப்படுவர். 'உ' என்பது உகாரம். இந்த எழுத்தில் ஒரு சுழி அல்லது வட்டம் மற்றும் ஒரு நேர்க்கோடு ஆகியன அமைந்துள்ளன. நேர்க்கோடு (–) நாதத்தைக் குறிக்கும். வட்டம் (0) விந்துவைக் குறிக்கும்.

**நாதம்**

படைப்புக் கால முதலில் அல்லது பெருவெள்ள மகாசங்கார காலத்தின் இறுதியில், நெடுங்கால மயான அமைதிக்குப்பின் சிவபெருமான், மீண்டும் படைக்கத் திருவுள்ளம் பற்றிச் சிறு அசைவை ஏற்படுத்த, அது ஒரு வகை சப்தமாக உருக்கொள்ளும். இந்தச் சப்தமே, 'நாதம்' எனப்படும். பொருளற்ற சப்தமானால் அது, 'ஓசை'. பொருளுடைய சப்தமானால் அது, 'ஒலி'. இரண்டும் அவரே. "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" என்ற அப்பர் பெருமான் திருவாக்கு இந்நோக்கம் உடையதாகும். "தோற்றம் துடியதனில்" என்ற பாடலில் அருளப் பெற்றுள்ளவாறு 'துடியாகிய சிவபெருமானின் உடுக்கையிலிருந்து மூலநாதம் தோன்றும்' என்று நம் முன்னோர்கள் பதிவு செய்துள்ளார்கள்.

**விந்து**

"ஒருருவாயினை மானாங்காரத்து ஈரியல்பாய்" என்ற திருஞானசம்பந்தரின் திருஎழுகூற்றிருக்கை வாக்குக்கேற்ப சிவபெருமான், உயிர்களின் வினை அனுபவத்துக்காகச் சத்தியைத் தோற்றுவிக்க, அந்தச் சத்தியிருந்து ஒளி ஏற்பட, அந்த அருளொளியே, 'விந்து' எனப்படும்.

சிவம், சத்தி, நாதம், விந்து என்பவற்றோடு, இவற்றால் இயக்கப்படும், 'சுத்தவித்தை' என்ற ஐந்தும் சேர்ந்து, 'சிவதத்துவம்' எனப்படும். சைவ சித்தாந்த உலகம் பகரும் 36 தத்துவங்களில் இவ்வைந்தும் மிக உயர்ந்த நிலையைச் சார்ந்தவை.

'ஓசையும், ஒளியுமின்றி, உலகம் கிடையாது' என்பதை உணர்த்துவதற்காகவும், இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான் தாள் பற்றி வாழ்ந்து உய்வு எய்தவும், எதை எழுதத் தொடங்கினாலும் இறையுணர்வோடுதான் எழுதத் தொடங்கி, வாழ்வாங்கு வாழ வேண்டுமென்பதற்காகவும் தான், இப்படி பிள்ளையார் சுழி போட்டுத் தொடங்க வேண்டுமென்று சிவபெருமான் வழிவகுத்தார்; உணர்த்தினார்; உணர்ந்தவர்களாகிய நாமும் செய்து கொண்டிருக்கிறோம்.

பிள்ளையார் சுழி போடும் நுட்பமான விளக்கத்தினை திருமூலதேவநாயனார் கீழ்க்காண் பாடலில் விளக்கியுள்ளார்.

> வெளியில் இரேகை இரேகையில் அத்தலைச்
> சுளியில் உகாரமாம், சுற்றிய வன்னி
> நெளிதரு கால் கொம்பு நேர்விந்து நாதம்
> தெளியும் பிரகாரம் சிவமந் திரமே

எதுவும் எழுதப்படாத ஒன்றில் ஒரு நேர்கோடு இழுத்து, அக்கோட்டின் தலையில் ஒரு சுளியை இட்டால், அது உகார வடிவாய்த் தோன்றும். அதில், கொம்பு எனப்படும் சுளி, விந்துவைக்குறிப்பது.

நேர் – நேர்க்கோடு நாதத்தைக் குறிப்பதாகும். மேலும் இதுவே, 'கொம்பு' எனப்படும் சுளி – வன்னியுமாகும் (தீ).

நேர்க்கோடு கால்(காற்று) ஆகும். எனவே 'உ' என்னும் குறியீடு காற்றையும், நெருப்பையும் குறிப்பதாக விளங்குகிறது.

சுளி → விந்து → தீ → சத்தி → பீடம்

நேர்க்கோடு → நாதம் → காற்று → சிவம் → செங்குத்தான கோடு → இலிங்கம்

உகாரம் ഉசுழி கீழாகவும், கோடு செங்குத்தாகவும் அமையும் போது இலிங்கமாக விளங்குகிறது. இதைத் திருமந்திரம் ஆன்மலிங்கம் என்ற அதிகாரத்தில்,

> விந்து நாதமும் மேவும் இலிங்கமாம்
> விந்து வதே பீடம்; நாதம் இலிங்கமாம் என்று

கூறுவதைக் காணலாம்.

அதாவது ഉ என்னும் குறியீட்டினுள் நாதமும், விந்துவும் அடங்குவனவாகிய, சேர்ந்ததுதான் இலிங்கம். இதில், கீழேயுள்ள சுழி(விந்து) ஆவுடையாராகும். மேல்நோக்கிய கோடு (நாதம்) இலிங்கமாகும். ஆக நாத விந்துவாகிய சிவசத்தி இணைந்த, அருவுருவ லிங்கத் திருமேனியாகும். இது சிவமந்திரமாகும் என்பதையே "தெளியும் பிரகாரஞ் சிவமந்திரமே" என்ற வாக்கு கூறுகிறது.

திருமூலர் தமது நூலினை ஆகமம் எனக் குறிப்பிடுகின்றாரேனும், வடமொழியில் உள்ள ஆகமங்களைப் போலச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களாக வகுக்கவில்லை. ஆயினும், இச்செய்திகள் சிறியதும், பெரியதும் ஆகிய அளவில், இந்நூலில் இடம்பெறுகின்றன. அதுபற்றியே சேக்கிழார்,

"ஞான முதல் நான்கும் மலர் நற்றிருமந்திர மாலை"

எனச் சரியை முதலிய நான்கு வகை மலர்களால் தொடுத்த மாலையைத் திருமூலர் அமைத்தார் எனக் கூறினார். திருமந்திரத்துள் சரியை, கிரியை, ஞானம் ஆகிய மூன்று செய்திகளைவிட, யோகம் பற்றிய செய்தியே மிகுதியாகவும், தலைமையாகவும் இடம்பெறுகிறது. சைவ சமயம் பற்றிய விரிவான சாத்திர நூலாக முதல் முதலில் அருளப் பெற்ற இந்நூல் யோகத்திற்குச் சிறப்பிடம் அளித்து, மிக விரிவானதொரு யோக நூலாக இயற்றப்பட்டமை குறிப்பிடத்தக்கது. இந்நூல் பதஞ்சலி முனிவரின் யோக சூத்திரத்தைக் காட்டிலும் மிக விரிவானது. பதஞ்சலி கூறும் அட்டாங்க யோகத்தை அடிப்படையாகக் கொண்டு, அதனைச் சிவயோகமாக வளர்த்துக் காட்டுகிறது திருமந்திரம், இஃது அட்டாங்க யோகத்தை மட்டுமே கூறி அமையாமை போலக் குண்டலினி யோகம், அடயோகம் முதலிய பிறவகை யோகங்களையும் கூறாது, குண்டலினி சத்தியையும், சிவயோக நெறியில் பயன்படுத்தும் முதிர்ச்சி பெற்ற ஒரு நெறியைக் கூறுகிறது. முன்பு எடுத்துக்காட்டியது போல், பிறநெறிகளின் செல்வாக்கால் (எந்த யோகத்தைப் பற்றித்) திருமூலர் கூறினாலும், அதனையும் சிவநெறிச் சார்புடனேயே கூறியுள்ளார்.

திருமூலர் தமது நூலுக்குச் 'சதாசிவாகமம்' என்று பெயரிட்டார். அப்பெயருக்கு ஏற்ப இந்நூலின் மையக் கருத்தாக சதாசிவ மூர்த்தியை யோக நெறியில் வழிபாடு செய்தலை அமைத்துள்ளார். இம்மையக் கருத்தைச் சார்த்தியே, நூலின் இயல்கள் அனைத்தும் அமைக்கப்பட்டுள்ளன.

சதாசிவ மூர்த்தியை யோக நெறியில் வழிபாடு செய்தற்காக ஆசிரியர் திருமூலர் 'திருவம்பலச்சக்கரம்' என்னும் மந்திரத் தியான முறையைத் தாமே புதுவதாக அமைத்து விளக்கி உரைக்கின்றார். சக்கரம் என்பதும் மண்டலம் என்பதும் ஒரு பொருட் சொற்கள். சக்கர முறையில் அமைக்கப்பெற்ற மந்திர முறையை எழுதி வைக்கும் சாதனத்தை 'இயந்திரம்' என்பர். உடம்பும் ஓர் இயந்திரம் ஆதலின், அதன்கண் மூலக்கனலை எழுப்பிப் பயிலும் யோகத்திற்கு மந்திரங்கள் தியானித்தலை உந்து சக்தியாகக் கொள்ளும்போது இவ்வகையோகமே ஒரு இயந்திர வழிபாடாகிறது.

திருமூலர் திருவம்பலச்சக்கரத்தில் திருவைந்தெழுத்து மந்திரத்தை, இவ்வைந்தெழுத்துக்களும் ஐந்து முறையாக மாறியமையும் அடுக்குகளாக அமைத்து, சக்தி–சிவன் இருவருக்கும் உரிய பீஜமந்திரங்களோடு சேர்த்துத் தியானிக்கும் முறையைக் கூறுகின்றார். இக்காலத்தில் 'சிதம்பர இரகசியம்' எனக்

கூறுவது இத்திருவம்பலச்சக்கரமே எனக் கருத இடம் இருக்கிறது. சத்தியும் சிவமுமாகக் கலந்து நிற்கும் இம்மூர்த்தியைச் சிவயோக நெறியில் வழிபாடு செய்வதால், யோகி தனது உச்சந்தலைக்கு மேல், தான் காணும் சிதாகாசவெளியில் சிவபெருமானின் ஆனந்தத் தாண்டவத்தைக் காண்பான். அச்சிவத்துடன் உணர்வு கலந்து, பேரின்பம் எய்துவான்.

இத்திருவம்பலச் சக்கரத்தில் உள்ள திருவைந்தெழுத்து மந்திரத்தையே திருமூலர், 'மந்திரமாலை' என, தம் வரலாறு கூறும் அதிகாரத்துள் குறிப்பிடுகின்றார் என்று கருதலாம்.

''மறப்பிலர்நெஞ்சினுள்; மந்திரமாலை உறைப்பொடும் கூடி நின்று ஓதலுமாமே'' (பாடல் எண் 25) என்பவை அவ்வாறு குறிப்பிடும் பாடல் வரிகளாம். அவர் மாலை எனக் குறிப்பிடுவது திருவம்பலச்சக்கரத்தில் உள்ள அடுக்குகளேயாகலாம். இத்திருவம்பலச் சக்கரமாகிய திருமந்திரமாலை, நூலின் மையக் கருத்தாதல் பற்றியே, சேக்கிழார் முதலியோர் நூலினை இப்பெயரால் வழங்கினர் போலும்.

மேற்கூறியவாறு, சதாசிவ யோகத்தை மையக்கருத்தாக உடையஇந்நூல், அவ்யோகநெறியை மேற்கொள்வதற்கான அடிப்படைகளைத் திருவம்பலச்சக்கரம் என்னும் அதிகாரத்திற்கு முன்னுள்ள அதிகாரங்களிலும், இம்மையக் கருத்தின் பொருள் விரிவுரைகளையும், இதன் பயனாக அடையப்பெறும் சிவபோகம், சிவஞானம் ஆகியவற்றை பின்னுள்ள அதிகாரங்களிலும் கூறுகின்றது. திருமந்திர நூலின் முதல் மூன்று தந்திரங்களை உள்ளடக்கிய திருமந்திர நூலின் முதற்தொகுதியானது, திருவருளால் 25.06.2016 அன்று வெளியிடப்பட்டது. மேற்காண் கருத்துக்களை உள்ளடக்கிய, திருமந்திர நூலின் இரண்டாவது தொகுதி 4, 5, 6 தந்திரங்களை உள்ளடக்கி, இப்போது வெளிவருகிறது. இந்நூலின் கண் அமைந்துள்ள நுட்பமான கருத்துக்களை, இப்பதிப்புரை மூலம் பகிர்ந்து கொள்வதில் பெருமகிழ்வு கொள்கிறோம்.

## 1. தவத்தோருக்குரிய தவவேடங்கள்

1. சடைமுடி
2. காதணி (குண்டலம், ஆறுகட்டி, சுந்தரவேடம் எனப் பலவகைப்படும்)
3. உருத்திராக்க மாலைகள் (தலை, கழுத்து, கை போன்ற இடங்களில் அணிவன)
4. மனதாலும், வாயாலும் எண்ணப்படும் திருவைந்தெழுத்து
5. ஓங்கார நாதமென முழங்குகின்ற சங்கு

6. உடம்பு முற்றப்பூசிய வெண்ணீறு

7. யோக தண்டம் – கழுத்துச் சோராத வண்ணம், முகவாய்க்கட்டையிலோ அல்லது இரு கட்கங்களிலுமோ முட்டுக்கொடுக்கும், கவை வடிவான தண்டம்.

8. கப்பரை – உணவேற்றுண்ணும் கபாலம் – மண்டையோடு – பிச்சைப்பாத்திரம்.

9. மயிலிறகு போன்ற சட்டை (உடல் மேல் அணிவது)

10. யோகபட்டம் – யோகமிருக்கும் காலத்தில் முதுகு ஞான்று விழாமல் முழங்காலையும், முதுகையும் சுற்றிக் கட்டப்பெறும் பட்டிகை.

11. கோவணம்

12. பொக்கணம் – திருநீற்றுப்பை

13. மாத்திரைக் கோலாகிய பிரம்பு

14. நீர்ப் பாத்திரமாகிய கமண்டலம்

- ✶ குண்டலம் – வட்டமான கம்பியாலான பொருத்துவாய் ஒன்றில் மட்டும் மணியையுடைய காதணி
- ✶ ஆறுகட்டி – காமம் முதலான, ஆறு பகைகளையும் வென்றவர்கள் என்ற குறிப்பை நினைவூட்டு வதான, ஆறுமணிகள் கோர்க்கப் பெற்ற காது வளையம்.
- ✶ சுந்தரவேடம் – வட்டமாய்த் தட்டையான காதணி

நான்கு வகையான வேடங்களைப்பற்றி ஆறாம் தந்திரத்தில் (6+4+8+4) = 22 மந்திரங்களில் விரிவாகப் பேசுகிறார். அவ்வேட ஒப்பீடு அடுத்த பக்கத்தில் பட்டியலிடப்பட்டுள்ளது.

**2.**

| அவவேடம் | தவவேடம் | ஞானவேடம் | சிவவேடம் |
|---|---|---|---|
| 6 மந்திரங்கள். பயன்படாத வேடம் என்பதாம். அருளைப் பெற்று ஞானம் வரப் பெறாதார் வேடம். தவத்தோர் வேடம் பூண்டும் சிவனடியைக் காணுதலாகிய பயன்தராத வேடம். பொய் வேடத்தால் பயனில்லை. அவவேடத்தார் வாழும் பூமி வளங்குன்றும். வேடம் பூணத்தகார் பூணலாகாது. தாழ்ந்தோர் வேடம்பூணல் தாம் உயர. உயர்ந்தோர் வேடம்பூணல் தாம் தெய்வமாக. அவமாகிய வேடத்தைப் பூண்பவர்கள் கொலைகாரர்கள். அவ்வேடத்திற்கு 14 சாதனங்களான அடையாளங்கள் ஆகா. | 4 மந்திரங்கள். தவவேடம், ஞான வேடமாதலே மரபு.<br>உண்மைத் தவத்திற்கு இயைவதான வேடங்கள். திருநீறு, சடைமுடி, உருத்திராக்கம், குண்டலம் உட்பட 14 அடையாளங்கள் | 8 மந்திரங்கள். ஞானத்திற்கே உரியது வேடம். ஞானம் பெறாதார் பூணும் வேடத்தில் பயனில்லை. தவவேடம் ஞான வேடமாதலே மரபு. ஞானவேடம் ஞானிகளுக்குச் சிறப்பைத் தரும். சிவனடியார் வேடந்தாங்கிச் சிவனிடத்து அன்பு செயின் ஞானம் உளதாம். சுந்தரவேடம், சிவஞானியர்க்கே. சிவத்தோடு சேர்க்கும் சாதனம். | 4 மந்திரங்கள். சிவ வேடங்கள் தவமிக்கோரால் மட்டுமே தாங்கத் தகுவன. சிவ வேடமாவது சிவனது திருவுருவைத் தாங்குதல். அடியாராகிய தம் இதயத்திலே சிவத்தைக் கண்டு, இருளற்று, செயலற்று இருப்போரே சிவவேடத்தார். உடலில் உயிர்போல, உயிரில் சிவம் கலந்துள்ளது, சிவவேடம். செயலற்றுச் சிவமாகி இருப்பாரே சிவவேடத்தர். |

### 3. ஐவணக்கம் – ஐந்து வகையான வணக்கங்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஏகாங்கம் | தலைவணங்குதல் |
| 2. | திரியங்கம் | இருகை குவித்துத் தலை வணங்குதல் |
| 3. | பஞ்சாங்கம் | இருகை, தலை, இருகால் நிலத்தில் தோய வணங்குதல் |
| 4. | சடங்கம் | தலை, இருகை, மார்பு, முழந்தாள் இரண்டும் தோய வணங்குதல் |
| 5. | அட்டாங்கம் | தலை, மார்பு, இருசெவி, இருகை, பாதங்கள் நிலத்தில் தோய வணங்குதல் |

### 4. தாண்டவ வகைகள்

| வ. எண். | தாண்டவத்தின் பெயர் | பயன் |
|---|---|---|
| 1 | அற்புதத் தாண்டவம் | உயிர்களின் அறிவிற் பொருந்திப் படைப்பை நிகழ்த்தும் நடனம் |
| 2 | ஆனந்தத் தாண்டவம் | இன்பத்தை உயிர்களுக்கு அளிக்கும் கூத்து |
| 3 | அனவரததாண்டவம் | உயிர்களின் இயக்கத்துக்குக் காரணமான கூத்து |
| 4 | பிரளய தாண்டவம் | உயிர்களுக்கு உறக்கத்தை ஏற்படுத்தி ஓய்வு தரும் கூத்து |
| 5 | சங்காரதாண்டவம் | உயிர்களின் பக்குவத்துக்கேற்பத் தன்னிடம் அணைத்துக் கொள்ளும் கூத்து |

### 5. சுவாமி அருளும் விதம்

| வ. எண் | உயிர்களின் தன்மை | தன்மை | இடம் | அருளும் விதம் |
|---|---|---|---|---|
| 1. | விஞ்ஞானகலர் | ஒரு மலம் உள்ளவர் | தன்மை | உள்நின்று உணர்த்துதல் |
| 2. | பிரளயாகலர் | இரு மலம் | முன்னிலை, உள்ளவர் | மான் மழுவேந்திய நிலை |
| 3. | சகலர் | மும்மலம் உள்ளவர் | படர்க்கை | மானுடச் சட்டை தாங்கிய, ஞானாசிரிய வடிவம் |

## 6. வினைப்பயன்

| இப்பிறப்பில் செய்வது | நல்வினை | தீவினை | ஆகாமியம் |
|---|---|---|---|
| மறுபிறப்புக்காகச் சேமிக்கப்படுவது | புண்ணியம் | பாவம் | சஞ்சிதம் |
| இப்பிறப்பில் வருவது | நன்மை | தீமை | பிராரத்தம் |

**7.**

| வ. எண் | பிரணவ வகை | எழுத்தெண் ணிக்கை | எழுத்துக்கள் | சிவக்குறியீடு | வெளிப்பாடு |
|---|---|---|---|---|---|
| 1 | சமட்டிப் பிரணவம் | ஒரெழுத்து | ஓம் | இலயசிவன் | அருவம் |
| 2. | சூக்கும வியட்டிப் பிரணவம் | இரண்டெழுத்து | அ, உ | சிவசக்தி (போக சிவம்) | அருவுருவம் (சிவலிங்கம்) |
| 3. | தூல வியட்டிப் பிரணவம் | மூன்றெழுத்து | அ, உ, ம் | அயன், அரி, அரன் (அதிகார சிவம்) | உருவம் |

**8.**

| அகரம் | சாக்கிரம், விழிப்புநிலை |
|---|---|
| உகரம் | சொப்பனம், கனவுநிலை |
| மகரம் | சுழுத்திநிலை, மயக்கமான நித்திரை நிலை |

**9.**

| ஓசை | இசையோசை. பொருளற்ற சப்தம். |
|---|---|
| ஒலி | எழுத்தோசை. பொருளுடைய சப்தம். |

## 10. திருவைந்தெழுத்து

| தூலஐந்தெழுத்து | நமசிவய |
|---|---|
| சூக்கும ஐந்தெழுத்து | சிவயநம |
| அதிசூக்கும ஐந்தெழுத்து | சிவயசிவ |
| இருதலை மாணிக்கம் | சிவசிவ |
| ஒருதலை மாணிக்கம் | சிவ |
| நாயோட்டு மந்திரம் | சி |

**11. திருவைந்தெழுத்தின் வித்தெழுத்துக்கள்**

| வ. எண் | எழுத்து | குறியீடு | பீஜம் | ஐந்தெழுத்து |
|---|---|---|---|---|
| 1 | ஆ | சிவம் | ஆம் | சி |
| 2. | ஈ | சத்தி | ஹ்ரீம் | வ |
| 3. | ஊ | உயிர் | ஹும் | ய |
| 4. | ஏ | திரோதானம் | ஷம் | ந |
| 5. | ஒ | மலம் | ஹாம் | ம |

**12.** திருவைந்தெழுத்தை பீசங்களோடு கூட்டுவது, சபீசம் – உயர்ந்தோருக்கு
திருவைந்தெழுத்தை பீசங்களோடு கூட்டாதது, நிர்ப்பீசம் – மற்றவர்க்கு

**13. வழிபாட்டில் பிரணவத்தைத் தியானித்தல்**

பிரணவத் தியானத்தில்

| | |
|---|---|
| ஓங்காரம் | மூலாதாரத்தில் |
| மகாரம் | உந்தியில் |
| அகாரம் | இருதயம், கண்டத்தில் |
| உகாரம் | புருவ நடுவில் |
| விந்துநாதம் | நெற்றிக்கு மேல் |

**14. பிரணவத்தில்**

ஆன்மதத்துவம் 24 – அகாரத்தைப்பற்றியும்
வித்யாதத்துவம் 7 – மகாரத்தைப்பற்றியும்
சிவதத்துவம் 5 – உகாரத்தைப்பற்றியும்
— நிற்கும்

**15. சீபஞ்சாக்கரத்தில்**

சிகாரம் – சிவமாயும்
வகாரம் – திருமேனியாகவும்
யகாரம் – ஆன்மாவாகவும்
— நிற்கும்

**16.**

| வியட்டி நிலை | சமட்டி நிலை |
|---|---|
| அகாரம் – படைப்பு – பிரம்மா<br>உகாரம் – காப்பு – திருமால்<br>மகாரம் – ஒடுக்கம் – உருத்திரன் | முத்தொழிலுக்கும் முதல்வர் சிவபெருமான் |

17.

| சிவயோகிகள் | சிவஞானிகள் |
|---|---|
| 1. சரியை, கிரியை கடந்து, யோகநெறியில் நிற்பவர்கள் | 1. சரியை, கிரியை, யோகங்கடந்து ஞான நெறியில் நிற்பவர்கள் |
| 2. சமய, விசேட, நிர்வாண தீக்கை பெற்றவர்கள், ஆசாரியபிடேகம் பெற்றும் பெறாமலும் இருக்கலாம் | 2. சமய, விசேட, நிர்வாண தீக்கைப் பெற்று ஆசாரியபிடேகம் பெற்றவர்கள் |
| 3. தவ வேடம் கொள்வர் | 3. சிவ வேடம் கொள்வர் |
| 4. சஞ்சித வினை அறுப்பு நடந்து கொண்டுள்ளது | 4. சஞ்சித வினை கெடுக்கப்பட்டு விட்டது. |

18. சப்தகோடி மந்திரங்கள் – நம, ஸ்வதா, ஸ்வாகா, வஷட், வௌஷட், பட், ஹூம்பட்

19. சத்தியின் பீஜ எழுத்துக்கள் – ஸ்ரீம், க்ரீம் (ஹ்ரீம்)

20. சரியை, கிரியை மற்றும் யோகம் சார்ந்த வழிமுறைகள், பயிற்சி நிலைகள் மற்றும் அனுபவ நிலைகள், அவரவரின் கால, இட, நியமங்களை பொருத்து அமைவன. ஆனால், அவற்றின் வழியாக அடையப்படுவது, மெய்யறிவு நிலையாகிய ஞானநிலையே ஆகும். எனவே அவரவரின் பக்குவத்துக்கேற்ப, படிநிலையில் வீடுபேற்றினைப் பெற முயல்வோம். சரியை, கிரியை, யோகம் என்பவை காலத்துக்கேற்ப மாறலாம். ஞானம் என்றும் மாறாது.

21. அசபா மந்திரம் – வாயினால் செபிக்கப்படாமலேயே, பிராணனோடு இழைந்தியங்கும் மந்திரம். இது அம்ச மந்திரம் என்றும் வழங்கப்படும். பிரணவம், அசபாமந்திரம் ஆகும். அசபா மந்திரத்தில், 'ஹ' சிவத்தைக் குறிக்கும். 'ஸ' – சத்தியைக் குறிக்கும்.

22. அசபா நடனம் – திருமால் அறிதுயிலமரும்போது, அவன் இதயத்தை இடமாகக் கொண்டு, தியாகேசப்பெருமான் அசைந்தாடுவது, அசபாநடனம். அதாவது, திருமால் இதயத்தில் சிவன் வீற்றிருக்கிறார். ஊஞ்சல் கயிறுகள் போன்ற ஆதாரங்கள் ஏதுமின்றி, ஹம், சம் என்று திருமாலது மூச்சுக்காற்றின் வேகத்தில், பெருமான் அசைந்தாடுவது, அசபா நடனம்.

23. அசபா யோகம் – செபிக்கப்படாத மந்திரங்களுடன் இயற்றப்படும் யோகம்.

24. **ஓம்**

ஓ என்னும் ஓரெழுத்தே மகர மெய் பெற்று "ஓம்" எனக் கூறப்படுகிறது. எந்தவொரு மந்திர எழுத்தும் இறுதியில் "ம்" என்று முடிவது மந்திர மரபாகும். அதனால் "ஓகாரம்", "ஓம் என நின்று" ஓங்கார மந்திரமாக

வழங்கப்படுகிறது. மெய்யெழுத்து எண்ணப்படாத நிலையில் "ஓம்" என நிற்பினும் ஓரெழுத்தென்றே அழைக்கப்படுகிறது.

**ஓம்** என்பது, அகார உகார மகார நாத விந்துகளின் கூட்டுறவால் விளைந்தது.

ஓ என்பதில் (0), வட்ட வடிவில் பிந்துவும் (சத்தி),

(–) நேர்கோட்டு வடிவில் நாதமும் (சிவம்) விளங்கித் தோன்றும். அகரம் சிவன். உகரம் சத்தி. மகரம் மலம்.

ஓம் என்னும் பிரணவமந்திரத்தில் அ, உ, ம என்ற மூன்றெழுத்துகள் அடங்கியுள்ளன.

அ – சிவத்தைக் குறிக்கிறது. அருவ நிலையில் உலகெங்கும் வரம்பின்றி வியாபித்து நிற்கிறது.

உ – சத்தியைக் குறிக்கிறது.

அஉ – மகாரமின்றி இவ்விரண்டெழுத்தும் சிவம் சத்தியாக ஒளி வடிவாயுள்ள அருவுருவமாக வியாபித்து நிற்கிறது.

அஉம – சிவம், சத்தி, மலம் என்ற மூன்றையும் குறிக்கும் தூலமாக நிற்கிறது.

| வ. எண் | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அகரம் | சிவம் | படைத்தல் | சாக்கிரம் | விழிப்புநிலை |
| 2 | உகரம் | சத்தி | காத்தல் | சொப்பனம் | கனவு நிலை |
| 3 | மகரம் | மலங்கள் | ஒடுக்குதல் | சுழுத்தி நிலை | மயக்கமான நித்திரை நிலை |

**நாதம்**

ஓம் என்பது பொருளோடு கூடிய சப்தமாகும். சிவபெருமானின் இயக்கம் அல்லது அசைவு. நடனம் ஏற்படும் போது அவ்வசைவில் எழும் இசையை ஓசை என்று கூறுவர். இவ்வோசையே நாதமாகும். அதாவது, அசைவின் இசையாகிய ஓசை – நாதம்.

**விந்து**

ஓசையின் ஆற்றலாகிய, அருட்சக்தியாகிய ஒளி.

எனவே

| பிரணவக் கூறுகள் | சிவம் | சத்தி | நாதம் | விந்து | மலம் |
|---|---|---|---|---|---|
| பிரணவ வியட்டி | அகாரம் | உகாரம் | நாதம் | விந்து | மகாரம் |

இவ்வாறு படைத்து, காத்து, ஒடுக்குவதே இறைவனின் இயக்கம்.
இது 'ஓம்' என்ற பிரணவத்தால் குறிக்கப்படுகிறது.

**பிரணவ ஆதார யோகம்**

மூலாதாரத்திலிருந்து மேலே எழும்பும் ஓங்காரமானது, ஒவ்வொரு ஆதாரத்தினூடும் (மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்று) மையம் கொண்டு, உருண்டு உருண்டுஆக்ஞையை வந்தடையும். மூலாதாரத்தில் மூண்டெழும் அகாரம் என்னும் சுடரொளி, பிரணவ யோகத்தால் ஆறு ஆதாரங்களும் இணைந்து ஒளிக்கம்பமாக ஒளிரும்போது, மெய் ஒழிந்து மெய்ப்பொருளாம் சோதி தோன்றும். அச்சோதி ஆக்ஞையில் தெரியும். அதுவே சிவபெருமானின் திருவடிப்பேறு.

**பிராசாத யோகம் ( ஆதாரமற்ற – நிராதார யோகம்)**

மூலாதாரத்தில் உள்ள குண்டலினி சத்தியை, ஆக்ஞை சக்கரமாகிய புருவ மத்தியில் ஒளியாகக் கண்டுணர்ந்து, அவ்வொளியை, துரியம், துரியங் கடந்த நிலைகளில் வைத்து தியானிப்பதே பிராசாத யோக முறையாகும். இந்த ஒளி நிலைகள் துரியத்திலிருந்து (தலை உச்சி) 12 அங்குலத்திற்குள் நிகழும் அற்புதக் காட்சியாகும்.

**<u>பிராசாதம்</u>**

இச்சொல்லின் பொருள், சிவஞானகதியைத் தருவது என்பதாகும். பிரா – சிவஞானம். சா–கதி. த – தருவது. பிராசாத யோகம் 24 வகைகளைக் கொண்டதாகக் கூறப்படுகிறது. இதில் எட்டு வகைகள் சிறப்பாம்.

| வ. எண் | பிராசாத வகை | அதன் கூறுகள் |
|---|---|---|
| 1. | திரிகலாப்பிராசாதம் | அகார, உகார, மகார என்னும் மூன்று கலைகளைக் கொண்டது. இவை ஓங்காரப் பிரணவத்தின் விரிவே. |
| 2. | பஞ்சகலாப் பிராசாதம் | அ, உ, ம, தூல விந்து, தூல நாதம் என்னும் ஐந்து கூறுகளை மட்டும் தியானப் பொருளாக எடுத்துக் கொள்வது. இவ்வைந்தும் ஆக்ஞைத் தானத்தில் வைத்து உணரவும், காணவும் கூடும். |
| 3. | சத்தகலாப் பிராசாதம் | அ, உ, ம, தூல விந்து, தூல நாதம், சூக்கும நாதம், சூக்கும விந்து என ஏழு பொருள்களைத் தியானமாகக் கொள்வது, சத்தகலாப் பிராசாதமாகும். |

| 4. | அட்டகலாப் பிராசாதம் | மேற்கண்ட ஏழு கூறுகளுடன், அதிசூக்கும விந்துவுடன் சேர்த்து எட்டையும் தியானப் பொருள்களாகக் கொள்ளல். |
|---|---|---|
| 5. | நவகலாப் பிராசாதம் | மேற்கண்ட அட்டகலாப் பிராசாதத்துடன், அதிசூக்கும நாதத்தையும் சேர்த்துத் தியானிப்பது நவகலாப் பிராசாதமாகும். |
| 6. | தசகலாப் பிராசாதம் | மேற்கண்ட ஒன்பதுடன், இவற்றுக் கெல்லாம் முதற்காரணமான சுத்த மாயையை, வியாபினி என்ற ஒன்றாக வைத்துக் கூட்டித் தியானித்தல் |
| 7. | துவாதசக் கலாப்பிராசாதம் | மேற்கண்ட பத்துக் கூறுகளுடன், வியாபினி என்பதைக் காரிய நிலை யாக்கி, காரண நிலையைச் சூக்குமம், அதிசூக்குமம் என வைத்துப் பனிரெண்டு கூறுகளாகத் தியானிப்பது. |
| 8. | சோடசகலாப் பிராசாதம் | மேற்கண்ட 12 கூறுகளுடன், தூலமாகிய போக நிலையை "தூலதமம், தூலதரம், தூலம், தூலத்திற் சூக்குமம்" என்ற நான்கையும் சேர்த்துப் பதினாறு கூறுகளாகத் தியானித்தல். |




## மேதாதி சத்திகளின் பன்னிரு கலைகள் (துவாதச கலாப் பிராசாதம்)

| வ. எண் | குறியீடு | கலைகள் | அதிதேவர் | இருப்பிடம் | அளவும், வடிவமும் |
|---|---|---|---|---|---|
| 1. |  | உன்மநாகலை | சத்தி, நாதம், பிந்து, மாயை என்ற 4 தத்துவங்களுடன் கூடிய அனாகதசிவம். சிவதத்துவம், பரவிந்து, பரநாத தத்துவம். | சமநாகலைக்கு மேல் | இரு வளைகோடு வடிவாக மனமாத்திரை அளவினதாக உள்ளது. மனமாத்திரை – மனம் உளதென்னும் அளவாய் நிற்றல். |
| 2. |  | சமநாகலை | சத்தி, நாதம், பிந்து, மாயை என்ற 4 தத்துவங்களுடன் கூடிய அனாகத சிவம். சிவதத்துவம், பரவிந்து, பரநாததத்துவம். | வியாபினி கலைக்கு மேல் | 4 அங்குலத்தில் இரண்டு பிம்பங்களோடு கூடிய சமகோடுகளின் வடிவாய் 1/1280 மாத்திரை அளவுள்ளது. |
| 3. |  | வியாபினிகலை | சத்தி, நாதம், பிந்து, மாயைஎன்ற 4 தத்துவங்களுடன்கூடியஅனாகதசிவம். சிவதத்துவம், பரவிந்து, பரநாததத்துவம். | சக்திகலைக்குமேல் | 3 அங்குலத்தில் பிந்துவோடு கூடிய மூவிலைச் சூல வடிவில் 1/640 மாத்திரை அளவில் உள்ளது. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4. |  | சக்திகலை | சத்தி, நாதம், பிந்து, மாயைஎன்ற 4 தத்துவங்களுடன்கூடியஅனாகதசிவம். சிவதத்துவம், பரவிந்து, பரநாததத்துவம். | உச்சியில் | ஒரு அங்குல அளவில் இடது பக்கத்தில் விந்துவுடன் கூடிய கலப்பை வடிவில் 1/320 மாத்திரை அளவினது |
| 5. |  | நாதாந்தகலை | சாதாக்கிய தத்துவத்துடன் கூடிய சதாசிவம். சத்தி தத்துவம். | நாத கலைக்கு மேல் | 2 3/4 அங்குல அளவில் பிரமந்திரத்தில் மேருவில் வலது பக்கத்தில் விந்துவோடு கூடிய கலப்பை வடிவில் 1/40 மாத்திரை அளவோடு விளங்குவது |
| 6. |  | நாதகலை | சாதாக்கியத் தத்துவத்துடன் கூடிய சதாசிவம். சத்தி தத்துவம் | நிரோதினி கலைக்கு மேல் | 2 3/4 அங்குல அளவில் தண்ட வடிவமான மணி ஒளி போல இரு பக்கமும் விந்துவோடு கூடிய கலப்பை வடிவில் 1/16 மாத்திரை |
| 7. |  | நிரோதினி கலை | சாதாக்கியத் தத்துவத்துடன் கூடிய சதாசிவம். சதாசிவ தத்துவம் | நெற்றிக்கு மேல் | 2 3/4 அங்குல அளவில் பிறைமதி ஒளி போலப் பிறைவடிவமாக 1/8(வீச) மாத்திரை அளவு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 8. |  | அர்த்தசந்திர கலை | சாதாக்கியத் தத்துவத்துடன் கூடிய சதாசிவம். சதாசிவ தத்துவம் | நெற்றியில் | இரண்டே முக்கால் அங்குல அளவில் அரை வட்டமான பிறைமதி ஒளியுடன் கால் மாத்திரை அளவு |
| 9. |  | விந்து கலை | சுத்த வித்தியா தத்துவம் இரண்டுடன் கூடிய மகேசன் | புருவ மத்தியில் | இரண்டு அங்குலத்தில் விளக்கின் ஒளிபோல வட்ட வடிவான அரை மாத்திரை அளவு |
| 10. |  | மகார கலை (விட கலை) | மாயா தத்துவத்துடன் கூடிய உருத்திரன். சுத்த வித்தை. ஈசுரம். | கழுத்துக்கு மேலே தாலுவில் (அடி நாக்கு) | நான்கு அங்குலத்தில், ஒரு மாத்திரை அளவில் மின்னற் கொடிபோல இருக்கும். |
| 11. |  | உகார கலை (அருக்கீச கலை) | ஆறு தத்துவங்களோடு கூடிய விட்டுணு. வித்யா தத்துவத்தில் மாயை ஒழிந்த ஆறு. | இதயத்துக்கு மேல் கழுத்தில் | எட்டு அங்குலத்தில் சூரிய சந்திரர்களை ஒத்த ஒளியுடன் இரு மாத்திரை அளவில் |
| 12. |  | அகாரகலை (மேதாகலை) | இருபத்து நான்கு தத்துவங்களோடு கூடிய பிரமன். ஆன்ம தத்துவம் 24. | நாபிக்கு மேல் 12 அங்குல முடிவில் நான்கு அங்குல அளவுள்ள இதயத்தில் மேதா கலை உள்ளது. | தீயொளியொத்த மூன்று மாத்திரை அளவுள்ள ஸ்வர வடிவம். மாத்திரை என்பது மனத்தின் வேகம். வேகம் மேலே போகப் போகக் குறையும். |

**25.**

| மூலாதாரம் | நமசிவாய | மலக்கட்டு |
|---|---|---|
| அக்கினி மண்டலம் | நமவாசிய | |
| சூரிய மண்டலம் | நவாசிய | திரோதம் |
| சந்திர மண்டலம் | யவாசி | அசபை தரிசனம் |

**26.**

| நம – ஊனநடனம் – நமசிவாய – வினைப்பயன் துய்ப்பிற்கு உதவும் |
|---|
| சிவ – ஞானநடனம் – சிவயநம – வீடுபேற்றிற்கு உதவும். |

**27. மகிமை தரும் மகேச்சுர மூர்த்தங்கள்**

மகேச மூர்த்தியின் அருளாடல்கள் இருபத்தைந்து தோற்றங்களில் திகழ்கின்றன. இவற்றை மகேசுவர வடிவங்கள் என்பர். சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களுக்கும் இயைய, இம்மூர்த்தங்களைக் கீழ்க்கண்டவாறு கூறுதல் மரபு.

| ஈசான மூர்த்தி | 1. சோமாஸ்கந்த மூர்த்தி<br>2. நிருத்த மூர்த்தி<br>3. ரிஷபாரூட மூர்த்தி<br>4. கல்யாணசுந்தர மூர்த்தி<br>5. சந்திரசேகர மூர்த்தி |
|---|---|
| தத்புருஷ மூர்த்தி | 6. பிட்சாடன மூர்த்தி<br>7. காமதகன மூர்த்தி<br>8. காலாந்தக மூர்த்தி<br>9. ஜலந்தரவத மூர்த்தி<br>10. திரிபுராந்தக மூர்த்தி |
| அகோரமூர்த்தி | 11. கஜாரி மூர்த்தி<br>12. வீரபத்திர மூர்த்தி<br>13. தட்சிணா மூர்த்தி<br>14. கிராத மூர்த்தி<br>15. விஷாபஹரண மூர்த்தி |

| | |
|---|---|
| வாமதேவமூர்த்தி | 16. கங்காள மூர்த்தி<br>17. சக்ரதான மூர்த்தி<br>18. கஜமுக அனுக்ரஹ மூர்த்தி<br>19. சண்டேச அனுக்ரஹ மூர்த்தி<br>20. ஏகபாத மூர்த்தி |
| சத்யோஜாதமூர்த்தி | 21. லிங்கோற்பவ மூர்த்தி<br>22. சுகாஸன மூர்த்தி<br>23. உமாசகித மூர்த்தி<br>24. சங்கரநாராயண மூர்த்தி<br>25. அர்த்தநாரீசுர மூர்த்தி |

இவ்விருபத்தைந்து வடிவங்களையும் காணும்போது, சிவபெருமானின் அனுக்ரஹ, சம்ஹார, ஞானவடிவங்களையும், சிவவிஷ்ணு இணைந்த, சிவசத்தி வடிவங்களையும் உய்த்துணர்ந்து இன்புறலாம்.

| | |
|---|---|
| அனுக்ரஹ மூர்த்தங்கள் | 6. சந்திரசேகரர், கிராதமூர்த்தி, விஷாபஹரணர், சக்ரதானர், கஜமுக அனுக்ரஹர், சண்டேச அநுக்ரஹர் ஆகியன. |
| சம்ஹார மூர்த்தங்கள் | 7. காமதகன மூர்த்தி, காலந்தக மூர்த்தி, ஜலந்தரவத மூர்த்தி, திரிபுராந்தக மூர்த்தி, கஜாரி மூர்த்தி, வீரபத்ரர், கங்காளர் ஆகியன. |
| ஞானமூர்த்தங்கள் | 5. நிருத்த மூர்த்தி, தட்சிணாமூர்த்தி, ஏகபாத மூர்த்தி, சுகாஸண மூர்த்தி, லிங்கோற்பவ மூர்த்தி ஆகியன. |
| சிவவிஷ்ணு இணைந்தவை | 3. பிட்சாடனர், சங்கரநாராயணர், அர்த்தநாரீசர் |
| சிவசக்தி இணைந்தவை | 4. சோமாசுகந்தர், ரிடபாரூடனர், கல்யாணசுந்தரர், உமாசகிதர் |

## 28. திருமூலர் பகரும் சிவ – சத்திகளின் பரத்துவங்கள்

<table>
<tr><td>அவனை ஒழிய அமரரும் இல்லை.<br>அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை<br>அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை<br>அவனன்றி ஊர் புகுமாறி யேனே<br>முதல் தந்திரம் : சிவபரத்துவம் (41)</td><td>அவளை அறியா அமரரும் இல்லை<br>அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை<br>அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை<br>அவளன்றி யூர்புகு மாறறி யேனே<br>நான்காம் தந்திரம் : சத்திபேதம் (1036)</td></tr>
<tr><td><u>இ.பொ.</u><br>சிவபெருமானைத் தவிர இறவாதவர், பிறரில்லை; அவனை உணராது செய்யும் செயல், சிறந்த தவமாதல் இல்லை; அவனது அருளின்றி மும்மூர்த்திகளால், யாதொரு செயலும் நடவாது; அவனது அருளின்றி, முத்திக்கு வழியில்லை</td><td><u>இ.பொ.</u><br>அமரர்கள் தமது வாழ்நாள் இன்பமாகக் கழிய, அன்னையின் அருளை வேண்டி நிற்பர். எனவே, அவளை அறியாமல் இருக்க முடியாது. தவஞ் செய்வார்க்கு குண்டலினி சத்தியாக, மதிமண்டலம் வரை ஏறி, பராசத்தியாகத் தவப்பயனைத் தருபவள் சத்தியே. ஐவர் – பஞ்சேந்திரியங்கள் அல்லது பிரமா, மால், உருத்ரன், மகேசன், சதாசிவன் என்ற ஐவருமாம். சத்தியன்றி, இவர்கள் எத்தொழிலும் ஆற்றகில்லார். ஐம்பொறி களும், ஐம்புலன்களை நுகர, சத்தியின் அருள் வேண்டும். சத்திநிபாதம் பெற்றாலன்றி வீடுபேறாகிய ஊர்ப்புக முடியாது.</td></tr>
</table>

<table>
<tr><td><u>சிவனைத் சத்தியோடு தான் எண்ண வேண்டும்</u><br>தான்எங் குளன்அங் குளள்தையல் மாதேவி<br>ஊன்எங் குளஅங் குளஉயிர் காவலன்<br>வான்எங் குளதங் குளேவந்தும் அப்பாலாம்<br>கோன்எங்கும் நின்ற குறிபல பாரே<br>– 1038</td><td><u>சத்தியைச் சிவனோடு தான் எண்ண வேண்டும்</u><br>உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி<br>மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்<br>புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்<br>கணிந்தெழு வார்க்குக் கதிஅளிப் பாளே<br>– 1046</td></tr>
<tr><td><u>இ.பொ.</u> உடம்புகள் எங்கு உள்ளனவோ அங்கெல்லாம் உயிர்களைக் காப்பவனாகிய சிவன் உள்ளான். தான் எங்கு இருப்பவனாக அறியப்படுகின்றானோ, அங்கெல்லாம் சத்தியும் உடன் இருக்கின்றாள். எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நின்றும், கடந்து நின்றும், நிலைபெறும் சிவன், எங்கும் விளங்குகின்ற எந்த உருவமும், 'சத்தி' என்றே தெளிய வேண்டும். சிவனது வடிவங்கள் யாவையும் சத்தியேயாதல் குறிக்கப்படுகிறது.<br>சிவனைச் சத்தியோடன்றித் தனித்து நிற்பவனாக எண்ணுதல் கூடாமை பெறப்பட்டது.</td><td><u>இ.பொ.</u> உண்மையை உணர்ந்த வழி விரைய விளங்கும் உள்ளொளியாகிய சிவன் எவ்விடத்தும் சத்தியும் தானுமாய் இயைந்து நிற்பான். அங்ஙனம் நிற்குங்கால் தம்மை எண்ணுகின்றவர்கட்கே திரிபுரை நற்கதி வழங்குவாள்.<br>சத்தியைச் சிவனோடன்றித் தனித்து நிற்பவளாக எண்ணுதல் கூடாமை பெறப்பட்டது.</td></tr>
</table>

30. அகில சராசரங்களை ஈன்றும், பான்மொழிக் கன்னியாகும்; பவன் பிரமசாரியாகும். சகல லோகங்களையும் படைத்து, காத்து, ஒடுக்குதலைக் கரணங்களால் செய்துத் திரிபு எய்தாது, சங்கற்ப மாத்திரையால், நினைத்த அளவிலே செய்து, என்றும் ஒரு பெற்றியாய் இருத்தல்.

சத்தி, சிவத்தின் சத்தியாயிருந்து நாதத்தையும், நாதத்தினிடம் விந்து சத்தியாய் நின்று சதாசிவம், மகேசுவரம், உருத்திரம், மால், பிரம்மா முதலியனவாய்த் தோன்றும்.

31. **உடைமை இருவகை**

| 1. உடைமை | சடப்பொருள்கள் | இரண்டையும் அநாதி நித்யமே உடையவன் சிவபெருமான். |
|---|---|---|
| 2. அடிமை | சித்துப் பொருள்கள் | |

இவை போன்ற ஏராளமான நுட்பங்களைத் தொகுத்து, நூலாக வெளியிட்டு, வழிபாட்டு கருத்தரங்கம் நடத்துதற்குத் திருவருள் கூட்டுவித்த நிலையில் ஏற்கனவே நிகழ்ந்த பன்னிரு திருமுறை ஆய்வுக் கருத்தரங்குகளைக் கீழ்க்கண்டவாறு நினைவு கூர்வோம்.

| முதல் திருமுறை | டிசம்பர் 27, 28.2014 |
|---|---|
| இரண்டாவது திருமுறை | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | ஜீன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | ஆகஸ்டு 29, 30.2015 |
| ஆறாம் திருமுறை | அக்டோபர் 24, 25-2015 |
| ஏழாம் திருமுறை | டிசம்பர் 26, 27-2015 |
| எட்டாம் திருமுறை - I | பிப்ரவரி 27, 28 - 2016 |
| எட்டாம் திருமுறை - II | ஏப்ரல் 23 - 2016 |
| ஒன்பதாம் திருமுறை | ஏப்ரல் 24 - 2016 |
| பத்தாம் திருமுறை - I | ஜீன் 26, 27, 2016 |

அதன் வரிசையில் வரும் ஆகஸ்டு மாதத்தில் பத்தாம் திருமுறை கருத்தரங்கமானது நான்கு, ஐந்து மற்றும் ஆறாம் தந்திரங்களுடன் கீழ்க்கண்ட அட்டவணைப்படி நடைபெறும்.

## வழிபாட்டுக் கருத்தரங்கம் – நிகழ்ச்சி நிரல்

**27.08.2016 சனி**

| வ. எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு–பொருள் |
|---|---|---|---|
| 1. | 27.08.2016 சனி காலை 9.00–11.00 | மகாவித்துவான் மயிலம் வே.சிவசுப்பிரமணியம் அவர்கள் | <u>நான்காம்தந்திரம்:</u> அசபை, திருவம்பலச்சக்கரம் (897–966). பாடல் 867 முதல் 966 வரை – 100 பாடல்கள் |
| 2. | 27.08.2016 சனி நண்பகல் 11.00–01.00 | பேராசிரியர் ம.வே. பசுபதி அவர்கள் | <u>நான்காம் தந்திரம்:</u>– திருவம்பலச்சக்கரம் (967–985), அருச்சனை, நவகுண்டம், சத்திபேதம், வயிரவி மந்திரம் (1058–1067). பாடல் 967 முதல் 1067 வரை – 101 பாடல்கள் |
| 3. | 27.08.2016 சனி பிற்பகல் 02.00–04.00 | பேராசிரியர் புரிசை நடராசன் அவர்கள் | <u>நான்காம் தந்திரம்:</u> வயிரவி மந்திரம் (1068–1107), பூரணசத்தி, ஆதார ஆதேயம் (1138–1174). பாடல் 1068 முதல் 1171 வரை – 104 பாடல்கள் |
| 4. | 27.08.2016 சனி மாலை 04.00–07.00 | சிவத்திரு ப. குமரலிங்கம் அவர்கள் | <u>நான்காம் தந்திரம்:</u> ஆதார ஆதேயம் (1172–1237), ஏரொளிச் சக்கரம். பாடல் எண் 1172 முதல் 1273 பாடல் எண் வரை 102 பாடல்கள் |

**28.08.2016 ஞாயிறு**

| வ. எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு–பொருள் |
|---|---|---|---|
| 1. | 28.08.2016 ஞாயிறு காலை 09.00–11.00 | சிவத்திரு சு. குஞ்சிதபாதம் அவர்கள் | <u>நான்காம் தந்திரம்:</u>– வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதி சக்கரம், நவாக்கரி சக்கரம் (1301–1374). பாடல் எண் 1274 முதல் 1374 வரை– 101 பாடல்கள் |

| 2. | 28.08.2016 ஞாயிறு நண்பகல் 11.00– 1.00 | சிவத்திரு சிவ.காந்தி அவர்கள் | **<u>நான்காம்தந்திரம்:</u>** நவாக்கரி சக்கரம் (1375–1400)<br>**<u>ஐந்தாம் தந்திரம்:–</u>** சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ் சுத்தசைவம், சரியை, கிரியை, யோகம், ஞானம், சன்மார்க்கம், சகமார்க்கம். பாடல் எண் 1375 முதல் 1474 வரை –100 பாடல்கள் |
|---|---|---|---|
| 3. | 28.08.2016 ஞாயிறு பிற்பகல் 02.00– 04.00 | பேராசிரியர் **சொ.சொ.மீ. சுந்தரம்** அவர்கள் | **<u>ஐந்தாம்தந்திரம்:–</u>** சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம், சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம், சத்திநிபாதம், புறச்சமய தூடணம், நிராசாரம், உட்சமயம், சிவகுருதரிசனம்.<br>**<u>ஆறாம் தந்திரம்:–</u>** திருவடிப்பேறு. பாடல் எண் 1475 முதல் 1583 வரை – 109 பாடல்கள் |
| 4. | 28.08.2016 ஞாயிறு மாலை 04.00– 6.00 | முதுமுனைவர் **ந.இரா. சென்னியப்பனார்** அவர்கள் | **<u>ஆறாம் தந்திரம்:</u>** ஞாதுரு ஞானஞேயம், துறவு, தவம், தவதூடணம், அருளுடைமையின் ஞானம் வருதல், அவவேடம், தவவேடம், திருநீறு, ஞானவேடம், சிவவேடம், அபக்குவன், பக்குவன் பாடல் எண் 1584 முதல் 1680 வரை – 97 பாடல்கள் |

இரண்டு திங்களுக்கு ஒருமுறை சுமார் ஆயிரம் பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், முனைவர் ப. தமிழரசியைத் தலைவராகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், முனைவர் இரா. மதன்குமார், முனைவர் ச. கவிதா, முனைவர் செ. ஆறுச்சாமி, உள்ளிட்டோருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. வெள்ளிங்கிரி, திரு. ப. மணிசேகர், திரு. அ. இராமசாமி ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.panniruthirumurai.org என்ற இணைய முகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.....

நன்றி,

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**

16.07.2016 — வேந்தர்

கோவை - 21 — கற்பகம் பல்கலைக்கழகம்

உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

# திருமந்திர நூலமைப்பு (பாகம் - II)

## நான்காம் தந்திரம்

இயமம், நியமம் முதலிய யோகவுறுப்புக்களால் உடம்பினை நன்குபேணிச் சரியை, கிரியை ஆகிய நெறிகளில் பயின்று, பின்னர்ச் சிவயோகத்தில் நிலைபெற்று நின்று சிவஞானமாகிய பயனைப் பெறுதற்கு, நிறைமொழி மாந்தரருளிய மறைமொழிகளாகிய மந்திரங்களின் சாதகமும் அவற்றின் வலிமையும் பெறுதல் இன்றியமையாததாகும். ஆகவே, இந்நூலின் நான்காந் தந்திரத்துள், திருவம்பலச்சக்கரம் முதலிய மந்திரச் சக்கரங்களின் உபாசனை முறைகள் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன. இத்தந்திரம், அசபை என்பது முதல் நவாக்கரி சக்கரம் ஈறாகப் பதிமூன்று தலைப்புகளை யுடையதாகும். இதன்கண், மந்திரச் சக்கரங்களின்வடிவம், அளவு, வரைகள், அவற்றில் அடைக்கப்பெறும் மந்திர எழுத்துக்கள், உரியமந்திரங்கள், வழிபாட்டு முறைகள், அவ்வவற்றின் அதிதெய்வம், வலிமை, பயன் முதலியன விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இன்ன சக்கரத்தை, இன்ன சாதனத்தில் எழுதி, இன்ன இடத்தில், இன்னவாறு மேற்பூச்சும், அணியும், மலரும் முதலியன சார்த்தி, இன்னபடி, இத்தனை காலம் வழிபட்டால், வசியம் முதலாகச் சொல்லப்படும் உலகியற் பயன்களுள், இன்னின்ன பயன்களை எளிதிற் பெறலாம் என்ற உண்மையினை ஆசிரியர் இத்தந்திரத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

நன்னெறியினை நாடிய சாதகன், தான் இப்பிறப்பிற் கொண்டுள்ள உடம்பில் நின்றே, விரும்பிய பயன்களைப் பெறவேண்டியவனாவன். ஆகவே, அவ்வுடம்பினை கெடாது நெடுங்காலம் நிலைபெறக் கொண்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்தற்கேற்ற பயன்களையும் விரும்புதல் இயல்பாதலால், ஞான நூலாகிய இவ்வாகமங்களிலும் உலகியற் பயன்களைப் பற்றிய இவ்வழிமுறைகள் இடம் பெறுவனவாயின. இறைவன், தனது திருவருளாகிய சத்தியின் மூலமாகவே மன்னுயிர்கட்கு அருள்புரிவானாதலின் இத்தந்திரத்திற் கூறப்படும் மந்திரச் சக்கரங்களிற் பெரும்பாலன, அவனது திருவருளாகிய சத்தி பேதங்களைப் பற்றியனவாக அமைந்துள்ளன.

மக்கள் வேண்டிய வேண்டியாங்கு எய்தற் பயத்தவாகிய இம்மந்திரங்கள், நம் நாட்டில் மக்களிடையே நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது, 'கோவலன் நாவிற் கூறிய மந்திரம், பாய்கலைப்பாவை மந்திரமாதலின்' (காடுகாண் 196–7) எனவும், 'அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும், வருமுறை யெழுத்தின் மந்திர மிரண்டும், ஒரு முறையாக வுளங்கொண் டோதி' (காடுகாண் 128–130) எனவும் வரும் சிலப்பதிகாரத் தொடர்களால் இனிது விளங்கும். இக் குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால், இத்தகைய தெய்வ மந்திரங்கள் பல உபதேச முறையில் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது இனிது புலனாம்.ஆகவே, திருமூலநாயனாரால் திருமந்திரம் நாலாந்தந்திரத்திற் குறிக்கப்பெற்றுள்ள இம்மந்திரங்கள் பலவும், தென்றமிழ் நாட்டில் வழங்கிய தொன்மையுடையன என்பது நன்கு துணியப்படும். இந்நூலாசிரியர் ஆரியமும் செந்தமிழும் கற்றுவல்ல சிவயோகியாராதலால், இமய முதல் குமரிவரையுள்ள நிலப்பகுதியில் வாழும் மக்களனைவர்க்கும் பயன்படும் முறையில் தமிழும் ஆரியமுமாகிய இருமொழி எழுத்துக்களும் விரவிய நிலையில் அகர முதலாகிய ஐம்பத்தோ ரெழுத்துக்களால் ஆகிய மந்திரங்களை இந்நூலில் வகுத்துக்கூறியுள்ளார். நாலாந் தந்திரத்திலுள்ள அதிகாரங்களிலமைந்த பாடல்களிற் பல, அந்தாதித் தொடையமையப் பாடப்பெற்றுள்ளன. ஆயினும், பல இடங்களில் பாட பேதங்களால் பாடல்கள் முன்பின்னாக மாறியெழுதப் பெற்றமையாலும், இடைச்செருகலாகச் சில பாடல்கள் இடம் பெற்றமையாலும் இடையிடையே அவ்வந்தாதித் தொடர்புகள் சிதைந்தன எனக் கருத வேண்டியுள்ளது.

## ஐந்தாந் தந்திரம்

சுத்த சைவம் முதலாக உட்சமயம் ஈறாக, இருபது உட்பிரிவுகளையுடையதாகும். இதன்கண் நால்வகைச் சைவங்களும், சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளும், அவை பற்றியமைந்த சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாச மார்க்கம் என்ற நெறிமுறைமைகளும், அந்நெறிகளில் நின்றோர் பெறுதற்குரிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னும் நால்வகைப் பேறுகளும், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்னும் நால்வகைச் சத்திநிபாதப் பக்குவநிலைகளும் அறிவுறுத்தப் பெற்றுள்ளன. புறச்சமயங்களின் ஒவ்வாத்தன்மைகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது புறச்சமயதூடணம் என்பதாகும். இந்தந்திரத்தில் திருமூலதேவர் கூறியுள்ள முறைமையினை அடியொற்றிய அருணந்தி சிவாசாரியார், தாம் இயற்றிய

சிவஞான சித்தியாரில், சரியை முதலிய நால்வகை நெறிகளையும், இந்நெறிகள் ஒவ்வொன்றும், நந்நான்காய் விரியும் முறைமையினையும் விரித்துக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கியுணரத்தக்கதாகும்.

பதிபசுபாசம் என்னும் மூன்றும், என்றும் உள்ள பொருள்களாகும். பதி–இறைவன். இறைவன் ஒருவனே. பசு–உயிர். உயிர்கள் எண்ணில்லாதன. அவை அநாதியே மலத்தாற் கட்டப்பட்டுள்ளன, அருளாளனாகிய இறைவன், உயிர்கள் உய்யும் பொருட்டு, வினைக்கீடாகிய பிறவிகளில் அவற்றைச் செலுத்துகின்றான். உயிர்கள் பல்வகைப் பிறவிகளிலும் வந்து பிறந்து, நல்வினை, தீவினைகளைச் செய்து உழல்வன. இவ்வாறு, மாறிமாறிப் பிறந்திறந்து வரும் உயிர்கள், பிறவித்துன்பங்கள் நீங்கி என்றும் பேராவியற்கையாகிய, நிலையான பேரின்பத்துள் இருக்க முயல்வதுவே, நல்லுணர்வு பெற்ற அவற்றின் குறிக்கோளாக அமைதல் வேண்டும். அத்தகைய நன்முயற்சிகளையும், நற்பணிகளையும் மேற்கொள்ளுதற்குக் குருவின் அருளும், திருவைந்தெழுத்து, திருநீறு முதலிய சிவசாதனங்களுமே துணையாவன. அத்துணையினைக் கொண்டு, சிவநெறியில் ஒழுகினால் உலக மக்கள் துன்பம் நீங்கி, நிலையான பேரின்பத்தைப் பெறலாம். அவ்வனுபவம் மாறாதிருக்க அடியார்களுடன் இருக்கும் பழக்கம் இன்றிமையாததாகும் என்னும் சைவ உண்மைகள் ஐந்தாந்தந்திரத்திற் கூறப்பெற்றுள்ளன.

## ஆறாம் தந்திரம்

சைவ சித்தாந்த முடிவுகளை உபதேசவாயிலாகக் கேட்டறிந்தோர், அவற்றைச் சிந்தித்துத் தெளிந்துணர்தற்குரிய பொருள்களாகிய ஞானம் பெறும் சாதனங்களை உணர்த்துவது, ஆறாந்தந்திரமாகும். இது, சிவகுரு தரிசனம் முதல் பக்குவன் என்பதீறாகப் பதினான்கு உட்பிரிவுகளையுடையது. இதன்கண் சிவகுருதரிசனம், திருவடிப்பேறு, ஞாதிருஞானஞேயம், துறவு, தவம், அருளுடையமையின் ஞானம் வருதல், அவவேடம், தவவேடம், அபக்குவன், பக்குவன் என்ற தலைப்புக்களில் வைத்து ஞானசாதனங்கள் விரிந்துரைக்கப் பெற்றுள்ளன.

ஆன்மாக்கள் உய்தி பெறுதற் பொருட்டு இறைவன், தன்அடியார் திறத்தே நிகழச் செய்யும் தசகாரியம் என்னும் பத்துவகைச் செயல்களும், இத்தந்திரத்திலும் பின்வரும் ஏழு, எட்டு, ஒன்பதாந் தந்திரங்களிலும் கூறப்படும் பொருள்களால் உணர்த்தப் பெறுகின்றன.

# திருமூலரின் பரகாயப் பிரவேசம்
# உண்மை - உண்மை - உண்மை

பல்லாயிரமாண்டுகளுக்கு முன் திருமூலர் நிகழ்த்திய, நன்மைகள் தரும் பரகாயப்பிரவேசம் (உயிர், உடலாகிய கூடுவிட்டுக் கூடுபாய்தல்) இந்த நூற்றாண்டிலும் நடைபெறுகிறது என்பது அறிவியல், நீதித்துறைகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை என்று இயம்பும் இக்கட்டுரை தினமணி நாளிதழில் 08.07.2016 ஆம் நாளன்று வெளியிடப்பட்டிருந்தது. கட்டுரை ஆசிரியர், சிறந்த நீதிமான், பேரறிஞர். தமிழ், நீதி, அறிவியல் என்று பல துறைகளில் சிறந்து விளங்கும் சான்றோர். நமது பல்கலைக்கழகத்தில், பட்டமளிப்பு விழா உரை நிகழ்த்திப் பட்டங்களை வழங்கியவருமாகிய நீதிபதி. வெ. இராமசுப்பிரமணியன் ஆவார்.

**அறிவியலுக்கு அப்பால்–9**

## அரிகோ நடத்திய அதிர்ச்சியூட்டும் அறுவை சிகிச்சைகள்!

**– நீதிபதி வெ. ராமசுப்பிரமணியன்**

பின்னாளில் அரிகோ என்று உலகம் முழுதும் அறியப்பட்ட ஜோஸ் பெத்னோத ஃப்ரீடா (Jose Pedno de Freitas) 1921–ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பிரேசில் நாட்டில் கொங்கோனாஸ் தொகேம்போ (Congonhas do Campo) என்னும் ஊரில், ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தார்.

தனது 14–ஆவது வயதில் பள்ளிப் படிப்பைத் துறந்துவிட்டு உள்ளூரில், இருந்த சுரங்கங்களுக்கு வேலைக்குச் சென்ற அந்தப் படிப்பறியாப் பாமரன், 1950–களில் பல்கலைக்கழகங்களுக்கும், மருத்துவத் துறைக்கும், ஏன் நீதிமன்றங்களுக்கும் பெரும் சவாலாக விளங்கினார். துருப்பிடித்த சமையலறைக் கத்திகளால், தூசு படிந்த மேசைகளில், மயக்க மருந்தோ, உதவியாளர்களோ இல்லாமல் அவர் நடத்திய அறுவை சிகிச்சைகள் ஆட்சியாளர்கள் மத்தியில் அதிர்வலைகளையும், பொதுமக்கள் மத்தியில் மயக்கத்தையும் ஏற்படுத்தின.

1950–ஆம் ஆண்டில், ஒரு நாள் சட்டமன்ற உறுப்பினர் பிட்டன்கோர்ட் (Bittencourt) என்பவருடன் பக்கத்து ஊரில் நடைபெற இருந்த ஒரு ஊர்வலத்திற்குப் பயணமானார், அரிகோ. வயிற்றில் ஒரு புற்றுநோய்க் கட்டி உருவாகி, அதை அறுவை சிகிச்சையின் மூலம் நீக்குவதற்காக அடுத்த மாதம் அமெரிக்காவிற்குப் பயணமாக பிட்டன்கோர்ட் தயாராக இருந்தார். ஆனால், பக்கத்து ஊரில் நடைபெற இருந்த ஊர்வலத்தில் கலந்து

கொள்வதற்காகப் போயிருந்த பிட்டன்கோர்ட் அவர்களின் அறைக்குள் திடீரென்று ஆவேசம் வந்தவரைப் போல் அரிகோ நுழைந்தார். என்ன நடக்கிறது என்று அந்தச் சட்டமன்ற உறுப்பினர் தெரிந்து கொள்வதற்கு முன்பாக, அவர் தன் நினைவை இழந்தார். அவருக்கு நினைவு திரும்பியதும், அருகில் ஒரு சிறு கத்தியும், தன்மேல் இரத்தக் கறைகளும், தனது விலா எலும்புகளுக்குக் கீழ் ஒரு சிறு வெட்டுக்காயமும் இருந்ததைக் கண்டு அலறிப்போனார். அவசர அவசரமாக மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்ட அவரைப் பரிசோதனை செய்த மருத்துவர்கள், அவர் வயிற்றில் ஏற்கெனவே இருந்த புற்றுநோய்க் கட்டி தற்போது காணப்படவில்லை என்று தெரிவித்தனர். அந்த மருத்துவமனையில் எடுக்கப்பட்ட ஊடுகதிர் நிழற்படங்களும் (x-ray) இதை உறுதி செய்தன. ஆனால், பிட்டன்கோர்ட் அவர்களின் அறைக்குள் என்ன நடந்தது என்பதை ஜோஸ் அரிகோவால் நினைவுக்குக் கொண்டுவர முடியவில்லை.

இதேபோல் 1956–இல் இன்னொரு நிகழ்வு. கர்ப்பப்பையில் புற்று நோய் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டு மருத்துவர்களால் கைவிடப்பட்ட ஒரு பெண்மணியின் இறுதிக்காலம் நெருங்கிவிட்டதை உறவினர்களும் நண்பர்களும் உணர்ந்துகொண்ட காரணத்தால் அந்தப் பெண்மணிக்குப் பாவ மன்னிப்பு வழங்குவதற்காகப் பாதிரியார் வரவழைக்கப்பட்டார். அப்போது அந்தப் பெண்மணியின் அருகிலிருந்த அரிகோ, திடீரென்று ஆவேசம் வந்தவரைப்போல் அந்த அறையிலிருந்து வெளியேறி சமையலறைக்குப் போய் ஒரு துருப்பிடித்த கத்தியை எடுத்து வந்தார். நோயாளியைச் சுற்றி நின்றிருந்த அனைவரையும் சற்று விலகும்படிச் சொல்லிவிட்டு அந்த நோயாளியின் பிறப்புறுப்பில் கத்தியைச் சொருகினார். பின்னர் கத்தியை அப்படியும் இப்படியும் திருகிவிட்டு அந்தப் பகுதியில் ஏற்பட்ட சிறு ஓட்டை வழியாகத் தனது விரல்களை உள்ளே நுழைத்து திராட்சைப்பழ அளவில் இருந்த ஒரு கட்டியை உருவி வெளியே போட்டார். பிறகு, மிகவும் களைத்தவராக ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து கண்களை மூடிச் சிறிது நேரம் விசும்பினார்.

இதைப் பார்த்து அதிர்ச்சியில் உறைந்துபோன மற்றவர்கள் ஒரு முறையான மருத்துவரை வரவழைத்தார்கள். நோயாளியோ அங்கு நடந்த எதையும் அறியாதவரைப்போல் வலியைக்கூட உணராமல் அமைதியாகப் படுத்திருந்தார். அங்கு அழைத்துவரப்பட்ட மருத்துவர் நோயாளியைப் பரிசோதனை செய்துவிட்டு அவருடைய உடலில் இருந்த புற்றுநோய்க் கட்டி நீக்கப்பட்டு விட்டதாகவும், அங்கு நடந்த அதிர்ச்சிகரமான அறுவை சிகிச்சையால் அந்தப் பெண்மணிக்கு வேறு எந்த பாதிப்பும் ஏற்படவில்லை

என்றும் தெரிவித்தார். அரிகோவின் மருத்துவ அற்புதங்களில் பாமரமக்கள் மட்டுமின்றி படித்தவர்களும் மயங்கிப் போனார்கள். பிரேசில் நாட்டின் அதிபராகிய கியுபிட்செக் (Kubitschek) மற்றும் அவரது குடும்ப உறுப்பினர்கள் அரிகோவின் சிகிச்சையால் பலனடைந்தார்கள்.

ஆனால், முறையாக மருத்துவப் படிப்பு படிக்காமல் ஒரு மிகப் பெரிய அறுவை சிகிச்சையாளராக அரிகோ உலவி வந்த காரணத்தால் முறை சார்ந்த மருத்துவர்களால் அவர்மேல் வழக்கு தொடரப்பட்டு நீதிமன்றத்தால் அவருக்கு எட்டு மாத சிறைத் தண்டனையும், அபராதமும் விதிக்கப்பட்டது. ஆனால், தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி பிரேசில் நாட்டு அதிபர் அவருக்கு மன்னிப்பளித்தார்.

எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு அரிகோவின்மேல் மீண்டும் குற்றவியல் வழக்குத் தொடரப்பட்டு அவருக்கு 16 மாதச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. இம்முறை அரிகோவிற்கு மன்னிப்பளிக்க அவருடைய பழைய நண்பர் கியுபிட்செக் அதிபராக இல்லை. எனவே, அரிகோ ஏழு மாதங்கள் சிறையில் கழித்துவிட்டு, மேல்முறையீட்டு நீதிமன்றத்தால் பிணையில் விடுவிக்கப்பட்டார். அதன்பிறகு நடந்த நிகழ்ச்சி மருத்துவ உலகை உலுக்கியது.

அரிகோவின் மேல்முறையீட்டு மனு ஓர் உண்மையான ரோமன் கத்தோலிக்கராக இருந்த பிலிப் இம்மேசி (Filippe Immesi) என்னும் நீதிபதியிடம் விசாரணைக்கு வந்தது.

அரிகோவினால் மிகப்பெரிய நோய்களின் பிடியிலிருந்து செலவும் சிரமமும் இல்லாமல் குணமாகி நின்ற நூற்றுக்கணக்கான நோயாளிகள் சாட்சி அளித்த நிதர்சனம் ஒருபுறமும், முறையான மருத்துவப் படிப்பு இல்லாமல் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிப்பது ஒரு குற்றம் என்னும் சட்டம் மறுபுறமும், அந்த மேல்முறையீட்டு நீதிபதியின் மனசாட்சியைத் துரத்தத் தொடங்கின. பலநாள் தூக்கத்தை இழந்த அந்த நீதிபதி, திடீரென்று யாரிடமும் சொல்லாமல், ஒருநாள் தான் யார் என்பதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் அரிகோவின் மருத்துவமனைக்குத் திடீரென்று விஜயம் செய்தார். நீதிபதி அங்குக் கண்ட காட்சியை, அரிகோவின் வாழ்க்கை வரலாற்றைப் பின்னாளில் அரிகோ துருப்பிடித்த கத்தி கொண்ட அறுவை மருத்துவர் என்னும் தலைப்பில் எழுதிய ஜான் ஜி. ஃபுல்லர் (John G. Fuller) கீழ்கண்டவாறு விவரித்தார்: இரண்டு கண்களிலும் விழிப்புரை (cataract) திரை விழுந்து, கிட்டத்தட்ட பார்வையை முற்றிலும் இழந்த நோயாளி ஒருவர் அங்கு வந்தார். அவரைச் சுவர் அருகில்

நிற்க வைத்துவிட்டு அந்த நோயாளியின் தலையை அந்த நீதிபதியை விட்டே பிடித்துக் கொள்ளச் சொன்னார் அரிகோ. திடீரென்று ஒரு சிறு கத்திரிக் கோலை எடுத்த அரிகோ, தன்னுடைய சட்டையில் அதைத் துடைத்துவிட்டு அந்த நோயாளியின் விழித்திரைக்குள் கத்திரிக்கோலை நுழைத்து இப்படியும் அப்படியும் திருப்பினார். பிறகு, கையில் கொஞ்சம் பஞ்சை எடுத்துக்கொண்டு கண்களை மூடி, அரிகோ ஒரு பிரார்த்தனையைச் செய்தார். உடனே, அந்தப் பஞ்சின்மேல் சில திரவத் துளிகள் தோன்றின. அந்தப் பஞ்சினால் நோயாளியின் கண்களைத் துடைத்தார் அரிகோ. விழிப்புரை நீக்கப்பட்டு அந்த நோயாளி பூரணமாகக் குணமடைந்து வெளியே போவதைப் பார்த்ததும் அந்த நீதிபதிக்கும், அவரோடு போன அரசு வழக்குரைஞருக்கும் தான் (Public Prosecutor) கண்கள் இருண்டு மயக்கம் வந்தது.

ஆனாலும் சட்டத்தின் எழுத்துக்களை மாற்றும் அதிகாரம் தனக்கு இல்லையே என்ற வருத்தத்துடன் அந்த நீதிபதி, தன்னால் முடிந்தது இவ்வளவுதான் என்று அரிகோவின் தண்டனைக் காலத்தை மட்டும் குறைத்துத் தீர்ப்பளித்தார். எனினும் பிரேசில் நாட்டு உச்ச நீதிமன்றத்தால் 1965–ஆம் ஆண்டு நவம்பர் 8–ஆம் நாள் ஜோஸ் அரிகோ குற்றவாளி இல்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டார்.

அரிகோவின் சாகசங்களைப் பற்றி கேள்விப்பட்ட அமெரிக்க உளவியல் ஆராய்ச்சியாளரான ஹென்றி புஹாரிக் (Henry Puharich) 1963–இல் ஓர் ஆராய்ச்சி மற்றும் படப்பிடிப்புக் குழுவோடு பிரேசில் நாட்டிற்குச் சென்று அரிகோ நடத்திய அறுவை சிகிச்சைகளைப் படம் பிடித்தார். அரிகோவால் குணமாக்கப்பட்ட நூற்றுக்கணக்கான நோயாளிகளின் வாக்கு மூலங்களையும் அவர் பதிவுசெய்தார். அதனால் அரிகோ முறையான மருத்துவப் படிப்பு அற்றவர் என்பதும், அவரால் மிகப்பெரிய அறுவை சிகிச்சைகளை எந்தவிதப் பயிற்சியும் இன்றிச் செய்ய முடிந்தது என்பதும் நிரூபணமாயின. ஆனால். இது எப்படி அரிகோவிற்குச் சாத்தியமானது என்பது மட்டும் யாருக்கும் புரியவில்லை.

அரிகோவின் வாழ்க்கையைப் போலவே அவருடைய மரணமும் ஒரு மர்ம முடிச்சாகவே அமைந்து போனது. 1971–ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 11–ஆம் நாள் அவர் ஏற்கெனவே தனது நண்பர்களுக்கு முன்கூட்டியே கணித்திருந்ததைப் போலவே ஒரு மோட்டார் வாகன விபத்தில் அரிகோ இறந்து போனார்.

1972–இல் அக்டோபர் 16–இல் வெளிவந்த டைம் (Time) பத்திரிகை அவரைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு ஒரு செய்திக் குறிப்பை வெளியிட்டது: சென்ற ஆண்டு தனது 49–ஆவது வயதில் ஒரு விபத்தில் காலமான அரிகோ என்னும் படிப்பறிவில்லா விவசாயி, பிரேசில் நாட்டின் வரலாற்றில் இடம் பெறக்கூடிய புகழைப் பெற்றுவிட்டார். தான் எக்காலத்திலேயும் பார்த்திராத, நெடுநாட்களுக்கு முன்பே மரணமடைந்த ஒரு மருத்துவரின் ஆவி, தன்னை வழி நடத்துவதாகக் கூறி, நாள்தோறும் முந்நூறு நோயாளிகளுக்குச் சிகிச்சையளித்து வந்த அப்பாமரன் அறிவியலுக்குச் சவாலாக இருந்தார். இன்றுவரை எத்தனை ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டும் அரிகோ நிகழ்த்திய அற்புதங்கள் அறிவியலுக்கு அப்பாலேயே நிற்கின்றன.

## ஆய்வுக்குரியவை

ஓருடலில் ஒரே சமயத்தில் இரண்டு உயிர்கள் இயங்க முடியுமா? இந்நூலின் பதிப்பாசிரியரின் அறிவுக்கு எட்டிய வரை இந்தக் கலியுகத்தில் பல்லாயிரமாண்டுகளில் சூரபன்மன் ஒருவன் தான் ஒரே உடலில் 2 உயிர்களுடன் வாழ்ந்ததாக வரலாறு. வேறு எந்த உயிருக்கும் அந்தப்பேறு கிட்டவில்லை. சூரன், பதுமன் என்று 2 உயிர்கள் அந்த உடலில் இருந்ததனால் தான் உடல் வீழ்ந்தபோது அவை வெளியே வந்து சேவலும், மயிலுமாக மாறின. ஓர் உயிர் மட்டும் இருந்திருந்தால் ஒன்று இல்லாமல் போயிருக்கும். அதன்பின் இக்கட்டுரை மாதிரி நிகழ்வுகள் அங்கங்கே அவ்வப்போது நிகழ்வதைக் கேள்விப்பட்டுள்ளோம். இரண்டாவது உயிர், ஆவி என்ற பெயரில் உள்புகுந்து சில நாள் தங்கிச் சில செயல்களைப் புரிந்து விட்டு வெளியே வருகிறது. உள்ளே வரும் ஆவியை ஏற்கனவே உள்ள உயிர் / ஆன்மாவாகிய ஆவி எப்படிச் சமாளிக்கிறது?. ஒன்று வலுவாகும் போது மற்றது வலுவிழக்கிறதா? அவற்றின் செயல்பாடுகள் ஆய்வு செய்யப்படவேண்டும்.

உயிர், என்றும் உள்ளது. வினைவயத்தால், அது, மானுடச்சட்டை தாங்குகின்ற வாய்ப்பினைப் பெறும். அதுவன்றியும், எந்தப் பிறவி வேண்டுமானாலும் வாய்த்தற்கு நிலை உள்ளது என்ற சைவசித்தாந்த உண்மை நிரூபணமாகிறது.

> ‘ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
> எழுமையும் ஏமாப்பு உடைத்து’

என்ற வள்ளுவர் வாக்கும் நிரூபணமாகிறது. முற்பிறவியில் அந்த உயிர் கற்ற மருத்துவக்கல்வி அடுத்த பிறவியில் மறுபடியும் மானுடச்சட்டை தரிக்கும் போது உதவுகிறது.

## தமிழ் எழுத்துக்கள் - பிறமொழி எழுத்துக்கள்

### உயிர் எழுத்துகள் — Vowels

| Tamil<br>தமிழ் | Nagari<br>நாகரம் | Grandha<br>க்ரந்தம் | Malayalam<br>மலயாளம் | Telugu<br>తెలుగు | Kannada<br>ಕನ್ನಡಂ |
|---|---|---|---|---|---|
| அ | अ | 𑌅 | അ | అ | ಅ |
| ஆ | आ | 𑌆 | ആ | ఆ | ಆ |
| இ | इ | 𑌇 | ഇ | ఇ | ಇ |
| ஈ | ई | 𑌈 | ഈ | ఈ | ಈ |
| உ | उ | 𑌉 | ഉ | ఉ | ಉ |
| ஊ | ऊ | 𑌊 | ഊ | ఊ | ಊ |
| ரு | ऋ | 𑌋 | ഋ | ఋ | ಋ |
| ரூ | ॠ | 𑍠 | ൠ | ౠ | ೠ |
| லு | ऌ | 𑌌 | ഌ | ఌ | ಌ |
| ஏ | ए | 𑌏 | ഏ | ఏ | ಏ |
| ஐ | ऐ | 𑌐 | ഐ | ఐ | ಐ |
| ஓ | ओ | 𑌓 | ഓ | ఓ | ಓ |
| ஔ | औ | 𑌔 | ഔ | ఔ | ಔ |
| அம் | अं | 𑌅𑌂 | അം | అం | ಅಂ |
| அஹ | अः | 𑌅𑌃 | അഃ | అః | ಅಃ |

### மெய் யெழுத்துக்கள் — Consonents

| Tamil | Nagari | Grandha | Malayalam | Telugu | Kannada |
|---|---|---|---|---|---|
| க | क | 𑌕 | ക | క | ಕ |
| க$^{2}$ | ख | 𑌖 | ഖ | ఖ | ಖ |
| க$^{3}$ | ग | 𑌗 | ഗ | గ | ಗ |
| க$^{4}$ | घ | 𑌘 | ഘ | ఘ | ಘ |
| ங | ङ | 𑌙 | ങ | ఙ | ಙ |
| ச | च | 𑌚 | ച | చ | ಚ |
| ச$^{2}$ | छ | 𑌛 | ഛ | ఛ | ಛ |
| ஜ | ज | 𑌜 | ജ | జ | ಜ |
| ச$^{4}$ | झ | 𑌝 | ഝ | ఝ | ಝ |
| ஞ | ञ | 𑌞 | ഞ | ఞ | ಞ |

வடமொழிக்கு நாகரி, கிரந்தம் என்னும் இரு வடிவெழுத்துக்கள் உள்ளன. அவற்றுள் நாகரியே கொள்ளத்தக்கது என ஒரு பிரிவினரும், கிரந்தமே கொள்ளத்தக்கது என்று மற்றொரு பிரிவினரும் கூறுவர்.

| Tamil<br>தமிழ் | Nagari<br>நாகரம் | Grandha<br>கிரந்தம் | Malayalam<br>മലയാളം | Telugu<br>తెలుగు | Kannada<br>ಕನ್ನಡಂ |
|---|---|---|---|---|---|
| ட | ट | 𑌟 | ട | ట | ಟ |
| ட$^{2}$ | ठ | 𑌠 | ഠ | ఠ | ಠ |
| ட$^{3}$ | ड | 𑌡 | ഡ | డ | ಡ |
| ட$^{4}$ | ढ | 𑌢 | ഢ | ఢ | ಢ |
| ண | ण | 𑌣 | ണ | ణ | ಣ |
| த | त | 𑌤 | ത | త | ತ |
| த$^{2}$ | थ | 𑌥 | ഥ | థ | ಥ |
| த$^{3}$ | द | 𑌦 | ദ | ద | ದ |
| த$^{4}$ | ध | 𑌧 | ധ | ధ | ಧ |
| ன/ந | न | 𑌨 | ന | న | ನ |
| ப | प | 𑌪 | പ | ప | ಪ |
| ப$^{2}$ | फ | 𑌫 | ഫ | ఫ | ಫ |
| ப$^{3}$ | ब | 𑌬 | ബ | బ | ಬ |
| ப$^{4}$ | भ | 𑌭 | ഭ | భ | ಭ |
| ம | म | 𑌮 | മ | మ | ಮ |
| ய | य | 𑌯 | യ | య | ಯ |
| ர/ற | र | 𑌰 | ര | ర | ರ |
| ல | ल | 𑌲 | ല | ల | ಲ |
| வ | व | 𑌵 | വ | వ | ವ |
| ச | श | 𑌶 | ശ | శ | ಶ |
| ஷ | ष | 𑌷 | ഷ | ష | ಷ |
| ஸ | स | 𑌸 | സ | స | ಸ |
| ஹ | ह | 𑌹 | ഹ | హ | ಹ |
| ள | ळ | 𑌳 | ള | ళ | ಳ |

உயிர்மெய் யெழுத்துக்கள்

| Tamil | Nagari | Grandha | Malayalam | Telugu | Kannada |
|---|---|---|---|---|---|
| கா | का | 𑌕𑌾 | കാ | కా | ಕಾ |
| கி | कि | 𑌕𑌿 | കി | కి | ಕಿ |


Tamil
தமிழ்
Nagari
நாகரம்
Grandha
க்ரந்தம்
Malayalam
മലയാളം
Telugu
తెలుగు
Kannada
ಕನ್ನಡಂ

| Tamil<br>தமிழ் | Nagari<br>நாகரம் | Grandha<br>க்ரந்தம் | Malayalam<br>മലയാളം | Telugu<br>తెలుగు | Kannada<br>ಕನ್ನಡಂ |
|---|---|---|---|---|---|
| கீ | की | 𑌕𑍀 | കീ | కీ | ಕೀ |
| கு | कु | 𑌕𑍁 | കു | కు | ಕು |
| கூ | कू | 𑌕𑍂 | കൂ | కూ | ಕೂ |
| க்ரு | कृ | 𑌕𑍃 | കൃ | కృ | ಕೃ |
| க்ரூ | कॄ | 𑌕𑍄 | കൄ | కౄ | ಕೄ |
| க்லு | क्लु | | ക്ഌ | కౢ | ಕೢ |
| கே | के | 𑌕𑍇 | കെ | కే | ಕೇ |
| கை | कै | 𑌕𑍈 | കൈ | కై | ಕೈ |
| கோ | को | 𑌕𑍋 | കൊ | కో | ಕೋ |
| கௌ | कौ | 𑌕𑍌 | കൌ | కౌ | ಕೌ |
| கம் | कं | 𑌕𑌂 | കം | కం | ಕಂ |
| கஹ | कः | 𑌕𑌃 | കഃ | కః | ಕಃ |

கூட்டெழுத்துக்கள் — Congruants

| Tamil | Nagari | Grandha | Malayalam | Telugu | Kannada |
|---|---|---|---|---|---|
| க்க | क्क | 𑌕𑍍𑌕 | ക്ക | క్క | ಕ್ಕ |
| க்ம | क्म | 𑌕𑍍𑌮 | ക്മ | క్మ | ಕ್ಮ |
| க்ய | क्य | 𑌕𑍍𑌯 | ക്യ | క్య | ಕ್ಯ |
| க்ர | क्र | 𑌕𑍍𑌰 | ക്ര | క్ర | ಕ್ರ |
| க்ல | क्ल | 𑌕𑍍𑌲 | ക്ല | క్ల | ಕ್ಲ |
| க்வ | क्व | 𑌕𑍍𑌵 | ക്വ | క్వ | ಕ್ವ |
| ர்க | र्क | 𑌰𑍍𑌕 | ർക | ర్క | ರ್ಕ |
| க²த³ | ग्थ | 𑌗𑍍𑌥 | ഗ്ഥ | గ్థ | ಗ್ಥ |
| க²த³ | ग्ध | 𑌗𑍍𑌧 | ഗ്ധ | గ్ధ | ಗ್ಧ |
| ங்க | ङ्क | 𑌙𑍍𑌕 | ങ്ക | ఙ్క | ಙ್ಕ |
| ச்ச | च्च | 𑌚𑍍𑌚 | ച്ച | చ్చ | ಚ್ಚ |
| ச்ச² | च्छ | 𑌚𑍍𑌛 | ച്ഛ | చ్ఛ | ಚ್ಛ |
| ஜ்ஜ | ज्ज | 𑌜𑍍𑌜 | ജ്ജ | జ్జ | ಜ್ಜ |
| ஜ்ஞ | ज्ञ | 𑌜𑍍𑌞 | ജ്ഞ | జ్ఞ | ಜ್ಞ |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருமூலதேவ நாயனார்

அருளிச்செய்த

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை

## நான்காம் தந்திரம்

### 1. அசபை

''அசபை'' என்பதற்கு உச்சரிக்கப்படாதது என்பது பொருளாகும். செபிக்கப்படாமலே பிராணனோடு சேர்ந்து இயங்கும் இது வடமொழிச் சொல்லாகும். இதன் பொருள் (வாயில் உச்சரிக்கப்படாமல்) மனத்தாலேயே உணர்ந்து நினைவில் வைத்துக் கொண்டிருப்பதாகும். இதனாலேயே இதனை "ஊமை எழுத்து" என்றார் திருமூலர்.

மக்கள் (சபை) கேட்க உரைத்தல் - சபை
மக்கள் கேளாமல் மனத்திலே அடக்கி உணர்தல் - அசபை

மூன்றாம் தந்திரத்துள் யோகத்தினைப் பல்வகையாலும் விளங்கக் கூறிய நாயனார், நான்காம் தந்திரத்துள் கிரியை கூறுவாராய், அதனை மந்திர யந்திர வடிவினதாகக் கூறுகின்றார். மந்திர யந்திரங்கள் யோகத்திற்கும் உரியவாகலின், அவை முன்னைத் தந்திரப் பொருளோடு இயைபுற்றுநின்றன. அவற்றுள் யோகத்திற்கே உரியது 'அசபை' என்னும் மந்திரமாதலின், அதனையே முதற்கண் முப்பது திருமந்திரங்களால் கூறுகின்றார். இம்முப்பது மந்திரங்களும் அந்தாதியாயே வருதல் நோக்கத்தக்கது.

**867.** போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தை
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்நம் பிரான்ஓர் எழுத்தே. 1

---

867. தெளிவுரை :- நமக்கெல்லாம் தலைவனாகிய சிவனுக்குரிய ஓரெழுத்து மந்திரமாம் பிரணவத்தின் சிறப்பே, ஏனை எல்லா மந்திரங்களினும் உயர்வுடையதாதலை இத்தந்திரத்துள் யான்

*கூறுவேன். அதனானே, ஞானங்கள் பலவற்றினும் மேலானதாக உயர்ந்தோர் சொல்கின்ற சிவஞானத்தைப் புகழ்ந்து பாதுகாப்பவனும், யாவருடைய உள்ளத்திலும், 'சிவனது திருவடியே பொருள்' எனத் தெளிவிப்பவனும், சிவயோகத்தையும் சுருங்கக் கூறுபவனும் ஆவேன். பிரணவத்தினை அறிய விரும்புபவர்களே! இதனைச் செவிக் கொண்மின்.*

***குறிப்புரை :-*** *'நம் பிரான் ஓர் எழுத்தே ஏற்றுகின்றேன்; (அதனால்) புகல் ஞானத்தைப் புகழ்ந்தும் போற்றுகின்றேன்; சிந்தை நாயகன் சேவடி தேற்றுகின்றேன்; சிவயோகத்தைச் சாற்றுகின்றேன்; அறையோ' எனக் கூட்டுக. போற்றுதல் - இடைவிடாது எண்ணுதல்.*

*"புகழ்ந்தும்" என்னும் உம்மை எதிரது தழுவிய எச்சம். ஏற்றுதல் - உயர்த்துதல்; என்றது உயர்வை உணர்த்துதலை. அறையோ - என்று உலகவரை விளித்தல்.*

*'ஓர் எழுத்து' என்பது ஓகாரத்தைக் குறித்தல் மந்திர நூல் மரபு. 'ஏகாட்சரம்' என்பர். யாதொரு மந்திர எழுத்தும் இறுதியில் மகர மெய்யைப் பெற்று நிற்றலும் மந்திர மரபு. அதனால், ஓகாரம் 'ஓம்' என நின்று, 'ஓங்காரம்' என வழங்கப்படும். மெய்யெழுத்து எண்ணப் படுவதில்லையாகையால், 'ஓம்' என நிற்பினும் ஓரேழுத்தேயாம். 'மந்திரம்' என்பது ஓரெழுத்தாலாய மந்திரத்திற்கே சிறப்பாக உரிய பெயராதல் மந்திர நூல்களால் அறியப்படுவது. அவற்றின் இறுதியில் நிற்கும் மகர மெய் 'விந்து' (பிந்து) எனப்படும். அ, உ, ம் என்னும் மூன்றின் சேர்க்கையே "ஓம்" ஆகும்.*

*சொல்லுவோன், தனது கருத்தைப் பிறர்க்கு இனிது விளங்க வெளிப்படக் கிளந்து சொல்லுங்கால், புறத்து நிகழ்கின்ற இசையோசையையே ஒற்றுமை பற்றி எழுத்தோசையாக ஆசிரியர் கூறுவராயினும், 'உண்மையில் எழுத்தோசை அவ் இசையோசையின் வேறே' என்பதனை ஆசிரியர் தொல்காப்பியனார், "அகத்தெழு வளியிசை" எனவும், 'அதனை யான் இங்குக் கூறிற்றிலேன்' எனவும் கூறியுணர்த்தினார். மேற்குறித்த இசையோசையை, "எழுந்து புறத்திசைக்கும் - மெய் தெரி வளியிசை" (தொல். எழுத்து, பிறப்பியல்) என்றார்.*

*'நாதம்' என்பது, எழுத்தோசைக்கே பெயராக மெய்யுணர்வு நூல்கள் (தத்துவ சாத்திரங்கள்) கூறும். <u>இசையோசையை 'ஓசை'</u> எனவும், <u>எழுத்தோசையை 'ஒலி'</u> எனவும் குறியிட்டு, "ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" (தி.6 ப.38 பா.1) எனத் திருநாவுக்கரசு நாயனார் அருளிச் செய்தார்.*

இசையோசை கருவியாக அன்றி எழுத்தோசையாக நேரே உணரும் ஆற்றல் உலகர்க்கு இல்லை.

'ஓ' என்பது இசையோசையைக் குறிக்கும் குறிப்பிடைச் சொல் என்பது, 'ஓ' என அரற்றினான் என்பது முதலிய வழக்குக்களால் நன்கு அறியப்படும். அது பற்றி இசையோசைக்கு முதல் 'ஓ' என்பது பட்டு நிற்றலின், இசையோசையானே அறியப்படுகின்ற எழுத்தோசைக்கும், 'ஓகாரமே முதல்' எனப்பட்டது. படவே, சொல்லுலகம் முழுவதற்கும் ஓங்காரமே முதலாயிற்று. அதனால், எல்லா மந்திரங்கட்கும் முன்னும் பின்னும் ஓங்காரத்தைக் கூட்டிக் கூறுதல் இன்றியமையாததாயிற்று. இவ்வாற்றால், சொல்லுலக முழுவதற்கும் முதலாய் நிற்கும் ஓங்காரத்திற்கு, எல்லாவற்றிற்கும் முதல்வனாகிய சிவபெருமானே முதல்வனாதலும் இயல்பான் அமைந்தது. அதனால், நாயனார் ஓங்காரத்தை, ''நம்பிரான் ஓரெழுத்து" என்றார். மொழிகளில் உள்ள எழுத்துக்கள் போலச் சொற்கு உறுப்பாய் நின்று பொருள் விளக்காமையால் இதனை ஊமையெழுத்து என்பர்.

சொல்லுலகத்திற்கு முதலாய் நிற்றல்பற்றி ஓங்காரம் 'தாரக மந்திரம்' எனவும்படும். பற்றுக் காரணமாகத் தேவர் பிறரை முதற்கடவுளராக எண்ணும் சமயத்தவர் இத்தாரக மந்திரத்திற்கும் தாம்தாம் கொள்ளும் கடவுளரையே முதல்வராகக் கூறி மகிழ்வர். அவையெல்லாம் வெறும் முகமனேயாதல் அக்கடவுளரது இயல்புகளை உள்ளவாறு உணர்வார்க்குத் தெற்றெனவிளங்கும்.

எழுத்தோசையைப் பற்றுக்கோடாகக்கொண்டே மக்கட்கு எண்ணங்கள் பலவும் தோன்றும். புதிது புதிதாகத் தோன்றி வரும் எண்ணங்கட்குக் கடலில் புதிது புதிதாகத் தோன்றி வருகின்ற அலையை உவமையாகக் கூறும் சிவஞானபோதம் (சூ.4 அதி.1)

புதிது புதிதாய்த் தோன்றிவரும் எண்ணங்கட்கு மேற்கூறிய வாற்றால் முதலாதல்பற்றி ஓங்காரம், 'பிரணவம்' எனப் பெயர் பெற்றது. நவம் - புதுமை.

சொல்லுலகம் அனைத்திற்கும் முதல் ஓங்காரம் எனப்படுதல் பற்றி; 'அனைத்து மந்திரங்களும் ஓங்காரத்தின் சூக்கும பரிணாமமே' என்பர். எனினும், அதன் கருத்து மந்திரங்கள், நாதமாய் நிற்கும் சுத்த மாயையின் காரியம் என்பதே. அதனால், 'ஓங்காரம்' 'ஓரெழுத்து' என்னும் சொற்கள் 'ஓம்' என ஒலிக்கும் இசையோசையைக் குறித்தலே யன்றி, சங்கேதத்தால் நாதத்தையும் குறிக்கும்.

அவ்வாறான மந்திரங்களுள் 'அம், சம்' என்னும் இரண்டெழுத்

*தாகச் சொல்லப்படுகின்ற மந்திரம் 'அம்ச (ஹம்ஸ) மந்திரம்' எனப்படும். அவ்இரண்டெழுத்தும் பிராணாயாமத்துள் இரேசக பூரகங்கட்கு உரியனவாம். இரேசக பூரகங்கள் யோக முறைப்படி அறிந்து செய்யப்படும்பொழுது அம்மந்திரச் சேர்க்கைகளோடு செய்யப்படுதல் சிறப்பு. அது பிற மந்திரங்கள் போலாது பிராணனின் இயக்கமாகவே கொள்ளப்படுதலால், 'அசபை' (செபிக்கப்படாமல் தானாகவே இயல்வது) எனப் பெயர்பெற்றது. எனவே, பிராண இயக்கத்தை உடைய ஒவ்வோர் உயிரிடத்தும் இஃது உளதாகக் கொள்ளப்படும்.*

*திருப்பாற்கடலில் திருமால் கொள்கின்ற அறிதுயிலிலும் இம்மந்திரம் இயல்பாக விளங்கினமையால், 'அவரது இதயத்தில் வீற்றிருந்த தியாகேசப்பெருமான் அங்கு அசபா நடனம் புரிந்தனர்' எனவும், அப்பெருமானே முசுகுந்தச் சக்கரவர்த்தியால் திருவாரூரில் கொணர்ந்து எழுந்தருள்விக்கப் பெற்றமையால் 'திருவாரூர்த் தியாகேசரது நடனம் அசபா நடனம்' எனவும் கூறுவர்.*

*அம்ச மந்திரத்துள் 'சம்' என்பதை விசர்க்கத்துடன் கூடியதாக ஆக்கி ச; எனமுன்னும், 'அம்' என்பதை அஹம் என வேறுபடுத்திப் பின்னும் வைத்து உச்சரிக்க வருவதே 'சோஹம்' என்பது, 'அவன் நான்' என்பது இதன் பொருள். எண் வகை யோகமும் கைவந்த நிலையில் தியானத்தானமாகிய ஆஞ்ஞையில் யோகி இச் சோஹம் பாவனையைச் செய்வானாயின், 'அவன்' எனக் கருதுதல் இறைவனையேயாகலின், சாத்திய மந்திரங்களால் மந்திரான்மாவாய் நிற்கின்ற அவ்யோகி பசுத்துவம் நீங்கிப் பதிநிலையை எய்திப் பரமா காசவடிவா ஆவான். சிவயோகி 'சோஹம்' எனப் பொதுப்படப் பாவியாது, 'சிவோஹம்' எனச் சிறப்பாகப் பாவிப்பான். அதனால், அவன் சிவமாய் நின்று சிவானந்தத்தை நுகர்வான். ஞானத்தை எய்தினோரும் நிட்டையில் நிற்கமாட்டாதபொழுது அம்மாட்டாமைக்குக் காரணமாகிய வாசனா மலம் நீங்குதற் பொருட்டுத் திருவைந்தெழுத்தை அதற்குரிய முறையில் சுத்தமானதமாகக் கணிக்கும் போது சிவோகம் பாவனையை உடையவராயே இருந்து கணிப்பர். தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களும் 'சோஹம்' என்னும் பொருளையே வேறுவேறு வகையில் கூறுவனவாம். 'அம்சம்' என்பதேயன்றி, இச் 'சோஹம்' என்பதும் அசபையாகச் சொல்லப்படும். 'சோஹம்' என்பதன்*

**868.** ஒரெழுத் தாலே உலகெங்கும் தானாகி
ஈரெழுத் தாலே இசைந்தங் கிருவராய்
மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத் தாலே மயக்கம துற்றதே. **2**

---

*பொருள் திருவைந்தெழுத்தில் இன்னும் விரிவாக அமைந்துள்ளது. ஆகவே, பிரணவத்தின் காரியங்களுள் அம்சம், சோஹம், திருவைந்தெழுத்து ஆகிய மந்திரங்கள் முதன்மையுடையன. ஆகவே, அவையெல்லாம் குறிப்பால் உணரக் கூறுகின்ற இவ்வதிகாரத்தை நம்பிரான் ஓர் எழுத்தைக் கூறுவதாக நாயனார் அருளிச் செய்தார்.*

*இதனால், 'இவ்வதிகாரம் நுதலிய பொருள் இது' என்பது கூறப்பட்டது.*

***868. தெளிவுரை :-*** *'ஓம்' என்று ஓரெழுத்தாகச் சொல்லப்படுகின்ற சமட்டிப் பிரணவத்தின் பொருளாகிய 'இலய சிவன்' என்னும் அருவ நிலையால் உலகெங்கும் வரம்பின்றி நிறைந்து நின்று பின், 'அ, உ' என்று, மகாரம் இன்றி இரண்டெழுத்தாகச் சொல்லப்படுகின்ற சூக்கும வியட்டிப் பிரணவத்தில் முறையே அவ்வெழுத்துக்களின் பொருளாகிய சிவமும், சக்தியும் செம்பாதியான ஒளிவடிவாயுள்ள 'போக சிவன்' என்னும் அருவுருவ மூர்த்தியாய் உலகத்தைத் தொழிற்படுத்த நினைந்து, பின், மேற்கூறிய இரண்டெழுத்துடன் மகாரத்தையும் கூட்டி 'அ, உ, ம்' என மூன்றெழுத்தாகச் சொல்லப்படுகின்ற தூல வியட்டிப் பிரணவத்தில் முறையே அவ்வெழுத்துக்களின் பொருளாகிய 'அயன், அரி, அரன்' என்னும் மூவராம் 'அதிகார சிவன்' என்னும் உருவ மூர்த்தியாய்ப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் தொழில்களில் தலைப்பட்டு நிற்கின்ற சிவனை அவனது திருவைந்தெழுத்தில் மகாரத்தின் பொருளாகிய மலத்தின் மறைப்பினால் அறியமாட்டாது உலகம் திகைக்கின்றது.*

***குறிப்புரை :-*** *எனவே, 'பிரணவத்தினை அதன் முறைகளையெல்லாம் உணர்ந்து ஓதின் அவனைப்படி முறையால் உணர்ந்து உய்யலாம்' என்பது கருத்தாயிற்று. உணரப்படுபொருளாகிய சிவனது சிறப்பினை உணர்த்தும் முகத்தால் அவனை உணர வேண்டுவதன் இன்றியமையாமையை உணர்த்தவேண்டி இவ்வாறு சிவன்மேல் வைத்து ஓதினாரேனும், பிரணவத்தை ஓதும் முறைமைகளையும், அவற்றது பயனையும் உணர்த்தலே கருத்தென்க.*

**869.** தேவர் உறைகின்ற சிற்றம் பலம்என்றும்
தேவர் உறைகின்ற சிதம்பரம் என்றும்
தேவர் உறைகின்ற திருவம் பலம்என்றும்
தேவர் உறைகின்ற தென்பொது ஆமே. **3**

---

*'இருவராய் இசைந்து' என மாற்றியுரைக்க. ''இசைந்து'' என்றதனால், அஃது அவ்விருவரும் வேறு நில்லாது ஒன்றாய் இயைந்து நிற்கும் அருவுருவ நிலையைக் குறித்ததாயிற்று. முளைத்தல், உருவாய்த் தோன்றித் தொழில் இயற்றல், 'சோதியை' என்பதன்பின், 'அறியாது' என்னும் சொல்லெச்சமும், மயக்கம் உறுதற்கு, 'உலகம்' என்னும் எழுவாயும் வருவித்துக் கொள்க. இதன்கண் ஈரடி எதுகைவந்தது, உயிரெதுகையுமாம். 'மவ்வெழுத்து' என்பது இத்தொடை நோக்கி விகாரமாயிற்று.*

*இதனால், அசபை சிவபெருமானுக்கு அருள்வாயிலாய் நின்று அவனை உணர்வித்தல் கூறப்பட்டது.*

***869. தெளிவுரை :-** சிவபெருமானார் தாம் இயல்பாக என்றும் எழுந்தருளியிருக்கின்ற சிதாகாசமாகவே திருவுளத்துக் கொண்டு வெளிநின்றருள்கின்ற தில்லையம்பலமும் மேற்கூறிய ஓரேழுத்தே யாகும்.*

***குறிப்புரை :-** "தேவர்" என்றது சிவபிரானையே. முதல் மூன்று அடிகளிலும் "தேவர்" என்பவற்றின்பின் 'தாம்' என்பது வருவிக்க. ''சிற்றம்பலம்'' என்பதில் உள்ள சிறுமை, 'நுண்மை' என்னும் பொருளதாய், ''சிதம்பரம்'' என்பதில் உள்ள 'சித்து' என்னும் பொருளையே குறிக்கும். உபநிடதத்துள் 'தகராகாசம்' எனப்படுவதில் உள்ள 'தகரம்' என்பதற்கும் 'சிறுமை' என்பதே பொருளாதல் அறிக. "திருவம்பலம்" என்பதிலுள்ள 'திரு' என்பதும் அருளையே குறிப்பது. 'சித்து, அருள்' என்னும் வெளிப்படைச் சொற்களாலும், 'சிறுமை, தகரம்' என்னும் குறிப்புச் சொற்களாலும் உணர்த்தப்படுவது சிவனது சக்தியே. அதனால் ''சிற்றம்பலம், சிதம்பரம், திருவம்பலம், தென்பொது" என்னும் இந்நான்கும் சிவன் இயல்பாய் இருக்கின்ற பரவெளியாய் நிற்பது அவனது சத்தியே என்பது போந்தது. எனவே, சிவன் நிலவுலகத்தார்க்கு அருள் புரிதல் காரணமாகத் தில்லையம்பலத்தையே தனது பரவெளியாக ஏற்று எழுந்தருளியுள்ளான் என்பதை நாயனார் இம்மந்திரத்துள் முதற்கண் உடம்பொடு புணர்த்தலாற் கூறியருளினாராயிற்று. என்று - என்று கொண்டு. ஊரின் திசை அதற்கண் உள்ள அம்பலத்திற்குப்*

**870.** **ஆமேபொன் னம்பலம் அற்புதம் ஆனந்தம்**
**ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்**
**ஆமே பிரளய மாகும்அத் தாண்டவம்**
**ஆமேசங் காரத் தருந்தாண் டவங்களே. 4**

---

*புணர்ந்துரைக்கப்பட்டது. 'பொது வும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. அதனால் 'அசபை மேற் கூறியவாறு, இலய சிவன் முதலியோர் வடிவாதலேயன்றி' என்னும் பொருள் தோன்றிற்று. ''ஆம்'' என்பதற்கு 'அசபை' என்னும் எழுவாய், அதிகாரத்தால் வந்தியைந்தது. தென்பொது - தலையின் வலப்பக்கம் என்றும் கொள்வர். தேவர்கள் தரிசித்தற்காக வந்து உறைகின்ற அழகிய பொதுவே சிற்றம்பலம் என்றும் கொள்வர்.*

*இதனால், அசபை மேற்கூறியவாறு இலயசிவன் முதலியோர் வடிவாதலேயன்றி, இந்நிலவுலகில் அதிகார சிவன் வெளிநிற்கின்ற தில்லையம்பலமாயும் நிற்றல் கூறப்பட்டது. அசபையைத் தியானிக்க, சிதாகாசமாகிய தகாராலய தரிசனம் கிட்டும்.*

*870. தெளிவுரை :- பொன்னால் இயன்றுள்ளதாகிய மேற்கூறிய தென்பொது, மேற்கூறியவாறு ஞானமாய் நிற்க. அதன் கண் நின்று சிவபிரான் நிகழ்த்துகின்ற திருக்கூத்து. அந்த ஞானத்தின் வழியே விளையும் ஆனந்தமாய் நிகழும். மேலும், அத்திருக்கூத்து இடையறாது நிகழ்ந்து, ஊழிக்காலம் முழுவதும் உலகைத் தொழிற்படுத்துதலாகிய தூல ஐந்தொழிலை இயற்றுவதுமாம். அதுவேயன்றிச், சருவ சங்காரத்தின்பின், உலகத்தை மீளத் தோற்றுவித்தற் பொருட்டுச் செய்யப்படுகின்ற செயல்களாகிய சூக்கும ஐந்தொழில்களை இயற்றும் திருக்கூத்தும் அதுவேயாம்.*

*குறிப்புரை :- "பொன்னம்பலம் அற்புதம் ஆமே திருக்கூத்து ஆனந்தம் ஆமே; அத்தாண்டவமே பிரளயம் ஆகும்" எனக்கூட்டுக. அற்புதம் - ஞானம். "பொன்னம்பலம் அற்புதம் ஆமே" என்றது, திருக்கூத்து ஆனந்தமாதற்குரிய இயைபுணர்த்தற்குக்கூறிய அனுவாதம். அவ்வியைபால் திருக்கூத்து ஆனந்தமாதலை உணர்த்தியவர், அதுதானே தூல ஐந்தொழில் நடன மாதலின் இயைபு உணர்த்தற்கு அனவரத தாண்டவமாதலை, முன்னர்க் கூறினார். மூன்றாம் அடியில் ''ஆமே'' என்பதன்பின் ''அதனால்'' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. ''பிரளயம்'' என்றது ''ஊழி'' என்னும் பொருளதாய், ஆகுபெயரால் அதன் கண் நிகழும் தூல ஐந்தொழிலை*

871. தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்துத்
தாண்டவ மான தனுக்கிர கத்தொழில்
தாண்டவக் கூத்துத் தனிநின்ற தற்பரம்
தாண்டவக் கூத்துத் தமனியந் தானே. 5

---

*உணர்த்திற்று. "ஆம்" என்பதன்பின் எல்லா இடத்தும் தேற்றேகாரம் புணர்த்தோதினார். அங்ஙனம் ஆகிநின்றதன் அருமை புலப்படுத்தற்கு. ''சங்காரம்'' என்றது அதன் முடிவை. அருமை, காண்டல் கூடாமையை உணர்த்திற்று. ''சூக்குமம்'' என்றவாறு. இச்சூக்கும நடனத்தைக் காண்பவள் அம்மை ஒருத்தியே, அவ்விடத்துப் பிறர் ஒருவரும் இல்லாமையால் தாண்டவம் ஒன்றேயாயினும், அதன் பகுதிகள் பலவாதல் பற்றி, "தாண்டவங்கள்" எனப்பன்மையாகக் கூறினார். ஈற்றில் நின்ற ஏகாரம் பிரிநிலையாய், "அத்தாண்டவம்" என்றதனோடு இயைவதாய் நின்றது.*

*அசபை தென்பொதுவாதலின் சிறப்புணர்தற்கு அப்பொதுவின் சிறப்பை மேலைத் திருமந்திரத்துள் வகுத்தோதிய நாயனார், அசபை அப்பொதுவில் நிகழும் திருக்கூத்துமாய் நிற்றலின் சிறப்பை வருகின்ற திருமந்திரத்தால் உணர்த்தற்கு, அத்திருக்கூத்தின் சிறப்பை இதனால் வகுத்தோதினார் என்க.*

***871. தெளிவுரை :-** மேற்குறித்த அனவரத தாண்டவ உருவாய் நிற்கின்ற ஒப்பற்ற திருவைந்தெழுத்தாவதும் ''ஓர் எழுத்து'' எனப்பட்ட அசபையேயாம். அத்தாண்டவம் உயிர்கட்கு அருள்புரியும் செயலே, அதனால், அஃது ஒப்பற்ற பரம் பொருளால் செய்யப்படுகின்றது. இப்பெருமையை உணர்த்தும் குறிப்பே அத்தாண்டவம் நிகழும் அம்பலம் பொன்மயமாய் நிற்றல்.*

***குறிப்புரை :-** தாண்டவமான தனி எழுத்து - பிரணவம். கூத்துக்கள் அனைத்தையும் ஓங்காரமே காட்டும். கூத்தப் பெருமானது வடிவம் ஐந்தெழுத்தாதல் நன்கறியப்பட்டதாகலின், அதனை அநுவாதமாகக்கூறி, அத்தகைய ஐந்தெழுத்தாய் நிற்பதும் அசபையே என்றார். அதனானே, அசபை கூத்தப்பெருமானது வடிவாதலும் தானே அமைந்தது. ''தனி யெழுத்தும்'' என்னும் உம்மை தொகுக்கப்பட்டது. இங்ஙனம் உணர்த்திய பின்னர் இயைபு பற்றியும், மேல் வகுத்துக் காட்டிய தாண்டவத்தின் சிறப்பும், அதுநிகழிடம் ஆகிய அம்பலத்தின் சிறப்பும் உணர்த்தினார் என்க. தமனியம் - பொன். தற்பரம் - ஒப்பற்று நின்ற பரம்பொருள்.*

**872.** தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்கும்
தானே அகார உகாரம தாய்நிற்கும்
தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்குத்
தானே தனக்குத் தராதலந் தானே. **6**

**873.** தராதல மூலைக்குத் தற்பரம் மாபரன்
தராதல வெப்பு நமவா சியஆம்
தராதலம் சொல்லின் தான்வாசியஆம்
தராதல யோகம் தயாவாசி ஆமே. **7**

---

*கூத்தப் பெருமானது வடிவம் ஐந்தெழுத்தால் அமைந்திருத்தலை உண்மைவிளக்கம் முதலியவற்றான் அறிக. மேல் "அனவரத தாண்டவம்" என்றதனையே இதனுள் "தாண்டவம்" எனச் சுருங்கக் கூறினாராதலின், ''தாண்டவக் கூத்து'' என்பது இருபெயரொட்டாம்.' ''பொன்போற் பொதிந்து'' (குறள், 155) "பொன்போற் புதல்வர்" (புறம். 9) "பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரை'' (நாலடியார், 162) என்றாற் போல்வனவற்றால் பொன்னினது சிறப்பினை உணர்க. தற்பரத்தால் செய்யப்படுவதனை, தற்பரம் என்றார். 'ஓரெழுத்' எனத் தகரவுகரமின்றி ஓதுதல் பாடம் அன்று.*

*இதனால், அசபை கூத்தப்பெருமானது வடிவாதற் சிறப்புடைய திருவைந்தெழுத்தாயும் நிற்றல் கூறப்பட்டது.*

*872. தெளிவுரை :- கூத்தப்பெருமான் ஒருவனே தத்துவம் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பேரொளிப் பொருளாயும், தத்துவம் எல்லாவற்றிலும் அவையேயாய்க் கலந்துநிற்பவனாயும், பிரணவ மாயும், மூவகை ஐந்தொழிற் கூத்திற்கும் முதல்வனாயும், அக்கூத்து இயற்றுங்கால் தன்னைத் தாங்கி நிற்கின்ற அம்பலமாயும் உள்ளான்.*

*குறிப்புரை :- அதனால், பிரணவமாகிய அசபை மேற்கூறிய வாறெல்லாம் நிற்றல் அவனது திருவருட் சங்கற்பத்தாலல்லது தானாக அன்று என்பது குறிப்பெச்சம். "அகார உகாரம்" என்பது ''பிரணவம்'' என்னும் பொருளதாயும், ''பரஞ்சுடர்'' இரண்டில் பின்னது, "முதல்வன்" என்னும் பொருளதாயும் நின்றன. தராதலம் - தாங்குகின்ற இடம், ஆதாரம். தத்துவக் கூத்து - தத்துவங்களை ஆக்குகின்ற கூத்து.*

''*அசபை மேற்கூறியவாறெல்லாம் நிற்றல் தானாகவே போலும்'' என மலையாமைப்பொருட்டு "எல்லா முதன்மையும் உடையவன் சிவன் ஒருவனேயாதலின், அசபையின் காரியமும் அவனன்றி ஆகாது" என இதனால் ஓர் ஐயம் அறுத்தவாறு.*

***873. தெளிவுரை :-*** *ஆதாரங்களில் ஏனையவற்றிற்கெல்லாம் அடியாகிய மூலாதாரத்திற்கு உரிய தெய்வ மந்திரம், நகாரம் முதலாக முழுமையாய் மாறாது நிற்கும் திருவைந்தெழுத்தாம். அதற்கு மேல் உள்ள அக்கினி மண்டலத்தில் அம்மந்திரம் அருள் எழுத்து மாறி இடை நிற்க ஏனைய எழுத்துக்கள் முன் நின்றவாறே நிற்க இருக்கும். அதற்குமேல் உள்ள சூரிய மண்டலத்தில் பாச எழுத்துக்கள் நீங்க, ஏனைய மூன்றும் முன்நின்றவாறே நிற்க இருக்கும். அதற்கு மேல் யோகத்தால் அடையப்படும் சந்திர மண்டலத்தில் பசு எழுத்து நீங்க, அருளேயான ஏனை இரண்டெழுத்தும் அவ்வாறே நிற்க இருக்கும்.*

***குறிப்புரை :-*** *''அதனையறிந்து சிவயோகி தனது சிவயோகத்தைச் செய்க" என்பது குறிப்பெச்சம்.*

***உடம்பின் நிலைக்களத்தில் அமையும் ஐந்தெழுத்துக்கள்***

*திருவைந்தெழுத்து,*

*மூலாதார மண்டலத்தில் - நமசிவாய என்றும்,*
*அதற்குமேல் அக்கினி மண்டலத்தில்- நமவாசிய என்றும்,*
*அதற்குமேல் சூரிய மண்டலத்தில் - வாசிய என்றும்,*
*அதற்குமேல் சந்திர மண்டலத்தில் - வாசி என்றும்*

*நிற்கும் என்பது இதன் தெளிபொருளாதல் காண்க. "பிற யோகிகள் யோகத்தை அமந்திரமாகவும், பிரணவமாகவும் செய்வாராயினும், சிவயோகி இவ்வாறு திருவைந்தெழுத்து மந்திரத்தால் யோகம் செய்யக்கடவன்'' என்பது குறிப்பால் உணர்த்தியவாறு, இச் சிவயோக நெறியால் பாசமும், அதன்வாதனையால்நிற்கும் பசுத்துவமும் நீங்கச் சிவமாம் தன்மையைப் பெறுவன் என்க.*

*மூலாதாரத்தை, "மூலை" என மறைபொருளாகக் கூறுதல் சித்தர் முறை. அது பற்றி,*

*"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியர்என் றுந்தீபற;*
*தவத்தில் தலைவர்என் றுந்தீபற"*

874. ஆமே சிவங்கள் அகார உகாரங்கள்
ஆமே பரங்கள் அறியா இடம்என்ப
ஆமே திருக்கூத் தடங்கிய சிற்பரம்
ஆமே சிவகதி ஆனந்த மாமே. 8

---

*என்ற திருவுந்தியாரையும் (பா.12) நோக்குக. தற்பரம் - அதிதெய்வம். மாபரன் - பதியாய் (முழுமுதல் தலைவனாய்) நிற்கும் சிவன். "தற்பரம், மாபரன்" என்ற இரண்டும் ஆகுபெயராய் அவர்க்குரிய மந்திரத்தைக் குறித்தது. வாளா, "தரா தலம்" என்றாரேனும், 'அதற்கு மேல்உள்ள தராதலம் என்றல் கருத்தாதல் அறிக. வெப்பு, இடை நின்ற இரு தராதலம், யோகம் இவையும் ஆகுபெயராய் அவ்விடத்து நிற்கும் மந்திரங்களைக் குறித்தன. யோகம் - கூடுதல், வெப்பு, இருமடியாகு பெயர்.*

*இதனால், சிவயோகம் செய்வார் அறிதற்குரிய நான் மண்டல மந்திரங்கள் இவை என்பது கூறப்பட்டது.*

*874. தெளிவுரை :- பிரணவ யோகிகட்கு அகார உகாரமாய் நிற்கின்ற பிரணவ கலைகள் சிவயோகிகட்கு முறையே திருவைந் தெழுத்தில் சிகார வகாரங்களாய் நிற்கும். (எனவே சிகார வகாரங்களின் பொருள்களாகிய அபர சிவனும், ஆதி சத்தியும் சொல்லால் உணரப்படுபவர் என்பதாம்.) சொல்லால் உணரப்படாத நிலையில் நிற்பவர் பரசிவனும், பராசத்தியுமே, அவர்களது நிலை ஐந்தொழிற் கூத்தொழிய ஞான மாத்திரமாய், மேல் நிற்பதாம், 'சிவ கதி' எனவும், "சிவானந்த மயம்" எனவும் சொல்லப்படுகின்ற பரநிலை அவர்களது நிலையேயாம்.*

*குறிப்புரை :- "பிரணவ யோகத்தோடு நில்லாது, சிவமந்திர யோகத்தில் செல்வோரே நாதத்தைக் கடந்து, பரநிலையை எய்துவர்" என்பதை உணர்த்துவார், அவர்க்கும் பிரணவம் பயனளிக்குமாற்றை முதற்கண் கூறினார். 'அகார உகாரங்கள் சிவங்கள் ஆமே' எனக் கூட்டுக.*

*சிவங்கள் என்றது, 'சிம், வம்' என்னும் எழுத்துக்கள் என்றவாறு. சிகார வகாரங்களைத் தனிப்பட எடுத்துக் கூறுமிடத்து இவ்வாறு விந்துவுடனாகக் கூறுதலும் உண்டு. 'அறியா இடம் பரங்களே ஆம்'*

**875.** ஆனந்தம் மூன்றும் அறிவிரண் டொன்றாகும்
ஆனந்தம் சிவாய அறிவார் பலர்இல்லை
ஆனந்த மோடும் அறியவல் லார்களுக்கு
ஆனந்தக் கூத்தாய் அகப்படுந் தானே. **9**

---

*என்க. இடத்தில் உள்ளவர்களை ''இடம்'' எனவும், பரமாய் நிற்பவர்களை, "பரம்" எனவும் கூறினார். சிவனையும், சத்தியையும் வேறுவேறாக வைத்து எண்ணுதலின், "பரங்கள்" எனப் பன்மையாற் கூறினார். இரண்டாம் அடியின் இறுதியில், 'அவையே' என்னும் எழுவாய் வருவிக்க. 'இவை அறியா இடம்' எனவே முன்னர்க் கூறியன அறியும் இடமாதல் பெறப்பட்டது.*

*இதனால், அசபை சிவ யோகிகட்குச் சிவமந்திரமாய்ப் பயன்படுதல் கூறப்பட்டது.*

***875. தெளிவுரை :-** திருவைந்தெழுத்தில் வினை நீக்கத்துக்காகத் துன்பத்தைத் தரும் பாச எழுத்துக்களாகிய நகாரம் மகாரம் இரண்டும் நீங்க, எஞ்சிய மூன்றும் நின்றவழி உளதாவது இன்பமே. அம் மூன்றெழுத்துக்களில் சிகாரமும், வகாரமும் ஆகிய இரண்டெழுத்துக்கள் அறிவெழுத்துக்களாம். (சிகாரம் அறிவைச் செலுத்துவதும், வகாரம் செலுத்தியவாற்றிலே சென்று அறிவதும் ஆம்). அவற்றுள்ளும் அறிவதாகிய வகாரம் தன்னைச் செலுத்துவதாகிய சிகாரத்திலே அடங்க, சிகாரமும் வகாரமும் ஆகிய இரண்டெழுத்தும் சிகாரமாகிய ஓர் எழுத்தேயாய் விடும். (அதுவே ஆனந்தாதீத நிலையாம்). இவ்வாறு 'சிவாய' என்னும் மூன்றெழுத்து ஆன்மாக்களுக்கு ஆனந்தப்பேற்றினை வழங்குவன வாதலை அறிபவர் மிகச் சிலரே. அவற்றை அன்போடு அறிய வல்லவர்கட்கு ஆனந்தம், அம்பலத்தில் கண்கூடாகக் காணப்படும் அருள்நடனத்திலேயே எளிதில் உண்டாகும். மூன்றெழுத்து - அ, உ, ம என்றும், அறிவாகிய விந்து, நாதம் இரண்டு என்றும் கொள்வர். இரண்டின் சேர்க்கை பிரணவமே.*

***குறிப்புரை :-** "சிவாய" எனப்பின்னர் வருதலின், முன்னர் வாளா, "மூன்று" என்றார். 'இரண்டு அறிவு; அவை ஒன்றும் ஆகும்' என்க. 'ஒன்றும்' என்னும் எதிர்மறை உம்மையும். 'ஆனந்தக்கூத்தாயே' என்னும் பிரிநிலை ஏகாரமும் தொகுத்தல்பெற்றன. 'இரண்டு, ஒன்று' என்பன அவ்வவ்வெழுத்துக்களைத் தொகைக் குறிப்பால் உணர்த்தின. "சிவாய" என்னும் மூன்றெழுத்தில் சிகாரம் பேறும்*

876. படுவ திரண்டு பலகலை வல்லார்
படுவ தோங்கார பஞ்சாக் கரங்கள்
படுவது சங்காரத் தாண்டவப் பத்தி
படுவது கோணம் பரந்திடும் வாறே. 10

877. வாறே சதாசிவ மாறிலா ஆகமம்
வாறே சிவகதி வண்துறை பின்னையும்
வாறே திருக்கூத்தா கமவ சனங்கள்
வாறே பொதுவாகும் மன்றின் அமலமே. 11

---

*வகாரம் பெறுவிப்பதும், யகாரம் பெறுவானும் ஆக நிற்கும் நுட்பமும், அம்மூன்றும் உள்ளவழியே ஆனந்தாநுபவம் நிகழ்தலும் நல்லாசிரியர் வழி மரபில் நின்று உணர்பவர்க்கல்லது உணர வாராமையின் "அறிவார் பலர் இல்லை" என்றார். மூன்றாவதாக வந்த 'ஆனந்தம்' அன்பின்மேல் நின்றது. சிவயோகிகட்குத் திருவம்பலக் கூத்து ஆனந்த நடனமாதல் அனுபவமாய் விளங்கலின், "ஆனந்தக் கூத்தாய் அகப்படும்" என்றார்.*

*"உணர்வின் நேர்பெற வரும்சிவ போகத்தை*
*ஒழிவின்றி உருவின்கண்*
*அணையும் ஐம்பொறி யளவினும் எளிவர*
*அருளினை" - தி.12 பெரிய.பு. திருஞா. 161*

*என்ற அநுபவத்தினை இங்கு நினைவு கூர்க.*

*இதனால், அசபா யோகத்தின் முதிர்ந்த நிலையாகிய சிவ மந்திர யோகத்தினது சிறப்புக் கூறப்பட்டது.*

*876. தெளிவுரை :- யோக நூல்களிலும், ஞானநூல்களிலும் வல்லவர்கள் பொருந்துவது "அம், சம்" என்னும் இரண்டெழுத்திலும், ஓங்காரத்திலும் திருவைந்தெழுத்திலும் சிவனது அருளல் நடனத்தின் அன்பிலும், அவையெல்லாம் பலவகைச் சக்கரங்களில் பரவி விளங்குகின்ற முறைமைகளிலுமாம். இரண்டிற்கு விந்து, நாதம் என்றும் பொருள் கொள்வர்.*

*குறிப்புரை :- "படுவது" என்பன பெறுவது என்ற பொருள் கொண்ட தொழிற்பெயர்கள். அவை சொற்பொருட்பின்வருநிலையாய் வந்தன. முத்தொழிலாகக் கூறுமிடத்தில் அருளல் அழிப்பில் அடங்குகின்ற முறை பற்றி, ஐந்தொழிலில் இறுதிக்கண்ணதை, "சங்காரம்" என்றார். "கோணம்"*

878. அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்
அமலம் திரோதாயி ஆகும்ஆ னந்தமாம்
அமலஞ்சொல் ஆணவ மாம்மாயை காமியம்
அமலம் திருக்கூத்தங் காமிடந் தானே. 12

---

*என்றது பலவகையாக வரையப்படும் சக்கரங்களை, ''இரண்டு பஞ்சாக்கரம், பத்தி, கோணம், வாறு" - இவைகளில் ஏழாம் உருபு விரித்துக் கொள்க. ''ஆறு'' என்பது சில இடங்களில் முதற்கண் வகரமெய் பெற்றும் வருதல் உண்டு. சங்கச் செய்யுட்களில் மகரமெய் பெற்று, "மாறு" என வருதல் அறியத்தக்கது. ஆறு - வழி; முறை. ''ஓங்கார பஞ்சாக் கரங்கள்'' என அஃறிணை உம்மைத்தொகை பன்மையீற்றோடு வந்தது.*

*இதனால், மேற்கூறிய மந்திரங்கள், தாண்டவம் இவை யோகத்திற்கும், ஞானத்திற்கும் வாயிலாதல் கூறப்பட்டது. புற வழிபாட்டிற்கும் உரியதாகப் பின்னர்க் கூறப்படும் சக்கரங்களும் இங்கு எதிரது போற்றிக் குறிப்பிடப்பட்டது.*

***877. தெளிவுரை :-** அசபையை இவ்வாறு அறிந்து அனுபவித்தலே ஆகமும், வேதமும், சிவகதியுமாம் என்பதை உணர்த்துதல். மேற்கூறிய மூன்று மந்திரங்களும் சதாசிவ மூர்த்தியால் அருளிச் செய்யப்பட்ட ஆகமங்களின் ஞானப்பகுதிகளும், அவற்றால் அடையப்படும் சிவகதியாகிய வளப்பமான கடல் துறையும், அத்துறையில் மூழ்கினோர்க்கு ஐம்பொறி வழியிலும் அவ்வானந்தத்தை தருகின்ற திருநடனமும் மற்றும் ஆகமங்களின் கிரியைப் பகுதிகளும், ஞானிகட்கேயன்றிப் பிறர் அனைவர்க்கும் பொதுவாகச் செய்யப்படுகின்ற அம்பலக்கூத்தும் ஆகிய அனைத்துமாய் நிற்கும்.*

***குறிப்புரை :-** வாறு - தன்மை. ''இவ்வாறே'' எனச் சுட்டியுரைத்தல் கருத்தாகலின், ''வாறு'' என்பன மேற்கூறிய மந்திரங்களைச் சுட்டி நின்றன. "சதாசிவம்'' என்பது, செய்யுட் கிழமைக்கண் வந்த ஆறாவதன் தொகையில் ஈறுகெட்டுப் புணர்ந்தது. ஞானப் பகுதிகள் தம்முள் முரணுதல் இன்மையின், "மாறிலா ஆகமம்" என்றது அவற்றை யாறிற்று. "பின்னையும்" என்பது "மற்றும்" எனப் பொருள் தந்து, ஞானத்தின் வேறாகிய கிரியை முதலிவற்றைக்கூறும் குறிப்புணர்த்தி நின்றது. "புன்னையும்" என்பது பாடம் அன்று இதனை, 'திருக்கூத்து' என்றதன் பின்னர்க் கூட்டுக. "அமலம்" என்பது நின்மல சொரூப சிவம் - சுத்தம்.*

879. தானே தனக்குத் தலைவனு மாய்நிற்கும்
தானே தனக்குத் தனமலை யாய்நிற்கும்
தானே தனக்குத் தனமய மாய்நிற்கும்
தானே தனக்குத் தலைவனு மாமே. 13

880. தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்
தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தைத்
தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்
தலைவனு மாய்நின்ற தாளிணை தானே. 14

---

*இதனால், மேலனவற்றின் சிறப்பு உணர்த்தப்பட்டது.*

***878. தெளிவுரை :-*** *பதி பசு பாசங்கள் ஆகமம் எல்லாம் சுத்தமாம், திரோதாயியாக நிற்கும் சத்தியும் ஆனந்தம் விளைத்தும் சுத்தமாம். மலக்கூட்டத்துள் வைத்துச் சொல்லப்படுகின்ற ஆணவம் மாயை கன்மம் ஆகிய எல்லாம் சுத்தமாம். திருக்கூத்து ஆடுகின்ற இடமும் சுத்தமாம் என்றவாறு.*

*பசு, மலகன்மங்களோடு கூடிய பெத்தநிலையில் மலசகிதமாய்ப் பின்பு பதியைச்சார்ந்து பதிபோதம் மேவரப்பெற்று இரதகுளிகையைச் சார்ந்த செம்பு போல மலக்களிம்பு நீங்கப்பெறுதலின் அமலமாம். பாசம் சடமாய் வன்மை குன்றியும் கெட்டும் ஒழிதலின் அமலமாம். பதி அமலமாதல் யாங்ஙனம் எனின் இயற்கையாகவே அமலமாம் என்க.*

*திரோதாயியாகும் ஆனந்தம் அமலமாம் என்றது நோய் தோன்றாதிருக்க உண்ணும் மயக்க மருந்துபோல ஆன்ம அறிவை மறைத்து நிற்கின்ற திரோதசத்தி ஆன்மாவிற்கு ஆனந்தத்தை விளைக்கும்; அது திரோத மலத்தால் அளிக்கப்படுதலின் மலம் ஆனந்தமேயாம். அதுவும் திருக்கூத்துத் தரிசிக்கப் பெறின் அமலமாம் என்றவாறு.*

*'ஒன்றதாய் அநேகசத்தி உள்ளதாய்' (சித்தியார்) நிற்கும் எனச் சொல்லப்படுகின்ற ஆணவம் 'சொல்லாணவம்' எனப்பட்டது. அதுவும் மாயை காமியங்களும், வன்மை கெட்டும் அழிந்தும் போமாதலின் அமலமாம் என்றருளினார்.*

*திருக்கூத்து ஆடுதல் - அசபாமந்திர செபத்தால் அசைந்து ஆடுதல். அசபாநடனம் புரியுமிடத்தில் எல்லாம் அமலமாம் என்பது கருத்து.*

881. இணையார் திருவடி எட்டெழுத் தாகும்
இணையார் கழலிணை யீரைஞ்ச தாகும்
இணையார் கழலிணை ஐம்பத்தொன்றாகும்
இணையார் கழலிணை ஏழாயிரமே. 15

---

***879. தெளிவுரை :-*** *இத்திருக்கூத்தே சிவமாய், சத்தியுமாய், எல்லாமாய் நிற்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. திருக்கூத்துத் தானே தனக்குத் தலைவியாயும் தனமலையாயும், தன்மயமாயும் தலைவனாயும் நிற்கும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *தலைவியாய் நிற்றல் - சத்தியாய்க் காத்தல். தன் மலையாய் நிற்றல் - போகத்திற் கின்றியமையாத செல்வ மலையாகத் திகழ்தல். தன்மயமாய் நிற்றல் - சிவமேயாக ஆனந்த சொரூபமாதல். தலைவனாக நிற்றல் - பதியாய், பசுக்கள் செய்யும் புண்ணிய பாவங்களைக் காண்பவனாய் நிற்றல். இம்மந்திரம் அசபையாகிற நடனப் பயன் உணர்த்தியது.*

***880. தெளிவுரை :-*** *யாதொரு தொழிலுமின்றிச் சிவனாய் நிற்றலேயன்றி ஐந்தொழில் செய்யும் பதியாயும் நிற்கின்ற முதல்வனது தன்மையையும், அம்முதல்வனது தொழில்களில் பிறவற்றின் பயனையன்றி, இறுதித் தொழிலாகிய அருளலின் பயனையும் ஏற்கும் நல்ல கொள்கலமாகிய பக்குவம் வாய்ந்த உயிரினது தன்மையையும் மகரந்தங்களாக உதிர்த்து மலர்கின்ற திருவாய்மலரையுடைய சிறந்த ஞானாசிரியனாயும் நிற்பன சிவனது இரண்டு திருவடிகளே.*

***குறிப்புரை :-*** *தற்பரம் - தனக்கு (ஆன்மாவிற்கு) மேலானவன். ஆசிரியன் தன்னைச் சிவமாகப் பாவிக்கும் பாவனையில் நின்றே உபதேசித்தல் பற்றி இங்கு, "தன்" என்று ஆசிரியனையே சுட்டி, 'அவனுக்கு மேலானவன்' என்றார். அபக்குவிகட்கு மேலாய் நிற்றல் பற்றிப் பக்குவியை, "தலைவன்" என்றார். "தாதவிழ்" என்றதை அவ்வடியின் முதற்கண் வைத்து உரைக்க. அது "ஞானத்தலைவன்" என்னும் முதற்பெயரோடேமுடியும். மூன்றாவதாக வந்த "தலைவன்" என்பது, "ஞானாசிரியருள் மேம்பட்டவன்" எனப் பொருள் தந்தது. இறுதியில் உள்ள 'நின்ற' என்பது முற்று. "தானே" என்பது பன்மை யொருமை மயக்கம். சற்பாத்திரம் - என்றுமுள்ள ஆதாரப் பொருளான இறைவன். அவனே எல்லோரையும் எப்போதும் தாங்குவான்.*

**882.** ஏழாயிரமாய் இருபதாய் முப்பதாய்
ஏழாயிரத்தும் எழுகோடி தானாகி
ஏழா யிரத்துயிர் எண்ணிலா மந்திரம்
ஏழாய் இரண்டாய் இருக்கின்ற வாறே. **16**

---

*இதனால், தடத்த நிலையில் உள்ள சிவனுக்குத் திருவடிகளாய் உள்ளது அவனது 'அருள்' எனப்படும் சத்தியே என்பது குறிக்கப்பட்டது. இதனது பயன், வருகின்ற மந்திரம் முதலியவற்றுள், ''இணையார் திருவடி'' என்பனபோலக் கூறும் வழக்கினது உண்மையை உணர்தல்.*

*881. **தெளிவுரை :-** சிவனது, இணைதல் பொருந்திய திருவடிகளே வித்தெழுத்துக்கள் மூன்றோடு கூடி எட்டெழுத்தாய் நிற்கும் பஞ்சாக்கரமும், பத்துக் கூறுகளாய் பகுக்கப்பட்டு நிற்கும் பிரணவமும், மூல எழுத்தாகிய (மாதுருகாட்சரங்களாகிய) அகாரம் முதல் க்ஷகாரம் ஈறாக உள்ள ஐம்பத்தோரெழுத்துக்களும், ஏழு கோடிகளையுடைய பல மந்திரங்களுமாய் நிற்கும். எட்டென்றது எட்டென்னும் எண்ணின் வடிவாகிய அகாரத்தை. அகாரம் - சிவம். ஈரைஞ்சு என்றதை தூல, சூக்கும பஞ்சாக்கரம் என்பாரும் உளர்.*

*குறிப்புரை :- இணை, முதனிலைத் தொழிற்பெயர். 'இணையாகப் பொருந்திய' என்றும் ஆம், 'இறைவனது ஞான சத்தி, கிரியா சத்திகளே அவனது இரண்டு திருவடிகள்' என்பது உணர்த்துவதற்கு, "இணையார் திருவடி'' என்றார். ''இணையார் கழல்'' மூன்றும் அடையடுத்த ஆகுபெயர்களாய் நின்றன. எனவே, இணைதல், கழல் என்னும் அணியைச் சிறப்பித்து நின்றனவாம். அங்கு இணைதல், அறியப்படுதல். ''ஏழு'' என்பதும் ஆகுபெயராய் அத்துணைக் கோடியை உணர்த்திற்று. ஆயிரம், பன்மை குறித்தது.*

*இதனால், எல்லாவற்றிலும் நீக்கம் அற நிறைந்து நிற்கின்ற சிவ சக்திக்குச் சிறப்பிடம் மந்திரங்கள் என்பது கூறப்பட்டது. இம்மந்திரம் இறைவனுடைய மந்திர சொரூபம் உணர்த்தியது.*

*882. **தெளிவுரை :-** மந்திரங்கள் அளவற்றனவாய் நின்று அளவற்ற உயிர்களில் நிற்பினும் அவை அனைத்தும் ஐம்பதெழுத்திற்குள்ளும், 'ஏழுகோடி' என்னும் வகைக்குள்ளும், 'ஏழு, இரண்டு' என்னும் வடிவத்துள்ளும், அடங்கி நிற்கும் முறைமை அறியத்தக்கது.*

*குறிப்புரை :- ''எண்ணிலா மந்திரம் ஏழாயிரத்துயிர் ஏழாயிரமாய்'' எனக் கூட்டுக. 'எழுவகைப் பிறப்பிலும் பலவாய் உள்ள*

883. இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்
இருக்கின்ற மந்திரம் எத்திறம் இல்லை
இருக்கின்ற மந்திரம் சிவன்திரு மேனி
இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணந் தானே. 17

884. தானே தனக்குத் தகுநட்டந் தானாகும்
தானே அகார உகாரம தாய்நிற்கும்
தானேரீங் காரம் அத் தத்துவக் கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே. 18

---

*உயிர்' என்றற்கு "ஏழாயிரத்துயிர்" என்றார். ஏழாயிரத்துயிர்க்கும் என்னும் நான்க னுருபும், முற்றும்மையும் தொகுத்தல் பெற்றன. ''இருபதாய் முப்பதாய்'' என்றது, ''ஐம்பதாய்'' என்றவாறு. மாதுருகாட்சரங்களை ஈற்றிலுள்ள க்ஷகாரத்தைக் கூட்டி 'ஐம்பத்தொன்று' என்றல், கூட்டாது விடுத்து 'ஐம்பது' என்றல் ஆகிய இருமரபுகளும் உள்ளன என்க. உயிர்களைக் குறிப்பதாய் இரண்டாம் அடியில் வந்த "ஏழாயிரத்தும்" என்பது சொற்பொருட் பின்வருநிலை. 'எல்லாப் பொருள்கட்கும் மந்திரம் உண்டு' என்பதைச் சிவஞான போத ஒன்பதாம் சூத்திரத்தின் இரண்டாவது அதிகரண பாடியத்திற் காண்க.*

*கோடி - இறுதி, மந்திரங்கள் அனைத்தும் எழுவகை இறுதி உடையனவாம். அவை :- 'நம, ஸ்வதா, ஸ்வாஹா, வஷட், வௌஷட், பட், ஹூம்' என்பன (ஹூம், பட் - இரண்டும் ஓரிடத்தே இணைந்தும் வரும், அவ்விடத்து, 'ஹூம், பட்' என நிற்றலும் உண்டு) 'ஏழு, இரண்டு' எனப்பட்டவை பஞ்சாக்கர பேதங்கள். மேல் "எட்டெழுத்து" என்றதில் வித்தெழுத்து மூன்றனுள் இறுதி நின்றதை நீக்கி, இங்கு "ஏழு" என்றார். அவ்வாறு நிற்றலும் உண்மை பற்றி, இரண்டு, சிகார வகாரங்கள், 'அறியத்தக்கது' என்பது சொல்லெச்சம். இரண்டாய் - சோ, கம் என்ற இரண்டு மந்திரங்களாகவும் கொள்வர்.*

*இதனால், மந்திரங்கள் விரிந்தும், ஒடுங்கியும் நிற்குமாறு கூறப்பட்டது.*

*883. தெளிவுரை :- உண்மையில் உள்ள மந்திரங்கள் அளவற்றன. எந்தப் பொருட்கு மந்திரம் இல்லை! அனைத்து மந்திரங்களும் சிவனது திருமேனியே அவற்றின் உண்மை இதுவே.*

*குறிப்புரை :- முன்னிரண்டடிகள், "கற்றது கைமண்ணளவு; கல்லாதது உலகளவு" (ஔவையார் - தனிப்பாடல்) என்பதுபோல,*

885. நடம்இரண் டொன்றே நளினமதாய் நிற்கும்
நடம்இரண் டொன்றே நமன்செய்யுங் கூத்து
நடம்இரண் டொன்றே நகைசெயா மந்திரம்
நடம்சிவ லிங்கம் நலம்செம்பு பொன்னே. **19**

---

*அறியப்படாது பல மந்திரங்கள் உள என்பது உணர்த்தின. சிவனுக்குத் திருமேனியாவது அவனது சத்தியேயாகலின், மூன்றாம் அடி மந்திரங்கள் சத்தியின் வடிவமாதல் குறித்ததாம். அதனானே, மந்திரங்கள் அவனது உறுப்புக்களில் நியசிக்கப்படுவதற்குக் காரணமும் கூறியதாயிற்று. 'மந்திரங்கள் சிவ சத்தியே' என்பதனை ஈற்றடி உணர்த்திற்று. மூன்றாம் அடியில், 'மந்திரம்' என்னும் வடசொல்லின் இகரம் அலகு பெறாது நின்றது.*

*இதனால், மேல் 'சத்தி மந்திரமாய் நிற்கும்' எனச் சத்திமேல் வைத்துக் கூறியது, 'மந்திரங்கள் சத்தியாம்' என மந்திரங்களின்மேல் வைத்து வலியுறுத்தப்பட்டது.*

*884. தெளிவுரை :- சிவன், பிரேரிப்பாரின்றித் தானே தான் ஆடத்தக்க கூத்து வகைகளை வகுத்துக்கொள்வான். பின்பு அக்கூத்துக்களை மந்திரங்களையே வடிவாகக்கொண்டு ஆடுவான். அக்கூத்து வகைகளுள் சத்தியின் கூத்திலும் தான் நிறைந்து நிற்பான். சில கூத்துக்களைத் தன்னுடையனவாகவே ஆடி நிற்பான்.*

*குறிப்புரை :- 'அவனது நிலையை அறிபவர் யார்' என்பது குறிப்பெச்சம். "அகார உகாரம்" என்றது அவற்றை அடியாகக் கொண்டு எழும் மந்திரங்களை உணர்த்திற்று. ரீம் - மாயாபீஜம். ரீங்காரத் தத்துவக்கூத்து - மாயாமலத்தைக் கொண்டு உலகைப் படைத்து, காத்து, ஒடுக்கும் பஞ்சகிருத்திய நடனம். தத்துவக்கூத்து - பிரபஞ்ச நடனம். 'ஹ்ரீம்' என்பது சத்தி பீஜம் ஆதலின் அத்தத்துவக் கூத்து சத்தியினுடையதாயிற்று. "ரீங்காரம்" என்றது, 'அக்கூத்திற்கு மூலம்' என்றவாறு. "தனி நடம்" என்றது, தன்னுடையவற்றை மூன்றாம் அடியை அகரச்சுட்டின்றி ஓதுதல் பாடல் அன்று. அகார உகாரமாய் நிற்கும் என்றது, புனருற்பவத்தைத் திருவுள்ளத்தில் எண்ணியபோது, தன்னியிருந்து சத்தியைத் தோற்றுவித்து, தானும் சத்தியுமாய் நின்றமையை உணர்த்துவது. தகு நட்டம் - எல்லாவற்றையும் ஒடுக்கியபின் ஆடும் பேரூழிக் கூத்து.*

*இதனால், மேல், "சிவன் திருமேனி" எனக் கூறப்பட்டதில் இடம் பெற்று நின்ற சிவனது பெருமை கூறப்பட்டது. சத்தியின் பெருமை மேலெல்லாம் சொல்லப்பட்டது.*

**886.** <u>செம்புபொன் னாகும் சிவாய நமஎன்னில்</u>
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரம்
செம்புபொன் னாகும் சிறீயும் கிரீயும்எனச்
செம்புபொன் னான திருவம் பலமே. **20**

---

***885. தெளிவுரை :-*** *"தனிநடம்" என மேற்குறிக்கப்பட்ட சிவ நடனம் இரு வகைத்து. ஒன்று இன்பத்தையே தரும்; மற்றொன்று ஒடுக்கத்தையே தரும். ஒடுக்கத்தைத் தருவது மறைத்தலைச் செய்கின்ற எழுத்துக்களை முதலாகக் கொண்ட மந்திரத்தையே வடிவமாகக் கொள்ளும்; இன்பத்தைத் தருவது விளக்கத்தைச் செய்கின்ற எழுத்துக்களை முதலாகக் கொண்ட மந்திரத்தையே வடிவமாகக் கொள்ளும். பின்னதனால் விளைகின்ற நலம் செம்பு பொன்னானது போல அதியற்புதம் உடையதாகும்.*

***குறிப்புரை :-*** *பிரிநிலை ஏகாரங்கள் பிரித்துக் கூட்டப்பட்டன. நளினம் - இன்பம். நமனது செயலாகிய கொல்லுதலை "நமன்" என்றது ஆகுபெயர். இன்பம் வீடும், துன்பம் பந்தமும் ஆதல் வெளிப்படை. இக்கூத்து இரண்டும் முறையே, 'ஞான நடனம், ஊன நடனம்' எனப்படும். மறைத்தலைச் செய்யும் எழுத்துக்கள் நகார மகாரங்கள். அவை திரோதான சத்தியும், மலமுமாய் நிற்பனவாம். விளக்கத்தைச் செய்யும் எழுத்துக்கள் சிகார வகாரங்களாம். அவை முறையே சிவமும், அருட்சத்தியுமாய் நிற்பன. யகாரம் உயிர்களாகிய நம்மைக் குறிக்கும். இவற்றான் அமையும் இரு வேறு வடிவங்களை "ஆடும் படி கேள்", "சேர்க்கும் துடி சிகரம்" என்னும் உண்மைவிளக்க வெண்பா (பா.33-34)க்களால் அறிக. 'நகை செய்யும் மந்திரம்' என ஓதுதல் பாடம் அன்று.*

*செய்யுட்கு ஏற்ப ''மந்திரம், லிங்கம்'' என்றவற்றை வேறு வேறிடத்து வைத்து ஓதினாராயினும், இரண்டையும் ஈரிடத்தும் ஒருங்கோதுதல் கருத்தென்க. உருவத் திருமேனியும் 'வியத்தலிங்கம்' எனப்படுதல் அறிந்துகொள்க. 'ஒன்று நகை செயா மந்திரம்' எனவே, 'மற்றொன்று நகை செயும் மந்திரம்' என்பது தானே விளங்கிற்று. ''இரண்டு'' என வந்தவை மூன்றில் முதலது பயனிலையாயும், ஏனையவை ஏழன் உருபேற்ற பெயராயும் நின்றன. உருபேற்றுத் தொடர்ந்த பெயர்களை நான்காம் அடியிலும் கூட்டிப் பொருள் கொள்க. 'செம்பு, பொன்' என்னும் உவமைகள் முறையே உயிர்க்கும், சிவத்திற்கும் ஆயின. <u>**ஊன நடனம் வினைத்துய்ப்பிற்கும், ஞானநடனம் வீடுபேற்றிற்கும் வாயில்களாகும்.**</u>*

**887.** திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமா இருபத்தஞ் சாக்கித்
திருவம் பலமாச் செபிக்கின்ற வாறே. **21**

**888.** வாறே சிவாய நமச்சிவா யந்நம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே அருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே. **22**

---

*இதனால், "வாறே சதாசிவம்" என்ற மந்திரத்துள் குறிக்கப்பட்ட இருவகை நடனத்தின் இயல்புகளும் தெரித்துக் கூறப்பட்டன.*

*886. **தெளிவுரை :-** மேற்கூறிய, செம்பு பொன்னாவது போன்ற அதிசயப்பயன் மேற்கூறிய ஞானநடனத்தின் வடிவாய் அமைந்த 'சிவாயநம' என்பதை ஓதினால் கிடைக்கும். அப்பயன் உயிர்கட்குக் கிடைத்தற்பொருட்டே சிவன் அம்மந்திர வடிவைக் கொண்டான். இனி, 'ஸ்ரீம், ஹ்ரீம்' என்பன அவ்வடிவம் நிற்கும் செம்பொன் மயமான திருவம்பலமாகிய சத்தியின் எழுத்துக்களாதலின், அவற்றை ஓதினாலும் மேலை மந்திரத்திற் சொல்லிய பயன் விளைவதாம்.*

*குறிப்புரை :- இறுதியில் உள்ள "செம்பு" 'செம்மை' என்றவாறு. 'ஸ்ரீயும், கிரீயும்' எனச் செம்பு பொன்னாகும். அது திருவம்பலம் ஆதலால்' என்க. 'எனவும்' என்னும் எச்சவும்மை தொகுத்தல். 'ஆதலால்' என்பது சொல்லெச்சம். ஆணவ மலம் நீங்கிச் சிவஞானம் பெற்று, அதிலே திளைத்து முற்றிய நிலையே சிற்பரம். சத்தி பேதங்களைச் செபித்தாலும் அதே பலன் கிடைக்கும்.*

***ஆறு, ஆறு கோடுகள் குறுக்கும் நெடுக்குமாக வரைந்து பெறும் 25 பதங்கள் / கட்டடங்கள் / அறைகள் கொண்ட சக்கரம் (யந்திரம்)***

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 |

**முதல் வகைத் திருவம்பலச் சக்கரம் (எளியது)**

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |
| சி | வ | ய | ந | ம |
| சி | வ | ய | ந | ம |
| சி | வ | ய | ந | ம |

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| வ | சி | ய | ந | ம |
| ய | வ | சி | ந | ம |
| ந | ய | வ | சி | ம |
| ம | ந | ய | வ | சி |

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |

*இச்சக்கரத்தில் திருவைந்தெழுத்து இடமிருந்து வலமாக எழுதப்பட்டுள்ளது. மேலிருந்து கீழாக, கீழிருந்து மேலாக, வலமிருந்து இடமாக மூலைக்கு மூலையாகவும் எழுதிச் செபிக்கலாம்.*

*இதனால், மேற்கூறிய ஞானநடனத்தின் பயனை எய்துமாறு கூறப்பட்டது.*

***887. தெளிவுரை :-*** *சக்கர வழிபாட்டில் திருவம்பலம் அமைதற்கு அச்சிறப்பினதாகிய சக்கரத்தைத் திருவும், அழகும், வன்மையும் மேன்மேலும் பெருக நெடுக்கில் ஆறு கீற்றும், குறுக்கில் ஆறு கீற்றும் கீறி இருபத்தைந்து அறைகளாகத் தோற்றுவித்து மந்திர எழுத்துக்களை உரிய முறையால் அவ்வறைகளில் பொறித்து வழிபட்டுச் செபிக்க.*

*திருவம்பலச் சக்கரமாம் (யந்திரம்) அமைக்கும் முறை கூறினார். திருவம்பல யந்திரம் எழுதுவதற்கு, சத்தியின் அழகிய பலமாக குறுக்கும், நெடுக்குமாகச் சம அளவு இடைவெளி விட்டுச் சதுரசதுரமாக அறைகள் / கட்டங்கள் அமையுமாறு ஆறு ஆறு கோடுகள் வரைந்து அவற்றில் அமையும் 25 அறைகள் ஆக்கி அவ்வறைகளில் திருவைந்தெழுத்தை எழுதி மாறுபட்ட புதுமை ஒன்றும் இல்லாதவராக நின்று சிவ வடிவம் பெறும் பொருட்டு அதனை அந்த முறையில் செபிக்க வேண்டும்.*

***குறிப்புரை :-*** *'மந்திரமாவது இது' என்பது வருகின்ற பாட்டிற் கூறப்படும். "திருவம்பலமாக" என்பன சொற் பொருட் பின்வருநிலை. 'பொறித்து வழிபடுக' என்பது சொல்லெச்சம் 'பொறிக்க' என்றே ஒழிதலும் ஆம்.*

*இதனால், நடனம் நிகழும் அகண்டமான திருவம்பலத்தைக் கண்டமாகக் கண்டு வழிபடும் முறை கூறப்பட்டது.*

***888. தெளிவுரை :-*** *மேற்கூறிய முறையால் ஞான நடனத்தின் வடிவமாகிய, 'சிவாயநம' என்னும் மந்திரத்தைப் பலகாலும், தொடர ஓதிப் பயின்றால் இறப்பும், பிறப்பும் இல்லையாகும். அதற்குமுன்னே அவ்வோதுதலானே ஞானநடனத்தை நேரே காணுதல் கூடும்.*

**889.** பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது
பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும்
பொன்னான மந்திரம் புகைஉண்டு பூரிக்கில்
பொன்னான வல்லோர்க் குடம்புபொற் பாதமே. **23**

**890.** பொற்பாதம் காணலால் புத்திரர் உண்டாகும்
பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்
பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்
பொற்பாதம் நன்னடஞ் சிந்தனை சொல்லுமே. **24**

---

*முன்னே சொன்ன செம்பு பொன்னானது போன்ற பயனாகிய சிவமாந்தன்மைப் பெருவாழ்வும் கிடைக்கும். மந்திரம் செபிக்கின்ற முறையை உணர்த்துகின்றார்.*

*குறிப்புரை :-* அடுக்கு, பன்முறை கூறுதலை உணர்த்திற்று. பேர், முதனிலைத் தொழிற்பெயர், பேர்தல், உயிர் ஒருடலை விட்டுப் பிறிதோர் உடலைத் தேடிச் செல்லுதல், அஃது இல்லை என்றது, 'வீடடையும்' என்னும் பொருட்டாய் நின்றது. 'பிறப்பில்லை' என்று மேற்கூறியதனை எதிர்மறை முகத்தான் வலியுறுத்தவாறு.

இதனால், மேற்கூறிய சக்கரத்தில் பொறித்தற்கு உரிய மந்திரமும், அதன் சிறப்பும் பயனும் கூறப்பட்டன. இவ்விரு மந்திரங்களால் சக்கர வழிபாடு பொதுவாக விதிக்கப்பட்டது; விளக்கம் வருகின்ற அதிகாரத்துட் கூறப்படும்.

*889. தெளிவுரை :-* பொன்போலப் பொதிந்து வைத்துக் கொள்ளக்கூடிய மேற்சொன்ன மந்திரம் வாயாற் சொல்லப்படாது. அதனால், அது மேற்கூறிய சக்கரத்துள் குங்குமத்தால் பொறிக்கப்படும். அங்ஙனம் பொறிக்கப்பட்ட அது தூப தீபங்களை ஏற்று மகிழுமாயின், அவ்வாறு மகிழ்விப்போரது உடம்பு பொன்போல ஒளிவிட்டு விளங்கும். அம்மந்திரத்தைப் பிராணனோடு பூரகம் செய்தால் உடம்பு பொன்னாகும். அதன்மேலும் கும்பிக்க வல்லார்க்குத் திருவடிப்பேறு சித்திக்கும். மேலும், அதனை நன்கு வழிபட வல்லவர்க்கு அதனால் விளையும் பெரும் பயன், சிவபெருமானது பொன்போலும் திருவடியை அடைதலாகும்; அஃதாவது 'சிவனது அருள் கைவரப்பெறுதல் கூடும்' என்பதாம்.

*குறிப்புரை :-* பொறி, முதனிலைத் தொழிற்பெயர், கிஞ்சுகம் - முள்முருக்க மலர். அஃது அதனோடு நிறத்தால் ஒத்த குங்குமத்திற்கு உவம ஆகுபெயராயிற்று. குங்குமத்தால் எழுதுதல்

வெட்டுவாயின்மேல் என்க. "உடம்பு" என்பதை, "பொன்னாகும்" என்பதன்பின்னர்க் கூட்டி வேறு தொடராக முடிக்க. 'பயன்' என்பது சொல்லெச்சமாக எஞ்சி நின்றது.

இதனால், மேலதன் வழிபாட்டுமுறை சிலவும், அதன் பயன்களுள் முதலதும் கூறப்பட்டன. புகை - வாயு. ஈண்டு பிராண வாயு. திருவைந்தெழுத்தையே பிராண வாயுவாகக் கொண்டு பூரித்தல்.

***890. தெளிவுரை :-*** *திருவருள் கைவரப் பெறுதலால் சிவனுக்கு மைந்தராம் தன்மை, உளதாகும்; 'செம்பு பொன்னாதல் போல்வது' என மேலெல்லாம் சொல்லிவந்த சிவமாம் தன்மையும் கிடைக்கும். அதனால், மாயாகாரிய உடம்பும் சிவனது அருள்மயமான உடம்பாய் விடும். ஞான நடனத்தின் உண்மை தெளிவாகும்.*

***குறிப்புரை :-*** *இதனுள்ளும் பொருட் பின்வருநிலையணி வந்தமையின், முதலடியில் 'காணலாம்' என ஓதுதல் பாடம் அன்று. "புத்திரர்" என்பது பொருளாகுபெயராய் அவரது பண்பின்மேல் நின்றது. அங்ஙனமன்றாயின், 'உண்டாகும்' என்பதனோடு இயையாமை அறிக. 'ஆணையாலே' என உருபு விரிக்க. ஈண்டும் "செம்பு பொன்னாயிடும்" என ஒட்டணியாக ஓதியது. 'இவ்வுலகில் உண்மை யாகவே செம்பைப் பொன்னாக்குதல் முதலிய சித்திகளாகிய இடைநிலை பயனும் கூடும்' என்பதும் தோன்றுதற்பொருட்டு. புத்திரராந் தன்மை பெறுதற்கு முத்தினாலான சிவிகை, சின்னம் முதலிய சிறப்புக்களைப் பெற்று ஞானாசிரியத் தன்மைபெற்று விளங்கிய ஆளுடைய பிள்ளையாரிடத்தும், செம்பு பொன்னாவதற்குச் செங்கல் பொன்னாகவும், ஆற்றிலிட்ட பொன் குளத்திற் கிடைக்கவும், தம்மை வழிபட்ட பெருமிழலைக் குறும்பர்க்குச் சிவயோகம் எளிதில் கூடவும் பெற்று விளங்கிய ஆளுடைய நம்பிகளிடத்தும் எடுத்துக் காட்டுக் கண்டுகொள்க. அவ்விருவரையும் திருவருள் கைவரப் பெற்றமை மாத்திரத்திற்கு ஒப்புமைகொள்க. நான்காம் அடியில், 'பொற்பாதம் சொல்லும்' என இயையும். "நடஞ் சிந்தனை" என்பது தொழிற் பெயரொடு தொக்க இரண்டாவதன் தொகை. "சிந்தனை" என்பது அதன் முடிவின்மேல் நின்றது.*

*திருவைந்தெழுத்தின் இருமைப் பயன்களையும் உணர்த்துதல் நுதலிற்று. திருவடி தரிசனம் செய்யலாம்; புத்திரப்பேறு உண்டாம். திருவடிமேல் ஆணை; ஆணவமலமும் நீங்கப்பெற்று, ஆன்மா அறிவொளியைப் பெறும். திருவடியையே என்றும் தெரிசித்திருக்கச் சிவசாரூபம் எய்தலாம். ஆதலால், பஞ்சாக்கர நடனத்தின் தியானத்தைச் சொல்லுங்கள் என்றவாறு.*

*அசபையாக, திருவைந்தெழுத்தைத் தியானிப்பார்க்குத் திருவருட்பேறும், ஞானசந்ததியும், ஆணவ மலநீக்கமும்,*

891. சொல்லும் ஒருகூட்டில் புக்குச் சுகிக்கலாம்
நல்ல மடவாள் நயந்துட னேவரும்
சொல்லினும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடும்
சொல்லும் திருக்கூத்தின் சூக்குமந் தானே. 25

---

*சிவசாரூபமும் முறையே விளையுமாதலின் சீபஞ்சாக்கரநடனத்தை உபதேசிக்க என்று ஆணையருளியவாறு. சொல்லும் - உபதேசியுங்கள். ஞானிகளுக்கு ஔரசபத்திரர்கள் இல்லையாதலின், புத்திரர் என்றது ஞானபுத்திரர்களாகிய பரிபாகமுற்ற சீடர்களை என அறிக.*

*இதனால், திருவருளால் மக்கள் எய்தும் பயன்கள் வகுத்தோதப்பட்டன.*

***891. தெளிவுரை :-*** *(இம்மந்திரம் இருபொருள் கொள்ள அசபையின் பயன் அறிவித்து நிற்பது) ஓர் உரை :- தான் நிற்கும் உடல் துன்பம் உடையதாயும், மற்றோர் உடம்பு இன்பம் உடையதாயும் எவ்வகையாலேனும் தோன்றினால் நிற்கும் உடம்பை விட்டுத் தான்விரும்பிய வேறோர் உடம்பில் புகுந்து இன்புறலாம்; இல்லறத்தில் நிற்க விரும்பினால் நல்ல மனையாள்; தன்னை விரும்பி விரைந்து வந்து அடைவாள்; மாணிக்கத்தைக் கொண்டு விளங்கும் கொடிய நாகமும் தான் சொல்லிய அளவில் கட்டுண்டு அகலும், மேற்சொல்லிய திரு வம்பலச் சக்கரத்து வழிபாட்டின் மறைபொருள் (இரகசியம்) இது.*

***குறிப்புரை :-*** *"ஒரு கூடு" என்பதை எடுத்தல் ஓசையாற் கூறி இப்பொருள் காண்க. இப்பயனுக்கு எடுத்துக்காட்டாக இந்நாயனாரையே கொள்ளலாம். 'மனம் சொல்லும் ஒரு கூடு' என்க. "பாசம்" என்பது 'கட்டு' என்னும் பொருளதாய் 'கட்டுப்பட்டு' எனப் பொருள் தந்து நின்றது. சுடர், ஆகுபெயர், "திருக்கூத்து" என்றது தானியாகு பெயராய் அது நிகழும் இடத்தின்மேல் நின்று, இடஇயை பால் மேற்குறித்த சக்கரத்தைக் குறித்தது. சூக்குமம் - மறைபொருள், இரகசியம்.*

*மற்றோர் உரை:- சிறப்பித்துச் சொல்லப்படும் திருவருளாகிய அவ்வுறைக்குள்ளே தனது சீவபோதமாகிய வாள் புகுந்து அடங்கி நிற்றலால், சிவானந்தத்தைத் துய்க்கலாம். அப்பயன் உண்டாகும்படி திரோதான சத்தி நீங்க அருட்சத்தி தன்னை விரும்பி வந்து விரைவில் தன்னிடத்தில் பதியும். திருவைந்தெழுத்தை ஓதுதலானே கொடிய நாகம் போல்வதாகிய ஆணவம் வாதனையும் கெட்டுப் பற்றறக்*

**892.** சூக்குமம் எண்ணா யிரஞ்செபித் தால்உம் மேல்
சூக்கும மான வழிஇடைக் காணலாம்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாம்
சூக்கும மான சிவனதா னந்தமே. **26**

---

*கழியும். (நான்காம் அடிக்கு மேற்கூறியவாறே உரைக்க). ஒரு கூடு என்றது உயிர்க்குரிய ஐவகைக் கோசங்களுள், ஒரு கோசத்திலிருந்தே எல்லா இன்பங்களையும் நுகரலாம் என்றும் கொள்வர்.*

*இங்கு, "கூடு" என்றதை, "கூட்டில் வாள் சார்த்தி நின்றுந் தீபற" என்னும் திருவுந்தியார் (பா.30) பகுதியொடு வைத்து உணர்க. தனது போதம் புகுதலை ஒற்றுமை பற்றித் தானே புகுதலாகக் கூறினார். அருட்சத்தி என்பது விளக்குதற்கே "நல்ல மடவாள்" என்றார். பாசப் பாம்பு, உருவகம் இவ்விருவகைப் பயனையும் அவரவர் தகுதிக்கு ஏற்பக் கொள்க.*

*இதனால், மேற்கூறிய வழிபாடு, புத்தி, முத்தி இரண்டையும் தருவதாதல் கூறப்பட்டது.*

***892. தெளிவுரை :-** மறைவாகச் சொல்லப்படும் மொழியாகிய மேற்சொன்ன மந்திரத்தை இடைவிடாது செபித்தால் உங்கள் தலைமேல் உள்ள நுண்ணிய வழியை அச்செபத்திற்கு இடையே காணுதல் கூடும். அதனால், முன்னேமுகந்து கொண்டதனால் நுண்ணியதாய்ப் பொருந்தி நிற்கின்ற பிராரத்த வினையையும் அழிக்க இயலும். அதனை அழிக்கவே, உயிரிடத்து விளைவதாகிய சிவானந்தம் வெளிப்படும்.*

***குறிப்புரை :-** சூக்குமம் - மனத்தாலேயே மந்திரங்களை எண்ணுகின்ற நுண்ணிய நிலை. சூக்குமமான வழி - சகத்தாரத்தில் ஒளிப்பிழம்பு வெளிப்படும் துளை. சூக்குமமான வினை - மூலகன்மம். நுகர்ச்சிக்கு வந்த பருவினையைக் கெடுக்க முடியாமையின், செபத்தாற் கெடுவன ஆகாமிய சஞ்சிதங்கள் ஆகிற சூக்கும கன்மமே. பிரமரந்திரம், இது அகார யோகத்தினின்றும் நிராகாரத்திற்குச் செல்லும் வழியாதல் பற்றி "வழி" எனப்பட்டது. சஞ்சிதம் ஞானிகட்கு முன்பே கெடுக்கப்பட்டமையானும், யோகியர்க்கு இனி வேறோராற்றால் கெடுக்கப்படுமாகலானும், இங்கு "வினை" என்றது பிராரத்தத்தையே. அது முகந்துகொள்ளப்பட்ட நிலையில் சூக்குமமாய் நின்று, பயன் தருங்கால் தூலமாய் வந்து பொருந்தும். ஆதலின், "சூக்குமமான வினை" என்றார். இம் மந்திரம் ஞானியர்க்கும், யோகியர்க்கும் பொதுப்பட*

**893.** ஆனந்தம் ஆனந்தம் ஒன்றென் றறிந்திட
ஆனந்தம் ஆஈஊஏஓம்என் றைந்திட
ஆனந்தம் ஆனந்தம் அஞ்சும்அ தாயிடும்
ஆனந்தம் ஆம்ஹ்ரீம் ஹம்க்ஷம்ஹாம் ஆகுமே. 27

---

*ஓதப்பட்டமையின், 'வழி காணுதல், வினையைக் கெடுத்தல்' என்பவற்றை உடனே வீடுபெற விரும்புவார்க்கு, தலையைப் பிளந்துகொண்டு உடலை விட்டு நீங்கும் வழியாகவும், பிராரத்தத்தை நசிக்கச் செய்தலாகவும், சீவன் முத்தர்க்கும், யோகியர்க்கும் முறையே ஆதார யோகத்திலிருந்து நிராதார யோகத்திற் செல்லும் வழியாகவும், பிராரத்தத்தை மெலிவித்து உடல்ஊழாய் ஒழியவும், யோகத்தைத் தடுக்காது நீங்கவும் செய்தலாகவும் விளக்க. சிவானந்த வெளிப்பாடும் முறையே பரமுத்தியிலும் சீவன் முத்தியிலும், யோக சமாதியிலும் நிகழ்வனவாகவும் கொள்க.*

*இதனால், மேற்கூறிய வழிபாடு வீட்டு நெறி நிற்பார்க்கும் உதவுவதாதல் சிறந்தெடுத்துக் கூறப்பட்டது.*

***893. தெளிவுரை :-** 'சிவானந்தம் ஒன்றே ஆனந்தம்' என்று உணர, அவ்வானந்தம் விளைவதாம். 'ஆ, ஈ, ஊ, ஏ, ஓம்' என்னும் ஐந்தெழுத்துக்களை அச்சக்கரத்தில் இட்டுச் செபிக்க அவ்வானந்தம் மிக விளையும். அந்த ஐந்தெழுத்துத் தொடரே' திருவைந்தெழுத்துத் தொடருமாம். இனி, அம், ஹ்ரீம், ஹம், க்ஷம், ஹாம் என்னும் ஐந்தைத் தாமும் மேற்கூறிய 'ஆ' முதலிய ஐந்திற்கு ஈடாகவும், திருவைந்தெழுத்திற்கு ஈடாகவும் கொள்ளலாம். ஆனந்தம் பிறக்கும் இடங்களை அறிவிக்கிறார்.*

*விதையெழுத்துக்கள் : ஆனந்தம் என அருளாளர் பலரும் கூறிய வீடுபேறு ஆனந்தமே. அதைப்பெறுவதற்குச் சாதனமான இடங்கள் நம் உடம்பில் உள்ள ஐந்து பூதங்கள். நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. அவற்றைக் குறிக்கும் குறியீடுகள் முறையே அ, இ, உ, எ, ஒ (குறில்கள்) என்பவை. அவற்றில் இயங்கும் சக்திகளைக் குறிக்க முறையே ஆ, ஈ, ஊ, ஏ, ஓ (நெடில்கள்) என்ற குறியீடுகள் வழங்கும். இந்தச் சத்திகளை ஒருங்கே இணைத்தல் ஆனந்தம். இந்தச் சத்திக்குரிய விந்து எழுத்துக்கள் (பீஜ மந்திரங்கள்) முறையே அம்-ஹ்ரீம்-ஹம்-க்ஷம்-ஹாம் என்பவை. இவற்றோடு திருவைந்தெழுத்தைத் தனித்தனியே செபிப்பது ஆனந்தம். விகிதாச்சாரமாக ஐம்பூதங்களைக் கூட்டும் வித்தையை அறிந்தால் இறந்தவரை எழுப்பலாம்.*

**894.** **மேனி யிரண்டும் விலங்காமல் மேற்கொள்ள**
**மேனி யிரண்டும்மிக் கார்அவி காரியாம்**
**மேனி யிரண்டும்ஊ ஆஈஏஓ என்னும்**
**மேனி யிரண்டும்ஈ ஓஊஆ ஏகூத்தே.** **28**

---

*மேற்கண்ட பீஜ மந்திரங்கள் விதையெழுத்துக்களின் விளக்கப்படம்*

| ஐம்பூதம் | ஐந்தெழுத்து | குறியீடு | சக்திகளின் | உடம்பில் உள்ள இடம் | பீஜமந்திரம் | |
|---|---|---|---|---|---|---|
| ஆகாயம் | ய | ஒ | ஒ | புருவமத்தி | ஹாம் | ஆம் |
| காற்று | வா | எ | ஏ | கழுத்து | க்ஷம் | சம் |
| தீ | சி | உ | ஊ | இருதயம் | ஹம் | அம் |
| நீர் | ம | இ | ஈ | தொப்பூள் | ஹ்ரீம் | கரீம் |
| நிலம் | ந | அ | ஆ | மூலாதாரம் | அம் | அம் |

*குறிப்புரை :-* முதலடியில் இரண்டாவதாக நின்ற 'ஆனந்தம்' சிவானந்தத்தைச் சிறப்பு வகையாற் குறித்தது. 'ஒன்றே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தல் பெற்றது. மூன்றாம் அடியில் பெயர்ப் பயனிலையாய் நின்ற அடுக்கு, மிகுதி குறித்து நின்றது. 'ஆ' முதலிய ஐந்தும் மகாரத்தைக் கூட்டியும், கூட்டாதும் ஓதப்படும் என்பது உணர்த்துதற்கு முதல் நான்கனை மகாரம் இன்றியும், இறுதியதை மகாரம் கூட்டியும் ஓதினார் 'அது அஞ்சும் ஆயிடும்' என மாற்றிக் கொள்க. ஈற்றடியில் நின்ற "ஆனந்தம்" அதனைத் தருவதாய மந்திரத்திற்கு ஆகி, எழுவாயாய் நின்றது. இவ்வடியில் மூன்றாவதாக நிற்கும் எழுத்தையும் 'அம்' என ஓதுதலும், இரண்டாம் நான்காம் அடிகளிலும் அடுக்கிவர ஓதுதலும் பாடமாகா.

இதனால், மேற்கூறிய வழிபாட்டில் செபித்தற்கு உரிய மந்திரங்கள் இவை என்பது கூறப்பட்டது.

894. **தெளிவுரை :-** மேலை மந்திரத்தில் உயிரெழுத்துக்களாகவும், திருவைந்தெழுத்தாகவும் சொல்லப்பட்ட இருவகை மந்திரங்களும் சிவனது திருமேனிகளாய் நிற்றற்கு உரியனவாம். அவற்றைப் பிழை யின்றி ஓதுதலைச் செய்தால், சிவனது திருமேனி திரிபின்றி அமையும். இனி அவ்விருவகை மந்திரங்களையும் இருவேறு வகையாக மாற்றி உச்சரிக்க, இறைவனது இருவகை நடனங்களும் அமைவனவாம்.

*குறிப்புரை :-* "அவிகாரி" என்றது பன்மை ஒருமை மயக்கம். மேலை மந்திரத்தில் தமிழ் உயிர் நெட்டெழுத்து ஏழில், 'ஐ, ஔ' என்னும் இரண்டை ஒழித்து ஏனைய ஐந்தும் முறைப்படியே

கூறப்பட்டன. அதனால், அவை மேல், “வாறே சிவாய நம” (பா.888) எனக் குறித்த முறையில் அமைந்த மந்திரத்தில் முறையே சிகாரம் முதலிய ஐந்திற்கும் ஈடாக அமைதல் அறியப்படும். அதனானே, மேலை மந்திரத்து இறுதி அடியிற் சொல்லிய ‘அம்’ முதலிய ஐந்தும் அம் முறையில் அமைதலும் பெறப்படும். படவே, இம்மந்திரத்து மூன்றாம் அடியில் ஓதியவாறு உச்சரிக்க ஞான நடனமும், நான்காம் அடியில் ஓதியவாறு உச்சரிக்க ஊன நடனமும் நிகழ்வனவாம் என்க.

மேலை மந்திரத்துள் இரண்டாம் அடியிற் கூறியன தமிழ் கூறுவார்க்காகவும், நான்காம் அடியில் கூறியன ஆரியங் கூறுவார்க் காகவும் என்க. பரதகண்டத்தில் இவ்விரண்டல்லாத பிறமொழிகள் சிறப்பிலவாதல் அறிக. இவை இருதிற எழுத்துக்களும் சங்கேத மாத்திரமாய் நிற்பனவன்றிச் சொற்கு உறுப்பாய் எழுத்தாந் தன்மை யிலவாகலின், இருதிறத்தாரும் ‘சிவாய நம’ என்பதை ஓதுதலே சிறப்பு என்பது கருத்து.

இதனுள், ஞானநடன மந்திரத்தில் ஆன்மஎழுத்தை முன்னர் எடுத்து அது இறையெழுத்தோடு புணரவும் இறை அருளோடு புணரவும், அருள் திரோதானத்தோடு புணரவும், திரோதானம் மலத்தோடு புணரவும் வைத்தல் அறிக. இறுதியில் நின்ற மல எழுத்து, பின் ஆன்மாவோடு புணரும்நிலை உள்ளதாயினும், அது வேறு உருவாகலானும், ஆன்மா இறையை நோக்கிச் செல்லுதலானும் அவ்விடத்து மலம் ஆன்மாவைப் பற்ற மாட்டாமை அறிக.

இனி ஊன நடன மந்திரத்தில் அருளை முன்னர் எடுத்து அது மலத்தோடு புணர்ந்து தோன்றாது நிற்கவும், அந்த மலம் ஆன்மா வோடு புணரவும், ஆன்மா சிவத்தோடு புணரினும் அந்தச் சிவம் அருளோடு புணராத திரோதானத்தோடு புணர்ந்து பந்தத்தை நிகழ்த்துவதாகவும் வைத்தல் அறிக. இவ்இருமுறையும் மேலை மந்திரத்துட் கூறிய மூவகை எழுத்திற்கும் கொள்க. ‘‘என்னும்’’ என்பதும், ‘‘கூத்தாம்’’ என்பதும் ஏனை இடங்களிலும் சென்று இறையும்.

இதனால், மேற்சொல்லிய மந்திரங்கள் இருவகை நடனத்திலும் நிற்குமாறு கூறப்பட்டது. ‘சுத்த மானதம்’ என்னும் அறிவாற் கணித்தலாகிய ஞானநிலைக்குத் திருவைந்தெழுத்து ஒன்றே மந்திர மாகவும் அஃது ஒன்றே அந்த ஞானத்தின் படிநிலைக்கு ஏற்ப வேறு வேறு நிலையில் நிற்பதாகவும் சொல்லப்படுமாகலின், இங்குக் கூறிய இம்முறைகள் வழிபாட்டு நிலையில் சென்று பயன்பெறுதற்கு உரியன என உணர்க.

***895. தெளிவுரை :-*** **மேற்கூறிய இருவகை நடனங்களுள் ஞான நடனம், ‘சிவாயநம’ என்பதனாலேயும் அமையும். அம்மந்திரம்**

895. கூத்தே சிவாய நமமசி யாயிடும்
கூத்தே ஈஊஆஏஓசி வாயநம ஆயிடும்
கூத்தேஇ உஅஎஒசி வயநம வாயிடும்
கூத்தோஈஊஆஏஓநமசி வாயகோள் ஒன்றுமே. 29

---

*இவ்வாறு தனியாக உச்சரிக்கப்படுதலேயன்றி ஈம், ஊம், ஆம், ஏம், ஓம் என்னும் வித்தெழுத்துக்களுள் ஒன்றேனும் பலவேனும் கூட்டியும் உச்சரிக்கப்படலாம். இனி, மேற்கூறிய அவ்வெழுத்துக்கள் நெடிலாய் இல்லாமல் குறிலாய் நிற்கவும் கொண்டு உச்சரித்தற்கு உரியன. 'சிவாய நம' என்னும் சூக்கும பஞ்சாக்கரமே நகாரம் முதலாய தூல பஞ்சாக்கரமாய் நிற்குமாதலின் அது ஊன நடனத்திற்கு உரியதாய் மேற்கூறியவாறே வித்துக்களைக் கூட்டாதும், கூட்டியும் உச்சரிக்கப்படும்.*

***குறிப்புரை :-*** *தேற்றேகாரங்களைப் பிரித்துத் திருவைந்தெழுத்து மந்திரத்தின் பின்னர்க் கூட்டிப் பொருள் கொள்க. ஏற்புழிக் கோடலால் ஈற்றில் உள்ள கூத்து ஊன நடனமாகவும் ஏனைய மூன்றும் ஞான நடனமாகவும் கொள்ள நிற்றல் அறிக. கூறியது கூறலாகவும், பின்னர்த் திருவைந்தெழுத்துக் குறிலாக வருவதனோடு இயையாதனவாகவும் மூன்றாம் அடியிலும் உயிரெழுத்துக்களை நெட்டெழுத்தாக ஓதுதலும், நான்காம் அடியில் முதல் உயிரைக் குற்றெழுத்தாக ஓதுதலும் பாடம் ஆகாமை அறிந்து கொள்க. 'சிவாயநம' என்பதைத் திரும்பத் திரும்ப ஓதினால் மகாரம் சிகாரத்தோடு புணரும் நிலை உண்டாகும், உண்டாயினும் அதனால் தீங்கில்லை என்றற்கு 'மசி' என்பதையும் முதலடிக்கண் கூறினார். 'வாயிடும்' என்பது பாடம் அன்று.*

*திருவைந்தெழுத்தைப் பீசங்களோடு கூட்டாதது 'நிர்ப்பீசம்' என்றும், கூட்டுவது 'சபீசம்' என்றும் சொல்லப்படும். சபீசம் உயர்ந்தோர்க்கே உரியன. நிர்ப்பீசம் பிறர்க்கும் உரியன. இப்பீசங்களை மேலை மந்திரத்திற் கூறிய முறையாற் கூறாது வேறுபட ஓதினார். அவை திருவைந்தெழுத்தோடு கூட்டப்படுங்கால் முன்னவை இரண்டினும் பார்க்கப் பின்னவை மூன்றும் திருவைந்தெழுத்தோடு இயையக் கூட்டுதல் பெரும்பான்மை என்பது உணர்த்துதற்கு. உகார ஊகாரங்கள் 'ஔ' என்னும் நெட்டெழுத்தாய்ப் பரிணமிக்கின், அதுவும் பெரும்பான்மையதாம் என்க. கோள் ஒன்றும் - பீசங்களைத் திருவைந்தெழுத்துக் கொள்ளுதலைப் பொருந்தும். முதலடி ஒழிந்த அடிகளில் "கூத்தே" என்பன கூனாகி நின்றன.*

*இதனால், திருவைந்தெழுத்தைச் சபீசமாகக் கூறும் முறை கூறப்பட்டது.*

**896.** **ஒன்றிரண் டாடஓர் ஒன்றும் உடனாட**
**ஒன்றினில் மூன்றாட ஓரேழும் ஒத்தாட**
**ஒன்றினா லாடஓர் ஒன்ப துடனாட**
**மன்றினில் ஆடினான் மாணிக்கக் கூத்தே.** **30**

---

*896.* **தெளிவுரை :-** *ஒன்று முதலாவது; சிவதத்துவம், இரண்டு இரண்டாவது; சத்திதத்துவம், ஓர் ஒன்று, சத்தி தத்துவத்தின்பின் அடுத்தடுத்து நிற்கின்ற ஒன்றும், ஒன்றும்; சாதாக்கிய தத்துவமும், ஈசுர தத்துவமும், ஒன்றினில் மூன்று. ஈசுர தத்துவத்தை அடுத்துள்ள சுத்த வித்தியா தத்துவத்தில் 'அரன், அரி, அயன்' என்பவரது அதிட்டானங்களாகிய மூன்று. ஓர் ஏழு, இந்த ஏழும், ஒன்பது, இவற்றுடன் இவற்றிற்கெல்லாம் மேலே உள்ள நாத விந்துக்கள் கூடிய அனைத்துத் தத்துவங்களும் ஒன்றினால்ஆட - அவை அனைத்தும் அங்ஙனம் ஆடல் மூர்த்தமாகிய ஒன்றினாலே ஆடும்படி இறைவன் மன்றினில் மாணிக்கக்கூத்து ஆடினான்.*

**குறிப்புரை :-** *"ஒன்பது உடனாட" என்பதை, "ஒன்றினால் ஆட" என்றதற்கு முன்னே கூட்டுக. 'இறைவன்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. மாணிக்கக் கூத்து - மாணிக்கம் போல வரம்பறியலாகாத தாண்டவம். ஒன்பது தத்துவங்களும் ஆடுதல், (செயற்படுதல்) சம்புபட்சமாயாதல், அணுபட்சமாயாதல் அவ்வப்பெயர் பெற்று நிற்கும் முதல்வராகலாம் ஆதலின், "ஆட, ஆட" என வந்தன பலவும் அவர்கள் ஆடலின் வழியாடலேயாம் என்க. எனவே, அனைத்து முதல்வர்களது ஆடற்கும் இவ் ஒரு மூர்த்தத்தின் ஆடலே முதலாதல் அறியப்படும். 'மாகேசுர மூர்த்தங்களில் ஒன்றாக எண்ணப்பட்ட வடிவத்தையுடைய கூத்தப்பிரானின் வேறாய்ச் சிவதத்துவத்தில் இலய நிலையில் நிற்கும் கூத்தப்பிரான் ஒருவர் உளர்' என மகுடாகமம் கூறுகின்றது.*

*இவர் இருக்கும் இடமே இருக்கு வேதத்தில் சொல்லப்பட்ட பரம வியோமம் என்பதும், பிருகதாரணியத்தில் சொல்லப்பட்ட இருதய ஆகாசம் என்பதுமாம் எனவும், இதுவே தமிழில் திருச்சிற்றம்பலம் எனப்படுகின்றது எனவும், இதனால், மேற்கூறிய இடங்களில் முறையே 'பிரபஞ்ச அத்தியட்சகர்' என்றும் 'ஈசானர்' என்றும் சொல்லப்பட்டவர் சிவதத்துவத்தாண்டவேசுரரே எனவும் கொள்ளப்படுகின்றன. ஆதலால், இங்கு "மன்று" (திருச்சிற்றம்பலம்) எனப்பட்டது, பரமவியோமமும், அதன்கண் ஆடுவார், சிவதத்துவத் தாண்டவேசுரரும் என்று கொள்க. "அருமறைச் சிரத்தின் மேலாம் - சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலம்'' (தி.12 தில்லை வாழந்தணர் புராணம் - 2) என்ற சேக்கிழார் வாக்கும் இங்கு நினைவுகூரத்தக்கது.*

## 2. திருவம்பலச் சக்கரம் (மற்றொரு வகை)

(முதல்வகைத்திருவம்பலச் சக்கரம் பாடல் எண் 887–ஐப் பார்க்க)

**897.** இருந்த இவ்வட்டங்கள் ஈராறு இரேகை
இருந்த இரேகைமேல் ஈராறு இருத்தி,
இருந்த மனைகளும் ஈராறு பத்து ஒன்று
இருந்த மனை ஒன்றில் எய்துவன் தானே. 1

---

*897. தெளிவுரை :- சக்கரங்கள் பலவற்றில், நெடுக்கும், குறுக்குமாகப் பன்னிரு, பன்னிரு கீற்றுக்கள் கீற, நூற்றியிருபத்தொரு அறைகளாக அமைகின்ற சக்கரத்தில் கூத்தப்பெருமான் விளங்கித் தோன்றுவான்.*

*குறிப்புரை :- 'வட்டங்களுள்' என ஏழாவது விரித்து, அதனை, 'ஒன்றில் எய்துவன்' என்பதனோடு முடிக்க "தான்" என்றது மேலை மந்திரத்தில் "ஆடினான்" எனப்பட்டவனைக் குறித்தல் வெளிப்படை. ''இருத்தி'' என்பதை முதலடியின் இறுதியிலும் கூட்டிப்பின், 'அவ்வாறிருந்த' என உரைக்க. ஈராறு - பன்னிரண்டு, பன்னிருபது - நூற்றிருபது, அதனுடன் ஒன்று சேர்க்க நூற்றிருபத்தொன்றாகும்.*

*இதனால், திருவம்பலச்சக்கரத்துள் ஒன்றனை வரையுமாறு கூறப்பட்டது. பிறவற்றை வருகின்ற மந்திரங்களுள் கூறியருளுவார்.*

*குறுக்கும், நெடுக்குமாக பன்னிரு கோடுகள் வரைந்து 121 பதங்கள் பெறும் அமைப்பு கொண்ட சக்கரம் (யந்திரம்)*

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 | 32 | 33 |
| 34 | 35 | 36 | 37 | 38 | 39 | 40 | 41 | 42 | 43 | 44 |
| 45 | 46 | 47 | 48 | 49 | 50 | 51 | 52 | 53 | 54 | 55 |
| 56 | 57 | 58 | 59 | 60 | 61 | 62 | 63 | 64 | 65 | 66 |
| 67 | 68 | 69 | 70 | 71 | 72 | 73 | 74 | 75 | 76 | 77 |
| 78 | 79 | 80 | 81 | 82 | 83 | 84 | 85 | 86 | 87 | 88 |
| 89 | 90 | 91 | 92 | 93 | 94 | 95 | 96 | 97 | 98 | 99 |
| 100 | 101 | 102 | 103 | 104 | 105 | 106 | 107 | 108 | 109 | 110 |
| 111 | 112 | 113 | 114 | 115 | 116 | 117 | 118 | 119 | 120 | 121 |

**898.** தான் ஒன்றி வாழ்இடம் தன் எழுத்தே ஆகும்
தான் ஒன்றும் அந்நான்கும் தன் பேர் எழுத்து ஆகும்
தான் ஒன்றும் நாற்கோணம் தன் ஐந்தெழுத்து ஆகும்
தான் ஒன்றிலே ஒன்றும் அவ்வரன் தானே. **2**

---

*898. **தெளிவுரை :-** சிவபெருமான்தன் எழுத்து சிகாரம். அது உள்ளிட்ட ஐந்து எழுத்துக்களும் அவன் திருப்பெயராகும். பெருந்திசை நான்கிலும் நான்கு சிகாரங்களும், கோணத்திசை (மூலைகள்) நான்கில் நான்கு சிகாரங்களும் உள்ளன. இவ்வறைகளின் நடுநாயகமாகவும் சிகாரத்தில் வீற்றுள்ளான். இதனைக் கீழ்க்காண் சக்கரம் விளக்குகிறது.*

| சி | வ | ய | ந | ம | சி | வ | ய | ந | ம | சி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | வ |
| ந | ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ம | ய |
| ய | ம | ந | ய | ய | ய | ய | ய | ந | ம | ந |
| வ | ம | ந | ய | வ | வ | வ | ய | ந | ம | ம |
| சி | ம | ந | ய | வ | சி | வ | ய | ந | ம | சி |
| ம | ம | ந | ய | வ | வ | வ | ய | ந | ம | வ |
| ந | ம | ந | ய | ய | ய | ய | ய | ந | ம | ய |
| ய | ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ம | ந |
| வ | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம |
| சி | ம | ந | ய | வ | சி | ம | ந | ய | வ | சி |

சி–9 வ–16 ய–24 ந–32 ம–40

***குறிப்புரை :-** இடத்தில் நிற்பவற்றை "இடம்" என்றார். "அந்நான்கு" என்றதும், 'எஞ்சிய நான்கிடங்களில் நிற்கும் எழுத்துக்கள்' என்றதேயாம். "அவ்வரன்" என்பதில் அகரம் பண்டறிசுட்டு, "அரன்" என்னும் சொல் இங்குத்தன்னையே குறித்து நின்றது. ஈற்றில் நின்ற 'தான்' அசை, ஏகாரம், 'அரனாகிய' எனத் தோற்றமாயிற்று. பெருந்திசை நான்கில் நான்கு சிகாரங்களும், கோணத்திசை (மூலைகள்) நான்கில் நான்கு சிகாரங்களும் உள்ளன. அவற்றை முதலாகத் தொடங்கி, 'சிவாயநம' என ஓதுதல் வேண்டும்.*

**899.** அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே. **3**

## சிவசத்திச் சக்கரம்

**900.** எட்டு நிலை உள எங்கோன் இருப்பிடம்
எட்டினில் ஒன்றும் இருமூன்றும் ஈரேழும்
ஒட்டிய விந்துவும் நாதமும் ஓங்கிட
பட்டது மந்திரம் பால் மொழிபாலே. **4**

---

*899. **தெளிவுரை :-** இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *இதனால் மேற்குறித்த சக்கரத்தின் நடுவண் நிற்கும் 'ஹர' என்னும் மந்திரத்தின் சிறப்புக் கூறப்பட்டது. சிவனுக்கு இப்பெயர் பாசங்களைப்போக்குபவனாதல் பற்றி வந்தது. மெய்கண்டதேவரும் தமது நூலுள் (சிவஞான போதம், சூ. 8, 11) இப்பெயரையே சிறந்தெடுத்தோதினார். 'சிவன்' என்னும் பெயரது சிறப்பே இதுகாறும் கூறிவந்தமையின், இதனை இங்குக் கூறல் வேண்டினார்.*

*900. **தெளிவுரை :-** சிவசத்திச் சக்கரத்தைப் பற்றி அறிய வேண்டுமென்றால் "தான் ஒன்றி" என்னும் பாடலில் காட்டப்பட்ட திருவம்பலச் சக்கரத்தைப் போலவே அதற்கு மற்றுமோர் முறையிலும் சக்கரம் இருப்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். அந்தச் சக்கரம் **<u>சூக்குமத் திருவம்பலச் சக்கரம்</u>** என்றும் சொல்லப்படும். ஓம் என்ற பிரணவப் பொருளை மையமாக வைத்து அதைச் சுற்றிலும் எண் திக்குகளிலும் சிகாரத்தை வைத்து இச்சக்கரத்தை வரையவேண்டும்.*

### *சூக்குமத் திருவம்பலச் சக்கரம் வரையும் முறை*

*முன்னர்ச் சொன்னதுபோல குறுக்கும் நெடுக்குமாக பன்னிரு கோடுகள் சமசதுரக் கட்டங்கள் 121 வருமாறு வரைந்துகொள்ள வேண்டும். அதன் மையத்திலும் "ஓம்" என்ற பிரணவத்தைப் பதிவு*

| ஓம் |
|---|

*முதல்படி நிலை*

| சி | சி | சி |
|---|---|---|
| சி | ஓம் | சி |
| சி | சி | சி |

***இரண்டாம்படி நிலை***

| ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ந | ந | ம |
| ம | ந | ய | ய | ய | ய | ய | ய | ய | ந | ம |
| ம | ந | ய | வ | வ | வ | வ | வ | ய | ந | ம |
| ம | ந | ய | வ | சி | சி | சி | வ | ய | ந | ம |
| ம | ந | ய | வ | சி | ஓம் | சி | வ | ய | ந | ம |
| ம | ந | ய | வ | சி | சி | சி | வ | ய | ந | ம |
| ம | ந | ய | வ | வ | வ | வ | வ | ய | ந | ம |
| ம | ந | ய | ய | ய | ய | ய | ய | ய | ந | ம |
| ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ந | ந | ம |
| ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம |

(ஓம்–1 சி–8 வ–16 ய–24 ந–32 ம–40)

**மூன்றாம் படிநிலை**

*செய்யவேண்டும். அதனை அடுத்துள்ள எட்டு அறைகளிலும் (பெருந்திசைகள் 4 + கோணதிசைகள் 4 சிகாரத்தைப் பதிவு செய்ய வேண்டும். பிறகு திருவைந்தெழுத்தை அந்த எட்டையும் மையமாக வைத்து எல்லாத் திசைகளிலும் பரப்பவேண்டும். (எழுத்தையும் பரப்பவேண்டும். ஞாலம் நின்புகழே வேண்டும் என்ற ஆளுடையப் பிள்ளையாரின் அருள்வாக்கின்படி அவர்தம் புகழையும் பரப்பவேண்டும்).*

*இரண்டாம் படி நிலையில் பெருந்திசை நான்கில் நான்கு சிகாரங்களும் கோணத்திசை (மூலைகள்) நான்கில் நான்கு சிகாரங்களும் ஆக எட்டு சிகாரங்கள் உள்ளன. அவற்றை முதலாகத் தொடங்கி "சிவயநம" என ஓதுதல் வேண்டும். அங்ஙனம் ஓதுங்கால் பெருந்திசையில் உள்ள சிகாரம் ஒவ்வொன்றும் இருமுகமாகத் தொடர்தலும் கோணத்திசையில் உள்ள சிகாரம் ஒவ்வொன்றும் மூன்று முகமாகத் தொடர்தலும் காணலாம்.*

*ஆகவே, அவற்றைக் கிழக்கு முதலாகத் தொடங்கி வட கிழக்கில் மூன்று முகமும் ஓதி முடித்தால், இருபது (20) உருச் செபித்தலாகும். அவ்வாறு ஐந்து முறை திரும்பத் திரும்ப ஓதி, அதன்*

*பின்னர்ப் பெருந்திசை முதலாக மட்டும் தொடங்கி ஓதி முடித்தால், நூற்றெட்டு (108) உருச் செபிக்கப்பட்டு முடியும்.*

*ஐம்பது முறை முற்ற ஓதி, இறுதியில் மேற்சொன்னவாறு பெருந் திசையில் தொடங்கி மட்டும் ஓதி முடித்தால், ஆயிரத்தெட்டு (1008) உருச் செபிக்கப்பட்டு முடியும்.*

*சித்தி பெறும் வரையில் இவ்வாறே இச்சக்கரத்தை வழிபட்டுப் பலமுறை ஓதுதல் செய்யத்தக்கதாம்.*

***தெளிவுரை :-** இனி சிவசத்திச் சக்கரத்தைச் சிந்திப்போம். இரண்டாம் படிநிலைச் சக்கரத்தின் எட்டு சிகாரங்களும் "எட்டுநிலை உள எங்கோன் இருப்பிடம்" என்ற 900 ஆம் பாடலின் முதலடிக்குப் பொருளாக அமைந்துள்ளன. அவற்றைத் தியானிக்கும் போது அதன் முன்னால் ஹ, ஹூம், ஹௌம், ஹம் என்ற பீஜ அல்லது வித்து எழுத்துக்களையும் சேர்த்துச் செபித்தால் இந்த சக்கரம் சிவசத்திச் சக்கரமாகிவிடும். "ஹ" சேர்க்காமல், அ, ஊம், ஔம், அம் என்றும் சொல்லலாம்.*

***குறிப்புரை :-** ஒன்று பிரணவம், இரு மூன்று. ஆறாவது எழுத்தாகிய "ஊ" சேர்ந்த ஹூம் என்ற பீஜம், ஈரேழு - 14 ஆவது எழுத்தாகிய "ஔ" சேர்ந்த ஹௌம் என்ற பீஜம். விந்துவின் பீஜம் ஹம். நாதத்தின் பீஜம் ஹ என்பதாகும்.*



## சத்தி பீஜத்துடன் திருவைந்தெழுத்து

901. மட்டுஅவிழ் தாமரை மாது நல்லாளுடன்
ஒட்டி யிருந்த உபாயம் அறிகிலர்
விட்ட எழுத்தை விடாத எழுத்துடன்
கட்ட வல்லார் உயிர் காக்க வல்லாரே. 5

## தூல சூக்கும மந்திரங்கள்

902. ஆலயம் ஆக அமர்ந்த பஞ்சாக்கரம்
ஆலயம் ஆக அமர்ந்த இத்தூலம் போய்
ஆலயம் ஆக அறிகின்ற சூக்குமம்
ஆலயம் ஆக அமர்ந்திருந்தானே. 6

---

*விட்ட எழுத்து - திருவைந்தெழுத்து. விடாத எழுத்து - சத்தியின் பீஜம். விட்ட எழுத்து - ரேசகத்துள் விட்ட எழுத்தாகிய ஹம் என்பது. விடாத எழுத்து பூரகத்துள் விடாது உள்வாங்கும் எழுத்தாகிய ஸம் என்பது என்றும் கொள்வர்.*

***901. தெளிவுரை :-*** *தேன் விரியப்பெற்ற இதயத்தாமரைக் கண்ணே, உமாதேவியாரோடு இறைவன் எழுந்தருளியிருப்பதன் காரணத்தை யாரும் அறிகில்லார். ரேசக எழுத்தோடு பூரக எழுத்தைக் கும்பிக்கவல்லார் உயிரைக் காக்க வல்லார் என்றவாறு. இரண்டையும் கட்டுதல் - கும்பித்தல்.*

***குறிப்புரை :-*** *மந்திரமாகிய திருவைந்தெழுத்தை, சிவபிரானை என்றும் பிரியாத சத்தியின் பீஜங்களுடன் சேர்த்து, அசபையாகத் தியானித்து மூச்சினைக்கட்டி யோகம் பயின்றால், உயிரை அருள்வெளியில் நிறுத்தி உடம்பையும் பாதுகாக்கலாம். உடம்பு ஒளியுடம்பாகி நிலைத்து நிற்கும். விட்ட எழுத்தை விடாத எழுத்துடன் கட்டவல்லார் - சூரிய சந்திரக் கலைகளின் செயல்களை மாற்ற வல்லவர்.*

***902. தெளிவுரை :-*** *சிவன் திருவைந்தெழுத்தைத் தனது மந்திரக் கோயிலாக உடையவன். மக்கள் உணர்வில் முதலில் தூல பஞ்சாக்கரம் ஆகிய நமசிவாய என்பதே அவனது ஆலயமாக உணரப்படும். பின்னர் அவர்கள் பதிஞானம் பெற்று அதனால் சிவனது ஆலயம் என அறியும் சூக்கும பஞ்சாக்கரத்தைத் தியானம் செய்யும்போது அந்த யோகம் முதிர்ந்து சிவன் அதனையே ஆலயமாகக் கொண்டு அவர்களது உயிர் உணர்வுக்குப் பரானுவமாக*

விளங்குவான். தூலபஞ்சாக்கரம் உடம்பில் மூலாதாரம் முதல் ஆக்ஞை ஈறாக உள்ளதை இடமாகக் கொண்டது. சூக்கும பஞ்சாக்காரம் உயிர், சகராரமாம் துவாத சாந்தப்பெருவெளி (தலைஉச்சிக்கு மேல் 6 அங்குலம்)யை இடமாகக் கொண்டது.

**குறிப்புரை :-** "நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்" என்ற திருவாசக அடிகளை ஒப்புநோக்கி இன்புறலாம். அவர் இறைவனை "மாசற்ற சோதி மலர்ச்சுடராகக் கண்டு, அந்த "ஒளி அனுபவமே தேனாய், அமுதமாய்த் தித்தித்தது எனவும் கொள்ளலாம். தூலம் - பருமை, கண்ணுக்குப் புலனாவது, ஆகாயத்தைவிட அகண்டது. சூக்குமம் - நுண்ணியனவற்றைக் குறிக்கும். அணுவைவிட நுட்பமானது. கண்ணுக்குப் புலனாகாது.

தூலம், சூக்குமம் என்று எல்லாவிடத்திலும் நிறைந்து நிற்பது திருவைந்தெழுத்து. அதன் மகிமையை யாரால் இயம்ப முடியும்? இவ்வைந்தெழுத்தை நமது முன்னோர் ஐவகையாகப்படுத்தி அனுபவித்தும், நமக்கு எடுத்துரைத்தும் உள்ளார்கள்.

நமசிவய - பருமை (தூலம்)
சிவயநம - நுண்மை (சூக்குமம்)
சிவயசிவ - மீநுண்மை (அதிசூக்குமம்)
சிவசிவ - முதல் (காரண பஞ்சாச்சரம்)
சிவ - மாமுதல்

'சி' - நாயோட்டு மந்திரமென்றும் சொல்லப்படும்.

ஆலயம் - ஆ + இலயம். பசுக்கள் (உயிர்கள்) இலயமாவதற்கு உரிய இடம். உறைவிடம்.



## திருவம்பலச் சக்கரம் (மற்றொரு வகை)

**903.** இருந்த இவ்வட்டம் இரு மூன்று இரேகை
இருந்த அதனுள் இரேகை ஐந்தாக
இருந்த அறைகள் இருபத்தைஞ்சு ஆக
இருந்த அறைகள் ஒன்றில் எய்தும் மகாரமே. 7

**904.** மகார நடுவே வளைந்திடுஞ் சத்தியை
ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி
யகாரந் தலையா யிருகண் சிகாரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே. 8

---

***903. தெளிவுரை :-*** *இருபத்தைந்து அறைகள் கொண்ட சக்கரத்தில் நடு அறையில் திருவைந்தெழுத்தின் மகரம் - ஓங்காரமாய் அமையும். பிரணவத்துக்கும், திருவைந்தெழுத்திற்கும் உள்ள ஒற்றுமை புலனாகும்.*

***குறிப்புரை :-*** *உந்தியாகிய கொப்பூழே தூல உடலையும், சூக்கும உடலையும் இணைக்கும் நிலையாகும். பஞ்சாக்கரத்தில் மகாரமும், பிரணவத்தில் அகாரமும் உதிக்கும் இடம் ஒன்றேயாம்.*

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |
| வ | ய | ந | ம | சி |
| ய | ந | ஓம் | சி | வ |
| ந | ம | சி | வ | ய |
| ம | சி | வ | ய | ந |



***904. தெளிவுரை :-*** *எனின், திருவம்பலச்சக்கரத்துள் கூத்தனை மந்திர புருஷாகாரமாகக் காணும் முறைமை கூறுதல் நுதலிற்று.*

***குறிப்புரை :-*** *மகாரத்தை நடுவே வளைத்துள்ள சத்திபீஜத்தை, ஓகாரம் வளைத்து, மகரத்தை உகாரத்தால் பிளந்து மேலேற்றி அகாரம் தலையாகவும், இரண்டு கண்களும் சிகாரங்களாகவும், நகார வகாரங்கள் இரு கால்களாகவும் நாடுக என்றவாறு.*

*அ + உ + ம் = ஓம். நமசிவய என்ற தாரபஞ்சாக்கரம். இதில் இருத்தலைக் காணலாம்.*

## *தார பஞ்சாக்கர சக்கரம்*

***தெளிவுரை :-*** *மகாரம் நடுவே வளைத்திடுஞ் சத்தியை - உந்திக் கமலத்தில் வளைந்து சுருண்டு கிடக்கும் குண்டலினி சத்தியை. ஓகாரம் வளைத்திட்டு உம்பிளந் தேற்றி - கீழ்நோக்காது அச்சத்தியை ஓகாரம் விளங்கும் புருவ நடுவுக்குச் செலுத்தி, ஆகாரந் தலையாய் இருகண் சிகாரமாய் - அகரம் என்ற சிவம் அறிவு மயமாய் இருக்கும் இடம் தலையாகவும் அதன் அக்கினித் தன்மையை வெளிப்படுத்துந் திறன் இரு கண்களில் விளங்குவதாகவும், நகார வகார நற்காலது நாடும் - சுவாதிட்டானத்திலுள்ள அபானனாகிய நகாரம் கண்டத்தில் வகாரமாய் நாதத்தை விளைக்கும் சுழுமுனையாவதை விரும்பிப் பெறுங்கள்.*



***விளக்கம் :-*** *மகாரம் - உந்திக் கமலம். ஓ + அ + உ. அகாரம் உகாரம் பொருந்திய இடம் புருவநடு. உம்பிளந் தேற்றுதலாவது, கீழ்நோக்குந் தன்மை அற்றிருத்தல். இதனால் சி, வா, ய அமைந்து, ந, ம கீழ்ப்படுத்தப்படும். நகாரம் நோக்கிச் சென்ற அபானனே வகாரமாய்க் கண்டத்தில் தாலுமூலத்தில் அருட்சத்தியாய் விளங்குகிறது.*

***கருத்து :-*** *குருமுகமாகத் தீட்சை பெற்றுச் சாதனம் செய்தால் சூக்கும சிவாலயம் அமையும் என்பதாம்.*

***தூலத் திருவம்பலச் சக்கரம்***






## பிரணவமும் ஐந்தெழுத்தும்

**905.** நாடும் பிரணவம் நடு இரு பக்கமும்
பாடும் அவ்வாயு பரந்து அங்கு நின்றது
நாடு நடுவுள முகம் நமசிவாய
ஆகும் சிவாயநம பறத்து ஆயதே. **9**

| சி | வா | ய | | | ந | ம |
|---|---|---|---|---|---|---|
| வா | நம | நம | | | ய | ந |
| ய | நம | சி | சி | வா | ய | ய |
| | | சி | **ஓம்** | வா | | |
| | | சி | வா | வா | | |
| ந | நம | ய | | | ய | வா |
| ம | ந | ய | | | வா | சி |

## சூக்குமா சூக்குமத் திருவம்பலச் சக்கரம்

***தெளிவுரை :-*** *திருவம்பலத்துள் ஐந்தெழுத்தருள் மந்திரத்தை பிரணவத்துடன் அமைக்கும் முறைகளுள் ஒரு முறையைக் கூறுகிறது.*

***குறிப்புரை :-*** *விரும்பப்படுகின்ற ஓம் என்ற பிரணவத்தை நடுவாகக் கொண்டு, இரு பக்கமும் கூத்தனது எழுத்தாகிய சிகரத்தையும், வாயு என்னும் எழுத்துக்களையும் பொருந்தியது அங்கு நிலைபெற்ற மந்திரமாக, மேற்கூறிய வண்ணம் நாடப்படுகிற நடுவுள் முகம் நமசிவாய என்பதும், புருவவட்டத்துள் ஆடுகின்ற சிவாயநம என்பதும் ஆயது என்றவாறு, சமட்டிப் பிரணவத்தோடு தூலம், சூக்குமம் என்னும் இரு பஞ்சாக்கரங்களும் செபிக்கப்பட நிற்றலால் இது சூக்குமா சூக்கும திருவம்பலச்சக்கரமாகும்.*

**906.** **ஆயும் சிவாய நமசி வாயந**
**ஆயும் நமசி வய நமசிவா**
**ஆயுமே வாய நமசியெனும் மந்திரம்**
**ஆயும் சிகாரம்தொட் டந்தத் தடைவிலே. 10**

***தெளிவுரை :-*** *'சிவாயநம' என்பதை ஒன்று, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டாம் எழுத்துக்களை முறையே முதலில் வைத்து ஏனைய எழுத்துக்களையும் முறையானே மேற்கூறிய சக்கர அறைகளில் பொறிக்கச் சிகாரமே முதலாகத் தொடர்ச்சி, முடிவாகவும் முடியும்.*

***குறிப்புரை :-*** *இதுவும் ஒருவகைத் திருவம்பலச் சக்கரமாம் என்பது கருத்து. அச்சக்கரம் ஆமாறு.*

| | | | | |
|---|---|---|---|---|
| சி | வா | ய | ந | ம |
| ம | சி | வா | ய | ந |
| ந | ம | சி | வா | ய |
| ய | ந | ம | சி | வா |
| வா | ய | ந | ம | சி |

*இது, மேற்கூறிய சக்கரங்களைக் கொள்ளமாட்டாதவர் பொருட்டுக் கூறப்பட்டது. ஐந்தெழுத்தின் பேதங்கள் பலவும் இதில் அடங்கியுள்ளன என்பது உட்கிடை. இரண்டாம் அடியில் வகர ஆகாரம் செய்யுள் நோக்கிக் குறுக்கலாயிற்று. இவ்வடியின் இறுதியை வேறு வகையாக ஓதுதல் கூடாமையறிக.*

## பேரம்பலச் சக்கரம்

**907.** அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்
அடையும் அறைஒன்றுக் கீரெழுத் தாக்கி
அடையும் அகாரத்தில் அந்தமாம் ஷவ்வும்
அடைவின் எழுத்தைம்பத் தொன்றும் அமர்ந்ததே. **11**

***தெளிவுரை :-*** *இதுமுதல் ஐந்து மந்திரங்களால் பெரியதொரு திருவம்பலச் சக்கரம் கூறுகின்றார். எனவே, இது* ***<u>பேரம்பலச்சக்கரமாம்.</u>*** *பெருமை, எல்லா மந்திரங்களும், எல்லா எழுத்துக்களையும் கொண்டிருத்தல். இதனால், முன்னவை சிற்றம்பலச் சக்கரங்களாய் நிற்பனவாம். சிறுமை, சிலமந்திரங்களையே கொண்டிருத்தல்.*

*மேற்சொல்லிய வகையில், நெடுக்கில் ஐந்தும், குறுக்கில் ஐந்துமாக இருபத்தைந்து அறைகள் உள்ள சக்கரத்தில், மாதுருகாட்சரங்கள் (வடமொழியின் மூல எழுத்துக்கள்) ஐம்பதும் அடங்கி நிற்கும். அம்முறையில் உயிரெழுத்துப் பதினாறு. உடலெழுத்து முப்பத்தைந்து (வடமொழி எழுத்துக்கள்) ஆக ஐம்பத்தொன்றினையும் 'அ, ஆ' முதலாக முறையே ஓர் அறைக்கு இரண்டாக வைத்துப் பொறித்துவர, ளகாரம் ஈறாக மேற்கூறியவாறு ஐம்பது எழுத்துக்களும் நிரம்பும். அதற்குமேல் ஐம்பத்தொன்றாவது எழுத்தாக நிற்பது க்ஷகாரம். அதனை எல்லா எழுத்திற்கும் பொதுவாகிய ஹ என்பதுடன் கீழ்வரிசை அறை ஐந்தில் நடுஅறையின் கீழ் வெளியில் பொறித்துவிடல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியில், 'அகாரம்' என்றது ஹகாரத்தையேயாம். அடைவு, நெடுங்கணக்குமுறை, அமர்ந்தது என, இடம் வினைமுதல்போலச் சொல்லப்பட்டது. "அமர்ந்தது சக்கரம்" எனச் சொல்லெச்சம் வருவித்து முடிக்க.*

## பேரம்பலச் சக்கரம் - I



## பேரம்பலச் சக்கரம் - சிறப்பு முறை



**908.** அமர்ந்த அரகர வாம்புற வட்டம்
அமர்ந்த அரிகரி யாம்அதனுள் வட்டம்
அமர்ந்த அசபை யாம்அத னுள்வட்டம்
அமர்ந்த இரேகையும் ஆகின்ற சூலமே. 12

**909.** சூலத் தலையினில் தோற்றிடும் சத்தியும்
சூலத் தலையினில் சூழும்ஓங் காரத்தால்
சூலத் திடைவெளி தோற்றிடும் அஞ்செழுத்
தால்அப் பதிக்கும் அடைவது ஆமே. 13

---

*908. **தெளிவுரை :-** சதுரத்தில் அமைந்த மேற்கூறிய சக்கரத்திற்கு வெளியே அதனை உள்ளடக்கி ‘புறம், நடு, உள்’ என மூன்று வட்டங்களை வரைந்து, சதுர சக்கரத்தில் அறைகள் உண்டாதற் பொருட்டுக் கீறியுள்ள கீற்றுக்களை வெளியே நிற்கும் புற வட்டம் வரையில் நீட்டி, மேலும் வெற்றவெளியிலும் செல்ல நீட்டி, அக்கீற்றுகளின் முனைகளைச் சூலவடிவாக ஆக்குதல்வேண்டும். பின்னர் வெற்றவெளியை ஒட்டிநிற்கும் புறவட்டத்தில் உள்ள அறைகளில் ஒவ்வொன்று ‘ஹர’ என்பதையும், நடுவட்ட அறைகளில் ‘ஹரி’ என்பதையும், சதுரத்தை அடுத்து நிற்கும் உள்வட்டத்தில் ‘ஹம்ஸம்’ என்பதையும் பெற்றிருத்தல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *‘ஹர’ என்பதும், ‘ஹரி’ என்பதும் தமிழ் முறையில் அடுக்கிக் கூறப்பட்டன. அடுக்குகள், பன்மைப்பற்றி வந்தன. அசபையாவது, அம்ஸ மந்திரமாதல் வெளிப்படை. ‘ஆகின்ற’ என்றது முற்று.*

*909. **தெளிவுரை :-** மேற்கூறிய சூலங்கள் ஒவ்வொன்றின் முறையிலும் சத்தி பீசம் (ஹ்ரீம்) காணப்படும். அங்ஙனம் காணப்படுதல் தன்னைச் சூழ நிற்கும் ஓங்காரத்துடனாம்.*

*இனி ஒரு சூலத்திற்கும், மற்றொரு சூலத்திற்கும் இடையேயுள்ள வெற்றிடங்கள் ஐந்திலும் இடத்திற்கு ஒன்றாக ஐந்தெழுத்துக்கள் பொறிக்கப்படும். இதுவும் மேற்கூறிய சக்கரத்தின் முறையாம்.*

***குறிப்புரை :-*** *‘இடைவெளி அஞ்செழுத்தால் தோற்றிடும்’ என்க. ஆல்உருபு இரண்டும் உடனிகழ்ச்சிக்கண் வந்தன. அடைவது - அடையும் இடம். இடமாவது, அவ் இடைவெளி என்க. ஐந்தெழுத்து இவை என்பது வருகின்ற மந்திரத்தில் அறியப்படும்.*

**910.** அதுவாம் அகார இகார உகாரம்
அதுவாம் எகார ஒகாரம தஞ்சாம்
அதுவாகும் சக்கர வட்டமேல் வட்டம்
பொதுவாம் இடைவெளி பொங்குநம் பேரே. **14**

**911.** பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது
சோர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியில்
நேர்பெற் றிருந்திட நின்றது சக்கரம்
ஏர்பெற் றிருந்த இயல்பிது வாமே. **15**

---

*910. **தெளிவுரை :-** அகார, இகார, உகார, எகார, ஒகாரங்களே மேற்கூறிய அவ்ஐந்தெழுத்துக்களாம். அவ்வெழுத்துக்களையுடைய ஐந்து ஓங்காரங்களே புறவட்டத்திற்குமேல் மற்றொரு வட்டமாய் நிற்கும். இனி, அறைகளாய் நில்லாது சதுரத்தின் மேல் பொதுவாய் நிற்கும் இடைவெளிகளில் பஞ்சாக்கர பேதங்களுள் ஒன்று எழுதப்பட்டு விளங்கும்.*

*குறிப்புரை :-* “அது” என்றது, மேற்சொன்ன அஞ்செழுத்தைத் தொகுதி வகையாற் சுட்டிற்று. முன்னிரண்டடி சொற்பொருட் பின்வருநிலை.

*911. **தெளிவுரை :-** மேல் “நம் பேர்” என்றது சிவமூல மந்திரத்தை யாம். அதன் பேதங்களில் இறுதியானதாகிய சிகார வகாரங்கள் இணைந்துநிற்கும் மந்திரம், வளைந்து நிற்கும் வட்டங்கட்கு உள்ளே சதுரத்திற்கும் அவற்றிற்கும் இடையே உள்ள சந்தி அறைகளில் நிற்பதாம். இங்கு எடுத்துக்கொண்ட சக்கரத்தின் இயல்பு இவ்வாறாம்.*

*குறிப்புரை :-* இதனுள், சதுரத்திற்கு மேல் உள்ள சந்தி அறை ஒவ்வொன்றிலும் ‘சிவ’ என்பது பொறிக்கப்பட வேண்டும் என்பது கூறப்பட்டமை காண்க. “சக்கரம்... இயல்பிது வாமே” என்றது முடித்துக் கூறி முற்றுவித்தது. சோர்வு, பொதுவாய் நிற்றல், ‘சோர்வுற்ற சந்தி’ என இயையும். இதனுள், எல்லா மந்திரங்களும், எல்லா மூல எழுத்துக்களும் அடங்கியுள்ளன என்பது கருத்து. வடமொழி நோக்கில் எழுத்துக்கள் மிகப் பலவாதல் பற்றி அவையும் அடங்குதற் பொருட்டு அறை ஒன்றில் இரண்டெழுத்துக்களை அமைக்குமாறு விதித்தார். எனவே, இதனைத் தமிழ் முறையில், மேல்வரிசையில் உள்ள ஐந்து அறைகளில் மட்டும் ‘அ, இ, உ, எ, ஒ’ என்னும் ஐந்து குற்றெழுத்துக்களோடு அவற்றிற்கு இனமான ஆ, ஈ

முதலிய ஐந்து நெட்டெழுத்துக்களையும் சேர்த்து இரண்டிரண்டெழுத்தாக முறையே எழுத, எஞ்சி நிற்பவை இருபது அறைகளாம். அவற்றில் முதல் இரண்டு அறைகளில் 'ஐ, ஔ' என்னும் இரு நெட்டெழுத்துக்களையும், அவற்றின்பின் 'க, ங' முதல் 'ன' ஈறான பதினெட்டெழுத்துக்களையும் எழுத, இருபத்தைந்து அறைகளும் எழுத்துக்களால் நிரம்பிநிற்கும்; வடமொழி வகையில் அமைந்த சக்கரத்தில் 'க்ஷகாரம்' எழுதப்பட்ட இடத்தில் 'அஃகேனம்' என்பதை எழுதலாம். 'ஓம், ஹ்ரிம், ஹர, ஹரி, ஹம்ஸ, ஸோஹம், ஸிவ' என்பவற்றை, 'ஓம், க்ரீம், அர, அரி, அம்ச, சோகம், சிவ' என எழுதிக்கொள்ளலாம். அகரம் முதலிய ஐந்து குற்றெழுத்துக்களைத் தமிழில் எழுதுவதில் தடையொன்றும் இல்லை. ஆதலின், இச்சக்கரம் வடமொழி கூறுவார்க்கேயன்றித் தமிழ் கூறுவார்க்கும் உரியதாதல் பெறப்படுதலின், அதனை, இவ்வாற்றால் அறிந்து செய்துகொள்க.

வடமொழியில், 'எ, ஒ' என்னும் குற்றெழுத்துக்கள் இல்லை; ஆயினும், அவை மந்திரங்கட்கு வேண்டப்படுகின்றன. அதனால், தமிழிலிருந்து அவை அவற்றில் கொள்ளப்படுகின்றன. வடவெழுத்துக்களில் பல தமிழில் இல்லையாயினும் மந்திரங்களைத் தமிழாகக் கூறுமிடத்தில் தமிழ் முறையிலே அவை சொல்லப்படலாம். அது குற்றமாகாது. 'குற்றமாம்' எனின், இந்நாயனாரும், பிற அருளா ளர்களும் அவற்றைத் தமிழ் முறைப்படியே கூறியிருத்தல் குற்றமாய் விடும். அம்முறை செய்யுட்களிற் கொள்ளப்பட்டது எனின், செய்யுளில் குற்றம் ஆகாத ஒன்று வழக்கில் குற்றமாய்விடும் என்றல் ஏற்கத் தக்கதாகாது. நாயனார் தம்மை, இறைவன் தன்னைப் பலபடியாலும் தமிழால் போற்றும் முறையை அருளிச் செய்யவே மூலன் உடம்பில் இருக்கவைத்தான் எனப் பாயிரத்துட் கூறியிருத்தல் 1 பொருட்படுத்தி உணரத்தக்கது.

பஞ்சப் பிரம மந்திரத்தின் பீசங்களுள் ஈசானம், தற்புருடம் இரண்டற்கும் முறையே 'ஒ, எ' என்னும் குறில்களே கொள்ளற்பாலன என்பது ஏனைய மூன்றன் பீசங்களையும் நோக்கினால் நன்கு தெரியவரும். ஆயினும், அங்கு நெடிலே கொள்ளப்படுகின்றன. 'பிரம மந்திரத்திற்குக் குறில்களும், கலா மந்திரம், அங்க மந்திரங்கட்கு நெடில்களும் பீசங்களாகும்' என்பதே அம்மந்திரங்களைக் கூறிய நூற்குக் கருத்தாகலின், பிரம மந்திரங்கள் இரண்டற்கு நெடிலைக் கொள்ளுதல் ஏற்புடைத்தாகாமை அறிக.

912. இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்
செயலும் அறியத் தெளிவிக்கு நாதன்
புயலும் புனலும் பொருந்தங்கி மண்விண்
முயலும் எழுத்துக்கு முன்னா இருந்ததே. 16

---

*இவ் ஐந்து மந்திரங்களாலும் பெரியதொரு திருவம்பலச் சக்கரத்தின் இயல்பு கூறப்பட்டது.*

***912. தெளிவுரை :-** முறையான இம்மந்திரம் அடையும் நெறியில் அதன் கிரியையும் அறியும்படியாகத் தெளிவுபடுத்திய குருநாதன் காற்று, நீர், தீ, பொருந்திய நிலம், ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களுக்கும் உரிய பீசங்களையும் முயலும் எழுத்தாகிய பஞ்சாக்கரத்தின் மூலம் அடையுங்கள் என்றருளினான். பஞ்சாக்கரம் தொழிற்படும்போது பஞ்சபூத பீசாக்கரங்களும், அவைகளின் உருவாக்கமும் தேவைப்படும்.*

| வ. எண் | பஞ்சபூதம் | வடிவப் பெயர் | வடிவம் | உடலிலுள்ள இடங்கள் | குறியீடு | ஐந்தெழுத்து |
|---|---|---|---|---|---|---|
| 1. | பிருதிவி | நாற்கோணம் |  | மூலாதாரம் | லம் | யநமசி |
| 2. | அப்பு | பிறைவட்டம் |  | உந்தி | வம் | வயநமசி |
| 3. | தேயு | முக்கோணம் |  | இருதயம் | ரம் | நமசிவய |
| 4. | வாயு | அறுகோணம் |  | கழுத்து | யம் | மசிவாயந |
| 5. | ஆகாயம் | வட்டம் |  | புருவமத்தி | ஹம் | சிவாயநம |

*குறிப்புரை :- சிகார வாச்சியனாகிய சிவம், ஆகாயம் போல அனைத்தையும் தன்னகத்து அடங்கிநிற்றலில் அதற்கு ஆகாயபீடம் அமைவதாயிற்று. இங்ஙனம் ஏனையவற்றிற்கும் அமைதிகாணலாம். இவற்றின் விளக்கத்தை உண்மைவிளக்கம் ஆறாம் வெண்பாவிலும், சித்தியார் இரண்டாம் சூத்திரம் 67ஆம் திருவிருத்தத்திலும் காணலாம்.*

**913.** ஆறெட்டு எழுத்தின்மேல் ஆறும் பதினாலும்
ஏறிட்டு அதன்மேல் விந்துவும் நாதமும்
சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலம் கூப்பிட்டுப் போமே. 17

---

*இதனுட் சிறப்பாகச் சொல்லியது, நிலம் முதலிய பூதங்கட்கு உரிய 'ஹ்லாம், ஹ்ரீம், ஹ்யைம், ஹ:' என்னும் வித்தெழுத்துக்கள் மேற்கூறிய சக்கரத்திலுள்ள 'ஹம்ஸ, ஹரி, ஹர, ஹ்ரீம், ஸிவ' என்னும் மந்திரங்கட்கு முன்னே சேர்த்துச் சொல்லப்படும் என்பது. 'இவ்வித் தெழுத்துக்கள் இம்முறையே நிவிர்த்தி முதலிய கலைகட்கும் உரியன' என்பது சிவஞான சித்தியாரிலும் (சூ.2-67, 68) சொல்லப்பட்டது. 'இது பற்றியே மேலைச் சக்கரத்தில் சூலங்கட்கு இடையே அகரம் முதலிய ஐந்து குற்றெழுத்துக்களும் பொறிக்கப்பட்டன' என்பது கருத்து.*

*நிலம் முதலிய பூதங்களைச் செய்யுள்பற்றி முறை பிறழக் கூறினார். முயலுதல் - வழிபடுதல். இங்கு ''முன்'' என்றதை எழுத்திலக்கணத்துள் புணர்ச்சி விதிகளில் 'முன்' என்பது போல இடமுன்னாகக் கொள்க.*

*இதனால், மேலைச் சக்கரத்திற்கு எய்தியதன்மேல் மற்றொரு செய்தி கூறப்பட்டது.*

***913. தெளிவுரை :-** இம்மந்திரம் மலநீக்கம் செய்யும் திருவைந்தெழுத்து உணர்த்துதல் நுதலிற்று. வடமொழி நெடுங் கணக்கில் 48ஆவது எழுத்து ஸ. அதன்மேல் ஆறாம் எழுத்தாகிய ''ஊ'' ஏற அது ஸு என்றாகும். இதனோடு விந்துவுக்குரிய குறியீடாகிய (0) அனுஸ்வாரத்தையும் சேர்க்க அது ''ஸூம்'' என்றாகும். பதினான்காவது எழுத்தாகிய "ஔ" இதேபோல ஸ-வோடு சேர அது ஸௌ ஆகும். அதனோடு நாதத்துக்குரிய குறியீடாகிய () விசர்க்கத்தையும் சேர்க்க "ஸூம்" என்றாகும். ஓம் ஸூம் ஸௌ சிவாயநம என்று செபித்தால் மும்மலங்களும் சிதறியோடும்.*

***குறிப்புரை :-** ஆறெட்டெழுத்து - நாற்பத்தெட்டாவது எழுத்தாகிய ஸகாரம், ஸௌ என்பது பராசத்தியின் பீஜம். மூலாதாரத்திலுள்ள ஸகாரம், ஸௌம் ஆக இடப்பக்க மூலையில் விளங்கும்.*

914. அண்ணல் இருப்ப தவளக் கரத்துளே
பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே
எண்ணி இருவர் இசைந்தங் கிருந்திடப்
புண்ணிய வாளர் பொருளறி வார்களே. 18

---

***914. தெளிவுரை :-*** *சிவனும், சத்தியும் தம்முள் வேறல்லர், ஆதலால், அவருள் ஒருவர்க்கு உரிய பீசங்களிலும், மந்திரங்களிலும் மற்றொருவர் பொருந்தியே நிற்பர். என்றாலும் இருவரையும் வேறுபோல எண்ணி, இருதிறத்து மந்திரங்களையும் செபிக்கின்ற செயல் உடையவர்களே மெய்ப்பொருளை உணரப் பெறுவார்கள்.*

***குறிப்புரை :-*** *'உண்மையில் இருவரும் வேறல்லராயினும் வழி பாட்டில் வேறுபோல நின்றே பயன்தருவர்; ஆதலின் அவ்வாறே வழிபடல் வேண்டும்' என்பதாம். வழிபாட்டில் அவ்வாறு நிற்றல் வழிபடுவோரது இயல்புபற்றி என்க*

*'உள்ளே' என்பவற்றுள் இரண்டாவதன் இறுதியில், 'இருக்கும்' என்பது எஞ்சிநின்றது. 'எனினும் வேறுபோல எண்ணி' என்க. இப்பொருட்கு, "அக்கரம்" என்பன ஒருமருங்கு ஆகுபெயராம். "இருந்திட" என்பது "ஆளர்" என்பதில் ஆளுதல் தொழிலோடு முடிந்தது.*

*இனி, இதற்கு மற்றோர் உரை:- சிவனது எழுத்தும் சக்தியின் எழுத்திற்கு இடையில் நிற்கும். அவ்வாறே, சக்தியின் எழுத்தும் சிவன் எழுத்திற்கு இடையில் நிற்கும். இந்நிலைமையை ஓர்ந்துணர்ந்து, இருவரது எழுத்துக்களும் இணைந்திருக்கச் செபிக்கும் செயல் உடையவர்களே மெய்ப்பொருளை உணரப் பெறுவார்கள். புண்ணிய சீலர்கள் அகர உகரச் சேர்க்கையால் பின்புற மூளையில் நாத முழக்கத்தைக் கேட்பார்கள் என்றதாம். எனின்; 'உடையாளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி' என்பதனை விளக்குதல் நுதலிற்று. இறைவன் எழுந்தருளியிருப்பது சத்திபீசமாகிய 'ஹ்ரீம்' என்பதனுள்; பெண்ணினல்லாளாகிய பெருமாட்டி எழுந்தருளி யிருப்பது சிவபீசமாகிய 'சௌ' என்பதனுள், அவ்வண்ணம், இருவரும் ஒருவரில் ஒருவராகப் பொருந்தியிருக்க, சிவபுண்ணிய சீலர்கள், சிவபரம்பொருளை உணர்ந்து ஈடேறுவார்கள் என்றவாறு.*

*சிவசக்தி பீசங்கள் இவையாதலைக் காரணாகமம் மந்திராவதாரப் படலத்துள் காண்க. பின்னர், சாக்தேய தந்திரத்தும்*

915. அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து
இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கமதாய் நிற்கும்
மவ்விட்டு மேலே வளியுறக் கண்டபின்
தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே. 19

---

*இவை வழங்கி வருதல் உணர்க. இதனை இங்ஙனமன்றி, அவளக்கரம் 'வ' காரம் என்றும், பிரானக்கரம் 'சி' காரம் என்றும், அண்ணலிருப்பது அவளக்கரத்துள்ளே என்பது 'வசிவசி' என்பது என்றும், பெண்ணினல்லாள் பிரானக்கரத்துள்ளிருப்பது 'சிவசிவ' என்றும், இருவர் இசைந்து அங்கு இருந்திடல் ஆன்மாவினிடமாக சிவயவசி என இருவரும் இருந்திடல் என்றும், இப்படி உண்மைப் பொருள் அறிவார்கள் என்றும், எமது ஞானாசாரியர் வாயிலாகக் கேட்டறிந்த பொருள் ஒன்று உண்டு. இதுவே 'உடையாளுன்றன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்' என்னும் அறிவாற் சிவமேயான வாதவூர் வள்ளலின் கருத்தும் ஆம்.*



**அகார பீட லிங்க சக்கரம்**

*915. தெளிவுரை :- மேற்கூறிய சக்கரத்தில் சந்திகளில் உள்ள குற்றெழுத்துக்களில் முதலாவதாகிய அகாரத்தை வாங்கி அடியிலும்,*

**916.** அவ்வுண்டு சவ்வுண் டனைத்தும்அங் குள்ளது
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வார்இல்லை
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச்
சவ்வுண்டு சத்தி சதாசிவன் றானே. **20**

---

*இகாரத்தை வாங்கி முடியிலும் வைத்து இடையில் 'ஹர' என்னும் மந்திரத்தை வாங்கியிட்டு நோக்கினால் இலிங்கமாய்த் தோன்றும். ஆதலின் அவற்றை அம்முறைப்படி மூலாதாரம், இருதயம், புருவநடு என்பவற்றில் வைத்துத் தியானித்து மகாரத்துடன் கூட்டிப் பிராணா யாமத்துடன் செபித்தால், கூத்தப்பிரானது ஒளிவடிவு காட்சிப்படும்.*

***குறிப்புரை :-*** *இங்குக் கூறிய முறையில் இலிங்க வடிவம் அமையுமாறு : (அடுத்த பக்கம் பார்க்க)*

*இவற்றை மகாரத்துடன் கூட்டி செபிக்குமாறு, 'அம் இம் ஹரோம்' என செபித்தலாம். 'அம், இம்' என்பன அம்ச மந்திரம் போல வாயுப்பயிற்சியைத்தரும். "தொம்" என்பது நடனக் குறிப்பு.*

*இதனால், மேலைச் சக்கரத்துள் நின்ற சில எழுத்துக்கள் மந்திரம் என்பவற்றது சிறப்புணர்த்தும் முகத்தால் அவை தம்முட் கூடிநின்று பயன் விளைக்குமாறு கூறப்பட்டது.*

***916. தெளிவுரை :-*** *எங்கே அகாரமும், சகாரமும் உள்ளனவோ அங்கே அனைத்துப் பொருள்களும் உள்ளனவாம். இவ்வாறு, இந்த இரண்டெழுத்துக்களில் எல்லாப் பொருளும் அடங்கிநிற்கின்ற நுட்பத்தை அறிபவர் உலகில் இல்லை. அதனை அறியவல்லவர்க்குச் சத்தி வடிவாகிய சிவன் சகாரத்திலே உளனாய்த் தோன்றுவான்.*

***குறிப்புரை :-*** *'அ, ச' என்பவை விந்துவோடு கூடியன என்பதும், அவ்வாறே, ஈற்றில் உள்ள 'ச' என்பது நாதமாகிய விசர்க்கத்தோடு கூடியது என்பதும் கருத்துக்களாம். எனவே 'அம்ச மந்திரத்தின் வழி சோகம்பாவனை செய்யச் சிவம் விளங்கும்' என்றதாயிற்று. 'அம்ச மந்திரம் உயிர்ப்பு மந்திரம் ஆதலின், அஃது எல்லா மந்திரத்திற்கும் மூலமாம்; ஆகவே, அதனுள் அனைத்துப் பொருளும் அடங்குவன வாம்' என்றவாறு. பின்னர் "அங்கு" என வருதலால் முன்னர் 'எங்கு' என்பது கொள்ளப்படும். கவ்வுண்டு நிற்றல் - அகப்பட்டு நிற்றல்.*

*இதனால், மேற்கூறியவற்றில் இரு மந்திரங்களின் சிறப்புக் கூறப்பட்டது. இம் மந்திரம் ஹௌம், ஸௌம் என்னும் பீசங்களது*

**917.** அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்
அஞ்செழுத் தாகிய அக்கர சக்கரம்
அஞ்செழுத் துள்ளே அமர்ந்துநின் றானே. **21**

**918.** கூத்தனைக் காணும் குறிபல பேசிடின்
கூத்தன் எழுத்தின் **முதலெழுத் தோதினால்**
கூத்தனொ டொன்றிடுங் கொள்கைய ராய்நிற்பர்
கூத்தனைக் காணும் குறியது வாகுமே. **22**

---

*சிறப்புணர்த்துதல் மேலும் நோக்குடையதாதல் அறிக. மேலும், 'அம்ச' என்பது அசபாமந்திரமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று. அகரமும் சகரமுமாகிய இவ்விரண்டனுள் எல்லாம் அடங்கியுள்ளது. இவ்விரண்டனுள் எல்லாம் கலத்திருக்கும் கருத்தை அறியத்தக்க ஞானிகள் இலர். அதனை அறியும் பரிபாகத்தார்க்குச் சவ்வும் என்பதில் சத்தியும் சதாசிவமும் இருத்தல் வெளிப்படும் என்றவாறு.*

*அவ்வுண்டு சவ்வுண்டு - அகரமும் உண்டு சகரமும் உண்டு.*

*கவ்வுண்டு - கலந்து; சிவம் சத்தியாகிய இவற்றின் கலப்பிலேயே எல்லா உலகமும் அடங்கியிருக்கிறது என்பதாம். இதனை அறியின் 'சவ்வும்' என்ற பீஜமும் சத்தியும் சதாசிவமுமாயிருத்தலை அறியலாம் என்பது கருத்து. சவ்வுண்டு - கலந்து, அகப்பட்டு. ஹ - அசபா மந்திரத்தில் சிவனைக் குறிக்கும் குறியீடு. ஸ - அதில் சத்தியைக் குறிக்கும் குறியீடு.*

*917. தெளிவுரை :- அஞ்செழுத்தாலே அமர்ந்தனன் நந்தியும் - ஐந்தெழுத்தே வடிவமாக உள்ளனன் இறைவன். அஞ்செழுத்தாலே அமர்ந்த பஞ்சாக்கரம் - ஐந்தெழுத்தாலே உள்ளது பஞ்சாட்சரம். அஞ்செழுத்தாகிய அக்கர சக்கரம் - திருவம்பலச் சக்கரம் ஐந்தெழுத்தால் அமைக்கப்பட்டுள்ளது. அஞ்செழுத்துள்ளே அமர்ந்திருந்தான் - ஐந்தெழுத்தில் சூக்குமமாக எழுந்தருளியிருந்தான்.*

| அ இ உ எ ஒ | நந்தி (பொது) |
|---|---|
| சி வா ய ந ம | பஞ்சாக்கரம் |
| அம் க்ரீம் அம் சம் ஆம் | அக்கர சக்கரம் |
| அ உ ம விந்து நாதம் | பிரணவம் |

*எல்லாம் ஐந்தாக அமைந்துள்ளமை காண்க. இவ்விதமாக*

ஐந்தெழுத்தில் இறைவனது சொரூபமும், தடத்தமும் உள்ளன என்பதாம்.

***குறிப்புரை :-* இறைவன் அஞ்செழுத்தாகிய மந்திரமே வடிவாக அமர்ந்திருந்தனன்; அன்றியும், சீபஞ்சாக்கரமும் ஐந்தெழுத்தாலேயே அமைந்தது. ஐந்தெழுத்தாகிய அக்கரங்கள் அடைக்கப்பட்ட சக்கரத்துள்ளே அஞ்செழுத்தையே தமது திருமேனியாகக் கொண்டு அமர்ந்திருந்தான் என்றவாறு.**

***சீபஞ்சாக்கரமே சிவன் திருமேனி; சீபஞ்சாக்கரம் அடைக்கப்பட்ட யந்திரமும் அவன் சொரூபமே என்று அவனது மந்திர யந்திர சொரூபம் உணர்த்தியவாறு.***

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| ம | சி | வ | ய | ந |
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |

*918. தெளிவுரை :- கூத்தனைக் காணுங் குறி பல பேசிடின் - கூத்தப் பெருமானைத் தரிசிக்கும் அடையாளங்களைப் பற்றிப் பேசி, கூத்தனெழுத்தின் முதலெழுத்தோதினார் - கூத்தனது எழுத்தில் முதலெழுத்தை ஓதியவர், கூத்தனொடொன்றிய கொள்கையராய் நிற்பர். அச்சிவத்துடன் பிரிப்பின்றி நிற்பர், கூத்தனைக் காணுங் குறியதுவாம் - இதுவே கூத்தனை அறியும் உபாயமாம்.*

*குறிப்புரை :- <u>கூத்தனது முதல் எழுத்து சிகாரம்</u>. சிவாக்கினியைத் தூண்டும் சிகாரமே கூத்திற்குக் காரணமாய் ஒளியாய்ச் சீவர்களது கண்களில் உள்ளது. கூத்தினோடு ஒன்றி நிற்றலாவது, அவ்வொளியிலே வேறாகக் காணாமல் ஒன்றாகக் காணல். சிம் என்றதும் கேவல கும்பகத்தை விளைவிக்கும் என்பதாம். இம் - எனின், நடராசப் பெருமானைத் தரிசிக்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.*

*கூத்தப்பெருமானைத் தரிசிக்கும் அடையாளங்களைப் பற்றிப் பேசினால், கூத்தன் எழுத்தாகிய சீபஞ்சாக்கரத்தின் முதலெழுத்தை ஓதியவர்கள், அச்சிவத்துடன் அநந்திய பாவமாய் நிற்பார்கள்;*

919. அத்திசைக் குள்நின் றனலை எழுப்பியே
அத்திசைக் குள்நின்ற <u>நவ்வெழுத் தோதினால்</u>
அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை
அத்திசைக் குள்ளுற வாக்கினள் தானே. 23

---

*இதுவே கூத்தனை யறியும் உபாயமாம் என்றவாறு.*

*இதனால், பிரணவத்தோடு கூடிய சீபஞ்சாக்கரமே திருவாசியோடு கூடிய ஆனந்தக்கூத்தனின் அருளுரு என்றும், முதலெழுத்தாகிய சிகாரமே அவனுக்குரியதாயவனோடு ஒன்றி நிற்பது எனவும் அறிவித்தவாறாம். முதலெழுத்து ஓதினார் என்றது, சிகாரத்தை மட்டும் ஓதாது மகாரத்தையும் சேர்த்து சிம் என்று ஓதினார் என்பது.*

***919. தெளிவுரை :-** மேற்காட்டிய சக்கரங்களில் யாதானும் ஒன்றில் உணர்வை நிறுத்திப் பிராணாயாமத்தால் மூலாதாரத்தில் உள்ள அனலை ஓங்கி எழச் செய்து, சக்கரத்தில் உள்ள எழுத்துக்களில் நகாரத்தைச் செபித்தால், அச்சக்கரத்தில் மறைந்து நிற்கும் கூத்தப் பெருமானை அந்த நகாரத்திற்கு உரியவளாகிய திரோதன சக்தி அச்சக்கரத்திலே பொருந்தச் செய்வாள்.*

***குறிப்புரை :-** பிரணவத்தியானத்தால் சிவனை அறிந்து உய்யலாம் என்பது அறிவித்தல் நுதலிற்று. மூலாதாரத்து நின்ற குண்டலினியை எழுப்பி, மூலாதாரத்தில் அடங்கியிருக்கின்ற பிரணவமாகிய அந்த எழுத்தை ஓதினால், அம்மூலாதாரத்துள் நின்ற மறையவனாகிய பிரமன் நம்மையும் அந்தக் குண்டலினிசத்தியோடு உறவுகொள்ளும்படி செய்வான் என்றவாறு.*

*அத்திசை என்பது நெஞ்சறி சுட்டாக மூலாதாரத்தை உணர்த்தி நின்றது; அனல் என்னும் குறிப்பால், மூலாதாரத்துள் பிரணவ வடிவாகச் சுருண்டு கிடக்கின்ற குண்டலினியை, எழுப்புவதற்காகப் பிரணவத்தைச் செபித்தால், மூலாதாரத்துள் மறைந்து கிடக்கின்ற வனாகிய சிவத்தைத் தானே உறவாக்கிக் கொண்டவன் ஆவன் என்பது கருத்து.*

***920. தெளிவுரை :-** தானாகவே முன் வந்து காக்கின்ற அருட்சத்தியின் எழுத்தாகிய வகாரத்தை ஓதினால், அவள்தானே முன்வந்து சிவஞானத்தை அளித்துப் பரமுத்தியை அடையச் செய்வாள். இனி, அவளாலே உபதேசிக்கப்பட்ட மல எழுத்தாகிய*

920. தானே அளித்திடும் தையலை நோக்கினால்
தானே அளித்திட்டு மேல்உற வைத்திடும்
தானே அளித்த <u>**மகாரத்தை ஓதினால்**</u>
தானே அளித்ததோர் கல்ஒளி யாமே. 24

921. கல்லொளி யேஎன நின்ற வடதிசைக்
கல்லொளி யேஎன நின்றநல் லிந்திரன்
கல்லொளி யேஎன நின்ற <u>**சிகாரத்தைக்**</u>
கல்லொளி யேஎனக் காட்டிநின் றானே. 25

---

*மகாரத்தை ஓதினால், அவ்வருட் சக்தியால் வழங்கப்பட்ட மாணிக்கமாகிய உயிர் மாசுநீங்கி ஒளியுடையதாய் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *குண்டலினி தரிசனமே சகத்திரார தரிசனமாக வளரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. குண்டலினியாக சத்தியை நோக்கினால் அது தானாகவே அருள்வழங்கும். அங்ஙனம் அருள் வழங்கிச் சகத்திராரத்தின்மேல் பொருந்தவைக்கும். அங்கே, மகாரமாகிய நாதத்தை ஓதிக்கொண்டிருக்க, தானே விளைகின்ற ஒப்பற்ற உதயசூரிய ஒளி விளையும் என்றவாறு.*

*மூலாதாரத்தில் குண்டலிதரிசனம் செய்தார்க்கு அனுபவம் முதிர்ந்து சகத்திராரத்தில் சதகோடி சூரியனைப் போன்ற ஒளியான திருமேனி படைத்த சிவதெரிசனமும் சித்திக்கும் என்பதாம். கல் - மலை; ஈண்டு உதயகிரி. மகாரம் - நாதம்.*

***921. தெளிவுரை :-*** *கல்லொளியே யெனநின்ற வடதிசை - ஒளி மலையாகச் சிவம் வடதிசை அல்லது சிரசின் இடப்புற மூளையிலே எழுந்தருளிய போது, கல்லொளியேயென நின்றனன் இந்திரன் - இந்திர திசையான கீழ்ப்பகுதியிலும் அஃதாவது முகத்தின் முன்புறத்திலும் ஒளி விளங்கியது. கல்லொளியேயென நின்ற சிகாரத்தை - இச்சிரசின்மேல் விளங்கிய ஒளியில் அக்கினி வண்ணனான சிவம், கல்லொளியேயெனக் காட்டி நின்றான் - இரத்தினத்தின் பிரகாசம்போல் எனக்குக் காட்சியளித்தான்.*

***குறிப்புரை :-*** *இந்திர திசை - கிழக்கு. சிகாரம் - அக்கினி கலை. சிவமே ஒளியாகச் சிரசின் பின்னும் முன்னும் காட்சியளித்தான் என்பதாம். <u>இதனால் சிகாரத்தை ஓதுதலின் பயன்</u> குறிப்பிடப்பட்டது.*

**922.** தானே எழுகுணம் தண்சுட ராய்நிற்கும்
தானே எழுகுணம் வேதமு மாய்நிற்கும்
**தானே எழுகுணம் ஆவதும் ஓதிடில்**
தானே எழுந்த மறையவ னாமே. **26**

**923.** மறையவன் ஆக மதித்த பிறவி
மறையவன் ஆக மதித்திடக் காண்பர்
மறையவன் அஞ்செழுத் துள்நிற்கப் பெற்ற
மறையவன் அஞ்செழுத் தாம்அவர் தாமே. **27**

---

*922.* ***தெளிவுரை :-*** *ஆன்மா சீவ நிலையினின்றும் ஏழு மடங்கு உயர்ந்து தண்ணிய சந்திரனைப் போல விளங்கி நிற்றலும், நூலறிவை உடையதாதலும், நல்லியல்பைப் பெறுதலும் தனது எழுத்தை ஓதுவதனாலாம்,* ***தனது எழுத்தாவது ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ள 'ய' என்பதாம்****.*

***குறிப்புரை :-*** *"தான்" நான்கும் ஓதுபவனைக் குறித்தன. குணம் - மடங்கு, ஏழு, மிகுதி குறித்து நின்றது. "தண்சுடராய் நிற்கும்" என்றது வாலிதாய் (தூய்மை பெற்று) நிற்கும் என்றதாம். வேதத்தால் பெறும் அறிவை "வேதம்" என்றார். நல்லியல்பு, சீவத்தன்மை நீங்குதல். மறை - மந்திர எழுத்து. யவன் - யகரத்தை உடையவன். 'தானே யவன் ஆம்' என்க. 'நிற்கும், நிற்கும்' என்று ஓதினாராயினும் பின்னர் வரும் 'ஆவதும்' என்பதனோடு இயைய 'நிற்பதும், நிற்பதும்' என ஓதுதலே கருத்து என்க. 'நிற்பது, ஆவது' என்பன தொழிற் பெயர்கள்.*

*இதனால்,* ***யகாரத்தை ஓதுதலின் பயன்*** *கூறப்பட்டது.*

*923.* ***தெளிவுரை :-*** *மறையவனாக மதித்த பிறவி மறையவனாக மதித்திடக் காண்பர் - சிவமாந்தன்மை பெற வேண்டுமென்று அளிக்கப்பட்ட பிறவியில் பிறரெல்லாம் மதித்திடச் சிவமாந் தன்மை பெறுவர். மறையவன் அஞ்செழுத்துள் நிற்கப்பெற்ற மறையவன் - நாத வடிவாகிய சிவனது அஞ்செழுத்தில் அடங்கியுள்ள நாதவடிவான சீவன். அஞ்செழுத்தாமது வாகும் - அஞ்செழுத்தே சொரூபமாகப் பெறும். மறையவன் - நாத வடிவாகிய சிவன். அஞ்செழுத்து - நமசிவாய. எடுத்த பிறவியிலேயே சிவமாந்தன்மை பெறலாம் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *ஆதிமறையவனாகிய சிவபரம்பொருள், தானாகவே எண்ணிக்கொடுத்த இப்பிறவியை, சிவஞானம் பெற்ற அந்தணனாக எல்லாரும் மதிக்கக் காண்பவர்கள். மறையவனாகிய*

**924.** ஆகின்ற பாதமும் அந்நவ்வாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீஇரு தோள்வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற அச்சுடர் அவ்வியவ் வாமே. **28**

---

*திருவைந்தெழுத்துள் இருக்கப்பெற்ற மந்திர வடிவனாக அஞ்செழுத்து விளங்கும். அந்த அஞ்செழுத்து சிவபரம்பொருளாகிய அதுவேயாகும் என்றவாறு.*

*இறைவன் நாம் செய்த இருவினைக்கு ஈடாகத் தானாகவே எண்ணிப்பார்த்து இப்பிறவியைத் தந்தார். எடுத்த இப்பிறவியிலே நாம், மெய்ஞ்ஞானம் பெற்ற மறையவனாக நடத்தல் வேண்டும். அங்ஙனம் நடப்பவர்கள், திருவைந்தெழுத்தைத் தியானிக்கப்பெற்ற புண்ணிய விசேடத்தால், அஞ்செழுத்து வடிவான மறையவனே ஆவர் என்பது, 'அஞ்செழுத்தாமது மறையவன் ஆகும்' என்று கூட்டுக. அது - பகுதிப்பொருள் விகுதி. திருவைந்தெழுத்து ஓதுவார் சிவமே ஆவர் என்பது கருத்து.*

***924. தெளிவுரை :-*** ***திருவைந்தெழுத்தில் நகாரம் கூத்தப் பெருமானுக்குத் திருவடியாயும், மகாரம் வயிறாயும், சிகாரம் தோள்களாயும், வகாரம் முகமாயும், யகாரம் சென்னியாயும் நிற்கும். ஆகின்ற பாதமும் அந்நவாய் நின்றிடும் - முன் மந்திரத்தில் கூறியவாறு பாதம் அந்நகாரமாய் நிற்கும். ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம் - உந்திச் சக்கரத்துள் மகாரம் அமையும். ஆகின்ற சீயிரு தோள் வவ்வாய்க் கண்டபின் ஆகின்ற வச்சுடர் அவ்வியல்பாம் - வகரம் என்ற***




**மந்திர மேனிச் சக்கரம்**

**925.** அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையும்
செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்
ஒவ்வியல் பாகப் ஒளியுற நோக்கிடின்
பவ்வியல் பாகப் பரந்துநின் றானே. **29**

---

*சத்தியை வாயாகக் கண்டபின் அமைகின்ற அந்தச் சுடர் சிவத்தினது இயல்பாம்.*

*சுடர் - யகரம். அகரம் - சிவம்.*

***குறிப்புரை :-*** *இடகலை பிங்கலை என்ற இருநாடிகளும் கால் பெருவிரலில் தொடர்பு கொண்டு மூன்று பின்னலாகிச் சீவர்களின் சிரசில் முடிவுறுகின்றன. அப்படி உருவாகும்போது உந்தியில் கீழும் மேலுமாக முதற்பின்னல் அமைகிறது. அது நாபிக் கண்டம் - மகாரமாகும். சிசுவுக்கு உலக மாயை உந்தி வழியாகவே தொடர்பு கொள்ளுகிறது.* ***சூக்கும உடலுக்கும் தூல உடலுக்கும் உந்தியே தொடர்பாகும்.*** *அதனால் சூக்கும உடலைக் குறிக்கும் பிரணவத்திற்கு முதலெழுத்தான அகர கலையும் இங்கேதான் உள்ளது. சிரசை அடையும்போது பிரணவம் விந்துநாதங்களாக அமையும். அதுவே ஆன்மாவை உணர்த்தும் யகரத்தின் சொரூபமாகும். பஞ்சாக்கரமே மேனியாதலைக் கூறியவாறு.*

***925. தெளிவுரை :-*** *மந்திரவடிவாகிய இறைவனே வேதமாயும் விளங்குகின்றான் என்பது உணர்த்துதல் நுதலிற்று. அத்தகைய பிரணவம் உள்ளிட்ட சிபஞ்சாக்கரமாகிய ஆறெழுத்தையும் தமக்குத் திருமேனியாகக்கொண்டு செம்மையாகிய இயல்போடு பிரணவத்தின் தன்மையாக ஒளிபொருந்தத் தியானிக்கின்ற அவன் அக்கரங்களாலான பாவின் தன்மையாயும் பரந்து நின்றான் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *அவ்வியல்பாய் என்றது, அகார வாச்சியனான சிவத்தின் இயல்பாய எனவும் பொருள்படும். இரு மூன்றெழுத்து என்பது ஓம் நமசிவாய என்பதாம். செவ்வியல்பாக - செம்மைத் தன்மையோடு சிறந்தனன் - தமக்குச் சொரூபமாகக் கொண்டு விளங்கினன். ஓ இயல்பாக - ஓங்காரத்தின் தன்மையாக. ஒவ்வு இயல்பாக எனக்கொண்டு ஒத்த இயல்பினதாக எனலுமாம். ப இயல்பு - பாவின்தன்மை என்றது. பாவடிவாகிய வேதத்தை; மந்திரமே*

**926.** பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்தரும் மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடு மந்திரம் சூழ்பகை போக
உரந்தரு மந்திரம் ஓம்என் றெழுப்பே **30**

---

*வடிவான மகேசுரனைப் பிரணவ வடிவாக எண்ணின், அவனே வேத வடிவாகவும் விளங்குவன் என்பதாம்.*

***926. தெளிவுரை :-*** *மந்திரம் வகையாலும், விரியாலும், பலவாய்ப் பரந்து கிடப்பது. அதனால், அவை பலதிறத்து எல்லா உயிர்கட்கும் அவை விரும்பிய பயனைத்தரும் தன்மையன ஆதலின், உனக்கு உன் குருவினது அருளால் மந்திரம் கிடைக்குமாயின் அதனைப் பெற்று அதன் துணையால் உன்னைச் சூழ்ந்துள்ள வினையாகிய பகை தொலையும்படி ஓட்டு. ஓட்டுமாறு எங்ஙனம் எனின், அதற்குரிய வலிமையை உனக்குத் தருகின்ற மந்திரத்தை முதற்கண் பிரணவத்தை வைத்து உச்சரி.*

***குறிப்புரை :-*** *பலவாகிய உயிர்களுக்கும் இவ்வாறு மந்திரங்கள் பரவின. மேன்மையைத் தருகின்ற மந்திரங்களாகிய இவற்றைப் பொருந்தப் பெற்று, உன்னை இடைவிடாமல் சூழ்ந்திருக்கின்ற பகைவர்களாகிய பிறப்பிறப்புக்களும் அறியாமையும் கெட்டொழிய, இம்மந்திரங்களை ஏவு; ஞானவன்மையைத் தருகின்ற மந்திரமாகிய ஓம் என்பதை எழுப்பு என்றவாறு.*

*பல்லுயிர் என்றது வினைவிசேடத்தால் பலதரப்பட்ட உடம்புகளை மேற்கொண்ட உயிர்கள் அனைத்தையும், மக்களுக்கன்றி யந்திரத்தால் பயன் யாதோ எனின், **ஏனைய உயிர்களும் மந்திரங்களைத் தாம் கூற முடியாவிட்டாலும் பிறர் கூறக்கேட்டுப் பயன் எய்தியமையைச் சோமான் ஏறிச்சென்ற குதிரை முதலியவற்றிற் காண்க**. வரம் - மேன்மை; நினைத்தவரங்களும் ஆம், வாய்த்திட - தானேவந்து வாய்க்க, மந்திரமும் மந்திரசித்திகளும் தேடி அலைவார்க்குக் கிடைக்கா; திருவருளால்தானே வந்தடையும் தன்மையன.*

*பல திறமாவன, பிறப்பு வகைகள், மூன்றாம் அடியில் உள்ள ‘மந்திரம்’ என்பதை மேலே, “வாய்த்திட” என்பதற்கு முன்னே கூட்டுக. முதல் மூன்றடிகள் சொற்பொருட் பின்வருநிலை. மக்கள் உடம்பில்*

**927.** ஓமென் றெழுப்பித்தம் உத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென் றெழுப்பிஅவ் வாறறி வார்களே
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. **31**

---

*நின்ற உயிர் சில தீவினை காரணமாகக் கீழ்ப்பிறப்பை எடுக்குமாயின், அப்பிறப்பிலே அவை எவ்வகையாலேனும் மந்திரங்களை அறிந்து எண்ணிப் பயன்பெறும் என்பது உண்மை நூல் துணிபாகலின், "பல்லுயிர்க்கெல்லாம் வரந்தரும்" என்றார். அஃறிணை உயிர்கள் பல இறைவனை வழிபட்டுப் பயன்பெற்றமை புராணங்களில் பெரும்பான்மையது. இனி, 'இங்கு உயிர்' என்றது, 'மக்கள் உயிரையே' எனக் கொள்ளினும் கொள்க. 'மந்திரங்கள் மேற்கூறிய ஆற்றலை உடையதாதல் அவற்றை இறைவன் தனக்கு வாயிலாகக் கொள்ளுதலாலே' என்பது மேலை மந்திரத்தால் அறியக் கிடந்தது.*

*இதனால், இறைவன் உயிர்கட்குத் தனது அருளை வழங்குதற்கு வாயிலாக மந்திரங்களை அமைத்துள்ள சிறப்புக் கூறப்பட்டது.*

*927. தெளிவுரை :- மந்திரங்கட்கெல்லாம் தலையானதாகிய சிவமூல மந்திரமாம் திருவைந்தெழுத்தை முதற்கண் பிரணவமும், நகார மகாரங்களும் முற்பட்டு நிற்க ஓதிப் பின்னர், அவ்வைந்தெழுத்தில் நடுவண் விளக்குப்போல எழுச்சிபெற்று விளங்குகின்ற சிகாரம் முதலிய மூன்றெழுத்துக்களையும் அம்ச மந்திரத்தாற் செய்யப்படும் பிராணாயாமத்தால் இதய வெளியில் உள்ள ஒளி விளக்கமுறும்படி செய்து, தியானிக்கப்படும் பொருளை மேற்கூறிய சிகாரம் முதலிய மூன்றெழுத்தின் முறைமையதாகவே அறிந்து நிற்பவர்கள், திருவம் பலத்தை உள்ளவாறு தரிசித்து மகிழ்ந்திருப்பார்கள்.*

*குறிப்புரை :- ''நந்தி'' என்பது ஆகுபெயராய் அவனது மந்திரத்தை உணர்த்திற்று. ''உத்தமம்'' என்பது ஆகுபெயர்ப் பொருளைச் சிறப்பித்து நின்றமையால், "உத்தம நந்தி" என்பது இருபெயரொட்டாகு பெயர். இத்தொடரை முதலில் வைத்து உரைக்க. "நம என்று" என்பது "நாம என்று" எனவும் "அம் என்று" என்பது "ஆம்" எனவும் தொடைக் கேற்ப வேண்டுந் திரிபு பெற்று நின்றன. "நடுவெழு தீபம்" என்பது இரட்டுற மொழிதலாய், சிகாரம்*

**928.** ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும்
ஆகின்ற ஐம்பத் தொருவெழுத் துள்நிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் றானே. **32**

---

*முதலிய மூன்றெழுத்துக்களையும், இருதய ஒளியையும் குறித்து நின்றது. மூன்றெழுத்து நின்ற முறைமை யாவது, உயிர் பாசத்தை விடுத்து அருளைச் சார்ந்த அதுவழியாகச் சிவத்திற்கு அடிமையாதலாம். இவ் எழுத்துக்கள் இருதயத்தில் வைத்து எண்ணவும், புருவ நடுவில் வைத்துத் தியானிக்கவும் படும் என்க. இவை "தத்துவமசி" என்னும் வேதாந்த மகாவாக்கியப் பொருள், ''சிவத்தவமசி'' என்னும் சித்தாந்த மகாவாக்கியப் பொருள் என்பவற்றையும் தந்து நிற்குமாறு அறிந்துகொள்க. 'உண்மைத் திருவம்பலம்' என்றதற்கு "மாமன்று" என்றார். "நாம் என்று" என்பது நமவென்று என்பதன் திரிபு. ஒம் நமசிவாய என்பதை ஓம்சிவாயநம என உச்சரிப்பவர்கள் மன்று கண்டு மகிழ்ந்தவராவர் என்பதாம். இது இதய வெளியும், புருவ நடுவுமாகும்.*

*சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்பலத்தும்என்*
*சிந்தையுள்ளும் உறைவான் - (தி.8 கோவை, 20)*

*எனப் புறத்தும், அகத்தும் விளங்கும் மன்றுகளைக் குறிப்பால் அருளிச் செய்தவாறு அறிக. இதனால், மேல் பலவாய்ப் பரந்து நிற்பவனவாகக் கூறிய மந்திரங்களுள், சிறந்து நிற்பதும் மிகச் சிறந்து நிற்பதும் இவை எனக்கூறி, அவற்றை ஓதுமாறும் அதனால் பெறும் பயனும் கூறப்பட்டன.*

***928. தெளிவுரை :- ஆகின்ற சக்கரத்துள்ளே எழுத்தைந்தும் - முன்னே கூறிய திருவம்பலச் சக்கரத்துள்ளே அஞ்செழுத்தும், பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும் - அழகு பொருந்தி நின்ற ஐந்து இடங்களில் விளங்கும், ஆகின்ற ஐம்பத்தோரெழுத்துள் நிற்க - உயிரும் மெய்யுமாக உள்ள ஐம்பத்தோர் எழுத்துகளும் அவற்றுள் நிற்க, பாகொன்றி நிற்கும் பராபரன் தான் - மேலான சிவனும் அழகு பொருந்தி விளங்குவான்.***

***குறிப்புரை :-*** *பாகு - அழகு. பதம் - இடம். வர்த்தித்தல் -*

## பேரம்பலச் சக்கரம் - சிறப்பு முறை



**929.** பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமா யநவசிம பார்க்கில் மவயநசி
பரமா யசியநம வாபரத் தோதில்
பரமாய வாசி மயநவாய் நின்றதே. **33**

---

*விளங்குதல். ஐம்பத்தோரெழுத்து உள் நிற்றலாவது, உயிர் வருக்கம் பதினான்கு கண்டத்திலும், ஏனைய எழுத்துகள் அநாகதத்தில் பன்னிரண்டும், மணிபூரகத்தில் பத்தும், சுவாதிட்டானத்தில் ஆறும், மூலாதாரத்தில் நான்கும், ஆஞ்ஞையில் இரண்டும் ஆக ஐம்பதும் ஆறு ஆதாரங்களில் விளங்கி நிற்றல்.*

*திருவம்பலச் சக்கரத்துள் பராபரன் அழகுடன் விளங்குவான் என்பதாம்.*

*929. **தெளிவுரை :-** திருவைந்தெழுத்து மேற்கூறியவாறு ஐம்பத்தோரெழுத்துக்களின் இடை நிற்குங்கால் நெடுக்காயினும் குறுக்காயினும் நடுவரிசையுள்ளே நிற்கும். ஆகவே, அதன்பொருட்டு ஏனைய இடங்களில் எழுத்துக்கள் நடுவரிசைக்கு மேல்வரிசையில் (2) 'ய ந வா சி ம' என்றும், அதற்கு மேல் வரிசையில் (3) 'ம வா ய ந சி' என்றும், அடிவரிசையில் (4) 'சி ய ந ம வா' என்றும் அதற்கு மேல் வரிசையில் (5) 'வா சி ம ய ந' என்றும், மாறி நிற்பனவாம்.*

*குறிப்புரை :- அஃது ஆமாறு :*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3 | ம | வா | ய | ந | சி |
| 2 | ய | ந | வா | சி | ம |
| 1 | ந | ம | சி | வா | ய |
| 5 | வா | சி | ம | ய | ந |
| 4 | சி | ய | ந | ம | வா |

*இதனால், நடுவரிசையை இடமிருந்து வலமாகவும், கீழிருந்து மேலாகவும் ஓதத் திருவைந்தெழுத்து நகாரம் முதலாக அமைதலும், சிகாரங்கள் முக்கோணக் கூட்டிரேகையில் முழுதும் நின்று சிகாரம் முதலாக ஏற்ற பெற்றியால் ஓதிக்கொள்ளுமாறு அமைதலும் காண்க.*



**யகார மையச் சக்கரம்**

*என்றும் நின்று நிலவும் 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தாலேயே ஐம்பூதங்களும் நிகழ்வன. அந்த ஐம்பூதங்களுக்குரிய ஐந்து நிறங்களும் அவ்வைந்தெழுத்தாலேயே விளங்குவன. இவ்வைந்தெழுத்துக்களும் முதன்மை பெற நின்ற இடத்து அவ்வெழுத்துக்களின் உள்ளீடாய் நின்று செலுத்துபவன் சிவபெருமான். அந்தச் சிவபெருமானின் திருமந்திரமாம் 'சிவாயநம' என்னும் முதன்மை வாய்ந்த திருமந்திரத்துள் நடுவாய் விளங்குவது யகரமாகும்.*

*இவ்வெழுத்தானது, யநமசிவ, மவயநசி, சியநமவ, வசியநம என நான்காகக் கணிக்கப்படும். இவ்விதம் எழுத்துக்களை நிலைமாறிக் கணித்தல் பொருளுண்மை நன்கு பலனாய்ப் பதிதற்கேயாம் என்று யகாரமைய சக்கரம் அமைத்தற்கு அமைதி கூறுகின்றார் திருமூலர்.*

*இறைவனின் உடுக்கை வடிவில் யகாரத்தை மையமாக வைத்து இருபத்தைந்தறைச் சக்கரத்தை 'சிவாயநம' என்று எழுத்துக்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு நடுவாகப் பாவித்து மத்தியில் யகரம் அமைந்த யகாரமையச் சக்கரத்தை இங்கு அறிமுகப்படுத்துகின்றார்.*

*குறுக்கு நெடுக்குப் பாதைகளை நாற்புறமும் அமைத்து அதில் நாற்பத்தெட்டாம் எழுத்தாகிய 'ஸ' என்பதின்மேல் ஆறாம் எழுத்தாகிய ஊ காரத்தையும் பதினாலாம் எழுத்தாகிய ஔகாரத்தையும் ஏறிட்டு அதன் மேல் விந்துவாகிய (0) அநுஸ்வரத்தையும் நாதமாகிய (:) விசர்க்கத்தையும் கூட்டிச் சீறவிட்டு, நிலைபெற்று சிவாயநம என்று செபிக்க மும்மலங்களும் பிளந்து கூவிக்கொண்டு ஓடும் என்று இச்சக்கரத்தின் பாதை எழுத்துக்களை விவரிக்கின்றது திருமந்திரம்.*

*மேலும், இறைவன் எழுந்தருளியிருப்பது சக்தி பீசமாகிய ஹ்ரீம் என்பதனுள். பெண்ணினல்லாளாகிய எம்பிராட்டி எழுந்தருளி யிருப்பது சிவ பீசமாகிய 'சௌ' என்பதனுள். இவ்விதம் சக்கரத்துள் ஒருவருள் ஒருவர் பொருந்தியிருக்கும் வகையையும் கூறி, இவ்வைந்து சக்கரங்களையும் நன்னான்கு சூலங்களால் இணைத்து இரண்டு வெளிவட்டக் கோடுகளிலிருந்து இறைவனை அடைய இராஜ கோபுரங்களையும் அமைக்கின்றார்.*

*இந்த யகரார மையச் சக்கரத்தைச் சற்று உற்று நோக்குவோமானால் ஒரு சிவாலயத் தோற்றத்தினை நினைவூட்டும் உள் பிரகாரங்களும் வெளிபிரகாரங்களுமாக அமைந்த மிகப் பெரிய சிவாலயத் தோற்றமாக வடிவமைக்கப்பட்டுள்ளது நன்கு புலனாகும்.*

***930. தெளிவுரை :-** மேலை மந்திரத்திற் சொல்லப்பட்டவாறு பொறிக்கப்பட்டபின் செங்குத்தாய் நின்ற வரிசையில் முதல் வரிசையிலுள்ள எழுத்துக்களை மேல்நின்று நோக்கினால், 'ம ய ந வா சி' என வரும். அவை முறையே, 'நிலம், நீர், தீ, வளி, வான்' என்னும் பூதங்களாய் நிற்கும். ஆதலால், அவற்றை முதலாகக் கொண்டு வலம் நோக்கிச் செல்லும் தொடராகிய மந்திரங்களும் அப்பூதங்களும் ஆதலையுடையவாம். அதனால், அவ்வெழுத்துக்களும், தொடர்களும் அப்பூதங்கட்கு உரிய 'பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, புகைமை' என்னும் நிறங்களாயும் நிற்பனவாம். அவை இவ்வாறு நிற்றலால், அவைஅடங்கி நின்ற சக்கரத்தைக் கூத்தப்பெருமான் தனக்கு இடமாகக் கொண்டு விளங்குகின்றான்.*

**930.** நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தரு வண்ணமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தர நின்றிடில்
நின்ற எழுத்துள்ளும் நின்றனன் தானே. **34**

**931.** நின்றது சக்கரம் நீளும் புவியெல்லாம்
மன்றது வாநின்ற மாயநன் னாடனைக்
கன்றது வாகக் கறந்தனன் நந்தியும்
குன்றிடை நின்றிடுங் கொள்கையன் ஆமே. **35**

---

***குறிப்புரை :- நின்ற எழுத்துகள் நேர்தரு பூதமும் - பஞ்சாக்கரமாய் நின்ற எழுத்துகளே பூதங்களை இயக்குவனவாம், நின்ற எழுத்துகள் நேர்தரு வண்ணமும் - அங்கு அமைந்துள்ள எழுத்துகள் பஞ்சாக்கரத்தின் சொரூபத்தை உணர்த்துவன. நின்ற எழுத்துகள் நேர்தர நின்றிடில் நின்று எழுத்துள்ளும் நின்றனன் தான் - சக்கரத்திலுள்ள எழுத்துகள் முறையாக நின்றால் பஞ்சாக்கர சொரூபமான சிவமும் அவைகளில் சிறந்து விளங்குவான்.***

| **ஐம்பூதம்** | **ஐந்தெழுத்து** | **வண்ணம்** | **உடலில் தியானிக்கும்** இடங்கள் | **சக்திகளின்** குறியீடு |
|---|---|---|---|---|
| நிலம் | ந | பொன்மை | மூலாதாரம் | ஆ |
| நீர் | ம | வெண்மை | தொப்பூள் | ஈ |
| தீ | சி | செம்மை | இருதயம் | ஊ |
| காற்று | வ | கருமை | கழுத்து | ஏ |
| ஆகாயம் | ய | புகைமை | புருவநடு | ஒ |

*நகாரம் பிருதிவியையும், மகாரம் அப்புவையும், சிகாரம் அக்கினியையும், வகாரம் வாயுவையும், யகாரம் ஆகாயத்தையும் தூண்டி நடத்தும். பஞ்சாக்கரமே வடிவமாகக் கொண்டு சிவன் விளங்குவான் என்பதாம். நால்வர்பெருமக்கள் இந்த எழுத்துக்களை நற்செயல்கள் புரிவதற்கான ஆயுதங்களாகப் பயன்படுத்திப் பஞ்ச பூதங்களை இயக்கி அ) செத்தவர்களை எழுப்புதல் ஆ) மழை பெறச் செய்தல் இ) பூட்டிய கதவைச் சாவியின்றி திறத்தல் போன்ற செயற்கரிய செயல்களைச் செய்தார்கள்.*

*931. தெளிவுரை :- மேற்கூறிய பேரம்பலச் சக்கரம் மேலை மந்திரத்தில் கூறியவாறு அமைந்த பெருமையுடையது ஆகலின்,*

*அதன்கண் எல்லா உலகங்களும் அடங்குவனவாம். அதனால், அந்தச் சக்கரத்தையே திருவம்பலமாகக் கொண்டு விளங்கும், சிதாகாய வெளியனாகிய சிவபெருமானாகிய பசுவை, அந்தச் சக்கரத்தையே கன்றாகக் கொண்டு, அவனது திருவருளாகிய பாலைத்தருமாறு எம் ஆசிரியர் நந்தி பெருமான் கறந்து கொண்டார். அதன் பயனாகக் குன்றின் உச்சியில் ஏறி நின்றவர் போன்ற உயர்வை அவர் பெற்றவரானார்.*

***குறிப்புரை :-*** ***<u>திருவைந்தெழுத்தை ஓதியே அருள்நந்தி அகம்படிமைத் தொழில் பூண்டான் என்பது உணர்த்துதல் நுதலிற்று</u>.*** ***எங்கும் பரவியுள்ள பூமியெல்லாவற்றிலும், யந்திரம் நிலை பெற்றிருந்தது. அதனைத் தாம் விளங்கும் மன்றமாகக் கொண்டு எழுந்தருளியிருந்த இறைவனை நந்தியெம்பெருமான், கன்றாக மறைந்திருந்து பயன்கொண்டு திருக்கயிலை மலையில் காவற்றலைமை பூணும் கொள்கையனானான் என்றவாறு.***

***<u>புவியெங்கும் வியாபித்த சக்கரத்தையே தமது நிலைக்களனாகக் கொண்டு நின்ற இறைவனை ஆவின் கன்றாகத் தனது உருமறைந்த நந்தியெம்பெருமான் தியானித்துக் கயிலையங்கிரி காவற்றலைமை பூண்டான் என்பது கருத்து</u>. மாயநன்னாடன் - மாயாகாரியமான நல்ல நாட்டின் தலைவனும் நடத்துவோனும் ஆவான். கன்றதுவாகக் கறத்தலாவது ஆவின்பயனை முழுதும் கொள்ளும் கன்றுபோல, சீகண்டசிவத்தின் அருட்பயனை முழுதும் கொள்ளுதல், கறத்தல் - தன்னுட் கொள்ளுதல். குன்று - கயிலை.***

***சக்கர அமைப்பில் காட்டப்பட்ட பொருளுக்கு ஏற்ப, உலகம் எல்லாம் அதாவது ஐம்பூதங்களும் தம் உடம்பில் மன்றங்களாகக் கொண்டு விளங்கும் ஆன்மாவை, மாயாகாரியமான உடம்பில் வாழ்பவனை, அவனிடம் ஏற்கனவே 'உடனான' நிலையில் மறைந்து விளங்குபவனாகிய சிவன், தனது பிள்ளையாகக் (தான் பசுவாகவும் ஆன்மா கன்றாகவும்) கொண்டு, அவ்வான்மப் பிள்ளை வளர, அவனது தலையாகிய மலையில் நின்று, ஒளிக்காட்சி வழங்கி, அமுது ஊட்டுவான். இதுகாறும் மறைந்து நின்றவன் இப்பொழுது மலை மீது நிற்பான் என ஒரு நயம் தோன்றுவதைக் காண்க. ஈற்றடி, நந்தி பெருமான் கயிலையைக் காக்கும் அதிகாரம் பெற்று நின்றதையும் உட்கிடையாகக் கொண்டது. நந்தி பெருமான் பயன்பெற்றவாற்றைக் கூறி, 'பிறரையும் அவ்வாறு பெறுக' என அருளிச் செய்தவாறு.***

**932.** **கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல**
**கொண்டஇச் சக்கரத் துள்ளே குறிஐந்து**
**கொண்டஇச் சக்கரம் கூத்தன் எழுத்தைந்தும்**
**கொண்டஇச் சக்கரத் துள்நின்ற கூத்தே.** **36**

---

*இதனால், மேற்கூறிய சக்கரம் பயன்தருதற்கு அனுபவம் காட்டப்பட்டது.*

*932. **தெளிவுரை :-** கூத்தப்பெருமானது பஞ்சாக்கர பேதங்கள் அனைத்தும் இச்சக்கரத்தை இடமாகக் கொண்டன. அதனால், இதன்கண் அமைந்த நலங்கள் இன்னும்பல. அவை அத்திருவைந் தெழுத்தால் குறிக்கப்படும். சிவன், அருள், ஆன்மா, திரோதாயி ஆணவம்' என்பனவும், அவற்றுள் சிவன் ஆன்மாக்களின் பொருட்டுச் செய்யும் அளவிறந்த கூத்துக்களும் பிறவுமாம்.*

***குறிப்புரை :-*** *கூத்து, 'ஞான நடனம், ஊன நடனம்' என இருவகைப்பட்டு, அவை ஒவ்வொன்றும் ஐவைந்தாதலேயன்றி, 'தூல நடனம், சூக்கும நடனம், பர நடனம்' என்று ஆதலும், அனைத்து நடனங்களும் சிறப்புவகையால் தத்துவந்தோறும், ஆன்மாக்கள் தோறும் வேறு வேறாதலும் ஆகிய பலவும் அடங்கப் பொதுமையில் "கூத்து" என்றார்.*

| எழுத்தைந்து | அதிதெய்வம் | தியான இடம் | குறிப்பன | நடனங்கள் |
|---|---|---|---|---|
| ந | பிரம்மா | மூலாதாரம் | திரோதாயி | தூல நடனம் |
| ம | விட்டுணு | தொப்பூள் | ஆணவம் | ஊன நடனம் |
| சி | உருத்திரன் | இருதயம் | சிவன் | ஞான நடனம் |
| வ | மகேசுவரன் | கழுத்து | அருள் | பர நடனம் |
| ய | சதாசிவன் | புருவநடு | உயிர் | சூக்கும நடனம் |

*இருபத்தைந்து அறைகொண்ட இச் சக்கரத்துள்ளே, எல்லாம் பொருந்தியிருக்கின்றன என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

| வ | ய | ந | ம | சி |
|---|---|---|---|---|
| ய | ந | ம | சி | வ |
| ந | ம | சி | வ | ய |
| ம | சி | வ | ய | ந |
| சி | வ | ய | ந | ம |

**933.** வெளியில் இரேகை இரேகையில் அத்தலைச்
சுளியில் உகாரமாம் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதம்
தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே. **37**

---

*கொண்ட இச்சக்கரத்துள்ளே விளையும் நன்மைகள் பலவாம். ஐவகைத் திருமேனிகளும் ஐந்து எழுத்துக்களும், இறைவனுடைய நடனங்களும் அடங்கியுள்ளன என்றவாறு.*

*குறி ஐந்தென்றது, குறித்துணர்வதற்கு வாய்ப்பான சிவம், சத்தி, நாதம், பிந்து, சதாசிவம், மகேச்சுரம் என்பனவற்றை அன்றி, ஈசானாதி பஞ்சப் பிரமசொரூபம் என்றும், பிரமா விஷ்ணு ருத்திரன் மயேச்சுரன் சதாசிவன் என்றும், மூலாதாரத்தைத் தவிர்த்த ஆதாரச்சக்கரங்கள் ஐந்து என்றும் உரைத்தலும் உண்டு. கூத்தன் எழுத்து ஐந்து. திருவைந்தெழுத்துமே கூத்தன் திருமேனியாதலின் இங்ஙனம் கூறப்பெற்றது.*

***933. தெளிவுரை :-** வெறுவெளியாய் யாதும் எழுதப் படாத பரப்பு ஒன்றில் ஒரு நேர்க்கோடு இழுத்து, அக்கோட்டின் தலையில் ஒரு சுழியை இட்டால் அஃது உகாரவடிவாய்த் தோன்றும். அதில் 'கொம்பு' எனப்படுகின்ற சுழியும், நேர்க்கோடும் முறையே விந்துவிற்கும், நாதத்திற்கும் உரிய வரிவடிவமாகும். இனி அவையே 'தீ, காற்று' என்னும் பூதத்திற்கு உரிய குறிகளாயும் நிற்கும். இவற்றை இவ்வாறு தெளிவதே சிவ மந்திரத்தை உணர்தலாகும்.*

***குறிப்புரை :-** இதில் சொல்லப்பட்ட வடிவம் - "ഉ" - என்பது. இதனைப் 'பிள்ளையார் சுழி' என்பர். இதனைச் சுழி கீழாக ஆக்கினால் " " - இவ்வாறாம். இதனையே ஏழாந் தந்திரத்துள் 'ஆன்மலிங்கம்' என்னும் அதிகாரத்தில்,*

> *"விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம்;*
> *விந்துவதே பீடம்; நாதம் இலிங்கமாம்" - தி.10 பா. 1734*

*எனக் கூறுவார். பூதங்களுள் தேயு (தீ) இலிங்கவடிவாய் நிற்றலாலும், அது கீழே சுழித்துக் கொண்டு மேலே கொழுந்துவிட்டு ஓங்குவது ஆதலாலும் சுழியை, 'தீ' என்றும், செங்குத்து நேர்க்கோட்டினை, 'காற்று' என்றும் கூறினார். தீ கொழுந்து விட்டு எரிதல் காற்றினால்*

**934.** அகார உகார சிகாரம் நடுவா
வகாரமொ டாறும் வளியுடன் கூடிச்
சிகார முடனே சிவஞ்சிந்தை செய்ய
ஓகார முதல்வன் உவந்துநின் றானே. **38**

---

*என்பது வெளிப்படை, விந்து சத்தியும், நாதம் சிவமும் ஆதலின், இச்சுழியை இவ்வாறு தெளியும் உணர்வே சிகார வகாரங்கள் கூடிய சிவமந்திரத்தைத் தெளிதலாய் முடியும் என்றார் என்க. எனவே, 'மேற்கூறிய சக்கரங்களை யாதானும் ஒரு பரப்பில் பொறிப்பதற்கு முன்னே. மேலிடத்தில் இச்சுழியைப் பொறிக்க' என்பது குறிப்பு ஆயிற்று, 'சுழி' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. சுளியில் - சுழித்தால் - 'வெளியில் இரேகை உளதாக, இரேகையில் அத்தலைச் சுளியில்' என்க. அத்தலை - அதன் தலை. சுற்றிய - சுழித்தெழுந்த "கொம்பு, நேர்" என்பன, "வன்னி, நேர்" என்பவற்றுடன், எதிர் நிரல் நிறையாயும் "விந்து, நாதம்" என்பவற்றுடன் முறை நிரல்நிறையாயும் இயையும். நெளிதரல் - நில்லாது இயங்குதல். பிரகாரம் - வகை. இதில் "பிரகாரம்" என்ற வடசொல்லின் இகரம் அலகு பெறாது நின்றது. சூலக்குறியிட்ட சக்கரம் ஓங்காரத்துடன் சேர்க்கவும்.*

*ஓங்காரம் உச்சரிக்கப்படுவதாய் நாதத்தை உணர்த்தி, மந்திரங்கட் கெல்லா முன்னிற்கும். 'நாதம்' என்பதனானே அதனை, 'ஊமை யெழுத்து' என்பர். எனினும், இங்குக் கூறிய இவ்வடிவம் யாதோர் உச்சரிப்பையும் உடையதாகாமையால், உண்மை ஊமை எழுத்தாய்; விந்து நாதங்களாய் நிற்கும். அதனானே, எவற்றையேனும் வரிவடிவு எழுத்தால் எழுதத் தொடங்குமுன் முதலில் இவ்வடிவினை எழுதுதல் மரபாயிற்று. 'அம்மரபினை இங்குக் கூறிய சக்கரங்கட்கும் கொள்க' என்பது இதனால் உணர்த்தினார். எனவே, இம்மந்திரம் மேற்கூறிய சக்கரங்களைப் புறத்தில் புலப்பட அமைக்கும்பொழுது முதற்கண் செயற்பாலது ஒரு மரபுச் செயலினைக் கூறியதாயிற்று.*

*934. தெளிவுரை :- அகார உகார சிகார நடுவாய் - இரு கண்களுக்கு இடையே புருவ மத்தியத் தானத்தில், வகாரமோடாறும் வளியுடன் கூடி - மூலாதாரத்தில் விளங்கும் குண்டலினி சத்தியை மூல வாயுவினால் பேதித்து ஆறாதாரங்களைக் கடந்து, சிகாரமுடனே சிவன் சிந்தை செய்ய - சிவாக்கினியில் விளங்குபவனைத் தியானம் செய்ய, ஓகார முதல்வன் உவந்து நின்றான் - பிரணவத்தலைவரான சதாசிவன் மிக விரும்பி அங்கு எழுந்தருளியிருந்தான்.*

**935.** அற்ற இடத்தே அகாரம தாவது
உற்ற இடத்தே உறுபொருள் கண்டிடச்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்
குற்றம் அறுத்தபொன் போலும் குளிகையே. **39**

---

***குறிப்புரை :-*** *அகாரம் - இடக்கண், சந்திராக்கினி. உகாரம் - வலக்கண், சூரியாக்கினி. சிகாரம் - இரு கண்களுக்கு மத்தியில் விளங்கும் சிவாக்கினி. இரு கண் பார்வையையும் சேர்த்தலால் சிகாரமாகிய ஒளி அமையும் என்க. வகாரம் - குண்டலினி சத்தி. ஆறு - ஆறாதாரம். வளி - மூல வாயு. மூலபந்தம், வச்சிராசனம், கூர்மாசனம் முதலிய ஆசனங்களால் இரு பிருஷ்டங்களும் நெருக்கப்படுவதில் மூலவாயு சிரசை அடையும் என்க.*

***935. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு அகாரம் முதலியவற்றால் ஆயாமம் (தடுத்தல்) செய்யப்பட்ட பிராண வாயு நிராதாரமாகிய உச்சியை அடைந்தபொழுது, அடைதற்குரிய பொருளாகிய சிவனைக் காணலாம். அப்பொழுது முன்பெல்லாம் மறக்கருணை உடையனாய் இருந்த சிவன் அந்நிலை நீங்கி அறக்கருணை உடையனாய், வளவிய ஒளியாயும், உண்மையாயும் நின்று, செம்பைக் களிம்பு நீக்கிப் பொன்னாகச் செய்யும் குளிகைத் தன்மையைப் பொருந்தி நிற்பன்.*

***குறிப்புரை :-*** *ஆறு ஆதாரங்களும் கடந்த இடத்தே, அகாரப் பொருளாகிய சிவம் விளங்குவது; அந்த இடத்தே பொருந்தி தானேவந்தெய்தும் பொருளைக்காண. அது குற்றத்தில் பொருந்தாத செழுஞ்சுடராய் மெய்ப்பொருளாய்த் தோன்றும். அதுவே ஆன்மாக்களுக்கு அநாதியே பொருந்திய குற்றமாகிய ஆணவமலக் களிம்பை நீக்கிப் பொன்போற்செய்யுங் குளிகையாம் என்றவாறு.*

*அற்ற இடம் - இடமற்ற இடமாகிய துவாதசாந்தம். மூலம் முதல் ஆக்ஞை வரையில் உள்ள இடம் ஆதாரம். அது உடம்பினுள் உற்ற ஒவ்வொரு இடமாதலின், அதனைக் கடந்த துவாதசாந்தப் பெருவெளியை அற்றவிடம் என்றருளியது அகாரமது ஆவது; 'யாரு மறிவர் அகரம் அவன்என்று' ஆதலின், அகாரத்தின் பொருளாகிய சிவம் விளங்குவதாம். அது; பகுதிப் பொருள் விகுதி. ஆவது - விளங்குவது. உற்றவ்விடத்தே எனற்பாலது எதுகை நோக்கித் தொகுத்தல் விகாரம் பெற்றது. 'அவ்விடத்தே உற்று' என மாறி அந்தத் துவாதசாந்தப் பெருவெளியில் பொருந்தி எனப்பொருள்கொள்க.*

**936.** அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்
உவ்வென்ற முத்தி உருகிக் கலந்திடும்
மவ்வென்றென் னுள்ளே வழிபட்ட நந்தியை
<u>எவ்வண்ணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே.</u> **40**

---

*உறுபொருள் - தியானிப்பவர்க்கு வந்து உறுவதாகிய சிவபரம்பொருள். சிற்றறிவினராகிய ஆன்மாக்களுக்குக் கற்பனை யாலும் அடையமுடியாமல் கருணையால் தானேவந்து உறும் பொருளாதலின் உறுதலைப் பொருளின் வினையாக்கி உணர வைத்தார்.*

*கண்டிட - அறிய. செற்றம் மறுத்த செழுஞ்சுடர். இருளாகிய குற்றத்தைப் பொருந்தாதே மறுத்த செழுஞ்சுடராகிய மெய்ப்பொருள் எனக் கூட்டுக. ஞான ஒளியாகிய பரசிவம் ஆணவாதி மலங்களைப் பொருந்தாது என்பதை விளக்கியவாறு. செற்றம் அறுத்த எனப் பிரிக்கின், செற்றத்தை ஆன்மாக்களுடையதாக உணர்க. பின்னர்க் 'குற்றமறுத்த' என வருதலின், இப்பொருள் கூறியது கூறலாம். தகுதி அறிந்துகொள்க.*

*துவாதசாந்தப் பெருவெளியில் பரசிவம் கோடி சூரியப் பிரகாசத்தோடு விளங்குபவர் என்ற பொருள்பட "சூர்யகோடி சமப்பிரபம்" என்று சிவாகமங்கள் தெரிவிக்கின்றன. ஆகையால், இங்ஙனம் அருளினர்.*

*குற்றமறுத்த பொன் : பொன்னுக்குள்ள குற்றம், புறச்சாதனங்கள் நீக்கினும் நீங்காத அநாதியே உள்ள களிம்பு, அதனைப் போக்கிய குளிகைபோல்வது மெய்ப்பொருள் என்ற உவமையால் ஆன்மாக்களை அநாதியே பற்றி நின்று, அறியாமையை விளைவிக்கும். ஆணவ மலக் களிம்பை அறுத்துச் சொக்கத் தங்கமாய் ஆக்கியருளுவது பரசிவம் என உவமையடையால் பொருளடை புலப்படுத்தியவாறு. மெய்ப்பொருள் பொன்னுக்குக் குளிகைபோல்வது என விரித்துப் பொருள் காண்க.*

*936. தெளிவுரை :- அகாரத்தை உச்சரித்த உடனே உகாரத்தை உச்சரித்தால், மேலிடத்ததாக அறியப்படுகின்ற வீட்டின்பம் பொங்கி வழிந்து உயிரின்கண் கலக்கும். அந்த இரண்டெழுத்தையும் மகாரத்துடன் சேர்த்து உச்சரித்து என் உடலகத்தே நான் சிவனை வழிபட்ட செயலால் விளைந்த அவனது இன்பத்தை நான் எவ்வாறு பிறர்க்குச் சொல்லுவேன்! அவ்வின்பம் அத்தகையதாய் இருந்தது.*

**937.** நீரில் எழுத்திவ் வுலகர் அறிவது
வானில் எழுத்தொன்று கண்டறி வாரில்லை
யாரிவ் வெழுத்தை அறிவார் அவர்களே
ஊனில் எழுத்தை உணர்கிலர் தாமே. **41**

---

***குறிப்புரை :-*** *அ என்ற போதினில் உ எழுத்து ஆலித்தால் - அகார உகாரங்களை இயைத்து உச்சரித்தால்.*

*உ என்ற முத்தி - உகாரமாகிய முத்தி. முத்தி கருணையாதலின், கருணை திருவருட்சத்தியாதலின், அதுவே கரைந்து உருகி ஒன்றாகும். அகரமாகிய சிவம் ஆதாரமாய், உகரமாகிய கருணை ஆதேயமாய், இரண்டுங்கலந்து ஓ என்றாகி அந்தக்கரணமாகிய மனத்துட் படுங் காலத்து, மாயையாகிற மலத்தொடு பொருந்தி ஓம் என்று தியானித்து வழிபாடுசெய்ய வெளிப்பட்ட சிவத்தை எங்ஙனம் சொல்லுவேன் என்று வியந்தவாறு. ஓம் என்று ஒன்றாக்கிக்கூறாது இங்ஙனம் பிரித்துக் கூறியது சொற்பொருள் விரித்தல் என்னும் உத்தி. இதனாற்பயன், சிவமும் சத்தியும் மாயையும் இயையப் பரவெளியுள் பிரணவம் தோன்றுகிறது; அதனைத் தியானிக்கச் சிவம் வெளிப்படும் என்பதாம். வழிப்பட்ட என்றும் பாடம்.*

*இதனால், மேற்கூறிய பிரணவயோக செபம் வீட்டின்பத்தைத் தருதல் கூறப்பட்டது.*

***937. தெளிவுரை :-*** *இவ்வுலகத்தில் உள்ள பலரும் அறிதல் நீர்மேல் எழுத்துப் போலும் அழியும் எழுத்துக்களையேயாம். மேலை வெளியில் அழியாத எழுத்து ஒன்று உள்ளது. அதனை அறிபவர் ஒருவரும் இல்லை. அதனை அறிபவர் எவரோ அவரே உடம்பில் நின்று அறியும் நிலையில்லாத எழுத்தை அறியாதவர் ஆவர்.*

***குறிப்புரை :-*** *எனின், பிரணவத் தியானமுடையார்க்குப் பிறப்பில்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று. இந்த உலகில் பொருந்திய அறிவாகிய அது நீரில் எழுதிய எழுத்துப்போல நிலையற்ற எழுத்தாம். பரநாதவெளியில் தோன்றுகின்ற எழுத்தொன்று உண்டு. அதனைத் தியானித்து அறிபவர்கள் யாருமில்லையாம். இவ்வெழுத்தை அறிபவர்கள் யாரோ, அவரே, பிரமனால் தலையில் எழுதப்படும் 'பிரமலிபி'யை உணராதவர்களாவார்கள்; என்றது பிறப்பில்லை என்றபடி என்றவாறு.*

**938.** காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்
மாலை நடுவுற ஐம்பதும் ஆவன
மேலை நடுவுற வேதம் விளம்பிய
மூலன் நடுவுற முத்திதந் தானே. **42**

---

*உலகாரறிவது; உலகு ஆர் அறிவு அது - இவ்வுலகத்தில் பொருந்திய அறிவாகிய அது; என்றது பாசஞானத்தை; அது நீரிலெழுத்து என்றது, நிலையற்றது என்பதாம். பாசஞானம் நிலையற்றதாய், அறிதோறறியாமையைப் பயப்பது. பதிஞானமோ, இறைவன் அறிவித்தாங்கறிந்து அறிவாயமர்ந்திருப்பது. இதனானே நிலையற்ற பாசஞானத்தை நீர்மேல் எழுத்து என்று அருளியது.*

*வான் - சிதாகாயம், வானிலெழுத்தென்றது, பிரணவத்தை; சமட்டிநிலையில் பிரணவத்தை ஒன்றாக எண்ணுக என்பார், 'எழுத்தொன்று' என்றார் ஒலியுலகுக்கெல்லாம் வித்து பிரணவ மாதலானும், அதனைக் காண்பார் அறியராகலானும், 'கண்டறிவார் இல்லை' என்றார்.*

*ஊனிலெழுத்து - ஊன் ஆகுபெயர். உடம்பு என்றது ஈண்டு சிரத்தை உணர்த்திற்று. அதில் எழுதிய எழுத்து பிரமலிபி என அறிக. பிரணவத்தியானம் உடையாருக்குப் பிறப்பில்லையாகலின் ஊனெழுத்தை உணர்கிலர்.*

*938. தெளிவுரை :- பிராண வாயுவை உடம்பில் நடு நாடியாகிய சுழுமுனையில் பொருந்தும்படி செலுத்தினால், அந்நாடியில் நிற்கின்ற ஆதார மலர்களில் ஐம்பத்தோர் எழுத்துக்களும் முறையானே விளங்கி நிற்கும். அவ்வாறு நின்றவிடத்து முதற்காலத்திலே யாவர்க்கும் பொதுவாக வேதத்தை அருளிச்செய்த முதற்பொருளாகிய சிவன் தன் அடியார் நடுவில் இருக்கும் வீடுபேற்றைத் தருதல் திண்ணம்.*

*குறிப்புரை :- காலை நடுவுறக் காயத்தில் அக்கரம் - சுழுமுனையில் விளங்கும் சிவன் இடகலை பிங்கலையாக உடலில் ஐம்பது அக்கரமாய விரிந்தான். மாலை நடுவுற ஐம்பது மாவன - உயிர் மயக்கமுற்றுச் சூரிய சந்திரனைப் பற்றிய போது அவ்வைம்பதும் விளங்கி நின்றன. மேலை நடுவுற வேதம் விளம்பிய மூலம் நடுவுற முத்தி தந்தான் - சிரசின்மேல் விளங்கும், சிவன் வேதத்தால் புகழ்ந்து கூறப்பட்ட பிரணவத்தை எழுப்பிச் சகஸ்ரதள நடுவில் நிறுத்தினவர்க்கு முத்தியை அளித்தான்.*

**939.** நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று
பாவிகள் அத்தின் பயனறி வாரில்லை
ஓவிய ராலும் அறியஒண் ணாதது
தேவியும் தானும் திகழ்ந்திருந் தானே. **43**

**940.** அவ்வொடு சவ்வென் றரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே. **44**

---

*பிரணவமாகிய ஒன்றே ஐம்பது அக்கரங்களாக ஆறு ஆதாரங்களிலும் விரிந்து விளங்கியது. சிரசின் நடுவில் பிரணவத்தை அமைத்தபோது ஐம்பது அக்கரங்களும் இல்லாதொழிந்தன என்க. கால் - சுழுமுனை. மால் - மயக்கம்.*

*பிரணவத்தை எழுப்பிச் சகஸ்ரதள நடுவில் நிறுத்தினவர்க்கு முத்தி கிட்டும் என்பதாம்.*

*939. **தெளிவுரை :-** உந்தியின் கீழ் மூலாதாரத்தில் சிறப்புடைய ஓர் எழுத்து உள்ளது. அதன்மேலேதான் சிவன் தானும், தன் துணைவி யுமாக எழுந்தருளியிருக்கின்றான். அதனைத் துறவுபூண்ட முனிவராலும் அறிதல் இயலாது. எனவே, துறவுள்ளம் தோன்ற ஒட்டாது மயக்கி நிற்கின்ற வினைக்கட்டில் அகப்பட்டுள்ளவர் அறிய மாட்டாதவராதல் சொல்லவேண்டுமோ!*

*குறிப்புரை :- "ஓர் எழுத்து" என்றது, ஓங்காரத்தை. 'தவத்தால் அதனைக் காண முயலுதலே செய்யத்தக்கது' என்பது குறிப்பெச்சம். ஓவியர் - ஓவினவர்; பற்று நீங்கினவர். பொருளுக்கு ஏற்ப அடிகளை மாற்றி உரைக்க. 'அறிவாரில்லை' என்பது ஒரு சொல் நீர்மைத்தாய எதிர்மறை முற்று. 'அது அறிய ஒண்ணாது' என்க. இதனால், மேற்கூறிய அகார உகார மகாரங்களது சமட்டியாகிய அதனது சிறப்புக் கூறப்பட்டது.*

*940. **தெளிவுரை :-** சிவனை, ஔ என்றும், சௌ என்றும் பிறந்து பொருந்தி மந்திரமே அம் என்றும், சம் என்றும் அமைந்த மறை பொருளை ஒருவரும் அறியவில்லை. அறிந்தார்களாயின் அம்சம் எனப்படுகின்ற அந்த மந்திரந்தானே அனாதியான சிவமாய் நிற்கும்.*

**941.** **மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது**
**உந்தியி னுள்ளே உதயம்பண் ணாநிற்கும்**
**சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர்**
**அந்தி தொழுதுபோய் ஆர்த்தகன் றார்களே.** **45**

---

*குறிப்புரை :- 'அரனை' என்னும் இரண்டனுருபு தொகுக்கப்பட்டது. "அவ், சவ்" நான்கில் முதலது, 'ஔ, சௌ' என்பவற்றின் போலி ஏனையவை, ஈற்றில் மகாரத்தோடு கூடிய மந்திரங்கள். "சவ்வும், அனாதியும்" என்ற உம்மைகள் முறையே இழிவு சிறப்பும், உயர்வு சிறப்புமாம்.*

*இதனால், 'அம்சமந்திரம் சிவ மந்திரமாம் சிறப்பினை யுடையது' என்பது உணர்த்து முகத்தால், மேல், "அகார, உகார" (பா. 934) "அவ்வென்ற போதில்" (பா.936) என்னும் மந்திரங்களிற் கூறிய உகாரத்திற்கு ஈடாக 'சம்' என்பதனை வைத்து அம்ச மந்திரத்தால் பிராணாயாமத்தைச் செய்தலும் பொருந்தும் என்பது கூறப்பட்டது.*

*941.* **தெளிவுரை :-** *மேல், "நல்ல எழுத்து" எனப்பட்ட அந்த ஓர் எழுத்தே, அக மலர்களாகிய ஆதார பங்கயந்தோறும் பலவகையாகக் காட்சிப்படும். அது மூலாதாரத்தில் நிற்பதாயினும், சுவாதிட்டானத்தில் கும்பிக்கப்பட்ட பிராண வாயுவாய் மேலெழுந்து மணிபூரகம் முதலாக விளங்கத் தொடங்கும். சந்திக் காலங்களில் சந்திவழிபாட்டினைத் தவறாது செய்பவர்களுங்கூட, 'அவ்வழிபாடு இக்காட்சியை எய்துதற்கு வழி' என்பதை அறிவதில்லை. ஏதோவோர் ஒழுக்கமாகக் கருதி அந்தியிலுங்கூடத் தவறாமல் அவ்வழிபாட்டினை முடித்து, வேறு செயல் செய்யச் சென்றுவிடுகிறார்கள்.*

**குறிப்புரை :-** *மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது - பிராசாத கலையான சந்திரகலை உடலுள் பொருந்திய மூலாதாரத்தினின்றும் உதிப்பது. உந்தியினுள்ளே உதயம் பண்ணாநிற்கும் - அஃது உன்னுடைய தீயினிடமாக உதிப்பது. சந்தி செய்யா நிற்பர் தாமதறிகிலர் - அந்தியும் சந்தியும் சந்தியாவந்தனம் செய்பவர் சூரியன் சந்திரன் சேரும் நேரத்தை அறிந்தவரல்லர். அந்தி தொழுது போயார்த்தகன்றார்கள். சந்தியா தேவியை வழிபடுவதாகக் கூறிக்கொண்டு வீண் ஆரவாரம் செய்து உண்மையினின்றும் நழுவினவர்களாகின்றனர்.*

942. சேவிக்கும் <u>மந்திரம்</u> செல்லும் திசைபெற
ஆவிக்குள் <u>மந்திரம்</u> ஆதார மாவன
பூவுக்குள் <u>மந்திரம்</u> போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் <u>மந்திரம்</u> அங்குச மாமே. 46

---

*அகத்திலுள்ள சூரிய சந்திரர்களை இணைத்து வழிபடும் நெறி அறியாது, புறத்தில் காணும் சூரிய சந்திரன் சேரும் சந்தியா காலத்தில் வழிபடுகின்றனர் என்று இரங்கியவாறு. உண்மையை உணர்ந்து வழிபட வேண்டும் என்பதாம்.*

***942. தெளிவுரை :-*** *பிரணவம் அந்தணரும் அறியாத அருமையுடைத்து என்பது அறிவித்தல் நுதலிற்று. இதயத் தாமரையி லிருந்து எழுவதாகிய மந்திரம் ஒன்றுண்டு. அது உந்திக் கமலத்திலிருந்து சூக்குமமாய்த் தோன்றும். சந்தியாவந்தனம் செய்பவர் களாகிய அந்தணர்கள் இதனை அறிகிலர். சந்தியாதேவியை வணங்கிப் போய் ஆரவாரித்து ஒழிந்தவர்களாவார் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *இதன் கருத்து, இதயத் தாமரையிலிருந்து எழுகின்ற பிரணவம் உந்திக்கண்ணதாகத் தோன்றும். இது பிரணவத்தோடு வேதத்தை ஓதும் வேதியர்க்கும் அறியப்படாதது என்பது கருத்து.*

*சந்திசெய்யாநிற்பர் என்றது கிரியைகளைச்செய்த அதனால் விளையும் ஞானத்தை அறிகிலர். இவர்கள் செய்வன ஆரவாரத் தன்மையனவே என்பார், ஆர்த்தகன்றார்களே என்றார்.*

*ஆறிலும் விளங்குகின்ற அக்கரங்கள். ஆறு ஆதாரங் களிலுமுள்ள, நான்கு இதழ்த்தாமரை முதல் ஆயிரம் இதழ்த் தாமரை வரை உள்ள மலருள் தங்கிய மந்திரங்களைக் குற்றமற ஆராயின், ஆன்மாவிற்குச் சாதனமாக உள்ளப்படுகின்ற திருவைந்தெழுத்தாகிய மந்திரமே, மலக்களிற்றை அடக்கும் அங்குசமாம் என்றவாறு.*

*சேவிக்கும் மந்திரம் திசைபெறச்செல்லும் எனக் கூட்டுக. இதன் கருத்து, நம்மால் தியானிக்கப்படுகின்ற மந்திரம் எல்லாத் திசைகளிலும் வெற்றியை உண்டாக்கும் என்பதாம்.*

*உள்மந்திரம் - நினைக்கப்படுகின்ற மந்திரம். ஆறு ஆதாரங்களிலும் விளங்குகின்ற அக்கரங்களே ஆவிக்கு உள்ளப்படும் மந்திரங்களாம். பூ என்றது ஆதாரங்களில் விளங்குகின்ற*

**943.** **அருவினில் அம்பரம் அங்கெழும் நாதம்**
**பெருகு துடியிடை பேணிய விந்து**
**மருவி யகார சிகாரம் நடுவாய்**
**உருவிட ஆறும் உறுமந் திரமே.** **47**

---

*தாமரைகளை, போக்கறநோக்குதலாவது மறப்பும் நினைப்பும் மாறி வராதபடி ஆதாரங்களையும், அவற்றின் அதிதெய்வங்களையும், அக்கரங்களையும் எப்பொழுதும் இடைவிடாது எண்ணுதல்.*

*ஆவிக்குள் மந்திரம் - உயிருக்குள்ளே உயிர்க்குயிராக விளங்கு கின்ற சிவமந்திரம், அதனால் மலநீக்கம் விளைதலின் மலத்தைக் களிராக எண்ணி ஏகதேசவுருவகமாக மந்திரத்தை அங்குசமாக உருவகித்தார்.*

*943. தெளிவுரை :-* *சிவம் சூக்குமமான நிலையில் பரவெளியாய் நிற்க, அதன்கண் நாதம் தோன்றும். பின்பு சத்தி அச்சிவத்தைவிடத் தூலமாய் அவ்வெளியினுள் தோன்ற, அதனிடத்து விந்து தோன்றும். ஆகவே, அப்பெற்றியவாய நாத விந்துக்களின் நடுவில் சிகார யகாரங்கள் பொருந்தி நிற்க, நின்ற ஆறு எழுத்துக்களும் உயர்ந்த மந்திரமாய் விளங்கும்.*

*குறிப்புரை :-* *'அதனால், அம்மந்திரத்தை மேற்கொண்டு செபிக்க' என்பது குறிப்பெச்சம். இங்குக் கூறியவாறு ஆறு எழுத்தாய் நிற்கும் மந்திரம், 'ஓம் நமச்சிவாயம்' என்பது. முன்னர் நின்ற விந்துவை அடுத்து நிற்பது யகாரமாதலின் அதனை முன்னர்க் கூறினார். நாதம் சகாரமோடு புணருமிடத்து சகார மெய்யாய் நிற்கும்.*

*'ஓOநமஶிவாய' என்னும் மந்திரம், தமிழில் 'ஓநமச்சிவாய' என்றும் 'ஓநமச்சிவாயம்' என்றும் நிற்கும் என்பதை,*

*"போற்றியோ நமச்சிவாய" - தி.8 திருச்சதகம் - 62*

*என்னும் திருவாசகத்தாலும்,*

*"நமச்சிவா யம்சொல்ல வல்லோம்" - தி.6 ப. 98 பா.4*

*என்னும் திருத்தாண்டகத்தாலும் அறிக. இங்ஙனமாகவே, 'தமிழ் கூறுவார்க்கு இஃது ஆம்' என்றதாயிற்று. ஆக்கங்கள் வருவித்துக் கொள்க. பெருகுதல் - தூலமாதல், உருவிட - ஊடே நிற்க. 'ஆறும் மந்திரமாய் உறும்' என்க.*

944. விந்துவும் நாதமும் மேவி உடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடின்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாமே. 48

---

*இதனால், மூலமந்திரம் தமிழில் நிற்பதொரு முறை கூறப்பட்டது.*

***944. தெளிவுரை :-*** *விந்துவும், நாதமும் திருவைந்தெழுத்து மந்திரத்தோடு ஒருசேரப் பொருந்திச் சந்திர மண்டலமாகிய ஆயிர இதழ்த் தாமரையுள்ள தலையை அடையுமாயின் நிராதாரத்தில் உள்ள தேவாமிர்தமாகிய சிவன் இன்ப ஊற்றாய் வெளிப்படுவான். அவனுக்கு அவ்விடத்து நினைக்கப்படுகிற அந்த மந்திர செபமே வேள்வியாய் அமையும். விந்து - சத்தி. நாதம் - சிவன். சந்திரன் - சகத்திரத் தானமாகிய சந்திர மண்டலம்.*

***குறிப்புரை :-*** *'திருவைந்தெழுத்து மந்திரம்' என்பது மேலை மந்திரத்தினின்றும் வந்து இயைந்தது. அல்லாவிடில், விந்து நாதங்கள் மட்டில் மந்திரம் ஆகாமை அறிக. இப்பயனை விதந்து கூறியது, 'மேற் சொல்லிய முறையால் இழுக்கொன்றும் இல்லை' என்றவாறு.*

*இதனால், 'திருவைந்தெழுத்தை விந்து இறுதியாகச் சொல்லுதலால் அதனது தன்மை சிறிதும் குறைவுறாது' என்பது கூறப்பட்டது.*

***945. தெளிவுரை :-*** *திருவைந்தெழுத்தை ஒன்றில் ஒன்றடக்கி, சிவாக்கரத்தை மட்டும் ஓதவல்லார் உறுபயன் உணர்த்துதல் நுதலிற்று.*

*பிரணவத்தோடு கூடிய சீபஞ்சாக்கரமாகிய ஆறெழுத்தையும் ஓதும் ஞானத்தை அறியமாட்டாதவர் யார்? ஆனால் ஆறெழுத்தையும் ஒன்றாகவே ஓதி உணரமாட்டார்கள். வைகரியாக அன்றி அதிசூக்குமமாக ஓதவல்லார்க்குச் சிவ எழுத்தாகிய ஒன்றினாலேயே ஆன்ம ஆக்கத்தை அடையலாகும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *ஆறெழுத்து - ஓம் நமசிவய என்பது. ஆறு எழுத்து ஓதும் அறிவு அறிகிலார் ஆர் எனக் கூட்டிப் பொருள் காண்க. இதன் கருத்து தூலபஞ்சாக்கரத்தை ஓதும் அறிவு எல்லோராலும் எளிதில் இயலுவது ஒன்றாம்.*

**945.** ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்
ஆறெழுத் தொன்றாக ஒதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்கு
ஒரெழுத் தாலே உயிர்பெறல் ஆமே. 49

**946.** ஓதும் எழுத்தோடு டுயிர்க்கலை மூவைஞ்சும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தினில் ஐயிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக்கொள் ளீரே. 50

---

*ஆறு எழுத்து ஒன்றாக ஓதியுணரார்கள்; அங்ஙனம் உணர்த்தலாவது நகார மகாரங்களை மாயையுளடக்கி, மாயையை வகாரமாகிய சத்தியுளடக்கி, யகாரமாகிய உயிர் மலம் மாயை கன்மங்களற்றதாயவழி அதனைச் சிகார வகாரங்களாகிய சிவசத்தி களினிடமாக அருக்கனொளியில் விளக்கொளிபோலக் கலக்கச்செய்து, சத்தியையும் சிகாரமாகிய சிவத்துளடக்கிச் 'சி' மட்டும் எல்லாம் அடங்க நிற்கும் பரசிவ நிலையை ஆராய்ந்து தெளிதலாம். இது எல்லார்க்கும் எளிதில் இயைவதன்றாகலின் ஓதி உணரார்கள் என்றது.*

*முயற்சிப் பிறப்பானும், இடப்பிறப்பானும் எழுத்தொலிகள் வேறுபடுதலால் விளையும் வைகரிவாக்கு தன்செவிக்கும் கேளா வண்ணம் நுணுகித் தியானிக்க வல்லார்க்கு என்பார் வேறெழுத்தின்றி விளம்பவல்லார்க்கு என்றருளினார். வல்லார்க்கு என்பது அங்ஙனம் விளம்பமாட்டாமையை உணர்த்தி நின்றது.*

*ஓரெழுத்து - 'சி' என்னும் சிவாக்கரம். உயிர் பெறுதலாவது உயிர் எய்தவேண்டிய உறுதியைப் பெறுதல். ஆகவே மலமாயைகளைக் கெடுத்த உயிர் சத்தி சிவத்தில் ஒடுங்கி, சத்தியும் சிவத்தில் ஒடுங்கி நிற்கும் நிலையைத் தியானிக்கில் உயிர் எய்துதற்கரிய இன்பநிலை எய்தும் என்பதாம்.*

***946. தெளிவுரை :-** ஐம்பத்தோரக்கரங்களும் ஆறு ஆதாரத்தில் அடங்குமுறை உணர்த்துதல் நுதலிற்று. முதற்கண் ஒதப்படும் எழுத்தோடு, உயிர் எழுத்துக்கள் பதினைந்தும், முதல் எழுத்துக்களாகிய மெய்யெழுத்துக்களோடும் பிரணவத்தோடும் கூட ஐம்பத்தோரக்கரமாம் என்பர். சோதிவடிவான பிரணவத்தின்கீழ்*

**947.** விந்துவி லும்சுழி நாதம் எழுந்திடப்
பந்தத் தலைவிபதி னாறு கலையதாய்க்
கந்தர வாகரம் கால்உடம் பாயினாள்
அந்தமும் இன்றியே ஐம்பத்தொன் றாயதே. **51**

---

*ஆதாரங்கள் ஆறுள்ளன. அவற்றை ஒலியெழுத்தாகச் செய்து அறிந்து கொள்ளுங்கள் என்றவாறு.*

*ஓதும் எழுத்து முதற்கண் அங்காத்தலாகிய தொழில் ஒன்றாலேயே ஓதப்படும் எழுத்தாகிய அகரம். அதனோடு, உயிர்க்கலை மூவைந்துடன் பதினாறு எழுத்துக்கள். உயிர் எழுத்தைக் கலை என்றது, அவையே மெய்யெழுத்துக்களுக்கு விளக்கம் தருவதாகலின். ஓதும் எழுத்து என்று அகரத்தைப் பிரித்தது எல்லா எழுத்துக்களுக்கும் உடனாய் எல்லா உயிர்களுக்கும் ஒன்றாய் சிவம் போல இருத்தலின். ஆதி எழுத்து - முதலெழுத்து. 'உயிரும் உடம்புமா முப்பதும் முதலே' என்றவற்றுள் முற்பகுதியில் கூறிய உயிரெழுத் தொழிய, பாரிசேடத்தால் பெறப்பட்ட முதலெழுத்து. அவை கம் முதல் க்ஷ வரையுள்ள முப்பத்து நான்காம். ஆக ஐம்பது, இதனுடன் ஒன்று பிரணவம்; ஆக ஐம்பத்தொன்று.*

*மூலாதாரமுதல் ஆறு ஆதாரங்களிலும் ஐம்பது எழுத்துக்கள் நிற்குமுறை வருமாறு:*

*மூலாதாரம்-4, சுவாதிட்டானம்-6, மணிபூரகம்-10, அநாகதம்-12 விசுத்தி-16, ஆஞ்ஞை-2; அதற்குமேல் திரிகோணம் ஓம் என்ற பிரணவம் ஒன்று.*

*சோதி எழுத்து - ஆஞ்ஞையென்ற மேலாதாரத்தின்மேல் திரிகோணமிருக்கிறது; அதில் சோதி வடிவான பிரணவம் இருக்கிறது. இதுவே அந்தராத்மா.*

***947. தெளிவுரை :-** சுத்த மாயையினின்று ஓங்காரமாய் நாதம் தோன்ற, அந்த நாதத்தின் தலைவியாகிய குண்டலினி சக்தி, பதினாறு கலைகளையுடைய பிரணவமே தானாகி மக்களது உடம்பில் தலை, கால், உடல் என்னும் உறுப்புக்களில் நிற்கின்றாள். அவள் ஒன்றி நிற்கப் பெறுதலே பிரணவம் அழிவின்றி மேற்கூறிய ஐம்பத்தோரெழுத் தாயிற்று.*

**948.** ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தேயும் ஆவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே. 52

---

***குறிப்புரை :-*** *சுழி விந்துவில் என மாறுக. விந்து (O) சுழிவடிவாயது. நாதம் (-) நேர்கோட்டு வடிவாயது. இரண்டும் இணையும்போது 'உ' ஆகிறது. உ: இது சக்தியட்சரம். விந்து நாத இணைப்புச் சக்தியாக, அது பதினாறு கலையாக, அவைகளே அம்மைக்கு அவயவங்களாயின என்பதாம்.*

*பதினாறுகலைகளாவன உயிர் ஒன்றும், ஐவர்க்கம் ஐந்தும், ய வ ஶ ஷ [illegible] [illegible] ஹ க்ஷ ஓம் என்பவை ஒவ்வொன்றாகப் பத்தும் ஆகப் பதினாறு கலைகள். அக்கரங்களைக் கலையென்றது, ஞானவிளக்கம் செய்தலின், யகாராதி பத்தும் இனமின்றித் தனியெழுத்துக்களே ஒவ்வொரு கலையாயின என்றுணர்க. பந்தத்தலைவி - குண்டலினி. கந்தரம் - கழுத்து.*

***948. தெளிவுரை :-*** *மேற்சொல்லிய ஐம்பத்தோரெழுத்துக்களே வேதம், ஆகமம் அனைத்துமாய் நிற்கும். அவ் உண்மையை உணர்ந்த பின் 'ஐம்பதெழுத்து அல்லது ஐம்பத்தோரெழுத்து' என்றெல்லாம் எண்ணுகின்ற அலைவு நீங்கி, 'ஐந்தெழுத்து' என்று உணர்ந்து நிற்கின்ற அடக்கம் உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *'ஐம்பதெழுத்துமே' என்பதில் உம்மையும், ஏகாரமும் மாறிநின்றன. ஆவது, அனைத்தும் ஆவது, "ஐம்பதெழுத்தும்" என்றது. 'எல்லா வகையான எழுத்துக்களும்' என்றவாறு. எழுத்துக்களை, 'ஐம்பத்தொன்று' என்பதனோடு, 'ஐம்பது' என்றலும் வழக்கு என்பது உணர்தற்கு, மேல், 'ஐம்பத்தோரெழுத்து' என்றவர், இங்கு, 'ஐம்பதெழுத்து' என்றார். திருமூலர் அவதார காலம் வட்டெழுத்துக் காலமென்றும், அக்காலத்தில் உயிரெழுத்துக்கள் பதினாறும், மெய்யெழுத்துக்கள் முப்பத்தைந்தும் வழக்கில் இருந்தன என்றும் சொல்லுவார்கள். வடமொழி எழுத்துக்களே 51 என்றும் கொள்வர். இது மூன்றாம் தந்திரத்திலும் விளக்கப்பட்டது. வேதம், ஆகமம் முதலிய பல நூல்களையும் கற்றோர், 'அவை அனைத்திலும் சொல்லப்படுவது திருவைந்தெழுத்தின் பொருளே' என்பதை நன்குணர்வர். ஆதலின், "ஐம்பதெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே" என்றார்.*

**949.** அஞ்செழுத் தால்ஐந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தால்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தால்இவ் வகலிடம் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றானே. **53**

**950.** வீழ்ந்தெழ லாம்விகிர் தன்திரு நாமத்தைச்
சேர்ந்தொழி யாமல் தொடங்கும் ஒருவற்குச்
சார்ந்த வினைத்துயர் போகத் தலைவனும்
போந்திடும் என்னும் புரிசடை யோனே. **54**

---

*அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் அஞ்சின்*
*பொருள்நூல் தெரியப் புகின்.* - *திருவருட்பய.*
*ஐந்தெழுத்.*

*என்னும் திருவருட்பயனையும் காண்க. மூன்றாம் அடியில் ஏகாரம் பிரிநிலையும், உம்மை முற்றும்மையுமாம். ஆகவே, 'ஐம்பதெழுத்துமே அனைத்துமாவது' என்பது பொருளாயிற்று.*

*இதனால், அனைத்தெழுத்துக்களும் மேற்கூறிய ஐந்தெழுத்தின் விரிவேயாதல் கூறப்பட்டது.*

***949. தெளிவுரை :-** சிவபெருமான் தத்துவங்களைப் படைத்தும், அவற்றின் காரியமாகிய எண்பத்து நான்கு நூறாயிர வகைப் பிறவி களான உடம்புகளையும் ஆக்கி உயிர்கட்குத் தந்தும், அவைகளைக் காத்தும், அவ்வுயிர்கள் தன்னை மன மொழி மெய்களால் வழிபட்டு நலம்பெறுதற் பொருட்டுத் திருமேனி கொண்டு எழுந்தருளி யிருப்பதும் ஆகிய எல்லாம் திருவைந்தெழுத்தாலேயாம்.*

***குறிப்புரை :-** ஐந்தெழுத்தால் அகிலமும் விளைந்தமை உணர்த்துதல் நுதலிற்று. ஐந்தெழுத்துக்களால் ஐம்பூதங்களும், பல யோனிகளும் படைத்தனன்; அவற்றாலேயே இவ்வுலகத்தைக் காத்தனன்; அவற்றுள் ஒன்றாயும் அமர்ந்தனன் என்றவாறு.*

***ஐந்தெழுத்துக்களில் சிகார வகாரங்கள் சிவமும் சத்தியுமாம் ஆதலின் அவ்விருவரும் முதலாக நின்று மகாரமாகிய மாயையிற் கூட்டி யகாரமாகிய உயிர்களை நகாரமாகிய திரோதாயியைக் கொண்டு மறைப்பித்து வினைப்போகம் ஊட்டிக் காத்துவருதலின் இங்ஙனம் கூறினார்.** பல யோனி - எண்பத்து நான்கு நூறாயிரமான பிறவி வேறுபாடு . பூதம் படைத்தனன் என்றது உலகம் படைத்ததை,*

**951.** **உண்ணும் மருந்தும் உலப்பிலி காலமும்**
**பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்**
**விண்ணின் றமரர் விரும்பி அடிதொழ**
**எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே.** **55**

---

*யோனிபடைத்தனன் என்றது யோனியில் பிறக்கப்படைத்தான் என உயிர்களை உடலொடு கூட்டிப் படைத்தமையை. உடலெடுத்த உயிரும் உலகும் கூடவே போகம் படைத்தமையும், அகலிடம் தாங்கினன் என்றமையால் உலகம் தம்கால எல்லை வரை அழியாமல் தாங்கிய திதியும், அமர்ந்துநின்றான் என்பதால் அஞ்செழுத்தே தமது திருமேனியாகக் கொண்டு எல்லாவற்றையும் தம்முள் அடக்கித் தான் மட்டுமாக அமர்ந்து நின்றான் எனச் சங்காரமும் கூறப்பட்டமை காண்க.*

*950. தெளிவுரை :- சிவனது திருப்பெயராகிய திருவைந் தெழுத்தைத் தளர்ச்சியின்றி ஓத உறுதிபூண்டு நிற்பவர்கட்கு, வினைக் குழியில் வீழ்ந்து கிடந்தாலும் எழுந்து கரையேறுதல் கூடுவதாம். மேலும் அப்பெருமான் அவர்களை வினைத்துன்பம் விட்டொழியு மாறு தன்மாட்டு அழைத்து ஆண்டுகொள்வான்.*

*குறிப்புரை :- எனின்; திருவைந்தெழுத்தால் போகமும் மோட்சமுமாம் எனல் நுதலிற்று. விகிர்தனாகிய இறைவன் திரு நாமமாகிய திருவைந்தெழுத்தை, மனஞ்சோர்ந்துவிடாமல் செபிக்கும் ஒருவற்கு, போகத்தைத் துய்த்தலாகிய வீழ்தலும் அதனின்று மீளுதலாகிய எழுதலும் ஆம், புரிசடையோனாகிய தலைவனும், அவற்றால் விளையும் துன்பமும் நீங்க (வீட்டுலகிற்கு) வாருங்கள்' என அழைப்பார் என்றவாறு.*

*போகம், விருப்பத்தால் விளைவதாகலின் வீழ்ந்து என்றார். வீழ்தல் - விரும்புதல். எழல் - போகத்தினின்று மீளல்; முத்தி, ஆகவே தூல, சூக்கும பஞ்சாக்கரங்கள் போக மோட்சங்களைத் தருவதாம் என்பது. சோர்ந்து - மறந்து. "நாதன் நாமம் நமச்சிவாயவே" என்பதும் "நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே" என்பதும் ஈண்டு இணைத்து எண்ணத்தக்கன. புரிசடையான் - ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று புரிகளாகப் பிரிந்துள்ள சடையை யுடையவன். சடை - திருவாதிரைநாள். புரிசடையான் என்பதனைச் சடைபுரியான் என விகுதி பிரித்துக்கூட்டித் திருவாதிரை நாளை விரும்புதலையுடையவன் எனவும் கூறலாம்.*

**952.** ஐந்தின் பெருமையே அகலிட மாவதும்
ஐந்தின் பெருமையே ஆலய மாவதும்
ஐந்தின் பெருமையே அறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனும் ஆமே. **56**

---

*சீபஞ்சாக்கர செபத்தால் வினைகெட, இறைவன் போந்திடும் (வாரும்) என்னும் என்பதாம். இதனால், இம்மை மறுமை இன்பங்களும் உண்டாம் என்பது உணர்த்தப்பட்டது.*

*951. தெளிவுரை :- சிவபெருமான், தேவர்கள் தன்னை விண்ணுலகத்தில் விருப்பத்தோடு அடிபணிய, அவர்கட்கு அவர்கள் உண்ணுகின்ற அமுதமாயும், அதன் பயனாகிய நீண்ட வாழ்நாளாயும், அவர்கட்கு விருப்பத்தைத் தருகின்ற இசையாயும், பாட்டாயும் நிற்றலேயன்றி, அவர்களது கருத்தில் நிற்கும் திருவைந்தெழுத்தாயும் நின்று மேலை மந்திரத்திற்கூறிய பயன்களை அளிப்பன்.*

*குறிப்புரை :- எனின், சீபஞ்சாக்கர வடிவாய் நிற்கும் சிவன் மருந்து முதலிய எல்லாமாக உதவுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று. சுவர்க்கத்திலிருக்கின்ற அமரர்கள் வந்து அன்பு பூண்டு அடிவீழ்ந்து வணங்க, பாசங்களினீங்கிய ஆன்மாக்களின் உள்ளத் தினின்று சீபஞ்சாக்கர வடிவாக நிலைபெற்ற சிவம், அவர்கள் உண்ணுகிற அமுதமாயும், வற்றாத காலதத்துவமாயும், இசையொடு கூடிய வேதமாயும், பண்ணொடுகூடிய பாடலாயும் நிற்பன் என்றவாறு.*

*அவரவர் பரிபாகநிலைக்குத் தகப் பரமனிருப்பன் என்பதை, பசுபுண்ணிய மேலீட்டால் சுவர்க்காதி பதவிகளைப் பெற்ற விண்ணவர்கள் விரும்பி அடிதொழுவாராயின் அவர்களுக்கு அமுதாய் இருப்பன்; காயசித்தியாகிய யோகப்பயனை விரும்புவார்க்கு அழிவற்ற காலமாயிருப்பன்; விதிமார்க்கங்களை விரும்புவார்க்கு வேதமா யிருப்பன்; பக்திமார்க்கத்தை விரும்புவார்க்குப் பண்ணுறு பாடலாக இருப்பன் என உணர்த்தியவாறு.*

*இங்ஙனமன்றி அமுதாய் - அதன் பயனாய அமரத்துவமாயும், கேள்வி அறிவாய் - அதன் காரணமாய பண்ணூறு பாடலாயும் இருப்பன் எனலுமாம். அமுது உண்டவர் சாவார் ஆதலின் மருந்தும் காலமுமாய் நிற்கும் என்றருளியது. விண்ணின்றமரர் என்றது,*

*அவர்கள் தாம் அடைந்த பதவியில் நீடித்திருக்க மருந்து உண்டு உலப்பிலாக் காலம் வாழ விழைவர்; ஏனையோர் கேள்வியும் பாடலுமாக அனுபவித்து அன்பு நெறியில் தலைசிறக்க எண்ணுவர். இந்த இருவகையார்களும் எண்ணியாங்குச் சீபஞ்சாக்கர செபம் பயனளிக்கும் என்பதாம்.*

*மந்திர நான்மறை யாகி வானவர்*
*சிந்தையுள் நின்று அவர் தம்மை ஆள்வன*
*.................. அஞ்செழுத்துமே. - தி.3 பா.22 பா.2*

*என்ற திருஞானசம்பந்தர் திருமொழியும் காண்க. தலைவன் என்னும் எழுவாய் இயைபினால் வந்து இயையும்.*

***952. தெளிவுரை :-** உலகம் நிலைபெற்றிருத்தலும் கல் முதலிய வற்றால் கட்டப்பட்டு அமைந்த இடங்கள் சிவபெருமானது அருள் நிலையங்களாதலும், அந்நிலையங்களில் அவன் விளங்கிநின்று, வேண்டுவார்க்கு வேண்டுவன வழங்குதலும் திருவைந்தெழுத்தாலே யாகும். இனி, அதனை அதன் வகை பலவற்றையும் அறிந்து ஓத, அப்பெருமான் அங்ஙனம் ஓதுவாரது பக்கத்திலே எப்பொழுதும் இருப்பவனாவான்.*

***குறிப்புரை :-** அகலிடம் - உலகம்; என்றது உயிர்களை, 'அவை நிலைபெறுதல்' என்பதனை.*

*'வானின் றுலகம் வழங்கி வருதலால்' - குறள். 11*

*என்பது போலக் கொள்க. "ஆலயம் ஆவது" என்றது 'ஆலயம் ஆலயமாவது' என்றவாறு. 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்' என்னும் முறைமையிற் சிறிதும் வழுவாதவன் என்பார். 'சிவபெருமான், 'அறவோன்' என்றார். செய்தல், இங்கே ஓதுதல் பால் - பக்கம், பாலன் ஆதலை.*

*"இவன்எனைப் பன்னாள் அழைப்பொழி யான்என்*
*றெதிர்ப்படுமே". - தி.4 பா.112 பா.9*

*"எங்குற்றாய் என்றபோதில்*
*இங்குற்றேன் என்கண்டாயே". - தி.4 பா.75 பா.8*

*"தோன்றாத் துணையாய் இருந்தனன்*
*தன்னடி யோங்களுக்கே". - தி.4 பா.94 பா.1*

**953.** வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்
நீரெழுத் தாய்நிலம் தாங்கியும் அங்குள்ள
சீரெழுத் தாயங்கி யாயுயி ராமெழுத்
தோரெழுத் தீசனும் ஒண்சுட ராமே. **57**

---

*"ஆரூரர்தம் - அருகிருக்கும் விதியின்றி அறம் இருக்க மறம்விலைக்குக் கொண்டவாறே". -தி.4 ப.5 பா.3*

*என்பன முதலிய திருமொழிகளை நோக்கி அறிக.*

*"சிவனே சிவனே சிவனேஎன் பார்பின்*
*சிவன்உமையா ளோடுந்திரிவன்"*

*என்பதொரு வெண்பாவையும் காண்க. இதன் முதலடி மூன்றாம் அடிகளில் னகர ஒற்றுக்கள் அலகு பெறாது நின்றன.*

*ஆலயமாதலாவது, கருப்பக்கிருகம் சிகரம்; அர்த்தமண்டபம் வகரம்; இடபம் எழுந்தருளிய மகா மண்டபம் யகரம்; கூத்தப்பிரான் இருக்கும் மன்றம் நகரம்; பலிபீடம் மகரம். ஆக கருவறை முதல் பலிபீடம் வரை சீபாஞ்சாக்கர வடிவாதலை ஓர்க. பாலன் - காப்பவன்.*

***953. தெளிவுரை :-*** *சிவபெருமான் நாத எழுத்தாகிய பிரணவமாய் அதன் வழியே வானத்தில் பொருந்தி எல்லாப் பொருட்கும் வியாபக மாய் நிற்பான். நீரெழுத்தாகிய நகாரமாய் அதன்வழியே நீரில் பொருந்தி அதன்வழியே பொருள்களைப் பதம் செய்வான். நில வெழுத்தாகிய மகாரமாய் அதன்வழியே நிலத்திற் பொருந்தி எல்லாவற்றையும் தாங்குவான். நெருப்பெழுத்தாகிய சிகாரமாய் அதன் வழியே நெருப்பில் பொருந்திய பொருள்களைச் சுட்டுப் பக்குவப் படுத்துவான். காற்றெழுத்தாகிய வகாரமாய் அதன்வழியே காற்றிற் பொருந்திப் பரந்து சலித்துப் பொருள்களைத் திரட்டுவான். எஞ்சிய ஓரெழுத்தாய யகாரமாய் அதன்வழியே ஆன்மாவிலும், இருசுடரிலும் பொருந்தி அறிதலும், ஒளிவீசலும் செய்வான்.*

***குறிப்புரை :-*** *உயிராம் எழுத்து ஓரெழுத்து - உயிரெழுத்துக்கள் இயங்குதற்குக் காரணமாய் எல்லாவற்றோடும் கலந்துள்ள ஓரெழுத்தாகிய அகரம். அகரம் ஈசன். சிவனே அகரமாதலையும், நிறைந்திருத்தலையும் 'அகரவுயிர் போலறிவாகி யெங்கும் நிகரிலிறை நிற்கும் நிறைந்து' என்னும் திருவருட்பயன் கொண்டு தெளிக.*

**954.** நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே. **58**

---

*வேராய் : வேர் - மூலம். வேராய் - மூல எழுத்தாகிய பிரணவமாகி. பிரணவமே எல்லாவற்றிற்கும் மூலமாதலின் இங்ஙனம் அருளியது. விண்ணாய் - ஆகாய பீசமாகிய ஹம். அப்புறமாய் நிற்கும் நீரெழுத்தாய் என்பதனுள் ஆகாயத்தையடுத்து அதன்பின்னிற்பவை யாகிய வாயு, தேயு, அப்பு பீசங்கள் அறிவிக்கப்பெற்றன. நிலம் தாங்கி- நிலமாகிய அனைத்தையும் தரித்து நிற்பதாய பூதம். 'மண் கடினமாய்த் தரிக்கும்' என்ற இலக்கணம் தெளிய நின்றது இச்சொற்றொடர். அங்குள்ள சீரெழுத்தாய் - ஐம்பூதங்களிலும் தனித்தனியே வியாபித்துள்ள சிறப்பான எழுத்து, 'சி' என்னும் சிவாக்கரம்.*

*அங்கியாய் : அங்கத்தையுடையது அங்கி. அங்கியாய் - சத்தியக்கரமாய். சிகாரம் உடலாய். வகாரம் உயிராய் என்றவாறு.*

*ஒண் சுடர் ஆம் - ஒளிபொருந்திய சுடர் ஆவன்; என்றது சிவம் சுடரும், சத்தி ஒளியுமாக இயைந்து இருவரும் வேறறியவொண்ணாத நிலையில் நிற்றலின் ஒண்சுடராய் இயைந்து ஒன்றாய் நிற்பர் என்பதாம்.*

*இரண்டாமடியிறுதியை 'அங்குளன்' எனப் பாடமோதி, பிரணவமாய், ஐம்பெரும்பூத எழுத்துக்களாய் அவற்றிற்கு அப்பாலுமாய் நிற்பன். இவ்வெழுத்துக்களாக நின்றியக்கும் சிவன் ஒளிப்பிழம்பினன் என்ற முடிபு காணாது உரைவகுப்பாரும், உயிராம் எழுத்து அன்ன மந்திரம் ஒண்சுடர் துரியாதீதசிவம் என உரை கூறுவாருமாகப் பலருளர்.*

*எங்ஙனமாயினும் இத்திருமந்திரம், ஈசன் ஓரெழுத்தாய்த் தோன்றிப் பலவாய் விரிந்து, இரண்டாய் அடங்கி, ஒண்சுடராய் (அதாவது சிவசத்தி அபின்னமாய் நிற்பன்) என்ற மந்திராவதார உண்மையைப் புலப்படுத்துவது என்பது தெளிவு. உண்மை விளக்கத்திலும், பஞ்சபூத பீசங்கள் ஆகாயமுதல் முறையே ஹம், யம், ரம், வம், லம் என்பனவாதலையறிக. ஆகமத்துணிவும் இதுவே.*

955. இயைந்தனள் ஏந்திழை என்உளம் மேவி
நயந்தனள் அங்கே நமசிவ என்னும்
பயந்தனை ஒரும் பதமது பற்றும்
பெயர்ந்தனன் மற்றுப் பிதற்றறுத் தேனே. 59

---

***954. தெளிவுரை :-*** *நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது - உலகம் சத்தி மயமாய் உள்ளது. நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று. வகாரமாகிய சத்தியிலே இவ்வுலகம் ஒடுங்கியது. நாலாம் எழுத்தே நவில வல்லார்கட்கு நாலாம் எழுத்தது நன்னெறி தான் -நாலாம் எழுத்தாகிய வகாரத்தைச் செபிப்பவர்க்கு அதுவே ஆதாரமாய் நின்று மேன்மையான நெறியினைக் காட்டும்.*

*நமசிவய என ஓதும் பஞ்சக்கரத்தில் நாலாம் எழுத்து - வகாரம், சத்தி. மாயை, சத்தி காரியமாதலின், மாயையினின்றே உலகம் தோன்றுதலின், உலகம் சத்திமயம் என்க. இனி, தோன்றியவாறே உலகம் மாயையில் ஒடுங்கி, மாயை சத்தியுள் ஒடுங்கும்.*

*குண்டலினி சத்தி சிரசை அடைந்தால், அது பிரணவ சத்தியாக மாறும். அஃதாவது உணர்வாகச் சத்தியை வெளிப்படுத்திக் காண்பவர்க்கு இதுவே நன்னெறியைக் காட்டும் என்க.*

*சத்தியே உலகுக்கு ஆதாரமாய்ச் சீவர்களுக்கு வழிகாட்டியாய் உள்ளது என்பதாம்.*

***955. தெளிவுரை :-*** *முன் திருமந்திரத்தில் கூறியாங்கு நமசிவய என்பதில் நாலாவது எழுத்தாகிய வகாரத்தைச் சிந்தித்த அடியேனுள்ளத்தைப் பராசக்தி விரும்பியமர்ந்தாள்; அதனால் காமியங்கருதிச் செய்யப்படும் நம் முதலான மந்திரப்பற்றும் அற்றது; காமியம்கருதிப் பிறதெய்வங்களைப் பற்றிப் பிதற்றும் பிதற்றல்களும் நீங்கின என்க. நம் முதலாக ஓதுவார் உயர வகாரத்தைச் சிந்திக்க என்றும், சிந்தித்தால் வருபயனிது வென்றும் விளக்கியருளியவாறு, நமசிவ என்பதனுள் யகரம் இல்லையே எனின், 'என்' என்றதால் ஆன்ம எழுத்தாகிய யகரம் குறிக்கப்பெற்றது. தியானிப்பவன் ய. தியானிக்கப் படுபொருள் சிவ. கழன்ற பொருள் ந ம க்களாகிய மலங்கள். ஆகவே நிஷ்காமிய இச்சை விளைந்தது என்பதாம்.*

*இயைந்தனள் ஏந்திழை என்னுள மேவி - முன்னர்க் கூறிய சத்தி ஆன்மாவாகிய என்னுடைய உள்ளத்தை விரும்பிப்*

**956.** ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினை
ஓமத்தி லேஉதம் பண்ணும் ஒருத்திதன்
நாம நமசிவ என்றிருப் பாருக்கு
நேமத் தலைவி நிலவிநின் றாளே. **60**

**957.** பட்ட பரிசே பரன்அஞ் செழுத்தின்
இட்டம் அறிந்திட் டிரவு பகல்வர
நட்டமதாடும் நடுவே நிலயங்கொண்
டட்டதே சப்பொருள் ஆகிநின் றானே. **61**

---

*பொருந்தினாள். நயந்தனள் அங்கே - அதனையே விரும்பி அங்கே அமர்ந்தனள். நமசிவ என்னும் பயந்தனையோரும் - நாம் சிவத்துக்கு அடிமை என்ற பயனை ஆராய்ந்து தெளியுங்கள். பதமது பற்றும் - பிரணவமான பதத்தைப் பற்றுங்கள். பெயர்ந்தனன் - உலகப் பற்றை நீங்கினேன். மற்றும் பிதற்றறுத்தேன் - வேறு பிதற்றல்களையும் ஒழித்தேன். (தெளிந்த ஞானம் பெற்றேன் என்க).*

*ஒளியில் விளங்கும் சிவ சத்திக்கு அடிமை என்றிருந்தால் ஞானம் உண்டாகும் என்பதாம்.*

*956. தெளிவுரை :- அரிசி முதலியவற்றில் உடலுக்கு நலந்தரும் பொருளாய் நின்று, அவை சோறு முதலியனவாய்ப் பக்குவப்பட்ட பின்பு அவற்றை, வயிற்றுத்தீ வேள்வித்தீயாகுமாறு அதில்நின்று அவிசாகச் சீரணிப்பிக்கின்ற அத்தன்மையளான திரோதான சத்திக்குரிய நகாரம் முதலாக நின்ற அந்நான்கெழுத்தே துணை என்று இருப்பவர்கட்குச் சிவசத்தி அவர்களது வழிபாட்டின் பயனைத் தரும் முதல்வியாய் நீங்காது நிற்பாள்.*

*குறிப்புரை :- ஆமம் -அரிசி. அன்னம் - சோறு. ஓமம் - வயிறு. இவை உபலக்கணம். 'ஓமம், உதம்' என்பன உருவகங்கள். உதம் - அவிசு. "இருந்து பண்ணும்" என்னும் அடைமொழியால், "ஒருத்தி" என்றது திரோதான சத்தியையாயிற்று. நகாரம் திரோதான சத்தி எழுத்தாகலின், அதனை முதலாக உடைய மந்திரமும் அவளதாயிற்று. நேமம், 'நியமம்' என்பதன் மரூஉ. 'இனிதாய், உதமாக, தலைவியாய்' என ஆக்கங்கள் வருவிக்க. 'உலகப் பயனை வேண்டுவார்க்குத் தூல பஞ்சாக்கரம் உரியது' என்பதை விளக்கியவாறு.*

*957. தெளிவுரை :- சிவன், 'ஐம்பூதம், இருசுடர், ஆன்மா' என்னும் உலகப் பொருள் எட்டுமாய் நிற்பவன் ஆதலால், அவரவர்*

**958.** அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரம் மலமாய் வரும்முப்பத் தாறில்
சிகாரம் சிவமா வகாரம் வடிவா
யகாரம் உயிரென் றறையலும் ஆமே. **62**

---

*விருப்பத்தை உணர்ந்து அவரவர் மேற்கொள்ளப்பட்ட வகையிலே அமைந்த அஞ்செழுத்தின் உள் நின்று இரவும் பகலும் ஆகிய காலங்கள் மாறிமாறித் தொடர்ந்துவர இடையறாது நடம் புரிந்து நிற்பான்.*

***குறிப்புரை :-*** *'பட்ட பரிசே அஞ்செழுத்தின் நடுவே நிலயங் கொண்டு ஆடும்' என்க. பட்டபரிசே ஆடுதலாவது, தூல பஞ்சாக்கரத்தின் நடுவில் ஊன நடனத்தையும், சூக்கும பஞ்சாக்கரத்தின் நடுவில் ஞான நடனத்தையும் செய்தல். ஈற்றில் 'ஆதலால்' என்னும் சொல்லெச்சம் வருவிக்கப்பட்டது. ஈற்றடி, வேண்டுவோர் வேண்டுவனவற்றை அறிதல் கூறி, 'அங்ஙனம் அறிதலால், அவரவர்க்கு உரிய பயனை அளித்தல் அல்லது நியதியின்றி அளியான்' என்பது உணர்த்தப்பட்டது. தூலமும், சூக்குமமும் ஆகிய பஞ்சாக்கரங்கள் தத்தம் பயனையே தருதலன்றிப் பிறிது பயன் தாராமையைக் காரணங்காட்டி விளக்கியவாறு. "நம" ஊன நடனத்தையும், "சிவ" ஞான நடனத்தையும் குறித்தலைப் பா. 955, பா.956 இல் உணர்த்தியுள்ளார் எனக் கோடல் பொருத்தம். பட்டமும் அதற்காகப் பெறும் பரிசினும் மிக மேலானது. சீபஞ்சாக்கரம் என்றும் கொள்ளலாம்.*

***958. தெளிவுரை :-*** *முப்பத்தாறு தத்துவங்களில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் அகாரத்தைப் பற்றியும், சிவ தத்துவம் ஐந்தும் உகாரத்தைப் பற்றியும், வித்தியா தத்துவம் ஏழும் மகாரத்தைப் பற்றியும் நிற்கும். இனித் திருவைந்தெழுத்தில் சிறப்புடைய மூன்றில் அவ்வாறின்றிச் சிகாரம் சிவமும், வகாரம் சத்தியுமேயாக, யகாரம் ஆன்மாவேயாம் என்று சொல்லுதலும் கூடும்.*

***குறிப்புரை :-*** *மேல் பிரணவ கலைகளையும், திருவைந் தெழுத்தையும் ஒப்ப வைத்துக் கூறிவந்தமை பற்றி மயங்காமைப் பொருட்டு இவ்வாறு கூறி அக்கலைகளினும் திருவைந்தெழுத்துக்கள் உயர்ந்தனவாதலை விளக்கினார்.*

*''முப்பத்தாறில்'' என்பதை முதலில் வைத்து உரைக்க,*

**959.** நகார மகார சிகாரம் நடுவா
வகாரம் இரண்டு வளியுடன் கூடி
ஒகாரம் முதற்கொண் டொருகால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே. **63**

---

*"முப்பத்தாறில்" என்றதனால், 'உயிர், பரம், மலம்' என்பன அவை பற்றிய தத்துவங்களே ஆதல் விளங்கும். 'மலம்' என்றது, 'அசுத்தம்' என்னும் பொருட்டாய், அசுத்தமாயா தத்துவங்களை உணர்த்திற்று, வடிவு - சிவனது உருவம்; அது சத்தியாதல் அறிக. 'சிவம், வடிவு, உயிர்' என்பவற்றில் தேற்றேகாரங்கள் தொகுத்தலாயின. அவற்றால், அவற்றின் பொருள்கள் சடமாகாது சித்தாதலும் அப்பொருள்களோடு அவ்வெழுத்திற்கு உள்ள பேருரிமையும் தோன்றுவனவாம். அவை பற்றியே "அறையலும் ஆம்" என உயர்வு சிறப்பும்மை கொடுத்துக் கூறினார்.*

*எனின் பிரணவபஞ்சாக்கர வியட்டி சடப்பொருள்களாயும், சீபஞ்சாக்கரம் சித்துப்பொருளாயும் விளங்கும் முறையை உணர்த்துதல் நுதலிற்று. அகாரமாகிய பசுவும், உகாரமாகிய பதியும், மகாரமாகிய பாசமும் ஆக வருகின்ற தத்துவங்கள் முப்பத்தாறைப்போல, சீபஞ்சாக்கரத்துள் சிகாரம் சிவமாயும், வகாரம் அவன் திருமேனி யாகவும், யகாரம் ஆன்மாவாகவும் சொல்லநிற்பன என்றவாறு.*

*ஓம் என்பதன் வியட்டி நிலையில், அகாரம் ஆன்ம தத்துவம் இருபத்தைந்தாகவும்; உகாரம் சிவதத்துவம் ஐந்தாகவும், மகாரம் வித்தியா தத்துவம் ஆறாகவும் இருந்து முப்பத்தாறாதல் காண்க. உயிர், பரம், மலம் என்பன அவற்றின் தத்துவங்களை உணர்த்தின. தத்துவங்கள் அனைத்தும் சடமே.*

*சீபஞ்சாக்கரம் சிவம் சத்தி ஆன்மா எனச் சித்தாதல் காண்க. ஆகவே நாதகாரியமான பிரணவத்தினும் சீபஞ்சாக்கரம் சிறந்ததென்றபடிம், ஈண்டுக் கூறியது சூக்கும பிரணவபஞ்சாக்கரமாகிய பிரணவத்தையன்றென்க. வகாரம் வடிவென்றது, முன்னரும் 'சீரெழுத்தாய் அங்கியாய்' (970) என்பதால் உணர்த்தப்பெற்றது. அறையலும்; உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.*

**960.** **அஞ்சுள ஆனை அடவியுள் வாழ்வன**
**அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன**
**அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே**
**அஞ்சாதி ஆதி யகம்புகல் ஆமே. 64**

---

*959.* ***தெளிவுரை :-*** *நகார மகாரங்களை முன்னர் உடைய சிகாரம் நடுவணதாய் நிற்க. அவற்றின் பின்னதாகிய வகாரம் இடைகலை, பிங்கலை என்னும் இரு வாயுக்களுடன் பொருந்தி, ஓங்காரத்தை முதற்கண்ணே பெற்று ஓதப்படின், மேற்கூறிய எழுத்துக்களில் மகாரத்திற்கு முதல்வனாய் நின்று அதனைப் பரிபாகப்படுத்திவரும் சிவன், அங்ஙனம் ஓதுவாரது உள்ளத்தைத் தனக்கு இடமமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பான். ஓம் நமசிவாய எனச் செபிக்கின் சிவன் சித்தத்துள் மன்னுவன்.*

***குறிப்புரை :-*** *"நடுவாய்" என்றமையால், நகார மகாரங்களை உடைமை முதற்கண்ணதாயிற்று. 'நடுவாய் நிற்க' என ஒரு சொல் வருவிக்க. உரைக்க - உரைக்கப்பட, தூல பஞ்சாக்கரமாதலின் ஊன நடனப் பிரானையே கூறினார். மேல் இரண்டிடங்களில் (955, 56) எடுத்தோதிய 'நமசிவ' என்பதனை முதலில் பிரணவத்தோடு கூட்டிப் பிராணாயாமத்துடன் ஓதல் வேண்டும் என்பது உணர்த்தியவாறு.*

*"நாலாம் எழுத்தோசை" (பா. 954) என்பது முதல், இதுகாறும் அஞ்செழுத்து நாலெழுத்தாயும் நிற்கும் முறைமையே கூறினார். மகாரம் - தொண்டை. சிகாரம் - கண்கள். நகாரம் - கடைவாய் முதல் புருவமத்தி வரை.*

*960.* ***தெளிவுரை :-*** *ஒரு காட்டில் வாழ்வனவாகிய ஓர் ஐந்து யானைகள் உள்ளன. அவைகளை அடக்குதற்குச் சிவ நாமத்தில் உள்ள ஐந்து எழுத்துக்களே அங்குசங்களாய் உதவும். அந்த அங்குசத்தைக் கொண்டு அவைகளை முழுதும் அடக்கவல்லவர்கட்கே ஐந்து பூதம் முதலிய தத்துவங்கட்கு முதல்வனும், முதற்கடவுளுமாகிய சிவனது இடத்தில் புகுதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *அடவி - உடம்பு. "அஞ்சு ஆனை" என்றதும் 'அடவி' என்றதும், 'தாம் குறித்த அவை' என்னும் பொருளாய் நின்றன. அவை ஐம்பொறிகளும், தத்துவ தாத்துவிகக் கூட்டங்களுமாம். "அஞ்சுக்கும் அஞ்செழுத்து" என்றது நயம் தோற்றி நின்றது. நகாரம்*

**961.** ஐந்து கலையில் அகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகாராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடும்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. 65

---

*முதலியவற்றை மூக்கு, நாக்கு, கண், மெய், செவி" என்பவற்றோடு முறையே இயைத்துக் காட்ட முயல்வாரும் உளர். கூட - ஒருசேர, 'அஞ்சாதி யாகிய ஆதி' என்க. அகம் திருவடி நிழல்.*

| எழுத்து | தன்மாத்திரை | பொறி |
|---|---|---|
| ய | சப்தம் | காது |
| வா | பரிசம் | மூக்கு |
| சி | உருவம் | கண் |
| ம | ரசம் | நாக்கு |
| ந | கந்தம் | மெய் |

*அடக்கும் முறைபற்றி 950, 921, 922, 975 ஆகிய மந்திரங்களைக் காண்க.*

***961. தெளிவுரை :-*** *நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகளில் உள்ள அகரம் முதலிய எழுத்துக்களில் சிலவாயுள்ள நகாரம் முதலிய ஐந்தெழுத்துக்களை அம்முறையில் நில்லாது பிரணவம் முதலாக மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களிலும் முறையே நிற்க மாற்றி வைத்து, தடத்த சிவனை மூலாதாரம் முதலாகவே திரோதான சத்தியோடுகூடத் தியானித்து, இவ்வாறு சந்தியா காலங்களில் வழிபடுவார்க்கு வேறு சந்தியாவந்தனம் முதலிய சடங்குகள் வேண்டுவதில்லை.*

***குறிப்புரை :-*** *"ஐந்து கலையில் அகராதி" என்பதில், ஏழனுருபு பெயரோடு முடிந்தது. "தன்னில்" என்பது பன்மையொருமை மயக்கம். "ஐந்து கலையியல் அகராதி தன்னிலே வந்த நகராதிமாற்றி" என்றது, 'பிற எழுத்துக்களுள் சிலவாய அவையாக நிலையாமல் வேறாக மதிக்க' என்பது உணர்த்தற்கு. மேல் (பா. 959) "மகார முதல்வன்" என்றவாறே இங்கு "மகாராதி" என்றார். இங்குக் கூறுகின்றதும் தூல பஞ்சாக்கரமாதல் பற்றி. தூல பஞ்சாக்கரத்தை இறைவன் திருவடி முதலாகக் கொண்டு நிற்கும் முறையிலே ஆதாரங்களில் அமைத்தல் வேண்டும் என்பது கருத்து. ''மூலத்தே'' என்றது, ''மூலத்தில்*

**962.** மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த யோகமும் ஞானமு மாகும்
தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
அருள்தங்கி அச்சிவ மாவது வீடே. **66**

---

*தொடங்கியே" என்றவாறு. மூலாதாரம் முதலிய எல்லா ஆதாரங் களிலும் 'சிவனையே அவனது சத்தியோடு தியானிக்க' என்றது, 'ஆதார மூர்த்திகளைச் சம்பு பட்சத்தினராகத் தியானிக்க' என்றதாம். சிறப்புப் பற்றிச் சந்தியாகாலத்தையே வரைந்தோதினார். அதனால், பிற காலங்கள் தவிர்க்கப்பட்டன அல்லவாம். "சடங்கு" என்றது, 'பிறிது சடங்கு' என்னும் குறிப்பினது. "தான்" என்பது கட்டுரைச் சுவைபட நின்றது. நகராதி மாற்றி - நம் முதலாக ஓதியதனைச் சிம் முதலாக மாற்றி. சிவாயநம எனவோதி.*

*பேரம்பலச் சக்கரத்தில் நிற்கும் ஐம்பத்தோரெழுத்துக்களை அகாரம் முதலாகத் தொடங்கி எண்ணுதல் அவற்றின் தோற்ற முறையாகும். அம்முறையில் முதல் தொடங்கிப் பதினாறு (உயிர்) எழுத்துக்கள் சாந்தியதீத கலையில் நிற்கும் (மெய்யெழுத்துக்களில்) ஒன்று, இரண்டு, மூன்று ஆகிய மூன்றெழுத்துக்கள் சாந்தி கலையில் நிற்கும். அடுத்த ஏழெழுத்துக்கள் வித்தியா கலையில் நிற்கும். அடுத்த இருபத்து நான்கு எழுத்துக்கள் பிரதிட்டா கலையில் நிற்கும். இறுதி எழுத்தாகிய க்ஷகாரம் ஒன்றும் நிவிர்த்தி கலையில் நிற்கும் என்க.*

***962. தெளிவுரை :-** உயிர்கள் சிவனை அடைவதற்கு வாயிலாகப் பொருந்தி, 'சிவாய' என்னும் மூன்றெழுத்துக்களே உயிர்கட்கு உயிரும், கிடைத்தற்கரிய யோகமும், ஞானமுமாய்ச் சிறந்து நிற்பன. இவ்வுண்மையைப் பரிபாகம் வரப் பெற்றமையால் __நகர மகரங்களின் நீங்கி யகரமாய் நின்ற உயிர், வகரமாகிய அருளிலே தங்கிப் பின் சிகரமாகிய சிவத்தை அடைந்து அதுவாய் விடுதலே வீடுபேறாம்__.*

***குறிப்புரை :-** வருவித்துரைத்தவை ஆற்றலால் வந்தன. அரு மருந்து - தேவாமுதம். அருமந்த, "அருமருந்தன்ன என்பதன் மரூஉ. 'சிவயோகம்' என்றற்கு, "அருமருந்தன்ன யோகம்" என்றார். இவ் அடைஞானத்திற்கும் உரியதாகலின், அதுவும் சிவஞானமாயிற்று. சிவயோக சிவஞானங்களன்றிப் பிற யோக ஞானங்கள் வீடு பயவாமை அறிக. "வீடே" என்னும் ஏகாரம், பிரிநிலையாய்ப் பிறவாறு கூறப்படும் வீடுகள் வீடல்ல என்பது உணர்த்தி நின்றது.*

**963.** **அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்**
**நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்**
**வஞ்சகம் இல்லை மனைக்கும் அழிவில்லை**
**தஞ்சம் இதுஎன்று சாற்றுகின் றேனே.** **67**

**964.** **சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்**
**சிவாயவொ டவ்வே சிவனுரு வாகும்**
**சிவாயவொ டவ்வும் தெளியவல் லார்கள்**
**சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே.** **68**

---

மேல், *'பல எழுத்துக்களுள் நின்ற சில எழுத்தாகாது அவற்றின் வேறாய் உயர்ந்து நிற்பன'* எனக்கூறப்பட்ட ஐந்தெழுத்துக்களுள் மூன்றெழுத்து முத்தி மந்திரமாய்ச் சிறந்து நிற்பன என்பது உணர்த்தியவாறு. இங்கு, "சிவாயமே" என ஓதிய இதனாலும், அஞ்செழுத்து இறுதியில் மகாரத்தோடு நிற்றலும் உண்டு என்பது அறியப்படும். "சிவாயவே" எனப் பாடம் ஓதினும் ஆம்.

*963. **தெளிவுரை :-** ஐந்து மலங்களும் நீங்கிப் போகும்படி அஞ்செழுத்தின் பொருளை எவரேனும் அறிந்தபின், இறைவன் அவர்களது நெஞ்சத்தில் நிரம்பி விளங்குவான். அவர்களது உறைவிடத்திற்கும் 'அழிவு' என்பது உண்டாகாது. ஆகையால், இந்த மந்திரமே யாவர்க்கும் புகலிடமாகும். நான் உண்மையாகவே சொல்லுகின்றேன். இதில் சிறிதும் பொய்யில்லை.*

*குறிப்புரை :- ஐந்து மலங்களாவன; ஆணவம், கன்மம், மாயை மாயேயம், திரோதாயி என்பன.*

*"மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்றான்".*

*-தி.8 அச்சோப்பதிகம், பா.9*

*என்றதேயன்றி*

*"மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற்பொறு*
*மத்தெனவே".*

*-தி.8 நீத்தல் விண்ணப்பம், பா.29*

*எனவும் அருளிச் செய்தமை காண்க. உகுதல் - சிந்திப்போதல். "உண்மை" என்றது பொருளை. அஞ்செழுத்தின் பொருள்கள் மேலே பலவிடத்தும் கூறப்பட்டன. உண்மை விளக்கம், திருவருட்பயன் என்னும் நூல்களிலும் தெளியக் காண்க. 'பொருளை அறிதல்'*

**965.** சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஒகார முடனே ஒருகால் உரைக்க
மகார முதல்வன் மதித்துநின் றானே. **69**

---

*மேற்கூறிய மூன்றெழுத்துக்களின் சிறப்பு உணர்தலைப் பயக்குமாதலின், "அறிந்த பின், நெஞ்சகத்து உள்ளே நிறையும் பராபரம்" என்றார், **மனை, பெத்தத்தில் உடம்பும், முத்தியில் அருளுமாம்**. 'மனைக்கு அழிவில்லை' எனவே, 'அருளே நிலைக்களமாய்விடும்' என்றதாயிற்று. ஆகவே, மேற் கூறிய மூன்றெழுத்தின் பெருமை இதனால் வலியுறுத்தப்பட்டதாம்.*

***964. தெளிவுரை :-*** *அவ்வும் சிவாய என ஓதுவார் சிவத்தோடு இரண்டறத் தெளிந்திருப்பார் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*சிவாய என்னும் மந்திரத்துடனும் அவற்றையே இணைத்து சிவாயசிவ என ஓத, சிவ சத்திகளோடு யகாரமாகிய ஆன்மாவும் அப்போதே சிவனுருவம் பெறும்; இவ்வண்ணம் ஆன்மா சிவசத்திகளோடு கலந்திருத்தலை அறியவல்லார்கள் சிவாயசிவ என்பதே மேலான மந்திரம் என்று தெளிந்திருந்தார் ஆவர் என்றவாறு.*

*அவ்வே என்பதற்கு ஹம்ஸ மந்திரம் எனப் பொருள் கொண்டு சிவாயவொடு அவ்வே - 'சிவாய ஹாஸ' என்றுரைப்பாரும் உளர். தெளிந்திருந்தாரென இறந்த காலத்தாற் கூறியது துணிவுபற்றி.*

***965. தெளிவுரை :-*** *ஓம் சிவாயநம என்று ஒருமுறை கூறும் உரைக்கு நாதன் வெளிப்படுவன் என்பது உணர்த்துதல் நுதலிற்று. சிவாயநம என்று மனம் பொருந்தத் தியானித்து, ஓம் என்பதனுடன் இணைத்துச் செபிக்க நாதத்தலைவனாகிய சிவம் இவர்களை மதித்து வெளிநின்றான் என்றவாறு.*

*முன் 'நகாரமகாரம்' (976) என்னும் திருமந்திரத்து **போகம் விழைவார் நம் முதலாக ஓதுக என்றார். இம்மந்திரத்து மோக்ஷம் வேண்டுவோர் சிம்முதலாக ஓதுக என்கின்றார். இவற்றுள் முன்னையது வேதமுறையென்றும், பின்னது ஆகமநெறி யென்றும் கூறுவது முண்டு**. நடு - மனம், புருவமத்தியில் வைத்துத் தியானஞ்செய்து என்றுமாம், நாடியென்றது மானசிக செபத்தை. உரைக்கு என்பது வாசிக செபத்தை.*

**966.** நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முதல் உள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகும் சதாசிவன் றானே. 70

**967.** நவமும் சிவமும் உயிர்பர மாகும்
தவம்ஒன் றிலாதன தத்துவ மாகும்
சிவம்ஒன்றி ஆய்பவர் ஆதர வால்அச்
சிவம்என்ப தானாம் எனும்தெளி வுற்றதே. 71

---

*966.* **தெளிவுரை :-** *எனின், நம்முதல் ஓதுவார்க்கும், சிம்முதல் ஓதுவார்க்கும் விளையும் நிலைவேறுபாடு இவை எனத் தெரிவித்தல் நுதலிற்று. நகார முதலாகிய ஐந்தெழுத்துக்களால் நல்வினைப் போகங்கள் விளையும். அவ்வண்ணம் ஓதி ஆற்றல்கெட்ட வலிய வினைகளை யுடையராகிச் சிகார முதலாக மனத்துள் தியானித்துத் தெளியவல்லவர்கட்குப் போகசிவமாகிய சதாசிவம் முதல்வனாயிருந்து கருணைசெய்வர் என்றவாறு.*

*இதனால் நமசிவய என ஓதினால் விரும்பிய கருமம் கைகூடுவதோடு, வல்வினைகளும் அடங்கும். பின்பு சிவயநம எனத் தியானிக்கின் சதாசிவநாயனாரே முதல்வராக எழுந்தருளி அருள்வழங்குவர் என்பது விளக்கியவாறு.*

*நாடும் கருமங்கள் - நாடிய காரியங்கள்; என்றது அவற்றானாய பயனையும் உணர்த்திற்று. ஆம் என ஒரு சொல் வருவித்து முடிக்க. அம்முதல் ஐந்தில் - அந்த முதற்கண் ஓதப்பெற்ற நம்முதலாய தூல பஞ்சாக்கரத்தால், அடங்கிய வல்வினை ஆம் - வல்வினைகளும் வலி குன்றியன. ஆம், இவ்வண்ணம் வினைவாசனையும தாக்காது நீங்கவே சூக்கும ஐந்தெழுத்தாகிய சிவயநம என்பதைத் தியானிக்க. அதனால் சதாசிவமூர்த்தியே வெளிப்பட்டருளுவர் என்பதாம். அதிகாரி பேதம் நோக்கித் திருவைந்தெழுத்து ஓதுமுறை உணர்த்தப்பெற்றது. நமசிவய என ஓதி என்பதையும் சிவயநமவென உள்ளே தெளியவல்லார் எனவும் கூறுதல் கொண்டு செபிக்கு முறையை ஊன்றியறிக. சகலான்மாக்களாகிய நாம் பரிபாகமுற்றமையால் சீகண்டருத்ர மாகேச்சுரர்களுக்கு மேலுள்ள போகமூர்த்தியே தலைவனாம் என்பதாம்.*

*967.* **தெளிவுரை :-** *எனின், திருவைந்தெழுத்துள் இவை சீவன், இவை பரம் எனப் பகுத்துணர்த்துதல் நுதலிற்று.*

**968.** கூடிய எட்டும் இரண்டும் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள் ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குற வாவர்கள்
தேடி யதனைத் தெளிந்தறி யீரே. 72

---

*ந__மய என்பதும், சிவ என்பதும் முறையே உயிரும் பரமும் ஆம்__. இவை தவத்தோடு ஒப்பாவன இல்லையாம். வீடுபேறாகிய மெய்ப் பொருளைத் தருவனவாம். சிவபெருமானோடு ஒன்றியிருந்து ஆய்பவர்களின் அன்பால் அச்சிவமெனும் பொருளும் தானே யாம் என்னுந்தெளிவு அவர்களுக்குப் பொருந்தியதாம் என்றவாறு.*

*நவம் உயிராகும் - நகாரமும் மகாரமும் யகாரமும் உயிராம்: என்றது நமக்கள் உயிருக்காக இறைவனால் உதவப்பெற்ற மலமும் திரோதமுமாம். யகாரம் உயிராம் என உணர நின்றது.*

*சிவம் பரமாகும் - சிவ என்பன சிவசத்திகளாகப் பரம்பொருளாம். இதனால் திருவைந்தெழுத்து சீவபரம் என்னும் இரு பகுதியவாம் என்பதுணர்த்தியவாறு.*

*தவம் ஒன்று இலாதன - தவத்தோடு ஒன்றுதல் இல்லாதனவாம். ஒன்று; முதனிலைத் தொழிற்பெயர். தவப்பயன் போல உண்டு கழிக்குந் தன்மையவல்லாமல் நிலைத்த முத்திப்பேறளிப்பனவாம் என்றவாறு.*

*தத்துவம் ஆகும் - மெய்ப்பொருளாகும். "வேத நான்கினும் மெய்ப்பொருளாவது நாதனாமம் நமச்சிவாயவே" என்ற சுருதியும் இக்கருத்தே விளக்குவதாம்.*

*சிவம் ஒன்றி ஆய்பவர் - சிவயநம என்பதனுள் யகரமாகிய உயிர் நம என்னும் மலச்சார்பைப் பற்றாது சிவச்சார்பைப்பற்றி ஒருங்கித் தியானிப்பவர். ஆதரவால் அவர்களது இடைவிடாப்பேரன்பால்.*

*அச்சிவம் 'தான் ஆம்' என்னுந்தெளிவு உற்றது - நமப் பற்றற்றார்க்குப் பற்றாகிய சிவம் ஆன்மாவாகிய தானேயாம் என்னும் தெளிந்த ஞானம் பிறந்ததாம் என்பது கருத்து.*

***968. தெளிவுரை :-*** *எனின், திருவடிஞானத்தில் உயிர் ஈடுபட்டால் விடயசுகங்களில் இழுத்துச் சென்ற பொறிகளும் திருந்தும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*சீபஞ்சாக்கரத்தில் கூடியுள்ள யகரமாகிய உயிர், எட்டின்*

**969.** எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. **73**

---

*வடிவாகிய அகரத்தோடும் இரண்டின் வடிவாகிய உகரத்தோடும் குவிதலால் அறியப்படும் தேடிய பொருளாகிய சிவத்தை ஞானத்துள் வைத்து ஞானத்தாலறிய புறவிடயங்களிற் சென்று பற்றி ஆடிய ஐம்பொறிகளார் புறப்பற்றை விட்டு நம்முயற்சிக்குத் துணையாவார். ஆதலால் அத்தகைய உண்மையாகிய அதனைத் தேடித் தெளியுங்கள் என்றவாறு.*

*கூடிய எட்டும் இரண்டும் குவிந்து அறி(நந்தியை) நாடிய நந்தியை ஞானத்துளேவைத்து (வைக்க) ஆடிய ஐவரும் உறவாவர், அதனைத் தேடி தெளிந்து அறியீர் எனக் கண்ணழித்து முடிவு காண்க.*

*கூடி + ய - சீபஞ்சாக்கரத்துள் கூடி (உள்ள) ய என்னும் சீவாக்கரம். எட்டு - எட்டென்னும் எண்ணின் வடிவாகிய 'அ', இரண்டு - இரண்டென்னும் எண்ணின் வடிவாகிய 'உ'. அகரம் - சிவம்; உகரம் - சத்தி. அதனைக் குவிந்து அறிதலாவது ஒன்றியிருந்து நினைத்தல். அறி நந்தி, நாடிய நந்தி எனத் தனித்தனிக் கூட்டிப்பொருள் காண்க.*

*ஞானத்துள்ளே வைத்து - கருவி கரணங்களால் உணர்தற்கு அரியனாதலின் "ஞானத்தால் அறிவார்கள் ஞானிகள்" என்ற அப்பர் திருமறைக்கொப்ப ஞானத்தால் அறிய, வைத்து என்ற செய்தெனெச்சத்தைச் செயவென்னெச்சமாக்கிப் பொருள்காண்க.*

*ஆடிய ஐவர் - உலக இன்பமே பெரிதென்று அடங்காப்பிடாரி களாய்த் தம் இஷ்டப்படி ஆடிய ஐந்து இந்திரியங்கள். அங்கு உறவு ஆவர்கள் - பதிஞானம் மேவிப் பசு பாசஞானங்கள் அடங்கிய காலத்து புறத்திற் சென்று பற்றாது பதியருள் மேவுதலின் தாமும் உறவாவார்கள் என்றபடி.*

*உறவாதல் - ஐந்துபேரறிவும் கண்களேகொள்ள வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்தற்குத் துணையாதல். அதனை - நந்தியை.*

***969. தெளிவுரை :- எனின், சிவம், சத்தி, உயிர் இவற்றை அறிதலே சன்மார்க்க நெறியெனல் நுதலிற்று.***

**970.** எட்டு வரையின்மேல் எட்டு வரைகீறி
யிட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்தி லேஅறை நாற்பத்தெட் டும்இட்டுச்
சிட்டஞ் செழுத்தும் செபிசீக் கிரமே. 74

**971.** தானவர் சிட்டர்சதுரர் இருவர்
ஆனஇம் மூவரோடாற்ற அராதிகள்
ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமும்
சேனையும் செய்சிவ சக்கரந் தானே. 75

---

*எட்டும் இரண்டும் இனிதாக அறிகின்றிலர்; எட்டும் இரண்டும் அறியாத மூடர்கள். எட்டும் இரண்டும் பத்தென்பதே சித்தாந்த சன்மார்க்க பாதமாம் என்றவாறு.*

*எட்டு - அ. இரண்டு - உ. அதாவது சிவமும் சத்தியும். இவற்றையறிதலாவது பரமபிதா மாதா என்று அறிதல். ஏழையர் - அறிவிலிகள். எட்டு - எட்டென்னும் எண். இரண்டு - இரண்டென்னும் எண். அவர்கள் எண்களே அறியகிற்றிலர் என்க. எட்டும் இரண்டும் இருமூன்று நான்கு எனப்பட்டது - எட்டும் இரண்டும், ஆறும் நான்கும் கூடிய தொகையாகிய பத்தாம். பத்தின் வடிவு ய; இது உயிர். ஆகவே இறை, சத்தி. உயிர் இவற்றை அறிதலாகிய தன்னையும் தலைவனையும் அறிதலே சைவசித்தாந்த ஞானபாதமாம். சன்மார்க்கம் - ஞானம். சன்மார்க்கபாதம் - ஞானபாதம். சைவ சித்தாந்தம் - சைவ சித்தாந்த நூலாகிய சிவாகமங்கள், தன்னையும் தலைவனையும் அறியவே தடையையறிதலும் நீக்குதலும் பெறப்படும். ஆகவே இறை சத்தி உயிர் தடைகளையறிந்து, தடையினின்றுநீங்கி இறை சத்திகளை எய்தும் உபாயம் உணர்த்துவதே ஞானபாதமாம் என்க. இவற்றையே சி, வ, ய, ந, ம என்னும் சீபஞ்சாக்கரமும் உணர்த்துகிறது.*

***970. தெளிவுரை :-** செங்குத்தாக எட்டு நேர்க்கோடு கிழித்து, அவற்றின் மேல் குறுக்காக எட்டுக் கோடுகளை இழுக்க நாற்பத் தொன்பது அறைகள் உண்டாகும்; அவற்றுள் நடு அறையில் இறைவன் எழுத்தாகிய சிகாரம் அமையுமாறுமேல் (பா.906) மேற்கூறியபடி திருவைந் தெழுத்தை ஐந்து வகையாக மாற்றி முறையே இருபத்தைந்து அறைகளில் பொறித்தபின், நடு அறையொழித்த நாற்பத்தெட்டு அறைகளிலும் எழுத்துக்கள்*

*இருக்கச்செய்ய வேண்டும்; அஃதாவது எஞ்சிய இருபத்து நான்கு அறைகளிலும் பிற எழுத்துக்களைப் பொறிக்க வேண்டும். அவ்வாறு செய்தவுடன் சக்கரத்தை வழிபட்டுத் திருவைந்தெழுத்தைச் செபிக்கத் தொடங்கலாம்.*

***குறிப்புரை :- “கீறியிட்ட” என்பது ஒருசொல், கீறியிட்ட நடுவு***



*- கீறியதனால் உண்டான நடு அறை. ‘ஒன்றியபின்’ என்பது, “ஒன்றில்” எனத் திரிந்து நின்றது. வட்டம் - சக்கரம். ‘நாற்பத்தெட்டிலும் எழுத்தை இட்டு’ எனச் செயப்படுபொருள் வருவித்துக் கொள்க. ‘சிட்ட’ என்பதில் அகரம் தொகுத்தலாயிற்று. சிட்டம் - மேன்மை, எஞ்சிய இருபத்து நான்கு அறைகளிலும் பொறித்தற்கு உரிய எழுத்துக்கள் வருகின்ற மந்திரத்திற் கூறப்படும்.*

***971. தெளிவுரை :- தானம் - இடம். தானவர் - இடங்காவலர்; (க்ஷேத்திர பாலகர்) பைரவர். சட்டர் - செப்பம் செய்பவர்; குற்றம் செய்தோரை ஒறுத்துத் திருத்துபவர்; வீரபத்திரர். சதுரர் இருவர் - திறமுடைய மகார் இருவர்; பிள்ளையாரும், முருகரும். ஆன இம் மூவர் இவ்வாறு மூன்று வகையாகச் சொல்ல நின்றவர். ஆற்ற அராதிகள் - நெறியில் உள்ள உருத்திரர் முதலியோர்; உருத்திரர் முதலாகக் கீழ் நோக்கி எண்ண வருகின்ற மாலும், அயனும், உருத்திரர் முதலாக மேல் நோக்கி எண்ணவருகின்ற மகேசுரர், சதாசிவரும் ஆக ஐவர். ஏனைப் பதினைந்தும் - மேற்சொல்லிய ஒன்பதின்மரது எழுத்துக்களையும் பொறித்தபின் எஞ்சி நிற்கின்ற பதினைந்து***

*அறைகளிலும், விந்து நாதம், சூழ்படை (பரிவாரங்கள்) என்ப வற்றது எழுத்துக்களைப் பொறிக்கச் சிவசக்கரம் அமையும்.*

**குறிப்புரை :-** *இச்சக்கரத்தின் வடிவம் ஆமாறு:*

*'கள்' விகுதி உயர்திணைப் பன்மையையும் உணர்த்தி நிற்றல் பிற்கால வழக்காதல் வெளிப்படை, ''ஏனைப் பதினைந்து'' என்றதனால், 'முன்னர்க் கூறப்பட்டன ஒன்பது' என்பது பெறப்பட்டது. பதினைந்தில் விந்து நாதங்களைப் பிரித்தமையால், சேனை பதின் மூன்றாயிற்று. "சேனை" எனப்பட்ட பதின்மூவராவார் திசை காவலர் எண்மரும், நந்தி மகாளர், பிருங்கி, இடபர், சண்டர் என்னும் ஐவரும் ஆவர். ஈற்றில், அமையும் என்னும் பயனிலை எஞ்சி நின்றது.*

*விளிம்பு அறை இருபத்து நான்கிலும் உள்ள எழுத்துக்களின் விளக்கம் வருமாறு:-*

*1. ளம் - இந்திரன், 2. ரம் - அக்கினி, 3. யம் - யமன், 4. ந்ரும் - நிருதி, 5. வம் - வருணன், 6. ஹ்யம் - வாயு, 7. கம் - குபேரன், 8. ஈம் - ஈசானன்.*

*9. ஹ்லாம் - பிரமன் 10. ஹ்வீம் - திருமால் 11. ஹ்ரூம் - உருத்திரன் 12. ஹ்யைம் - மகேசுவரன் 13. ஹ - சதாசிவன் 14. அம் - விந்து 15. அ - நாதம்.*

*16. கம் - கணபதி 17. ஸம் - கந்தன் 18. நம் - நந்தி 19. ரும் - இடபன் 20. ஸம் - மகாகாளன் 21. ப்ரும் - பிருங்கி 22. ஹ்வம் - வீரபத்திரன் 23. சம் - சண்டன் 24. பம் - பைரவன்.*

*மையக் கட்டத்தில் இறைவன் எழுத்தாகிய சிகாரம் நிற்றலைக் காண்க.*

*இவ்வரிசை எண் வழிபாட்டு முறை பற்றியது. நாயனார் சொல் சுருங்கிச் செய்யுளாமாறு பற்றியே கூறினார்; வழிபாட்டு முறை பற்றிக் கூறினாரல்லர், அஃது ஆசிரியன்மார் அறிவுறுக்க அறிந்து கொள்ளப்படும் ஆதலின்,*

*சக்கரத்தின் மேற்பக்கம் வடக்காகும். ஆன்மார்த்த வழிபாட்டில், வழிபடுவோர் வடக்குநோக்கி அமர்ந்திருக்க, வழிபாட்டிடம் மேற்கு நோக்கிய நுழைவாயிலைக் கொண்டிருக்கும். அதனால், சக்கரத்தின் நுழைவாயிலும் மேற்கு நோக்கியே இருக்கும்.*

*அம்முறையில் இருத்தப்பட்ட இச்சக்கரத்தின் முதற்கண் திசை*

972. பட்டன மாதவம் ஆற்றும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நம என்பர்
எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்
ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே. 76

973. சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றான
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதல் சங்கரன் தன்பெயர் தானே. 77

---

*காவலரை இந்திரன் முதலாக ஈசானன் ஈறாக முறையே வலமாக வழிபட்டு, அதன்பின் பிரமன் முதலாக நாதம் ஈறாக முறையே வலமாக வழிபட்டு, மூன்றாவது கணபதி முதலாகப் பைரவர் ஈறாக முறையே வலமாக வழிபட்டு, வழிபாடு முடிந்த பின்னர் அம்முறையே ஒவ்வொரு மந்திரத்தையும் பத்துப் பத்து உருச் செபித்துப் பின் திரு வைந்தெழுத்தை நூற்றெட்டு முதலாக வேண்டும் அளவு செபிக்கலாம். இது, போக சாதன முறை.*

*முத்தி சாதன முறைக்குத் திசை காவலரைவழிபட்ட பின்னர்க் கணபதி முதலாகத் தொடங்கி நேரே வலமாகச் சென்று பைரவனோடு ஒரே வழிபாடாக முடிக்கப்படும். திருவைந்தெழுத்தும் இவ் இருமுறை கட்கும் ஏற்றவாறு செபிக்கப்படுதல், மேற் பலவிடத்தும் கூறப்பட்டது.*

*இச்சக்கரத்தை மேற்கூறியவாறு வைத்து நோக்கின், வலப் பாதி காரணக் கடவுளர் பகுதியாயும் இடப்பாதி காரியக் கடவுளர் பகுதியாயும் நிற்றல் காணலாம். இவையெல்லாம் மரபுவழி அறிய வைத்தார் என்க.*

*இவ்விரண்டு மந்திரங்களாலும் மேற்கூறிய சிற்றம்பலச் சக்கரத்தைச் சிவசக்கரமாகச் செய்து வழிபடுமாறு கூறப்பட்டது.*

*இதனுள், இந்திரதிசையில் சூரியனும், குபேரதிசையில் சந்திரனும் அடங்குவர். சூரியனிடத்து அங்காரகன் முதலிய ஐங்கோளினரும் அடங்குவர். உருத்திரனிடத்தில் உருத்திரர் யாவரும் அடங்குவர். வித்தியேசுரர்களும், மந்திர மகேசுரர்களும், மகேசுரனிடத்தில் அடங்குவர். அணு சதாசிவர்கள் சதா சிவனிடத்தில் அடங்குவர். நந்தி யிடத்துச் சிவகணங்கள் பலரும் அடங்குவர். பிருங்கியினிடத்து முனிவர்கள் அடங்குவர். இன்னும்*

**974.** வித்தாஞ் செகமய மாக வரைகீறி
நத்தார் கலைகள் பதினாறு நாட்டிப்பின்
உத்தாரம் பன்னிரண் டாதிகலை தொகும்
பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே. **78**

---

*பிற தேவர்களும் இந்திரனிடத்தே அடங்குவர். இங்குக்கூறிய தலைவர் பலர்க்கும் பரிவாரங்களாய் உள்ளவர்கள் அவ்வத் தலைவரிடத்தே அடங்கி நிற்றல் சொல்ல வேண்டா. இதனால், இச்சக்கரம் கடவுளர் பலரையும் புறஞ் சூழக் கொண்ட சிவசக்கரமாய் அமைந்து நிற்றல் அறிக.*

***972. தெளிவுரை :-*** ***இயன்ற அளவு செய்யப்பட்ட சிவன் பணியே, மேலானவற்றிற்கெல்லாம் மேலான வீட்டினைப் பெறுவிப்பதாகும். அதனால், தற்போதத்தை விட்டவர்கள் சிவனையே புகலிடமாக அடைவர். ஆகலின், யானும் அவனது பணி வகைகள் பலவற்றில் ஏதேனும் ஒன்றில் எள்ளளவாயினும் மேற்கொள்வேன்; போற்றுங்கால் அவனது திருநாமத்தையன்றி வேறொன்றைச் சொல்ல அறியேன்.***

***குறிப்புரை :-*** *'இறப்பில்தவம்' (சிவஞானபோதம் - சூ. 8. அதி.1) என்பார். "மாதவம்" என்றார். 'பராபரம் ஆற்றும்' என மாறிக் கூட்டுக. ஆற்றுதல் - தருதல். "பராற்பரம்" என்பது 'பராபரம்' என மருவிற்று.*

*இதனால், 'சிவசக்கரத்தை அமைத்து அதன் வழி இயன்ற அளவு சிவவழிபாடு செய்யுங்கள்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***973. தெளிவுரை :-*** *(இம்மந்திரம் மேலே 89ஆம் மந்திரமாகவும் வந்திருத்தலால் இதன் பொருளை அவ்விடத்தே கண்டு கொள்க).*

***குறிப்புரை :-*** *இது முன்னே வந்திருப்பினும், அங்கு, 'எல்லாப் பேதமும் சிவபேதமே' என்பதை விளக்குதற் பொருட்டும், இங்கு, எல்லா மந்திரங்களும் சிவனது மந்திரமே' என்பதை விளக்குதற் பொருட்டும் வந்தன. எனவே, இரண்டிடத்தும் கருத்து வேறுபடுதல் அறிக. தொல்காப்பியத்திலும் சூத்திர வடிவம் பல இடங்களில் ஒன்றாய் இருப்பினும், பொருளால் அவை வேறு வேறு சூத்திரங்களாய் நிற்றல் காண்க. இதனால், "சவை" என்பது, மேல், 'தொகுதி' என்றும், இங்கு, 'திருவம் பலம்' என்றும் பொருள்படுதல் அறிந்து கொள்க.*

**975.** கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடைக்
கொண்டெழுந் தேன்உடன் கூடிய காலத்துப்
பண்பழி யாத பதிவழி யேசென்று
நண்பழி யாமே நமஎன லாமே. **79**

---

*974. தெளிவுரை :- உலகத்திற்குக் காரணமாகிய தத்துவங்களின் எண்ணிக்கை (முப்பத்தாறு) அளவில் அறைகள் கீறி, அவற்றுள்*



*இடப்பால் பதினாறு அறைகளைச் சந்திரன் கூறாகக் கொண்டு ஐம்பத்தோரெழுத்துக்களில் ஐவருக்கத்தில் இடைநின்ற பதினைந்தும் நீக்கி ஒடுக்க முறையில் க்ஷகாரம் முதலாக டகாரம் ஈறாக உள்ள பதினாறு எழுத்துக்களையும் சந்திரனது பதினாறு கலைகளாகப் பாவித்தும், வலப்பால் பன்னிரண்டு அறையில் ஞகாரம் முதலாக உயிரெழுத்துக்களில் எகர ஒகரக் குறில்களையும் சேர்த்து எகரம் ஈறாகப் பன்னிரண்டெழுத்துகளையும் சூரியனது கலைகளாகப் பாவித்தும், எஞ்சி நின்ற எட்டு அறைகளோடு மேற்பக்கத்தில் கொடு முடிபோல் நடுவிரண்டு அறைக்கு நேராக இரண்டு அறைகள் நிராதாரமாகப் பரசிவன் பராசத்திகளுக்குக் கீறி, ஆகப் பத்து அறைகளில் எஞ்சிய, ளூகாரம் (ளூ) முதலிய பத்து உயிரெழுத்துக்களையும் அக்கினி கலைகளாகப் பாவித்தும் பொறித்துக் காயத்திரியை முறைப்படி செபித்தபின், இவ்வெழுத்துக்களை விந்து ஈறாக ஓதுக.*

**976.** புண்ணிய வானவர் பூமழை தூவிநின்
றெண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்னும் நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே. **80**

---

***குறிப்புரை :-*** *'செக வித்தாம் அவை மயமாக' என்க. 'வித்துக் கூறவே அவற்றின் நிலமாய பரையும், அந்நிலத்தைப் பக்குவப்படுத்து வோனாகிய பரசிவனும் கொள்ளப்படுவர்' என்பது பின்னர் முப்பத்தெட்டு இடங்களைக் குறித்தலால் அறியப்படும். யோகத்திலும், சிவனது கூற்றிலும், 'இடப்பால், வலப்பால், நடு' என்னும் மூன்று பகுதியும் சந்திர சூரிய அக்கினிகளின் கூறாதல் தெளிவாதலின், சக்கர அறைகளிலும் அவ்வாறு கொள்ளுதல் பெறப்பட்டது. இம்முறையில் இச்சக்கரம் அமையும் முறை வருமாறு:*

*சிவனது அதிட்டானங்களில் (இடங்களில்) சந்திர சூரிய அக்கினி மண்டலங்கள் சிறந்தனவாகலின் அம்மண்டல வடிவில் அமைவது இச்சக்கரம். இதனால், இது திரிமண்டலச் சக்கரமாகும். இறைவனது அதிட்டானங்களும் திருவம்பலமாகும் என்பது கருத்து. 'நந்து' என்பது வலித்தல் பெற்றது. நந்துதல் - வளர்தல், உத்தாரம் - பின்பு, ஆதி - ஆதித்தன். அவன் கலையொடு தொகுவது அக்கினிகலை.*

*இதனால், இது மற்றொருவகைத் திருவம்பலமாகிய திரிமண்டலச் சக்கரம் ஆமாறு கூறப்பட்டது.*

***975. தெளிவுரை :-*** *யான் சிவனை இச்சக்கரத்தின் வழியே கண்டு உயர்வு பெற்றேன்; அதனால், பின்பு அவனை நான் எனது உள்ளத் தாமரையிலே அடங்கக் கொண்டு மேலும் உயர்வு பெற்றேன்; ஆகவே, இனித் தன் இயல்பு கெடாத பதிஞானத்தின் வழியே சென்று அழியாத அன்புடன் திருவைந்தெழுத்தைச் செபிக்கும் பேற்றினைப் பெறுதல் திண்ணம்.*

*எனின், சக்கரத்தை வெளியில் பூசிப்பதால் பயனில்லை. தியானிப்பதாலேயே பயன் சித்திப்பதாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*இதயத்தாமரையுள் இச்சக்கரவாயிலாகச் சிவத்தைக்கண்டு விழித்தெழுந்தேன். சிவத்தை உட்கொண்டு அச்சிவத்தோடு கூடிய காலத்து, தற்போதம் கெட்டேன். தன்மை கெடாத சிவத்தையே துணையாகக் கொண்டுசென்று அன்பு கெடாதவண்ணம் நம என்று சொல்லிக்கொண்டிருக்கலாம் என்றவாறு.*

**977.** **ஆறெழுத் தாகுவ ஆறு சமயங்கள்**
**ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்**
**சாவித் திரியில் தலைஎழுத் தொன்றுள**
**பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே.** **81**

---

*குறிப்புரை :- 'அதனால், நீவிருக்கும் இவ்வாறு அப்பேற்றினைப் பெறு மின்' என்பது குறிப்பெச்சம். பதி, ஆகுபெயர். "நம" என்றது, 'நம சிவாய' என்பதை முதற் குறிப்பாற் கூறியவாறு. இங்குக் கூறிய பஞ்சாட்சரம் அதன் பேதங்கள் அனைத்தையும் கொள்ள நின்றது.*

*இதனால், மேற்கூறிய திரிமண்டலச் சக்கரம் அதற்கு முன்னர்க் கூறப்பட்ட சிவசக்கரத்திற் செலுத்துவதாதல் கூறப்பட்டது.*

*976.* ***தெளிவுரை :-*** *தேவர்களுக்குள் பக்குவம் எய்தினோர் பூக்களை மழைபோலத் தூவிச் சிவசக்கரத்தில் உள்ள திருவைந் தெழுத்து வாயிலாகச் சிவபெருமானது இரண்டு திருவடிகளைத் தியானிப்பார்கள். பின்னும் அம்மந்திரத்தையே துணையாகப் பற்றி அத்திருவடிகளைக் கண்போலச் சிறந்தனவாக உணர்ந்து அவற்றில் இரண்டறக் கலந்து நிற்பார்கள்.*

***குறிப்புரை :-*** *இதனால், சிவசக்கரம் திரிமண்டலச் சக்கரத்தின் பயனாதல் கூறி, அதன் சிறப்பு வலியுறுத்தப்பட்டது.*

*977.* ***தெளிவுரை :-*** *பிரணவத்தோடு கூடி ஆறாகிநிற்கும் திருவைந்தெழுத்து மந்திரத்தையே ஆறு சமயங்களும் பற்றி நிற்றல் வெளிப்படை. ஆயினும், சிலர், 'அந்த ஆறெழுத்து மந்திரத்தினும் இருபத்து நான்கு எழுத்தாகிய காயத்திரி மந்திரமே சிறந்தது' என மயங்குவர். 'ஆறு' என்னும் எண்ணினது நான்மடங்கே இருபத்து நான்கு என்னும் எண்ணியல்பை நோக்கினாலே, 'திருவைந்தெழுத்தில் அடங்குவது காயத்திரி' என்பது புலனாய் விடும். இன்னும் காயத்திரியின் முதலிலே 'ஓம்' என்ற ஓர் எழுத்து உள்ளது. அதனைப் பகுத்தறிய வல்லவர் திரு வைந்தெழுத்தின் உண்மையையும் உணர்ந்து பிறவி நீங்கவல்லவராவர்.*

***குறிப்புரை :-*** *'எனவே, அங்ஙனம் அறியமாட்டாதவரே, திருவைந்தெழுத்திற்கு மேற்பட்டது காயத்திரி' எனக் கூறிப் பிறவியில் அழுந்துவர் என்பது பெறப்பட்டது. 'இருபத்து நான்கு' என்னும் எண்ணிற்குக் காரண எண் ஆறேயன்றி, 'நான்கு, மூன்று, இரண்டு' என்பனவும் ஆதலின், 'திருவைந்தெழுத்தும்*

*அவ்வெண்களின் அளவாக நின்று மேன்மேல் உயர்ந்த பயன்களைத் தருதல் மேலெல்லாம் கூறி வந்தவாறு பற்றி அறிந்து கொள்க' என்பது குறிப்பாற் கூறியதாயிற்று. 'சாவித்திரி, காயத்திரி' என்பார் வேறு வேறு தேவியராயினும், ஒற்றுமை பற்றி ஒருவராகச் சொல்லும் வழக்கும் உண்மை பற்றி இங்குக் காயத்திரி மந்திரத்தை, 'சாவித்திரி' என்றார். தலை - முதல்.*

*பிரணவமாகிய ஓங்காரம், 'அ, உ, ம்' எனப் பிரிக்கப்படும் என்பது மேல் பலவிடத்தும் சொல்லப்பட்டது. அப்பிரிவு மூன்றனுள் அகாரம் தோற்றத்தையும், உகாரம் நிலையையும், மகாரம் இறுதியையும் குறிக்கும். அதனால், அவை பிரமன் முதலிய மூவரைக் குறிப்பனவுமாம். வியட்டி நிலையில் பிரணவம் இவ்வாறாதலை உணர்வார். சமட்டி நிலையில் முத்தொழிற்கும் முதல்வனாகிய சிவபெருமானையே குறிக்கும் என்பதை ஐயம் அற உணர்வர். பிரணவத்தின் பின்பூ; முதலிய வியாகிருதியைச் சேர்த்தால் காயத்திரி; சேர்க்காதது சாவித்திரி எனப்படும்.*

*இனிச் சடப்பொருள்களாகிய தனு கரண புவன போகங்களினது தோற்றம் முதலிய மூன்றனைக் குறிக்கின்ற அவ் அகாரம் முதலிய மூன்றும் சித்துப் பொருளாகிய உயிரினது அறிவின் தோற்றம், நிலை, ஒடுக்கம் என்னும் மூன்றனையும் கூடக் குறிப்பனவாம். ஆகவே, அகார உகாரங்கள் சகல நிலையில் புருவ நடுவில் நிகழும் சகலசாக்கிரம் முதலிய ஐந்திலும் உயிர்கட்குப் பாசஞான பசுஞானங்களைத் தோற்றுவித்து நிறுத்தலாகிய நினைப்பினையும் ஒடுக்குதலாகிய மறப்பினையும் குறித்தலும், சுத்தநிலையில் அவை சுத்தாவத் தைகளில் பதிஞானத்தினைத் தோற்றுவித்து நிறுத்துதலாகிய அருள் நிலையையும் பின் பசுபேத ஒடுக்கமாகிய ஆனந்த நிலையையும் குறித்தலும் பெறப்பட்டன. படவே, பிரணவம் வியட்டிநிலையில் பிரமன் முதலிய மூவரையும் இயைபுபற்றி ஓர்ஓர் எல்லையளவும் உபசாரத்தாற் குறிப்பதாயினும், உண்மையில் அஃது எந்நிலையிலும் சிவபெருமானையே உணர்த்தி நிற்றல் இனிது பெறப்படும். அதனால், **<u>பிரணவத்தின் பொருளும் திருவைந்தெழுத்தால் உணர்த்தப்படும் சிவபெருமானே யாதல் நன்கு அறியப்படும்</u>**.*

***இன்னும், காயத்திரி மந்திரம் மூன்று பிரிவுகளாய் (வியாகிருதிகளாய்) நிற்றலைப் பலரும் எடுத்துக் கூறுவர். அவற்றுள், முதற்பிரிவு சிவசத்தியையும், இரண்டாவது பிரிவு சிவத்தையும், மூன்றாவது பிரிவு உயிரையும் முதன்மையாக நோக்கி நிற்பன.***

ஆகவே, **அம்மூன்றையும் குறித்து நிற்கின்ற திருவைந்தெழுத்தின் பொருளே காயத்திரியின் பொருளுமாதல் தெளிவாம்**. இன்னோரன்ன காரணங்கள் பற்றியே நாயனார் இங்கு,

> "சாவித் திரியில் தலையெழுத் தொன்றுள்;
> பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே"

என அறுதியிட்டு அருளிச் செய்தார்.

காயத்திரி மந்திரத்துள் அமைந்த 'சவிதா, பர்க்கஸ்' என்னும் சொற்களுக்கு முறையே, 'சூரியன்' என்னும், 'சூரியனது ஒளி' என்றுமே வைதிகர் பொருள் கொள்வர். ஆனால், சைவர் அவ்வாறன்றி அவற்றிற்கு முறையே 'சிவன்' என்றும், 'அவனது சத்தி' என்றுமே பொருள்கொள்வர். 'வேதம் ஓரோர் இடத்தில் ஓரொரு தேவரைப் புகழ்ந்து கூறினாலும் உண்மை முதற்கடவுளாவான் சிவபெருமானே என்பதே அதற்குக் கருத்து' எனவும், 'ஆகவே, காயத்திரிக்கும் மேற்கூறியவாறு சைவர் கூறும் பொருளே பொருள்' எனவும் உணர்ந்து, அதனானே, திருவைந்தெழுத்து மந்திரமே அனைத்து மந்திரங்களினும் தலையானதாகக்கொண்டு அவ்வுணர்வோடே முத்தீவேட்டல், சந்தியா வந்தனம் செய்தல் முதலிய செயல்களைச் செய்வோரே சிறப்புடைய வேதியர் ஆவார் என்பதனைத் திருஞானசம்பந்தர் தமக்கு வேதியர்கள் உபநயனச் சடங்குசெய்து பூணூல் அணிவித்தல், பிரமோபதேசம் செய்தல், வேதம் ஓதுவித்தல் என்பவற்றைச் செய்த பொழுது அவர்கட்குத் தாம் கூறும் அறிவுரையாக,

> "செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
> அந்திஉள் மந்திரம் அஞ்செ ழுத்துமே" - தி.3 ப.22 பா.3

என அருளிச் செய்தமையும், திருநாவுக்கரசரும் தமது ஆதி புராணத் திருக்குறுந்தொகையில்

> அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்;
> அருக்க னாவான் அரனுரு அல்லனோ!
> இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
> கருத்தி னைஅறி யார்கல் மனவரே. - தி.5 ப.100 பா.9

என அருளிச் செய்தமையும் இங்கு இன்றியமையாது நோக்கற் பாலன. திருஞானசம்பந்தர் குறிப்பிட்டருளிய செம்மை வேதியரை இக்காலத்துக் காண்டல் அரிது.

**978.** எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே,
கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி இவற்றைப் பிரணவம் சூழ்ந்திட்டே
ஒட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே. **82**

---

''ஆறு சமயங்கள்'' என்றது 'காணாபத்தியம், கௌமாரம், சாத்தம், சைவம், ஸௌரம், ஸௌமியம்' என்பவற்றை, இவற்றில் நிற்போர் தம் தம் விருப்பக் கடவுளர் (இஷ்டதேவர்) ஆகிய கணபதி முதலியோரிடத்து அன்பு பூண்டு அவர்தம் மந்திரங்களை அன்பினால் ஓதினாராயினும், 'சிவபெருமானே முதற் கடவுள்' என்பதிலும், அதனால், அவனது திருவைந்தெழுத்தே முதல் (மூல) மந்திரம்' என்பதிலும் மாறுகொள்ளாதவராய் உடம்பட்டு ஒழுகுதல்பற்றி, ''ஆறெழுத்தாகுவ ஆறு சமயங்கள்'' என்றார். "சமயத்தில் உள்ளது நீறு" என்று திருநீற்றுப் பதிக (தி.2 ப.100 பா.1)த் தொடரும் இங்கு உடன் வைத்து உணரத்தக்கது. இதனானே, இவை 'அகச் சமயம்' எனப்பட்டன.

இவற்றோடு ஒரு காலத்தில் ஒருங்குவைத்து எண்ணப்பட்ட வைணவம், பிற்காலத்தில், சிவபெருமானது ஆற்றலைத் தெளிய மாட்டாது தக்கனது ஆற்றலுக்கு அஞ்சி அவனது வேள்வியிற் சென்றிருந்து, அதனால், அவ்வேள்வியை ஒதுக்கிநின்ற சில திண்ணிய பேரிருடிகளது சாபத்திற்கு உட்பட்டோரால் மேற்கூறிய கருத்துக் களோடு மாறுகொண்டு வேறு நிற்பதாயிற்று. அதுபற்றி அதுவும் புறச் சமயமாக எண்ணப்படுகின்றது இது.

> தாயி னும்நல்ல சங்கர னுக்கன்ப
> ராய வுள்ளத் தமுதருந் தப்பெறார்
> பேயர் பேய்முலை உண்டுயிர் போக்கிய
> மாயன் மாயத்துட் பட்ட மனத்தரே - தி.5 ப.100 பா.9

என்னும் மேற்குறித்த திருக்குறுந்தொகைப் பதிகத் திருப்பாடலால் நன்கறியப்படும். இதனுள் ''மாயன்'' என்றது, 'மாயம் செய்யும் இயல்பினன்' என்பதையும், "பேய் முலை உண்டு உயிர் போக்கிய" என்றது. 'நல்லோரை வஞ்சனையாற் கெடுக்க எண்ணும் தீயோரைத் தானும் வஞ்சனையாற் கெடுப்பவன்' என்பதையும், வெளிப்படை யினாலும், குறிப்பினாலும் உணர்த்தி நின்றன. ''மாயன் மாயம்'' என்றது. அவன் இவ்வாறான கருத்துப் பற்றிச் செய்த நூல்களை.

**979.** நம்முதல் அவ்வொடு நாவினராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாக உணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவன்உற்றுநின் றானே. 83

---

*இதனால், ஆறெழுத்தின் பெருமை கூறும் முகத்தால் சிவசக்கரத்தினது சிறப்பே வலியுறுத்தப்பட்டது.*

***978. தெளிவுரை :-*** *வெளியில் நான்கு கோடுகளும், உள்ளால் நான்கு கோடுகளும் ஆக எட்டுக் கோடுகளால் சுற்றிலும் எட்டு அறைகள் உண்டாக்கி, அவற்றின் நடுவில் உள்ள ஓர் அறை எட்டின் வடிவமாகிய அகாரத்தைப் பெற்று எட்டு முகமாய் அந்த எட்டு அறைகளையும் நோக்கும்படி அவற்றைப் பிரணவ கலைகளால் நிரப்பிப் பின்பு எல்லா அறைகளையும் உட்படுத்துச் சூழும்படி ஓங்காரத்தைப் பொறித்து அவற்றைப் பொருந்திச் செபிப்போர்க்குச் சிவன் உமா சகாயனாய் வெளிப்படுவான்.*



***குறிப்புரை :-*** *எனவே, 'இஃது உமாபதி சக்கரம்' என்பது பெறப்பட்டது. 'மேற்கூறிய சிவ சக்கரத்தால் சிவன் அனைத்துக் கடவுளர் அதிபதியாய்த் தோன்றுவன்' என்பதும். இதனால், 'உமையோடு மட்டும்கூடியே தோன்றுவான்' என்பதும், அறிந்து கொள்ளப்படும். இச்சக்கரத்தைக் காணுமாறு:-*

**உமாபதி சக்கரம்**

*இதில் உள்ள எழுத்துக்களை அகரம் முதலாகத் தொடங்கி மேல் முகம் முதல் எட்டு முகமாகவும் ஒரு முறை செபிக்க எட்டுருச் செபித்த தாகும். அவ்வாறே, இருபத்தாறு முறை செபிக்க இருநூற்றெட்டு உருவாய் சிவன் சத்திகளது உருக்கள் வேறாகாது ஒன்றாய் இயைந்து நிற்பனவாம். இதனுள், அகாரம் சிவனையும்,*

**980.** நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையில் சாதகம்
துன்ற மெழுகைஉள் பூசிச் சுடரிடைத்
தன்றன் வெதுப்பிடத் தம்பனம் காணுமே. **84**

---

*"உம்" என்பது உமையையும் குறித்து நிற்றல் வெளிப்படை. ஒவ்வோர் உருவிலும் முதற்கண், சூழ நின்ற ஓங்காரம் உச்சரிக்கப்படும் என்பது உணர்க.*

*மேற்கூறிய சிவ சக்கரம் வடிவிற் பெரிதாக இது வடிவிற் சிறிதாயினும், ஒருமை மனத்தைத் தருவதாய்ச் சிவன் ஒருவனையே எண்ண விரும்பு வோர்க்கு உரித்தாக்கிப் பெரும்பயன் தரும் என்க. இதனால், மற்றொருவகைத் திருவம்பலச் சக்கரமாகிய உமாபதி சக்கரம் கூறப்பட்டது.*

***979. தெளிவுரை :-** மேற்கூறிய சக்கரத்தின்படியே சமட்டிப் பிரண வத்தை முன்வைத்து வியட்டிப் பிரணவத்தைச் செபிக்குங்கால் இடையே நகார முதலும் யகார ஈறுமான தூல பஞ்சாக்கரத்தை ஓதுதலையும் முறையாகக் கொண்டு, 'இச்செபம் உகாரத்தை முதலிற் கொண்ட மந்திரத்திற்குரிய உமாதேவியின் தலைவனாகிய சிவனுக்கு உரியது' என்பதனை ஐயம் அறத் தெளிந்து செபிப்பவர் சென்னிமேல் அந்த உமாபதியாகிய சிவன் எழுந்தருளியிருப்பன்.*

***குறிப்புரை :-** "நம்முதல் அவ்வொடு" என்றதில் 'அ' என்றது, யகரத்தையே, 'யவ்வொடு' என்றே பாடம் ஓதினுமாம். "அவ்வொடு" என்றது அகர ஈற்றோடு என்றவாறு. அவ்வொடு என்றதன்பின் 'பொருந்திய' என்பது எஞ்சி நின்றது. 'நம்முதலொடும் அவ்வீற் றொடும் பொருந்திய நாவினர் ஆகி' என்க. "எட்டு" என்றது, எட்டு முகமாகவும் செபிக்கப்படும் எட்டு உருக்களை. 'நாவினராகியே எட்டிடைஉற்று' என்றதனால், வியட்டிப் பிரணவத்திற்கு முன்னே தூல பஞ்சாக்கரத்தை வைத்து ஓதுதல் பெறப்பட்டது. உகாரம் முதலாகிய மந்திரம், 'உம' என்பது.*

*இதனால், மேற்கூறிய சக்கரத்திற்கு, முன்னர்க் கூறிய முறைகளின் மேல் மற்றொரு முறை கூறப்பட்டது.*

***980.** மாந்திரிக முறையில் '<u>அட்டகன்மவித்தை</u>' என்ற ஒரு முறை சிறப்பாகச் சொல்லப்படுவது. '<u>அவற்றுள் சிறந்தன ஆறே</u>' என்பர்.*

## அட்ட கன்ம வித்தை

| வ. எண் | வித்தையின் பெயர் | வித்தையின் பொருள் செய்ய வேண்டிய நேரம் | பலகை | பல்வேறு பயன்கள் |
|---|---|---|---|---|
| 1. | தம்பனம் | தம்பனம் – கட்டுதல். எதிரி அல்லது பிற பொருட்களைச் செயற்படாதவாறு ஆற்றலைக் கட்டுப்படுத்துதல்.<br>சனிக்கிழமை மூன்றாம் யாமம் மேற்கு திக்கு | அரசமரப்பலகை + ஓலையிலும் எழுதி மெழுகைப்பூசி யந்திரத்தை வழிபாட்டு மந்திரம் செபிக்கப்பயன் கிடைக்கும் | **அக்கினித் தம்பனம்** – நெருப்பைச் சுட வொட்டாது தடுத்தல்.<br>**ஜலத்தம்பனம்** – நீரை அமிழ்த்தவொட்டாது தரைபோல நின்று தாங்கச் செய்தல்<br>**வாயுத்தம்பனம்** – காற்றை மோதி அலைக்கவொட்டாது தடுத்தல்<br>மூச்சுக்காற்றை இலங்காது உள்நிறுத்தி உடம்பை மேலெழுப்ப பண்ணுதல்.<br>ஓடுகின்ற ஊர்தியை நிறுத்துதல் – மக்களை அசையாமல் நிற்கச் செய்தல். ஏழுவகைத் தம்பனங்கள் கூறப்படுகின்றன.<br>நிலம், நீர், தீ, வாயு, படைக்கலம், சத்துரு, சுக்கிலம் என ஏழு. |
| 2. | மோகனம் | மோகனம் – மயக்குதல். சனிக்கிழமை இரண்டாம் யாமம் நிருதி திக்கு | கொன்றை மரப்பலகை | பொதுமக்கள், அரசர், செல்வர், மாதர், பகைவர், தெய்வம், பேய், பூதம், விலங்கு முதலிய அனைத்துயிர்களையும் தம்மிடத்து மயங்கித் தம் வழி நிற்கப்பண்ணுதல் |
| 3. | உச்சாடனம் | உச்சாடனம் – ஓட்டுதல் அல்லது விரட்டி விடுதல். திங்கட்கிழமை நான்காம் யாமம் | பலாசு / பூவரசம் பலகை | தெய்வ உச்சாடனம் அரச, உலக, வியாதி, மக்கள், சத்துரு, மிருக உச்சாடனம் என்று எட்டு வகைப்படும் |

| வ. எண் | வித்தையின் பெயர் | வித்தையின் பொருள் செய்ய வேண்டிய நேரம் | பலகை | பல்வேறு பயன்கள் |
|---|---|---|---|---|
| 4. | மாரணம் | மாரணம் – ஒருவரை மந்திரத்தால் இறக்கச் செய்யும் வித்தை இரவு / ஈசானத்திக்கு | எழுதுவதற்குப் பதமான பச்சோலை (பனை) | சத்துரு மாரணம் முதலியன. மாரண பஞ்சாக்கரம் நசிவயம |
| 5. | வசியம் | வசியம் – தம் வசப்படுத்தி வைப்பது வசியம்.<br>கவர்ச்சி திசை – கிழக்கு.<br>காலம் – வியாழக்கிழமை.<br>விடிந்தவுடன் வியாழ ஓரை | வில்வமரப்பலகை | உலக, அரசர், ஆடவர், பெண்டிர், பகைவர், விலங்கு என வசியம் ஆறு வகைப்படும். |
| 6. | ஆகர்ஷனம் | ஆகருடணம் – தொலைவில் உள்ள உயிருடைப் பொருளானாலும் உயிரற்ற சடப்பொருளானாலும் தான் இருந்த இடத்திலிருந்தே வரவழைத்தல். சுக்கிர வாரம் இரவு சுக்கிர ஓரை மேற்கு நோக்கி | வெண்ணாவல் மரப்பலகை | அரசர் அழைப்பு, உலக, மாதர், ஆடவர், பகைவர், விலங்கு, நீரின் அழைப்பு என்று எட்டு வகைப்படும். |

*அந்த அறனையும் இது முதலாக ஆறு மந்திரங்களும் கூறுகின்றன. இவை வாம மார்க்கமாய் உயர்ந்தோட்குரியன அல்ல ஆகையால், திவ்வியாகமப் பொருளாதல் அமையாது. அதனால், இவை பிறரால் சேர்க்கப்பட்டனவோ என எண்ண வேண்டியுள்ளது.*

*அட்ட கன்ம வித்தையுள் இது தம்பனம் கூறுகின்றது. தம்பனமாவது பிறபொருள்களின் ஆற்றலைக் கட்டுப்படுத்துதல். நீரை அமிழ்த்தவொட்டாது தரைபோலநின்று தாங்கச்செய்வது 'ஜலத்தம்பனம்' என்றும், நெருப்பைச் சுடவொட்டாது தடுத்து அதன்கண் இருத்தல், அதனைக் கையிற் கொள்ளுதல் முதலியவற்றைச் செய்தல் 'அக்கினித்தம்பனம்' என்றும், காற்றை மோதி அலைக்கவொட்டாது தடுத்தலும், மூச்சுக்காற்றினை இயங்காது உள்நிறுத்தி உடம்பை மேலெழுப்பப் பண்ணுதலும் 'வாயுத்தம்பனம்' என்றும் இவ்வாறு பல தம்பனங்கள்*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | ம | சி | வா | ய | ந |
| 2 | ந | ம | சி | வா | ய |
| 3 | ய | ந | ம | சி | வா |
| 4 | வா | ய | ந | ம | சி |
| 5 | சி | வா | ய | ந | ம |

**1. தம்பனம்**

*சொல்லப்படுகின்றன. மக்களை அசைய வொட்டாது தூண்கள்போல நிற்கச் செய்வதும், ஓடுகின்ற ஊர்திகளை ஓடவொட்டாமல் நிறுத்திவிடுதலும் போல்வனவும் இத் தம்பன வித்தையேயாம்.*

***தெளிவுரை :-*** ***தம்பனம் முதலிய ஒவ்வொன்றிற்கும் வேண்டப் படுவன மரப்பலகை. அதில் பொறிக்கப்படும் மந்திரம், ஓலையின் மேல் பூசத்தக்க பூச்சுப்பொருள், அவ்வோலையை இடும் இடம் முதலியன.***

***அவற்றுள் தம்பனத்திற்குப் பலகை, அரசமரப் பலகை, அதில், மேல் தொள்ளாயிரத்து ஆறாம் (906 ஆம்) மந்திரத்துள் சொல்லப்பட்ட ஐந்தெழுத்து மாற்றுமுறைகளில் இரண்டாவதனை***

**981.** கரண இறலிப் பலகை யமன்திசை
மரணமிட் டேட்டில் மகார எழுத்திட்டு
அரணமில் ஐங்காயம் பூசி அடுப்பில்
முரணப் புதைத்திட மோகனம் ஆகுமே. **85**

---

*முதலாகக் கொண்டு ஐந்து இருபத்தைந்தாகிய சதுரச் சக்கர அறைகளில் பொறித்து, அம்மந்திரம் முயற்சியால் பயனளித்தற் பொருட்டு ஓலையிலும் அவ்வாறே எழுதி, அதன்மேல் எந்த மெழுகையேனும் பூசி, விளக்கிலே அதன் வெப்பம் தாக்கும்படி அவ்வோலையைக் காய்ச்சி, யந்திரத்தை வழிபட்டு, மந்திரத்தை அம்முறையிலே செபித்து வர, 'தம்பனம்' என்னும் வித்தை கைவரும்.*

***குறிப்புரை :-*** *"நேராக ஒன்றிட" என்றது "சக்கரத்தின் மேல் வரிசையாகிய வடக்கு விளிம்பில்" என்றவாறு 'ம இட்டு' 'மகாரத்தை முதலிலே பொருந்த எழுதி' என்றதாம். இம்மந்திரம் 'மசி' எனத் தொடங்குவதால், தம்பனத்திற்கு உரியதாம், "தன் தன்" என்றதில் இரண்டாவது 'தன்' சாரியை 'வெதுப்பில் இட' என்க. இங்குக் கூறிய சக்கர அமைப்பு வருமாறு:*

*இதனுள், மேல் விளிம்பில் உள்ள மந்திர எழுத்துக்கள் ஈசான மூலை தொடங்கி நிருதி மூலையில் முடியும் ஒரு கோடு தொடங்கி முன்னோக்கி அமைந்திருத்தல் காண்க.*

*இது 'மோகனம்' என்னும் வித்தை கூறுகின்றது. மோகனம் - மயக்குதல். பொதுமக்கள், அரசர், செல்வர், மாதர், பகைவர், தெய்வம், பேய், பூதம், விலங்கு முதலிய அனைத்துயிர்களையும் தம்மிடத்து மயங்கித் தம்வழி நிற்கப்பண்ணுதலே மோகனம் என்க.*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | சி | வா | ய | ந | ம |
| 3 | வா | ய | ந | ம | சி |
| 4 | ய | ந | ம | சி | வா |
| 5 | ந | ம | சி | வா | ய |
| 1 | ம | சி | வா | ய | ந |

**2. மோகனம்**

*981. தெளிவுரை : இதற்குப் பலகை, கொன்றை மரப்பலகை மந்திரம் மேற்சொல்லியவாறேயாம். மகாரத்தை முதலிற் கொண்டு*

**982.** ஆங்கு வடமேற்கில் ஐயனார் கோட்டத்தில்
பாங்கு படவே பலாசப் பலகையில்
காண்கரு வேட்டில் கடுப்பூசி விந்துவிட்
டோங்காரம் வைத்திடு உச்சா டனத்துக்கே. **86**

---

*நிற்றலால் இதுவே மாரண மந்திரமுமாம். (மலம், 'மிருத்தியு' எனவும் மூர்ச்சை' எனவும் சொல்லப்படுதலால். அதனைக் குறிக்கும் எழுத்தை முதலில் உடைய இம்மந்திரமே அவற்றை யெல்லாம் தருவதாம். இவ்வாறன்றி, 'நசி என மாறித்தொடர்வதே மாரண மந்திரம்' என்னும் கருத்திற்கு இங்கு ஆசிரியர் தேர்ச்சி காணப்படவில்லை). மந்திரம் மேற்கூறியவாறேயாயினும், அவற்றைச் சக்கரத்திலும், ஏட்டிலும் யமன் திசையாகிய தெற்கில் உள்ள வரிசையை முதலாகவும், வடக்கில் உள்ள வரிசையை இரண்டாவதாகவும் கொண்டு முறையே எழுதி ஓலையில் ஐங்காயத்தை அரைத்துப்பூசி அதனை அடுப்பு வாயில் அழுந்தப் புதைத்துச் சக்கரத்தை வழிபட்டு, மந்திரத்தைக் கீழ் விளிம்பு தொடங்கி மேற்கூறிய முறையிலே செபித்து வர, 'மோகனம்' என்னும் வித்தை கைவரும்.*

*குறிப்புரை :- கரணம் - உபகரணம்; கருவி. அரணம் - பாதுகாவல். அரணம் இல் ஐங்காயம் - பிறரை பாதுகாவல் நீக்கி மயங்கச் செய்யும் ஐங்காயம் சுக்கு, மிளகு, கடுகு, ஈருள்ளி, வெள்ளுள்ளி என்பனவே ஐங்காயமாம். முரண் - வலிமை.*

*இங்குக் கூறிய சக்கர அமைப்பு வருமாறு :*




**3. உச்சாடனம்**

*இதனுள், மாரண மந்திர எழுத்துக்கள் வாயுமூலை தொடங்கி அக்கினி மூலையில் முடியும் ஒரு கோடு தொடங்கி முன்னோக்கி அமைந்திருத்தல் காண்க.*

*982. இஃது <u>உச்சாடனம்</u> என்னும் வித்தை கூறுகின்றது. உச்சாடனம் - ஓட்டுதல். மேல்மயங்கிப் பண்ணின உயிர்களையே விலகி ஓடப் பண்ணுதல் உச்சாடனம் என்க.*

*தெளிவுரை : இதற்குப் பலகை புரசம் (பூவரசம்) பலகை. சக்கரத்திலும், ஏட்டிலும் எழுத வேண்டிய மந்திரம் மேற்கூறிய*

**983.** உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையில்
பச்சோலையில் பஞ்ச காயத்தைப் பாரித்து
முச்சது ரத்தில் முதுகாட்டில் வைத்திடு
வைச்சபின் மேலுமோர் மாரணம் வேண்டிலே. **87**

---

*வாறேயாம். ஓலையில் கரியும், நஞ்சும் பூசி, ஓங்காரத்தில் மகாரத்தை நீக்கி ஓகாரம் மட்டும் பலகையிலும், ஓலையிலும் சக்கரத்தைச் சுற்றி வளைத்து எழுதி, அதை ஒருமுறை பலகையோடு வழிபட்டு ஓலையைக் கொண்டு போய் ஐயனார் கோவிலில் வடமேற்கு மூலையில் பாதுகாப்பாகப் புதைத்துவிட்டுச் சக்கரத்தை வழிபட்டு, மந்திரத்தை மேற்கூறியவாறே செபித்து வர, 'உச்சாடனம்' என்னும் வித்தை கைவரும்.*

***குறிப்புரை : "ஐயனார் கோட்டத்தில்" என்பதனை முதலில் கொண்டு உரைக்க. பாங்கு பட – பாதுகாப்பு உண்டாகும்படி 'காரேடு' எனவரற்பாலது, 'கருவேடு' என வந்தது. இதில் இன எதுகை வந்தது. இதற்குரிய சக்கரம் மேற்காட்டியதே ஆயினும், சக்கரத்தை ஓகாரத்தால் வளைத்தல் வேண்டும்.***



## 4. மாரணம்

*983. : இது 'மாரணம்' என்னும் வித்தை கூறுகின்றது. மாரணம் - மரணத்துன்பம். 'அழிக்கப்படற்பாலன' என்று எண்ணும் உயிர்களை அழித்தொழிப்பதே மாரணம் என்க.*

*தெளிவுரை : உச்சாடனத்திற்குமேல் மாரணம் செய்ய விரும்பினால், மேலே சொல்லியவாறு செய்தபின் மற்றோர் ஓலை அதுபோல எழுதி, ஐங்காயம் பூசி உச்சி வேளையில் (நண்பகற்போதில்) சுடுகாட்டிற் கொண்டுபோய் அக்கினிமூலையில் ஒன்றின்மேல் ஒன்றாய் எட்டு மூலை உண்டாக இரண்டு சதுரங்களையும் அவற்றின் உள்ளே ஒரு சதுரத்தையும் வரைந்து உள்ளே புதைத்துவிட்டு வந்து வழிபாட்டினையும், செபத்தையும் முன்போலச் செய்துவர, 'மாரணம்' என்னும் வித்தை கைவரும்.*

**984.** ஏய்ந்த அரிதாரம் ஏட்டின்மே லேபூசி
ஏய்ந்த அகார உகார எழுத்திட்டு
வாய்ந்ததோர் வில்வம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே. 88

**985.** எண்ஆக் கருடணைக் கேட்டின் யகாரமிட்
டெண்ணாப் பொன் நாளில் எழுவெள்ளி பூசிடா
வெண்ணாவ லின்பல கையிட்டு மேற்குநோக்
கெண்ணாஎழுத்தொடெண்ணாயிரம்வேண்டியே. 89

---

***குறிப்புரை : ஈற்றடியை முதலிற் கொண்டு உரைக்க. "பச்சோலை" என்றது. 'எழுதுவதற்குப் பதமாயுள்ள ஓலை' என்றவாறு.***

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அம் | உம் | அம் | உம் | அம் |
| 2 | உம் | அம் | உம் | அம் | உம் |
| 3 | அம் | உம் | அம் | உம் | அம் |
| 4 | உம் | அம் | உம் | அம் | உம் |
| 5 | அம் | உம் | அம் | உம் | அம் |

## 5. வசியம்

*984. இது 'வசியம்' என்னும் வித்தை கூறுகின்றது. மோகனம் செய்யப்பட்டேனும், அது செய்யப்படாது இயல்பாகவேனும் தம்வழி நிற்கும் உயிர்களை எவ்வாற்றானும் பிரிந்து போகாதபடி தம்வசப்படுத்தி வைப்பதே வசியம் என்க.*

***தெளிவுரை :*** *இதற்குப் பலகை, வில்வமரப் பலகை. மந்திரம் அகார உகாரங்கள், அகார உகாரங்கள் விந்துவோடு கூடினவையாக மேற்சொல்லிய சக்கரத்தில் ஈசான மூலையிலிருந்து தொடங்கிப் பொறித்து. ஓலையிலும் அவ்வாறே எழுதி, அதன்மேல் அரிதாரத்தை (மஞ்சள் நிறமுடைய ஒன்றை)ப் பூசி, அதனை அந்தப் பலகைமேலே வைத்து வழிபட்டு அம்மந்திரத்தை எண்பதினாயிரம் உருச் செபித்தால், 'வசியம்' என்னும் வித்தை கைகூடுவதாகும்.*

***குறிப்புரை :*** *ஈற்றடியில் 'ஏய்ந்தது' என்பது ஈறு குறைந்து 'ஏய்ந்ததில்' என ஏழாவதன் தொகைபட நின்றது. வேண்டில் - விரும்பிச் செபித்தல், இதன்பின் 'ஆம்' என்னும் பயனிலை எஞ்சிநின்றது.*

***985.*** *இஃது '__ஆகருடணம்__' என்னும் வித்தை கூறுகின்றது. உயிர் பொருளாயினும், உயிரில் பொருளாயினும் தொலைவில் உள்ளவற்றைத் தான் இருந்த இடத்தில் இருந்தே வரவழைத்தல் 'ஆகருடணம்' என்னும் வித்தையாம்.*

***தெளிவுரை :*** *இதற்குப் பலகை, வெண்ணாவல் மரப்பலகை. மந்திரம் மேற்கூறிய ஐந்தெழுத்து மாறலில் யகாரம் முதலாக அமைவது. யகாரம் முதலாக உள்ளது முதல் ஐந்து தொடர்களையும் முறையே ஐந்து வரிசை அறைகளில் பொறித்து, ஓலையிலும் அவ்வாறே எழுதி, அதன்மேல் யாதேனும் ஒரு வெண்பூச்சினைப் பூசி வியாழக்கிழமையில் மேற்சொன்ன பலகை மேல்வைத்து வழிபட்டு அன்று முதலாக மேற்கு நோக்கி அமர்ந்து அம்மந்திரங்களை அசபாமந்திரத்தோடே எண் ஆயிர உரு விரும்பிச் செபித்தால், '__ஆகருடணம்__' என்னும் வித்தை கைவரும்.*

***குறிப்புரை :*** *'உகாரம் இட்டு' என்பதும் பாடமாதலால், மேல் வசியத்திற்குச் சொல்லிய அம் மந்திரத்தை உகாரம் முதலாக மாற்றிக் கொள்ளுதலும் இதற்குப் பொருந்துவதே. 'ஆகருடணை' என்பது, 'ஆக்கருடணை' என மருவி நின்றது. இங்குக்கூறிய சக்கர அமைப்பு வருமாறு.*

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | ய | ந | ம | சி | வா |
| 2 | ந | ம | சி | வா | ய |
| 3 | ம | சி | வா | ய | ந |
| 4 | சி | வா | ய | ந | ம |
| 5 | வா | ய | ந | ம | சி |

**6. ஆகருடணம்**

*இதனுள் மந்திரங்கள் குறுக்கு வரிசையிலும், நெடுக்கு வரிசையிலும் ஒரே வகையாக அமைந்திருத்தலும், 'நமசிவாயநமசி', 'சிவாயநமசி' என மூலை நோக்கில் அமைந்திருத்தலும் காண்க.*

*இரண்டாம் அடியில் எண்ணா என்பதற்கு, நாள்களை எண்ணி என உரைக்க. எண்ணா எழுத்து - செபியாத மந்திரம் அசபை. "வேண்டி நோக்கு" என்றாராயினும், நோக்கி வேண்டு என்றலே கருத்தாதல் அறிக. இதனுள் மூன்று, நான்காம் அடிகளைப் பிறவாறு ஓதுவன பாடம் ஆகாமை அறிந்து கொள்க.*

## 3. அருச்சனை

*திருவம்பலச் சக்கரத்தைக் கூறியதனானே, அதனை வழிபடுதல் பெறப்பட்டமையால் வழிபாட்டு முறையினை இது முதல் பன்னிரண்டு திருமந்திரங்களால் கூறுகின்றார். அருச்சனையாவது வழிபாடே. வழிபாடு கும்ப பிம்ப தம்பங்களில் வைத்துச் செய்யப்படும். தம்பம் - அருவுருவத்திருமேனி. யந்திரமும் ஒருவகை பிம்பமே. இம்மூவகைக்கும் பொதுவாகவே இது கூறுகின்றார். கும்பம் - குடம், கலசம். பிம்பம் - உருவம்.*

**986.** அம்புயம் நீலம் கழுநீர் அணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரம்
தும்பை வகுளம் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. **1**

**987.** சாங்கம தாகவே சாந்தொடு சந்தனம்
தேங்கமழ் குங்குமம் கர்ப்பூரம் காரகில்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்
தாங்கே அணிந்துநீர் அற்சியும் அன்பொடே. **2**

---

*986. **தெளிவுரை :-** தாமரை முதல் செவ்வந்தி ஈறாக இங்குக் கூறப்பட்ட பூக்கள் வழிபாட்டிற்குக் கொள்ளத் தக்கனவாம்.*

***குறிப்புரை :*** *அம்புயம் - தாமரை. நீலம் - நீலோற்பலம்; குவளை, கழுநீர் - செங்கழுநீர்; இதுவும் குவளையின் வகை. நெய்தல் - ஒரு வகை ஆம்பல். வம்புஅவிழ் - வாசனையோடு மலர்கின்ற. பூதம் - கமுகு; இஃது இதன் பாளையில் உள்ள அரும்புகளாம். மாதவி - குருக்கத்தி; இதுவும் ஒருவகை மல்லிகை. மந்தாரம் - மந்தாரை. வகுளம் - மகிழ்.*

*வழிபாட்டிற்கு வேண்டும் பொருள்களுள் முதன்மை யானதாகிய பூவின் வகைகள் இதனால் எடுத்துக் கூறப்பட்டன.*

*987. **தெளிவுரை :-** சந்தனத் தேய்வையைக் குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், அகிற் சாந்து இவை சேர்த்துப் பனிநீராற் குழம்பாக்கிச் சாத்தி நீரால் ஆட்டி அன்போடு வழிபடுங்கள்.*

**988.** அன்புட னேநின் றமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகையும் திசைதொறும்
துன்பம் அகற்றித் தொழுவார் நினையுங்கால்
இன்ப முடனேவந் தெய்திடும் முத்தியே. **3**

**989.** எய்தி வழிபடில் எய்தா தனஇல்லை
எய்தி வழிபடில் இந்திரன் செல்வம்உண்
டெய்தி வழிபடில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிபடில் எய்திடும் முத்தியே. **4**

---

***குறிப்புரை :*** *சாங்கமதாக - திருமேனியில் படத்தக்கதாக. சாந்து - தேய்வை. தேம் கமழ் - இனிதாக மணக்கின்ற. பாங்கு - நன்மை. 'பாங்காகப் பட' (பொருந்த) என்க. "வைத்து" என்றார். 'முன்னே ஆட்ட வேண்டிய பொருள்களை ஆட்டியபின்' என்றற்கு. 'அர்ச்சித்தல்' என்னும் பொதுச்சொல். இங்கு ஆட்டுதல்மேல் நின்றது. இனி "நீர்" என்பதை முன்னிலைப் பெயராக்கி உரைத்தலும் ஆம்.*

*இதனால், சிறப்புடைய ஒன்றை எடுத்துக் கூறும் முகத்தால் அபிடேகம் விதிக்கப்பட்டது.*

***988. தெளிவுரை :-*** *நிவேதனம், தீபம், தூபம் என்பவைகளால், எட்டுத்திக்கிலும் வரற்பாலனவாகிய தடைகளை அகற்றி வழிபாடு செய்பவர், தாம் விரும்பும் பொழுது முத்திநிலை இன்பமே வடிவாய் வந்து எய்தப் பெறுவர்.*

***குறிப்புரை :*** *ஏற்றுதல் - ஏற்பித்தல், பொன் - உலோகம், 'பொன்னால் செய்த' என்க. அமுதம் முதலிய மூன்றிலும் மூன்றாம் உருபு விரிக்க. முதலிரண்டடிகளை வேறாக ஓதுவன பாடம் அல்ல. திசைதொறும் வரும் துன்பங்கள் தீத்தெய்வங்களால் ஆவன. அவற்றைத் திக்குப் பந்தனம் முதலியவற்றால் நீக்கல் வேண்டும் என்க.*

***989. தெளிவுரை :-*** *வழிபாட்டினை அன்போடு மனம் பற்றிச் செய்தால், கிடைக்காதன இல்லை. எண்வகைச் சித்திகளும், இந்திராதி போகங்கள் மட்டுமன்று; முத்தியும் கிடைப்பதாகும்.*

***குறிப்புரை :*** *'வழிப்படில்' என்பன பாடமல்ல.*

990. நண்ணும் பிறதாரம் நீத்தார் அவித்தார்
அண்ணிய நைவேத் தியம்அனு சந்தானம்
நண்ணிய பஞ்சாங்கம் நண்ணும் செபம்மன்னும்
மண்ணும் அனல்பவ னத்தொடு வைகுமே. 5

---

*990. **தெளிவுரை :-** பிறருக்கு உரியராய மனைவியரை விரும்புதலை விட்டவர்களும், புலனடக்கம் உள்ளவர்களும் ஆகிய அவர்களது நிவேதனம், தோத்திரம், வணக்கம், செபம், ஓமம் என்னும் இவையே வழிபாட்டிற்கு உரியனவாம். **அவ்விடத்தில் காற்றும் தூய்மையுள்ளதாய் இருக்கும்**.*

***குறிப்புரை :*** *மேற்கூறியவையன்றி மேலும் உள்ள பொருள்களைக் கூறுவார். 'அவற்றை ஈட்டிக் கொண்டு வழிபடுவோர் முதற்கண் நல்லொழுக்கத்தில் நிற்பவராய் இருத்தல் வேண்டும்' என்பதனை அஃது இயல்பென்பது தோன்ற, அணுவாத முகத்தாற் கூறினார். கூறவே, 'வழிபாடு சிறந்த ஓர் ஒழுக்கமாதலின் அது செய்வார் பிற ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்னும் கட்டளையில்லை' என்று எண்ணுதல் மடமையாகும் என்பது இனிது விளங்கிற்று. புலனடக்கம், நாச் சுவை, வேட்கை முதலியவற்றை அடக்குதல் யோக நெறியிலும் இயம நியமங்கள் அடிநிலையாகக் கூறப்படுதல் இங்கு நினைக்கத்தக்கது.*

*'தாரம்' என்பது தமிழில் அஃறிணை இயற்பெயர் போலவே வருதலை அறிக. 'நீத்தாருடையனவும், அவித்தாருடையனவும்' என உரைக்க. அண்ணிய - இனிய. அனுசந்தானம் - இடைவிடாது தொடர்ந்து செய்தல். பஞ்சாங்கம் - ஐந்துறுப்புக்கள் நிலத்திற் பொருந்த வணங்கும் வணக்கம் ஐந்துறுப்புக்களாவன; தோள் இரண்டு, முழந்தாள் இரண்டு, முகம் ஒன்று, இவற்றோடு காது இரண்டு, மார்பு ஒன்று இவையும் நிலத்திற் பொருந்த வணங்குதல் அட்டாங்க வணக்கமாம். இதனை 'சாஷ்டாங்கம்' என்பார்கள். இனம் பற்றி இதனையும் இங்குக் கொள்க. மகளிர்க்குப் பஞ்சாங்க வணக்கம் ஒன்றே உரியது. மண்ணும் அனல் - சிவாக்கினியாகச் செய்யப்பட்ட நெருப்பு. பவனம் - காற்று.*

*இதனுள்ளும் பிறவாறு ஓதுவன பாடம் அல்ல.*

*இதனால், மேற்கூறப்பட்டவற்றிற்குப்பின் எஞ்சி நின்ற பொருள்கள் கூறப்பட்டன.*

991. வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்மம் அதில் இச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்மம் மிகுதியோர் ஆய்ந்தன்பே. 6

992. அறிவரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலும் ஆமே. 7

---

*991.* **தெளிவுரை :-** *சிவபெருமானுக்கு அடியவராகத் தம்மை ஒப்படைத்துவிட்டவர்களும், பசு புண்ணியத்தால் விளையும் சிறு பயன்களில் விருப்பம் இல்லாதவர்களும், உயர்ந்த சிவயோகத்தில் நிற்பவர்களும், பயன் கருதிச் செய்யும் காமிய வழிபாடுகளை மேற்கொள்ளாது, ஆய்ந்துணர்ந்த உணர்வினால் மிக்க அன்பு ஒன்றே காரணமாக வழிபாட்டினை மேற்கொள்வர்.*

**குறிப்புரை :** *ஈற்றடியை, 'கன்மம் வேண்டார்களாய், ஆய்ந்து அன்பே மிகுதியோராவர்' எனக் கூட்டி முடிக்க. "கன்மம்" என்பதற்கு இங்கு இதுவே பொருளாதல் அறிக.*

*992.* **தெளிவுரை :-** *அறிவுருவாகிய இறைவனை எவரும் அவனறிவாலே அறிய முயலாமல் தம் அறிவால் ஐம்பொறிகளாலும், மனம் முதலிய உட்கருவிகளாலும் ஆராய்ந்து துன்புறுகின்றார்கள். ஆயினும், முறைப்படி, மேற்கூறிய சக்கரம் முதலியவற்றின் வழி மனம் ஒருங்கிநினைத்தால், ஒளி வீசுகின்ற மாணிக்கம் போல்பவனாகிய இறைவனது அருளில் மூழ்கியிருத்தல் கூடும்.*

**குறிப்புரை :** *'அறிவு அறியார்' என இயையும் 'ஞானம்' என்பது சிறப்புப் பற்றிப் பதி ஞானத்தையே குறித்தல் வழக்கு முறைமை. 'நெறியால் நோக்கில்' என்க. மனை, இங்குச் சக்கரத்தில் உள்ள அறைகள். இனம் பற்றிக் கும்ப விம்ப தம்பங்களும் கொள்க.*

*இதனால் 'வழிபாடுகள் பதிஞானத்தைத் தந்து, அது வழியாகப் பதியை அடைவிக்கும்' என்று அதனது சிறப்புக் கூறப்பட்டது.*

**993.** **இருளும் வெளியும்போல் இரண்டாம் இதயம்**
**மருள்அறி யாமையும் மன்னும் அறிவும்**
**அருள் இவை விட்டறி யாமை மயங்கும்**
**மருளும் சிதைத்தோ ரவர்களா வாரே.** **8**

---

*993. **தெளிவுரை :-** ஆன்ம அறிவு இருளே போன்றும், ஒளியே போன்றும் இருதன்மையதாய் நிற்கும் இயல்புடையது. அதனால், அதனிடத்தே மயக்கத்தைத் தரும் அறியாமையும், தெளிவைத்தரும் அறிவும் என்னும் இரண்டுமே என்றும் நிலை பெற்றிருக்கும். எனினும், அறிவால் இருதன்மையை நீக்கி ஒரு தன்மையாகிய அறிவேயாய் நிற்பவரே, அழிவற்ற அறியாமையை அழியப் பண்ணினவராகவும் சொல்லப்படுவர்.*

*__குறிப்புரை :__ 'ஆதலால் மேற்கூறிய முறையால், அறிவாய் நிற்கும் நிலையைப் பெற முயலுங்கள்' என்பது குறிப்பெச்சம் "போல்" என்றது 'அவையே போலத் திரிந்து' என்றவாறு. ஆன்ம அறிவை 'இதயம்' என்றல் பொருந்துமாறு.*

*"சிந்தையைச் சீவன் என்றும்*
*சீவனைச் சிந்தை என்றும்........ வந்திடும்"*

*– **சிவஞானசித்தி சூத்திரம், 4, 27.***

*என்னும் சிவஞான சித்தியால் அறிக. 'அறிவும் மன்னும்' என முன்னே கூட்டி உரைக்க. "அறியாமை" என்றது அதனைச் செய்யும் ஆணவ மலத்தையும், "அறிவு" என்றது இறைவனது திருவருளையும் ஆதல் அறிக. 'இரண்டும் அழிவற்ற பொருளாயினும், மலம் திருவருளை வெல்லமாட்டாமையால் அதனைக் கொண்டு அறியாமையைப் போக்க வேண்டும்' என்பார், "அருளால் இவை விட்டு" என்றார். உருபு தொகுத்தலாயிற்று. 'இது பக்குவம் எய்திய வழிக்கூடும்' என்பது கருத்து.*

*ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்; ஒன்றுமேலிடின், ஒன்று*
*ஒளிக்கும் எனினும் இருள் அடராது; உள் உயிர்க்குயிராய்த்*
*தெளிக்கும் அறிவு திகழ்ந்துள தேனும் திரிமலத்தே*
*குளிக்கும் உயிர் அருள் கூடும்படி கொடி கட்டினனே*

*– **கொடிக்கவி – 1***

*என்பதிலும் இவ்வாறு கூறப்படுதல் காண்க.*

**994.** தானவ னாக அவனேதா னாயிட
ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்
போனவன் அன்பிது நாலாம் மரபுறத்
தானவன் ஆகும்ஓர் ஆசித்த தேவனே. **9**

**995.** ஓங்காரம் உந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா அகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் உகாரம் பயில்நெற்றி உற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதம்மேல் ஆகுமே. **10**

---

*இதனால், மேற்கூறியவாற்றால் பதிஞானத்தைப் பெற்றோரது சிறப்புக் கூறப்பட்டது. அறியாமை மயங்கும் மருள் - உண்மையை உணராமல் திரிய உணர்வதற்கு ஏதுவாகிய மலம்.*

***994. தெளிவுரை :-*** *சிவம் தான் தோன்றாது ஆன்மவேயாய் நிற்றலும், ஆன்மா தான்தோன்றாது சிவமேயாய் நிற்றலும் என்னும் இருநிலைகளுள், அறிபவனாகிய ஆன்மா அறியப்படுபொருளாகிய சிவமேயாகி விடுகின்ற இரண்டாம் நிலையை எய்தினவன் பின்பு 'அறிபவன்' என்பதோடு நில்லாது. அன்பு செய்பவனாயும் நிற்பான். இந்நிலையே, 'சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம்' என்னும் நான்கனுள் இறுதிக்கண்ணதாகிய சிவபோகத்தை அடையச் சிவமாம் தன்மையை எய்தும் வழியாம்.*

***குறிப்புரை :*** *இரண்டு - பெத்தமும், முத்தியும் "அவனே தானே ஆகிய அந்நெறி - ஏக னாகி" என்னும் சிவஞானபோத (சூத். 4)த்தை இங்கு உடன் வைத்துக் காண்க. அன்பு வடிவானவனை, "அன்பு" என்றார். ஈற்றடியை 'தான் ஆசித்ததேவனாகிய அவனாகும் ஓர் நிலை' எனக் கொண்டு கூட்டிக் கொள்க. 'ஆசிரயித்த' என்பது "ஆசித்த" எனச் சிதைந்து நின்றது 'யாசித்த' எனப் பாடம் ஓதலுமாம். யாசித்தல் - வேண்டுதல்.*

*இதனால், பதி ஞானம் முதிர்ந்து முற்றுமாறு கூறப்பட்டது.*

***995. தெளிவுரை :-*** *பிரணவத் தியானத்தில் ஓங்காரம் மூலாதாரத்திலும் மகாரம் உந்தியிலும், அகாரம் இருதயம், கண்டம் என்பவற்றிலும், உகாரம் புருவ நடுவிலும், விந்துவும் நாதமும் அதற்குமேல் நெற்றியில் உள்ள வேறு வேறு இடங்களிலும் வைத்துத் தியானிக்கப்படும் என்க.*

**996.** நமஅது ஆசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமஅற ஆதி நாடுவ தன்றாம்
சிவமாகும் மாமோனம் சேர்தல்மெய் வீடே. **11**

---

***குறிப்புரை :*** *மகாரம் நிற்கும் இடம் குறிப்பினாற் கொள்ள வைத்தார். 'பாங்கார் நகாரம்' என்பது பாடம் ஆகாமை யறிக.*

*இதனால், வழிபாட்டில் பிரணவத்தைத் தியானிக்கும் முறை கூறப்பட்டது.*

***996. தெளிவுரை :-*** *'நம' என்பதை அடிநிலையாகக் கொண்டு பசுவாய் நிற்கின்ற உயிரே. சிவ என்பதனை அடிநிலையாகக் கொள்ளும் நிலை கிடைக்கப்பெறுமாயின், சிவத்தோடு ஒன்றிப் பதியாய்விடும். ஆதலால், நகார மகாரங்களால் குறிக்கப் பெறுகின்ற திரோதாயியும், மலமும் அறுவதற்கு வழி அவற்றை முதலாகக் கொண்டு ஓதுவதன்று; மற்று, சிகார வகாரங்களை முதலாகக் கொண்டு ஓதுதலேயாகும். அவ்வாறு செபித்தால் பரமுத்திக்கு வாயிலாம்.*

***குறிப்புரை :*** *'பசுவே சிவமாய்ப் பதியாம்' என்க. 'சித்தி' என்னும் முதனிலையே 'சித்திக்க' என வினையெச்சப் பொருள் தந்தது. 'ஆதியாவது' என ஆக்கம் வருவித்து. அதனை 'சிவம் ஆதி ஆவதாகும்' என ஈற்றிலும் கூட்டுக. மோனம் சேர்தல் - செபித்தல் இவ்வாறே.*

> *"நம்முதலா ஓதில் அருள் நாடாது; நாடும் அருள்*
> *சிம்முதலா ஓதுநீ சென்று" - வெண்பா, 14*

*என்னும் உண்மை விளக்கம் முதலிய சித்தாந்த நூன்மொழியையும் இங்கு நோக்குக. இதனுள் உயிரெதுகை வந்தது.*

*இதனால், நிட்காமிய வழிபாட்டில் திருவைந்தெழுத்தைச் செபிக்கும் முறை கூறப்பட்டது.*

**997.** தெளிவரும் நாளில் சிவஅமு தூறும்
ஒளிவரும் நாளில் ஓர் எட்டில் உகளும்
ஒளிவரும் அப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரும் நாதன் வெளியாய் இருந்தே. **12**

---

*997.* **தெளிவுரை :-** *'சிவனன்றி வேறு யாதும் இல்லை' என்ற தெளிவு வந்து சிவத்தில் அழுந்தித் தன்னையும் மறந்த பொழுதே சிவானந்தம் ஊற்றெடுப்பதாகும். அவ்வாறன்றி, 'சிவனை யான் உணர்கின்றேன்' எனத் தன்னை உணர்ந்து நிற்றலாகிய அறிவு உண்டாய காலத்தில் ஆன்மா அந்தப்பசு அறிவிலே நின்று அலமரும், ஒருதலைப்படாது இவ்வாறு இருதலைப்பட்டு நிற்கும் நிலையில் சிவம் வெளிப்பட்டு நின்றும் வெளிப்படாததேயாய் இருக்கும்.*

**குறிப்புரை :** *எட்டு -அகாரம். அது நாதத்தைக் குறித்தல் வழக்கு 'பசுபோதம் தலையெடுத்தும் வழி வாக்காகிய பாச ஞானமும் விரையத் தோன்றி அலைவை உண்டு பண்ணும், என்பார், "எட்டிலே உகளும்'' என்றார். 'இவ்வாறு ஓரிரண்டாகில்' என அனுவாத மாக்கியுரைக்க ''வெளி'' இரண்டில் முன்னது புறம்; பின்னது வெளிப்படை, திரிபுடி நீங்காதாயின் அருள் நிலையன்றி, ஆனந்த நிலை எய்தாமை பற்றி 'நாதன் வெளியாய் இருந்தே வெளிதரும்' என்றார். வெளிதருதல் - ஆன்மாவிற்குத் தன்னின் வேறான இடத்தைத் தருதல். **திரிபுடி - காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என்பனவாம், 'ஞாதுரு, ஞானம், ஞேயம்' என்றும் சொல்லப்படும்**.*

*இதனால், 'திரிபுடிநீங்கும் தெளிவைப் பெறமுயல வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

## 4. நவகுண்டம்

*மந்திரப்பயிற்சிக்கு இன்றியமையாதன மூன்று தொழில்கள். அவை ஜபம், ஹோமம், தர்ப்பணம் என்பன. அவற்றுள் மந்திரஜபத்தை விட நூறு மடங்கு உயர்ந்தது ஹோமம். அதனின் நூறு மடங்கு பயன் அதிகந் தருவது தர்ப்பணம். இவற்றுள் ஹோமமாவது, சிவாகம விதிப்படி வாகீஸ்வரி வாகீஸ்வர கர்ப்பத்திலிருந்து சிவாக்கினிபெற்று அதற்குச் சாதகன்மாதி கிரியைகளையும் செவ்வனே செய்து, ஓமத்திற் குரிய குண்டத்தில் பிரதிட்டை செய்து, அக்கினியை எரியச்செய்து, அதைச் சிவமாகப் பாவித்துப் பூசித்து, உரிய பொருள்களால் ஓமஞ் செய்வதாம். அதற்கு மிக இன்றியமையாதது குண்டம். குண்டம் என்பது ஆழமான குழி. சிவயாகத்திற்கு ஒன்பது வகையான குண்டங்கள் இடப்படுதல் மரபு. அவை திரிகோணம், சதுரம், வட்டம், பிறை, அறுகோணம் முதலியன இப்பகுதி மந்திரஜபத்தின் அவசியத்தையும், செய்முறையையும் தெரிவித்தபின்னர், மந்திரசித்தியின் பொருட்டுச் செய்யப்பெறுவதாய ஓமத்திற்கு இன்றியமையாத குண்டங்களை முன்னிட்டு ஓமாதிகளை விளக்குகின்ற ஆசிரியர் முதற்கண் நுதலிப்புகுதல் என்ற உத்திபற்றி நவகுண்டம்பற்றித் தெரிவிக்கிறார்.*

*யந்திர இயைபு பற்றி அருச்சனை முறை கூறிய நாயனார், அதன் சிறப்பு அங்கமாகிய அழலோம்பல் முறையைத் தனித்தெடுத்துக் கூறுவாராய் அதற்கு முதலாவதாகிய குண்டங்களின் முறையை முப்பது திருமந்திரங்களால் கூறுகின்றார். இவ்வதிகாரம் அந்தாதியாய்ச் சென்று மண்டலித்தல் காண்க.*

**998.** நவகுண்ட மானவை நானுரை செய்யின்
நவகுண்டத் துள்எழும் நற்றீபந் தானும்
நவகுண்டத் துள்எழும் நன்மைகள் எல்லாம்
நவகுண்ட மானவை நானுரைப் பேனே. **1**

---

*998. தெளிவுரை :- அழலோம்புதற்குரிய குண்டங்கள் ஒன்பது வகையின. அவற்றின் சிறப்பை நான் சொல்லுமிடத்து, சிவபெருமானது சிறந்த உருவமாகிய ஒளிப்பிழம்பு ஓங்கி விளங்குவது அக்குண்டங்களிலே தான். அதனால், அப்பெருமானை அம்முறையில் வழிபடும் வழிபாட்டினால் எல்லா நன்மைகளும் விளையும். அது பற்றி அவற்றின் முறையை நான் இங்குக் கூறுகின்றேன்.*

*குறிப்புரை :* "நல்தீபம்" என்றது சிவனது ஒளி உருவத்தையாம். "தானும்" என்பதில் தான், அசை உம்மை, சிறப்பு.

**999.** உரைத்திடுங் குண்டத்தி னுள்ளேமுக் காலும்
நகைத்தெழு நாற்கோண நன்மைகள் ஐந்தும்
பகைத்திடு முப்புரம் பார் அங்கி யோடே
மிகைத்தெழு கண்டங்கள் மேலறி யோமே. **2**

---

*இதனால், அதிகாரம் நுதலியது கூறப்பட்டது.*

***999. தெளிவுரை :-*** *மேற் சொல்லப்பட்ட குண்டங்களிலே முக்காலங்களையும், ஐம்பெரும் பூதங்களையும், மும்மல நீக்கத்தையும் 'அக்கினி' என்ற ஒன்றன் வழியாகவே காணுதல் கூடும். ஆதலின், அக்குண்டங்கட்கு மேலான தெய்வ இடங்களாக நான் வேறொன்றை அறிந்திலேன்.*

***குறிப்புரை :*** *"முக்காலம்" என்றது, அவற்றின்கண் உள்ள நிகழ்ச்சிகளை அவற்றுள். இறந்தோரை நற்கதி எய்துவித்தல் முதலியன இறந்தகாலம் பற்றியன, பகைவரை அழித்தல் முதலியவை நிகழ்காலம் பற்றியன. மகப்பேறு முதலியவை எதிர்காலம் பற்றியன. ஐம்பெரும் பூதங்களைக் காணுதல் அவற்றின் வடிவாய் அமைந்த குண்டங்களை வழிபட்டுப் பயனடைதல். 'நிலம், நீர், தீ, வளி, வானம்' என்னும் பூதங்கட்கு வடிவம் முறையே, 'நாற்கோணம், பிறை, முக்கோணம், அறுகோணம், வட்டம்' என்பனவாதல் நன்கு அறியப்பட்டது. (உண்மை விளக்கம். 4). இதனுள் பிறை வடிவம் சந்திரனுக்கு ஆகும். சூரியனுக்கு வட்டத்தின் வகையாகிய தாமரை ஆகும். முக்கோணத்தைச் சிறிது வேறுபடுத்தி யோனி வடிவாக்கச் சத்திக்கு ஆகும். ஒரு சதுரத்தின்மேல் மற்றொரு சதுரம் வடக்கு முதலிய திசைகளை நோக்கி அமைந்த மூலைகளை உடையனபோல அமைக்க அட்டகோணம் அட்டமூர்த்தி வடிவினனாகிய சிவபிரானுக்கு ஆகும். பஞ்சமுகம், பஞ்சாக்கரம், பஞ்சக்கிருத்தியம், பஞ்சமூர்த்திகள் முதலியன பலவற்றிற்கும் இயைபுடைய பஞ்சமுக குண்டமும் பதும குண்டத்தின் வேறுபாடாய் அமைவதாம். இவ்வாறாக நவகுண்டமும் காண்க. இவற்றை நாயனார் பின்னர் (பா. 1027) விதித்தல் அறியத்தக்கது. குண்டங்கள் வழிபாட்டிற்கு ஏற்பப் பல வகையாக அமைத்தல் சொல்லப்படினும், எல்லாவற்றிற்கும் பெரும் பான்மை நாற்கோண குண்டமே அமைத்தல் காணப்படுகின்றது. அது பிருதிவியின் அடையாளமாதல் பற்றிப் போலும். பகைத்திடு முப்புரம் -*


வ
பதுமம்
அறு
கோணம்
எண்
கோணம்
நீள்வட்டம்
பரத்துவம்
வேதிகை
வட்டம்
சதுரம்
பிறை
யோனி
முக்
கோணம்
நவகுண்டம்

பஞ்சாசனங்களுடன் கூடிய வேதிகை



1000. மேலறிந் துள்ளே வெளிசெய்த அப்பொருள்
காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்
பாரறிந் தண்டம் சிறகற நின்றது
நானறிந் துள்ளுளே நாடிக்கண் டேனே. 3

---

*முக்கோணம் இரண்டு ஒன்றற்கொன்று மாறாக அமைக்கப்பெற்றது. அது ஆறு கோணகுண்டம்.*

*இதனால், நவகுண்ட வடிவுகள் குறிப்பாற் கூறப்பட்டன.*

***1000. தெளிவுரை :-*** *பிராணாயாம முறையை அறிந்து அதன்வழியே தியானிக்கப்பட்ட சிவந்த ஒளிப்பிழம்பே புறத்திலும் குண்டத்தின் அழலாய் அறியப்பட்டுக் காட்சிப்பட நின்ற பொருளாய், நிலவுலகத்தாரால் நன்கறியப்பட்டு, அண்டங்களின் திசைவரம்பைக் கடந்த பெரும் பொருளாய் நிற்கும். அவ்வுண்மையை நான் நன்கறிந் திருத்தலால் அப்பொருளை அகத்தே தியானத்தினாலும், புறத்தே அழலோம்பலாலும் பெற்றேன். அகத்தே நவகுண்டத்தில் அனல் ஓம்பு முறையே அறிவிக்கிறார்.*

***குறிப்புரை :*** *மூன்றாம் அடியை முதலில் வைத்து, "அப் பொருளாய்" என ஆக்கம் வருவித்துரைக்க. முதலடி மூன்றாம் அடிகளில் உள்ள 'அறிந்து' என்பன, 'அறியப்பட்டு' என்னும் பொருளன.*

*"சுடர்விட்டுளன் எங்கள் சோதி" - தி.3 ப.54 பா.5*

*என்னும் திருப்பாசுரத் திருமொழிக்குச் சேக்கிழார் இவ்வாறே*

*தோன்று காட்சிச் சுடர்விட்டுளன் என்பது*
*ஆன்ற அங்கிப் புறத்தொளி யாய், அன்பில்*
*ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன்;*
*ஏன்று கண்பார்க் கிதுபொருள் என்றதாம்.*

*- தி.12 திருஞான புராணம் 835*

*எனக் கருத்துரைத்தல் காண்க. இதனுள் உயிரெதுகை வந்தது. கால் - காற்று, பிராணன்.*

*இதனால், 'நவகுண்டத் துள்ளெழும் நல்தீபத்தது' உண்மை கூறப்பட்டது. அதாவது அக்கினியின் ஆற்றலை அறிவிக்கிறது.*

**1001.** **கொண்டஇக் குண்டத்தி னுள்ளெழு சோதியால்**
**அண்டங்கள் ஈரேழும் ஆக்கி அழிக்கலாம்**
**பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலாம்**
**இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே. 4**

---

*1001. **தெளிவுரை :-** நான் மெய்ப்பொருளைப் பெற்ற வகைகளுள் ஒன்றாகிய குண்டத்தீயால் பதினான்கு உலகங்களை ஆக்கவும் முடியும்; அழிக்கவும் முடியும். பழமையாய் அளவற்றுப் பரந்து கிடந்த மறைகளின் விரிந்த பொருள்களை நான் இன்று செய்கின்ற இந்தச் சிறிய ஒரு நூலின் பகுதியிலே எடுத்துக் கூறினேன்.*

***குறிப்புரை :*** *'உள்வேதம்' என்பதை 'வேதத்துள்' என மாற்றிக் கொள்க. இதனுள் இன எதுகை வந்தது. நூல் - தந்திரம்.*

*இதனால், மேற்கூறிய தீபத்தது சிறப்புக் கூறப்பட்டது.*

*1002. **தெளிவுரை :-** புறத்தே அமைக்கப்பட்ட குண்டத்தினில் எழுகின்ற தீயினிடத்தும் உடம்பில் சொல்லப்பட்ட பதினாறு இடங்களைக் கற்பித்து வழிபட அவ்விடங்களில் உள்ளே தியானிக்கப்பட்ட பிராசாத கலைகள் பதினாறும் இனிது அருள் வழங்கிநிற்கும். இவ்வாறு அகவழி பாட்டோடு ஒன்றி நிற்கும் வகையில் குண்டத் தீயைக் காண்பவர்களுக்கே அவர்கள் மேல் சீற்றங்கொண்டு எழுகின்ற வினைகள் அவரைச் சாரமாட்டாவாய் ஒழியும்.*

***குறிப்புரை :*** *எடுத்த குண்டம் - வினைக்கீடாகக் கொடுக்கப்பட்ட உடல். எனவே, 'பிறவாறு காண்பார்க்கு அவையொழியாது பற்றுவனவாம்' என்றதாயிற்று. உலகில் நிகழுந் தீமைகட்குக் காரணம் அவரவர் முன்செய்த வினையே. அவையொழிந்தாலல்லது, துன்பங்கள் முற்றா ஒழியா, மாற்று முறைகளால் (பரிகாரங்களால்) ஓரளவே ஒழியும் என்க.*

*வேள்வித்தீயின் வழியாகத் தேவர் பலரை வழிபடுதலினும், பிராசாத கலையின் அதிதேவர்களை இவ்வாறு வழிபடுதல் சிறப்புடைத்து என்றவாறு. பிராசாத கலை பற்றி முன்னைத் தந்திரக் குறிப்பில் விரித்துக் கூறப்பட்டது. இதனுள்ளும் முதலடி இன எதுகையாய் நின்றது.*

*இதனால், மேற்கூறிய குண்ட வழிபாட்டில் மிக்கதொன்றன் சிறப்புக் கூறப்பட்டது.*

1002. எடுத்தஅக் குண்டத் திடம்பதி னாறில்
பதித்த கலைகளும் பாலித்து நிற்கும்
கதித்தனல் உள்ளெழக் கண்டுகொள் வார்க்கே
கொதித்தெழும் வல்வினை கூடகி லாவே. 5

1003. கூடமுக் கூடத்தி னுள்ளெழு குண்டத்துள்
ஆடிய ஐந்தும் அகம்புற மாய்நிற்கும்
பாடிய பன்னீ ரிராசியும் அங்கெழ
நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே. 6

---

*1003. **தெளிவுரை :-** ஒன்பது வகைக் குண்டங்களுள் அறுகோணமாய் அமைந்த குண்டத்தில் ஐம்பெரும் பூதங்களும் அக் குண்டத் தீயின் அகமாயும், அதன் புறமாயும் நிற்கும். அதனையும் நினைந்து நிலவுலகத்தின் பகுதிகளாகிய மேடம் முதலிய பன்னிரண்டு ராசிகளையும் அக்குண்டத்திலே பாவித்து வழிபடுவார்க்கு அதனின்றும் எழுகின்ற தீ எல்லாத் தேவரையும், கோள்களையும் மகிழ்விக்கின்ற நல்ல தீயாய் அமையும்.*

*குறிப்புரை : "கூட முக்கூடம்" என்றது, 'அறுகோணம்' என்றவாறு, ஆடிய - காரியங்களைத் தோற்றுவித்த, பாடிய - நூல்கள் சொல்லிய அறுகோண குண்டத்துள் பன்னிரண்டு ராசிகளைப் பாவிக்குமாறு. கோணம் ஒன்றிற்கு இரண்டிரண்டு ராசியாகக் கிழக்கு முதல் வலமாகச் சென்று வடக்கில் முடிய வைத்துப் பாவித்தல் என்க. குண்டம், இடவாகுபெயர். "தான்" என்றது, மேற்குறித்த குண்டத் தீயை.*

*இதனால், பொதுவகை வழிபாடு ஒன்றன் முறை கூறப்பட்டது. இதன்கண் அறுகோண குண்டம் பயன்படுமாறும் பெறப்பட்டது.*

*1004. **தெளிவுரை :-** அங்கியங் கடவுட்குச் சிரசும், முகமும், கொழுந்தாகிய சுடர்களாம். பக்கங்களில் படர்ந்து தாவுகின்ற சுடர்கள் கைகளாம், கீழ்நின்று பசிய நிறத்தை உள்ளே உடையதாய் எழுகின்ற இடை ஒளிப்பிழம்பே மேனியாம். இவ்வாறாதலின் வேள்வித் தீயே சிவனது வடிவமாகவும் எண்ணப்படுகின்ற நன்மையை உடையதாகின்றது என்று சிவசக்தி கூறினாள்.*

*குறிப்புரை : முதல் 'நற் சுடர்' - சிறந்த சுடர்; அவை கொழுந்தாகி மேலே உள்ளன. சிரம் கூறவே சிகையும் கொள்ளப்படுவதாம். 'நற்சுடர் சிரமாகும்; முக வட்டமாம்' என்க. 'கைகளில் ஆகும் சுடர் கை' எனக் கொண்டு கூட்டி உரைக்க, 'கை' இரண்டில் பின்னது பக்கம் 'பைஞ்சுடர்' என்பது வலிந்து நின்றது.*

**1004.** நற்சுட ராகும் சிரம்முக வட்டமாம்
கைச்சுட ராகும் கருத்துற்ற கைகளில்
பைச்சுடர் மேனி பதைப்பற்ற லிங்கமும்
நற்சுட ராய்எழும் நல்லதென் றாளே. 7

---

*பதைப்ப அறுதலாவது, சாந்தம் உறுதல், எழவே, 'சிவலிங்கம்' என்றதாயிற்று, ஈற்றடியை 'நற்சுடர் பதைப்பற்ற லிங்கமுமாய் எழும் நல்லது' எனக் கூட்டி உரைக்க. சிவ சத்தி கூறியதாக அருளிச் செய்தது. அவளே கேள்விக்குரிய மந்திரங்களைப் பிரேரிப்பவளாதல் பற்றி. தீயின் வடிவத்தை இவ்வாறு அங்கியங் கடவுள் வடிவாகக் கற்பித்துக் காட்டினார். மேற்கூறிய பிராசாதகலா நியாசத்தையும், பிறவற்றையும் செய்தற் பொருட்டு. "லிங்கம்" என்றது வியத்த லிங்கத்தை என்பது மேல் உறுப்புகளைக் கற்பித்துக் காட்டியதனால் கொள்க. இதனுள்ளும் இனஎதுகை வந்தது.*

*இதனால், வேள்வித்தீ தீக் கடவுளாய் நிற்குமாறு கூறப்பட்டது.*

***1005. தெளிவுரை :-*** *வேள்வித் தீயினது சிறப்பைக் கூறிய அந்தச் சிவசக்தியே, 'நம்மைச் செலுத்தி நிற்பன மந்திரங்களே' என அருளிச் செய்தாள். அம் மந்திரங்களையே தனக்கு முடி முதல் அடிவரையும் உள்ள உறுப்புக்களாகக் கொண்டு அருளோடு நிற்கின்ற அவளது உண்மையை உணராதவர்கள், எல்லாக் கல்விகளையும் அடி தொடங்கி முறையாகக் கற்றும் அக்கல்விகள் பகலில் காணப்படுகின்ற வானவில் போல வெறுந்தோற்ற மாத்திரையாய்ப் பயன்படாதொழியும்.*

***குறிப்புரை :*** *சொல், இங்கு மந்திரம். மென்மை - அருள். கல், கல்வி, முதனிலைத் தொழிற்பெயர். நாள் - பகல். வின்னாள் - பின்னாள் என்பதன் போலி. பின்னம் - வேறுபட்டது. நாயகம்சொல் - தலையாய சொல்.*

*இதனால், 'அங்கியங் கடவுட்கு மந்திரமும் வடிவாம்' என்பது பெறுதற் பொருட்டு யாவர்க்கும் மந்திரம் வடிவாமாறு கூறப்பட்டது.*

***1006. தெளிவுரை :-*** *பிறைமதிக் குண்டத்துப் பெருமான் நிற்கும் நிலை உணர்த்துகிறார். வில்லின் நுனி போன்ற இரண்டு நுனிகளுடன் விளங்கும் இளம்பிறை வடிவாகப் பொருந்திய குண்டத்தில் அந்த இரு நுனிகளிலும் எழுகின்ற தீ இரண்டு*

**1005.** நல்லதென் றாளே நமக்குற்ற நாயகம்
சொல்லதென் றாளே சுடர்முடி பாதமா
மெல்லநின் றாளை வினவகில் லாதவர்
கல்லதன் தாளையும் கற்றும்வின் னாளே. 8

**1006.** வின்னா இளம்பிறை மேவியகுண்டத்துச்
சொன்னா இரண்டும் சுடர்நாகம் திக்கெங்கும்
பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுடர்
என்னாகத் துள்ளே இடங்கொண்டவாறே. 9

---

*பாம்புகளாய் எங்கும் ஒளி வீசும். அவை ஒவ்வொன்றிற்கும் உள்ள பற்கள் நான்கு. இந்த நாகங்களுடன் பரந்தெழுகின்ற தீ எனது உடம்பினுள்ளும் இடங் கொண்டிருத்தல் வியப்பு.*

***குறிப்புரை :*** *'வில் நாப்போலும் நாவினையுடைய இளம் பிறை போல் மேவிய குண்டம், என்க. 'சொல்நால்' என்பது பாடமன்று. சுடர் நாகம், வினைத்தொகை. 'திக்கெங்குதாவும்' என்க. இவ்வாறு உடம்பினுள் அமையுமாறு: - நாபித்தானம் குண்டமாகவும், இட நாடி வல நாடிகள் பாம்பாகவும், மூலாக்கினி மேல் எழுந்து நடு நாடி வழிச் செல்லுதல் குண்டத்தீ ஓங்குவதாகவும் அமைதலாம். 'பல் நாலு' என்றது. அவ் வாயுவிற்கு வலுவூட்டுகின்ற அம்ச மந்திரத்தை. அம்ச மந்திரத்துள் ஈரிடத்தும் இங்கு விந்துவை வேறெண்ணித் தொகை கூறப்பட்டது.*

*இதனால், ஒளி நிலை அகத்தும், புறத்தும் ஒரு படித்தாய் நிற்குமாறு கூறப்பட்டது. இதனுள் பிறைக் குண்டம் குறிக்கப்பட்டது.*

***1007. தெளிவுரை :-*** *சிவபிரானது அகத்தொளி வடிவில் ஊன்றிய திருவடி அக்கினி மண்டலமாகிய மூலாதாரமும், சுவாதிட்டானமும் ஆம். தூக்கி யாடுந் திருவடி நீர் மண்டலமாகிய மணிபூரகமும். அனாகதமுமாகும். திசைகளை அளக்கும் எட்டுக் கைகள் உடலகம் எங்குமாகும். முகமும், அதன்கண் உள்ள முச்சுடர்களாகிய மூன்று கண்களும் விசுத்தியும், ஆஞ்ஞையுமாகிய இடங்களாகும். சிவனே ஐந்தொழிலாற்றி அனைவரையும் அவ்வத்தொழிலால் அமர்த்துபவன்.*

***குறிப்புரை :*** *இடங்கொள்ளுதல் - நிலத்தை இடமாகக் கொள்ளுதல், சுடர் - நெருப்பு சகம், இங்குத் திசை, இரண்டு ஆறு - எட்டு. இதனுள் ஈரடி எதுகை வந்தது.*

**1007.** இடங் கொண்ட பாதம் எழிற்சுட ராக
நடங்கொண்ட பாதம்நன் னீராம் அவற்குச்
சகங்கொண்டகை இரண்டாறும் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண னார்க்கே. **10**

**1008.** முக்கணன் றானே முழுச்சுட ராயவன்
அக்கணன் றானே அகிலமும் உண்டவன்
திக்கண னாகி திசைஎட்டும் கண்டவன்
எக்கணன் றன்னுக்கும் எந்தை பிரானே. **11**

---

*இதனால், இறைவனது அகத்தொளியுருவம் உடம்பினுள் இடங்கொண்டு நிற்குமாறு கூறப்பட்டது.*

*1008. தெளிவுரை :- மூன்று கண்களை உடையவனாகிய சிவபெருமானே அனைத்துத் தேவர்க்கும் வாயிலாகும் நிறைவான ஓமாக்கினி. அஃது எவ்வாறெனில், மண்ணை உண்டு உமிழும் கண்ணனாகிய அந்த மாயோனும், உலகங்களைப் படைக்கும் எண் கணனாகிய பிரமனும் தானேயாய் நிற்றலால். இதனானே, எங்கு யாவன் ஒருவன் தேவன் இருப்பினும் அவனுக்குப் பற்றுக்கோடாகின்றவன் சிவனே என்பது விளங்கும்.*

*குறிப்புரை : எனவே, 'ஓமாக்கினியில் அவன் ஒருவனையே மந்திர நியாசங்களுடன் வழிபடின் அஃது எல்லாத் தேவர்க்கும் உவப்பாகும்' என்பது கருத்தாயிற்று. இவ்வுணர்வு தோன்றி நிலைபெறுதற் பொருட்டே, வைதிக வேள்வியில் ஓமாக்கினியை அங்கியங் கடவுளாகக் கொள்ளுதல் போலல்லாது, சிவவேள்வியில் வாகீசுவரியது பூப்பு நீராட்டு, கர்ப்பாதானம் முதலிய சடங்குகளால் அக்கினியை வாகீசுவரனால் பிறப்பித்து, அவனுக்குப் பிறப்புச் சடங்கு இயற்றி, 'சிவாக்கினி' என நாம கரணம் செய்து சிவாக்கினியாக்கிக் கொள்ளும் முறை சைவாகமங்களில் விரிவாகக் கூறப்பட்டது என்க. சிவமின்றிச் சிறு தெய்வ வேள்வி செய்தால் தக்கனுக்கு ஏற்பட்ட நிலையே ஏற்படும்.*

*'அகிலமும் உண்ட அக்கண்ணனும் தானே: திசை எட்டும் கண்டவனாகிய திக்குக் கண்ணனும் ஆகி' என்க. எச்ச உம்மைகள் தொகுத்தலாயின. "ஆகி" என்பது பெயர் இறுதியில் 'பற்றுக்கோடு' என்பது சொல்லெச்சம்.*

**1009.** எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னமே சண்முகன் தோன்றலால்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலால்
மைந்தன் இவனென்று மாட்டுக்கொள்ளீரே. 12

---

*இதனால், வேள்வித் தீ சிவாக்கினியாதலின் சிறப்புக் கூறப்பட்டது.*

***1009. தெளிவுரை :-*** *சிவபிரானுக்கு இயல்பாகவே ஆறு முகம் இருப்பினும் அவற்றுள் அதோமுகம் தோன்றாதிருக்க அதுவும் கூடி ஆறுமுகமும் வெளிப்படையாய்த் தோன்றும்படி முருகன் உமையிடத்து பின்னும் சிவனும், சத்தியுமாகிய தந்தை தாயரது இடையிலே முருகன் குழவியாய் என்றும் நீங்காதிருத்தலாலும், 'மைந்தன் தந்தையின் மறுவடிவமே' என்னும் ஒற்றுமை பற்றி மேற்கூறிய ஓமாக்கினியை, 'சிவாக்கினி' என்றலேயன்றி 'குகாக்கினி' எனவும் ஆகமங்கள் கூறுதலின் பொருத்தத்தை உணர்ந்து கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :*** *இஃது "ஈசானஸ் ஸ்ர்வ வித்யானாம் ஈஸ்வரஸ் ஸர்வ பூதா நாம் I பிரஹ்மாதிபதிர் பிரஹமணோதிபதிர் பிரஹ்மாசிவோமே அஸ்து சதாசிவோம் II" எனச் சதாசிவனையே 'ஓம்' மொழிப் பொருளாகக் கூறிய வேதம்.*

*"சுப்ரஹ்மண்யோம் சுப்ரஹ்மண்யோம்! சுப்ரஹ்மண்யோம்"*

*எனக் கூறுதல் பற்றி ஐயம் நிகழாமைப் பொருட்டு அறுமுகன் ஐம்முகனின் வேறாகமை விளக்கப்பட்டது. இதனானே, சிவாக்கினி எல்லாத் தேவர்க்கும் வாயிலாதலே யன்றிச் சிறப்புடைய முருகனுக்கும் உரித்தாதல் கூறப்பட்டதாம்.*

*வட்டம், இங்கு முகம் 'வட்டமாயும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. ஏகாரம், உமையினின்றும் பிரித்த பிரிநிலை. அதனால், சிவனின் வேறன்மை இனிது விளக்கப்பட்டதாம். 'கந்தனும் சுவாமியும்' என்க. 'சுவாமி' என்பது சிவனுக்கே உரிய பெயராதலை, 'சுவாமி நாதன்' என்னும் முருகனது பெயருள்ளும் காண்க. மாட்டு - பொருத்தம். அஃதாவது, வேத மொழியின் பொருத்தம். திருவுருத்திரத்துள் "யாதே சிவாதநூ" எனத் தொடங்கும் மந்திரத்தின் தியான உருவம் அறுமுகனாகச் சொல்லப்படுதலும் இங்கு*

*நினைக்கத்தக்கது. சிவஞான யோகிகள் தமது காஞ்சிப் புராணம் குமர கோட்டப்படலத்துள், மேற்காட்டிய வேத மந்திரங்களை,*

> *எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும்*
> *ஈசன் என்னத்*
> *தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன்ஓ எனவேதாம்*
> *சாற்றும் அல்லால்*
> *முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன் ஓமெனவும்*
> *முக்காற் கூறும்*
> *இக்கருத்தை யறியானை எவ்வாறு விடுவிப்ப*
> *தியம்பு மின்னோ.* **- காஞ்சிப்புராணம்**

*என மொழிபெயர்த்துக் கூறினார். முருகன் அறுமுகச் சிவனாதலை நாயனார் தி 10 இரண்டாம் தந்திரத்துள் 'அதோமுக தரிசனம்' என்னும் அதிகாரத்துள்ளும் கூறினார்.*

*இதனால், 'வேள்வித் தீ சிவாக்கினியே' என்பது பற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

***1010. தெளிவுரை :-*** *அகமும், புறமும் ஒற்றுமைப்படக் காட்டிய குண்டங்களில் எழுகின்ற தீயினுள்ளே, 'காற்று' என்னும் ஒன்று. 'இடகலை, பிங்கலை' என இரண்டாய் இயங்கும் அவ் இயக்கத்திற்கு உரிய வழி மூன்றில் இரண்டு தடுக்கப்பட, ஒன்றில் மட்டுமே இயங்கச் செய்வோர் மேற்கூறிய ஒளியால் தேவராக மதிக்கப்படுவார். நவ குண்ட யாகம் எனப் பிராணாயாமத்தைக் குறிக்கிறார்.*

***குறிப்புரை :*** *வேத மந்திரத்தின் வடிவாதல் பற்றி வேள்வித் தீயை, "வேதம்" என்றே கூறினார். ஆட்டிய - பொருள்களைச் சலிப்பிக்கின்ற, 'ஒன்றே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தல் பெற்றது. 'இரண்டுமாய்' எனவும், 'கையிரண்டு வாட்டியவாக' எனவும், ஆக்கம் வருவித்துக் கொள்க. கை - பக்கம்: என்றது வழியை. 'ஒன்றில் பதைத்து எழ' என உறுபு விரிக்க. 'எழநாட்டும் இவர்நல்லொளி யானே சுரராவர்' என்க. 'சிவபுத்திரனாய் நிற்கும் அக்கினியையும் யோகியாக்கித் தாமும் யோகராயிருந்து வேட்பார் பெரும் பயன் எய்துவர்' என்றவாறு.*

*இதனால், அழல் ஓம்புதற்கு ஒரு சிறப்புமுறை கூறப்பட்டது.*

1010. மாட்டிய குண்டத்தி னுள்எழு வேதத்துள்
ஆட்டி கால்ஒன்றிரண்டும் அலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுரர்இவர் நல்லொளி யானே. 13

1011. நல்லொளி யாக நடந்துல கெங்கும்
கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்
சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாம்
கல்லொளி கண்ணுளு மாகிநின் றானே. 14

---

*1011. **தெளிவுரை :-** மொழியையே அறிவாகப் பெற்று இயங்கிவரும் மக்களுயிர்க்கெல்லாம் மாணிக்க ஒளிபோல உள்நின்று, கண்மணி போல உதவி வருகின்ற சிவன், இவ்வுலக முழுதிலும் வேள்வித் தீயாக விளங்கியே திருக்கோயிற் படிமங்களில் உள்ளொளியாய்க் கலந்து நிற்கின்றான்.*

*__குறிப்புரை :__ மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. ''கல்'' இரண்டில் முன்னது அதனாலாகிய படிமம். பின்னது மாணிக்கம். ''ஆகி'' என்பதை அதன்முன் உள்ள ''கல்லொளி'' என்பதனோடும் கூட்டுக.*

*இதனால், அழலோம்பல் திருக்கோயிற் சிறப்பிற்கு இன்றியமையாதல் கூறப்பட்டது.*

*1012. **தெளிவுரை :-** மேற்கூறியவாறு சிவன் திருக்கோயிலில் விளங்கி நிற்றற்கு உரியது, சிறப்பாக அறுகோணக் குண்டமே. அவற்றோடு, முன்னே சொன்ன பிறவும் இருத்தல் சிறப்பே. இதனுள் விளங்குகின்ற சிவாக்கினியையும், தம்மையும் முன்போல யோகியராகச் செய்தலேயன்றி, முப்பத்தாறாய தத்துவ ரூபிகளாகவும் செய்தால், எவ்வுலகத்தில் உள்ளார்க்கும், எப்பொருளாயும் அவன் வாயிலாகக் கொடுத்தல் கூடும்.*

*__குறிப்புரை :__ 'குண்டநிலை ஆறுகோணமாக, வட்டமும் பதைத் தெழும்' என முடிக்க. 'கொண்ட தத்துவம் ஆறாறும்' என மாறிக் கூட்டுக. "உள்ளே" எனப் பொதுப்படக் கூறியதனால், இருவருள்ளும் கொள்க. 'வட்டமும், என்னவும்' என்னும் உம்மைகள் தொகுத்தல் ஆயின. 'எடுக்கலுமாமே' என்பது பாடமாகாமை அறிக. இதனுள்ளும் முதலடி இன எதுகையாய் நின்றது.*

**1012.** நின்றஇக் குண்ட நிலைஆறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழும் ஆறாறுங்
கொண்டஇத் தத்துவம் உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன விடுக்கலும் ஆமே. **15**

**1013.** எடுக்கின்ற பாதங்கள் மூன்றது எழுத்தைக்
கடுத்த முகம் இரண்டாறுகண் ணாகப்
படித்தெண்ணும் நாஏழு கொம்பொரு நாலு
அடுத்தெழு கையான தந்தமி லாற்கே. **16**

---

*இதனால், அழலோம்புதற்கண் உள்ள மற்றொரு சிறப்பு முறை கூறப்பட்டது.*

*1013. தெளிவுரை :- குண்டத்தில் தீயாய் சிவனுக்கு, (சிவாக்கினிக்கு) நடக்கின்ற பாதங்கள் மூன்று : 'ஐ' என்னும் எழுத்தின் வடிவை ஒத்த முகம் இரண்டு : அம்முகங்களில் உள்ள கண்கள் ஆறு: நாக்கு ஏழு: தலையிரண்டிலும் கொம்புகள் நான்கு: கை ஏழு: இவ்வாறு அமைந்துள்ளன.*

*குறிப்புரை : 'இவ்வாறு ஆகமங்களுட் சொல்லப் பட்டது' என்பதாம். மூன்றது - மூன்று என்னும் எண்ணினையுடையது. படித்து - ஒரு படித்தாக. "அடுத்து" என்றது 'மற்று' என்னும் பொருளது "ஆனது" என்பதனை எல்லாவற்றோடும் கூட்டி, ஏற்ற பெற்றியால் முடிக்க. 'எழுகண்ணானது' என்பது பாடம் ஆகாமை அறிக.*

*இதனால், சிவாக்கினியது உருவம் கூறப்பட்டது.*

*1014. **தெளிவுரை :-** அழிவில்லாத சிவாக்கினியைத் தன்னுள் வியாப்பியமாகக் கொள்வதோர் இடமில்லை. (அவனே எல்லாவற்றிலும் வியாபகன்). அவனுக்குத் தோற்றமும், முடிவுமாகிய கால எல்லையும் இல்லை. (என்றும் உள்ளவன்). அவனது இயல்பை முற்றக் கூறச்சொல்லவில்லை. ஆகவே, அவனைத் திருவைந்தெழுத்துள் யகர வாச்சியமாகிய ஆன்மாவினுள்ளே காண்பதே அறிவுடைமையாம்.*

*குறிப்புரை : **'சிவாக்கினியாவான் சிவனே'** என்பதனை இவ்வாற்றால் உணர்த்தினார். 'பத்தின் கண்' என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது.*

1014. அந்தமி லானுக் ககலிடந் தானில்லை
அந்தமி லானை அளப்பவர் தாமில்லை
அந்தமி லானுக் கடுத்தசொல் தானில்லை
அந்தமி லானை அறிந்துகொள் பத்தே. 17

---

*இதனால், 'சிவாக்கினியாவான் சிவனே' என்பது கூறி, அதன் சிறப்புணர்த்தப்பட்டது. இதனானே, சிவன் அவ்வக்கினியாய் யாண்டும் நின்று அருள்புரிதலும் பெறப்பட்டது படவே. "பொங்கழல் உருவன்" (தி.3 ப.120 பா.1) என்ற திருஞானசம்பந்தர் திருமொழி - 'அழல் போலும் உருவத்தை உடையவன்' என உவமத் தொகையாயும், 'அழலை உருவாக உடையவன்' என இரண்டாம் வேற்றுமைத் தொகையாயும் நிற்றலே யன்றி, 'அழலாகிய உருவத்தை உடையவன்' எனப் பண்புத் தொகையாயும் நின்று பொருள்படுதல் கொள்ளப்படும். உவமத் தொகையை நிறமும், வடிவம் பற்றிக் கொள்க. வடிவு இலிங்கத் திருமேனி.*

***1015. தெளிவுரை :-** சிவாக்கினி தத்துவ யஞ்ஞத்தைக் கடந்து சத்திமண்டலத்தைத் தாவி எரிந்தமை உணர்த்துதல் நுதலிற்று. வரையோடு கூடிய குண்டத்து மலர்ந்தெழுந்த செந்தாமரைபோன்ற அக்கினியானது, பத்து இதழ், எட்டிதழ், ஆறிதழ், நாலிதழ் இவற்றை யுடைய மணிபூரகம், அநாகதம், சுவாதிட்டானம், மூலாதாரம் என்ற ஆதாரங்களையுடைய கலந்த மெய்க்கண் இயற்றப்படுகின்ற தியான யஞ்ஞும் சகஸ்ராரமாகிய துவாதசாந்தத் தலத்திலே விளங்குகின்ற பராசத்தியினிடம் பொருந்தி நின்றது என்றவாறு.*

*மூலாக்கினி துவாதசாந்தம்வரை தாவி எரிந்தது என்பதாம்.*

*மூலாதாரம் நாலிதழ்க்கமலம். சுவாதிட்டானம் ஆறிதழ்க்கமலம், மணிபூரகம் பத்திதழ்க்கமலம், இதயம் எட்டிதழ்க்கமலம், விசுத்தி பதினாறிதழ்க்கமலம், தாலு இருபத்துநாலிதழ்க்கமலம், ஆஞ்ஞை நாலிதழ்க்கமலம், பிரமரந்திரம் பதினாறிதழ்க்கமலம், சிரமேல் ஒன்பதிழ்க்கமலம், துவாதசாந்தம் ஆயிரம் இதழ்க்கமலம். இதுவே சக்திமண்டலம். இங்குச் சர்வ வியாபியான சிவம் வீற்றிருக்கிறது என்று சித்தாந்த சாராவளி கூறுகிறது. ஆதலால் மூலக்கனலாகிய சிவம் வியாபகத்தை உணர்த்துவது இம்மந்திரம்.*

**1015.** பத்திட்டங் கெட்டிட்டு ஆறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்டம் மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் ஆகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே. **18**

---

*எண்ணுப்பெயர்கள் அவ்வவ் வெண்களையுடைய இதழ்க்கமலங்களை உணர்த்தி அவற்றையுடைய ஆதாரங்களை உணர்த்தின. ஆதாரங்களை முறைமாற்றிக் கூறியருளியது சிவ ஒளி மேல் போகப்போகக் கீழ் இல்லை என்பதில்லை; ஒளி முன்னும் பின்னும் செல்லும் தன்மையுடையது என்பதை விளக்க,*

*மட்டிட்ட குண்டம் - ஆதாரங்களை அமைத்து வரையறை செய்த குண்டம்; என்றது உடலை. தாமரை - அக்கினி; உவமவாகுபெயர்.*

*கலந்த மெய்யாகமும் கட்டிட்டு நின்று பார்ப்பதிபால் பட்டிட்டு நின்றது எனக்கூட்டுக.*

*மெய்யாகம் - தத்துவ யஞ்ஞம். புறத்தே செய்யப்படுகின்ற யாகங்களைக் காட்டிலும் இதுவே உண்மையான பயன் தருவதாகலானும். இவ்வியாகம் நிலை பெறுதற்காகவே புறயாகங்கள் செய்யப்படுவனவாகலானும் இது மெய்யாகம் எனப்பட்டது. சக்தி மண்டலம் வரை பரவிச் சிவத்தை விளங்கச் செய்வது இதுவே என்றவாறு. (149)*

*1016. தெளிவுரை :- மேற்கூறிய கமலாசனத்தில் எழுந்தருளி யிருப்பவராகிய, மனோன்மனி மணாளராகிய சதாசிவ மூர்த்திக்கு முகம் ஐந்தாகலின், கைகள் இருபதும், எல்லா முகங்கட்குமாக வாய் ஐந்தும், கண்கள் ஐம்மூன்று பதினைந்தும், நாசிகள், காதுகள் பத்துமாய் உள்ளன.*

*குறிப்புரை : கால் - காற்று. பதி - இடம். காற்பதி - பிராண வாயுக்கு இடமாக விளங்கும் நாசி. பூப்பதி பாதம் - கமலாசனத்தில் பொருந்தியுள்ள திருவடி, 'நாற்பத்து' என்பது முதல் நீண்டது. 'இருப்பு' என்னும் குற்றுகர ஈற்றுச் சொல், அத்துச் சாரியை பெற்றது. 'சுடர் முடி பத்துச் சோத்திரம் இருப்பத்து அஞ்சே' என இயைந்து நிற்கும். இதனை, முதற்கண் எடுத்துக் கொண்டு உரைக்க. இங்ஙனங் கூறவே, மேல், "எடுக்கின்ற பாதங்கள்" என்னும் மந்திரத்துட் கூறியாங்குச்*

1016. பார்ப்பதி பாகன் பரந்தகை நாலஞ்சு
காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும்
பூப்பதி பாதம் இரண்டு சுடர்முடி
நாற்பது சோத்திர நல்லிருப் பத்தஞ்சே. 19

1017. அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்
மஞ்சிட்ட குண்டம் மலர்ந்தங் கிருத்தலால்
பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதல் முத்தியே. 20

---

*சிவாக்கினியைவேறு வடிவில் தியானித்தலேயன்றிச் சதாசிவ மூர்த்தி யாகவே தியானித்தலும் முறை என்பது பெறப்பட்டது. இஃது இன எதுகை.*

*1017. **தெளிவுரை :-** ஐந்து முகங்களால் ஐந்து வேறுபட்ட நிலைகள் போலக் காணப்படுகின்ற சதாசிவரால் அளவிட்டறிந்து ஆளப்படும் மகேசுவரரது நிலைகள் இருபத்தைந்தும் புகை பொருந்திய ஓம குண்டத்தில் பொருந்தி விளங்குதலால், சதாசிவர் முதல் ஐவராக விரிந்து நிற்கின்ற சிவன் மகிழ்ந்து தோன்றுகின்ற ஓமாக்கினியை நல்ல வகையில் ஓம்பி வாழ்தலே முத்தி நிலையாகும். அஞ்சிட்ட கோலம் - ஈசானம், தத்புருடம், வாமனம், அகோரம், சத்யோசாதம் என்ற 5 முகங்கள்.*

*__குறிப்புரை :__ மஞ்சு - மேகம்: என்றது புகையை. 'மஞ்சம்' என்பது கடைக்குறைந்து நின்றது. 'சிவபிரான் அவ்வப்பொழுது அடியவர்க்கு அருளக் கொண்ட பழைய உருவத் திருமேனிகள் இருபத்தைந்து' என ஒரு வரம்பு செய்யப்பட்டுள்ளன. அவையாவன:- 1. விக்கினப் பிரசாதர், (விநாயகரை அளித்தவர் - கஜமுகானுக்கிரகர்) 2. பிரமசிரச்சேதர் (நகமுக நிக்கிரகர்) 3. பிட்சாடனர் 4. வீரபத்திரர் 5. கஜசம்மாரர் (யானையுரித்த பெருமான்) 6. கிராதர் (வேடர் - அருச்சுனனுக்கு அருள்புரிந்தவர்) 7. காளகண்டர், (விஷாபஹரணர் - நஞ்சுண்ட பெருமான்) 8. கங்காளர், (கங்காளம் - பிரம்ம விட்டுணுக்களது எலும்புக்கூடு) 9. சக்கரப் பிரதானர் (திருமாலுக்குச் சக்கரம் அருளியவர்) 10. சண்டேசானுக்கிரகர் 11. சுகாசனர் (யோகமூர்த்தி) 12. ஏகபாதர் (உலகைத் தோற்றுவித்தவர்) 13. நடராஜர் 14. சலந்தராரி (சலந்தரனை உதைத்தவர்) 17. காமாரி (மன்மதனை எரித்தவர்) 18. இலிங்கோற்பவர் 19. சந்திரசேகரர் (பிறைமுடிப் பெருமான்)*

**1018.** முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்றற்று நாடிப் பரந்தொளி யூடுபோய்ச்
செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே. **21**

---

*20. சோமாஸ்கந்தர் 21. இடபாரூடர் 22. உமாமகேசர் 23. கல்யாணசுந்தரர் 24. அர்த்தநாரீசுரர் 25. அரியர்த்தர்(திருமாலை இடப்பாதியில் உடையவர்) என்னும் மூர்த்தங்களாம்.*

*இவை சிறிது மாறுபடவும் கூறப்படும் அவ்விடத்தில் தட்சிணாமூர்த்தி, யக்ஞேஸ்வரர், உக்கிரர், கங்காதரர், ஆபற்சகாயர், மச்ச கூர்மவராக நரசிங்க சங்காரர்கள், அந்தகாரி (அந்தகாசுரனை அழித்தவர்) என்னும் மூர்த்தங்கள் சொல்லப்படும். வீரபத்திரரையும், பைரவரையும் மாகேசுர மூர்த்தங்களுள் வையாது சிவகுமாரர்களாகக் கொள்ளுதலே மரபு. அஞ்சு இட்ட குண்டம் - பஞ்சகுண்டம்; பஞ்சமுக குண்டம்; சிவகுண்டம். வன்னி - தீ.*

*இதனால், 'ஓமாக்கினியே அனைத்துச் சிவமூர்த்திகளாயும் நிற்கும்' என்பது கூறப்பட்டது.*

*1018. தெளிவுரை :- வீடு பேற்றைத் தருகின்ற ஞானவடிவினனும், வேள்வியில் நிறைவுடைய தீயாய் நிற்பவனுமாகிய சிவன், வேதங்களைக் கற்று அவ்வொழுக்க நெறியில் குற்றமின்றி நிற்பவரது உள்ளத்திலே விளங்கி நிற்பான். உலகப் பற்றுக்களை விடுத்து அவனையே நாடி, படர்ந்து எரிகின்ற அத்தீயிடமாக அவனை அணுகி வெகுளி முதலிய குற்றம் நீங்கி நின்றவர் அவனைப் பெற்று நின்றார்கள்.*

*இறைவனிருக்குமிடமும், அவன் இயல்பும், அவனை அடையும் உபாயமும் அறிவித்தல் நுதலிற்று. அநாதிமல முத்தனான சோதியாய் முழுச்சுடராய் உபகரிக்கும் பரம்பொருள், கலைஞானங்களை முற்றவோதி அதில் மயங்காது அவற்றைக் கடந்து நிற்பாரது கருத்துள் எழுந்தருளும். அதனை, உலகப் பற்றறத் தேடி வியாபியாயுள்ள குண்டலினியாகிய ஒளியின் துணையால் கடந்துசென்று, சினமாகிய பகை நீங்கி அசையாதிருந்தவர்கள் அதனோடு அந்நியமாய்ச் சேர்ந்திருப்பர் என்றவாறு.*

**1019.** சேர்ந்த கலைகளும் சேரும்இக் குண்டமும்
ஆர்ந்த திசைகளும் அங்கே அமர்ந்திடும்
பாய்ந்தஜம் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்
காய்ந்தவர் என்றும் கலந்தவர் தாமே. 22

---

*பற்றற நாடி - எனது, யான் என்னும் அகப்பற்றும், புறப்பற்றும் நீங்க ஆராய்ந்து. ஒளியூடுபோய் - மூலத்தினின்றும் குண்டலினி ஒளியோடு, அவ்வவ்வாதாரங்களிலுள்ள அதி தெய்வங்களாகிய ஒளிகளைப் பேதித்துக் கொண்டு, மதிமண்டலம் சென்ற அதனையுங் கடந்து துவாதசாந்தப் பெருவெளியில் விளங்கும் பேரொளியாகிக் கலந்து, செற்று - சினம். இது செற்றம் என்பதன் குறை. சேர்ந்திருந்தார் தியான பரராய் இருந்தனர். வீடு சேர்ந்திருந்தார் எனலுமாம்.*

***குறிப்புரை :*** *வேத ஒழுக்க நெறியாவது முத்தீ வேட்டல். 'செற்றம்' என்பது குறைந்து நின்றது. வெகுளி முதலிய குற்றமாவன. வெகுளி, காமம், மயக்கம் என்பன. இக்குற்றங்கள் நீங்கினோர் உலக நலத்தின் பொருட்டே வேள்வி வேட்பர் : அவ்விடத்தில் அவர் சிவனைத் தாம் அன்பால் வழிபடுவர்; அவ்வழிபாடு ஞானம் வாயிலாக வீட்டைத் தரும் என்க. இதனுள்ளும் முதலடி இன எதுகை பெற்றது.*

*இதனால், வேள்வி வீடும் பயக்குமாறு கூறப்பட்டது.*

***1019. தெளிவுரை :-*** *பரவெளியில் ஒளியோடு உடனுறைகின்ற காலத்துளதாம் அநுபவம் அறிவித்தல் நுதலிற்று. பொருந்திய நிவிருத்தியாதி பஞ்ச கலைகளும், அவற்றைப் பொருந்திய ஓமகுண்டமும், அவை வாழ்வதற்காக்கப்பட்ட திசைகளும், எல்லாம் நுணுகி அங்கே பொருந்தியிடும். ஆதலால் பரவிய பருப்பூதங்கள் ஐந்தாலும் காணப்பட்ட காட்டைக் கொளுத்தியவர்களே என்றும் இரண்டறக் கலந்து விளங்குபவராவர் என்றவாறு.*

*சேர்ந்தகலை - 'மலச்சேற்றுள் அழுந்திக் கிடக்கிற ஆன்மாக்கள் 'சிறிது ஞானப்பிரகாசம் பெற்றுய்வதாக' என இறைவனால் உபகரிக்கப்பெற்ற நிவிருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சந்தியதீதை என்னும் ஐந்து கலைகளும்.*

*சேரும் இக்குண்டமும் - அந்த ஐந்து கலைகளும் சேர்ந்துள்ள சரீரமாகிய இந்த ஓமகுண்டமும்.*

**1020.** மெய்கண்ட மாம்விரி நீர்உல கேழையும்
உய்கண்டஞ் செய்த ஒருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானம் திருந்திய தேவர்கள்
பொய்கண்ட மில்லாப் பொருள்கலந்தாரே. **24**

---

*திசை என்றது திசைகளை உடைய உலகையுணர்த்திற்று. ஆர்ந்த திசைகளும் - வினைப்போகத்தை நுகர்தற்காக அருளப்பெற்ற எல்லாம் நிறைந்த உலகமும் என்பது. அங்கே அமர்ந்திடும் - முதல் திருமந்திரத்தில் அருளியதுபோல பெருவெளியில் ஒளியோடு கலந்திருக்கின்ற காலத்தில் இவையெல்லாம் நுணுகிக் காரணத்தன்மை எய்தி விளங்கும் என்பதாம்.*

*பாய்ந்த ஐம்பூதம் - பருப்பூதம் ஐந்தும் பார்க்கின்ற - காண்கின்ற; என்றது. ஐம்பூதங்களும் கூடியும் குறைந்தும் கூடிப்படைக்கப்பட்ட. வன்னி - காடு; என்றது பௌதிக உலகத்தை. உலகம் பொறிகளுக்கு ஏற்ற புலன்களாகிய காட்டினையுடையது. ஆதலால் வன்னியென்று உருவகிக்கப்பட்டது.*

*காய்ந்தவர் - காட்டைக் கொளுத்தியவர்; புலன்களை வென்றவர். என்றும் கலத்தல் - பிரியாமே அந்நியமாதல். தாம், ஏ அசைகள்.*

*1020. தெளிவுரை :- கடல் சூழ்ந்த நிலவுலகின் ஏழு பொழில்களையும் (தீவுகளையும்) உயிர் உய்தி பெறுதற்கு உரிய உலகமாக அமைத்த ஒருவனாகிய சிவனை அவ்விடங்களில் பிறந்துள்ள நீங்கள் வழிபாட்டினால் அடையுங்கள். அவனால் படைக்கப்பட்ட அவ்வுலகம் முழுதையும் அறியும் அறிவைப் பெற்ற தேவர்களும் அதன்கண் சென்று அவனை வழிபட்டே மெய்ப்பொருளைப் பெற்றார்கள் ஆதலால்.*

*குறிப்புரை : விரிந்த கடலால் சூழப்பட்ட உலகு ஏழினையும் நிலைத்ததாம் வண்ணம் உய்யும் கண்டங்களாகச் செய்த ஒப்பற்ற முதல்வனைத் தியானியுங்கள். செய்கைகளால் வரையறுக்கப்பட்ட ஞானம் எய்தித் திருந்திய தேவர்கள், பொய்யால் வரையறுக்கப்படாத மெய்ப்பொருளைக் கலந்தவரானார்கள் என்றவாறு.*

*செயலாகிய யாகாதி கன்மங்களிலே எப்போதும் தோய்ந்து களிக்கும் இந்திராதி தேவர்கள்கூட, கிரியையால் பரிபாகப்பட்டு ஞானம் எய்தித் திருந்தி, மெய்ப்பொருளோடு கலந்தார்கள்;*

*ஆகையால், மாயையின் காரியமாய், தோன்றி அழிவதாய உலகு ஏழையும் உய்யும்வண்ணம் ஆட்கொண்ட முதல்வனைச் சேருங்கள்; நீங்களும் முத்தியடையலாம் என்பது கருத்து.*

*மெய்கண்டமாம் உய்கண்டம் செய்த ஒருவனை எனக் கூட்டுக. உலகேழ் என்றது சப்த துவீபங்களை. பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், தபோலோகம் முதலான ஏழு உலகங்கள் எனின், விரிநீர் என்ற அடைமொழி உலகென்ற பொதுமை பற்றி வந்ததாகக் கொள்க. எல்லா உலகங்களும் மாயையின் காரியமாகத் தோன்றி நின்று அழியுந் தன்மையது ஆதலின் பொய்கண்டம். அவற்றை மெய்கண்டமாம் உய்கண்டம் செய்தான் இறைவன் என்பதாம். சேர்தல் - இடைவிடாது நினைத்தல்.*

*செய்கண்டம் - செயலாகிய வரையறை; என்றது கிரியைகளை. யாகாதி கருமங்கள். இதனால் ஞானம் பெறமுடியாது. இவைகள் பசுபுண்ணியங்கள்; பதவிகளையே அளிப்பன. இவற்றின் நிலையாமை உணர்ந்த தேவர்கள் பசுபுண்ணியங்களைச் செய்யாமல் சிவவழிபாடு முதலிய பதிபுண்ணியங்களைச் செய்து திருந்திய தேவர்களானார்கள். அதனால் அவர்கள் பொய்யால் வரையறுக்கப்படாது அதனைக் கடந்துள்ள மெய்ப்பொருளாம் சிவத்தைக் கலந்து விளங்கினார்கள் என்பது.*

***‘மெய்யுணர்வு பெறுதற்கு ஏற்ற இடம் நிலவுலகமே’ என்பது சிவநூல் துணிபு**. அதனுள்ளும், பரத கண்டமும், அதனுள்ளும் குமரிக் கண்டமும் சிறந்தன என அவை கூறும் என்க. “இந்தப் பூமி சிவன் உய்யக்கொள்கின்ற ஆறு” எனவும், (தி.8 திருப்பள்ளி. 10) ‘‘வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்றனை அர்ச்சிப்பர்’’ (சிவஞான சித்தி, சூ.2.92) எனவும் போந்தன காண்க.*

***இதனால், வழிபாட்டுலகமாகி இவ்வுலகமாகிய சிறப்பு உணர்த்தும் முகத்தால் இதன்கண் செயற்பாலதாகிய முத்தீ வழிகாட்டின் சிறப்பு உணர்த்தப்பட்டது.***

***1021. தெளிவுரை :-** ஓமகுண்டத்தில் தியானிக்கப்படும் இறைவன் திருவுரு இதுவென அறிமுகம் செய்கிறார்.*

***தாமரைபோல மலர்ந்த பெரிய குண்டத்து விளங்குகின்ற உத்தமனாராகிய இறைவனுக்கு மலர்ச்சியான சிவந்த முகமும், இரு கண்களோடு மற்றைக்கண்ணாகிய நெற்றிக்கண்ணும், மகாரம்போன்ற ஒப்பற்ற மூக்கும், உணர்ந்த கரிய மயிர்முடியும், கலந்துள்ள இருபாதமும் இருகரமும் ஆகும் என்றவாறு.***

**1021.** கலந்திரு பாதம் இருகர மாகும்
அலர்ந்திரு குண்டம் அகாரத்தோர் மூக்கு
மலர்ந்தெழு செம்முகம் மற்றைக்கண் நெற்றி
உலர்ந்திருங் குஞ்சி அங் குத்தம னார்க்கே. **24**

**1022.** உத்தமன் சோதி உளன்ஒரு பாலனாய்
மத்திம னாதி மலர்ந்தங் கிருந்திடும்
பச்சிம திக்கும் பரந்து குழிந்தன
சத்திமா னாகத் தழைத்த கொடியே. **25**

---

*மலர்ந்த இரு குண்டம் அங்கு உத்தமனார்க்கு, மலர்ந்தெழு செம்முகம், மற்றைக்கண், நெற்றி (கண்) உணர்ந்த இருகுஞ்சி, மகாரத்து ஓர் மூக்கு, கலந்த இரு பாதம், (கலந்த) இரு கரம் ஆகும் எனக் கூட்டிப் பொருள்கொள்க. அங்கங்களை நிரலே கூறாது பாதம் முதலாக மாற்றி அமைத்தது பாதாதிகேசமாகத் தெய்வங்களுக்குச் சொல்லும் மரபுபற்றி. மூக்கின் நுனி மகாரம் போல்வதாகலின் மகாரத்தோர் மூக்கு என்றது. குஞ்சி - ஆண்பால் தலைமயிர்.*

*கலந்த இரு பாதம் - அருளல் கலந்த இருபாதம். கலந்த இருக கரம் - திதி கலந்த இரு கரம் என்க.*

***1022. தெளிவுரை :-** சிவபெருமான் வாகீசுவரிக்கு நாயகனாய் இன்புற்று மகிழ்ந்ததனால் உண்டாகிய ஓமத்தீ குண்டத்தின் கீழ்ப் பாதியோடு நில்லாமல் மேற்பாதியிலும் பரத்தலால். அங்கு உள்ள இடங்களும் வேறுபடும். அந்நிலையில் அச்சிவனே அந்தத் தீயுருவில் முதலிலே குழவிப் பருவத்தனாயும், பின்பு காளைப் பருவத்தனாயும் இருப்பான்.*

***குறிப்புரை :** இதன்கண் உள்ள அடிகளை 'ஈறு ஈற்றயல், முதல், இரண்டு' என்னும் முறையிற் கொண்டு உரைக்க. 'ஒரு சோதிப் பாலனாய் உளன்: சோதி மத்திமனாய் இருந்திடும்' என்க. வடக்கில் தோற்றுவிக்கப்பட்ட தீ வலமாக எழுந்து மேற்கில் பரந்து ஓங்கும் என்பார் "பச்சிம திக்கும்" என்றார். இதனால், 'வடக்கில் பாலனாய்த் தோன்றி வளர்ந்த சிவாக்கினி மேற்கில் காளையாய் நிற்பன்' என்பது பெறப்பட்டது. "சத்திமானாக" என்பதற்கு எழுவாய் உத்தமன் என்பதேயாம். தழைத்த கொடி - உண்டாய கொடி : கொடி, தீயின் சுடர். சிவவேள்வியில் தீயை வாகீசுவர வாகீசுவரியர்தம் புதல்வனாகத்*

**1023.** கொடிஆறு சென்று குலாவிய குண்டம்
அடிஇரு கோணமாய் அந்தமும் ஒக்கும்
படிஏ ழுலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதன மாமே. **26**

---

*தோற்றுவிக்கும் முறை சிவாகமங்களுட் கூறப்படுதல் மேலும் (பா. 1008) குறிப்பிடப்பட்டது. இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், சிவசத்திகளது கூறாகிய ஓமாக்கினியது நிலைகள் கூறப்பட்டன.*

***1023. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு நிற்கும் சிவாக்கினிக்கு இரு முக்கோணங்களை ஒன்றன்மேல் ஒன்றாய் இட்டது போல அமைக்கும் அறுகோண குண்டமே சிறந்தது. அதன் கண் சிவசோதியை அவியாதவாறு கண்டவர்க்குப் பெரிய செல்வம் உண்டாகும்.*

***குறிப்புரை :*** *"கொடி" என்பதற்குப் பொருள் மேற்கூறப்பட்டது. 'ஆறு பக்கம் சென்று குலாவிய குண்டம்' என்க. 'இருகோணமாய் அடியும் அந்தமும் (மேலும்) ஒக்கும்' எனக் கூட்டுக. 'ஆறு பக்கம்' எனவே, இரண்டும் முக்கோணமாதல் பெறப்பட்டது. 'கண்டவர்க்கு' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. மாதனம் - பெரிய செல்வம். இது அருட் செல்வத்தையும் குறிப்பதாம்.*

*அறுகோணம் சிறந்த குண்டமாதல், சிவனது முகத்தோடும், குணத்தோடும் ஒத்து நிற்றலாலும், உடம்பினுள் ஆதாரங்களும் ஆறாதலானும் என்க. இதனானே, இஃது ஆறுமுகனுக்கும் மிக ஏற்புடையதாதல் அறியப்படும். இதன் பயனும் சிறப்பாகப் போகமாதல் கூறப்பட்டமை காண்க.*

*இதனால், அறுகோண குண்டத்தில் சிறப்பு வலியுறுத்தப்பட்டது.*

***1024. தெளிவுரை :-*** *தன்னைக் காண்பவர்க்குப் பெரிய செல்வமாய் வளர்கின்ற ஓமத்தீயைத் தனக்குப் பயன் தரும் சாதனமாகக் கொண்ட ஆசாரியன், எப்பொழுதும் மாணவர்களது சத்திநிபாத வகையைத் தெரிந்து, அதற்கேற்ப அவர்களுக்கு அதனை அறிவித்தலை மேற்கொள்வானாயின், அவன் உலகம் முழுதிற்கும் குருவாய்ப் பலரை ஆட்கொள்ள வல்லவனாவன்.*

1024. மாதன மாக வளர்கின்ற வன்னியைச்
சாதனமாகச் சமைந்த குருஎன்றும்
போதன மாகப் பொருந்த உலகாளும்
பாதன மாகப் பிரிந்தது பார்த்தே. 27

1025. பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை
ஆத்தம தாகவே ஆய்ந்தறி வார்இல்லை
காத்துட லுள்ளே கருதி யிருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. 28

---

***குறிப்புரை :*** *மூன்றாம் அடியை ஈற்றில் வைத்து உரைக்க. 'போதனம், பாதனம்' என்பன, 'போதித்தல், வீழ்தல்' எனத் தொழிற் பெயராய் நின்றன, நான்காம் அடியில். 'ஆக' 'உண்டாக' என்னும் பொருட்டு. சாதனம் - வாயில்.*

*இதனால், அழலோம்பல் ஆசாரியர்கட்குச் சிறப்புக் கடனாதல் கூறப்பட்டது.*

***1025. தெளிவுரை :-*** *உருவத்தால் ஓம குண்டத்தளவிலே நின்றதாயினும், ஆற்றலால் எவ்விடத்தும் நிறைந்து நிற்கும் ஓமாக்கினியைத் தமக்கு எல்லா நலனையுந் தரும் அருந்துணையாக ஆராய்ந்தறிபவர் ஒருவரும் இல்லை. அவ்வாறு அறிந்து அதனை முறைப்படி ஓம்பி, மனத்திலும் தியானிப்பவர் உடல், ஆண்டுகள் பல சென்றாலும் அழிவின்றிப் பல யுகங்களைக் கண்டு கொண்டிருந்தவாறு பல இடங்களில் கேட்கப்படுகின்றது.*

***குறிப்புரை :*** *"பார்த்த" என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று, 'கேட்கப்படுகின்றது' என்பது சொல்லெச்சம்.*

*இதனால், வேள்வி வேட்டல் காய சித்தியையும் தருதல் கூறப்பட்டது.*

***1026. தெளிவுரை :-*** *அக வழிபாடாகிய யோகத்தை நன்கறிந்த யோகி, மேற்கூறியவாறு பல யுகங்கள் அழியாதிருத்தற்கு ஏதுவாகிய நவகுண்ட வேள்வியையும் ஒருங்கே தன் உடலகத்துள் முறையறிந்து வளர்ப்பான். தாய் வயிற்றினுள் தங்கிப் பிறக்கின்ற கருவிற்கு அவளது குறிபோல எல்லாப் பயன்களது விளைவிற்கும் இன்றியமையாச் சாதனமாக உலகம் கண்டது வேள்வியே.*

**1026.** உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க
அகங்கண்ட யோகிஉள் நாடி எழுப்பும்
பகங்கண்டு கொண்டஅப் பாய்கரு ஒப்பச்
சகங்கண்டு கொண்டது சாதன மாமே. **29**

| வ. எண் | நவகுண்டம் | புறகிரியை அண்டத்தில் | அகக்கிரியை (ஞான ஓமம்) பிண்டத்தில் |
|---|---|---|---|
| 1. | சதுரம் | கிழக்கு | மூலாதாரத்துள்ள பூமண்டலம் |
| 2. | யோனி | தென்கிழக்கு (அக்கினி) | மூலாதாரத்துக்கும் சுவாதிட்டானத்துக்கும் இடையிலுள்ள காம வாயுவிற்கும், காமபீஜத் துக்கும் இடமாகவுள்ள திரிகோணம் |
| 3. | பிறை | தெற்கு | சுவாதிட்டானத்திலுள்ள நீர்மண்டலம் |
| 4. | முக்கோணம் | தென்மேற்கு (நைருதி) | மணிபூரகத்துள்ள அக்கினி மண்டலம் |
| 5. | வட்டம் | மேற்கு | விசுத்தி சக்கரத்துள்ள ஆகாய மண்டலம் |
| 6. | அறுகோணம் | வடமேற்கு (வாயு) | அநாகதச் சக்கரத்துள்ள வாயு மண்டலம் |
| 7. | பதுமம் | வடக்கு | ஆக்ஞா சக்கரத்துள்ள பதுமம் |
| 8. | அட்டகோணம் | ஈசானியம் | சிரத்துள்ள மேலுள்ள ஒன்பது இதழ்க் கமலம் |
| 9. | வர்த்துவம் (நீள்வட்டம்) | ஈசானியத் துக்கும் கிழக்குக்கும் நடுவு | துவாத சாந்தத்தில் உள்ள பராகாயத்தைக் குறிக்கும் |

*குண்டமென்பது - ஆழமான குழிஎடுத்து பூமியின் மேல் மட்டத்தில் வட்டம், சதுரம் பிறை வடிவம் என்ற விதி முறைக்கேற்ப, 1/2 அடி, 1 அடி உயரம் சுவர்போலச் செங்கல்லால் கட்டி மெழுகி அதன் முன் அமர்ந்து எரியோம்பி வேள்வி (யாகம்) செய்யுமிடம்.*

*குறிப்புரை : "அகங் கண்ட யோகி" என்பதை முதலிற் கொண்டு உரைக்க. 'பகத்தைச் சாதனமாகக் கண்டு கொண்ட கரு' என்க.*

1027. சாதனை நாலு தழல் மூன்று வில்வயம்
வேதனை வட்டம் விளைவாறு பூநிலை
போதனை போது அஞ்சு பொற்கய வாரணம்
நாதனை நாடும் நவகோடி தானே. 30

---

*இவ்வாறு உவமை கூறியதனால் காய சித்தி முதலிய சில பயன்களுக்கு யோனி குண்டம் சிறந்ததாதல் பெறுதும்.*

*இதனால், யோகிகள் வேள்வியை அகத்து ஓம்பியே பயன் பெறுதல் கூறப்பட்டது.*

***1027. தெளிவுரை :-*** *பயன்களில் சரியை முதலிய நான்கிற்கும் நாற்கோண குண்டமும், வேள்விக் கடன் முற்றுதற்கு முக்கோண குண்டமும், வெற்றிக்கு வில்லை ஒத்த பிறைக் குண்டமும், துன்ப நீக்கத்திற்கு விருத்த குண்டமும், எல்லாப் பயன்கட்கும் அறுகோண குண்டமும், நிலைபேற்றிற்கு அட்டகோண குண்டமும், ஆசிரியத் தன்மைக்குப் பதும குண்டமும், அழகிய கையையுடைய யானைமேற் செல்லும் அரசச் செல்வத்திற்குப் பஞ்சகோண குண்டமும் சிறப்பாக உரியனவாம். நவகுண்டங்களை இவ்வாறு பெரும்பான்மை பகுத்துணர்ந்து கொள்க.*

***குறிப்புரை :*** *யோனி குண்டம் மேலே குறிக்கப்பட்டமையால், அதனை உளப்படுத்து இங்கு, 'நவ குண்டம்' என்றார். சாதனை முதலிய எல்லாவற்றிலும் நான்கனுருபு விரித்துக் கொள்க. "வேதனைக்கு" என்பதனை, "துன்பத்திற்கியாரே துணையாவார்" (திருக்குறள், 130-9) என்பது போலக் கொள்க. 'கைய' என்பது போலியாயிற்று. பூ - பூமி; என்றது அதன் திசைகளை கோடி - கோடுதலை உடையது. குண்டம்.*

*இதனால், நவ குண்டங்கட்குப் பெரும்பான்மை உரிய பயன் கூறப்பட்டது.*

| வ. எண் | குண்டம் | | பயன் |
|---|---|---|---|
| 1. | நாற்கோணம் |  | சரியை, கிரியை, யோகம், ஞானம் |
| 2. | முக்கோணம் |  | வேள்விக்கடன் முழுமைக்கு |
| 3. | பிறைக்குண்டம் |  | வெற்றி |
| 4. | விருத்த குண்டம் |  | துன்ப நீக்கம் |
| 5. | அறுகோணம் |  | எல்லாப் பயன்கள் |
| 6. | அட்டகோணம் (எண்கோணம்) |  | நிலைபேறு |
| 7. | பதும குண்டம் |  | ஆசிரியத்தன்மை |
| 8. | பஞ்சகோண குண்டம் |  | அரச செல்வம் |
| 9. | நீள்வட்டம் (வர்த்துவம்) |  | தலைமை |

## 5. சத்திபேதம்
## அல்லது திரிபுரை சக்கரம்

*திருவம்பலச் சக்கரம் பற்றிச் சிவனது நிலை வகையெல்லாம் முன்பு கூறிய நாயனார் அவனது நிலைகள் அனைத்திற்கும் அவ் வாற்றால் என்று பிரியாது இயைந்து நிற்பவள் அவனது சத்தியாகலின், அவ் வகைகளை யெல்லாம் இனி முப்பது திருமந்திரங்களால் கூறுகின்றார். இவ்வதிகாரமும் அந்தாதியாய் வருதல் அறியத்தக்கது. இதன் இடையே அம்மைக்கு உரிய ஒரு சக்கர இயல்பும் கூறப்படுதல் பற்றி, இவ்வதிகாரத்திற்கு 'திரிபுரை சக்கரம்' என்பதும் பெயராகக் கொள்வர். சத்தியே சிவனின் அருளாணையின் வண்ணம் பல வடிவு தாங்கி அருள் புரிவள். ஆதலால் சத்தியின் பேதங்களை அறிவிக்கிறது இப்பகுதி. 'திரிபுரம்' என்பது, 'பிரம லோகம், விட்டுணு லோகம், உருத்திர லோகம்' என்னும் மூன்றுலகங்களைக் குறிக்கும். சத்தியின் வடிவங்கள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை ஆகிய மூன்றையும் இடமாகக் கொள்ளுதலாலும் திரிபுரை என்றும் சொல்லுவர். அவற்றிற்குத் தலைவியாதல் பற்றி அம்மைக்கு, 'திரிபுரை' என்னும் பெயர் சொல்லப்படும். நாயனார் இப்பெயரையே இங்குச் சிறப்பாகக் கூறுதல் காண்க.*

**1028.** மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
ஓமாயை நாரணி ஓராறு கோடியில்
தாமான மந்திரம் சத்திதன் மூர்த்திகள்
ஆமாய் அலவாம் திரிபுரை ஆங்கே. **1**

---

*1028. தெளிவுரை :- மாமாயை முதலாகச் சொல்லப்படும் பொருள்கள் யாவும் தானேயாயும், அல்லவாயும் சிவ சத்தி நிற்பாள்.*

*குறிப்புரை : மா மாயை - சுத்த மாயை. இதுவே வியாபகமாய்ப் பெரிதாகலின் இப்பெயர் பெற்றது. 'மாயை' என வாளா கூறும் வழியெல்லாம் அஃது அசுத்த மாயையையே குறிக்கும் வயிந்தவம் - விந்துவின் காரியம்: சுத்ததத்துவங்கள் சுத்த மாயைக்கு 'விந்து' என்பது பெயராகலின், அதன் காரியங்கள் 'வைந்தவம்' எனப்படும். அசுத்த மாயையின் காரியங்கள் 'மாயேயம்' என்றும், பிரகிருதியின் காரியங்கள் 'பிராகிருதம்' என்றும் சொல்லப்படும் என்பதும் இங்கு உணர்ந்து கொள்க. வைகரி - வைகரி, முதலிய நால்வகை வாக்குகள்*

அவை, 'வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை' என்பன சூக்குமை, 'பரை' எனவும்படும். இது காரணநிலையாய், நுண்ணிதாய் நிற்பது 'நாதம்' எனப்படுவதும் இதுவே இதன் விருத்தி (வளர்ச்சி) வகைகளே பைசந்தி முதலிய ஏனைய மூன்றும். ஓ மாயை - அசுத்த மாயையினின்றும் தோன்றிய, ஆன்ம தத்துவங்கள் தோன்றுதற்கு முதலாகிய பிரகிருதி மாயை. 'மூலப் பிரகிருதி' எனப்படுவது இதுவே. ஓவுதல் - நீங்குதல்; வெளிப்படுதல். உள்ளொளி - குண்டலி சத்தி. மந்திரங்களின் கோடி (முடிவு) ஏழனுள், 'ஹீம், பட்' என்னும் இரண்டும் சிலவிடத்து ஒன்றாக எண்ணப்படும். அம்முறை பற்றி இங்கு "ஓராறு கோடியில் தாமான மந்திரம்" என்றார். ஏழு கோடிகள் முன்தந்திரத்தில் கூறப்பட்டன. சத்திதன் மூர்த்திகள் - சத்தியின் வேறுபாடுகள் தாம் பல. அவை, ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி என்பனவும், 'ஆரணி, ஜெனனி, உரோதயித்திரி' என்பனவும், 'வாமை, ஜேஷ்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப் பிரமதனி, சருவபூததமணி, மனோன்மணி' எனவும், 'சத்தி, விந்து மனோன்மனி, மகேசுவரி, உமை, திரு, வாணி' எனவும் மற்றும் பலவுமாம். "ஆம் ஆய்" என்பதில் 'ஆம்' அசை நிலை. 'அன்று, அல்ல' என்பன வற்றைப் பொதுவினை போலக் கூறுதல் சிலவிடத்துக் காணப்படுகின்றது. ஆங்கு - சிவன் நினைத்தவிடத்து.

இதனால், 'சிவனது சத்தியே பிற பொருள்களில் கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும் நிற்கும்' என்பது கூறப்பட்டது.

> "பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
> எண்ணும் சுவையும்போல் எங்குமாம் - அண்ணல்தாள்
> அத்துவித மாதல்" - சிவஞானபோதம் சூ. 2 அதி. 1.

என்ற சிவஞான போதத்தைக் காண்க. இதனுள் 'தான்' என்றது சத்தியாதல் அறிக. ஒன்றாதலும் வேறாதலும் கூறவே உடனாதலும் பெறப்பட்டது.

> "பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை" - தி.5 ப.47
> பா.8

என்பது அப்பர் திருமொழி. இங்ஙனமாகவே சிவனுக்குப் பிற பொருள்களோடு தொடர்பு உண்டாதல் அவனது சத்தி வழியேயாதல் அறியப்படும்.

**1029.** திரிபுரை சுந்தரி அந்தரி சிந் தூரப்
பரிபுரை நாரணி ஆம்பல வன்னத்தி
இருள்புரை ஈசி மனோன்மனி என்ன
வருபல வாய்நிற்கும் மாமாது தானே. **2**

| சத்தி பேதம் : | I. பராசத்தி II. ஆதிசத்தி, |
|---|---|
| | III. ஞான, இச்சா, கிரியா |
| | IV. ஆரணி, ஜெனனி, உரோதயித்திரி |
| | V. வாமை, ஜேஷ்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சருவ பூத தமணி, மனோன்மனி |
| | VI. சத்தி, விந்து, மனோன்மனி, மகேசுவரி, உமை |
| | VII.நாமகள், திருமகள், உமை, திரிபுரை |
| | VIII.நீலநிறமுடைய நீலி, கௌர நிறமுடைய கௌரி, மாரி, துர்க்கை, மகிடாசுர மர்த்தினி, சண்டி |
| | IX. சுந்தரி, அந்தரி, பரிபுரை, நாரணி |
| | X. அபிராமி, மீனாட்சி, விசாலாட்சி, இராசஇராசேசுவரி, பார்வதி, சிவகாமி |

*இதனால், 'எல்லாப் பொருளும் சத்தியே' என அவளது சிறப்புக் கூறப்பட்டது.*

***1029. தெளிவுரை :-*** *மகாதேவியாகிய சிவசத்தி, திரிபுரை முதலிய பல காரணப் பெயர்களைப் பெற்று, அவ்வகையிலெல்லாம் விளங்குவாள்.*

***குறிப்புரை :*** *'திரிபுரை' என்பதன் காரணம் இவ்வதிகாரத் தொடக்கத்தில் கூறப்பட்டது. சுந்தரி - மிக்க அழகுடையவள். அந்தரி - ஆகாயத்தில் விளங்குபவள். சிந்துரம் - திலகம். இது நீட்டல் பெற்றது 'சிந்துரத்தை அணிந்த பரிபுரை' என்க. 'சிந்துரை' என வேறோதற்பாலதனைச் செய்யுள் நோக்கித் தொகுத்தோதினார். பரிபுரை - சிலம்பணிந்தவள். நாரணி - 'நாரணன் தங்கை' எனப்படுவள். நாரணன் சிவனுக்குப் புருட ரூப சத்தியாதல் பற்றிப் பெண்ணாகச் சொல்லப்படுகின்ற இவள். 'அவனுக்குத் தங்கை' எனப்டுகின்றாள். ஆம் - பொருந்திய, பல வன்னத்தி - பல்வேறு நிற வடிவத்தையும் உடையவள், அந்நிறங்களுள் சிறப்பாக நீல நிறத்தை உடையவளாய் 'ஈசுவரி மனோன்மனி' என்னும் பெயர்களைப் பெற்று நிற்பாள் என்பது மூன்றாம் அடியின் பொருள். இவ்வாறு வருகின்ற*

**1030.** தானே அமைந்தஅம் முப்புரந் தன்னிடைத்
தானான மூவுரு ஓருருத் தன்மையள்
தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள் கல்வி
தானான போகமும் முத்தியும் நல்குமே. **3**

**1031.** நல்குந் திரிபுரை நாத நாதாந்தங்கள்
பல்கும் பரவிந்து பார்அண்ட மானவை
நல்கும் பரை அபிராமி அகோசரி
புல்கும் அருளும் அப் போதம்தந் தாளுமே. **4**

---

*பல்வேறு நிலைகளில் நிற்பாள் என்க.*

*இதனால், மேலை மந்திரத்து இறுதியிற் கூறப்பட்ட சத்தி தன் மூர்த்தி வேறுபாடுகள் பல விரித்துக் கூறப்பட்டன. அதிகாரமும் சத்திபேதம் ஆதல் நினைவு கூரத்தக்கது.*

***1030. தெளிவுரை :-*** *சத்தி தனது வியாபகத்தைப் பெற்றுள்ள, 'உருத்திர லோகம், விட்டுணுலோகம், பிரமலோகம்' என்னும் மூன்று உலகங்களில் தலைமை பூண்டு நிற்கின்ற உருத்திரன், விட்டுணு, பிரமன் என்னும் மூவரையும் தோற்றி ஒடுக்கும் நான்காவது பொருளாய் நிற்பாள். அவள் ஒருத்தியே பொன்னிறம் உடைய சத்தியாய் நின்று முத்தியையும், செந்நிறம் உடைய திருமகளாய் நின்று செல்வத்தையும், வெண்ணிறம் உடைய, கலைமகளாய் நின்று கல்வியையும் தருவாள்.*

***குறிப்புரை :*** *'உருத்திரன், மகேசுரன், சதாசிவன்' என்னும் மூவரும் ஒற்றுமை பற்றி, 'சிவன்' என ஒருவராக அடக்கப்பட்டனர். மூவுரு ஓர் உரு - மூவுருவையும் அடக்கி உள்ள ஓர் உரு. எனவே பிரேரக தத்துவங்களில் பலவாகி நிற்கும் ஆதிசத்தியைக் குறித்ததாயிற்று சத்தி. 'நீல நிறம் உடையள்' என்பது பற்றி 'நீலி' எனப்படுதலேயன்றி, 'கௌர நிறம் உடையள்' என்பது பற்றி 'கௌரி' எனவும் படுவளாதலின் இங்கு அவளுக்குப் பொன்னிறம் கூறினார்.*

*இதனால், ஒருத்தியே மூவராய் முத்தொழில் இயற்றியும், ஐவராய் ஐந்தொழில் இயற்றியும் நிற்கும் தலைவர் அனைவர்க்கும் தலைவியாய் உயிர்கட்குப் போக மோட்சங்களைத் தந்து நிற்றல் கூறப்பட்டது.*

***1031. தெளிவுரை :-*** *ஐந்தொழில் முதல்வரைத் தருகின்ற திரிபுரை நாதம், நாதாந்தம், பலவாய் விரியும் பரவிந்து, நிலம், வானம் முதலிய அளவற்ற பொருள்களை ஆக்குவாள். அதனால், அவள் அனைவர்க்கும் மேலானவள்; பலரையும் இன்புறச் செய்வாள்; மன வாக்குகளுக்கு அகப்படாதவள். பக்குவம் வந்த நிலையில் அருட் சத்தியாயும் பதிவாள். பின்பு ஞானத்தைக் கொடுத்துத் தன்*

1032. தாளணி நூபுரம் செம்பட்டுத் தான் உடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. 5

---

*திருவடிக்கு ஆளாக்கிக் கொள்வாள்.*

***குறிப்புரை :*** *நல்குதல் இரண்டில் முன்னது அருளல்; பின்னது படைத்தல். நாதம் முதலியன, காரியப் பொருள்கள் பலவற்றுள் சிலவற்றை விதந்தவாறு. பரை முதலிய மூன்றும் காரணப் பெயர்களாய் நின்றன. புல்குதல் - பதிதல். "அருளும்" என்னும் உம்மை சிறப்பு 'மெய்யுணர்வு' என்றற்கு. 'அப்போதம்' எனச் சிறப்பித்துக் கூறினார். 'போதமும்' என்னும் எண்ணும்மை தொகுத்தலாயிற்று.*

*இதனால், சத்தி போக மோட்சங்களைத் தருமாறு வகுத்துக் கூறப்பட்டது.*

***1032. தெளிவுரை :-*** *திருவடிகளில் சிலம்பு, இடையில் சிவந்த பட்டுடை, மார்பில் கச்சு, நான்கு கைகளிலும் கரும்பு வில், மலர்க்கணை, அங்குசம், பாசம், சென்னியில் நவமணிகளின் அழகு*



திரிபுரை

**1033.** குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட அரத்த நிறம்மன்னு கோலத்தள்
கண்டிகை ஆரம் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கி நின்றாளே. **6**

---

*விளங்கும் முடி, காதுகளில் நீல ரத்தினம் மின்னுகின்ற குண்டலம் - இவைகளே திரிபுரைக்கு உள்ள அடையாளங்களாம்.*

***குறிப்புரை :*** *"குண்டலக் காதிக்கு" என்றது உடம்பொடு புணர்த்ததாகலின் அதற்கு இவ்வாறு உரைத்தல் கருத்தாயிற்று.*

*"........................ பனிமலர்ப்பூங்*
*கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமும் கையில்*
*அணையுந் திரிபுர சுந்தரி ஆவது அறிந்தனமே"*

*- அபிராமியந்தாதி, 2.*

*எனப் பின்வந்த அடியார் ஒருவரும் அம்மை தன் திருவடிவை இங்ஙனமே கூறினார். இவ்வடிவத்தை 'இராசேசுவரி கோலம்' என்பர் முதலடி இனஎதுகையாய் நின்றது. இதனால், திரிபுரையது ஒருவகைத் தியான உருவம் கூறப்பட்டது.*



**திரிபுரை *(மற்றொரு உருவம்)***

**1034.** நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலில் மோகினி மாதிருக் கும்சிகை
நன்றறி கண்டிகை நாற்கால் கரீடிணி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே. 7

---

*1033.* **தெளிவுரை :-** *குண்டலம் அணிந்த காதினை உடையவள்; கொலை செய்கின்ற வில்லை ஒத்த புருவத்தை உடையவள்; சிவந்த மேனியை உடையவள்; உருத்திராக்க மாலையைப் பூண்டவள்; ஒளி வீசுகின்ற கிரீடத்திலே பிறை அணிந்தவள்; 'சண்டிகை' என்னும் பெயர் உடையவள்; இவள் உலகங்களைத் தீமையினின்றும் நீக்கிக் காத்தருள் கின்றாள்.*

**குறிப்புரை :** *'தீயவர்களை அழித்து, நல்லவர்களைக் காப்பாற்று கின்றாள்' என்றபடி, இவளுக்குச் சிவந்த நிறம் - நெருப்புப் போன்ற காட்சி கூறினமை அறியத்தக்கது. 'முடியில் மதியை உடைய சண்டிகை' என்க.*

*இதனால், திரிபுரையது மற்றொருவகைத் தியான உருவம் கூறப்பட்டது.*

*1034.* **தெளிவுரை :-** *நித்தியளாகிய திரிபுரை கால எல்லையைக் கடந்த பழமை உடையவள், மாயை வழியாக உயிர்களை மயக்குபவள்; அழகிய கூந்தலை உடையவள்; நன்கு விளங்குகின்ற உருத்திராக்க மாலையை அணிந்திருப்பவள்; நான்கு கால்களை உடைய யானையை ஊர்பவள். வெண்டாமரைமேல் வீற்றிருக்கும் வெள்ளைத் திருமேனியை உடையவள்*

**குறிப்புரை :** *தாமரை, திருமேனி என்பவற்றது நிறத்தோடு ஒப்ப யானையின் நிறத்தையும் வெண்மையென உணர்க. வெண்மை, ஞானத்தின் அடையாளம். 'பின்னர் ஞானத்தை வழங்கும் இவளே முன்னர் மயக்கத்தைச் செய்பவள்' என்பார். "குன்றலில் மோகினி" என முன்னே கூறினார். மாது - அழகு கூந்தலை, 'சிகை' என்றது வழுவமைதி. சுத்தமாவது வெண்மை 'சுத்தை' என்பது பெண்பாற் பெயர்.*

*இதனால், திரிபுரையது முதல் தியான உருவம் கூறப்பட்டது.*

*1035.* **தெளிவுரை :-** *திரிபுரை இன்னும் தூய, அழகிய, திண்ணிய கொங்கைகளை உடையவள்; பேரின்பத் தோற்றத்திலே விளங்குபவள்; மெய்ப்பொருள்களை உணரும் ஞானமாய் நின்று உயிர்களை ஆட்கொள்கின்ற பேராற்றலை உடையவள். எல்லாச் சத்திகளினும் பெரியளாய மேலான சத்தி; அப்பொழுதே அணுவினுள் அணுவாய் நிற்கும் நுண்ணியளுமாய் எண்ணப்பட்டு*

1035. சுத்தஅம் பாரத் தனத்தி சுகோதையள்
வத்துவ மாய்ஆளும் மாசத்தி மாபரை
அத்தகை யாயும் அணோரணி தானுமாய்
வைத்தஅக் கோலம் மதியவ ளாகுமே. 8

1036. அவளை அறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி ஊர்புகும் ஆறறி யேனே. 9

---

*அழகிய நிறைமதி போலும் ஒளியினை உடையவளுமாவாள்.*

***குறிப்புரை :*** *ஞானம் நிறைந்து நிற்றலைக் குறிக்க, "சுத்த, அம், பாரத்தனம்" என்றார். வத்து - பொருள்; மெய்ப்பொருள். அதன் தன்மை "வத்துவம்" எனப்பட்டது. வத்துவம் உடையதனை "வத்துவம்" என்றார். 'வாஸ்துவம்' என்னும் வழக்குண்மை காண்க. எழுவாய், மேலை மந்திரத்தினின்றும் வந்தது. "கோலம் மதியவள்" எனப் பண்புப் பெயர் பண்பின் வினையொடு முடிந்தது.*

*இதனால், திரிபுரை தியானத்தில் அவளைப் பற்றி அறியத்தக்க பெருமைகள் கூறப்பட்டன. தனமும், ஒளியும், உருவவழியாக ஞானத்தை உணர்த்தின.*

***1036. தெளிவுரை :-*** *அவளையறியா அமரரும் இல்லை -* ***சந்திர மண்டலத்தில் விளங்கும் அச்சத்தியை ஒளி மண்டல வாசிகளாகிய தேவர்கள் உணராமல் இல்லை. அவளின்றிச் செய்யும் அருந்தவம் இல்லை - ஒளி மண்டல மயமான தேவியை அறியாது செய்யும் அருந்தவம்*** *இல்லை. அவளன்றி ஐவரால் ஆவதொன்றில்லை - சந்திர மண்டலத்திலிருந்துகொண்டுதான் பிரம்மா, விஷ்ணு, உருத்திரர், மகேசுரர், சதாசிவர், ஆகிய ஐவரும் சீவர்களைத் தொழிற்படுத்துகின்றனர். அவளன்றி ஊர்புகு மாறறியேன் - ஆகையால் அவளை அறியாது வீடு புகும் நெறியை நான் காணவில்லை.*

*தேவியினது அருளால் பிரமனாதி ஐவரும் படைத்தலாதி தொழில் செய்கின்றனர்.*

***குறிப்புரை :*** *ஐவர், படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்யும் தலைவர் ஊர், முத்தி, சிவ பரத்துவம் உணர்த்திய "அவனை ஒழிய அமரரும் இல்லை" என்ற மந்திரத்தினை இதனுடன் வைத்து நோக்குக.*

*இதனாலும், அவளது பெருமை பிற சில கூறப்பட்டன.*

1037. அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்
அறிவார் அருவுரு வாம்அவள் என்பர்
அறிவார் கருமம் அவள்இச்சை என்பர்
அறிவார் பரனும் அவளிடத் தானே. 10

1038. தான்எங் குளன்அங் குளள்தையல் மாதேவி
ஊன்எங் குளஅங் குளஉயிர் காவலன்
வானஎங் குளதங் குளேவந்தும் அப்பாலாம்
கோன்எங்கும் நின்ற குறிபல பாரே. 11

---

*__1037. தெளிவுரை :-__ திரிபுரையை அனுபவமாக உணர்ந்தவர்கள் அவளை, 'ஆனந்தமாய் இருப்பவள்' என்றும், 'அருவமாயும் உருவமாயும் விளங்குபவள்' என்றும் 'நிறைந்தஞானம், கிரியை, இச்சை என்னும் வகையினள்' என்றும் கூறுவர். அதனால், அறிவுருவினனாகிய சிவனும் அவள் வழியாகவே தோன்றுவான்.*

*__குறிப்புரை :__ அருவமும், உருவமும் கூறவே, அருவுருவம் கொள்ளப்படும். மூன்றாமடி நான்காமடிகளில் ''அறிவார்'' என்றவற்றை, 'அறிவு ஆர்' எனப் பிரித்து, 'ஆர்ந்த அறிவு' முதலியனவாகவும் 'அறிவாய் ஆர்ந்த பரனும்' எனவும் உரைக்க. இரண்டாம் அடியை 'அறிவுரு' எனப்பாடம் ஓதுவாரும் உளர். அவர்க்கு அவள் அருவம் முதலியன ஆதல் கிடையாமை அறிக. மூன்றாம் அடியிலும் 'அவள்' என்பதை "இச்சை" என்பதன் பின் கூட்டுக. "இடம்" என்றது, வழி' என்றவாறு.*

*இதனாலும், வேறும் சில பெருமையே கூறப்பட்டன.*

*__1038. தெளிவுரை :-__ உடம்புகள் எங்கு உள்ளனவோ அங்கெல்லாம் உள்ள உயிர்களைக் காப்பவனாகிய சிவன், தான் எங்கு இருப்பவனாக அறியப்படுகின்றானோ அங்கெல்லாம் சத்தியும் உடன் இருக்கின்றாள். அதனால், ஆகாயம் உள்ள இடங்களில் எல்லாம் இருக்கின்ற எல்லாப் பொருள்களிலும் நிறைந்து நின்றும், அப்பொருள்களையும், அவற்றிற்கு இடம் தந்து நிற்கின்ற ஆகாயத்தையும் கடந்து நிற்பவனாகிய சிவன் எங்கும் விளங்குகின்ற எந்த உருவமும் சத்தி என்றே அறிவாயாக.*

*__குறிப்புரை :__ இரண்டாம் அடியை முதலில் கொண்டு உரைக்க. இரண்டாம் அடி உயிர்கள் உடம்பையின்றி அமையாமையும், மூன்றாம் அடி எப்பொருள்களும் வானத்தையின்றி அமையாமையும்*

**1039.** பராசத்தி மாசத்தி பல்வகை யாலும்
தராசத்தி யாய்நின்ற தன்மை உணராய்
உராசத்தி ஊழிகள் தோறும் உடனாம்
புராசத்தி புண்ணிய மாகிய போகமே. 12

---

*கூறியவாறு. வந்தும் அப்பாலாதற்கு 'அவள்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. குறி, வடிவம்.*

*இதனால், சிவனது வடிவங்கள் யாவும் சத்தியே யாதல் கூறப்பட்டது.*

*"தானும் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்"*
*- தி.8 திருக்கோத். 15*

*என்றாற் போலவரும் திருமொழிகளும், தென்முகக் கடவுள் முதலிய கோலங்களும் அம்மையோடு உடனாய உருவமாகக் கூறப்படுதலும், பிறவும் இக்கருத்தே பற்றியனவாதல் அறிக.*

***1039. தெளிவுரை :-** 'திரிபுரை' என்னும் சத்தியே மேலானவளும், பெரியவளும் ஆவள். அதனால், அவளே பல்வேறு வகையான காப்புச் சத்தியாய் நிற்றலை, மாணவனே, நீ அறிவாயாக. இனி, அக்காப்புத்தான், திரிவுபடுகின்ற ஊழிகள் தோறும் உடனாய் நின்று புண்ணியத்தின் பயனாகிய உலகின்பத்தைத் தருதலேயாம்.*

***குறிப்புரை :** புரா சத்தி - திரிபுராசத்தி. "புரா சத்தி" என்பதனை முதலிற் கொண்டு உரைக்க. தராசத்தி - தாங்கும் சத்தி. தாங்குதல், காத்தல், உராவுதல், திரிவுபடுதல். புண்ணியத்தின் பயனை, 'புண்ணியம்' என்றே கூறினார். பெத்தத்தின் வகையாகிய முத்தொழில்களுள் கன்மத்தை நுகர்விப்பது காத்தலே யாகலின், அஃது ஒன்றனையே திரோதானசத்தியது தொழிலாகக் கூறினார். பாவத்தின் பயனாகிய துன்பத்தைத் தருதல் விருப்பின்றிச் செய்யப்படுவதாதலின், அதனையொழித்துப் புண்ணியத்தின் பயனாகிய இன்பத்தைத் தருதல் ஒன்றையே கூறினார். **'முன்னர்த் திரோதான சத்தியாய் உலகின்பத்தையும், பின்னர் அருட்சத்தியாய் வீட்டின்பத்தையும் தருபவள் திரிபுரை' என்பது குறிப்பு**. பிற்பகுதியில் 'அச்சத்தி' என்னும் எழுவாய் வருவித்துக்கொள்க. ஆசத்தி - ஆசக்தி என்பதன் திரிபு; ஆசை.*

*இதனால், திரிபுரை ஒருத்தியே திரோதான நிலையில் பல்வேறு வகையினளாய் நின்று உயிர்களைப் புரத்தல் கூறப்பட்டது.*

1040. போகம் செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகம்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கும்
ஆகம்செய் தாங்கே அடியவர் நாள்தொறும்
பாகம்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. 13

1041. கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் னுள்ளே நயந்துவைத் தேனே. 14

---

***1040. தெளிவுரை :-*** *அடியார்கள் நாள்தோறும் தங்கள் உள்ளத்தில் தியானிக்க. அங்ஙனம் தியானிக்குந்தோறும் அவர்களது உள்ளத்தைப் பக்குவப்படுத்தி, உண்மை ஞானமாகிய கொடி படர்தற்கு ஏற்ற கொழுகொம்பாய் நிற்கின்ற அருட்சத்தியே முன்பு ஒரு கூற்றில் அவ்விடத்துத் திரோதான சத்தியாய் நின்று, பின் அருட் சத்தியாயே விளங்குவாள்.*

***குறிப்புரை :*** *''நாள்தொறும் ஆன்மாக்களுக்குப் போகத்தையூட்டி, புரியாகிய கூந்தலையுடையாள் என்னும் நாமத்தோடு ஆன்மாக்களுக்குப் பரிபாகத்தை விளைவித்து, பராசத்தியாய் நிற்பள்; அடியார்கள் தியானித்துப் பரிபாகப்படுத்துகின்ற ஞானம் என்னும் கொடியானது படர்தற்கேற்ற கொழுகொம்பாய் நிற்பள் என்றவாறு.*

*போகஞ்செய் சத்தி - போகசத்தி. பாகம் - பரிபாகம். ஆகஞ்செய்தல் - தியானித்தல். ஆகம் - மனம். நாடொறும் பாகம் செய்ஞானம் - நாடோறும் இடைவிடாது தியானித்துப் பக்குவப்படுத்தப்பட்ட ஞானம். அம்மையைக் கொம்பாக உருவகித்தமையின் ஞானம் கொடியாயிற்று. ஏகதேசவுருவகம்.*

*இதனால், திரோதான சத்தி அருட் சத்தியின் வேறாகாமை கூறப்பட்டது. அருட் சத்தியது இயல்பும், திரோதான சத்தியால் உளதாகும் பயனும் என்னும் இவைகளும் அனுவாத முகத்தால் ஈண்டே கூறப்பட்டன.*

***1041. தெளிவுரை :-*** *கொம்பனையாளை குவிமுலை மங்கையை என்பது திரிபுரை நிலை. வானவர் நாடியை என்பது இராஜ*

**1042.** வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்
பத்து முகமும் பரையும் பராபரச்
சித்தக் கரணச் செயல்களும் செய்திடும்
சத்தியும் வித்தைத் தலைவிய ளாமே. 15

**1043.** தலைவி தடமுலை மேல்நின்ற தையல்
தொலைவில் தவம்செய்யும் தூய்நெறித் தோகை
கலைபல ஏன்றிடும் கன்னி என் உள்ளம்
நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே. 16

---

*ராஜேஸ்வரி நிலை. சிறுமியென்றது பாலைநிலை. இங்ஙனம் இறைவியின் மூன்று நிலைகளையும் மொழிவது இந்த மந்திரம்.*

*குறிப்புரை :* கொம்பு அனையாள் - பூங்கொம்பு போன்றவள், வம்பு அவிழ்கோதை - வாசனையோடு மலர்கின்ற பூக்களையுடைய மாலையை அணிந்தவள். நாடி - நாடப்பட்டவள், சிறுமி - கன்னி, நம்பி - தெளிந்து, நயந்து - விரும்பி. இதனுள்ளும் அம்மைக்குச் செம்மை நிறம் கூறப்பட்டமை அறியத்தக்கது.

> "............... மென்கடிக் குங்கும தோயம் என்ன
> விதிக்கின்ற மேனி அபிராமி" - அபிராமி அந்தாதி, 1

எனப் பின்வந்த அடியவரும் கூறினார்.

இதனால், திரிபுரையது தியானச் சிறப்புக் கூறப்பட்டது.

*1042. தெளிவுரை :-* ஸ்ரீ வித்யாதேவியினுடைய ஆற்றல் உணர்த்துதல் நுதலிற்று. உண்டுபண்ணி வைத்த பொருள்களும், இவ்வுலகத்துப் பொருந்திய உயிர்ப்பன்மையும், பத்து முகங்களும், பரையும், பராபரையும், அந்தக்கரணச் செயல்களும், எல்லாவற்றையும் இயக்கும் சத்தியுமாக விளங்குபவள் ஸ்ரீ வித்யா தலைவியாம் என்றவாறு.

வைத்த பொருள் - இவ்வுலகத்துத் தோற்றுவிக்கப்பெற்ற அசரங்களாகிய உலகு, உடல் முதலிய பொருள்கள். மருவு உயிர்ப்பன்மை - அவற்றை இடமாகக் கொண்டு மருவிய புல் மரம் முதல் தேவரீறான உயிர்களின் பன்மை. நேர்த்திசையும் கோணத்திசையும் பூமியும் விண்ணுமாகிய பத்துத் திசைகளாகிய பத்துமுகமும். முகம் - இடம். பரை - கிரியா சத்தி. பராபரை - இச்சாசத்தி. சித்தக்கரணச்செயல்கள் - சித்தம் முதலான அந்தக் கரணங்களைச் செயல்படுத்துகின்றவள். செய்திடும் சத்தியும் - அனைத்தையும் இயக்கும் ஆற்றலாகிய சத்தியும்.

**1044.** நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற
என்றன் அகம்படிந் தேமுல கும்தொழ
மன்றது ஒன்றி மனோன்மனி மங்கலி
ஒன்றொனொ டொன்றிநின் றொத்தடைந்தாளே. **17**

---

*1043. **தெளிவுரை :-** 'வழிபாடுகளின் தலைவி' என மேற்கூறப்பட்ட திரிபுரை கொங்கைகள் விம்ம நிற்பவள். அழிவில்லாத தவத்தைச் செய்யும் தூய நெறியை உடையவள்; நூல்கள் பலவற்றையும் தன்னுள் அடக்கி நிற்பவள்; என்றும் கன்னியாய் இருப்பவள். அவள் இவ்வுலகில் என் உள்ளத்திலே நீங்காது நிறைந்து நிற்கின்றாள்.*

***குறிப்புரை :*** *"தலைவி" என்றது அனுவாதம். கொங்கைகள் பால் சுரந்து விம்ம நிற்றல் அருட் பெருக்கையும், தவம் செய்தலும், நூல்களை அடக்கி நிற்றலும், ஆசிரியத் தன்மையையும், கன்னிமை பற்றின்மையையும் விளக்குவனவாம்.*

*இதனால், திரிபுரை ஒன்றொடொன்றொவ்வாத நிலைகள் பலவற்றையும் உடையளாதல் கூறப்பட்டது.*

*1044. **தெளிவுரை :-** மேற்கூறியவாறு எனது உள்ளத்திலே நிறைந்து நிற்பவளாகிய திரிபுரை, மனத்துக்கு மேலே உள்ளவளாயும், அழியாத மங்கலத்தை உடையவளாயும் இருப்பவள். தனது பல வகைப்பட்ட நிலைகளுடனும் என் உள்ளத்தில் பொருந்தியும், உலகமெல்லாம் வணங்கும்படி அம்பலத்தில் நின்றும் அவளையே பற்றி நிற்கின்ற என்னிடத்தில் வேறற நிற்க இசைந்து, அங்ஙனமே வந்து நின்றாள்.*

***குறிப்புரை :*** *'நின்றவளாகிய நேரிழை' என்க. கலை - கூறு. "அகம் படிந்து" எனவும், "மன்றது ஒன்றி" எனவும் கூறியன, அகத்தும் புறத்தும் விளங்குபவளாதலைத் தெரித்தனவாம். 'அவளொடு ஒன்றுகின்ற என்னோடு அவளும் ஒன்றி நின்றாள்' என்றதனை,*

*"அற்றவர்க்கு அற்ற சிவன்" - தி.3 ப.12 பா.2*

*எனவும்,*

*"தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்பன்"*

*- தி.8 திருச்சதகம். 69*

**1045.** ஒத்தடங் குங்கும லத்திடை ஆயிழை
அத்தகை செய்கின்ற ஆய பெரும்பதி
மத்தடை கின்ற மனோன்மனி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. **18**

**1046.** உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி
மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்
புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்
கணிந்தெழு வார்க்குக் கதிஅளிப் பாளே. **19**

---

*எனவும் வருவனவற்றோடு வைத்துக் காண்க. "ஒன்றி நின்று ஒத்து அடைந்தாள்" என்பதனை 'ஒத்து அடைந்து ஒன்றி நின்றாள்' எனப் பின் முன்னாக நிறுத்தி, விகுதி பிரித்துக் கூட்டி உரைக்க. ஒத்தல் - உள்ளம் ஒத்தல்; இசைதல்.*

*இதனால், திரிபுரை அன்பர்களையே அடைதல் கூறப்பட்டது.*

***1045. தெளிவுரை :-*** *அன்பர்களிடத்தில் ஒன்றியிருக்க இசைந்து, அவர்களது உள்ளத் தாமரையிலே அடங்கி நிற்கின்றவளும், அத்தன்மையை உடைய உயர்ந்த பெரிய தலைவனாகிய சிவனிடத்தில் நிறைந்து நிற்பவளும், மனோன்மனியும், நித்திய சுமங்கலியும் ஆகிய திரிபுரை பலவகைச் சித்துக்களையும் உயிர்களிடத்தில் புரிந்து நிற்கின்ற முறையை உலகர் ஆராய்ந்து அறிகின்றார்களில்லை.*

***குறிப்புரை :*** *'கமலத்திடை அடங்கும் ஆயிழை' என மாற்றிக் கொள்க. 'பதியோடு' என உருபு விரிக்க. 'மத்து' என்பது, நிறைவை உணர்த்தும் வடசொல். "சித்து" என்றது 'அதிசயச் செயல்கள்' என்றபடி "வழி" என்றது தான் சிவத்தொடு நின்றே எதனையும் செய்பவளாதலை. இதனால், திரிபுரை எதனையும் சிவத்தொடு நின்றே செய்தல் கூறப்பட்டது.*

***1046. தெளிவுரை :-*** *உண்மையை உணர்ந்தவழி விரைய விளங்கும் உள்ளொளியாகிய சிவன் எவ்விடத்தும் சத்தியும், தானுமாய், இயைந்தே நிற்பான். அங்ஙனம் நிற்குங்கால் தம்மை எண்ணுகின்ற வர்கட்கே திரிபுரை நற்கதி வழங்குவாள்.*

***குறிப்புரை :*** *'உணர்ந்தவழி' என்பது 'உணர்ந்து' எனத் திரிந்து நின்றது. நிற்றல் - விளங்கி நிற்றல். 'ஆகி' என்பது பெயர் மூன்றாம் அடியில் "உடனே" என்றது. 'உடனாகியே' என்றவாறு 'கணித்து' என்பது மெலிந்து, நின்றது. அளித்தலுக்கு எழுவாய், அதிகாரத்தால் வந்தது.*

1047. அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போல்உள்ளே நோக்கித்
தெளியுறு வித்துச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்யஉண் டாளே. 20

1048. உண்டில்லை என்ன உருச்செய்து நின்றது
வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தன்னொடும்
மண்டிலம் மூன்றுற மன்னிநின் றாளே. 21

---

*இதனால், சத்தியைச் சிவனோடன்றித் தனித்து நிற்பவளாக எண்ணுதல் கூடாமை கூறப்பட்டது. மேல் (பா.1038) சிவனைச் சத்தியோடன்றித் தனித்து நிற்பவனாக எண்ணுதல் கூடாமை கூறப்பட்டதையும் இங்கு நினைவு கூர்க.*

***1047. தெளிவுரை :-*** *அன்பர்களது உள்ளத் தாமரையை வண்டு போல விரும்பி உறைகின்றவளும், ஆனந்தமே உருவாய் அழகொடு நிற்பவளும் ஆகிய திரிபுரை, எனது உள்ளம் புளிய மரத்தில் பொருந்திய பழுத்த பழம்போல ஆகும்படி அருள் நோக்கம் செய்து பக்குவப்படுத்திச் சிவஞானத்தைத் தந்து சிவத்தைப் பெறுவித்து, யான் உய்யும் வண்ணம் என்னைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டாள்.*

***குறிப்புரை :*** *அளி - கருணை. புளி - புளிய மரம். புன்மை, இங்கு முற்றி முதிர்ந்து வீழும் மென்மை நிலையைக் குறித்தது. போல - போல ஆகும்படி: அகரம் தொகுத்தலாயிற்று. உள்ளம் புளியம் பழம்போல ஆதலாவது, புளியம்பழத்தின் உள்ளேயிருக்கின்ற புளி அங்ஙனம் உள்ளே யிருப்பினும் ஓட்டில் பற்றுவிட்டுத் தனித்து நிற்றல்போல், உலகியலோடு உடனாய் இருப்பினும், பற்று நீங்கியதாதல். கதி - ஞானம், ஒளியுடையதனை, "ஒளி" என்றார்.*

*இதனால், திரிபுரை மேற்கூறியபடி கதியளிக்குமாறு கூறப்பட்டது.*

***1048. தெளிவுரை :-*** *காரணங்கட்கெல்லாம் காரணமாய் உள்ள திரிபுரை, சிவத்தோடு மூன்றுலகங்களிலும் நீக்கமற நிறைந்து நிற்கின்றாள், அதனையும், அவளே சமய வாதிகள் 'உண்டு' என்றும் 'இல்லை' என்றும் தம்முள் மாறுபட்டு வழக்கிட மறைந்து நிற்றலையும், அடியார்கட்கு உருவொடு தோன்றிக் காட்சியளித்தலையும், வளவிய தில்லையின் அம்பலத்துள்*

1049. நின்றாள் அவன்றன் உடலும் உயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி
ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே
என்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே. 22

*நிலைபெற்று நிற்றலையும் உலகர் அறிந்திலர்.*

***குறிப்புரை :*** *"காரண காரணி" என்பது முதலாகத் தொடங்கி உரைக்க. ''நின்றது'' முதலிய மூன்றும் தொழிற் பெயராய்ச் செவ்வெண்ணாக எண்ணப்பட்டன. காரணமாவன, தத்துவங்களும், அவற்றின் தலைமைக் கடவுள்களுமாம். முன்னர் அக்கடவுள்களைப் படைத்து, அவர்கள் வாயிலாகத் தத்துவங்களைத் தோற்றி, நிறுத்தி, ஒடுங்கச் செய்து, பின்பு அக்கடவுள்களையும் ஒடுக்குதல் பற்றி, "காரண காரணி" என்றார். இது நான்காவதன் தொகை. காரணி - காரணமாய் நிற்பவள். 'தான்' என்பது சிவத்தைக் குறிக்கும் குறியீட்டுச் சொல் மண்டிலம் - வட்டம் : 'உலகம்' என்றவாறு. 'உடம்பில் உள்ள அக்கினி சூரிய சந்திர மண்டலங்கள்' என்றலும் ஆம். ஈற்றில் 'அதனையும்' என்பது சொல்லெச்சமாய் நின்றது.*

*இதனால், திரிபுரை மெய்ப்பொருளேயாதல் கூறப்பட்டது.*



கலைமகள்

1050. ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை
பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடுமின் சென்னி வாய்த்தோத்திரம் சொல்லுமே. 23

---

*1049. **தெளிவுரை :-** சிவனது செயல்களிலெல்லாம் உடன் சேர்ந்தே நிற்கின்ற மேலான சத்தியாகிய திரிபுரை, அச்சிவனோடு உடலும் உயிரும்போலப் பிரிப்பின்றி வாளாதும் இருப்பாள் : செயற் பட்டும் நடப்பாள். மேன்மை பொருந்திய ஞானமேயாகின்ற அவள், முதலில் புத்தகம் ஏந்திய கையினையுடைய நாமகளாய் நின்று எனக்கு நூலறிவைத் தந்தும், பின்பு எனது உணர்வினுள் உணர்வாய் இன்புறச் செய்தும் என்னைத் தன் அடியவனாக ஏற்றுக்கொண்டாள்.*

*__குறிப்புரை :__ "அவன்" எனச் சுட்டுப்பெயர் செய்யுளில் முன்னர் வந்தது. 'சிவன்' என்னும் உயர்திணைப்பெயர் இங்குத் திரிபுப்புணர்ச்சி எய்தியது. கதி - நடை; செயல். "சிவகதி" என்பது, 'அரச தண்டம்' என்பதுபோல ஆறாவதன் தொகை, 'சிவகதியில் சேர்ந்திருக்கும் பராசத்தி அவன்றன் உடலும் உயிருமாய் நின்றாள்; சென்றாள்' எனக் கூட்டி உரைக்க. "உணர்வு" என்பது அனுபவ ஞானத்தை, அதனால், இன்பமும் பெறப்பட்டது. "ஏடு அங்கையாள்" என்பது உடம்பொடு புணர்த்ததாகலின், அதற்கு இவ்வாறு உரைத்தல் கருத்தாதல் அறிக. "ஏன்றாள்" என்பது குறுகிநின்றது. நான்காம் அடியில் 'நின்றாள்' என ஓதுதல் பாடமன்று. ஏடு அங்கையாள் - ஞான வடிவாகிய கலைமகள்.*

*இதனால், திரிபுரை ஞானத்தைப் படிமுறையால் அளித்தல் கூறப்பட்டது.*

*1050. **தெளிவுரை :-** கலைமகளின் தியானம் கூறுகிறார். எங்கள் தலைவியாகிய திரிபுரையே புத்தகத்தைக் கையில் ஏந்தியிருக்கும் நாமகளாகி நிற்பவள். அந்நிலையில் அவளது நிறம் பளிங்கு போல்வது. இருக்கை வெண்டாமரை மலர், கையில் உள்ள புத்தகமும் இசையோடு கூடிய திருப்பாட்டு எழுதப்பட்டது. முக்கண்ணி ஆதலால், அவளைப்பிறள் ஒருத்தியாக நினையாது திரிபுரையாகவே அறிந்து அவளது பாதமாகிய மலர்களைச் சென்னியில் சூடிக்கொள்ளுங்கள்; வாயால் அவளது புகழ்களைச் சொல்லுங்கள்.*

*__குறிப்புரை :__ 'இறை' என்பது தொழிலாகு பெயராதலின், பெண் பாற்கும் உரியதாம் 'இறைவி' என்பது குறைந்து நின்றது எனினுமாம், 'எங்கள் இறை' என மாறிக் கூட்டுக. 'பாடுந் திருமுறை' என்றது,*

**1051.** தோத்திரம் செய்து தொழுது துணையடி
வாய்த்திட ஏத்தி வழிபடு மாறிரும்
பார்த்திடும் அங்குச பாசம் பசுங்கரும்
பார்த்திடும் பூப்பின்னை ஆகுமாம் ஆதிக்கே. 24

---

*வீணையுடைமையையும் குறித்தவாறு. 'திருமுறையைப் பாடும்' என்றலுமாம். "பார்ப்பதி" என்றது 'பார்ப்பதியேயான அவள்' என்றபடி. பார்ப்பான் - பிரமன். பார்ப்பதி - பிராமி.*

*இதனால், முதற்கண்ணதாகிய நூலறிவைத் தரும் அவளது வடிவியல்பு வகுத்துக் கூறப்பட்டது.*

*1051. **தெளிவுரை :-** காணப்படுகின்ற அங்குச பாசங்கள் ஈரமுடைய கரும்பினாலாகிய வில், அதன்கண் பொருத்தப்படும் பூவாகிய கணைகள், இவை ஆதிசத்தியாகிய திரிபுரைக்கு உரிய அடையாளங்களாகும், அவைகளை அறிந்து, அவளது இரண்டு பாதங்களும் உங்கட்குக் கிடைத்தற் பொருட்டு அவளைத் தோத்திரித்தும், வணங்கியும் வழிபடுதற்காகவே உலகில் வாழ்வீராக.*

*குறிப்புரை : மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க.*



**இராச இராசேசுவரி**

**1052.** ஆதி விதம்மிகுத் தண்டந்த மால்தங்கை
நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப் பலகாற் பயில்விரேல்
சோதி மிகுத்துமுக் காலமும் தோன்றுமே. **25**

**1053.** மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்
வேதாதி நூலின் விளங்கும் பராபரை
ஆதார மாகியே ஆய்ந்த பரப்பினள்
நாதாதி நாதத்து நல்லரு ளாளே. **26**

---

*'வழிபடுமாறு' என்பது, வினையெச்சப்பொருட்டாய் நின்றது. "பின்னை" என்பது, 'மற்று' என்னும் பொருளது. "ஆகுமாம்" என்பதில் ஆம், அசைநிலை 'ஆம்ஆதி' என இயைத்து, 'நன்மையை அடைதற்கு நிமித்தமாகிய ஆதிசத்தி' என உரைப்பினும் ஆம். பூப்பின்னை - பூம்பிள்ளை - மெல்லியலாகிய பெண்.*

*இதனால், திரிபுரையை இராசேசுவரியாகக் கண்டு வழிபடுக என்பது கூறப்பட்டது. அதன் பொருட்டு, அவளது வடிவம் மறித்தும் உணர்த்தப்பட்டது.*

*1052. தெளிவுரை :- ஆதி சத்தியின் பேதங்கள் அனைத்துமாய் உலகத்தைச் சார்ந்து நிற்கின்றவளும், 'திருமாலின் தங்கை' எனப்படுபவளும், நீதியாளர்களது நெஞ்சத் தாமரையில் விளங்குபவளும் ஆகிய திரிபுரையது மந்திரத்தை, நெஞ்சில் இருத்திப் பலமுறை கணிப்பீர்களாயின், அறிவு விரிவுற்று. முக்கால நிகழ்ச்சிகளும் ஒரு காலத்தே உங்கட்கு விளங்குவனவாகும்.*

*குறிப்புரை : "அண்ணுதல்" என்பது "அண்டுதல்" என மருவி வழங்கும். நீதி - நடுவு நிலைமை. 'நீதியாளரது மனத்தாமரை என்றற்கு, "நீதி மலர்" என்றார். திரிபுரையது மந்திரம், "ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் த்ரிபுராயை நம" என்பது நவாக்கரியாதலை நோக்குக. மூலாதாரம் முதலிய ஏழ் நிலையுள் நடுவணதாகிய அனாகதத்தை, "பாதி" என்றார். 'ஆறாதாரங்களில் மேற்பாதியில் முன் உள்ளது' என்றலுமாம்.*

*இதனால், திரிபுரையது ஆசனமும், மந்திரமும், அவ்வாற்றாற் செய்யும் வழிபாட்டின் பயனும் கூறப்பட்டன.*

*1053. தெளிவுரை :- திரிபுரை மேதை முதலிய பிராசாத கலைகள் பதினாறுமானவள்; வேதம் முதலிய நூல்களின் பொருளாய் விளங்குபவள்; 'இலயம் போகம்' என்னும் மேல் நிலையிலும்*

**1054.** அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்
பொருள்பெற்ற சிந்தைப் புவனா பதியார்
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவன் யானே. 27

---

*'அதிகாரம்' என்னும் கீழ் நிலையிலும் இருப்பவள்; எல்லாப் பொருள் கட்கும் நிலைக்களமாய் நுணுகிப் பரந்த வியாபகத்தை உடையவள்; நாதத்திற்கு முதலாகிய பரநாதத்தில் நிற்கும் அருள் வடிவானவள்.*

***குறிப்புரை :*** *'அவளது பெருமையை இவ்வாறு அறிந்து கொள்ளுங்கள்' என்பது குறிப்பெச்சம். எழுவாய் மேலை மந்திரத்தினின்றும் வந்தது. 'பிராசாத கலைகள் பதினாறு இவை' என்பது முன்னைத் தந்திரத்திற் காட்டப்பட்டது.*

*இதனால், திரிபுரையது மிக்க பெருமை கூறப்பட்டது.*

***1054. தெளிவுரை :-*** *மனிதர்களே, நான் மயக்கம் பொருந்திய என் மனத்தை மாற்றி உண்மையை உணரப் பெற்ற அதன்கண், புவனங்கள் அனைத்துமாய் நிற்றல் பற்றி, 'புவனை' எனப்படுகின்ற திரிபுரைக்குத் தலைவனாகிய சிவனது. அரிய பொருளாய்ப் பொருந்திய செம்மையான திருவடிகளையே போற்றுவேன்; உங்களில் அருள் பெற்றவராயுள்ளோர் என்னுடன் வாருங்கள்; அனைவரும் ஒருங்கு கூடிப் போற்றுவோம்.*

***குறிப்புரை :*** *'பொருள் பெற்ற சிந்தையில் உற்ற புவனாபதியார் சேவடி' என இயைத்துக் கொள்க. 'சத்தி வழிபாடு சிவனை நீக்கிச் செய்யப்படுவதன்று' என்பது உணர்த்தியவாறு.*

*இதனால், சத்தி வழிபாட்டின் கண்ணது ஓர் ஐயம் அறுக்கப்பட்டது.*

***1055. தெளிவுரை :-*** *திரிபுரை, ஒறுப்பிற்கு ஏற்ற வராக முகத்தை உடையவள்; இழிகுணம் படைத்த தீயோரது உடலங்களைக் காலத்தில் அழிப்பாள்; உலக்கையோடு மற்றும் ஏழு ஆயுதங்களை ஏந்தி இருப்பாள்; சிரித்த முகத்தையுடையவள். தங்கள் துன்பங்களை நீக்க வேண்டித் தியானிப்பவர்களது உள்ளத்தில் அவள் இவ்வாறு விளங்குவாள். ஈனவர் - இழி தகைமை உடையவர். ஆகம் - உடல். முசலம் - உலக்கை.*

***குறிப்புரை :*** *'இறைவன் போகி, யோகி, வேகி - என்னும்*

**1055.** ஆன வராக முகத்தி பதத்தினில்
ஈனவ ராகம் இடிக்கும் முசலத்தோ
டேனை எழுபடை ஏந்திய வெண்ணகை
ஊனம் அறஉணர்ந் தார்உளத் தோங்குமே. **28**

---

*மூன்று நிலையில் நிற்குங்கால் சத்தியும் அவற்றிக்கு ஏற்பவே நிற்பாள்' என்பது.*

*"எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பாள்"*
*- சிவஞானசித்தி, சூ. 2.75*

*என்பதனால் அறியப்படும். அவற்றுள் சத்தியது வேகவடிவத்தில் 'வராகி' - என்பவள் பன்றி முகத்தோடு மிகக் கடுமையானவளாகக் குறிக்கப்படுதலால் அவளது நிலையை இங்குச் சிறப்பாக எடுத்துக் கூறினார். இதனானே, ஏனை வேகவடிவங்களும் கொள்ளப்படும். உழுபடை - கலப்பை.*

*இதனால், சத்தியது மறக்கருணை நிலையாகிய வேகவடிவத்தின் இயல்பு கூறப்பட்டது.*



'வராகி'

**1056.** ஓங்காரி என்பாள் அவள்ஒரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை உடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
இரீங்காரத் துள்ளே இனிதிருந் தாளே. **29**

---

***1056. தெளிவுரை :-*** *பரவிந்துவாய் நிற்கின்ற சிவ சத்தியே 'ஒரு கன்னிகை' எனச் சொல்லவும், பச்சை நிறத்தையுடைய திருமேனியளாக எண்ணவும் படுகின்றது. ஏனெனில், அஃது எழுச்சிபெற்றுப் பரநாத வடிவினனாகிய இறைவனோடு கூடிச் சதாசிவன் முதலிய ஐவரைக் கால்வழியினராகத் தோற்றுவித்து, 'ஹ்ரீம்' என்னும் வித்தெழுத்தை இடமாகக் கொண்டு நன்கு பயனளித்து நிற்றலால்.*

***குறிப்புரை :*** *'உயிர்களின் வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்ட சிவ சத்தி அவற்றிற்கு அகப்படுதற் பொருட்டுக் கருணையால் இவ்வாறு உருவும், பெயரும்கொண்டு நின்று, உயிர்களை உய்வித்தற்குரிய செயல்களைச் செய்கின்றது' என்பதாம். அகங்காரம் – 'யான் இது செய்வேன்' என முனைதல். இது தனக்கு ஏலாததன்கண் தோன்றின் குற்றமாகும். ஆகவே, தமக்கெனச் சுதந்திரம் இல்லாத உயிர்கட்கு இது குற்றமாகின்றது. சிவசத்திக்குச் சிறப்பாகின்றது. அகங்காரம், 'ஆங்காரம்' என மருவி வழங்கும்.*

*"ஒருரு வாயினை; மான் ஆங்காரத்து*
*ஈரியல்பாய், ஒரு விண்முதல் பூதலம்*
*படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை" – தி.1 ப.128*

*என்பது காண்க. சதாசிவன் முதலிய ஐவராவார். 'சதாசிவன், மகேசுரன், உருத்தினர், மால், அயன்' என்போர். இவர் சம்பு பட்சத்தினர் என்க. ஈற்றடி அவள் தன் அடியார்க்குப் பயன் தரும் முறையைக் கூறியவாறு. 'ஹ்ரீம்' என்பதில் முதற்கண் உள்ள மெய்யின் சிதைவாகிய இகரம், அம்மெய்போலவே வேறெண்ணப் படாது நின்றது. ரீம் என்பது சத்திபீஜமாகிய ஹ்ரீம் என்பதன் திரிபு. லலிதா திரிசதியில் ஹ்ரீங்காரத்தால் தொடங்குகிற 60 மந்திரங்களாலும் அறியலாம்.*

*இதனால், திரிபுரையது கருணைச் சிறப்புக் கூறப்பட்டது.*

1057. தானே தலைவி எனநின்ற தற்பரை
தானே உயர்வித்துத் தந்த பதினாலும்
மானோர் தலமும் மனமும்நற் புத்தியும்
தானே சிவகதித் தன்மையு மாமே. 30

---

***1057. தெளிவுரை :-*** *உயிர்களால் பொதுப்பட 'அது' எனக் கூறப்பட்ட தலைவியாய், அவ்வுயிர்கட்கு மேலே இருப்பவளும், ஐந்தொழிற்கும் முதல்வியும், சுத்த மாயை, அசுத்த மாயைகளின் காரியங்கள் பதினான்கும், பிரகிருதியும், அதன் காரியங்களாகிய அந்தக்கரணம் முதலியனவுமாய் நின்று உயிர்களைப் பந்திப்பவளும், பின் அவற்றினின்றும் நீங்கி வீட்டை எய்துவிப்பவளும் எல்லாம் திரிபுரையே ஆவள்.*

***குறிப்புரை :*** *தத் + பரை = தற்பரை : 'தத்' என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்ற மேலிடத்தவள். உயர் வித்து - பிரகிருதிக்கு மேலே உள்ள முதனிலைகள்; அவை சுத்த மாயையும், அசுத்த மாயையுமாம். அவற்றுள் சுத்த மாயையின் காரியம் ஏழு. அவை, பரநாதம், அபரநாதம், சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தையின் ஊர்த்துவ பாகம், மத்தியபாகம், அதோபாகம் என்பன. ஊர்த்துவபாகம் உருத்திரனுக்கும், மத்தியபாகம் திருமாலுக்கும், அதோபாகம் அயனுக்கும் இடமாய் இருக்கும். அசுத்த மாயையின் காரியம் ஏழு வித்தியா தத்துவங்கள். மான் - பிரகிருதி. 'மானாகிய ஓர் தலம்' என்க. இது பிரகிருதியாதல் பற்றி, 'தலம் - இடம்' என்றார். "மனமும், நற்புத்தியும்" என்றது ஆன்ம தத்துவம் அனைத்திற்கும் உபலக்கணம். தன்மை - ஈகைக் குணம், தன்மை உடையவளை, "தன்மை" என்றார்.*

*இதனால், திரிபுரையது முழுமுதல் தன்மை இனிது விளக்கப்பட்டது.*

## 6. வயிரவி மந்திரம்

உயிர்களது துன்பத்தை நீக்குதற்கு அமைந்த சத்தியின் வடிவங்களுள், 'வராகி' (வாராகி), வயிரவி' என்னும் இரு வடிவங்கள் முதன்மையாகச் சொல்லப்படுவன. அவற்றுள் வராகி வடிவம் பற்றி ஒரு மந்திரத்தாலே மேலையதிகாரத்தில் கூறிய நாயனார், ஏனைய வயிரவி வடிவ நிலையை விரிவு பற்றி வேறோர் அதிகாரமாக வைத்து ஐம்பது திருமந்திரங்களால் இங்குக் கூறுகின்றார்.

சிவகுமாரர்களுள் வைத்து எண்ணப்படுகின்ற 'வீரபத்திரர், பைரவர்' என்னும் மூர்த்தங்களுள் பைரவ மூர்த்தம், பிரமனது செருக்கை அடக்குதற் பொருட்டுத் தோன்றி அவனது நடுத்தலையை நகத்தாற் கிள்ளியதோடு, அத்தலை ஓட்டில் மாயோன் முதலியோரது குருதியை ஏற்று, அவர்களது செருக்குக்களையும் அடக்கியது. மாயோனது திரிவிக்கிரம வடிவில் அவனது முதுகெலும்பை வாங்கி வீணைத் தண்டாகக் கொண்டதும், நரசிங்க வடிவத்தைச் சிம்புளாய்ச் (சரபமாய்) சென்று அழித்து அதன் தோலைப் போர்வையாகக் கொண்டதும், மற்றும் உலகிற்கு அவ்வப்பொழுது உண்டாகும் துன்பங்களை ஏற்ற பெற்றியாற் சென்று நீக்குவதும், சிவதீக்கை பெற்றோரை அவரது குற்றத்திற்காகக் கூற்றுவன் பால் காட்டிக் கொடாமல், தனது சூலத் தலையில் ஏற்றி வைத்தே ஒறுப்பதும், 'சேத்திர பாலகர்' என்னும் காவற் கடவுளாய் நிற்றலும் ஆகிய பல சிறப்புக்களையுடையது. இம்மூர்த்தி நரசிங்கத் தோலைப் போர்வையாக உடைமைபற்றி, 'சட்டைநாதர்' என்றும், ஆபத்துக் காலத்தில் தோன்றி அதனை நீக்குதல் பற்றி, 'ஆபத்துத் தாரணர்' என்றும் பெயர் பெற்று விளங்குவர். இந்நிலை சீகாழித் திருத்தோணிச் சிகரத்தில் சிறப்புற்று விளங்குதல் பலரும் அறிந்தது. இம்மூர்த்தி வேக வடிவினர் ஆதலால், இவர்பால் மக்கள் அச்சத்துடன் இருத்தல் கண்கூடு. இவரது சத்தியே பைரவியாவள். சத்தி பேதங்களுள் ஒன்றாதல் பற்றி இதுவும் இங்கு கூறப்படுகிறது. இவ்வதிகாரமும் அந்தாதியாய் உள்ளது.

வயிரவி - வயிரவசக்தி. இறைவன், மக்களுடைய அச்சத்தைப் போக்கி, அவர்கட்கு ஆனந்தத்தை விளைவிக்கத் திருவுள்ளங்கொண்ட போது விரித்த செஞ்சடையும், முக்கண்ணும், சிவந்ததிருமேனியும், சூலம் கபாலம் பாசம் உடுக்கை இவற்றைத்

*தாங்கிய நான்கு கரங்களும் தாங்கி நாய் வாகனத்தில் ஆடையணியாதவராக எழுந்தருளினார். அவருடைய சத்தி வயிரவி, பகையொழித்து, பயநீக்குவதால் அச்சத்தியும் பைரவி எனப்பட்டார். பைரவி என்பது வயிரவி யென்றாயிற்று. அவரை நினைக்குமுறை கூறுதலின் இது வயிரவி மந்திரமாயிற்று.*

**1058.** பன்னிரண் டாங்கலை ஆதி பயிரவி
தன்னில் அகாரமும் மாயையும் கற்பித்துப்
பன்னிரண் டாதியோ டந்தப் பதினாலும்
சொன்னிலை சோடசம் அந்தம்என் றோதிடே. 1

---

*1058. தெளிவுரை :- பன்னிரு கலைகளை உடையதாகச் சொல்லப்படுகின்ற ஓங்காரத்தில் நாத விந்துக்களைப் பாவித்து, அதன் பின் ஆதியாகிய வயிரவியது மந்திரத்தில் முதல் எழுத்து அகாரம் முதலியவற்றில் பன்னிரண்டாம் எழுத்தாகிய 'ஐ' எனவும் ஈற்றெழுத்து அவற்றில் பதினான்காம் எழுத்தாகிய 'ஔ' என்பது பதினாறாம் எழுத்தாகிய விசர்க்கத்தோடு கூடியது எனவும் அறிந்து அவ்வாறே ஓதிப் பயன் பெறுக.*

*குறிப்புரை : ''பன்னிரண்டாம் கலை'' என்பதில் 'கலை' சினையாகுபெயராய் அவற்றையுடைய ஓங்காரத்தைக் குறித்தது. ஓங்காரமே பிராசாத கலைகளாய் விரிந்து நிற்பதாதல் அறிக. 'கலையின்கண்' என ஏழாவது விரித்து, அதனை ''கற்பித்து'' என்பதனோடு முடிக்க. அகாரம் - நாதம். எனவே, மாயை சுத்த மாயையாயிற்று. "ஆதி பயிரவிதன்னில்" என்பதை மூன்றாம் அடியிற் முதலில் கூட்டுக. பயிரவியது மந்திரத்தையே ஒற்றுமை பற்றி, 'பயிரவி' என்றார். 'பயிரவி தன்னில் ஆதி பன்னிரண்டோடு, அந்தம் அந்தப் பதினாலு சோடசமும் சொல்நிலை என்று ஓதிடு' எனக் கூட்டி வினைமுடிவு செய்க. 'ஓடு' 'உம்' என்பன எண்ணிடைச் சொற்கள். இங்ஙனம் கூறியதனால், 'ஹோம் ஹைம் ஹௌ : பைரவ்யே நம:' என்பதே வயிரவி மந்திரமாதல் பெறப்பட்டது. தொடக்கத்தில் கூறப்பட்ட பொருளாகிய இதுபற்றியே இவ்வதிகாரம், 'வயிரவி மந்திரம்' எனப் பெயர் பெற்றது என்க. 'பைரவ்யே நம:' என்பது 'பயிரவிதன்னில்' என்பதனானே விளங்கிக் கிடந்தது. 'வயிரவி' எனஓதாது, "பயிரவி" என ஓதியதும் இதன் பொருட்டு.*

*இதனால், வயிரவியது முதனிலை (மூல) மந்திரம் உணர்த்தப்பட்டது.*

**1059.** அந்தம் பதினா லதுவே வயிரவி
முந்தும் நடுவும் முடிவும் முதலாகச்
சிந்தைக் கமலத் தெழுகின்ற மாசத்தி
அந்தமும் ஆதியும் ஆகிநின் றாளே. 2

**1060.** ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்
போகின்ற பூதம் பொருந்து புராதரர்
சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்
போகுந் திரிபுரை புண்ணியத் தோரே. 3

---

*1059. **தெளிவுரை :-** மேற்கூறியவாறு விசர்க்கத்தோடு கூடி இறுதியில் நிற்கின்ற 'ஔ' என்னும் எழுத்தே வயிரவி மந்திரமாகிய சொற்றொடருக்கு முன்னும், ஏனைய 'ஐ ஓம்' என்பவை முறையே அந்த ஔகாரத்திற்கு முன்னே நடுவணதாயும், முதற்கண்ணதாயும் உள்ள பீசங்கள் முன்னே நிற்க. அவ்வாற்றால் உள்ளக்கமலத்தில் விளங்குகின்ற பராசத்தியாகிய வயிரவி, உலகிற்கு முடிவும் முதலுமாய் உள்ளாள்.*

***குறிப்புரை :*** *"அந்தம் பதினாலதுவே முந்து" என அனுவதித்து ஓதினமையால், ஏனையிரண்டும் சொல்லாமே விளங்கிக்கிடந்தன. எனவே, இதன் முதல்மூன்று அடிகளாலும், 'ஹோம் ஹைம் ஹௌ பைரவ்யே நம' என்பதே வயிரவி மூலமந்திரம் என்பதை வலியுறுத்தியதாயிற்று. ஈற்றடி அவளது முதன்மை உணர்த்திற்று. அது, பகுதிப் பொருள் விகுதி. இதனால், வயிரவியது முதன்மை கூறப்பட்டது.*

*1060. **தெளிவுரை :-** உலகிற்குக் காரணர்களாகின்ற 'அயன், அரி, அரன்' என்னும் மூவரும் வயிரவியது அழிப்பும், காப்பும், படைப்பும் ஆகிய செயல்களில் ஒரு கூற்றிலே அடங்குபவர் ஆதலின், வீடாகிய பெரும்பயனைப்பெற விரும்பி அவளை வழிபடுகின்ற சிறந்த புண்ணியத்தை உடையவர்கள், நிலையற்ற அம்மூவர் பதவிகளுள் ஒன்றனையும் விரும்பார்.*

***குறிப்புரை :*** *தியானிப்பானும், தியானமும், தியானிக்கப்படும் பொருளும் ஆகிய மூன்றும் ஒருபுரம், பிரம்மா, மால், உருத்திரன் இவர்கள் மூவரும் ஒருபுரம், இச்சா, ஞான, கிரியா சத்திகள் மூவர் ஒரு புரம் ஆகிய முப்பெரும்புரங்களும் ஸ்ரீவித்யா வடிவான திரிபுரைகளாம்.*

*இதனால், 'வயிரவியை வினைநீக்கம் வேண்டி நிட்காமியமாக வழிபடுதலே சிறந்தது' என்பது கூறப்பட்டது.*

**1061.** **புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்
எண்ணிய நாட்கள் இருபத்தேழ் சூழ்மதி
பண்ணிய வன்னி பகலோன் மதியீறு
திண்ணிய சிந்தையன் தென்னனு மாமே. 4**

---

*1061. **தெளிவுரை :-** இருபத்தேழு நாட்களைக் கொண்ட மதியளவை (சாந்திரமான) மாதம் ஒன்றுகாறும் அகத்தும், புறத்தும் வளர்க்கப்படுகின்ற ஓமாக்கினியே வயிரவி வடிவமாகும். அதனைப் பகல் இரவு இடைவிடாது ஓம்புகின்ற மன உறுதியுடையவன் 'சிவனே' என எண்ணத்தக்க பெருமையுடையவனாவன்.*

*குறிப்புரை : புண்ணியனும் நந்தியும், புனிதனுமாகிய சிவபெருமானுடைய திருமனையாகும் வயிரவி. அந்த அன்னையை இருபத்தேழ் நாட்கள் கொண்ட ஒரு மாதம் அக்னிமண்டலம், சூரிய மண்டலம் இவற்றைக் கடந்து சந்திரமண்டம் இறுதியாகத் தியானிக்கின்ற திண்ணிய சிந்தையுடையார் தென்னர் ஆவர் என்றவாறு.*

*புண்ணியன் - புண்ணியமே திருமேனியாகப் பெற்றவர். நந்தி - ஆசாரியனாக வந்து மலநீக்கி ஆட்கொள்பவர். புனிதன் - இயல்பாகவே பாசங்களில் தொடக்குண்ணாது புனிதமானவர். அத்தகைய சிவபரம் பொருளின் சத்தி வயிரவி. திரு - ஆகுபெயராக திருவடையாளை உணர்த்திற்று.*

*எண்ணிய நாட்கள் இருபத்தேழ் - உருச்செபித்த நட்சத்திரங்கள் இருபத்தேழு, சூழ்மதி - இருபத்தேழ் நட்சத்திரங்கள் சூழ்ந்து ஒரு வட்டமான மாதம்; என்றது சாந்திரமான மாதம், வன்னி பகலோன் மதி யீறு மண்ணிய திண்ணிய சிந்தையன் தென்னனும் ஆம் எனக் கூட்டுக.*

*வன்னி முதலியன பிராணாயாம முறையில் உந்திக்கு மேலுள்ள அக்கினிமண்டல முதலியவற்றை உணர்த்தின. மதியீறு என்ற சந்திர மண்டலமாகிய சகத்திராரம். ஆகவே சுவாதிட்டானம் முதல் பிரம ரந்திரம் வரை வயிரவியைத் தியானிப்பவர்கள், சிவமேயாவர் என்பதாம். "தென்னன் பெருந்துறையான்" என்பதும் காண்க.*

*இதனால், வயிரவி வழிபாட்டில் சிறப்புடையது ஒன்று கூறப்பட்டது.*

**1062.** தென்னன் திருநந்தி சேவகன் றன்னொடும்
பொன்னங் கிரியினிற் பூதலம் போற்றிடும்
பன்னும் பரிபிடி அந்தம் பகவனோ
டுன்னும் திரிபுரை ஓதிநின் றானுக்கே. **5**

---

*1062. தெளிவுரை :-* உள்ளத்தில் பொருள் வடிவாக எண்ணப்படுகின்ற திரிபுரையாகிய வயிரவி மந்திரத்தை, உயர்த்துச் சொல்லப்படுகின்ற அன்பினாலாகிய மேற்கோளோடு வாழ்நாளின் இறுதிவரை சிவனொடு வைத்து, சொல் வடிவிலும் ஓதிவரும் அன்பன் பொருட்டாக அவளை நிலவுலகம் கயிலாய மலைபோலவே சிவனோடு தன்னகத்து வைத்துப் போற்றுகின்றது.

*குறிப்புரை :* தென்னன் - சிவன். தென் - அழகு. பொன்னங்கிரி - மேரு. பரிபிடி - அன்புடை பெண் யானை. சேவகன் - வீரன் கிரியினில் - கிரியைப் போல பரிதல் - அன்பு செய்தல். 'கட்டு ஒட்டு' முதலியன போல, "பிடி" என்பது முதனிலைத் தொழிற்பெயர். "பரி பிடி" நிகழ்கால வினைத்தொகை. 'பிடியொடு' என உருபு விரிக்க.



துர்க்கை

**1063.** ஓதிய நந்தி உணருந் திருவருள்
நீதியில் வேத நெறிவந் துரைசெயும்
போதம் இருபத் தெழுநாள் புணர்மதிச்
சோதி வயிரவி சூலம்வந் தாளுமே. **6**

---

*"திரிபுரை" என்றது அவளது நாமத்தை. ஓதி நின்றானுக்காக அவள் கயிலையிற் போல சிவனோடு வெளிநிற்றலை. "பூதலம் போற்றிடும்" என உலகின்மேல் வைத்துக் கூறினார். 'ஓதி நின்றான் அவனைச் சிவனோடு இங்குத்தானே காண்பான்' என்றவாறு. திரிபுராவாகிய வயிரவி. மந்திரத்தைச் செபிப்பவர் சிவத்தோடு ஒப்ப வைத்து வணங்கப்படுபவராவார்.*

*இதனால், 'மேற்கூறிய வழிபாடு இம்மையிற்றானே பயன் தரும்' என்பது கூறப்பட்டது.*

***1063. தெளிவுரை :-*** *நூல்களால் சொல்லப்படுகின்ற சிவனுடையதும், உணர்வுடையோரால் உணரப்படுவதும் ஆகிய திருவருட்சத்தியும், வேதத்தின்வழி வழுவாது ஒழுகிவருவோரால் வழிவழியாக உபதேசிக்கப்பட்டு வருகின்ற ஞானமும், மேற்கூறியவாறு இருபத்தேழு நாள்களை உடைய ஒரு மதிவட்டங்காறும் விளங்கி நிற்கின்ற ஓமாக்கினியுமாகிய வயிரவிதேவி தன் அடியார்களின்முன் சூலத்தோடு வந்து அருள்புரிவாள்.*

***குறிப்புரை :*** *சூலம் வந்தாளுதல் - இடர்நீக்கி இரட்சித்தல். போதம் உரைசெய்தல் - ஞானோபதேசம் வழங்குதல். தேவியே ஞானம் வழங்கச் சிவத்தோடு ஒருங்குவைத்து உணரப்படுவதாகிய திருவருளாக வந்தருளுவள் என்பதை 'நந்தி உணரும் திருவருள் வேதநெறி வந்து போதம் உரைசெய்யும்' என்பதால் விளக்கியவாறு.*

*அவளே நிறைமதிச் சோதியான வயிரவியாகச் சூலத்துடன் வந்து இடர்நீக்கிக் காத்து அருள்வள் என்பதை, 'மதி சோதி வயிரவி, சூலம் வந்து ஆளும்' என்பதால் விளங்க வைத்தவாறு.*

*இதனால், மேற்கூறிய வழிபாட்டினது சிறப்பு வலியுறுத்தப் பட்டது.*

***1064. தெளிவுரை :-*** *வயிரவிக்கு அழகிய கைகள் நான்கு. அவைகளில் சூலம், கபாலம், நாகபாசம், அங்குசம் என்பவற்றை ஏந்தியிருப்பாள். இவள், மாலாலும், அயனாலும் அறியப்படாத அழல் வடிவத்தை உடைய சிவனுக்குச் சிறந்த திருமேனியாகின்ற*

**1064.** சூலம் கபாலம்கை யேந்திய சூலிக்கு
நாலங் கரம்உள நாகபாசாங்குசம்
மாலங் கயன்அறி யாத வடிவற்கு
மேலங்க மாய் நின்ற மெல்லிய லாளே. 7

**1065.** மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி
சொல்லியல் கிஞ்ச நிறம்மன்னு சேயிழை
கல்லியல் ஒப்பது காணும் திருமேனி
பல்லியல் ஆடையும் பன்மணி தானே. 8

---

*அருளேயன்றி, வேறல்லள். சூலி - சூலத்தையுடையவள், துர்க்கை.*

***குறிப்புரை :*** *"சூலம் கபாலம் கையேந்திய சூலி" என்றது உடம்பொடு புணர்த்தல், வலக்கையிரண்டில் மேலதிற் சூலமும், கீழதில் அங்குசமும் இடக்கை யிரண்டில் மேலதில் கபாலமும், கீழதில் நாகபாசமும் உள எனக் கொள்க. 'இவள் சிவனது அருளே' என்றது, 'சாந்த ரூபி' என்பதன்கண் ஐயம் அறுத்தவாறு. நாகபாசம் - பாம்பாகிய கயிறு. சிவன் அங்கி. சத்தி - அங்கமாயிருத்தல்.*

*1065.* ***தெளிவுரை :-*** *மேலும் இவள், மென்மையான இயல்பை உடையவள்; வஞ்சிக் கொடிபோலும் வடிவினை உடையவள்; சிறிது சினங்கொண்ட மனத்தினள்; பலகலையும் உணர்ந்தவள்; தோன்றுகின்ற வாய் முள்முருக்க மலர்போலச் சிவந்திருப்பவள்; நீல மணி போன்ற நிறத்தை உடையவள்; பல நிறத்தோடும், பல மணிகளோடும் கூடிய உடையை அணிந்தவள்.*

***குறிப்புரை :*** *விஷமி - விடமி, கொடுமையானவள். கிஞ்சுகம் - முள் முருக்கம்பூ. "சொல் இயல்" என்பதில் இயலுதல் அதற்குரிய இடத்தின் மேல் நின்றது. கிஞ்சுகம் 'கிஞ்சம்' என மருவிற்று. 'காணும் திருமேனி கல் இயல் ஒப்பது' எனக் கூட்டுக. "ஆடையும்" என்னும் உம்மை, சிறப்பு, மணியை உடையதனை "மணி" என்றார்.*

*1066.* ***தெளிவுரை :-*** *இன்னும் இவள், பல வயிரங்கள் இழைத்த கோடி சந்திரன்போலும் அழகிய முடியை அணிந்தவள்; சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற இரத்தின குண்டலத்தை அணிந்த காதினை உடையவள்; மான் போல மருண்டு பார்க்கும் பார்வையை உடையவள். சிறந்த ஒளிகளாகிய சூரியனையும், சந்திரனையும் கண்களாகக் கொண்டவள்; பொன்னாலாகிய மணி போலும் நெருப்புக் கண்ணையும் நிரம்ப உடையவள்.*

**1066.** பன்மணி சந்திர கோடி திருமுடி
சொன்மணி குண்டலக் காதி உமைக் கண்ணி
நன்மணி சூரிய சோம நயனத்தள்
பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. 9

1067. பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளேஓர்
ஆரியத் தாள்உளள் அங்கெண்மர் கன்னியர்
பாரித்த பெண்கள் அறுபத்து நால்வரும்
சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண்டாரே. 10

---

***குறிப்புரை :*** *திருமுடி, அன்மொழித்தொகை, 'கன்மணி குண்டலக்காதி' எனப் பாடம் ஓதி, இங்கும், 'மணி' என்பதற்கு 'அழகு' எனப் பொருள் கொள்ளுதல் சிறக்கும். ''வன்னி'' என்றது அதனையுடைய கண்ணினை. உம்மை இறந்தது தழுவிய எச்சம், நிரம்புவது சிவசத்தித்தன்மை என்க.*

***<u>இவை மூன்று மந்திரங்களாலும் வயிரவியது தியானவடிவம் கூறப்பட்டது.</u>***

***1067. தெளிவுரை :-*** *விரிந்துநின்ற ஒரு தாமரை மலரின் எட்டிதழின் நடுவில் (பொகுட்டில்) மேலான சத்தி ஒருத்தி இருக்கின்றாள். அவ்எட்டிதழ்களில் கன்னியர் எண்மரும், அவருள் ஒருத்திக்கு எண்மராக, அறுபத்து நால்வர் பணிமகளிரும் அங்குச் சூழ்ந்து பணிபுரிந்து அந்தச் சத்தியைத் தொழுது கொண்டிருக்கிறார்கள். திரிபுரை - ஏனைய சக்திகளைத் தொழிற்படுத்தி பிருதிவியாதி காரியங்களைச் செய்கிறாள்.*

***குறிப்புரை :*** *இவளே 'மனோன்மனி' எனப்படுபவள். நான்கு திசையிலும் திசைக்கு இரண்டாக உள்ள எட்டிதழ்களில் கிழக்கு முதலாகத் தொடங்க வலமாக முறையே 'வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூத தமனி' எனச் சொல்லி, எண்மர் கன்னியரை அறிக. பாரித்தல் - சூழ்தல். 'சரித்து' என்பது முதல் நீண்டது. இதன்கண் கூறப்பட்ட தாமரை மலர் வடிவத்தையும், அதன்கண் இருக்கும் முதற்சத்தி ஒருத்தி, பரிவாரசத்தி எண்மர் ஆகியோரை எதிர்ப்பக்கப் படத்தில் கண்டுகொள்க.*

*அம்மை ஏனைச்சத்தியர் புடைசூழ நிற்கும் நிலை*

உணர்த்துதல் நுதலிற்று. நிறைந்த எட்டிதழ்த் தாமரைக்குள் பூசிக்கத்தக்கவளாகிய சத்தி எழுந்தருளியுள்ளாள். அங்கு எண்மர் கன்னியரும் அறுபத்து நான்கு பெண்களும் அந்தச்சத்தியைச் சுற்றித்




*சாரித்து – சூழ்ந்து. சரித்தல் – இயங்குதல்*

தரிசித்து நிற்கின்றனர் என்றவாறு.

சிவனைப் பூசித்தற்குரிய பதுமாசனத்தின் அமைப்பு ஆகமங்களில் ஆங்காங்கு வேறு வேறுவகையாகச் சொல்லப் படுகின்றது. அவற்றுள் இங்குக் கூறிய எட்டிதழ்களும் சுத்த வித்தை ஒன்றும், வித்தியா தத்துவம் ஏழும் கூடியவையாம். ஆகவே, இதன் பொகுட்டு முதலியன ஏனைச் சிவத்தத்துவங்களும், இதன் தண்டு ஆன்ம தத்துவம் இருபத்து நான்குமாம். இதனை, அகத்தே பாவிக்கும் பொழுது தண்டினைக் கொப்பூழ் அடி முதலாகவும், மலரை இருதயத்திலும் கொள்ளவேண்டும். மனோன்மனியே இங்குப் பூசிக்கப் படுவள். ஏனையோர் அவளுக்குப் பரிவாரமும், பரிவாரங்கட்குப் பரிவாரங்களும் ஆவர். சிவ வழிபாட்டு முறையே சத்திக்கும் ஆதலின் அதனை இங்குக் கூறினார். இதனானே, எந்தச் சத்தியை யார் வழிபடினும் வழிபடப்படுபவளைத் தலைவியாகப் பொகுட்டில் வைத்துப் பரிவாரங்களை இதழ்களில் நிறுத்திப் பூசித்தல் வேண்டும் என்பது கொள்ளப்படும்.

**1068.** கண்டசிலம்பு வளைசங்கு சக்கரம்
எண்டிசை யோகி இறைவி பராசத்தி
அண்டமொ டெண்டிசை தாங்கும் அருட்செல்வி
புண்டரி கத்தினுட் பூசனை யாளே. 11

---

*இதனால், சத்தியை அகத்தும், புறத்தும் ஆசனத்தில் வைத்து வழிபடுமாறு கூறப்பட்டது.*

***1068. தெளிவுரை :-*** *இறைவியாகிய பராசத்தி மேற்கூறிய மனோன்மனியாய்ப் பூசிக்கப்படும் பொழுது கன்னித் தன்மையைக் குறிக்கச் சிலம்பும், வளையலும் அணிந்தவளாகவும், உலகத்தைக் காக்கின்ற செயலைக் குறிக்கச் சங்கு சக்கரங்களை ஏந்தியவளாகவும், எட்டுத் திசையும் நிறைந்தவளாதலைக் குறிக்க எட்டிதழ்த் தாமரையின் நடுவில் உள்ளவளாகவும் கருதப்படுவாள்.*

***குறிப்புரை :*** *'எண்டிசை யோகி' ''எண்டிசை தாங்கும் அருட்செல்வி" என்பன உடம்பொடு புணர்த்தலாய் நின்றமையின், இதற்கு இவ்வாறுரைத்தல் கருத்தாதல் அறிக. யோகி - பொருந்தி யிருப்பவள். சிலம்பு, வளை, சங்கு ஆகியவை நாதத்தை எழுப்பும்.*



**வயிரவி**

**1069.** பூசனை கந்தம் புனைமலர் மாகோடி
யோசனை பஞ்சத் தொலி வந்துரைசெய்யும்
வாச மிலாத மணிமந் திரயோகம்
தேசந் திகழும் திரிபுரை காணே. 12

---

*சக்கரம் ஒளியுடன் கூடிப் பாவ விருத்திகளை அளிக்கும்.*

*மேற்கூறிய மனோன்மனியைத் தியானிக்கும் முறை கூறப்பட்டது.*

***1069. தெளிவுரை :-*** *திரிபுரையை வழிபடும் முறையைக் கூறுகிறார். எங்கும் நிறைந்தவளாகிய சத்திக்கு உரிய பூசைப்பொருள்களாவன, சந்தனம், குங்குமம், பனிநீர் முதலிய நறுமணப் பொருள்கள். சூடத்தக்க மிக்க பல மலர்கள், ஐவகை வாத்தியங்கள், ஒலிக்காத மணிபோல வாய்க்குள்ளே சொல்லப்படும் மந்திரங்கள் முதலியனவாம்.*

***குறிப்புரை :*** *பூசுதலை உடையன களபசந்தனம். புனைவன மலர்கள்; ஸ்ரீம் பீஜமே கோடிவஸ்திரம். யோசனை தூரம் கேட்கும் பாஞ்சசன்யசத்தினொலியே வாத்தியம். இதுதான் சொல்லமுடியாத மணிமந்திர யோகமாம். இதனைச்செய்து ஒளிவடிவாய் விளங்கும் திரிபுரையைத் தரிசிக்க என்றவாறு.*

*மணிமந்திரயோகம் நல்ல சந்தனம்பூசி மலர்மாலை அணிந்து, கோடிவஸ்திரமுடுத்து, சங்கநாத ஒலி ஒருகாததூரம் கேட்க இயற்றின் தேவியைத் தரிசிக்கலாம் என்பது கருத்து. பஞ்சத்தொலி - பஞ்ச சத்தொலி என்பது விகாரமாயிற்று. யோகிகட்குக் கேட்கும் நவ நாதங்களில் ஒன்றாகிய சங்கொலி தியான காலத்துக் கேட்கும் என்று தியானசித்தியின் எல்லையறிவித்தவாறு. வாசம் - வசனம் என்பதன் திரிபு; பேச்சு. மணி மந்திரம் - மந்திரங்களுக்குள் மணி போன்றது. தேசம் - ஒளி. மாகோடியோசனை பஞ்சத்தொலி - மகாரமாகிய பிந்துவை எனக் கொள்ளலுமாம். அது ஓம் என்னும் பிரணவநாதம். அதுவே சங்கொலியாம்.*

*இதனால், சத்தி வழிபாட்டிற்குரிய பொருட்படை கூறப்பட்டது.*

***1070. தெளிவுரை :-*** *உலகில் காணப்படுகின்ற பலப்பல தெய்வங்களும், வேறு வேறு வகையாய் அணியப்படுகின்ற*

**1070.** காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணும் சிவனும் பிரமனும் மாயனும்
காணுந் தலைவிநற் காரணி காணே. **13**

---

*அணிகலங்கள் பலப்பலவும் ஒரு பொன்னின் வேறுபாடேயாதல் போலத் தோன்றுவனவாம். அவைகளுள் முதல்வராகப் போற்றப்படுகின்ற மும்மூர்த்திகளாயும் காணப்படுந்தலைவி உலக காரணியாகிய ஆதி சத்தியே.*

*குறிப்புரை :* 'வெவ்வேறாய், மாயனுமாய்' என ஆக்கம் வருவிக்க "பூணும் பல பலவும்" என்னும் முற்றும்மை தொகுத்தல் பெற்றது. "பொன்" என்றது அதன் காரிய வேறுபாட்டினை. 'தெய்வங்கள் தோற்றத்தில் பலப் பல வயக் காணப்படினும் பொருளால் ஒன்றே' என்பது முன் இரண்டடிகளால் கூறப்பட்டது. இதனை எடுத்தோதியது, 'சத்தி ஒருத்தியே முதல்வி' எனப் பின்னர் வருவதனை நிறுவுதற் பொருட்டு வேறுபட்டுக் காணப்படுகின்ற பல தெய்வங்களும், 'சம்புபட்சமும், அணுபட்சமும்' என இருதிறத்தன என்பது முதல் தந்திரத்தில் (பா.90) காட்டப்பட்டது. சிவபுண்ணிய மிகுதியால் உருத்திரன் மாலும், அயனும் ஆகிய ஏனை இருவர்போல ஓரோவழியும் மயக்கம் எய்துதல் இலனாயினமையின் அவனைச் சிவனாகவே கூறுதல் உண்டு என்க. "சிவன்" முதலிய மூன்றிலும் உள்ள உம்மைகள் எண்ணோடு உயர்வு சிறப்பு. 'மும்மூர்த்திகட்கும் முதல்வி யாதல் கூறவே, ஏனையோர்க்கு முதல்வியாதல் கூற வேண்டா' என்பது கருத்து சத்தியது முதன்மையை விதந்தது. **அவளை வழிபட்டால் அனைத்துத் தேவரையும் வழிபட்டதாம் என்பது உணர்த்துதற்கு என்**க.

இதனால், மேற்கூறிய வழிபாட்டின் சிறப்புக் கூறப்பட்டது.

*1071. **தெளிவுரை :-** தூலம், சூக்குமம் முதலாக வகுத்துச் சொல்லப்படுகின்ற மந்திரங்களுள் காரண மந்திரத்தை ஓதுவோரது உள்ளக்கமலத்தில், பூரக கும்பக இரேசகங்களாகின்ற பிராணா யாமத்தால் விளங்கி நிற்கின்ற சத்தி, சத்தனாகிய சிவனது நடுவில் உள்ளவளாய் இருப்பாள். இவ்வாறு சொல்லுகின்ற வேதப் பகுதி வேதத்தின் முடிவாய் விளங்குவதாம்.*

*குறிப்புரை :* 'பூரகம், கும்பகம், இரேசகம்' என்பன திரிவுபெற்று நின்றன. 'இரேசகத்தால்' என உருபு விரிக்க. "நடு"

**1071.** காரண மந்திரம் ஓதும் கமலத்துப்
பூரண கும்ப இரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடு அங் குரைசெய்த
ஆரண வேதநூல் அந்தமு மாமே. 14

---

*என்பதன்பின், "இருப்பாள்" என்னும் பயனிலை எஞ்சி நின்றது. இதனுள், "மந்திரம்" என்றது பஞ்சாக்கரத்தை "காரணம்" என்றதும், மகா காரணமாம், அஃது ஒன்பதாந் தந்திரத்தில் பஞ்சாக்கர பேதங்களைக் கூறுமிடத்து ஈரெழுத்தின் ஈரடுக்காக எடுத்தோதப்படுதல் காண்க. அதன்கண் சத்தி சிவத்தின் நடுவிலும், சிவம் சத்தியின் நடுவிலும் இருப்பினும் இங்கு இயைபு பற்றிச் சத்தி சிவத்தின் நடுவில் இருத்தலையே குறித்தார். ஓதுபவரது வினை அவரது உள்ளத்தின்மேல் ஏற்றப்பட்டது.*

*காரண மந்திரம் - காரண பஞ்சாக்கரமாகிய சிவசிவ என்பது. இதனைத் தியானிக்க பூரண, கும்பக, இரேசகங்கள் அமையும். சக்தியாகிய 'வ' அங்கே சிகாரங்களின் நடுவிலும், சிவமாகிய 'சி' சத்தியாகிய வகாரங்களில் நடுவில் அமைவதையும் உணர்ந்து மகிழலாம்.*

*"உடையாள் உன்றன் நடுவிருக்கும்*
*உடையாள் நடுவுள் நீஇருத்தி"*

***- தி.8 கோயில் மூத்ததிருப்பதிகம். 1***

***என்பது இம் மகாகாரண பஞ்சாக்கரத்தின் மேலும்***

***"அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்"***

***என்பது மூன்றெழுத்தாய் நின்று அடுக்கிவரும் காரண பஞ்சாக்கரத்தின் மேலும் நோக்குடையன என்றல் மரபு. இதனின் மிக்க மந்திரம் இன்மையின் இதனைக் கூறும் உபநிடதமே வேத முடிவாகும் என்றார். மகாகாரண பஞ்சாக்கரத்தைச் சக்தி பரமாக ஓதுங்கால் சக்தியெழுத்தை நெடிலாக ஓதுதல்வேண்டும் என்பது உய்த்துணர்ந்து கொள்க.***

***இதனால், மேற்கூறிய வழிபாட்டின் மந்திரங்களுள் தலையாயது கூறப்பட்டது.***

***1072. தெளிவுரை :-*** ***கைகளில் மோதிரவிரல், சிறுவிரல் முதலாகத் தொடங்கி வலமாகப் பெருவிரலின் நுனியால் வரைகளைத் தொட்டு உருவை எண்ணி நடுவிரலில் முடிக்கும்***

1072. அந்தம் நடுவிரல் ஆகி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி உரைசெய்யும்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடும்
நந்தி இதனை நவம்உரைத் தானே. 15

---

*வகையால் மீள மீள உருவேற்றப்படும் தமிழ்மந்திரம் முதலிய மந்திரங்களை அவ்வவற்றிற்குரிய தெய்வங்களாகவே தெளிந்து வழிபடுங்கள்; (பயன் விளையும்). இதனை எங்கள் நந்திபெருமான் நான் உணரும் வண்ணம் உரைத்தருளினார்.*

***குறிப்புரை :*** *நடுவிரலிற் சிறியவாதல் பற்றி மோதிரவிரலையும் 'சிறுவிரல்' எனப் பொதுப்படக் கூறினார். எனவே, 'தீரச் சிறியவிரல்' எனக் கூறவில்லை என்க. கையில் உள்ள ஐந்து விரல்களில் பெருவிரல் எண்ணுவதும், ஏனை நான்கு விரல்களும் எண்ணப்படுவனவுமாய், நிற்கும். ஒவ்வொரு விரலிலும் மும்மூன்று கீற்றுக்கள் உள; எண்ணப்படும் விரலின் வரைகள் பன்னிரண்டில் நடுவிரலிலும், மோதிர விரலிலும் உள்ள நடுக்கீற்று இரண்டும் எப்பொழுதும் தீண்டப்படா. 'அவையிரண்டும் சிவமும், சத்தியும்' என்பர். அவை ஒழிய ஏனைப் பத்துக் கீற்றுக்களை மோதிரவிரலின் அடிக் கீற்றில் முதலாகத் தொடங்கி வலமாகச் சுற்றி வந்து நடுவிரலின் அடிக்கீற்றில் முடிக்க உளவாகின்ற உருக்கள் பத்தாம். இவ்வாறு பெருவிரலின் நுனியால் மீள மீளச் சுழன்று எண்ண உருக்கள் பலவாக ஏறும். 'எட்டு' என்னும் உருவும் உண்மையில் பத்தாகவே எண்ணப்படும். அவ்வாறு எண்ணப்படுதலால் இடையில் நிகழ்ந்த குறை நிரம்பும் என்பது கருத்து. இனி எட்டு வேண்டியவிடத்துச் சிறுவிரலின் அடி தொடங்கிச் சென்று சுட்டு விரலின் அடிக்கண் முடித்தல் வேண்டும் என்பாரும் உளர்.*

*செபமணியிலன்றிக் கைவிரல்களால் மந்திரங்களைக் கணிக்கும் வகையில் பலவேறு முறைகள் பலவிடத்து உள்ளன. அவற்றுள் ஒன்றனை நாயனார் விதந்தார்.*

*மேற்கூறிய பத்துக் கீற்றுக்களோடு பெருவிரலில் இரண்டு கீற்றுக்களைக் கூட்டிப் பன்னிரண்டு பன்னிரண்டாக ஒன்பது முறை கணிக்க நூற்றெட்டு உருவாகும் என்பாரும். 'சிறு விரலின் அடி தொடங்கிப் பெருவிரலின் ஒரு கீற்றேகொண்டு நடுவிரல் அடிமுடியப் பத்தாகும்' என்பாரும் இங்ஙனம் பலதிறத்தர் கிரியையாளர் என்க.*

**1073.** உரைத்த நவசத்தி ஒன்று முடிய
நிரைத்த இராசி நெடுமுறை எண்ணிப்
பிரச்சதம் எட்டும்முன் பேசிய நந்தி
நிரைத்து நியதி நியமம்செய் தானே. **16**

---

*தமிழ்மொழியிலும் மந்திரம் உண்மையை வலியுறுத்துபவர் இந்நாயனார் ஆதலின் "செந்தமிழாதி" என்றார். "செந்தமிழாதி மந்திரங்களை" என்க. "தமிழ்" என்பது அதனாலாகிய மந்திரத்தைக் குறித்தது.*

*தமிழ்ச் செய்யுட்கே இலக்கணம் கூறவந்த தொல்காப்பியர் அதன் செய்யுட்களை ஏழாகவகுத்து, 'அவற்றுள் ஒன்று மந்திரம்' எனக் கூறி,*

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப"*

*- தொல். பொருள். செய்யுளியல் நூற்பா. 176*

*என நூற்பாச் செய்வாராயின், அந்நூற்பாவினுள் "மந்திரம்" என்றது வடமொழி மந்திரமே உரைத்தல் உரையாதல் எங்ஙனம்? இந்நூற்பாக் கூறும் மந்திரம் தமிழ் மந்திரமே என்பதில் உரையாளர் யாவரும் ஒத்த கருத்தினர் ஆதலை அவர் உரைநோக்கி உணர்ந்து கொள்க. நவம் - புதுமை; அஃதாவது முன்னர் அறியாதிருந்து பின்னர் அறிதல்.*

*இதனால், மந்திரங்களைக் கணிக்கும் முறைகளுள் எளிதான ஒன்று இயைபு பற்றிக் கூறப்பட்டது.*

*1073. தெளிவுரை :- "மேல்", "பூரித்த பூவிதழ்" (பா.1067) என்னும் மந்திரத்திற் சொல்லப்பட்ட ஒன்பது சத்திகளுள் இறுதியதாகிய 'மனோன்மனி' என்ற ஒன்று முடிவாய் நிற்க, மற்றைய எட்டினையும், வரிசைப்பட்ட எட்டு இடங்களில் வைத்துஒன்றன்பின் ஒன்றாக முறையே எண்ணிய பிராசாத கலைகள் பன்னிரண்டில் இறுதி எட்டோடும் அவற்றை முன்னே கூறிய நந்திபெருமான், அவ்வாற்றானே வரிசைப்பட நியமிக்கப்பட்ட முறையில் வழிபாட்டு முறையை ஆக்கியருளினார்.*

*குறிப்புரை : 'ஆதலின் அங்ஙனமே அச்சத்திகளை வழிபடுக' என்பது குறிப்பெச்சம். இராசி - இடம். 'இராசிக்கண்' என ஏழாவது*

1074. தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற
ஏமத் திருளற வீசும் இளங்கொடி
ஓமப் பெருஞ்சுடர் உள்ளெழு நுண்புகை
மேவித் தமுதொடு மீண்டது காணே. 17

---

*விரிக்க. "நெடுமுறை" என்பது. 'நெடுங்கணக்கு' என்பது போல இடையில் ஒன்று விடாது கூறுதலைக் குறித்தது. 'பிராசாதம்' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. 'பிரைச்சதம்' என்பதும் பாடம். 'பிராசாதம்' என்றது அதன் கலைகளை. இங்குக் குறிக்கப்பட்டது. துவாதச கலாப் பிராசாதமே, அதன் இறுதி எட்டுக்கலைகளாவன உன்மனைக்குக் கீழே உள்ளனவாம். அவை, 'விந்து அருத்த சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, சமனை என்பன. 'இவற்றிற்கு உரிய இடங்கள் ஆஞ்ஞை முதலாக மேலே உள்ளவை' என்பதை முன்னைத் தந்திரத்துள் 'கலை நிலை' என்னும் அதிகாரத் தொடக்கத்தே விளங்கக் கூறினோம். கிழக்கு முதலாக ஒரு திக்கிற்கு இரண்டாக உள்ளன என மேற்காட்டிய எட்டிதழ்களில் வாமை முதலிய எட்டுச் சத்திகளையும், பொகுட்டில் மனோன்மனியையும் வைத்து எண்ணுங்கால் விந்து, முதலிய பிராசாத கலைகளோடு ஒன்றுபட வைத்து எண்ணுதல் வேண்டும் என்பதே இம்மந்திரத்தால் கூறப்பட்டது. இவ்வாறு எண்ணுதலால் சத்தி வழிபாடு பிராசாத யோகமாயும் அமைவும் என்பது கருத்து. 'எட்டோடும் நிரைந்து' என்க. நியதி - நியமிக்கப் பட்டமுறை. நியமம் - வழிபாட்டுமுறை, செய்தான் - ஆக்கினான். சத்தியை அஃறிணையாகக் கூறுதலும் உண்மையில் இங்கு அவ்வாறு கூறப்பட்டது. ஏமம் - மயக்கம்.*

*இதனால், வயிரவி வழிபாட்டினைப் பிராசாத முறையிற் செய்யின் சிறப்பாதல் கூறப்பட்டது.*

***1074. தெளிவுரை :-** மாலையையணிந்த கூந்தலை உடையவளும், அருள் பொழியும் கண்களை உடையவளும், உயிரின் அறிவில் பொருந்திய வலிய ஆணவ இருள்போகும்படி ஞான ஒளியைப் பரப்பு கின்ற இளமையான கொடி போல்பவளும் ஆகிய வயிரவி, வெளியில் ஓமத்தீ வடிவாயும், உள்ளே மூலாக்கினி வடிவாயும் பொருந்தி, விந்துத் தானத்து அமுதத்தோடு இருதயத்தில் வந்து நின்றதை, நீ காண்பாயாக.*

***குறிப்புரை :*** *பின்னர், உள்ளெழுதல் கூறப்பட்டமையால்,*

**1075.** காணும் இருதய மந்திரமும் கண்டு
பேணும் நமஎன்று பேசும் தலைமேலே
வேணு நடுவு மிகநின்ற ஆகுதி
பூணும் நடுவென்ற வஞ்சஞ் சிகையே. **18**

**1076.** சிகைநின்ற அந்தம் கவசம்கொண் டாதி
பகைநின்ற அங்கத்தைப் பட்டென்று மாறித்
தொகைநின்ற நேத்திரம் முத்திரை சூலம்
வகைநின்ற யோனி வருத்தலும் ஆமே. **19**

---

*முன்னர் வெளியில் எழுதல் பெறப்பட்டது. மூலாக்கினி கருத்துப் பொருளாதலின், அதனை நுண்ணிதாகக் கூறியதோடு புகை எனவும் கூறினார். 'மேவி' என்பது ஈறுகெட்டு நின்றது. 'விந்து' என்பது வலித்தல் பெற்றது.*

*இதனால், சத்தி வழிபாட்டினைப் புறத்தும், அகத்தும் அழலோம்பல் முறையால் செய்க என்பது கூறப்பட்டது.*

*1075.* **தெளிவுரை :-** *இருதய மந்திரமும், சிரோமந்திரமும் 'நம' என்னும் முடிபினை உடையன. சிகா மந்திரமும் 'வஷட்;' என்னும் முடிபினை உடையது.*

**குறிப்புரை :** *இருதய மந்திரமும் 'நம' என்று கண்டு பேசும்; தலை மேல் "மந்திரமும்" 'நம' என்று கண்டு பேசும், சிகை 'வம்சம்' என முடிவு கொள்க. ''மந்திரமும்'' என்பது, ''தலைமேல்'' என்பதனோடும் சென்று இயையும். 'வம் சம்' என்பன வகாரத்தையும் ஷகாரத்தையும் குறித்து 'வஷட்' என்பதை உணர்த்தின. "பேசும்" என்பது 'பேசப்படும்' என்னும் பொருளது. "வேணு நடுவு மிக நின்ற ஆகுதி பூணும் நடு என்ற" என்றது. 'மூங்கிற் குழல்போலும் சுழுமுனை நாடியின் உள்ளே ஓங்குகின்ற மூலாக்கினியை எதிரேற்றுக் கொள்கின்ற நடுவிடமாகிய உச்சிக்கு உரியது எனப்பட்ட சிகை வம்சம்', என்றவாறு.*

*1076.* **தெளிவுரை :-** *சிகா மந்திரத்தில் உள்ள 'வஷட் என்னும் முடிபு சிறிது வேறுபட்ட 'வௌஷட்' என்பது கவச மந்திரத்திற்கும், 'பட்' என்பது அத்திர மந்திரத்திற்கும் முடிபாகும். நேத்திரங்கட்குரிய மந்திரத்திற்கு, பொதுவாயுள்ள, 'நம' என்பதே முடிபாம். நேத்திர நியாசத்தில் திரிசூல முத்திரை காட்டல் வேண்டும். சத்தி வழிபாட்டில் யோனி முத்திரை காட்டலும் பொருந்தும்.*

**1077.** **வருத்தம் இரண்டும் சிறுவிரல் மாறிப்**
**பொருத்தி அணிவிரல் சுட்டிற் பிடித்து**
**நெரித்தொன்ற வைத்து நெடிது நடுவே**
**பெருத்த விரல்இரண் டுள்புக்குப் பேசே.** **20**

---

*குறிப்புரை : இவ் இரண்டு மந்திரங்களிலும் எடுத்துச் சொல்லப்பட்டவை. 'இருதயாய நம சிரசே நம: சிகாயை வஷட், கவசாய, வௌஷட், அஸ்த்ராய பட், நேத்ரோப்யோந் நம:' என்னும் அங்க மந்திரங்கள் ஆறுமாம். "கொண்டு" என்பதை. 'கொள்ள' எனத் திரிக்க "பகை நின்ற" என்பது, 'பகைக்கு - பகையை அழித்தற்கு - நின்ற, என்றவாறு, ஆதி - வயிரவி. 'ஆதியடத்து நின்ற' என்க. 'பாரென்று' என்பது பாடம் அன்று தொகை - பொது 'நேத்திரம் தொகையோடு நின்றன' என மாறிக் கூட்டுக. "நின்றன" எனப் பன்மை கூறியதனால் அது பன்மை வாசகமாகச் சொல்லப்படுதல் கொள்க. 'வருவித்தல்' என்பது இடைக் குறைந்து, 'வருத்தல்' என நின்றது. 'சிரோ மந்திரம் சுவஹாந்த மானது', என்பாரும் உளர் 'நம:' பொதுவாக எல்லாவற்றிற்கும் உரியதே. அஃது ஒன்றே பட இம்மந்திரங்கட்குப் பொருளுரைப் பாரும் உளர். அவர், 'வம்சம்' என்பதையும், 'அந்தம்' என ஓதித் தமக்கு வேண்டியவாறு உரைத்துப் போவர்.*

*இவ் இரண்டு மந்திரங்களாலும் அங்க மந்திரங்கள் கூறப்பட்டன. வழிபாட்டில் இவை அங்க நியாசத்திற்கு, பிறவற்றிற்கும் பயன்படுதல் கருதி.*

*சம்மிதா மந்திரங்களுள் பிரம மந்திரம் ஐந்தும் சத்தி வழிபாட்டில் சத்திக்கு ஏற்பச் சொல்லப்படும். அங்க மந்திரங்கள் அவ்வாறன்றி எவ்விடத்தும் ஒருபெற்றியவாயே வரும் என்க.*

***1077. தெளிவுரை :-*** *கைகளை உள்முகமாகக் கொண்டு முயற்சியோடு சிறுவிரல் இரண்டையும் ஒன்றின்மேல் ஒன்றாக மாறி வைத்து அணிவிரல்களையும் அவ்வாறே சுட்டு விரல்களால் மாறிப் பிடித்து மோதிர விரல்களின் மேல் நீண்டதாகிய நடுவிரல் ஒவ்வொன்றையும் நிமிர்த்திப் பொருந்த வைத்துப் பெருவிரல் இரண்டையும் மாற்றமின்றி உள்ளே புகச்செய்தபின், நேத்திர மந்திரத்தைச் சொல்லுக.*

***குறிப்புரை :*** *இவ்வாறு அமைப்பது யோனிமுத்திரையாம். இது*

1078. பேசிய மந்திரம் இகாரம் பிரிந்துரை
கூச மிலாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே. 21

---

*பஞ்சமுக முத்திரையினின்றும் சிறிதே வேறுபடுதல் அறிக. மாறி வைக்கப்பட்ட சிறு விரல்களைப் பின் நடு விரல்களின் மேல் சார்த்த வேண்டுதல் காண்க. மேற்கூறிய இரண்டில், 'திரிசூல முத்திரை நன்கு அறியப்பட்டது' என்னும் கருத்தால், ஏனை ஒன்றன் அமைப்பையே கூறினார்.*

*சிலர் வலக்கையில் உள்ள சிறுவிரலைப் பெருவிரலால் வளைத்துப்பிடித்து அவற்றின் நடுவில் உள்ள மூன்று விரல்களை நிமிர்த்திக் காட்டும். ஆக்ரகண்ட முத்திரையையே 'நேத்ர முத்திரை' என்றும், 'திரிசூல முத்திரை' என்றும் கொள்வர். எனினும், இரு கை விரல்களையும் நன்கு கோத்துப் பிடித்துச் சிறுவிரல்கள், நடுவிரல்கள், பெருவிரல்கள் என்பவற்றை நிமிர்த்தித் தம்முள் பொருந்த வைத்துக் காட்டுவதே திரிசூல முத்திரை என்க.*

*'வருத்தத்தோடு சிறுவிரல் இரண்டும் மாறிப் பொருத்தி' எனவும் 'நெடிதாகிய நடுவை நெரித்து ஒன்ற வைத்து' எனவும் கூட்டுக. 'புக்கபின்' என்பது 'புக்கு' எனத் திரிந்தது.*

*இதனால், அரிதில் அறியப்படுவதொரு முத்திரையை அமைக்குமாறு கூறப்பட்டது.*

***1078. தெளிவுரை :-** சத்தி வழிபாட்டில் பிராணவாயு வசப்படுதற்கு உரியதாகிய உபதேசத்திற்குச் சொல்லப்பட்ட மந்திரமாவது, இகர உயிர், அம்ச மந்திரத்தினின்று பிரித்துத் தனியே தயக்கம் இல்லாமல் சொல்லப்படுகின்ற சகர மெய்யை முன்னர்க் கொண்டு, இறுதியில், முடித்துச் சொல்லப்படும் விந்துவாகிய மகாரத்தையும் ஏற்று நிற்கச் சொல்லப்படுவதாம்.*

***குறிப்புரை :** எனவே, 'சிம்' என்பதே அம்மந்திரமாதல் அறிக. மூன்றாம் அடியை முதற்கண்வைத்து உரைக்க. 'மந்திரம்' என்னும் வடி சொல்லில் 'இகரம் சகாரத்தை முன்கொண்டு' என்க. இங்கு, 'முன்' என்பது, புணர்ச்சிவிதிகளின் முறைப்படி, 'இடமுன்' என்க. வாசிப் பிராணன் - யோக நூல்களில் 'வாசி' எனவழங்கும் பிராணன்.*

**1079.** கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவிய சவ்வுடன் பண்ணும் மகாரத்தை
மேவிய மாயை விரிசங்கு முத்திரை
தேவி நடுவுள் திகழ்ந்துநின்றாளே. **22**

---

*'பிராணனுக்கு' என்னும் நான்காவது தொகுத்தலாயிற்று, கூசுதல், இங்கு, அடங்குதலின் மேற்று. "கூவு" என்னும் முதனிலைத் தொழிற் பெயர் ஆகு பெயராய்ச் செயப்படுபொருள் மேல் நின்றது. இனி ஏவல் முற்றாக்கி, அது கருத்து வகையால் பெயர்ப் பயனிலையாய் நின்றதாக உரைத்தலுமாம். வாசிப் பிராணன் - பிராண வாயு.*

*இதனால், சத்தி வழிபாட்டில் கொள்ளப்படும் பிராணாயாம மந்திரம் கூறப்பட்டது.*

*1079. தெளிவுரை :- 'சம்' என்னும் மந்திரப்பயன் உணர்த்துதல் நுதலிற்று. இவ்வண்ணம் செபித்த ஆன்மா. உயிர் முதலாகிய அகரம் உடனாகப் பரவிய இயல்பினையுடைய சகரத்தோடு சேர்க்கப்பெற்ற மகாரத்தைப் பொருந்திய மாயையாக விரிந்த சங்கமுத்திரை நடுவுள் தேவி விளங்கி நின்றாள் என்றவாறு.*

*அதாவது 'ஸம்' என்ற பீசத்துள் சங்கமுத்திரை நடுவில் தேவி விளங்குவள் என்பதாம். பிராணன் என்றது பிராணவாயுவை அன்று; உயிர் எழுத்தை. முதல் - அகரம். ச் + அ + ம் - சம் எனச் சேர்த்தவாறு.*

*குறிப்புரை : முதல் இரண்டடிகள் அனுவாதம். கையை நிமிர்த்திப் பெருவிரல் தவிர மற்றைய நான்கு விரல்களையும் சேர்த்து நீட்டிச் சிறிது வளைத்துப் பெருவிரலை வளைத்து அதன் நுனி சுட்டு விரலின் அடியில் பொருந்த வைப்பதே சங்க முத்திரையாம். 'இது மாயையின் விரிவைக் குறிக்கும்' என்பது இங்குக் கூறப்பட்டது. இம்முத்திரை தேவர்கட்கும், தேவகணங்கட்கும் செய்யும் தர்ப்பணத்திற்குக் கொள்ளப்படுவது. இதனால் விரல் நுனிகளின்வழிச் செல்லும் நீர் 'தேவதீர்த்தம்' எனப்படும். 'கணபதி, கந்தர், தேவர், நந்தி, மகாகாளர், பிருங்கி, இடபர், சண்டர்' என்னும் இவர்களுக்கும் இவ்வாறே தர்ப்பணம் செய்யப்படும் ஆகையால், 'சங்க முத்திரையின் நடுவில் தேவி விளங்கு வாள்' என்றார். எனவே, 'பிராணாயாமத்தின் வழியான தியானம், செபம் இவைகளோடு தேவிக்குத் தர்ப்பணமும் செய்க' என்றாராயிற்று.*

*''கூவிய சிவன்'' என்பதை மூன்றாம் அடியின் முதற்கண்*

**1080.** நின்ற வயிரவி நீலி நிசாசரி
ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்
சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே
நன்றருள் ஞாலத்து நாடிடும் சாற்றியே. **23**

**1081.** சாற்றிய வேதம் சராசரம் ஐம்பூதம்
நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி
தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை
ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே. **24**

---

*வைத்து, 'மாயையாக விரிக்கின்ற சங்க முத்திரை நடுவுள் தேவி திகழ்ந்து நின்றாள்' என முடிவு செய்க.*

*இதனால், சத்தியது தர்ப்பணம் விதிக்கப்பட்டது.*

*1080. **தெளிவுரை :-** துன்பத்தை நீக்க முன்னிற்கும் வயிரவி நீல நிறத்தை உடையவள்; இரவில் உலாவுபவள்; மனமாகிய ஒன்றும், வாக்கும் காயமுமாகிய ஏனை இரண்டும் ஒருவழிப்பட்டோரது உள்ளத்தில், தானே விளங்கி அருள்புரிபவள்; சிவபிரானுக்கே உரிய சத்தி; அவளைத் துதித்து, அவளது நல்ல திருவருளை இவ்வுலகத்தில் பெற விரும்புங்கள்.*

*குறிப்புரை :* இரவில் உலாவுதல் தீயவரை ஒறுத்தற்கு. 'மனம்' என்பதும், 'உள்ளம்' என்பதும் வேறு வேறாதலை அறிக. "தேவர் பிரானுக்கு நாயகி" என்றது. 'வயிரவி சிவத்தியே' என்பதனை வலியுறுத்தியதாம். இத்தொடர் ஒருபெயர்த்தன்மைப்பட்டு, 'சென்றருள்' என்பதனோடு வினைத்தொகையாகத் தொக்கது 'நன்றாகிய அருள்' என்க. "ஞாலத்து நாடிடும்" என்றது, 'உலகில் பகை முதலிய துன்பங்கள் நீங்கி வாழலாம்' என்றவாறு.*

*<u>இதனால், வயிரவி வழிபாடு உலகில் வரும் துன்பங்களை நீக்குவதாதல் கூறப்பட்டது.</u>*

*1081. **தெளிவுரை :-** முக்கண்ணியும், சோதி (ஒளி) வடிவானவளும், பராபரையும், 'ஆதி' என்னும் பெயரொடு முதல்வியாய் நிற்பவளும் ஆகிய வயிரவி தனது ஆற்றலால் வேதம், சராசரப் பொருள்கள், ஐம்பூதம், நான்குதிசை, இருள், ஒளி, பலவகை உடம்புகளாய்த் தோன்றுகின்ற பல உயிர்கள் முதலிய எல்லாமாய் எங்குமாய் நிற்கின்றாள்.*

1082. ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி உணரில் <u>உடலுயிர் ஈசனாம்</u>
பேதை உலகில் பிறவிகள் நாசமாம்
ஓத உலவாத கோலம்ஒன் றாகுமே. 25

---

***குறிப்புரை :*** *மேல் 'திரிபுரை' எனப்பட்ட அவளே இங்கு, 'வயிரவி' எனப்படுகின்றாள் என்பது உணர்த்துதற்கு முன்னை யதிகாரத்தில், "வைத்த பொருளும்" (பா.1042) என்னும் மந்திரத்திற் கூறியதனையே இங்கும் கூறினார். பர + அபரை - பராபரை; மேலாய பொருளும், கீழாய பொருளுமாய் நிற்பவள். ஒடு உருபு ஆனுருபின் பொருளில் வந்தது.*

*இதனால், வயிரவி உலகப் பயனைத் தருவதற்கு உரியவள் ஆமாறு குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***1082. தெளிவுரை :-*** *தென்கோடியாகிய குமரித்துறையில் நிலை பெற்றிருப்பவளும் எப்பொருட்கும் ஆதியுமாகிய வயிரவியைத் துதித்தும், தியானித்தும் நின்றால், உடலில் உள்ள உயிர் சிவமாகும், அறியாமை பொருந்திய இவ்வுலகில் பலவாறு பிறக்கும் பிறவிகள் ஒழியும். அவளது வடிவு எண்ணிறந்த வகையினது ஆகலின், அஃது ஒன்றாயே இருத்தல் கூடுமோ!*

***குறிப்புரை :*** *எவ்விடத்தும் சிவமும், சத்தியும் பிரிப்பின்றி யிருப்பினும், சிலவிடத்துச் சிவத் தன்மையும், சிலவிடத்துச் சத்தித் தன்மையும் முனைந்து தோற்றும், அவ்வாற்றால் வடக்கில் கயிலைமலை, சிவமலையாகின்றது. அதுபோலத் தெற்கில் 'குமரி' என்னும் மலை சத்தி மலையாய் இருந்தது. கால வேறுபாட்டால் அம்மலையைக் கடல் தன்னுள்ளே அகப்படுத்து வடக்கில் மிகப்பரந்து நின்றமையின், அதன் வடகரையில் சத்திகுமரியாய் எழுந்தருளியிருக்க, அக்கடல் முனையும் 'குமரி முனை' எனப்படுவதாயிற்று. அவ்விடம் சிவனுக்குக் கயிலைபோல, உமைக்கு மிகச் சிறந்த இடமாதலை உணர்த்தற்கு வயிரவியை, "கன்னித் துறைமன்னி" என்றார் இறையன்புடையோர் யாவரும் கயிலையை அணுகிக் காணலையும், குமரி தீர்த்தத்தில் (கடலில்) முழுகுதலையும் ஒருபெற்றியவாக மேற்கொள்ளல் இன்றும் நிகழ்வது. இதனால், ஒரு கருத்துப் பற்றிச் சிவனை, மேல், (பா.1061, 62) "தென்னன்" எனக் குறித்த நாயனார், தேவியை இங்கு, "கன்னித்துறை மன்னி" என்றார். பின்னரும், (பா.1088) "இனிய தென்மூலை இருக்கும் குமரி" என்பார். "நல் ஆவடு தண்டுறை ஆவின் கிழத்தி" (பா.1105) எனவும் கூறுவார்*

**1083.** கோலக் குழவி குலாய புருவத்தள்
நீலக் குவளை மலரன்ன கண்ணினாள்
ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி
மேலைச் சிவத்தை வெளிப்படுத் தாளே. **26**

**1084.** வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென்றன் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதி
ஒளிப்படு வித்தென்னை உய்யக்கொண்டாளே. **27**

---

*- பாயிரத்திலும், "சிவன் ஆவடு தண்டுறை சீருடையாள்" (பா.17) என்றார். "மன்னி" என்பது பெயர். இதில் ஐயுருபு தொகுத்தலாயிற்று. கன்னித் துறையைப் பிறரெல்லாம் உருவமாக்கித் தாம்தாம் வேண்டும் பொருளை உரைப்பர். 'சத்தியது வடிவு ஒன்றாகாது பலவாதல் செயல் வேறுபாடு நோக்கியாதலின், அவற்றை அவ்வாறே கொள்க' என்பார், "ஓத உலவாத கோலம் ஒன்றாகுமே" என்றார். ஏகாரம் எதிர்மறை வினா. இதனால், வயிரவி சிவ சத்தியேயாதல் இங்கும் தெரிவிக்கப்பட்டது.*

*கன்னித்துறை - சத்திலோகமாகிய ஸ்ரீபுரம். மன்னி - நிலைபெற்றவள். உடல் - சகம். உயிர் - ஆன்மா. ஈசன் - பரம். ஆகவே, சத்தியே மாயையாய் உலகு உடல் இவற்றிற்கு முதற்காரணமாயும் உயிர்க்கெல்லாம் போக மோட்சத்தை தந்து உடனாயும் ஒன்றாயும் சிவபரம்பொருளோடு பிரிக்க முடியாத திருவருளாற்றலாயும் இருத்தலின் 'உடலுயிரீசனாம்' என்றருளியது.*

*ஓத - புகழ்ந்து சொல்ல. உலவாத - வற்றாத. கோலம் - அழகு.*

*இதனால், வயிரவி வழிபாடு வீடுபேற்றினையும் தருதல் கூறப்பட்டது.*

***1083. தெளிவுரை :- 'அழகிய கூந்தல், வளைந்த புருவம்' நீல நிறத்தை உடைய குவளை மலர்போலும் கண்கள்' களிப்பைத் தருகின்ற இனிய அமுதம் போன்ற ஆனந்தமே உருவான அழகிய வடிவம், இவைகளை உடைய வயிரவியே எப்பொருட்கும் மேலான சிவத்தை உயிர்கட்கு வெளிப்பட்டுத் தோன்றச் செய்தாள்.***

***குறிப்புரை :** 'சத்தி வழியாக அன்றிச் சிவத்தை நேரே காணுதல் அரிது' என்பது தோன்ற நேரே சென்று காணுதலினின்றும் பிரித்த, 'சுந்தரியே' என்னும் பிரிநிலை ஏகாரம், தொகுத்தலாயிற்று. அவ்ஏகாரத்தை இரட்டுற மொழிந்து தேற்றேகரமாக்கி, 'உலகப்*

**1085.** கொண்டனள் கோலம் கோடி அனேகங்கள்
கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்
விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையும்
தண்டலை மேல்நின்ற தையல்நல் லாளே. **28**

---

*பயனைத் தருகின்ற வயிரவியே மெய்ப் பயனையும் தருகின்றாள்' என்பது கொள்க. மெய்ப்பயன் கருதி வழிபடுவோர் அவளைச்சார்ந்த ரூபியாகக் கண்டு வழிபடுக என்பார், "கோலக் குழலி" என்பது முதலாக உடம்பொடு புணர்த்துக் கூறினார். குலாய - விளங்கிய. ஆலிக்கும் - களிப்பூட்டும்.*

*இதனால், வயிரவியையே சாந்த ரூபியாகக் கண்டு வழிபட்டுப் பேரின்பத்தினைப் பெறுதல் கூடுவதாதல் கூறப்பட்டது.*

***1084. தெளிவுரை :-** முன்னே சிவத்தை வெளிப்படுவித்துக் காணச்செய்து, பின் அக்காட்சியின் பயனாக முற்றறிவையும், முற்றறிவின் பயனாகத் தெளிவையும், தெளிவின் பயனாக இன்ப அநுபவத்தையும், அவ்வநுபத்தின் பயனாக, சிவத்தைவிட்டு நீங்காது அதனுள்ளே அடங்கியிருத்தலையும் முறையே பெறச்செய்து என்னை உய்யக் கொண்டாள் வயிரவி.*

***குறிப்புரை :** இதனால் சத்தி மெய்ப்பயனைத் தரும் முறை, நிரல்படக் கூறப்பட்டது.*



**மகிடாசுரமர்த்தினி**

**1086.** **தையல்நல் லாளைத் தவத்தின் தலைவியை**
**மையலை நூக்கும் மனோன்மனி மங்கையைப்**
**பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்**
**வெய்ய பவம்இனி மேவகி லாவே.** **29**

---

*1085.* ***தெளிவுரை :-*** *வணங்குவாரது உச்சிமேல் நிற்பவளாகிய 'வயிரவி' என்னும் நல்ல சத்தி, அளவிறந்த வடிவுகளைக் கொண்டாள், கொண்டு, அக இருளை நீக்குதற்கு 'அறுபத்து நான்கு' எனப்படும் கலைத்துறைகள் அனைத்திலும் நூல்களை ஆக்கினாள். புற இருளைப் போக்குதற்கு வானத்தில் விளங்கும் ஞாயிறு, திங்கள், தீ என்னும் மூன்று ஒளிகளையும் படைத்தாள்.*

***குறிப்புரை :*** *'உயிர்களின் பொருட்டு அவள் அளித்தன தாம் பல', என்றவாறு. 'அதனால், அவளை மறவாது வழிபடுதல் உயிர்கட்குக் கடன்', என்பது குறிப்பெச்சம். மாலை, மொழிமாலை, விண்டனள் - தோற்றுவித்தாள். தண்மை - தணிவு; வணக்கம். வணங்குவாரது தணிவு. அவரது தலைமேல் ஏற்றிச் சொல்லப்பட்டது.*

*இதனால், சத்தியது உதவியை உயிர்கள் மறக்கலாகாமை கூறப்பட்டது.*

*"அவளால் வந்த ஆக்கம் இவ் வாழ்க்கை யெல்லாம்"*

*எனச் சிவஞானசித்தியார் (சுபக். 1-69) கூறும்.*

*1086.* ***தெளிவுரை :-*** *அம்மை யடிபணியின் பிறவி யில்லையெனல் நுதலிற்று. தையனாயகியை. உலகநாயகியை. மயக்கற, அருட்பார்வை வழங்குகின்ற மனோன்மனி மங்கையை, மெதுவாக நின்று தோத்திரம் செய்து பணியுங்கள்; பணிந்தபின் கொடிய பிறவி இனி உங்களைப் பொருந்தா என்றவாறு.*

***குறிப்புரை :-*** *"பைய" என்றது "இயன்ற அளவு" என்றவாறு. அவளது பெருமை முழுவதையும் அறிந்து துதித்தலும், அப்பெருமை யளவிற்குத் தக வழிபடுதலும் ஒருவர்க்கும் கூடாமையின் "பைய" என்றார். "மலையளவு சுவாமிக்குக் கடுகளவு கர்ப்பூரம்" என்பது பழமொழி.*

*"ஏழை அடியார் அவர்கள் யாவைசொன*
*சொல்மகிழும் ஈசன்" - தி.3 ப.71 பா.1*

*என்பதில் ஞானசம்பந்தர், அடியார்களை, "ஏழை அடியார்"*

**1087.** வேயன தோளி விரையுறு மென்மலர்
ஏய குழலி இளம்பிறை ஏந்திழை
தூய சடைமுடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினிதிருந்தாளே. **30**

**1088.** இனியதென் மூலை இருக்குங் குமரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படு வித்தனள் சார்வு படுத்து
நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே. **31**

---

*என்றருளிச் செய்ததும் இக்கருத்துப் பற்றி,*

*"யானறி யளவையின் ஏத்தி ஆனாது*
*நின்னறந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்*
*நின்னடி உள்ளி வந்தனென்"*
*- தி.11 திருமுருகாற்றுப்படை 277-279*

*என்றார் முருகாற்றுப்படையிலும், நூக்குதல் - போக்குதல், பவம் - பிறப்பு.*

*இதனால், சத்தியது பெருமையும், உயிர்களது சிறுமையும் கூறுமுகத்தால், உயிர்கள் அவளை வழிபடும் கடப்பாடுடையனவாதல் கூறப்பட்டது.*

***1087. தெளிவுரை :-** அன்னை தம்மகத்து இருந்தமையை வியந்து கூறுதல் நுதலிற்று. மூங்கிலையொத்த தோள்களையுடையாள், மணம் பொருந்திய மெல்லிய மலர்கள் நிறைந்த கூந்தலையுடையாள், இளம்பிறை சூடிய தூய சடை முடியையுடைய சூலினி, சுந்தரி, பொருந்திய எனதுள்ளத்தையிடமாகக் கொண்டு வீற்றிருந்தாள் என்றவாறு.*

***குறிப்புரை :** வேய் - மூங்கில். விரை - நறுமணம். ஏய - பொருந்திய. குழல் - கூந்தல். 'பிறையைச் சூடிய ஏந்திழை' என்க. பிறைசடையில் உள்ளது. சூலினி - சூலத்தை ஏந்தியவள். ஏய் உள்ளம் - தான் இருத்தற்குப் பொருந்திய உள்ளம்; அஃதாவது, அறிவும், அன்பும் நிரம்பிய உள்ளம். "சுந்தரி" என்பதை "குழலி" என்பதன் பின்னர்க்கூட்டி, அது காறும் ஒருவகைக் கோலமும், பின், "சூலினி" என்பது காறும் வேறொரு வகைக் கோலமும் ஆக இருவேறு வடிவங்களைக் கூறினமை கொள்க. முன்னது அமைதிக்கோலமும், பின்னது கடுமைக் கோலமுமாதல் அறிக எழுவாய் அதிகாரத்தால் வந்து இயைந்தது.*

*இது முதல் ஐந்து மந்திரங்களால் சத்தி தமக்கு அருள் புரிந்தவாறு கூறினார் என்க.*

**1089.** **நாடிகள் மூன்றுள் நடுவெழு ஞாளத்துக்**
**கூடியிருக்கும் குமரி குலக்கன்னி**
**பாடகச் சீறடிபைம்பொற் சிலம்பொலி**
**ஊடகம் மேவி உறங்குகின் றேனே.** **32**

---

*1088. **தெளிவுரை :-** தென்கோடியில் உள்ள இனிய கடற்கரையில் எழுந்தருளியிருக்கும் குமரியாகிய வயிரவி, தன்னோடு இணை ஒருவர் இல்லாத ஒப்பற்ற தலைவி; அதனால், அவள் ஒருத்தியே உலகத்திற்கு முதல்வி. அவள் என்னை உலகச் சார்பினின்றும் நீக்கித் தனியனாகச் செய்து, பின் தனது துணைமையில் இருக்கவைத்து, இன்பத்தை மிக உண்டாக்கி, இவ்வாறு என் உள்ளத்தில் நின்று பயனளித்தாள்.*

*__குறிப்புரை :__ சார்வு - ஆன்மாக்களின் மலச்சார்பு. அவற்றை அழித்து, பதிச்சார்பு விளைவிப்பவள். சார்பற்றா லல்லது சார்புணர்ந்து பற்றாது மனம் ஆதலால் மலச்சார்பு கெடுத்து, திருவடிச்சார்பு விளைவித்தனள் என்றது. நனிப்படுவித்து - தைலதாரைபோல் தனதடிக்கண்ணே இடையறாது தோய்ந்து நிற்கச்செய்து, ஆன்மாக்கள் என்றும் சுதந்திர ஈனர்களாதலின் தாமே அவர்கள் உள்ளத்தை நாடி நின்றாள் என்க.*

*1089. **தெளிவுரை :-** 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்னும் மூன்று நாடிகளுள் நடுவிலே ஓங்குகின்ற நாளம் போல்வதாகிய சுழுமுனை நாடியுள்ளே பொருந்தி நின்ற, இளையவளும், கன்னிகையும் ஆகிய சத்தியது பாடகம் அணிந்த சிறிய பாதத்திலே உள்ள பசிய பொன்னாலாகிய சிலம்பினது ஒலி அந்த நாடிக்குள்ளே ஒலித்துக் கொண்டிருக்கவும் அதனைக் கேட்கமாட்டாமல் உறங்குகின்றேன் என்றால், எனது அறியாமையை என்னென்பது.*

*__குறிப்புரை :__ "ஊடகம்" என்பதை, 'அகத்தூடு' என மாற்றிக் கொள்க. "மேவி" என்பது 'மேவ' என்பதன் திரிபு. 'மேவியும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'உறங்குகின்றாளே' என்பது பாடம் ஆகாமை. அடுத்த மந்திரத்தின் முதலடியால் விளங்கும். 'உயிரின் உறக்கத்திற்குக் காரணம் குண்டலியின் உறக்கமே' என்பது மேல் பலவிடத்தும் கூறியவாற்றால் அறியக் கிடத்தலின், அதனை இங்கு உய்த்துணர்ந்து கொள்ள வைத்தார். எனவே, 'யோக முயற்சியால் மூலாக்கினியை எழுப்பி, அதனால் குண்டலினியைத் துயில் உணரச் செய்தவழியே அச்சிலம்பொலியைக் கேட்டல் கூடும்' என்பது போந்தது. அங்ஙனம் கேட்குமாறு நடு நாடியிற் பொருந்தியிருத்தலே சத்தியானவள் உயிருக்கு அளிக்கும் கருணையாதல் விளங்கும்.*

**1090.** உறங்கு மளவில் மனோன்மனி வந்து
கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்
பிறங்கொளித்தம்பலம் வாயில் உமிழ்ந்திட்
டுறங்கல்ஐ யாஎன்றுபாயஞ்செய் தாளே. **33**

**1091.** உபாயம் அளிக்கும் ஒருத்திஎன் உள்ளத்
தபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்கும் சுழியகத் துள்ளே
அவாவை யடக்கிவைத் தஞ்சல்என்றாளே. **34**

---

*1090. **தெளிவுரை :-** மேற்கூறியவாறு யான் உறங்கிக் கொண்டு இருக்கும் பொழுது மனோன்மனியாகிய சத்தி வந்து, ஒலிக்கின்ற வளையணிந்த தனது கைகள் என் கழுத்திற் பொருந்தும்படிக் கட்டிக்கொண்டு, விளங்குகின்ற ஒளியை உடைய தம்பலத்தை என் வாயில் உமிழ்ந்து உடனே 'யான் சிறிது விழித்தபொழுது, ஐயா உறங்கியே காலத்தைக் கழிக்காதே' என்று சொல்லி, உறக்கம் வாராதிருத்தற்கு வழியும் செய்தாள்.*

***குறிப்புரை :*** *'கழுத்தாரப் புல்லியது, உலக உணர்வை மாற்றி அருட் சத்தியாய்ப் பதிந்தமை' எனவும், 'தம்பலத்தை வாயில் உமிழ்ந்தது, உணர்வின்கண் விழிப்பை உண்டாக்கியது' எனவும் 'உபாயத்தைச் செய்தது யோக முயற்சியை உண்டாக்கியது' எனவும் ஒட்டணி வகையால் உணர்ந்துகொள்க.*

*"கறங்கு வளைக் கை" என்றதும் விழிப்பைத் தரும் செயலை மேற்கொண்ட ஆற்றலையேயாம். 'யோகத்திற் செலுத்தும் சத்தி நிபாத நிலையை இங்ஙனம் நயம்படக் கூறுதல் சித்தர் மரபு' என்பது இதனாற் பெறுதும், பெறவே, இம்மரபுணராது, வாம மார்க்கத்தார் இதற்குச் சிற்றின்பப் பொருளே கொண்டு, குழியை வழியாக மயங்கி வீழ்வர் என்பது விளங்குவதாம்.*

*1091. **தெளிவுரை :-** எல்லாவற்றுக்கும் வழியைத் தருகின்ற ஒப்பற்றவள் ஆகிய சத்தி எனது மனத்தில் உண்டாகின்ற தீங்குகளை யெல்லாம் அறவே போக்கி, அவ்விடத்தில் அன்புவிளையச் செய்து, நல்லாள் ஆகிய குண்டலியை விளங்கச் செய்கின்ற சுழுமுனை நாடியினுள்ளே நாய் போல அலையும் எனது மனத்தை ஒடுங்கப் பண்ணி 'இனி நீ எதற்கும் அஞ்சவேண்டா' என்று என் அச்சத்தை நீக்கியருளினாள்.*

***குறிப்புரை :*** *சுவா - நாய். துயிலுணர்ந்தாளாயின் எல்லா நலன்களையும் தருதல் பற்றிக் குண்டலியை 'நல்லாள்' என்றார்.*

**1092.** **அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை**
**செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை**
**தஞ்சம்என் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்**
**கின்சொல் லளிக்கும் இறைவிஎன் றாரே.** **35**

---

*அவாவுதலைச் செய்து அதனால் தீங்கு விளைக்கின்ற மனத்தை "அவா" என்றார். உபாயம் - இறைவனை அறிந்து அடைதற்குரிய சாதனம். சுழியகம் - சுழுமுனை. அதாவது புருவநடு. உயிர் எல்லாத் தத்துவங்களோடும் இருந்து விழிப்பு நிலையில் ஆட்சி செய்யுமிடம். அவா அடங்க மனம் அடங்கும். மனமடங்க அபாயமில்லை.*

*1092.* ***தெளிவுரை :-*** *அழகிய சொல்லை யுடையவள்; அரிய தவத்தால் எய்தத்தகும் பெண் பிள்ளை; செவ்விய சொற்களை மிடற்றும் மடமொழியாள்; சிறப்புடைய செவ்வொளியில் விளங்குகின்ற சத்தி தனது திருவடியையே தஞ்சமாகக் கருதிப் போற்றுபவர்க்கே அருள்புரியும் இறைவியாவாள்' என்று அறிந்தோர் சொல்லுவர்.*

***குறிப்புரை :*** *முதல் இரண்டு அடிகள் சத்தியின் இயல்புகளை விரித்தவாறு "அஞ்சொல் மொழி, செஞ்சொல் மொழி" என்பவற்றை, "இடைச்சொற் கிளவி, உரிச்சொற்கிளவி" (தொல். சொல். நூற்பா, 5) என்றாற்போலக் கொள்க. சத்தி தவம் செய்தல், ஆட்டுவான் ஆடிக்காட்டுதல் போல்வதாம். செஞ்சொல் - என்றும் செவ்வே நிற்கின்ற (மாறுபடாத) சொல். மடப்பம் - இளமை; இது பெண்மையியல்பு. சீர் - அழகு. சேயிழை - நன்கமைந்த ஆபரணம். மடமொழி, சேயிழை என்பன அன்மொழித் தொகைகள். இன்சொல், அருளின் அடையாளம். 'போற்றுவார்க்கே' என்னும் பிரிநிலை ஏகாரம், தொகுத்தலாயிற்று. போற்றுவார்க்கு அருளல் கடனாதலின், பிறர்க்கு அருளாமை கோட்டமன்றாம்.*

*"சலமிலன்; சங்கரன்; சார்ந்தவர்கல்லால் நலமிலன்"*
*- தி.4 ப.11 பா.6*

*எனவும்,*

*"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்*
*சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்"*
*- சிவஞானபோதம், சூ.10 அதி.2*

*எனவும் போந்தவற்றையும் காண்க.*

*இதனால், 'சத்தியைப் போற்றுகின்றவரே, அவளது அருளைப் பெறுதற்கு உரியர்' என்பது கூறப்பட்டது.*

**1093.** ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை
காரியல் கோதையள் காரணி நாரணி
ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடும்
கோரிஎன் உள்ளங் குலாவிநின் றாளே. **36**

**1094.** குலாவிய கோலக் குமரிஎன் னுள்ளம்
நிலாவி யிருந்து நெடுநாள் அணைந்தும்
உலாவி யிருந்துணர்ந்துச்சியி னுள்ளே
கலாவி யிருந்த கலைத்தலை யாளே. **37**

---

***1093. தெளிவுரை :-*** *சத்தியானவள், அரிய உயிர்களின் பக்குவங்களையே எப்பொழுதும் நோக்கி நிற்பவளாதலின், இயல்பிலே அவள் ஞானத்தைத் தருகின்ற சாந்த ரூபியாயினும், உயிர்களது அபக்குவ நிலைபற்றிப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் துன்பத்திற்கு ஏதுவான தொழில்களைச் செய்பவளாகின்றாள். எனினும், என் உள்ளத்தில் அவள் சாந்தரூபியாயே விளங்கு கின்றாள்.*

***குறிப்புரை :*** *"அருந்தவம்" என்பது பயனாகிய ஞானத்தின் மேல் நின்றது காரியல் - மேகம் போன்ற கோதை, அதனை அணிந்த கூந்தலை உணர்த்திற்று. இது சாந்த வடிவத்தைக் குறித்தவாறு. காரணி - தோற்றத்திற்குக் காரணமாய் இருப்பவள்; படைப்பவள், "நாரணி" என்றது 'காப்பவள்' என்றவாறு. ஊர்தல் - உலாவுதல். 'ஊர் - உடம்பு' என்பாரும் உளர். "ஊரும் உயிரும் உலகும்" என்றது தாப்பிசையாய் முன்னும் சென்று இயையும். கோரி - கோரம் உடையவள். கோரம் - கொடுமை. உடலையும் உலகத்தையும் காரணமாகிய மாயையினும், உயிரைத் தம்மிடத்தும் ஒடுங்கச் செய்பவள்.*

*இதனால், சத்தி உயிர்களின் பொருட்டு முத்தொழில் செய்தலைக் கூறுமுகத்தால், வயிரவி அச்சத்தியாதல் கூறப்பட்டது.*

***1094. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு என் உள்ளத்திலே மகிழ்ச்சியோடு இருக்கின்ற அந்தச் சத்தி அவ்வாறு அளவற்ற காலங்கள் இருந்தும் நீங்குதல் இல்லாதவளாய், நான் பிராசாத யோகத்திலே உழன்று நின்ற பொழுது அதன் கலைகளில் முடிவானதற்கு இடமாகிய துவாத சாந்தத்தில் பொருந்தி நிற்பவளாயினாள்.*

***குறிப்புரை :*** *'இஃது அவளது கருணையிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். 'உணர்ந்தவழி' என்பது "உணர்ந்து" எனத் திரிந்து நின்றது. பிராசாத கலையில் முடிவாயுள்ளது, உன்மனை. தலை - முடிவில் உள்ளது. இதனால், அவளது பேரருள் கூறப்பட்டது.*

1095. கலைத்தலை நெற்றிஓர் கண்ணுடைக் கண்ணுள்
முலைத்தலை மங்கை முயங்கி யிருக்கும்
சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி
அலைத்தபூங் கொம்பினள் ஆங்கிருந் தாளே. 38



சிவகாமி

***1095. தெளிவுரை :-*** *மேற்கூறிய அச்சத்தி. உன்மனாகலையின் இடமாகிய அந்தத் துவாதசாந்தத்தில் தான் தனியே இராது சிவத்தோடு கூடியே விளங்குவாள். அவ்வாறு விளங்குதல், பிராசாத யோகிகட்கு அவ்யோகத்தால் புருவ நடுவில் அவ்வப்பொழுது புதிது புதிதாகத் தோன்றுகின்ற உணர்வைக் கண்டு கொண்டேயாம்.*

***குறிப்புரை :*** *"முலைத்தலை மங்கை" என்பதை முதலில் வைத்து உரைக்க 'முலையையுடைய தலை மங்கை' என்க. 'முலையை உடைய' என்னும் விதப்பு அபர ஞான பரஞானங்களைத் தருபவளாதலைக் குறித்து நின்றது. தலை மங்கை - தலைவி. 'அக்கலைத் தலைகண்' எனச் சுட்டு வருவித்தும், உருபு விரித்தும் "இருக்கும்" என்பதனோடு முடிக்க. "கலைத்தலை, சிலைத்தலை" என்பவற்றில் தலை, இடம். "கண்" இரண்டனுள், பின்னது 'உயிர்கட்குக் கண் போலச் சிறந்தவன்' எனப் பொருள் தந்து, சிவபிரானைக் குறித்தது. "உள் முயங்கி" என்றது. 'இரண்டறக் கலந்து' என்றவாறு. 'முயங்கியே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று. சிலை - வில், மேரு. அஃது உவமையாகுபெயராய்ப் புருவத்தை உணர்த்திற்று. தெரிவு - அறிவு. அலைதல் - அசைதல். 'அலைந்த' என்பது வலிந்து நின்றது. கொம்பினள் - கொம்பு போல்பவள் - 'அலைத்த பூங்கொம்பினள்' என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது. கலை - பிறை. கலைத்தலை - பிறைமுடி. <u>சிவத்தைக் கண்டு கொண்டு, பூங்கொடியாகிற சத்தி இருந்தாள் என்பது. அதாவது சிவகாமியாக இருந்தார் என்பதாம்.</u>*

1096. இருந்தனள் ஏந்திழை என்னுள்ளம் மேவிப்
பொருந்திரு நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவில் சேர்ந்துடன் ஒன்றி
அருந்தவம் எய்தினள் ஆதியி னாளே. 39

1097. ஆதி அனாதி அகாரணி காரணி
சோதி அசோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
ஒதிஎன் உள்ளத் துடன்இயைந் தாளே. 40

---

*இதனால், சத்தி துவாதசந்தத்தில் விளங்கும் முறை கூறப்பட்டது.*

***1096. தெளிவுரை :-*** *என் இருதயத்தில் இருப்பவளாகிய அந்தச் சத்தி, மேற்கூறியவாறு சிவனுடன் துவாதசாந்தத்தில் விளங்குதல், பிராசாத யோகத்தைப் பற்றி இருதயத்தினின்று எழுந்து கண்டத் தானத்தை அடைந்து, அதன்பின்னர் அங்கு நின்றும் துவாதசாந்தத்தில் சென்றேயாம். அந்நிலையும் பழமையானதேயன்றிப் புதியதன்று.*

***குறிப்புரை :*** *இதயத்தானமாம் 'என்னுள்ளம் மேவி இருந்தனளாகிய ஏந்திழை, பொருந்து இருநால் விரல் கடந்து கண்டத்தானத்து புக்கனளாய்ப் புல்லியபின் தாணுவில் சேர்ந்து உடன்ஒன்றி, ஆதியின் நாளே அருந்தவம் எய்தினள்' என முடிவு செய்க. தவம் எய்துதல், ஞானத்தக் கொடுத்தலில் குறிக்கோளாய் இருத்தல். 'அந்நிலை யோகத்தால் புலனாவதன்றிப் புதிதாக உளதாவதன்று' என்பார், "ஆதியின் நாளே" என்றார். ஆதிசத்தி ஒன்றே உலகினைச் செயற்படுத்தும்போது குண்டலினியாகவும், செயலுறுதியானபோது சிவத்தோடு ஒன்றியும் இருக்கும். புல்லி - பூவிதழ். அதனையொத்த சத்தி.*

***1097. தெளிவுரை :-*** *என் உள்ளத்தில் இருந்துகொண்டு எனக்கு எல்லாவற்றையும் அறிவித்துக்கொண்டு என்னோடு உடனாய் இயைந்திருக்கின்ற சத்தி, ஆதியாதல் முதலிய பல பெருமைகளை உடையவள்.*

***குறிப்புரை :*** *ஆதி - தானே எல்லாவற்றிற்கும் முதல்வி. அனாதி - தனக்கு ஒரு முதற்பொருள் இல்லாதவள். காரணி - தானே எல்லாவற்றுக்கும் காரணமாய் இருப்பவள். அகாரணி - தனக்கு ஒரு காரணம் இல்லாதவள். சோதி - ஒளியாய் இருப்பவள். அசோதி - இருளாயும் இருப்பவள். சோதி, 'அசோதி' என்பன முறையே*

**1098.** இயைந்தனள் ஏந்திழை என்னுள்ளம் மேவி
நயந்தனள் அங்கே <u>நமசிவ</u> என்னும்
பயன்தனை ஒரும் பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றுப் பிதற்றறுத் தாளே. **41**

---

*அறிவையும், அறியாமையையும் உணர்த்தி நின்றன. அறியாமையைச் செய்வது மலமே எனினும், அதன் சத்தியைத் தூண்டி அதனைத் தொழிற்படச்செய்தல் பற்றிச் சத்தி, இருளாயும் இருக்கின்றாள்.*

*"சுகபரம்" என்பதை, 'பரசுகம்' என முன்பின்னாக வைத்து, 'மேலான இன்பம்' என உரைக்க. 'மேலான இன்பத்தை (சிவானந்தத்தை)த் தரும் சுந்தரி' என்க. 'சுந்தரி' என்பது இயற்பெயரளவாய் நின்றது. 'சமாதியில் மனோன்மனி மாது' எனக் கூட்டி, 'சமாதி நிலையில் மனோன்மனி என்னும் சத்தியாய் விளங்குபவள்' என்க. சமாதி இங்கு மேற்கூறிய துவாதசாந்தத்தில் உணர்வை நிறுத்தி ஒன்றச்செய்தல். மங்கலி - என்றும் நன்மையே உடையவள்.*

*இதனால் "கலைத்தலை இருக்கும்" என மேற்கூறிய அவளது பெருமைகள் பலவும் விரித்துக் கூறப்பட்டன. எப்போது என் உள்ளத்துடன் இயைந்து அருள்வாள் என்றவாறு.*

*1098. தெளிவுரை :- சத்தி எனது உள்ளத்தில் பொருந்தியதனோடு அதனை விரும்பியும் இருக்கின்றாள். **<u>அவள், நான் அஞ்செழுத்தை ஓதி உணரும் பொழுது அவ்விடத்தைப் பற்றியிருக்கின்றாள். அதனை ஓதாத பொழுது நீங்கிவிடுகின்றாள்.</u>** ஆயினும், பிற மந்திரங்களையும் பயனில்லாத சொற்களைப் பேசுதலையும் என்னிடத்தினின்றும் நீக்கி விட்டாள். சத்திநிபாதம் வந்தவுடன் உயிராகிய என்னை மறந்தேன். அவள் அருள்வழிநின்று நமசிவ என்று உபதேசித்தாள். அங்ஙனமே நின்று நான் பிறவியறுத்தேன்.*

*குறிப்புரை :* "நயந்தனள் மேவி" என்பதனை 'நயந்து மேவினள்' என மாற்றி யுரைக்க. அஞ்செழுத்தில் யகாரம் தொகுத்தலாயிற்று. பதம் - காலம். பற்றும் - பற்றுவாள். 'பதத்தில் அங்கே பற்றும்' எனக் கூட்டுக. மற்று, வினை மாற்றின்கண் வந்தது. பிதற்றுதலுக்குச் செயப்படு பொருள் ஆற்றலால் வந்தது.

*இதனால், 'சத்தியது விளக்கம் உள்ளத்தில் இடையறாது நிற்றற்குத் திருவைந்தெழுத்தை மானதமாக ஓதுதலை ஒழியாது செய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**1099.** பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி யருளும் முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணும் கம்பலைச் செவ்வாய்
முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள வாமே. 42

**1100.** உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்
பிள்ளைத் தடம்உள்ளே பேசப் பிறந்தது
வள்ளற் றிருவின் வயிற்றினுள் மாமாயைக்
கள்ள ஒளியின் கருத்தாங்குங் கன்னியே. 43

---

*__1099. தெளிவுரை :-__ ஞானத்தைக் கொடுத்துப் பின் அது வழியாக முத்தியைத் தருகின்ற முதல்வியாகிய சத்தியது கயல்போலும் மூன்று கண்களும், அறைகூவி அருள்செய்கின்ற சிவந்த வாயும், முகத்திலே உள்ளதாகிய திருவருட் பார்வையும் அடியார்களுக்குக் கண் முன்னாகவே நிற்பனவாயிருக்க, அவைகளை எண்ணித் துதியாமல் அறிவில்லாத மக்கள் எதைஎதையோ பிதற்றிவிட்டுப் போய் விடுகின்றார்கள்; அவர்தம் அறியாமை இருந்தவாறு என்!*

*__குறிப்புரை :__ முயற்று, 'முயற்றி' என நின்றது. 'முயற்சி' என்பதே பொருள் - முயற்சி, இங்கு ஞானச் செய்திகள். அது மேற்கூறிய அஞ்செழுத்தோதலைச் சிறப்பாகக் குறித்தது. 'அதுவழியாக முத்தியைத் தருபவள்' என்பதனால். முன்னே அம்முயற்சியைத் தருதல் பெறப்பட்டது. கயலாகிய உவமை இனம் பற்றி நெற்றிக் கண்ணிற்கும் சொல்லப்பட்டது. முயற்றி - முயற்சி. கம்பலை - ஒலி.*

*இதனால், திருவைந்தெழுத்தை ஓதுபவர்க்குச் சத்தி நேரே எளிவந்தருளுதல் கூறப்பட்டது. இதனுள் உயிரெதுகையும், மூன்றா மெழுத்தெதுகையும் வந்தன.*

*__1100. தெளிவுரை :-__ பரசிவத்தினது சத்தியாகிய பராசத்தியது வயிற்றில் உள்ள சுத்த மாயையின் தோன்றி மறையும் ஒளியாகிய கருவினுள் நிற்பவளாகிய ஆதி சத்தி, பிள்ளையாய் பிறந்து தவழும் இடமும் அகத்து உள்ளதாகவே சொல்லும்படி அங்குப் பிறந்தது, 'சித்தம், புத்தி, மனம்' என்னும் மூன்றனிடத்துமாம்.*

*__குறிப்புரை :__ மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி, இரண்டாம் அடியை முதலடியின் முன் வைத்து உரைக்க. சித்தம் முதலிய மூன்றினையும் நாயனார் உள்ளம் முதலிய மூன்றாக அருளினமை காண்க. ஆதி சத்தி உயிர்கட்குப் புலனாதல் வாக்கு அல்லது மொழி*

**1101.** கன்னியும் கன்னி அழிந்திலள் காதலி
துன்னிஅங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி
பன்னிய நன்னூற் பகவரும் அங்குளர்
என்னேஇம் மாயை இருளது தானே. **44**

---

*வடிவிலேயாதலானும், சுத்தமாயையின் காரியமாகிய வாக்குகள் அசுத்த மாயையின் காரியங்கள்போல மயக்கத்தைச் செய்யாது அறிவைத் தருவதேயாயினும் அவ்வறிவும் வினைக்கீடாக நிகழ்வதே யாகலானும் ஆதிசத்தியை "மாமாயைக் கள்ள ஒளியின் கருத்தாகும் கன்னி" என்றார். மாமாயைக்கு ஆதிசத்தி ஆதி வியாபகமேயாக. அனாதி வியாபகம் பராசத்தியே யாதல் பற்றி அதனைப் பராசத்தியின் வயிற்றில் உள்ள கருவாகக் கூறினார். ஆதிசக்தி பராசக்தியின் கூறாதலை. "வள்ளல் திருவின் வயிற்றினுள் கருத்து" என்பதனால் விளக்கினார். கருத்து - கருவினுள் இருப்பது. இருப்பது - இருப்பதாகிய பொருள். 'வயிறு, கரு, கருவினுள் இருப்பது' என்பன உருவகங்கள் தடம் - வழி; இங்கு இயங்கும் இடத்தைக் குறித்தது. வாக்கு வடிவில் பொருள்கள் தோன்றும் பொழுது மனத்தில் பொதுவாயும், புத்தியில் சிறப்பாயும், சித்தத்தில் பல்காலும் எண்ணி உணரும் உணர்வாயும் தோன்றுமாதலின், ஆதி சத்தியும் உயிர்கட்கு அவ்வாறே புலனாம் என்பார். 'பிறந்தது உள்ளம் முதலிய மூன்றிடத்திலும்' என்றார். ''பிறந்தது'' என்பது தொழிற்பெயர். ஆதிசத்தி தோன்றும் முறையை இங்ஙனம் விளக்கியது திருவைந்தெழுத்து உணர்வின் வழியே அவள் விளங்குதலை வலியுறுத்தற் பொருட்டு.*

*இதனால், மேலது இனிது விளங்க வலியுறுத்தப்பட்டது.*

*1101. தெளிவுரை :- பராசத்தியின் வயிற்றினின்றும் பிறந்த ஆதி சத்தியாகிய பெண் தனது கன்னித்தன்மை அழியாமலே ஒருவனுக்கு மனைவியாய்ப் பொருந்தி ஐவர் மக்களைப் பெற்றாள். அவர்கள்பால் நல்ல நூல்களைக் கேட்டுணர்ந்த அறிவரும் பலர் உளர், இவ்வியப்பு தான் என்னே!*

*குறிப்புரை : 'கன்னியும் அழிந்திலள்' எனச் சிறப்பும்மையை மாற்றியுரைக்க. <u>தன்னித்தன்மை அழியாமையாவது, படைத்தலைக் காரணத்தால் செய்து திரிபு எய்தாது, சங்கற்ப மாத்திரையாற் செய்து, என்றும் ஒருபெற்றியளாய் இருத்தலாம்</u>. <u>அகில சராசரங்களை ஈன்றும் பான்மொழிக்கன்னியாகும். பவன் பிரமசாரியாகும்.</u>*

**1102.** இருளது சத்தி வெளியதெம் அண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்
தெருளது சிந்தையைத் தெய்வம்என் றெண்ணில்
அருளது செய்யும்எம் ஆதிப் பிரானே. **45**

---

*'காதலியாய்த் துன்னி' என ஆக்கம் வருவித்துக்கொள்க. துன்னப்பட்டவனாகிய ஒருவன் ஆதி சிவனாதல் வெளிப்படை. ஐவராவார், 'சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் என்போர். இவர் யாவரும் சுத்த தத்துவத்தில் உள்ளோர். மொழி - நூல்; என்றது ஆகமங்களையும், அவற்றிற் சொல்லப்பட்ட மந்திரங்களையும். "பன்னிய" என்னும் பெயரெச்சம் "பகவர்" என்னும் கோடற்பொருட் பெயர் கொண்டது. ஆகமங்களைப் பிரணவர் முதலியோர் சதாசிவ மூர்த்தியிடத்துக் கேட்டமை முதல் தந்திரத்துள் 'ஆகமச்சிறப்பு' என்னும் அதிகாரத்துள் விளக்கப்பட்டது. மந்திரத்தைச் செலுத்தி நிற்போர் மந்திரமகேசுரர், இவர்களும் மகேசுரரைச் சூழ்ந்திருப்பவர். ஆகவே, "அங்கு" என்றது சதாசிவ புவனத்தையும், மகேசுர புவனத்தையும் ஆயிற்று. அறிதற்கரிய பொருளாய் வியப்பைத் தருதல், பற்றியே இதனை "மாயை" என்றும், "இருள்" என்றும் கூறினார்.*

*இதனால், ஆதிசத்தி தனது சங்கற்பத்தானே சதாசிவர் முதலிய முதல்வர்களைப் படைப்பவளாதல் கூறப்பட்டது.*

***1102. தெளிவுரை :-** சிவம் வெளிப்படாது நிற்க நிகழும் செயல்களெல்லாம் ஆதிசத்தியுடையன. அவற்றின் பயனாகப் பின்னர்ச் சிவம் வெளிப்படுவதாகும். அவ்வெளிப்பாட்டினைப் பெற்ற புண்ணியர்கள் இம்மையிலும் பொருளாகத் தெளிவது சிவானந்தம் ஒன்றையே. அத்தகைய தெளிவைப் பெற்ற உள்ளமே சிவனுக்கு இருப்பிடம் என்று அறிந்தால், சிவன் முன்னின்று அருள்செய்வாள்.*

***குறிப்புரை :** சிவமும் சத்தியும் இருளும் ஒளியும் போல்வர் என்பது உணர்த்துதல் நுதலிற்று. இருள் சத்தி, ஒளி சிவம்: புண்ணியர்க்குப் பொருளாவது சிவத்தோடு கலந்திருப்பதாகிய சிவபோகத்துள் விளைவது இன்பம். இங்ஙனமாகத் தெய்வம் என்றெண்ணித் தெளிந்த சிந்தையை எம் ஆதிப்பிரானாகிய சிவம் இடமாகக் கொண்டு அருள் செய்யும் என்றவாறு.*

*ஜடசக்தியாய் மாயையைத் தொழிற்படுத்தும் அம்மைநிறம் இருளாதலின் 'இருளது சத்தி' என்றது. புண்ணியர் பொருளது போகத்துள் இன்பம் எனக் கூட்டி, சிவபுண்ணியமுடையார்க்குப்*

**1103.** ஆதி அனாதியும் ஆய பராசத்தி
பாதி பராபரை மேலுறை பைந்தொடி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
ஓதுமென் உள்ளத் துடன்முகிழ்த் தாளே. **46**

**1104.** ஓதிய வண்ணம் கலையின் உயர்கலை
ஆதிஇல் வேதமே யாம்என் றறிகிலர்
சாதியும் பேதமும் தத்துவ மாய்நிற்பள்
ஆதிஎன் றோதினள் ஆவின் கிழத்தியே. **47**

---

*பொருளாவது சிவபோகத்துள் விளையும் இன்பமே எனப் பொருள் கொள்க.*

*தெளிந்த மனமே சிவனுக்கு இருப்பிடமாதலின் தெருளது சிந்தையைத் தெய்வம் என்றெண்ணி என்றது. தெய்வம் தெருளது சிந்தையை (இடம்) என்று எண்ணி ஆதிப்பிரான் அருள்செய்யும் எனக்கூட்டுக.*

*இதனால், மேற்கூறிய படைத்தல் முதலிய செயல்களின் பயன் கூறப்பட்டது.*

***1103. தெளிவுரை :-** உலகத்தைத் தோற்றுவிக்க நினைப்பவளும், அத்தோற்றத்திற்கு முன்னே உள்ளவளும், சிவத்தில் செம்பாதியாய் நிற்பவளும் ஆகிய பராசத்தி, எல்லாப் பொருளிலும் நிறைந்து, அவற்றிற்கு அப்பாலும் உள்ளவளாய்ப் பின்பு சமாதியில் மேற் கூறியவாறு மனோன்மனியாயும், நன்மையையே உடையவளாயும் உள்ள அவளைத் துதிக்கின்ற எனது உள்ளத்தில் விரையத் தோன்றினாள்.*

***குறிப்புரை :** சமாதி - பொறிபுலன்களைத் தன்னகத்து அடக்கியிருத்தல். அதுபோல எல்லாவற்றையும் தனதருள் வியாபகத்து அடக்கியிருப்பவள் என்பதாம். "பராபரை" என்பது எல்லாப் பொருளிலும் உள்ள வளாதலைக் குறித்தது. இதுமுதலாக, ''மங்கலி'' என்பது காறும் வருவனவற்றில் 'ஆய்' என்பது வருவித்துக்கொள்க.*

*இதனால், சத்தி, 'பரை, ஆதி, அருள்வல்லி' என்னும் மூன்று நிலைகளை உடையவளாதல் கூறப்பட்டது.*

***1104. தெளிவுரை :-** 'பிறப்புக்கள் பலவும், பலவேறு வகைப்பட்ட ஏனைப் பொருள்களும், அவற்றிற்கு முதலாகிய தத்துவங் களுமாய் ஆதி சத்தி ஒருத்தியே நிற்பாள்' என்று ஆவுருவாய் நிற்கும் பெருமாட்டி எனக்கு அறிவித்தாள். எல்லா நூல்களிலும் மேம்பட்டதும், தனக்கு ஒரு முதல்நூல் இன்றித் தானே முதல்*

1105. ஆவின் கிழத்திநல் ஆவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடும்
தேவின் கிழத்தி திருவாம் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. **48**

---

*நூலாய் நிற்பதுமாகிய வேதம் சொல்லிய முறையும் இதுவே என்பதைப் பலர் அறிந்திலர்.*

***குறிப்புரை :*** *மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி, 'வேதம் ஓதிய வண்ணமேயாம் என்று அறிகிலர்' என முடிக்க. வேதப் பொருளின் சிறப்பை உணர்தற்கு, "கலையின் உயர்கலை, ஆதி இல்" என்பவற்றை விதந்து ஓதினார். 'சாதி, பிறப்பு' என்பன ஒருபொருட் சொற்கள். இவை இங்கு உடம்பைக் குறித்தன. "தத்துவம்" என்பதில் எண்ணும்மை தொகுத்தலாயிற்று. "ஆவின் கிழத்தி" என்பதில் இன், அல்வழிக்கண் வந்த சாரியை. நாயனார் எழுந்தருளியிருந்த ஆவடுதுறையில் அம்மை ஆவுருவாய் வந்தமை வெளிப்படை. இத்தொடர்க்கு இதுவே பொருளாதல், வருகின்ற மந்திரத்தாலும் அறியப்படும்.*

*இதனால், 'சத்தி மேற்கூறிய மூன்று நிலைகளில் 'ஆதி' என்னும் நிலை ஒன்றில் நின்றே அனைத்துக் காரியங்களையும் செய்வள் என்பதே வேதம் முடிபாதலை அறிதல் திருவருளானே கூடும்' என்பது கூறப்பட்டது. ஆகவே, பல தெய்வக் கொள்கை, பக்குவம் இல்லாதாரை நோக்கி அமைந்தன என்பதாம்.*

***1105. தெளிவுரை :-*** *ஆவுருவாய் நின்ற பெருமாட்டி திருவாவடு துறையில் பக்குவர்களுக்கு உண்மையை யுணர்த்துபவளும், தனது நன்மைகளை உயர்ந்தோர் பலரும் எடுத்துக் கூறித் துதிக்கின்ற கடவுள் தன்மை உடையவளும், முத்திச் செல்வத்தை உயிர்கள் அடைதற்கு ஏதுவான சிவசத்தியாய் நிற்பவளுமாய் இருந்து, உயிர்களின் சஞ்சித வினையை நீக்குகின்றாள்.*

***குறிப்புரை :*** *"அவளை யடைந்த எனக்கு வினை நீங்காது நிற்குமோ" என்பது கருத்து.*

*தேவின் கிழத்தி - தேவினையுடைய கிழத்தி. கிழத்தி - எப்பொருளையும் தன்னுடையனவாக உடைய தலைவி. 'முத்தியை அளிப்பவன் சிவன் ஒருவனேயாதலின், அவனது சத்தியாய் நின்று முத்தியையளிப்பாள்' என்றவாறு 'சிவமங்கையாய்' என ஆக்கம் வருவிக்க.*

*இதனால், தமக்கு உண்மையை உணர்த்திய சத்தியது பெருமை கூறப்பட்டது.*

1106. வினைகடிந் தார்உள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாம் தத்துவ மாய்நிற்பள்
எனையடி மைக்கொண்ட ஏந்திழை ஈசன்
கணவனைக் காண அனாதியு மாமே. 49

1107. ஆதி அனாதி அகாரணி காரணி
வேதம் தாய்ந்தனள் வேதியர்க் காய் நின்ற
சோதி தனிச்சுடர்ச் சொரூபம தாய்நிற்கும்
பாதி பராபரை பன்னிரண்டாதியே. 50

---

***1106. தெளிவுரை :-*** *என்னை அடிமையாகக் கொண்ட அந்தத் தலைவி, வினை நீங்கியவரது உள்ளத்தில் ஞானமாய் நின்று, தன்னைப் புகலிடமாக அடைந்தவர்க்கெல்லாம் மெய்ப்பொருளாய் (சத்தாகி) நிற்பாள். இனி அவள், சிவனிடத்தில் அவனைத் தலைப்பட்டுணரும் பொழுது அவனோடு இயற்கையாயுள்ள எண் குணங்களாயும் நிற்பாள்.*

***குறிப்புரை :*** *ஆதிசத்தி சிவத்தின் சத்தியாயிருந்து நாதசிவத்தைத் தோற்றுவிக்கும். ஆக நாத சிவத்திற்கு சத்தி தாயாதலின் சிவத்தை நோக்க அவன் அநாதி ஆவான் என்றது, 'மனைவி, தாய், தங்கை, மகளான நிலைகளில் "தாயான நிலை. அன்றியும் அவரோடொப்ப" இவளும் அநாதியாவாள். தத்துவம் - உண்மைப்பொருள்.*

*இதனால், தமக்கு அருள்புரிந்த சத்தி சத்துச் சித்து ஆனந்தமாய் நிற்றல் கூறப்பட்டது.*

***1107. தெளிவுரை :-*** *சத்தியே வேதியர்கள் பொருட்டு வேதத்தை நுட்பமாக ஓதியும், உணர்த்தியும் நின்றாள். ஒளி வடிவினனாகிய சிவனுக்கு அவ்வுருவமும் ஆவாள். பன்னிரு கலையை உடைய பிரணவ ரூபியாகிய குண்டலியாயும் விளங்குவாள்.*

***குறிப்புரை :*** *முதலடியில் உள்ளவை, பாதி, பராபரை இவற்றிற்குப் பொருள் மேலே 1097 ஆம் பாடலில் கூறப்பட்டது. ஆய்தல் - நுணுகி நிற்றல். வேதியர், 'சொல் நயம், ஓசை நயம்' என்பவற்றைச் சிறப்பாக விரும்புபவர் ஆகலின், அவர்கட்கு வேதத்தை அவ்வாறெல்லாம் அருளிச்செய்து, அடியார் கட்கு அருட்டிருமேனியாய் நின்றாள் என்க.*

*இதனால், சத்தி அவரவர்க்கு ஏற்ப அருள்புரிதல் கூறப்பட்டது.*

## 7. பூரண சத்தி

*மேல் இரண்டு அதிகாரங்களிலும் ஓரோர் இயைபு பற்றிச் சத்தியது இயல்பை ஒவ்வொரு பகுதியில் வைத்துக் கூறிய நாயனார், அச்சத்தியினது முழுமுதற் றன்மையை இவ்வதிகாரத்தில் முப்பது மந்திரங்களால் உணர்த்துகின்றார். "பூரணசத்தி" என்பது, பின் முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகையாய்ச் சத்தியது பூரண நிலையை உணர்த்திற்று. இவ்வதிகாரமும் அந்தாதியாய் வருதல் அறியத்தக்கது.*

**1108.** அளந்தேன் அகலிடத் தந்தமும் ஈறும்
அளந்தேன் அகலிடத் தாதிப் பிரானை
அளந்தேன் அகலிடத் தாணொடு பெண்ணும்
அளந்தேன் அவளருள் ஆய்ந்துணர்ந் தேனே. 1

**1109.** உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி
கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே. 2

---

*1108. தெளிவுரை :- சத்தியது அருட் பெருமையை நான் சிந்தித்துத் தெளிந்தேன். அதனானே, உலகத்திற்கு ஆதியும், அந்தமும் ஆன பொருளினையும், உலகத்தார் பலபடக் கூறுகின்ற முதற் கடவுளையும், உலகில் உள்ள உயிர்களின் இயல்பையும் என் அறிவின்கண் அகப்படும்படி நன்கு உணர்ந்தேன்.*

*குறிப்புரை : என்றது, 'சத்தியை விட்டு வேறாய் யாதொரு பொருளும் இல்லை' என்றவாறு, ஈற்றடியை முதலில் வைத்து, அதன் பின், 'அதனானே' என்பது வருவித்துரைக்க. 'முன்னும்' என்னும் எண்ணும்மை தொகுத்தலாயிற்று. அவன் - சிவன், அருள் - சத்தி; என்றது அவளது இயல்பை. "அந்த முன்" என்பதில் சுட்டு, 'அந்தத்தை உணர்தலினும் ஆதியை உணர்தல் அரிது' என்பதை விளக்கி நின்றது.*

*இதனால், சத்தியை முற்ற உணர்தலே முற்றறிவாதல் கூறப்பட்டது.*

**1110.** **கும்பக் களிறைந்தும் கோலொடு பாகனும்**
**வம்பில் திகழும் மணிமுடி வள்ளலும்**
**இன்பக் கலவி இனிதுறை தையலும்**
**இன்பக் கலவியுள் இன்பமுற் றாரே.** **3**

---

*1109. **தெளிவுரை :-** பல ஊழிகளையும் ஆக்குபவளாகிய சத்தியை உணர்தலே 'பேரறிவு' எனப்படும் முற்றுணர்வாகும். இதனை உணராதவர் சிவனையும் உணராதவரே. தன்னை அடைகின்ற புண்ணியம் உடையவர்களைத் தனது அருள்வடிவாகச் செய்கின்ற சத்தி, அங்ஙனம் பலரைப் புண்ணியராகச் செய்தற்கு ஆக்கியுள்ள வழி பிராணனைக் கும்பிப்பதே. சிவன் தனித்து இருக்கின் பாதியேயாம். பரையோடு கூடின் பூரணமாகும்.*

***குறிப்புரை :*** *"உணர்ந்திலர் ஈசனை" என்றது. சிவனைத் தனித்து நிற்பவனாகக் கருதுவோரை நோக்கி யாதலின் அதனை, "பூரணம்" என்பதன் பின்னர்க் கூட்டியுரைக்க. "கொண்டு" என்பதை, "கொள்ள" எனத் திரிக்க. "உணர்ந்திலர் ஈசனை, ஊழி செய் சத்திபுணர்ந்தது பூரணம்" என்றது மேலதனை வலியுறுத்தியவாறு.*

*இதனால், சத்தியைப் பெறுதற்குரிய வழி கூறப்பட்டது.*

*1110. **தெளிவுரை :-** மத்தகத்தை யுடைய களிற்றியானைகளாகிய ஐந்து புலன்களும், அவற்றை மனமாகிய கோலால் செலுத்துகின்ற பாகனாகிய உயிரும், அவ்யானைகட்கும், பாகனுக்கு தலைவனும், அரசனாகிய சிவனும், அச்சிவனோடு இன்பக் கலவி செய்த இனிதே உறையும் அரசியாகிய சத்தியும் இனிதாகிய கூட்டத்தில் இன்ப முற்றிருக்கின்றனர்; வேறுபாடற்று எல்லாம் ஒன்றாய் பரிபூரணத் தன்மை எய்தினர் என்பதாம்.*

***குறிப்புரை :*** *என்றது, 'மாயா காரியமாகிய கருவி கரணங்களுள், அவற்றை கொண்டு செயலில் ஈடுபடுகின்ற ஆன்மாவும், சிவனது சத்தியும் ஒருங்குகூடி நிற்றலாலே உலகியல் நடைபெறுகின்றது' என்றவாறு. இங்ஙனங் கூறினும், சத்தியது இன்றியமையாமையே இங்குக் கருதப்பட்டது என்க. ஐம்புலன்களே உலகியலாம். ஐம்புல அவாவையே 'யானை' என்றல் மரபாயினும், அவ் அவாவினோடு காரண காரியத் தொடர்ச்சிகளை யுடையனவாதல் பற்றி இங்கு அப்புலன்களையே "களிறு" என்றார். வம்பு - வாசனை, அஃது அதனையுடைய மாலையை உணர்த்திற்று. "இன்பக் கலவி" இரண்டில் முன்னது காமக் கூட்டம்; பின்னது இனிய நட்பு, நட்டாரை, "கலந்தார்" என்றல் வழக்காதலை.*

**1111.** **இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்**
**அன்பிற் புகவல்ல னாம் எங்கள் அப்பனும்**
**துன்பக் குழம்பில் துயருறும் பாசத்துள்**
**என்பிற் பராசத்தி என்னம்மை தானே.** **4**

---

*"கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட,*
*விலங்கிற்கும் விள்ள லரிது" - நாலடி, 76*

*என்பது முதலியவற்றால அறிக. ஈற்றடியை, 'அன்பிற் கலவியுளா யொழிந்தாரே' என ஓதுதல் பாடமாகாமை, அந்தாதிக்கு ஒவ்வாமையான் அறிக. இதனுள் இனவெதுகை வந்தது.*

*இதனால், மெய்ந்நெறியே யன்றி உலகியலும் சத்தியின்றி அமையாமை கூறப்பட்டது. இந்நிலையில் சத்தி, 'திரோதாயி' எனப்படுவாள் என்பது பலவிடத்தும் கூறப்பட்டது.*

*1111. **தெளிவுரை :-** எங்கள் தந்தையாகிய சிவன் ஆணும், பெண்ணுமாய் உயிர்களைக் காமக் கூட்டத்தில் செலுத்தி, அதுகாரணமாக எழுகின்ற அன்பினையே வாயிலாகக்கொண்டு அவ்வுயிர்களின் உள்ளத்தில் புகுந்து நலம்செய்யும் தன்மையை உடையவன். என் தாயாகிய சத்தி, உயிர்கள் துன்ப மயமாகிய கருப்பைக் குழம்பில் அகப்பட்டுத் துன்புறுகின்ற அவ்வுடம்பில் தானே அவற்றின் சுழுமுனை நாடியிற் பொருந்தி நலம் புரிகின்றவளாவள். <u>அம்மை துன்பக் காலத்துக் காப்பாள்; அப்பன் இன்பக் காலத்து எழும் அன்பு வாயிலாகக் காப்பான் என்பதாம்.</u>*

*குறிப்புரை : "பாசம்" என்றது, இங்கு உடம்பினை, என்பு முதுகந்தண்டு, அஃது அதன்கண் உள்ள சுழுமுனை நாடியைக் குறித்தது. அப்பனுக்குக் கூறிய புகல் வன்மை, அம்மைக்கும் "என்பில்" என்பதன்பின் வந்தது இயைந்தது. என்பின் - <u>சுழுமுனைநாடி செல்லுகின்ற என்பாகிய முதுகு எலும்பு. இதனை வீணாதண்டம் என்பது யோகநூல் மரபு.</u>*

*இதனால், சத்தி பெத்த நிலையிலும் முதற்றொட்டு உயிர்களைப் புரந்து வருதல் கூறப்பட்டது.*

*1112. **தெளிவுரை :-** உடல்வழிப்பட்டு, 'என் தாய் என் தந்தை' எனக் கூறி உலகியலில் மயங்குகின்ற மயக்கத்தை விடுத்து நினைத்தவழி, உண்மைத் தாயாய் ஊழிக் காலத்தும் அழியாத உயிர்த் தலைவன் அவ்விடத்தே உளனாவன். இனி, 'அத் தலைவனாவான் யாவன்' எனின், முதலிலே திரோதான சத்தியாய்ப் பொருந்தி,*

1112. என் அம்மைஎன் அப்பன் என்னும் செருக்கற்று
உன் அம்மை ஊழித் தலைவன் அங்குளன்
மன் அம்மை யாகி மருவி உரைசெய்யும்
பின் அம்மை யாய் நின்ற பேர்நந்தி தானே. 5

1113. தார்மேல் உறைகின் தண்மலர் நான்முகன்
பார்மேல் இருப்ப தொருநூறு தானுள
பூமேல் உறைகின்ற போதகி வந்தனள்
நாமேல் உறைகின்ற நாயகி ஆணையே. 6

---

*உண்மையை மறைத்து நின்று, பின் அருட் சத்தியாகிய உண்மையை விளக்குகின்ற சிவனேயாம்.*

***குறிப்புரை :*** *உம்மை, சிறப்பு, உரை செய்தல் - உபதேசித்தல், உண்மை ஞானத்தை விளக்குதல். "உரை செய்யும்" எனவும் "பின்" எனவும் பின்னர் வருகின்றமையால் முன்னர் அவற்றின் மறுதலைகள் கொள்ளப்பட்டன. "பின் உரைசெய்யும் அம்மையாய் நின்ற நந்தி" என இயைக்க. "பேர் நந்தி" என்பது அடையடுத்த சொல்லாகுபெயர். **சிவனே சத்தியாதலன்றி வேறின்மை இங்குத் தோன்றும்படி இவ்வாறு ஓதினார்.***

***இதனால், திரோதான சத்தி அருட் சத்திகளும், ஆதி சிவன், அநாதிசிவன் இவர்களுமே உலகிற்கு உண்மைத் தாயும் தந்தையும் ஆதல் கூறப்பட்டது.*** *"அம்மையப்பரே உலகுக்கம்மையப்பர்" என்பது திருக்களிற்றுப்படியார் (நூல் தொடக்கம்).*

***1113. தெளிவுரை :-*** *அன்னையின் உதவியை அறிந்து பயன் கொள்க என்று அறிவுறுத்தல் நுதலிற்று. தண்டின்மேல் தங்கிய தண்ணிய மலராகிய தாமரையில் வீற்றிருக்கிறவனாகிய பிரமன் படைப்பாகிய பூமியின்மேல் நீங்கள் வாழ்வது ஒரு நூற்றாண்டுகள் தாம் உள்ளன. வாகீசுவரியின் ஆணையால் வெண்டாமரையில் விளங்கும் கலைவாணி எழுந்தருளினள், அறிந்து பயன் கொள்க என்றவாறு.*

*நீங்கள் வாழும் நாள் நூற்றாண்டுகள்; அதற்குள், வாகீஸ்வரி ஆணையால் வந்த கலைத்தேவியைப் பணிந்து பயன் கொள்ளுங்கள் என்பதாம். நான்முகன் பார் என்றதும் தோன்றின யாவும் அழியுந் தன்மையன ஆதலின் நான்முகன் படைப்பாகிய பூமியிருப்பதே நிலையன்று; ஆகவே அவ்வுடலில் உங்கள் வாழ்வும் அப்படியே என்பர் 'நான்முகன் பார்மேல் இருப்பது ஒருநூறு' என்றது.*

**1114.** ஆணைய மாய்வருந் தாதுள் இருந்தவர்
மாணைய மாய மனத்தை ஒருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை அறிந்தபின்
தாணைய மாய தனாதனன் தானே. 7

---

நாமேல் உறைகின்ற நாயகி - வாகீஸ்வரி, அவள் ஆணையாலே கலைமகள் கலைத் தெய்வமாகிய ஆன்மாக்களுக்கு அறிவை ஊட்டுகின்றாள் என்பது உணர்த்தியவாறு. போதகம் - ஞானம்; ஈண்டு ஞானவொளியை உணர்த்தியது. வந்தனள் என்றது குறிப்பெச்சம். அறிந்து பயன் கொள்க என்பது எஞ்சி நின்றது. படிக்கும் மாணவனைப் பார்த்து ஆசிரியர் வந்தாரெனின் பயன் கொள்க என்பது எஞ்சி நின்றதுபோல.

*1114. தெளிவுரை :- திரோதான சத்தியின் வசமாய் வருந்தாது பற்றற்றுத் திருவருளில் இருப்பவர். அதன் மேலும், எப்பொழுதும் பெரிய ஐயத்தையே கொண்டு அலைவதாகிய மனத்தை அவ்வாறு அலையாமல் ஒருவழிப்படுத்தி எல்லாம் அற்ற இடத்தில் விளங்குவ தாகிய பரம் பொருளை உணர்வார்களாயின், அப்பொருளாகிய சிவன் அப்பொழுது தனது அருட்சத்தியாகிய இயற்கை ஆசனத்தில் விளங்கி நின்று அருள் புரிவான்.*

*குறிப்புரை : ஆணையம் - உண்மை, உள் ஆணையமாய் வருந்தாது இருந்தவர்கள் எனக்கூட்டி மனம் உண்மையாய் வருந்தாமல் இருந்த மெய்யடியார்கள் எனப் பொருள் கொள்க.*

*உள் - மனம். ஆணையமாதலாவது நாடகத்தால் உன்னடியார் போல நடிக்காமல் உண்மையாக என்றவாறு. வருந்தாமையாவது, வருத்தம் விளைவது அகப்பற்று புறப்பற்றுக்களால்; அவை அறவே, வருந்த வேண்டாமையிற் கூறியது. இருந்தவர் - சலனமின்றிச் சித்திர தீபம்போல இருந்த மெய்யடியார்.*

*மாண் ஐ மாய மனத்தை - மாட்சியோடு சந்தேகமும் பொருந்திய மனத்தை. மாட்சிமை - செருக்கு - ஐயம் - இதுவோ அதுவோ என உறுதி பிறவாது தடுமாறுதல், இவ்விரண்டும் மனத்தின் தன்மை. ஆதலால் மனம் இங்ஙனம் அலையாது ஒருக்கி.*

*பாண் நையமாய பரத்தை; பாண் - இசை; என்றது பரநாதத்தை. நையமாய - நுணுகிய. நைதல் - உள்ளதன் நுணுக்கம். ஆகவே நாத வடிவானதும், நுணுகியதுமான பரசிவத்தை என்க. அறிந்தபின் - அவனையன்றித் தலைவனில்லை என்றும், யோக்கியவஸ்து என்றும் அறிந்தபின்.*

**1115.** தானே எழுந்தஇத் தத்துவ நாயகி
வானோர் எழுந்து மதியை விளக்கினள்
தேனோர் எழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே. **8**

---

*தான் தாள் நயமானதன் ஆதனம் - ஆன்மாவாகிய தான் அப்பரம்பொருளின் திருவடிக்கு இதமூட்டக்கூடிய தனக்கு உரிமையான இருக்கையாம் என்பது அதாவது அங்ஙனம் அறிபவனே இறைவன். அநவரதம் எழுந்தருளியிருக்கக்கூடிய இருக்கையாக விளங்குவன் என்பதாம்.*

***1115. தெளிவுரை :-*** *உயிர்களின் முயற்சியாலன்றித்தானே விளங்கி நின்றவளாகிய அருட்சத்தி, இன்ப மழையைப் பொழிகின்ற மேகமாய் நின்று, ஞானத்தை விளங்கச்செய்தாள். இனி, இனிமையைத் தருவதாகிய தேன்போல விளங்கிய அந்த ஞான ஒளியுடனே கூத்தப் பெருமான் செய்கின்ற ஆனந்த நடனத்தைக் கண்டு இன்புற வேண்டுவதுதான் உங்கட்குக் கடமை.*

***குறிப்புரை :*** *சத்தி தாண்டவம் புரியுமிடத்தை அறிக எனல் நுதலிற்று. கருணை மிகுதியால் தானே தோன்றிய தத்துவ நாயகியாகிய சத்தி துவாதசாந்தப் பெருவெளியை நேரேநோக்கி மேலெழுந்து மதி மண்டலமாகிய சகஸ்ராரத்தை விளக்கினள். தேன் ஒழுங்கு போல நேராக எழுந்து பிரகாசிக்கின்ற, தீப ஒளியுடன் பராசத்தி நடனம் செய்யும் மன்றமாகிய புருவநடுவை அறியுங்கள் என்றவாறு.*

*வான் - ஆகாயம். ஆகாய மண்டலமாகிய பிரமரந்திரமும் அதற்குமேல் பன்னிரண்டு அங்குலமும். குண்டலினி மூலத்தினின்று நடுநாடியின் வழியாக மேலெழுந்து மதிமண்டலம் வரையில் செல்லுதலைக் கூறியதாம்.*

*தேன் நேர் - தேனொழுக்குக்கு ஒப்பாக அசையாமல். தீப ஒளி அங்ஙனம் எழுவது என்க. புருவ மத்தியாகிய கனகமன்றுள் தீப ஒளி போலச் சிவம் நடனம் புரிகிறது. அங்கே சத்தியும் நடனமிடுவள். அதனை விளக்குவது 'மான் நடமுடை மன்று' என்பது.*

***1116. தெளிவுரை :-*** *அருள்வழி நிற்கும் அறிவேயன்றி, மாயா கருவிகளின் வழி நிற்கும் அறிவும்தான் ஐம்புலன்களை நுகர்கின்ற பொழுது அறிவே வடிவான அருட் சத்தியோடு கூடியிருக்கப்*

**1116.** அறிவான மாயையும் ஐம்புலக் கூட்டத்
தறிவான மங்கை அருளது சேரின்
பிறியா அறிவறி வாருளம் பேணும்
நெறியாய சித்தம் நினைந்திருந் தாளே. **9**

**1117.** இரவும் பகலும் இலாத இடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
அரவஞ்செய் யாமல் அவளுடன் தூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனும் ஆமே. **10**

---

*பெறுமாயினன், உயிர்க்குயிராய் உள் சிவத்தையே நினைக்கின்ற வருடைய உள்ளத்தையே விரும்பியிருக்கும் தனது முறைமையை அவர்கள் இடத்தும் அருட்சத்தி கொண்டிருப்பாள்.*

*குறிப்புரை : அஃதாவது, 'அவர்கள் உள்ளத்திலும் விரும்பியிருந்து. அவர்கள் செயலெல்லாம் தன் செயலாகச் செய்வள்' என்பதாம். 'மாயையேயான அறிவு' எனற்பாலதனை, "அறிவான மாயை" என ஓதினார். உம்மை, இறந்தது தழுவிய எச்சம் கூட்டம் - கூடி நுகர்தல். "கூட்டத்துச் சேரின்" என இயையும். "சித்தம்" என்பது அதன்கண் கொள்ளப்படும் பொருளை உணர்த்திற்று. "சேரின்" என்பதன்பின், 'அவள்' என்பது வருவிக்க.*

*இதனால், அருட்சத்தி ஞானிகட்கு உலகியலால் பழுது உண்டாகாதவாறு காத்தல் கூறப்பட்டது. இந்நிலையே, "பெற்ற சிற்றின்பமே பேரின்பமாம்" (திருவுந்தியார் - 33) நிலை என்க.*

*1117.* **தெளிவுரை :-** *'இரவு, பகல்' என்னும் வேறுபாடுகள் இல்லாத ஓர் அதிசய இடத்திலே சென்று அங்கே உள்ளவளாகிய அருட் சத்தியையே நினைந்து, பிறிதொன்றும் செய்யாமல் அவளது அருளுடனே கூடித் தன்னை மறந்திருப்பவன், என்றும் இளையவளாய் இருக்கும் அவள்தன் மகனாய் விளங்குவான்.*

**குறிப்புரை :** *நினைப்பும் மறப்பும் அல்லது ஞானமும், அஞ்ஞானமும் ஆக மாறிமாறி நிகழும் மாயா உணர்வுகளை, 'இரவு, பகல்' எனக் குறித்தல் மரபு. அவை அற்ற இடம் என்றும் ஒரு பெற்றியாய அருளுணர்வு. மகளிரது கூந்தலில் குராமலர் முடிக்கப்படுதலை ஒரு சிறப்பாகக் கூறும் இலக்கிய மரபு பற்றி, "குரவம் செய்கின்ற குழலி" என்றார். குரவம் - விளையாட்டு என்றும் கொள்ளலாம். நாடி - தியானித்து. குழவி - பாலாம்பிகை. அரவம் செய்யாமை, மௌனமாய் இருத்தல்; என்றது செயலற்றிருத்தலை,*

**1118.** பாலனு மாகும் பராசத்தி தன்னொடு
மேலணு காவிந்து நாதங்கள் விட்டிட
மூலம தாம்எனும் முத்திக்கு நேர்படச்
சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே. **11**

---

*பருவம் செய்தல், 'பாலன், காளை, தருணன், முதியன்' என்னும் நிலைகளை அடைதல், 'அவை இல்லாமை' என்றது. என்றும் ஒரு பெற்றியனாய் இருத்தல், எனவே, உலகியலால் வேறுபட்டு வருந்தாமை பெறப்பட்டது.*

*இதனால், அருட் சத்தியால் பாதுகாக்கப்பட்டவர்களது பெருமை கூறப்பட்டது.*

***1118. தெளிவுரை :-*** *'முத்திக்கு மூலம்' என்றும், 'எல்லாவற்றிற்கும் மேலான பொருள்' என்றும் சொல்லப்படுகின்ற அருட்சத்தி, சிவ புண்ணிய மிகுதியால் தனக்குக் கிடைக்க அவளோடு கூடி நின்றவன், அதன் பயனாக மாயா காரியங்கள் பலவும் தன்னை அணுகமாட்டாது நீங்க, இதுகாறும் மாயையின் மகனாய் நின்ற நிலைநீங்கி, அவ்வருட் சத்தியின் மகனாகின்ற பேற்றைப் பெற்று விளங்குவான்.*

***குறிப்புரை :*** *உம்மைகள், சிறப்பு "பராசத்தி" என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது, "நேர்பட" என்பதை ஈற்றடியின் பின் வைத்து, "முத்திக்கு மூலமதாம் எனும்............... தற்பரத்தாள் நேர்பட, பராசத்தி தன்னொடு கூடி மேலணுகா........... விட்டிடப் பாலனும் ஆகும்" எனக் கூட்டி உரைக்க. மாயையாகிற விந்து நாதங்களைக் கடக்க, சத்தி சிவமாம் பேற்றையும் அருளுவள் என்பதாம்.*

*இதனால், அருட் சத்தியைச் சார்ந்தவழி மாயை அணுக மாட்டாமை கூறி, அவளை அடைந்தவர் துன்புறாதிருத்தற்குக் காரணம் கூறப்பட்டது.*

***1119. தெளிவுரை :-*** *'முத்திக்கு மூலமாய் உயிர்களிடத்து நிற்பாள்' என மேற்கூறப்பட்ட அந்த அருட் சத்தியே முன்பு, உயிர்களை உய்விக்க விரும்பும் சிவனுடனே அந்த விருப்ப ஆற்றலாயும், பின், உயிர்களை உய்விக்கும் வழிகளை அறிகின்ற அறிவாற்றலாயும் நிற்பாள். (அப்பொழுதெல்லாம் சிவன் விரும்பியும், அறிந்தும் நிற்பதன்றிச் செயலில் ஈடுபடுதல் இல்லை). பின்பு, அவள் நல்லவளாக அறியப்படுகின்ற கிரியா சத்தியாய் நின்ற பொழுதே, சிவன் அம் மூன்று சத்திகளோடும் கூடிநின்று எல்லாச் செயலையும் செய்கின்றவனாவான்.*

**1119.** நின்ற பராசத்தி நீள்பரன் றன்னொடு
நின்றறி ஞானமும் இச்சையு மாய்நிற்கும்
நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்றன் அவற்றுள் மருவிநின் றானே. 12

---

***குறிப்புரை :*** *நீள் பரன் - தன்னிலையினின்றும் உயிர்களை உய்விக்கும் நிலைக்குச் செல்லும் சிவன். இங்ஙனம் செல்லும் நிலையே 'ஆதி சிவன்' என்னும் நிலையாகும். எனவே, இந் நிலையில் அவனது சத்தியும் 'ஆதி சத்தி' எனப்படுவாள் என்பது விளங்கும். 'திரோதான சத்தி, திரோதானகரி, திரோதாயி' என்னும் பெயர்களால் குறிக்கப்படுபவளும் இந்த ஆதி சத்தியே. இவளே, 'இச்சை, ஞானம், கிரியை' என முதற்கண் மூன்றாய் நின்று, பின் பற்பல கரணங்கள் பற்றிப் பல்வேறு வகையாய், அளவிறந்து நிற்பாள். ஆதிக்கு முன் உள்ள நிலை அநாதி, அந்நிலையில் சிவனும், சத்தியும் முறையே 'பரசிவன்' என்றும் 'பராசத்தி' என்றும் சொல்லப்படுவர்.*

*மன்றன் - மன்றில் (சபையில்) நிற்பவன் என்றது. 'ஐந்தொழில் செய்து நிற்பவன்' என்றதாம். செயலே உயிர்களால் அறியப்படுதலின், அதனையே "நன்றறி கிரியா சத்தி" என்றார். 'நன்றாக, கிரியா சத்தியாய், மன்றனாய்' என்னும் ஆக்கச் சொற்கள் தொகுத்தலாயின. "மன்றனாய் அவற்றுள் மருவிடும்" என்றாராயினும், 'அவற்றுள் மருவி மன்ற னாயிடும்' என்பதே கருத்தாதல் அறிக.*

*இதனால், அருட்சத்தியே முதற்கண் ஆதிசத்தியாய் இறைவனது செயல்கள் எல்லாவற்றிற்கும் நீங்காத் துணையாய் நிற்றல் கூறப்பட்டது.*

***1120. தெளிவுரை :-*** *சத்தியும் சிவனும் மலரும், மணமும் போலக் குண குணித்தன்மையால் இயைந்து, பொருள் ஒன்றேயாய் நிற்கும் உண்மையைச் சிலர் சிறிதும் உணர்வதில்லை. (அதனால், இருவரையும் வேறு வேறுள்ளவர்களாகக் கருதி, அவர்களிடையே தார தம்மியம் கற்பித்து வாதிடுவர் என்றவாறு) சிவசத்திகள் பற்றிய இவ்வுண்மையை ஒத்துணர்ந்து அவர்களிடத்தில் உணர்வு செல்ல நிற்கும் பொழுதுதான் சிவன் அவ்வுணர்வை அருட்சத்திக்கு ஏற்புடையதாகச் செய்து, அச்சத்தியோடு தானும் அதன்கண் விளங்கிநிற்பான்.*

***குறிப்புரை :*** *மரு - மணம். மருஒத்த மங்கை - பூவண்ணம் பூவின் மணம் போலச் சிவமும் சத்தியும் கலந்திருப்பர். "மருவொத்த" என்றதனால் 'மலரொத்த' என்பது கொள்ளப்பட்டது. உரு - பொருள்.*

1120. மருவொத்த மங்கையும் தானும் உடனே
உருவொத்து நின்றமை ஒன்றும் உணரார்
கருவொத்து நின்று கலக்கின்ற போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே. 13

1121. சிந்தையி னுள்ளே திரியும் சிவசத்தி
விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
அந்தமும் ஆதியும் ஆம்வண்ணத் தாளே. 14

---

*உருஒத்து நிற்றல் - பொருள் ஒன்றேயாய் நிற்றல். கரு - அடிநிலை உண்மை. 'கருவை ஒத்து (உடம்பட்டு) நின்று' என்க. திரு - அருட்சத்தி. 'திருவுக்கு ஒத்த' என்க.*

*இதனால், 'சத்தியைச் சிவனின் வேறாக உணர்தல், அறியாமையின் காரியமாய், அல்லற்படுத்தும்' என்பது கூறப்பட்டது.*

***1121. தெளிவுரை :-** மேற்கூறிய பண்பமைந்த உள்ளத்திலே நீங்காது விளங்குபவளாகிய அருட் சத்தியே, மேற்கூறியவாறு ஆதி சத்தியாய் நின்று, நாதம், விந்து முதலிய மாயா காரியங்கள் அனைத்தையும் தோற்றுவித்து, அவைகளில் வியாபித்து நிற்பாள்; பிண்டத்தில் சந்திர மண்டலத்தில் விளங்குவாள்; சடைமுடி தரித்துத் தவக் கோலத்துடனும் காணப்படுவாள். சாத்தேய மதத்திலும் நின்று, அவர்களது தகுதிக்கு ஏற்ப அருள் செய்வாள். அகாரம் முதல் க்ஷகாரம் ஈறாக உள்ள மூல எழுத்துக்களாயும் நிற்பாள்.*

***குறிப்புரை :** "விரிந்தனள்" என இறந்த காலத்தாற் கூறியதும், 'விரியும் இயல்பினை உடையவள்' என்றதேயாம். இடைநின்ற ஏகாரம், பிரித்து, "சத்தி" என்பதனோடு கூட்டப்பட்டது. "பூமி" என்பதன்பின் வினைமுதற் பொருண்மை உணர்த்தும் இகர விகுதி புணர்ந்து கெட்டது. சந்திரபூமி - சந்திரமண்டலம். சடாதரன் - சிவன். சடாதரி - சிவசத்தி. சாத்தவி - சத்துவகுணமுடையவள். வண்ணம் - நிறம்; எழுத்துமாம்.*

***1122. தெளிவுரை :-** தோன்றாது அடங்கியிருந்த, ஞான உருவின ளாகிய அருட்சத்தி, அந்நிலைமாறி வெளிப்பட்டுநின்ற நிலையை அறிபவர் உலகருள் ஒருவரும் இல்லை, ஆயினும் புற நோக்கத்தை விடுத்து அக நோக்கத்தைக் கொண்டுள்ளவர்களுக்கு அவள் வெளிப்பட்டு, அவர்களைத் தன் அடியார்களாக ஏற்றுக்கொண்டு*

**1122.** ஆறி யிருந்த அமுத பயோதரி
மாறி யிருந்த வழிஅறி வார்இல்லை
தேறி யிருந்துநல் தீபத் தொளியுடன்
ஊறி யிருந்தனள் உள்ளுடை யார்க்கே. **15**

---

*ஞான ஒளியின்வழிப் பேரின்பப் பெருக்காய்ச் சுரந்து நிற்கின்றாள்.*

***குறிப்புரை :*** *அமுத பயம் - அமிர்தமாய் (ஆணவத்தைப் போக்குகின்ற மருந்தாய்) உள்ள பால். 'அதனைக் கொண்ட தனங்களை யுடையவள்' என்க. பயோதரி - தனங்களை உடையவள். எனவே அருட்சத்தியாதல் தெளிவு. தேறுதல் - தெளிதல்; ஏற்றுக்கொள்ளுதல், 'சத்தி ஆறியிருத்தல், சிவத்தில் அடங்கித் திருவைந்தெழுத்தில் சிகாரத்தின் பின்னிற்றல்' எனவும், 'மாறி இருத்தல். சிகாரம் பின்னாகத் தான் முன்னே நின்று 'வசி' என்பதாக நிற்றல்' எனவும், 'அவ்வாறு மாறிநிற்கும் வழியை அறிவார் இல்லை' எனவும் முதலிரண்டடிகட்குக் குறிப்புப் பொருள் கொள்வாரும் உளர். அக நோக்காவது அருட்கண்.*

*"உடையாள் உன்றன் நடுவிருக்கும்" - சிவ - என சிவம் முற்பட்டுச் சத்தி பின்னாதல் நிலை. உடையாள் நடுவுள் நீ இருத்தி - வசி - எனத் திருவருள் முற்பட்டு நிற்றல்.*

*இதனால், அருட்கண்ணைப் பெறும் பக்குவம் உடையார்க்கே அருட்சத்தி பயன் தருதல் கூறப்பட்டது.*

***1123. தெளிவுரை :-*** *எல்லாப் பொருள்களையும் அடிமையும், உடைமையுமாக உடையவனும், அக்கினியைச் சிறப்பு வடிவமாகக் கொண்டவனும், 'உருத்திர மூர்த்தி' எனப்படுவனும், இடவாகனத்தை ஊர்பவனும் ஆகிய சிவன் இனிது விளங்கியிருக்கும் இடமே, மேற்கூறிய அக நோக்குடையவர் சென்று சேரும் இடமாகும். ஆகவே, அவ்விடத்திற் சென்று சிவனை நேர்படக் கண்டவர்களே உள்ளமாகிய வாயில் வாயிலாகப் பயன்படப் பெற்ற சாதகராவர்.*

***குறிப்புரை :*** *'விடை ஏறியாகிய அவன்' என மாற்றிக் கொள்க. கடை - இடம், போதல், இங்குச் சேர்தலைக் குறித்தது, "போயிடும்" என்பது இங்குச் செயப்பாட்டு வினையாய் "கடை" என்றதற்கு முடிபாயிற்று. அறிவை 'நெஞ்சம், உள்ளம்' முதலியனவாகக் கூறுதல் வழக்கு. தடை - வாயில். அதுவாதல் - வாயிலாகவே நின்று*

1123. உடையவன் அங்கி உருத்திர சோதி
விடையவன் ஏறி விளங்கி யிருக்கும்
கடையவர் போயிடும் கண்டவர் நெஞ்சத்
தடையது வாகிய சாதகர் தாமே. 16

1124. தாமேல் உறைவிடம் ஆறித ழானது
பார்மேல் இதழ்பதி னெட்டிரு நூறுள
பூமேல் உறைகின்ற புண்ணியை வந்தனள்
பார்மேல் உறைகின்ற பைந்தொடி யாளே. 17

---

*பயன்தருதல். 'நெஞ்சத்து அடையதுவாகிய' எனப் பிரித்தல் மோனை நயத்திற்கு ஏலாமையும், "அடை" என்பதற்கு 'அடயோகம்' எனப் பொருளுரைத்தலும், 'அடயோகமே சிவனை விளங்கக் காணுதற்குச் சாதகம்' என்றலும் ஒவ்வாமையும் அறிந்துகொள்க.*

*இதனால், அருட்சத்தி விளக்கத்திற்கு உரியவர், ஆயினோர், பின் சிவப்பேறாகிய முடிந்தபயனைப் பெறுதல் கூறப்பட்டது.*

*1124. தெளிவுரை :- மேற் கூறிய சாதகர் உலகரின் மேம்பட்டுத் தங்குகின்ற இடம் ஆறு. அவற்றுள் ஒவ்வொன்றும் தாமரைகளாய் விளங்கும். அவர்கட்குப் பிருதிவி 'முதலாக மேற்நோக்கி எண்ணுகின்ற தத்துவம் முப்பத்தாறினையும் இதழ்களாகக் கொண்ட மாயையாகிய தாமரையிலும், உண்மையாகவே நூறிதழ் உள்ள தாமரையிலும் உள்ளவனாய்க் காட்சியளிக்கின்ற அச்சத்தி, உலகர் பொருட்டுப் பூமியில் தேவியாயும் விளங்குகின்றாள்.*

*குறிப்புரை : முதற்கண் உள்ள இதழ், சினையாகுபெயர், ஆறு தாமரைகளாகிய இடம் ஆறு ஆதாரங்கள். 'இரு பதினெட்டு' என மாறிக் கூட்டுக. 'இதழ் இருபதினெட்டு உள பூ, நூறுள, பூ' எனத் தனி இயைக்க. வழிபாட்டிற்குச் சிறந்த ஆசனம் தாமரை மலரும். அதனுட் சிறப்புடையது நூறிதழ் உடையதும் ஆதலின், தேவியை அதன்மேற் கண்டு அன்பர்கள் வழிபடுதல் மரபு. "பார்" இரண்டில் முன்னது பிருதிவிதத்துவம்; பின்னது பூவுலகம். பைந்தொடியாளாய் வந்தனள் என மேலே கூட்டுக. இதனுள்ளும் ஆசெதுகை வந்தது. 'புண்ணியம்' என்பது பாடமாயின், அதனை ஆகுபெயராகக் கொள்க. பூரண சத்தி 224 புவனங்களிலும் சுவாமி உறைதலின் தானும் உறைவள் என்றும் கொள்வர்.*

1125. பைந்தொடி யாளும் பரமன் இருந்திடத்
திண்கொடி யாகித் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலால்
பெண்கொடி யாக நடந்த துலகே. 18

---

*இதனால், ஆறாதாரங்களின்வழி அகநோக்கிற் செல்லமாட்டாத உலகர் பொருட்டு அச்சத்தியே திருக்கோயில்களில் உருக்கொண்டு எழுந்தருளியிருத்தல் கூறப்பட்டது.*

***1125. தெளிவுரை :-*** *சிவன் யாதொன்றையும் நினையாது வாளா இருக்கும் பொழுது, சத்தியும் அசைதல் இல்லாத கொடிபோல ஞானமாத்திரையாய் நிற்பாள். சிவன் மேகத்தில் உண்டாகின்ற மின்னலைப்போல உலகை நோக்கித் தெய்வ நாயகனாய் வருதலினால், சத்தி தெய்வநாயகியாய் அவனுக்குத் துணை நிற்கின்றாள். அதனாலே உலகம் நடைபெற்று வருகின்றது.*

***குறிப்புரை :*** *"பரமன் இருந்திட" என்பதை முதற்கண் வைத்து உரைக்க. 'திண்கொடி' இல்பொருள் உவமை. "ஆக" இரண்டில் முன்னது உவம உருபு. "பெண்கொடியாக" என்ற அனுவாதத்தால், பெண்கொடியாதலும் பெறப்பட்டது. 'பரமன் பைந்தொடியாள்' என்பன பின்னும் சென்று இயைந்தன.*

*இதனால், சத்தி சிவங்களது சொரூப தடத்த நிலைகள் கூறப்பட்டன. சொரூபம் அநாதி; பரம், தடத்த ஆதி; அபரம்.*

***1126. தெளிவுரை :-*** *உலகம் நடைபெறுவது ஒன்பது இதழ்த் தாமரை வடிவாகியாம். அதனால், சத்தியின் பேதங்களாய் உள்ள கன்னியரும் வாமை முதலிய எண்மரும், முதல்வியாகிய மனோன்மணியும் என ஒன்பதின்மராயினர். அவர் அனைவரும் இயங்குவது ஆதி சத்தியின் வழியேயாம். அவர்களை உலகத்தார் தொடர்வது மேற்கூறிய தாமரை மலரிலே. இவையெல்லாம், இங்ஙனம் இருத்தல் சிவனைச் சார்ந்தேயாம்.*

***குறிப்புரை :*** *பா.1067 மந்திரத்தின் உரை பார்க்க. இரண்டாம் அடி மூன்றாம் எழுத்தெதுகை.*

*இதனால், சத்தியின் நவசத்தி நிலைகளை வழிபாட்டு முறையிற் காணுமாறு கூறப்பட்டது.*

**1126.** நடந்தது அம்மலர் நாலுடன் அஞ்சாய்
இருந்தனர் கன்னிகள் எட்டுடன் ஒன்றாய்
படர்ந்தது தன்வழிப் பங்கயத் துள்ளே
தொடர்ந்தது உள்வழிச் சோதி அடுத்தே. **19**

**1127.** அடுக்கின்ற தாமரை ஆதி இருப்பிடம்
எடுக்கின்ற தாமரை இல்லகத் துள்ளது
மடுக்கின்ற தாமரை மத்தகத் தேசெல
முடுக்கின்ற தாமரை முற்சது ரத்ததே. **20**

---

*1127.* **தெளிவுரை :-** *பிராணன் எளிதில் சென்று பொருந்துகின்ற ஆஞ்ஞா சக்கரத்தில் உள்ள தாமரையே ஆதிசத்தி உயிர்களுக்கு அறிவிக்கின்ற இடமாகும். ஆன்மாவைக் கீழே செல்லாது தியானம் முதலியவற்றால் மேலெழச் செய்கின்ற ஆசனமாகிய தாமரை மலர் உடலின் நடுவிடத்தில் உள்ளது. (அனாகதம் - இருதயம் என்றவாறு). வழிபடுவோன் சந்திரனது அமுதத்தைப் பருகும் இடமாகிய ஆயிரம் இதழ்த் தாமரை மலர் உள்ள தலையிலே உயிருணர்வு செல்லும்படி ஒட்டுகின்ற தாமரை மலர், மேற்சொல்லிய அனைத்திற்கும் முதலிலே நாற்கோண நிலையினதாய் உள்ளது. (மூலாதாரத்திலே உள்ளது என்பதாம்.)*

**குறிப்புரை :** *'அம்முறையறிந்து சத்தியை அங்கெல்லாம் வழிபடுக' என்பது குறிப்பெச்சம். 'அடுக்கம்' என்பது முதலாகவும், 'முச்சதுரத்து' எனவும் ஓதுவன பாடம் ஆகாமையறிக.*

*இதனால், 'சத்தியை யோக முறையில் வழிபடுதல் மிக்க பயனைத் தரும்' என்பது கூறப்பட்டது.*

*1128.* **தெளிவுரை :-** *முதல் ஆதாரமாகிய மூலத்தினின்றும் எழுகின்ற தீக் கொழுந்து ஏனை ஆதாரங்களிலும் சென்று பரவுதற் பொருட்டும், அங்ஙனம் பரவுதலின் பயனாகிய உள்ளொளியைத் தரிசித்தற் பொருட்டும் சத்தி அந்த ஆதாரங்களாகிய சிறிய இடங்களில் அடங்குபவள் அல்லளாய் இருந்தும் அவைகளில் எழுந்தருளியிருக்கின்றாள்.*

**குறிப்புரை :** *முச்சதுரம் - மூலாதாரம். கைச்சதுரம் - பிரமரந்திரமாகிய சிரம். 'அதற்குக் காரணம் கருணையே' என்பது*

1128. முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்
எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்
கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற
எச்சது ரத்தும் இருந்தனள் தானே. 21

1129. இருந்தனள் தன்முகம் ஆறொடு நாலாய்
பரந்தன வாயு திசைதிசை தோறும்
குவிந்தன முத்தின் முகம்ஒளி நோக்கி
நடந்தது தேறல் அதோமுகம் அம்பே. 22

---

*கருத்து. முன்னது, ''சதுரம்'' எனக் கூறினமையால், ஏனைய ஆதாரங்களையும் பொதுப்பட, ''சதுரம்'' என்றார். மந்திரக் கட்டங்கள் சதுர வடிவாயினும், 'சக்கரம்' என வழங்கப்படுதல் போல, 'சக்கரம்' எனப்படுபவற்றை 'சதுரம்' என்றார். 'கடந்தும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று முதலடி இன எதுகை.*

*இதனால், 'எங்கும் வியாபியாய் உள்ளவளைச் சக்கரங்கட்குள்ளே காணுதல் எவ்வாறு' என்னும் ஐயம் நீக்கப்பட்டது. சத்தி பிண்டத்து எங்கும் வியாபித்தனள்.*

***1129. தெளிவுரை :-** சத்தி பத்துத்திருமுகங்களைக் கொண்டு பத்துத் திசைகளையும் நோக்கியிருக்கின்றாள். அதனாலே, காற்று எங்கும் சென்று அசைதலும், நெருப்பு மேற்நோக்கி எரிதலும், நீர் கீழ்நோக்கிப் பாய்தலும் உடையனவாய்த் தம்தம் செயலைச் செய்கின்றன. எட்டுத்திசைகளிலும், விண்ணும், கீழுமாகத் திசைகள் பத்தாயின.*

***குறிப்புரை :** "திசை திசைதோறும்" என்றமையால் பத்துத் திசையையும் நோக்குதற் பொருட்டுப் பத்துத் திருமுகங்களையுடைய ளாயினமை பெறப்பட்டது. சிறப்புடைய மூன்றனை எடுத்துக்கூறிப் பிறபிற பொருள்களும் சத்தியின் பார்வையாலே செயற்பட்டு நிற்றலைக் கொள்ளவைத்தார். வாயு ஒன்றேயாயினும் திசைநோக்குப் பற்றிப் பலவாக வழங்கப்படுதல் நோக்கிப் பன்மையாகக் கூறினார். "ஒளி" என்றது சுடரை. தீயின் சுடர்கள் பலவாதல் வெளிப்படை. "முத்து" என்றது நகைப்பினை. 'ஒளிமுத்தின் முகம் நோக்கிக் குவிந்தன' எனக் கூட்டுக. குவிதல், மேல்நோக்கி எழுதல். தேறல் - தேன். 'அம்பு தேறல்போல அதோமுகம் நடந்தது' என்க. தேன் போறல், இனிமையை உண்டாக்கல் இதனுள் பின்னிரண்டடிகள் மூன்றாம் எழுத்தெதுகை. அம்பு - நீர்.*

**1130.** **அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மனி**
**கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய**
**செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறும்**
**நம்பனை நோக்கி நவிலுகின் றாளே.** **23**

---

*இதனால், பொருள்தன்மை பலவும் சத்தியது அருள் நோக்காலே நிலைபெறுதல் கூறப்பட்டது.*

*1130.* **தெளிவுரை :-** *அம்பை ஒத்த கண்களை உடையவளும், அரிவையும், மனோன்மனியும், கோதையும், மணம் போல்பவளும் ஆன சத்தி, சிவனது சிவந்த பொன் போலும் திருமேனியில் நிறைந்த நறுமணம் கமழும்படி அவனையே நாள்தோறும் பற்றிப் பயில்கின்றாள். இறைவன் பூ. அம்மை மணம்.*

*குறிப்புரை : முன்னிரண்டடிகளின் பொருள் வெளிப்படை, "செறிகமழ்" என்பது. 'செறிந்து கமழ' எனப்பொருள் தந்தது. நவிலுதல் - பயிலுதல் முதலடி உயிரெழுத்தெதுகை. மனோன்மனி - அருவுருவச் சத்தி. அறிவுருவாய அருட்சத்தி. கோதை - மாலை. குலாவிய - விளங்க.*

*இதனால், சத்தி மேற்கூறிய செயல்கள் அனைத்தையும் சிவனிடத்தில் நின்றே செய்தலன்றித் தனித்து நின்று செய்யாமை கூறப்பட்டது.*

*1131.* **தெளிவுரை :-** *நான்கு வேதங்களும் சொல்கின்ற பெருந் தெய்வம் (முதற்கடவுள்) ஆகிய பூரணசத்தி, திக்குகளையே ஆடையாகக் கொண்டு, பாதம் பூமியைக் கடந்தும், முடி வானத்தைக் கடந்தும் இருக்க, 'சூரியன், சந்திரன், அக்கினி' என்னும் முச்சுடர்களே மணிகள் இழைத்த அணிகளாய் அழகுபடுத்த நிற்பாள்.*

*குறிப்புரை : '**உலகம் முழுவதையும் தனக்குத் திருமேனியாகக் கொண்டு விளங்குவாள்' என்றபடி. இதனையே 'விசுவரூபம்' என்பர். விசுவம் - உலகம்**.*

*'நான்மறை நவிலும் பெருந் தெய்வசத்தி' என மாறிக் கூட்டுக. உழை - பக்கம்; திசை. துகில் - உயர்வகைப்புடைவை. புலித்தோலே யல்லது மான்தோல் உடையாகச் சொல்லப்படாமையால், "உழை" என்பதற்கு 'மான்' என உரைத்தல் பொருந்தாமை அறிக. நிலம் பொதி - பூமியை உள்ளடக்கிய. செம்மாந்து - நிமிர்ந்து; கடந்து.*

1131. நவிலும் பெருந்தெய்வம் நான்மறை சத்தி
துகிலுழை யாடை நிலம்பொதி பாதம்
அகிலமும் அண்டம் முழுதும்செம் மாந்து
புகலும்முச் சோதி புனையநிற் பாளே. 24

1132. புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்
வனையவல் லாள்அண்ட கோடிகள் உள்ளே
புனைவல் லாள்புவ னத்தொளி தன்னை
புனையவல் லாளையே போற்றியென் பேனே. 25

---

*"நிலமுதற்கீழ் அண்டம் உள் நிமிர்ந்தது" என்றல் காண்க. முதலடி உயிரெதுகை.*

*இதனால், 'சில பொருள் அளவிலே வியாபகமாகாது. எல்லா உலகத்திற்கும் வியாபகமாகின்ற சத்தியே பூரண சத்தியாம்' என அவளது இயல்பு கூறப்பட்டது.*

***1132. தெளிவுரை :-*** *உலகத் தலைவனாகிய சிவனையும், உயிர்களாகிய எங்களையும் தாங்க வல்லவள்; உலகங்கள் அனைத்தையும் ஆக்க வல்லவள்; அவைகளைத் தனக்குள்ளே அடக்கிக் காக்க வல்லவள்; உலகத்து ஒளிகள் அனைத்தையும் தனது திருமேனியின் ஒளியாகச் செய்ய வல்லவள்; அத்தகைய பேராற்றல் உடையவளாகிய பூரண சத்தியே நான் துதிக்கின்றேன்.*

***குறிப்புரை :*** *முதற்கண் உள்ள புனைதல் - தரித்தல். "இறை" என்பதில் இரண்டனுருபு இறுதிக்கண் தொக்கது. "எங்கள்" என்பதில் இரண்டனுருபு தொகுக்கப்பட்டது. சத்தி இறைவனைத் தாங்குதல் ஆவது, உற்ற துணையாய் இருத்தல். "மண்டலம்" என்பது 'அண்டம்' என்னும் பொருளாதாய் நின்றது. 'அப்புனைய வல்லாளையே' எனச் சுட்டு வருவிக்க. உள் - மனம், உள்ளே புனைதலாவது, தன் சங்கற்ப மாத்திரையானே விதவிதமாகப் படைத்தல்.*

*இதனால், பூரண சத்தியது ஆற்றலின் பெருமை வகுத்துரைத்து, 'சத்தி' எனப்படுவாள் அவளேயாதல் கூறப்பட்டது.*

***1133. தெளிவுரை :-*** *எனது இச்சா ஞானக்கிரியைகளாகிய ஆற்றலில் இயைந்து நின்று அவற்றை இயக்குகின்ற, அரிய தவத்தால் அடையப்படுபவளும், 'சாந்த ரூபம், யமனையும் வெல்லும் வேக ரூபம்' என்னும் இருநிலைகளையும் உடையவளும் ஆகிய அந்த*

**1133.** போற்றிஎன் பேன் புவனாபதி அம்மைஎன்
ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை
சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை
கூற்றந் துரக்கின்ற கோட்பைந் தொடியே. **26**

---

உலகத் தலைவியாம் பூரண சத்தியையே நான் வணங்குதல், வாழ்த்துதல் முதலியவற்றைத் தெரிவிக்கும் சொற்களைச் சொல்லி வழிபடுகின்றேன்.

*குறிப்புரை :* *புவனாபதி அம்மை - உலகத்தோடு இயைந்து நின்று அதனைச் செயற்படுத்துகின்ற சத்தியும், அச்சத்தியோடு கூடி நிற்பவனாகிய 'பதி' என்னும் சிவனும் என்னும் இருவராகவும் அறியப்படுகின்ற அம்மை.* 'சத்தியும் சிவமும் தம்மில் வேறல்லவாகலின், இங்குக் கூறிவருகின்ற பெருமைகளை அவ்விருவரில் எவருக்கு உரியதாகக் கூறினும் குற்றம் இன்று' என்பதை விளக்க. 'அம்மை' என்றாயினும் புவனா அம்மை என்றாயினும் கூறாது புவனாபதி அம்மை'' எனக் கூறினார். 'இங்ஙனமாயினும், அவரவர்க்கு அன்பு செல்லும் வழியாற் கூறுதலே முறை' என்பது பற்றி இந்நூலுள் இத்தன்மைகளைச் சில விடத்துச் சிவனுக்குரியவாகவும், சிலவிடத்துச் சத்திக்குரியவாகவும் கூறப்படுகின்றன' என்பது பெறப்பட்டமை காண்க. 'புவனாபதி அம்மை என்பதன் பொருள் விளங்கினமையின், 'புவனாபதி' என்னும் அளவாகவே பின்னர்க் கூறுமிடத்து, அச்சொற் பொருளும் இதுபற்றி அறிந்துகொள்ளப்படும். அஃதாவது, 'அம்மை என்பது ஆற்றலால் விளங்க வைத்துக் கூறப்படுதல் அறியப்படும்' என்க.

*சீற்றங் கடிதல், சாந்தமாய் இருத்தல், கோள் - கருத்து, கூற்றந் துரக்கின்ற கோள் - பகையை அழிக்கும் கருத்து. ''அம்மை'' முதலியவற்றில் இரண்டனுருபுகள் தொகுத்தலாயின.*

*இதனால், பூரண சத்தி, 'அமைதி சீற்றம்' என்னும் இரு நிலையினும் நின்று நலம் செய்தல் கூறப்பட்டது. வேகநிலை துன்பத்தைப் போக்குவது சாந்த நிலை இன்பத்தை ஆக்குவது.*

*1134. **தெளிவுரை :-** வளையல் அணிந்த கைகளையுடையவளும், இன்பத் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பவளும், அழகிய வடிவத்தை யுடைய 'திரிபுரை' என்னும் தேவியும் ஆகிய சத்தி, ஐயத்திற்குக் காரண மாயுள்ள கீழான முன்னை வினைகள்*

**1134.** தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தர
வடிவார் திரிபுரை யம்மங்கை சங்கைச்
செடியார் வினைகெடச் சேர்வரை என்றென்
அடியார் வினைகெடுத் தாதியு மாமே. **27**

**1135.** மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு
வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. **28**

---

*கெடுதலினால் தன்மை உணர்ந்து வந்து அடைபவர்களை. 'என் அடியார்கள்' என்று சொல்லி ஏற்று, அவர்கட்கு, மேல் வினை வாராமல் காக்கின்ற தலைவியாயும் நிற்பாள்.*

*குறிப்புரை :* சுகோதயம் - இன்பந் தோன்றுமிடம். வரை - மலை; ஈண்டு, இமயம். செடி - தொகுதி (புதர்). 'சுந்தரி' என்பது பாடமாகாமை அறிக. 'சேர்வாரை' என்பது குறுகி நின்றது. 'என் அடியார் என்று வினை கெடுத்து' எனக் கூட்டுக. "ஆதியும் ஆம்" என்னும் உம்மை, இறந்தது தழுவிய எச்சம்.

இதனால், பூரணசத்தியைத் தெளிந்து அடைந்தோர் வினைக்கட்டு நீங்கி வீடுபெறுதல் கூறப்பட்டது.

*1135. தெளிவுரை :-* மென்மைத்தன்மையோடு பொருந்துதலை யுடைய பெண்மகளாகக் காட்சியளிப்பவளும், ஆகாயத்தில் தோன்றும் மின்னலை ஒப்பவளும், பலவாகிய புகழையுடைய தேவியாய் நின்று பல பயன்களைத் தருகின்ற, பசிய கொடி போன்றவளும் ஆகிய சத்தி, கீழ்மையோடு இசைதலையுடைய அகஇருளாகிய பெண்டினை என் மனமாகிய வீட்டினின்றும் ஓட்டிவிட்டுத் தான் வலிமையோடு கூடிய பெண்டாய் அதனுள் குடிபுகுந்தார்.

*குறிப்புரை :* வியோமம் - ஆகாயம். மெல்லிசை - மெல்லிய இனிமையான கீதம். பல் இசை - பலவாகிய புகழ்; என்றது கொடை, காவல், அருளல் முதலிய பலவாற்றான் வரும் புகழ். பயன் தருதல் அவரவர்கள் நிலைக்கேற்ப என அறிக. புல் இசைப்பாவை - புல்லிய

**1136.** தாவித்த அப்பொருள் தான் அவன் எம்மிறை
பாவித் துலகம் படைக்கின்ற காலத்து
மேவிப் பராசத்தி மேலொடு கீழ்தொடர்ந்
தாவிக்கு மப்பொரு ளானது தானே. **29**

---

*கீர்த்தியையே பாவை என உருவகித்தவாறாம். அபகீர்த்தியை அகற்றி நற்புகழ் தருவள் என்பதாம். வல் இசைப்பாவை - யாரானும் எவற்றானும் அகற்றமுடியாத இசையையுடைய பராசத்தி. மனம் புகுந்தாள் - மனத்திடை மன்னிய மன்னாக வலிய வந்து புகுந்து ஆட்கொண்டாள். "இசை" நான்கில் இரண்டாவது, புகழ் ஏனையவை முதனிலைத் தொழிற்பெயர்.*

*இதனால், பூரணசத்தி, மேற்கூறிய வினைகட்குக் காரணமாய் நின்று அக இருளையும் போக்கியருள்கின்ற ஆற்றலுடையளாதல் கூறப்பட்டது.*

***1136. தெளிவுரை :-** சத்தி மேற்கூறியவாறு மனம் புகுந்தபின் அவளால் அங்கு நிறுவப்பட்ட (நிலைப்பிக்கப்பட்ட) அப்பொருள் எம் இறைவனாகிய சிவனேயாகும். எதனால் எனின், அவன் உலகைப் படைக்க நினைக்கும்பொழுது சத்தியும் அதனையே விரும்பி, மாயையின், மேல் கீழ் ஆகிய இரு பகுதிகளையும் சார்ந்து நின்று பல்வேறு வகையாகப் புலனாகின்ற அப்பொருளாய் நிற்கின்ற அச்செயலையே தான் செய்வாள் ஆதலின்.*

***குறிப்புரை :** "தாவித்த அப்பொருள்" என்ற அனுவாதத்தால், தாவித்தலும் பெறப்பட்டது. படவே, சத்தி தான் மனம் புகுந்தபின் சிவனை அங்கு நிலைப்பிக்கச் செய்தலும் ஒருதலையாக நிகழ்தல் அறியப்படும். இதனை, சிவனே முதல்வனாக, சத்தி துணைவியாய் நிற்றலாகிய உண்மை பற்றித் தெளிந்து கொள்ளுதற்குப் பின்மூன்று அடிகளைக் கூறினார். 'அவன்தான்' என மாற்றியுரைக்க. பாவித்துப் படைத்தலாவது, கையால் படைத்து விகாரி ஆகாமல், சங்கற்ப மாத்திரையே படைத்து நிர்விகாரியாய் நிற்றல். ஆவிக்கும் - உயிர்ப்பாகும். ஆவித்தல் - உயிர்த்தல்; புலனாதல். 'ஆனதே செய்தாள்' எனவும், 'ஆதலின்' எனவும் சொல்லெச்சங்கள் வருவித்துக் கொள்க. 'தானது தானே' என்பது பாடமன்று.*

*இதனால், பூரணசத்தி, பின் சிவத்தைத் தருதல் கூறப்பட்டது.*

1137. அதுஇது என்பார் அவனை அறியார்
கதிவர நின்றதோர் காரணம் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை
திதமது உன்னார்கள் தேர்ந்தறி யாரே. 30

---

*1137. **தெளிவுரை :-** 'அதற்குக் காரணம் அதற்கு முன்னுள்ள அந்த ஒன்று; இதற்குக் காரணம் இதற்கு முன்னுள்ள இன்னொன்று' என்று இப்படிக் காரியப்பொருள்கள் பலவற்றிற்கும் பல காரணப் பொருள்களையே முடிந்த காரணப் பொருளாக மயங்கி, அனைத்துக் காரணங்கட்கும் காரணமாய் உள்ள பொருளை உணரமாட்டாதவர் சிவனை அறியுமாறில்லை. அதனால், முத்திக்கு வழியை அவர் அறியாதவரே யாகின்றனர். அவர் அன்னராதல் சத்தியின் இயல்பை முற்பட உணராமை யாலேயாம். ஆதலின், அவர் உண்மைச் சிந்தனையாளர் அல்லர். ஞானம் பெற்றுத் தெளிந்தவர், திருவடிப் பேற்றிற்கு உரிய காரணம் சத்திநிபாதம் என்பதை உணர்வர்.*

***குறிப்புரை :** ஓர் காரணம் - பிறிதுகாரணம் இல்லையாகத் தான் ஒன்றேயாய் உள்ள காரணம். திதம் - நிலைமை; இயல்பு. அது, முன்னே திரோதாயியாய் நின்று பக்குவத்தை வருவித்துப் பின் அருட் சத்தியாய்ப் பதிதல்.*

*இதனால், பூரண சத்தியது இயல்பை உணர்தலின் இன்றியமையாமை கூறப்பட்டது.*

## 8. ஆதார ஆதேயம்

*சத்தியது பூரண நிலையைக் கூறிய நாயனார், அவள், ஆதாரமும், ஆதேயமும் தானேயாய்நின்று அருள்புரிதலை நூறு மந்திரங்களால் பரக்கக் கூறுகின்றார். ஆதாரம் - நிலைக்களம். ஆதேயம் - அதன்கண் நிலைத்து நிற்கும் பொருள். இது, இடமும் அதன்கண் உள்ள பொருளும் எனப் பொருள்படும். ஆதாரம் - ஸ்தானம். ஆதேயம் - அதிதேவதை. ஆதார ஆதேய சம்பத்தத்தாலேயே யோகம் உண்டாகிறது. யோகம் பலவகையாதலின் ஆதாரங்களும் பலவேறு வகைப்படுகின்றன. இந்த ஆதார ஆதேயமே யோகிகளால் யோகம் என்றும், ஞானம் என்றும் சொல்லப்படுகிறது. ஆசன முதலான சாதனங்கள் யோகிகளுக்கு மிக இன்றியமையாதன. அவற்றுள் நாடிசக்கரம் ஆதாரமாயும் அதில் பராசத்தி குண்டலினி முதலான பேதங்களோடு ஆதேயமாயும் விளங்குவதைக் கூறுவதாலும், சிவசத்திகள் தம்முள் ஒன்றுக்கொன்று ஆதார ஆதேயமாக விளங்குவதனைக் கூறுவதாலும் இவ்வதிகாரம் இப்பெயர்த்தாயிற்று. இதன் விரிவை சுப்பிர பேதாகமம் ஆதார ஆதேய விதிப்படலம் 101 சுலோகங்களான் அறிக.*

**1138.** நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
நாலித ழானவை நாற்பத்து நாலுள
பாலித ழானஅப் பங்கய மூலமாய்த்
தானித ழாகித் தரித்திருந் தாளே. **1**

---

*1138. தெளிவுரை :- நான்கு இதழ்களையுடைய தாமரையாகிய மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் சுத்த தத்துவம் ஐந்தும், புருடன் ஒன்றும் தவிர, ஏனைய தத்துவ தாத்துவிகங்கள் தொண்ணூறும் அடங்கிநிற்கின்றன. இடைநான்கு ஆதாரத்தின் தாமரைகளில் நாற்பத்து நான்கு இதழ்கள் உள்ளன. இரண்டிதழ்களை யுடைய அந்த ஆஞ்ஞைத் தாமரைக்கு அடியாயுள்ள ஏனைய ஆதாரத் தாமரைகளாய் நின்று அந்த ஆஞ்ஞையைத் தாங்கியும், அவ் ஆஞ்ஞைத் தாமரையாய் நின்று அதன்கண் விளங்கும் தியானப்பொருளைத் தாங்கியும் அருள் புரிகின்றாள் சத்தி. மூலாதாரம், ஆஞ்ஞைக்கிடையே 96 தத்துவங்களும் விரிந்தன.*

*குறிப்புரை : ஆறு ஆதாரங்களும், அவற்றின் அமைப்புக்களும் அவற்றில் உள்ளனவும் முன்னைத் தந்திரத்தில் விளங்கக்*

**1139.** தரித்திருந் தாள்அவள் தன்னொளி நோக்கி
விரித்திருந் தாள்அவள் வேதப் பொருளை
குறித்திருந் தாள்அவள் கூறிய ஐந்தும்
மறித்திருந் தாள்அவள் மாதுநல் லாளே. **2**

---

*கூறப்பட்டன. "இதழ்" நான்கில் முதலதும், ஈற்றதும் ஆகுபெயர். முதலடியில் ''நாலிதழ்'' என்பதன்பின் 'முதலிய' என்பது எஞ்சி நின்றது. சுத்ததத்துவங்கள் ஏழாந் தானத்தில் நிற்றல் பற்றியும், புருடன் ஆஞ்ஞையைக் கடந்தும் செல்லுதல் பற்றியும் அவை ஒழிந்தன ஆறாதாரங்களில் நிற்கும் என்க. "நாலிதழானவை" என்பதில் "நாலின்கண் இதழானவை" என ஏழன் உருபு விரித்துக்கொள்க. "அவிர்ந்தது" என்பது 'நவின்றது' என இருந்தது போலும். பால் - பகுப்பு. எனவே, இரண்டு என்றதாயிற்று. தரித்தல் - தாங்குதல்; இதற்குச் செயப்படுபொருள் வருவித்துக் கொள்க. உணர்ந்ததாகிய ஆஞ்ஞையின் ஆதார ஆதேயங்களாதல் கூறவே, கீழுள்ளவற்றிற்கும் அவ்வாறாதல் பெறப்பட்டது. மூலாதாரத்திற்கு ஆதாரமாதல் நேரேயாம். 'சத்தி' என்பது முன்னை அதிகாரத்தினின்றும் வந்து இயைந்தது. ஈற்றடி உயிரெதுகை. சுவாதிட்டானம் 6 இதழ்த்தாமரை, மணிபூரகம் 10, அநாகதம் 12, விசுத்தி 16 ஆக 44.*

*இதனால், சத்தி ஆதார பங்கயங்களின் ஆதார ஆதேயமாய் நிற்றல் கூறப்பட்டது.*

*1139. தெளிவுரை :- சத்தி அனைத்துயிர்க்கும் தாயாகலின் அவள் மேற்கூறியவாறு ஆதார பங்கயங்களின் ஆதாரமும், ஆதேயமுமாய் நிற்றல் தனது ஒளியுருவை யோகியர் காணுதல் குறித்தும், கலைஞானத்தை மிகத்தந்தும், ஐம்புல ஆசைகளின் கொடுமையைக் கண்டு அதனைத் தடுத்துக் கொண்டுமாம். பராசத்தி வேத முதலாயும், ஐந்தொழில் காரணியாயும் இருத்தலை இப்பாடல் உணர்த்துகிறது.*

*குறிப்புரை : 'மாதுரு' என்னும் வடசொல் ஈறுதொகுத்தல் பெற்று நின்றது. இதன்பின் 'ஆதலின்' என்பது எஞ்சி நின்றது. 'மாதுரு நல்லா ளாகலின்' என எடுத்துக்கொண்டு உரைக்க. "தன்னொளி நோக்கி" என்பது, 'தன்னொளியை அடியவர் காணுதல் குறித்து' எனப் பொருள் தந்தது. ''கூறிய ஐந்தும்'' என்பது, இடைநிலைத் தீவகமாய் நின்றது பின்னிரண்டடிகள் ஒப்பெதுகை.*

*இதனால், சத்தி ஆதார பங்கயங்களின் ஆதார ஆதேயமாய் நின்று செய்வன இவை என்பது கூறப்பட்டது.*

1140. மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்
பாதிநல் லாளும் பகவனும் ஆனது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. 3

1141. வெள்ளடை யான்இரு மாமிகு மாமலர்க்
கள்ளடை ஆரக் கமழ்குழ லார்மனம்
மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற
பெண்ணொரு பாகன் பிறவிபெண் ணாமே. 4

---

***1140. தெளிவுரை :-*** *சத்தி தனது மணாளனாகிய சிவன் ஒருபோதும் தன்னைவிட்டு நீங்காதிருத்தலினாலே ஒரு பாதியே தானாய், மற்றொரு பாதி அச்சிவனாய் இருக்கின்றாள். (இந்நிலை எக்காலத்தும் வேறுபடுதல் இல்லை என்றபடி) அத்தன்மையை உடைய ஒளி வடிவினளாகிய அவளைத் துணையாக உங்கள் உள்ளத்தில் இருத்த வல்லீராயின், எல்லாத் துன்பமும் நீங்கும்; வெளுக்கப்பட்ட ஆடைபோல் ஆன்மா மும்மலங்களும் நீங்கத் தூயதாய் விளங்கும்.*

***குறிப்புரை :*** *"மாது நல்லாளும்" என்னும் உம்மை சிறப்பு. 'மாது நல்லாளும் ஆனது இருந்திட' என இயையும். சொல்லமைதி இங்ஙன மாயினும், கருத்து நோக்கி மேற்கண்டவாறு உரைக்கப்பட்டது. 'துணையாக' என ஆக்கம் வருவிக்க. வெள்ளாடை என்பது குறுகி நின்றது. இயல்பாகவே கொண்டு, 'உயிர் தூய்மையை அடைதல் உண்டாகும்' என உரைத்தலுமாம். வெள்ளாடையாதற்கு வினைமுதல் வருவிக்க. தரித்தல் - ஆதாரமாகத் தாங்குதல். வெள்ளடை - மறுவற்ற பொருள்; முளையாத வித்து. ஆணவ மலம் வலிகுன்றியமையின் வெள்ளடை யென்றது. "குருகாவூர் வெள்ளடை நீயன்றே" என இறைவற்கும் இப்பெயருண்மையின் சிவமாவாய் என்றதாம்.*

*இதனால், **<u>'சத்தியை, சிவனை ஒரு பாதியில் உடையவளாகவே தியானித்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது</u>**.*

***1141. தெளிவுரை :-*** *கருவி கரணங்கள் சென்று பற்றும் வகையில் வெளி நில்லாதவனும், கரிய வண்டுகள் மொய்க்கின்ற மலர்களின் தேன் பொருந்தி நிரம்புதலால் நறுமணம் கமழ்கின்ற கூந்தலையுடைய மகளிரால் மனம் வருந்துதல் இல்லாதவனும் ஆகிய சிவன், அத்தன்மை யனாயினும், சிலபொழுது தனது கூறேயான ஒரு பெண்ணைத் தன் உடம்பில் ஒரு பாதியில் கொண்டவனாய்க் காணப்படுதலும், சில பொழுது பெண்ணேயாய்க் காணப்படுதலும் உடையன்.*

***குறிப்புரை :*** *வெள்ளடையான - வெள்ளடையாகிய சிவம். வெள்ளடை - வெட்டவெளி. பராகாயம். "மா" இரண்டில் முன்னது வண்டு "கள் அடை" என்பதில் "அடை" என்னும் பகுதி 'அடைந்து' என வினையெச்சப் பொருள் தந்தது. 'குழலாரால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. மள் - மள்கல்; முதனிலைத் தொழிற்பெயர் 'மழுங்குதல்' என்பது பொருள். வெள்ளடையானாகிய மள்ளடையானாயினும்' என்பது சொல் அமைதி "ஆம்" என்பதை, "பாகன்" என்பதனோடும் கூட்டுக. பிறவியே என்னும் ஏகாரம் தொகுத்தலாயிற்று. 'சிவன் உண்மையில் ஆணும் அல்லன்; பெண்ணும் அல்லன்; அதனால், வேடங்கட்டி ஆடுவார் போன்று பொது நிலையில் எவ்வகையாயும் தோன்றுவன்' என்பது ஈற்றடியின் கருத்து. எனவே, சிவனது ஆண் தோற்றம் ஒன்றையே கொண்டு 'அதுவே அவனது உண்மையியல்பு' என வழக்கிடுதலும், பெண் தோற்றம் ஒன்றையே கொண்டு அதுவே அவனது உண்மையியல்பு என வழக்கிடுதலும், மாதொரு கூறாய தோற்றம் ஒன்றையே கொண்டு 'இரண்டும் கூடியுள்ளதே அவனது உண்மையியல்பு' என வழக்கிடுதலும் பேதைமைப் பலவாதல் விளங்கும். இவ்வியல்பு சிவன், சத்தி இருவர்க்கும் உரியதென்க. எனவே, கடவுளது ஆண்தோற்றம் முதலிய மூவகைத் தோற்றங்களுள் எதனைக் காணினும், 'இஃது உயிர்கள் பொருட்டு ஏற்ற பெற்றியாற் கொண்ட பொதுவியல்பாம்' என உணர்தலல்லது, 'சிவன், சத்தி இவர்களது உண்மை யியல்பு என மயங்குதல் பொருந்தாதாயிற்று. இவ்வியல்பினை,*

> *"ஒன்றொடொன் றொவ்வா வேடம்ஒருவனே தரித்துக் கொண்டு*
> *நின்றலால் உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார்"*

*என விளக்கிற்றுச் சிவஞான சித்தியார் (சூ.1.51). இன்னும்,*

> *"எம்பெருமான் இமவான் மகட்குத்*
> *தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன் தமையன்"*
>
> *- தி.8 திருபொற்சுண்ணம், 13*

*எனவும்,*

> *சிவம் சத்தி தன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும்*
> *உவந்திரு வரும் புணர்த்திங் குலகுயி ரெல்லாம் ஈன்றும்*
> *பவன்பிரம சாரி யாகும்; பால்மொழி கன்னி யாகும்;*
> *தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே.*
>
> *- சிவஞானசித்தி. சூ.2.77*

*எனவும் வருவன போல்வன பலவும், இவையெல்லாம் கடவுள் தனது*

*அருள் நாடகத்திற்கொள்ளும் பொதுவியல்பாதலன்றி உண்மையியல் பாகாமையை விளக்க எழுந்தனவேயாம். ஆகவே,*

*"கூத்தினர் தன்மை வேறு கோலம்வே றாகு மாபோல்"*

*- திருவாதவூரடிகள் புரா. - திருப்பெருந்துறைச் சரு.*

*என்ற பெரியவர் ஒருவர் வாக்கின்படி ஆடவர் போலவும், மகளிர் போலவும் வேடங்கட்டியாடுவார், அவ்வேடத்திற்கு ஏற்பவே நடித்து நிற்பினும் அவரது உண்மைத்தன்மை அவ்வேடத்திற்கு வேறாயினாற் போலவே, ஆணாயும், பெண்ணாயும் தோன்றும் கடவுளின் உண்மையியல்பு அவற்றின் வேறேயாம் என்பது இனிது விளங்கும்.*

*"சத்திதான் நாத மாதி தானாகும்; சிவமும் அந்தச்*
*சத்திதான் ஆதி யாகும்; தரும்வடி வான வெல்லாம்*
*சத்தியும் சிவமும் ஆகும்"*

*- சிவஞானசித்தி. சூ. 76*

*என்ற சிவஞான சித்தியையும் அதற்கு மாபாடியம் உடையார் உரைத்த உரையும் இங்கு இனிது நோக்கி உணர்க. இங்ஙனம், உணரமாட்டாது தம்முள் மாறுபட்டு வழக்கிடுவாரை நோக்கியேயன்றோ தாயுமான அடிகள்,*

*"அன்னே அனே எனும் சிலசமயம் நின்னையே;*
*ஐயா ஐயா என்னவே*
*அலறிடும் சிலசமயம்"*

*என முதற்கண் நகையாடியும், பின்னர்*

*"என்னே எனேகருணை விளையாட் டிருந்தவாறு"*

*- எங்கும் நிறைகின்ற பொருள், 2*

*என வியந்தும் கூறியருளினார். ஈற்றடி இனவெதுகை.*

*இதனால், 'சிவம், சத்தி இவர்களிடையே சொல்லப்படும் நாயக நாயகித் தன்மை குணியும், குணமுமாய் நிற்கும். அதனை விளக்கும் அத்துணையதேயல்லது முழுவதுமாகின்ற உண்மையியல்பு அன்று' என்பதும், 'அதனால் அத்தன்மைக்கு ஏற்ப அவர்கள் கொள்ளும் கோலம் அவர்களது பொதுவியல்பேயாம்' என்பதும் குறிப்பு மொழியாற் கூறப்பட்டன. இது பற்றியன்றே ஞானசம்பந்தரும், இறைவனை "ஒருமை பெண்மை யுடையனாக" (தி.1 ப.1 பா.5) முன்னரே கண்டு வைத்திருந்தும், வையைக் கரையில் பாண்டியன்*

**1142.** பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை
பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது
பெண்ணிடை ஆணின் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே. 5

---

*கேட்க அருளிச் செய்த திருப்பாசுரத் திருப்பதிகத்தில்,*

*"எந்தை யாரவர் எவ்வகை யார்கொலே"*

*- தி.3 ப.54 பா.3*

*என அருளிச் செய்தார்! அதனால், இறைவனது உண்மையியல்பு உயிர்களால் 'இன்னதுதான்' என வரையறுத்துணரப் படாததாதல் தெற்றென விளங்கும். இதனை விளக்கும் முகத்தானே **ஆதார ஆதேயங்களாய் நிற்றல் சக்தி, சிவம் இருவர்க்கும் பொதுவேயாதல் உணர்த்தப்பட்டது**.*

***1142. தெளிவுரை :-** ஒரு பெண் மற்றொரு பெண்ணோடு புணர்தலால் பயனின்மையும் அங்ஙனம் புணர்தல் பேதைமைச் செயலாதல் தெளியப்பட்டதாயினும், அச்செயலால் ஆண் ஒன்று பிறந்த பயன் ஓரிடத்தில் காணப்படுகின்றது. (இஃது அதிசயம்) இனி, புணரப்பட்ட அப்பெண்ணிடத்தினின்றும் பிறந்த அந்த ஆணின் உண்மையை உணர்ந்து, யாவரையும் அந்த ஆணினிடத்தே ஈர்த்து வைக்கின்ற அந்தப் பெண்ணைத் துணைவியாக உடைய அந்த ஆணின் பக்கல் அந்தப் பெண் ஈர்த்தவாறே சென்று அடைவதே, 'இஃது இயற்கைக்கு மாறாய் இயலாததொன்றாம்' என்று பேசும் பேச்சு அற்றொழிதற்கு வழியாம்.*

***குறிப்புரை :** முதலில் உள்ள 'பெண்' பராசத்தி. அடுத்த வந்த பெண் ஆதிசத்தி. பராசத்தி ஆதிசத்தியோடு புணர்தலாவது அந்நிலையில் கலந்து நிற்றல். ஆதிசத்தியினின்றும் பிறந்த ஆண் சதாசிவமூர்த்தி. 'இவ்வுண்மையை அறிதல் வேண்டும்' என்றவாறு. 'பேதைமையால்' என உருபு விரிக்க ஈர்க்கின்ற பெண், அனுக்கிரக மூர்த்தியாகிய சதாசிவர் பால் உயிர்களை ஈர்த்துச் சேர்க்கின்ற மனோன்மனிசத்தி, 'ஆணிடைப் பேச்சறும்' என்றது, ஆணிடை அடைந்தால் பேச்சறும் என்றதாம்.*

*இதனால், ''தவந்தரும் ஞானத்தோர்க்கு இத்தன்மைதான் தெரியும்'' என மேற்காட்டியவாறு. சிவம் சத்தியுள்ளும், சத்தி சிவத்துள்ளும் ஒரு பாதியாயும் விளங்குதல் என்ற மேற்கூறிய*

**1143.** **பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை**
**மாச்சற்ற சோதி மனோன்மனி மங்கையாம்**
**காச்சற்ற சோதி கடவு ளுடன்புணர்ந்**
**தாச்சற்றே னுட்புகுந் தாலிக்குந் தானே.** **6**

**1144.** **ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மனி**
**பாலித் துலகில் பரந்துபெண் ணாகும்**
**வேலைத் தலைவியை வேத முதல்வியை**
**பாலித் தொருவன் உகந்துநின் றானே.** **7**

---

***உண்மைகள் எல்லாம் திருவருள் கிடைக்கப்பெற்ற பின்பு இனிது விளங்கும் என்பது நகைச்சுவைபடக் கூறப்பட்டது.***

*1143. **தெளிவுரை :-** சொல்லற்ற இடத்தில் நிற்கும் தலைவனாகிய சிவன் குற்றம் அற்ற ஒளிப்பொருள். துணைவியாகிய சத்தியும் அங்ஙனம் குற்றம் அற்ற ஒளிப்பொருளே. ஆயினும் சத்தியே சிவத்துடன் வந்து குற்றம் அற்ற என்உள்ளத்தில் புகுந்து ஆரவாரிக்கின்றாள்.*

***குறிப்புரை :*** *அஃதாவது, 'சிவமும் சத்தியும் ஒரு பொருளே யாயினும், அப்பொருள் உயிர்களோடு தொடர்புகொள்ளும் நிலையில் 'சத்தி' எனப்படுகின்றது' என்பதாம்.*

*இதனால், 'முதற்பொருள் இரண்டில்லையாயினும், செயலிடத்துச் சத்தியாய் நிற்கும்' என்பதுணர்த்தி, மேல், 'சத்தியே ஆதார ஆதேயமாய் நிற்கின்றாள்' எனக் கூறியதன்கண் ஐயம் அறுக்கப்பட்டது.*

*1144. **தெளிவுரை :-** என் உள்ளத்தில் புகுந்து ஆரவாரிக்கின்ற கன்னிப் பெண்ணாகிய சத்தி பெண் தன்மையை உடையளாய் உலகெங்கும் வேதங்களால் குறிப்பிடப்படும் முதல்வியுமாகிய அவளை வேதங்களும் காணமாட்டாது ஓலமிட்டு நிற்கின்ற சிவன் யாண்டும் பிரியாதே கூடி நிற்கின்றான்.*

***குறிப்புரை :*** *பாலித்து - பாதுகாத்து. அம்மையைப் பாலித்து நிற்பன் சிவன். 'பாலித்துப் பரந்து பெண்ணாகும்' என்பதை, 'பெண்ணாகிப் பரந்து பாலிக்கும்' எனப் பின் முன்னாகவைத்து, விகுதி பிரித்துக் கூட்டிக் கொள்க. ஓலித்தல் - ஓலம் இடுதல். 'ஓலித்த' என்னும் அகரம் தொகுத்தல். வேலை - கடல். அஃது அதனாற் சூழப்பட்ட உலகிற்கு ஆயிற்று. ஈற்றடியைப் பிறவாறு ஓதுவன பாடம்*

**1145.** உகந்துநின் றான்நம்பி ஒண்ணுதற் கண்ணோ
டுகந்துநின் றான்தம் முழைபுக நோக்கி
உகந்துநின் றான்இவ் வுலகங்க ளெல்லாம்
உகந்துநின் றான்அவ டன்றோ டொகுத்தே. **8**

**1146.** குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்
துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி
புத்தகச் சீறடிப் பாவை புணர்வினைத்
தொத்த கருத்தது சொல்லகி லேனே. **9**

---

*ஆகாமை அறிக. கன்னி - அழியாத்தன்மை உடையவள். வேலை - பஞ்சகிருத்தியங்கள்.*

*இதனால், மேற்கூறியவாறு சத்தி சிவனோடு கூடியே நிற்றல் போல, சிவனும் சத்தியோடுகூடியே நிற்றலைக் கூறி, இருமையின் ஒருமை வலியுறுத்தப்பட்டது.*

*"துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்*
*பிரியாதே நிற்கின்ற பெம்மான்"*

*என்றார் திருக்களிற்றுப்படியாரிலும் (பா. 69).*

***1145. தெளிவுரை :-** நம்பியாகிய சிவன் காமனை எரித்த நெற்றிக் கண்ணோடு நின்றே மேற்கூறிய நங்கையாகிய வேத முதல்வியை விரும்பி நின்றான். பின்பு அவளது தோள்களைத் தன் தோளோடு ஒன்றாகும்படிச் சேர்த்து மகிழ்ந்து நின்றான். இவை முறையே அவன் உயிர்களாகிய நம்மிடம் வருதல் குறித்தும் அனைத்து உயிர்களுக்கும் போகத்தைத் தருதல் குறித்துமாம்.*

***குறிப்புரை :** 'இல்லையேல் அவை இயலா' என்பது கருத்து மூன்றாம் அடிக்கு, 'இவ்வுலகங்கள் எல்லாம் போகத்தை எய்த உகந்து நின்றான் ஆதலின்' என உரைக்க.*

*இதனால், 'சிவன் தனது உண்மை நிலையில் அணியனல்ல னாயினும், உயிர்களின் பொருட்டு அணியனாதற்கும், போகியல்ல னாயினும் உயிர்கள் போகத்தை எய்துதற் பொருட்டும் சத்தியோடு மணந்து நிற்பன்' என்பது கூறப்பட்டது.*

***1146. தெளிவுரை :-** சத்தி பெண்ணியல்புகள் பலவும் தோன்ற நின்று சிவனை மணந்ததில் உள்ள கருத்து சொல்லுதற்கரிதாம்.*

***குறிப்புரை :** மருங்கு - இடை. சுணங்கு - தேமல். புத்தகம் - மயிலிறகு. துத்தி - பாம்பின் படப்பொறி. விரிதல் - பரத்தல். 'துத்தி*

**1147.** சொல்லவொண் ணாத சுடர்ப்பொதி மண்டலம்
செல்லவொண்ணாது திகைத்தங் கிருப்பர்கள்
வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி
மல்லவொண் ணாத மனோன்மனி தானே. **10**

**1148.** தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களும்
தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்
தானே வடவரை தண்கடற் கண்ணே. **11**

---

*போல விரிந்த சுணங்கு' எனவும், 'புத்தகம் போலும் சீறடி' எனவும் விரித்துக் கொள்க. தொத்தல் - பற்றுதல் 'தொகுத்த' என்பதன் விகாரமாகக் கொண்டு, 'உள்ளீடான' என்று உரைப்பினும் அமையும். சத்தி சிவங்களது குறிப்பு முழுதும் உயிர்களால் அறிதல் கூடாது என்பதாம். "புணர்வினை" என்பது இரண்டாவதன் விரியாக முன்னர்க் கூறிய பொருளும், வினைத்தொகையாகப் பின்னர்க் கூறிய பொருளும் அமைவனவாம். தொத்த - தொகுத்த என்பதன் திரிபு.*

*இதனால், சிவம் சத்திகளது ஆதார ஆதேயங்களால் நிற்கும் அருட்பெருமை கூறப்பட்டது.*

***1147. தெளிவுரை :-*** *அருள் ஒளி மண்டலம் உயிர்களது சொல்லுக்கு எட்டாதது. அதனால், அங்குச் செல்லமாட்டாது பலரும் திகைத்து நிற்கின்றார்கள். அம்மண்டலமாவாள் பிறரால் கடத்தற்கரிய செயல்களை உடையவளும், வலிந்து பற்றிக் கொள்ளவாராதவளும் ஆகிய சத்தியே.*

***குறிப்புரை :*** *மல்ல - கட்ட. மல் - குறுக்காகக் கட்டும் கட்டு. வெற்றி கொள்ள "அங்கு" என்றது அவரவர் இருக்கும் இடத்தை 'வலிமை' எனப் பொருள்தரும் 'மல்' என்னும் உரிச் சொல்லடியாக "மல்ல" என்னும் செயவெனச்சம் பிறந்தது.*

*இதனால், சத்தி ஒளி மண்டலமாய் நின்று அனைத்திற்கும் ஆதாரமாமாறு கூறப்பட்டது.*

***1148. தெளிவுரை :-*** *அவளே பார்முதல் அனைத்தும் ஆவள் என்பது உணர்த்துதல் நுதலிற்று. அம்மையே பெரியநிலமுதற் பூதங்களைத் தாங்கி ஆகாயமாய் நிற்பவள்; சோமசூரியாக்கினியாக இருப்பவள்; மழையைப் பொழிவிக்கின்ற பெண்ணாக இருப்பவள்; கடற்கண்ணே குறுக்காக விளங்கும் இமயமாக இலங்குபவள் என்றவாறு.*

**1149.** கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணா
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. 12

---

*ஆகாயமே அனைத்துப் பூதங்கட்கும் ஆதாரமாதலின் விண்ணாய் நிற்கும் என்றது. ஒளிப்பொருள்களும், மழையும், மலையும் தானே ஆவள் என்பதாம். வடவரை மேரு; இமயமுமாம்.*

***குறிப்புரை :*** *"தான்" என்றது சத்தியை. தாங்குதல், இடந்தருதல், மழை பொழி தையல், கங்காதேவி. எனவே, கங்கையை உமைக்கு மாற்றாள்போல வைத்துச் சொல்வனவெல்லாம் செய்யுளின்பம் படக்கூறும் கூற்றேயாதல் தெளியப்படும். வடவரை - மேருமலை. தலைமை பற்றி இதனைக் கூறவே பிறமலைகளும் கொள்ளப்படும். "கண்" என்பது, 'இடம்' எனப் பொருள்தரும் பெயர்ச்சொல். எனவே, "கடற்கண்" என்பது இருபெயரொட்டாயிற்று. 'தண்கடலாகுமே' என்பதும் பாடம்.*

*இதனால், சத்தி ஆதாரமாய் நிற்கும் வகைகள் சில கூறப்பட்டன. மழை பொழி தையலாய் நிற்றல் உயிர்கள் அழியாதவாறு நிறுத்தலாம். இதனுள் "தான்" என்றதனைச் சிவத்திற்கு ஆக்கி, சிவ பரத்துவ அதிகாரத்திலும் இம் மந்திரத்தை, "பொன்னாற் புரிந்திட்ட" என்னும் மந்திரத்தின்பின் ஒருமுறை ஓதுவாரும் உளர்.*

***1149. தெளிவுரை :-*** *எவ்விடத்தையும் தனதாக உடைய சத்தியைக் கூடி அவளுடன் எங்கும் வியாபகமாய் நின்ற அறிவர் சிவத்தன்மை பெற்றவர். சீவத் தன்மையாகிய முனைப்பு நீங்கியவர். அதனால் பர வெளியில் நிற்பவராகிய அவரை மிக்க மேன்மை உடையவராக அறிந்து, மண்ணில், வாழ்பவராகிய மனிதரில் வைத்து எண்ணா தொழிதல் வேண்டும். ('விண்ணில் வாழும் கடவுளரில் வைத்து எண்ணல் வேண்டும்' என்றபடி)*

***குறிப்புரை :*** *"கண்" என்பது மேலை மந்திரத்தில் வந்தவாறே வந்தது. இதற்கு, 'விழி - நெற்றிக்கண்' என உரைத்தற்கு ஓர் இயை பின்மை அறிக. இரண்டாம் அடியில் நின்ற ஐகாரம் சாரியை. 'மண்ணுடையாராகிய மனிதர்' என்க. பண் - பண்ணப்படுதல்; செம்மையாக்கப்படுதல். இரண்டாம் அடியை இறுதியில் கூட்டியுரைக்க.*

**1150.** **கண்டெண் டிசையும் கலந்து வருங்கன்னி**
**பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்**
**விண்டெண் டிசையும் விரைமலர் கைக்கொண்டு**
**தொண்டெண் டிசையும் தொழநின்ற கன்னியே.** **13**

---

***இதனால், சத்தியது ஆதாரமாய் நிற்கும் நிலையை உலகில் வைத்து உணர்பவர் ஏகதேச உணர்வு நீங்கி வியாபக உணர்வைப் பெறுதல் கூறப்பட்டது. சத்தியது ஆதார ஆதேயமாம் நிலையை உலகில் வைத்து உணர்தலை, 'பாரயோகம்' என்பர்.***

*1150. **தெளிவுரை :-** எல்லா உலகங்களையும் நினைவு மாத்திரத்தாலே உண்டாக்கி, அவை அனைத்திலும் நிறைந்து நிற்கின்ற சத்தி, அதற்கு முன்னே அவ்வுலகங்களைக் கடந்து நின்ற ஒரு சத்தியாய் இருப்பாள். அதனால், எட்டுத்திக்கில் உள்ளாரும் தாம் தாம் தமக்கு ஏற்ற பெற்றியால் மணம் பொருந்திய மலர்களைக் கையிலே கொண்டு தோத்திரங்களைச் சொல்லித் தொண்டுபட்டு அம்மலர்களைத் தூவித் தொழுகின்ற தேவி அப்பராசத்தியே யாவாள்.*

***குறிப்புரை :*** *'அந்நிலையை அறியாதவர் வேறு வேறு தேவியராகக் கருதிச்செய்யும். வழிபாடுகளையும் ஏற்று அவர்கட்கு ஏற்ற பெற்றியால் அருள் புரிபவளும் அவளன்றி வேறில்லை' என்றபடி.*

> *"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே*
> *மாதொரு பாக னார்தாம் வருவர்"*

***- சிவஞான சித்தியார் சுபக்கம் 114.***

*என்னும் சிவஞான சித்தியை நோக்குக. காணல் - கருத்தாற் படைத்தல், 'எண்திசையும் கண்டு' எனக் கூட்டுக. "நிற்றல்" என்பது இறந்த காலத்தில் நிகழ்காலம். இதன்பின் 'அதனால்' என்பதும், இறுதியில் 'அவளே' என்பதும் எஞ்சி நின்றன. இவ்வாறன்றி, மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, 'தொழநின்ற கன்னி கலந்து வருங் கன்னியாம். அவள், கண்டு பராசத்தியாய் நிற்கும்' என உரைத்தலும் ஆம். அமையும், மூன்றாம் அடியில் "திசை" ஆகுபெயர், ஈற்றடியில், 'எண்டிசையிலும்' என்னும் உருபு விரித்துக் கொள்க. இதனால், சத்தி ஆதார ஆதேயமாய் நிற்றலின் பெருமை கூறப்பட்டது.*

1151. கன்னி யொளியென நின்றஇச் சந்திரன்
மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறம்
சென்னி யிருப்பிடம் சேர்பதி னாறுடன்
பன்னி யிருப்பப் பராசத்தி யாமே. 14

---

*1151. **தெளிவுரை :-** இறைவி அழியாத ஒளி வடிவாய் நிற்கும் இடம் இதுபோலும் பிறைவடிவம் பொருந்தியிருக்கின்ற ஆஞ்ஞைத் தானமாம். அது சிவந்த நிறத்தை உடைய தாமரை மலர் வடிவம் உடையது. அவள் தலையாகிய இருப்பிடத்தில், நிரம்பிய பதினாறு கலைகளையுடைய சந்திரனோடு கூடியிருக்கும் பொழுது பராசத்தியாய் விளங்குவாள்.*

*கன்னி மாளிகை - நித்திய கன்னியாகிய பராசத்தி யெழுந்தருளி யிருக்கும் மாளிகை; என்றது சரீரத்துள்ள மனமாகிய மாளிகையை, ஒளியென நின்ற இச்சந்திரன் மன்னி இருக்கின்ற மாளிகை - ஒளிப்பொருளான சந்திரன் பொருந்திய மாளிகை. பிரமரந்திரத்தை ஒட்டி மதி மண்டலம் இருத்தலானும் அதில் கன்னியாகிய சத்தி உறைதலானும் இங்ஙனம் அருளியது. உடலும் இதயமுமாகிய இவற்றின் நிறம் செம்மையாயிருத்தற் செந்நிறம் என்றது.*

*அந்த மாளிகையிலும் சென்னி இருப்பிடமாம், சென்னி - தலை. மாளிகையிலுறைகிற கன்னி பதினாறு கலைகளுடன் இருப்ப அவள் பராசத்தியாவள் என்பதாம். தலை - சகஸ்திராரம் என்னும் மதிமண்டலம். பன்னி என்ற செய்தெனெச்சத்தைச் செயவெனெச்ச மாக்குக.*

*__குறிப்புரை :__ என்றது, 'சத்தி ஆதாரயோகத்தில் ஒளியுருவாயும், நிராதார யோகத்தில் உருவம் அற்ற அருவப் பொருளாயும் நிற்பாள்' என்றதாம். கன்னி - அழியாமை, "இச்சந்திரன்" என்றது, 'இவ்வாறு கன்னி ஒளியாயுள்ள சந்திரன்' என்றவாறு. இதில் கன்னிமை இளமையைக் குறித்தது. "சந்திரன்" என்றது அவனது வடிவைக் குறித்த ஆகுபெயர். 'சென்னியாகிய இருப்பிடத்தில் இருப்ப' என இயையும். 'இருப்பிடத்தில்' என்னும் சாரியை தொகுத்தலாயிற்று. முன்னர் 'சந்திரன்' என வந்தமையால், "பதினாறு" என்பது அவனது கலைகளைக் குறித்தது. நிரம்பிய சந்திரன் போல்வதாய், 'சந்திர மண்டலம்' எனப்படுவது, நெற்றிக்கு மேலிடத்துள்ள ஆயிர இதழ்த்*

**1152.** பராசத்தி என்றென்று பல்வகை யாலும்
தராசத்தி யான தலைப்பிர மாணி
இராசத்தி யாமள ஆகமத் தாள்ஆங்
குராசத்தி கோலம் பலஉணர்ந் தேனே. **15**

---

*தாமரை மலராகும். "பன்னி" என்பது, 'பத்நி' என்னும் ஆரியச் சொல்லின் சிதைவு இதனையே முதற்கண் கொண்டு உரைக்க. "பராசத்தி" என்பது, 'உருவத்தைக் கடந்தவள்' என்னும் அளவினதாய் நின்றது. பன்ன - தோத்தரிக்க.*

*இதனால், சத்தியது ஆதார ஆதேயமாய் நிற்கும் நிலை உடலில் வைத்து உணர்த்தப்பட்டது.*

*1152. தெளிவுரை :-* 'பராசத்தி' என்றே பல வகையினும் பன்முறை துதிக்கப்பட்டு எல்லாவற்றிற்கும் ஆதார சத்தியாய் நிற்கின்ற, வேதத்தின் வழி அறியப்படுகின்ற அவளே முழுமுதற் சத்தியாம். அவளை யாமள ஆகமம் பலபடக் கூற, அவ்வாறும் பல்கி நின்ற அவளது பல கோலங்களையும் யான் அவளது அருளாலே அறிந்தேன்.

*குறிப்புரை :* "என்று" என்பது, 'எனப்பட்டு' எனப் பொருள் தந்தது. 'பல்வகையானும் பராசத்தி என்றென்று' என மாற்றி உரைக்க. அடுக்கு, பன்மை குறித்தது. தலைப்பிரமாணம் - தலையாய நூல். அது வாயிலாக அறியப்படுபவளை, "தலைப்பிரமாணி" என்றார். 'இராசாத்தி' என்பது குறுகிநின்றது. இராணியை 'இராசாத்தி' என்றல் நாட்டு வழக்கு. யாமள ஆகமம் வாம மார்க்கத்ததாய்ச் சத்தியின் வடிவங்களைப் பலபடக் கூறி, அவற்றிற்குரிய வழிபாடுகளையும் பலபட விதிக்கும். அந்நிலையில் நிற்பாரையும் உய்வித்தல் சத்திக்குக் கடப்பாடாதலின், அவ்வாறு நின்று அவர்கட்கும் அருள்புரிதல் பற்றி, ஆங்கு "உரா சத்திகோலம் பல உணர்ந்தேன்" என்றார். உராவுதல் பரந்து தோன்றல். 'உராவு' என்பது குறைந்து நின்றது, 'உராவு கோலம்' என இயையும், முருகனும் இவ்வாறு தாழ் நிலையில் நின்று செய்வாரது வழிபாட்டினையும் ஏற்று, அவர்க்கு ஏற்றவாறு அரள் புரிதலைத் திருமுருகாற்றுப்படை "சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து" என்பது முதலாகப் பல அடிகளால் உணர்த்துதல் காண்க. 'ஆகமத் தாளாக' என ஆக்கம் விரிக்க.

**1153.** உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி
உணர்ந்துயி ராய்நிற்கும் உன்அதன் ஈசன்
புணர்ந்தொரு காலத்துப் போகமது ஆதி
இணைந்து பரமென் றிசைந்திது தானே. **16**

---

*என்றென்றும் பல்வகையாலும் தராசத்தி - அவ்வப் பொருள்களின் நிலைக்கேற்ப அவைகளை என்றைக்கும் தாங்கிநிற்கும் சத்தி. தராசத்தி - தரிக்கும் சத்தி. தரித்தல் - ஆதாரமாதல். பிரமாணம் - அளவை. தலைப்பிரமாணி - தலையாய அளவை வடிவினள். தலையாய அளவை - பிரத்யட்சம் (காட்சியளவை). உலகங் களனைத்தையுந் தாங்கிக் காட்சிக்குப் புலனாக விளங்குபவள் அன்னை. அஃதாவது பிரத்யட்ச சத்தி என்பதாம்.*

*இரா சத்தி - காளியான நிலையில் நிசாசரியாதலை ஞாபகப் படுத்தியது. 'யாமம் வயிரவர் ஏத்தும்பொழுது' என்பதும் காண்க. யாமள ஆகமம் - சத்தி வழிபாட்டு முறைகளைக் கூறும் ஆகமம். ஆகமத்தாள் - ஆகமத்தின் கண் விளங்குபவள்.*

*குராசத்தி. குரு + ஆ + சத்தி - குருவாகிய சத்தி. சத்தியே ஆசாரியனாக எழுந்தருளி அருள் வழங்குதலிற் கூறியது. கோலம் - வடிவம்.*

*இதனால், சத்தி தன்னை அறிவார் அறிந்த வாற்றான் வழி படும் இடங்களில் எல்லாம் ஆதார ஆதேயங்களாய் நின்று அவரவர்க்குத்தக அருள் செய்தல் கூறப்பட்டது.*

***1153. தெளிவுரை :-** சிவன் தனது சங்கற்ப மாத்திரையானே தோற்றுவித்த ஏழு உலகங்களையும், அவ்வுலகத்தோடே பொருந்து வதாகிய சத்தி, தான் அறிந்து, அவற்றிற்கு உயிராய், அவைகளோடு கலந்து நிற்கும். அங்ஙனம் நிற்கின்ற அச்சத்திக்குச் சத்தனாய நிற்கின்ற இறைவன் அச்சத்தியை மணந்த பொழுதே உயிர்கட்குப் போகம் அமையும். அச்சிவத்தோடு இணைந்து நின்ற இச்சத்தியே உலகிற்குத் தலைமையாவது.*

***குறிப்புரை :** யோகினி சத்தி - கிரியா சத்தி. என்றது, சத்தி படைப்புக் காலத்தில் இறைவனது சங்கற்பரூப ஆதி சத்தியாய்*

1154. இதுவப் பெருந்தகை என்பெரு மானுள்
பொருவக் கலவியுள் போகமு மாகி
மதுவக் குழலி மனோன்மனி மங்கை
அதுவக் கலவியுள் ஆயுழி யோகமே. 17

1155. யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்
யோகநற் சத்தி ஒளிமுகம் தெற்காகும்
யோகநற் சத்தி உதரம் நடுவாகும்
யோகநற் சத்திதாள் உத்தரம் தேரே. 18

---

*நின்று உலகைத் தோற்றுவித்துப் பின் யோகினி சத்தியாய் உலகெங்கும் வியாபித்துப் பின் இறைவனோடு இணைந்து நின்று போக சத்தியாகி உலகிற்குப் போகத்தைத் தந்து, உலகிற்குத் தலைமை பூண்டு நிற்கின்றது' என்றவாறு. முதலடி மூன்றாம் அடிகளில் 'உணர்ந்த, புணர்ந்த' என்னும் பெயரெச்சத்து அகரங்களும் தொகுத்தலாயின. 'இசைந்த' என்பதன் அகரமும் அன்னது. 'யோக சத்தி' எனின் பிறிது பொருள் படுமாகலின் 'யோகினி' என்றார். எனவே, இதனை யாமள தந்திரங் கூறும் யோகினிகளாகக் கொள்ளுதல் பொருந்தாமை அறிக. 'அதனோடு' என உருபு விரிக்க. ஆதி, பரம் இங்குத் தலைமை, 'இதுதானே ஆதி' என மேலே கூட்டி முடிக்க.*

*இதனால், 'சத்தி யோகினி' என நின்று ஆதார ஆதேயங்களாய்ப் போகத்தைப் பயப்பித்தல் கூறப்பட்டது.*

***1154. தெளிவுரை :-** 'போகத்தைத் தருவது' என மேற்கூறப்பட்ட இம்மறைப்புச் சத்தி சிவனுடன் உயிர்கட்கெல்லாம் பொதுவாயுள்ள போகக் கலப்பில் நின்று போகத்தைத் தந்து 'அருட்சத்தி' என்னும் அந்தச் சத்தியாய் அச்சத்திக்கு சிவத்திற்குமே சிறப்பாய் உள்ள அந்த அருட்கலவியுள் நின்றவழி உயிர்கட்கு யோகம் உளதாகும். இது என்பது சத்தியையும், அது என்பது சிவத்தையும் உணர்த்தின. இகரம் - சத்தியட்சரம். அகரம் - சிவாட்சரம். ஆயுழி - ஆராயுமிடத்து.*

***குறிப்புரை :** 'போகமும்' என்னும் உம்மை இழிவு சிறப்பு. அனுக்கிரக மூர்த்திதன் சத்தியின் பெயராகிய 'மனோன்மனி' என்பது, இங்கு 'அருட்சத்தி' எனப் பொருள் தந்தது. அது - அந்நிலை. 'அதுவாய்' என ஆக்கம் வருவிக்க. 'அக்கலவி' என்னும் சுட்டு,*

**1156.** தேர்ந்தெழு மேலாம் சிவனங்கி யோடுற
ஆர்ந்தெழு மாயையும் அந்தம தாய்நிற்கும்
ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிடக்
கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. **19**

---

*அவர்கட்கே உரித்தாகி, சிறப்புணர நின்றது. 'பொதுவக் கலவி, மதுவக் குழல்' என்பவற்றில் அகரம் விரித்தல். ''பொதுக்கலவி'' என்றது, "பொதுக்காவி போலும்படி கலக்கும் கலவி" என்றவாறு. இதனுள் முன்னிரண்டடி அனு வாதம். "ஆயுழி" என்பது முன்னரும் சென்ற இயைந்தது.*

*இதனால், சத்தி ஆதார ஆதேயங்களாய் நின்று உயிர்கட்கு யோகத்தைப் பயக்குமாறு கூறப்பட்டது.*

***1155. தெளிவுரை :-** 'போகசத்தி, யோகசத்தி' என்னும் இரு சத்திகளில் யோக சத்திக்கு வானத்தில் சூரியனும், பூமியில் வேள்வித் தீயும் ஆசனமாகும். அவ்வாசனங்களின்மேல் அவள் தெற்கு நோக்கிய முகத்துடன் உடம்பை நடுவில் வைத்துக் கால்களைப் பாதங்கள் வடக்குநோக்க மடக்கி நீட்டிக்கிடந்த கோலமாய் இருப்பாள். இதனை அறிந்து வழிபடுக.*

***குறிப்புரை :** தெற்கு நோக்குதல், வழிபடுவோர்க்கு அருளுதற் பொருட்டு. கிடத்தல், தாயாகிய தான் தன்னை வழிபடுவோராகிய மகவுகளை யோகத்தில் ஆழ்த்தற்பொருட்டு. யோகம் வேண்டுவோர் இச்சத்தியை இங்ஙனம் சூரிய மண்டிலத்திலும், வேள்வித்தீயிலும் கண்டு வழிபடின் பயன்பெறலாம் என்றமை அறிக. முதலடியில், 'சத்திக்கு' என்னும் உருபு தொகுத்தலாயிற்று.*

*இதனால், சத்தி யோகியர்க்குச் சில ஆதாரங்களில் நின்று பயன் தருமாறு கூறப்பட்டது.*

***1156. தெளிவுரை :-** சத்தி முனைத்தெழ நாதவிந்துக்கள் தோன்றுதலை உணர்த்துதல் நுதலிற்று. எல்லாவற்றினும் மேலாகத் தெளிந்து எழுகின்ற சிவபரம்பொருள் அங்கிபோல்வதாய சத்தி பொருந்த. ஒழுகியெழுகின்ற மாயையும், அதற்கு அந்தமாகிய ஆராய்ந்து எழுகின்ற விந்துநாதங்கள் ஓங்கத் திரண்ட வளையலை அணிந்த பராசத்தி முனைத்தெழுகின்றனள் என்றவாறு.*

**1157.** தானான வாறெட்ட தாம்பரைக் குள்மிசை
தானான வாறும்ஈ ரேழும் சமகலை
தானான விந்து சகமே பரமெனும்
தானாம் பரவா தனையெனத் தக்கதே. **20**

---

*தோந்து எழும் மேலாம் சிவன்; உலகில் தாமுதல் என்பார் பலரின் முதன்மைகளையும் ஆராய்ந்து, அம்முதன்மைக்கு ஒவ்வோராற்றான் இழுக்குண்மையைப் பிரபல சுருதிகளானும் ஆகமங்களானும் புராணங்களானும் தெளிந்து இதுவே முதலென எழும் மேலாகிய சிவன் என்க. அங்கியோடுஉற - அங்கியோடு ஒப்பாகப் பொருந்த; என்றது அக்கினியில் சூடுபோலச் சத்தி பிரிவற்றுச் சமவாயமாய்ப் பொருந்த.*

*வார்ந்து எழு மாயையும்; வார்தல் - ஒழுகுதல். நெறிப்படுதல். வார்ந்தெழு மாயை - நெறிப்பட்டெழுகின்ற மாயை; என்றது. சிவத்தினின்று சத்தியும் அதனின்று மாயையும் தோன்றநிற்றல்.*

*இம்முறையையே அந்தமதாய் நிற்கும் ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிட என்றது. அந்தமதாய் - முற்கூறிய மாயைக்கு ஒடுங்கு மிடமாய். இவ்வண்ணம் சிவமாய் ஆதிசத்தியாய் நாதவிந்துவாய் மாயையாய் மிக்கெழுகின்றவள் சத்தியே என்பதுணர்த்தியவாறு. கோல் - திரட்சி. கோள்வளை; அன்மொழித்தொகை, திரண்ட வளையினை உடையாளாகிய சத்தி.*

***1157. தெளிவுரை :-** சத்திக்குத்தானே அதுவாய் நின்று அருள் செய்கின்ற ஆதாரம், உள்ளே எட்டாயும் வெளியே பதினான்காயும், இடையில், 'இரண்டு பத்து' என்னும் சம அளவினதாயும் உள்ள கோணங்களை உடைய சக்கரமாகும். இச்சக்கரம் சொல்லும், பொருளும் ஆகிய இருவகை உலகங்களாயும், அவற்றைச் செயற்படுத்துகின்ற கடவுளராயும், அக்கடவுளரது செயல்களாயும் விளங்கும்.*

## ஸ்ரீ சக்ரம் அமைப்பும் விளக்கமும்



ஸ்ரீ சக்ரம்



*சக்தி வழிபாடு இந்தியத் திருநாட்டில் தொன்றுதொட்டு நிலவி வருகிறது. அதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று மனத்தால் வழிபடுதல். மற்றொன்று அன்னையை ஸ்ரீசக்கரத்தில், தூலவடிவில் கொணர்ந்து வழிபடுதல்.*

*ஸ்ரீசக்கரம் சாதாரணமாகத் தாமிரத் தகடுகளிலோ, சந்தனம், குங்குமம் அல்லது மஞ்சள் இவற்றின் மீதோ, புதிய பட்டுத்துணி போன்ற தூய பொருளின் மீதோ வரையப்பட்டு, மலர்கள், சந்தனம், குங்குமம் இவற்றைக் கொண்டு அருச்சிக்கப்படுகிறது. வழக்கமான வழிபாட்டு முறைப்படி நிவேதனங்கள் படைக்கப்பட்டு, ஊதுபத்தியும், விளக்குகளும் ஏற்றப்பட்டு கற்பூர ஆரத்தி காட்டப்பட்டு அன்னை ஆராதிக்கப்படுகிறாள்.*

*பல சிவாலயங்களில் ஸ்ரீசக்கரங்கள் மற்றும் ஸ்ரீமகாமேரு பிரதிட்டை செய்யப்பட்டு இன்றும் வழிபாட்டில் உள்ளது. மேலும் திருமடங்களிலும் கிருகத்திலும் பலர் வைத்து வழிபடுகின்றனர்.*

*ஸ்ரீசக்கர வரைபடத்தில் முதலில் அமைவது ஒன்றையொன்று வெட்டிக்கொள்ளும் நான்கு முக்கோணங்கள். இவற்றின் நான்கு முனைகளும் மேல்நோக்கி இருக்கும். அவை சிவசக்கரம் எனப்படும். மேற்கூறிய முக்கோணங்களை வெட்டிக்கொண்டு கீழ்நோக்கிய முனைகளோடு கூடியமையும் ஐந்து முக்கோணங்கள் சக்தி சக்கரம் எனப்படும்.*

*பிறகு சிவசக்கரமும் சக்தி சக்கரமும் ஒன்றன்மேல் ஒன்று பொருத்தப்படுவதால் மொத்தத்தில் 43 முனைகள் கொண்ட வடிவம் கிடைக்கும். இவற்றின் வெளிமுனைகள் ஒட்டி ஒரு வட்டம் வரையப்பட்டு அதனை ஒட்டி எட்டு தாமரை இதழ்கள் அமையும்.*

*இதனை ஒட்டி மற்றோர் வட்டம் வரையப்பட்டு அதைச்சுற்றி பதினாறு இதழ்கள் கொண்ட தாமரை வரையப்படும். இவ்வமைப்பைச் சுற்றி முன்று வட்டங்கள் அமையும். முடிவில் அவை நான்கு வாசல்கள் கொண்ட கோட்டை மதில் போன்ற அமைப்பால் பாதுகாக்கப்படும். சக்கரத்தின் பாகங்களைக் குறிக்கப் பல்வேறு வண்ணங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.*



**சக்கரத்தின் பாகங்கள்**

| | |
|---|---|
| பிந்து : | இதுதான் ஸ்ரீசக்கரத்தின் நடுவில் அமையும் புள்ளி. இதுவே சக்தி வீற்றிருக்கும் இடம். (சிவப்பு புள்ளி). |
| கிரிகோணம் : | பிந்துவினை உள்ளடக்கிய சிறுமுக்கோணம் (வெள்ளை நிறம்) |
| அட்டகோணம் : | திரிகோணத்தை உள்ளடக்கிய முக்கோணப்பகுதி (வெள்ளைநிறம்) |
| அந்தர்-தசாரம் : | அட்டகோணத்தை உள்ளடக்கிய பத்து முக்கோணப்பகுதி (வெள்ளைநிறம்) |
| பகிர்-தசாரம் : | அந்தர்-தசாரத்தை உள்ளடக்கிய பத்து முக்கோணப்பகுதி (பச்சை நிறம்) |
| சதுர்-தசாரம் : | பகிர் தசாரத்தை உள்ளடக்கிய 14 முக்கோணப்பகுதி (மஞ்சள் நிறம்) |
| அட்டதளம் : | சதுர்தசாரத்தை உள்ளடக்கிய எட்டு தாமரை இதழ்ப்பகுதி. |
| சோடச-தளம் : | அட்ட தளத்தை உள்ளடக்கிய பதினாறு தாமரை இதழ்ப்பகுதி. |
| மேகலா திரயம் : | சோடசத்தை உள்ளடக்கிய முன்று வட்டங்கள். |
| பூபுரம் : | ஸ்ரீசக்கரத்தைப் பாதுகாக்கும் கோட்டை போன்ற அமைப்பு நான்கு வாசல்கள் கொண்டது. |

சாதாரண நோக்கில், நான்கு முனைகள் கொண்ட சிவசக்கரம், மச்சை, சுக்கிலம் (ஆண்கரு), பிராணவாயு, சீவாத்மா என்ற நான்கையும் குறிக்கும். ஐந்து முனை கொண்ட சக்தி சக்கரம், தாது, தோல், இரத்தம், மாமிசம், எலும்பு ஆகிய ஐந்தையும் குறிக்கும். மொத்தத்தில் சிவ, சக்தி சக்கரங்களின் சேர்க்கை படைப்பின் தத்துவத்தைக் குறிக்கிறது.

*தத்துவ முறையில் பார்க்குங்கால், ஐந்துமுனைச் சக்தி சக்கரம் பஞ்ச பூதங்களைக் குறிக்கிறது. நான்கு முனைச்சிவசக்கரம், மாயை, சுத்த வித்யை, மகேசுவரர், சதாசிவர் ஆகிய தத்துவங்களைக் குறிக்கிறது. ஐம்புலன்களை வென்று பஞ்ச பூதங்களினால் பாதிக்கப்படாமல், மாயையை அகற்றி ஆனந்த வடிவினனான இறைவனுடன் ஒன்றுபடுதலே வீடு என்றும் தத்துவத்தைச் சக்கரம் அறிவிக்கிறது என்பர் அறிஞர்.*

*ஸ்ரீசக்கரம் குண்டலினி என்னும் இறைச்சக்தியின் படிப்படியான முன்னேற்றத்தை எவ்வாறு குறிக்கிறது என்பதனைச் 'சௌந்தர்யலகரி' என்னும் பகுதி குறித்துள்ள விளக்கதால் அறியலாம். ஸ்ரீசக்கரத்தின் தத்துவங்களைச் சௌந்தர்யலகரியில் 'ம்ஹீம் மூலாதாரே' என்று தொடங்கும் செய்யுளும் 'பவானித்வம் தாசே' என்று தொடங்கும் செய்யுளும் விவரித்துள்ளமையைக் காணலாம்.*

*ஸ்ரீசக்கரம் வரையும் முறை மேலே கொடுக்கப்பட்டது. ஆயினும் ஸ்ரீசக்கரத்தில் பல வகைகள் உள. குறிப்பிட்ட முக்கோணங்களுக்குக் குறிப்பிட்ட வண்ணங்கள் கொடுப்பதின் மூலம், திரைலோக்கிய மோகன சக்கரம், சர்வாசா பரிபூர சக்கரம் போன்ற பலவகைப்பட்ட ஸ்ரீ சக்கரங்கள் கிடைக்கப் பெறுகின்றன.*

*ஸ்ரீசக்கரத்தை வரைபடமாக வரையும் முறை மேலே கொடுக்கப்பட்டது. அவ்வாறன்றிப் பிந்து முதல் பூபுரம் வரையிலான பகுதிகள் ஒன்றன்கீழ் ஒன்றாகப் பிரமிடு வடிவத்தில் பஞ்ச உலோகத்தில் வார்க்கப்பட்டு வழிபாட்டுக்குப் பயன்படுத்தப்படுகிறது. இதனை* ***'மேரு'*** ***என்று சொல்வர். இதில் பலவகைகள் உண்டு. எடுத்துக்காட்டாக, மாங்காடு காமாட்சி அம்மன் கோயிலில் இருக்கும் மேரு ஆமையின் முதுகுப்புறம் என்ற வகையைச் சார்ந்தது ஆகும். சிவத்துக்கு அருவுருவ வழிபாடு சிவலிங்கம். சத்திக்கு அருவுருவ வழிபாடு மேருவாகும்.***

***ஸ்ரீசக்கர வழிபாடு எல்லாத் தேவதைகளுக்கும் உகந்ததாகக் கருதப்படுகிறது. இவ்வழிபாட்டினைக் கைக்கொள்ளத் தகுந்த மனநிலையையும், நம்பிக்கையையும், கொள்கைப் பிடிப்பும் தேவை. ஆண், பெண் வேறுபாடின்றிக் குலம், கோத்திரம் வேறுபாடின்றி அனைவரும் கைக்கொள்ளலாம். ஆனால், இதனைத் தகுந்த குருமார்களிடம் உபதேசம் பெற்ற பின்னரே கைக்கொள்ள***

*வேண்டும் என்ற விதிமுறை உண்டு. எந்த ஊரிலும், எந்த இடத்திலும் செய்யத்தக்க, இக்காலத்திற்கேற்ற வழிபாட்டு முறை ஸ்ரீசக்கர வழிபாடே ஆகும் என்பது அறிஞர்களால் கருதப்படுகிறது.*

*அபிராமி பட்டர்,* ***அபிராமி அந்தாதியில்,***

> *வெளிநின்ற நின் திருமேனியைப்பார்த்தேன் விழியும் நெஞ்சும்,*
> *களிநின்ற வெள்ளம் கரை கண்டதில்லை; கருத்தினுள்ளே*
> *தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது என்ன திருவுளமோ?*
> *ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே.*

*என்று ஸ்ரீசக்ர நாயகியைப் போற்றுகிறார்.*

***1158. தெளிவுரை :-*** *ஸ்ரீசக்கரத்தில் சத்தியை வழிபட்டு, அவளுக்கு உரிய மந்திரங்களில் எந்த ஒரு மந்திரத்தையேனும் திரும்பத் திரும்பச் சொல்லி உருவேற்றினால், வெண்ணிறமும், மூன்று கண்களும், திருமேனி அழகும், அபய வரத முத்திரைகளும் உடையவளாகிய ஞான சத்தியாகிய மனோன்மனியே ஏனை வாமாதி எண் சத்திகளாயும் மிகத் தோன்றி அருள்புரிவாள்.*

***குறிப்புரை :*** *சக்கரத்தையே "வித்தை" என்றார் இருபத்தேழு, ஒன்பது முக்கோணங்களிலும் உள்ள கீற்றுகள். இவை ஆகுபெயராய் அவற்றாலாகிய சக்கரத்தை உணர்த்திற்று. காரணக் குறியாக மந்திரத்தினையே "ருத்திரம்" என்றார் ஸ்ரீசக்கர வழிபாட்டிற்குரிய ஸ்ரீவித்தியா மந்திரம், குருவிடம் உபாசனை பெற்றுப் பயனடைய வேண்டும்.*

*இனி, "ஓர் ருத்திரம்" என்பதற்கு 'தேவிக்குரிய யாதேனும் ஒரு மந்திரத்தை' எனப் பொருள் உரைத்தலுமாம், தொக்கு - மெய்; உடம்பு. ஐ - அழகு. பராவித்தை - பராசத்தி வடிவாய ஸ்ரீவித்தை - ஸ்ரீசக்கரம்.*

*இதனால், ஸ்ரீசக்கர வழிபாடாகிய ஸ்ரீவித்தை சத்தியின் எல்லா வழிபாட்டுப் பயனையும் தருதல் கூறப்பட்டது.*

***1159. தெளிவுரை :-*** *மலரில் மணம் போலச் சிவத்தில் வேறாகாது நிற்பவளாகிய சத்தி மூன்று பிரிவுகளாய் அமைந்த பஞ்ச தசாட்சரி (பதினைந் தெழுத்து) மந்திரத்தில் முற்ற விளங்குகின்ற மெய்ஞ்ஞான வடிவினள்; தத்துவங்களாயும், அவை யல்லவாயும் எல்லாமாய் இருப்பவள்; வேதம் முதலிய நூல்கள் பலவும் முடித்துக் கூறுகின்ற சிவனோடு ஒன்றான சிவையாய் விளங்குபவள்; அருட்*

**1158.** தக்க பராவித்தை தான்இரு பானேழில்
தக்கெழும் ஒருத்தி ரஞ்சொல்லச் சொல்லவே
மிக்கிடும் எண்சத்தி வெண்ணிற முக்கண்ணி
தொக்கதை யோடுதொன் முத்திரை யாளே. **21**

---

*சத்தியும், ஆனந்த சத்தியுமானவள். சத்தி - ஆனந்த சத்தி. சத்தி - ஆதாரம். ஆனந்தம் - ஆதேயம். இரண்டின் சேர்க்கையைக் கொங்கு என்று அருளுகிறார்.*

***குறிப்புரை :*** *கொங்கு - மணம்; உவமை யாகுபெயர். இதனை முதலிற்கொண்டு உரைக்க. பஞ்சதசாட்சரத்தின் உட்கூறுகளே தத்துவ மாயும், தத்துவாதீதப் பொருளாயும் நிற்றல்மேலே கூறப்பட்டது. 'முத்திரை மூன்று' என்பதற்கு வேறு பொருள் உரைப்போர், இரண்டாம் அடிஈற்றில் 'ச-க-ல' என்று பிரித்து, அதனைப் பஞ்ச தசாட்சரியின் மூன்றாம் பிரிவாகக் கொள்வர். பஞ்ச தசாட்சரங்களை நாயனார் புவனாபதி சக்கர அதிகாரத்தின் முதலிற் குறிப்பிடுவார்.*

*இதனால், ஸ்ரீசக்கரத்தில் விளங்கும் சத்தியது பெருமை கூறப்பட்டது.*

***1160. தெளிவுரை :-*** *'நறுமணத்தை வெளிப்படுத்துகின்ற பூங்கொம்பில் தென்னங்குரும்பைகள் விளங்குவது போலும் தோற்றத்தையுடைய கன்னிகையாகிய சத்தி, குங்குமம், பூசப்பட்ட தோள்களை உடையவள்' என்றும், 'அங்குச பாசங்களை ஏந்தியவள்' என்றும், 'அவளது மகிழ்ச்சியுள்ள கோயில் அகில உலகங்களும்' என்றும் உண்மை நூல்கள் கூறும். இதனை அறிந்து போற்றுவாயாக.*

***குறிப்புரை :*** *உடம்பு பூங்கொம்பு போலவும், தனங்கள் குரும்பை போலவும் இருத்தலை முதலடியில் இல்பொருள் உவமையாகக் குறித்தார். 'அங்குச பாசம் பொருந்தினள்' என்க. "எனும்" என்பதை "அவள் மனை" என்பதன்பின் கூட்டியுரைக்க. அறிதல், இங்கு அதன் காரியமும் உடன் தோன்ற நின்றது.*

*இதனால், ஸ்ரீ சக்கரத்தில் விளங்கும் தேவியது வடிவம் கூறப்பட்டது. எனவே, அகிலமாவது, இச்சக்கரத்தில் பூபுரமாம்.*

***1161. தெளிவுரை :-*** *உரையையும் மனத்தையும் கடந்து விளங்கும் மனோன்மனி; பேய்களையும் பூதகணங்களையும் பெரிதும் தமக்கு*

1159. முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தள்
தத்துவ மாய்அல்ல வாய சகலத்தள்
வைத்த பராபர னாய பராபரை
சத்தியும் ஆனந்த சத்தியும் கொங்கே. 22

1160. கொங்கீன்ற கொம்பிற் குரும்பை குலாங்கன்னி
பொங்கிய குங்குமத் தோளி பொருந்தினள்
அங்குச பாசம்எனும் அகி லம்களி
தங்கும் அவள்மனை தானறி வாயே. 23

---

*ஏவலாகப்பெற்ற பெண்பிள்ளை; எதனையும் தம்மளவிற் கொண்டு நுணுகி ஆராய்கின்ற பசுபோதத்திற்கு அப்பாற்பட்ட சிவபரம் பொருட்குத் தாயும் மகளும் நல்ல மனைவியுமாவள் என்றவாறு.*

***குறிப்புரை :*** *இப்பொருள் மேலேயும் குறிக்கப்பட்டது. "தாய்" எனல் சத்தி தத்துவ சத்தியினின்று சதாசிவன் தோன்றுதல் பற்றி, "மகள்" எனல், சிவதத்துவ சிவத்தினின்று மேற்கூறிய சத்தி தத்துவ சத்தி தோன்றுதல் பற்றி. "தாரம்" எனல், யாண்டும் சத்தனுக்குச் சத்தியாய் நிற்றல் பற்றி. வாய் - வாக்கு. கணம் - பூதக்குழாம்.*

*இதனால், சத்தி சிவனுடன் பல்வேறு வகையில் இயைந்து நின்று செயலாற்றுதல் கூறப்பட்டது.*

***1162. தெளிவுரை :-*** *சத்தி உலகெலாம் தானாய் நிற்கும் வியாபக நிலை உணர்த்துதல் நுதலிற்று. பராசத்தி சிவத்திற்கு மனைவியும் ஆவள்; சக்திதத்துவமாய் நின்று நாதவிந்துக்களைத் தோற்றுவிக்கவும் செய்வள்; சிவத்தோடு ஒன்றியநிலையில் அனைத்திற்கும் பரமகாரணி ஆவள்; சிருட்டியையுன்னிப் பிரிந்தபோது சிவத்தின் காரியமுமாவள். இத்தகைய புணர்ப்பினையுடையாள், நிறைந்த விந்துசத்தி பொதிந்துள்ள பழைமைக்கெல்லாம் பழைமையானவள். அண்டங்களின் அளவாகப் பிரிந்துள்ள திசை பத்தும் உடைமையாகக் கொண்டவள் என்றவாறு. இவ்வண்ணம் சர்வ வியாபியாவாள் பராசத்தி என்பதாம்.*

***குறிப்புரை :*** *தத்துவம் - முதற்பொருள், தாய் நிலை காரணமும், மகள் நிலை காரியமும் ஆதல் அறிக. கலப்புச் சிவனோடென்பது வெளிப்படை. பூரணம் - பெரு வியாபகம். விந்து - சுத்த மாயை.*

**1161.** வாயும் மனமும் கடந்த மனோன்மனி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும்நல் தாரமும் ஆமே. **24**

**1162.** தாரமும் ஆகுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகும் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே. **25**

---

*'விந்துவிற்பொதிந்த' என்க. புராதனி - பழமையானவள். பார் - உலகம். அளவு - எல்லை. உடையாள் - தன்னுடையனவாக உடையவள்.*

*இதனால், மேலதனை வேறோராற்றால் விளக்கி, சத்தி உலக நாயகியாதல் கூறப்பட்டது.*

*1163. தெளிவுரை :- பத்துத் திசைகளையும் நோக்கிய பத்து முகங்களை உடையவளாகிய, நமக்குத் தலைவியாம் பராசத்தி நம் பொருட்டு நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும் ஆக்கி வைத்து, அவற்றிற் கூறப்பட்ட பொருளாகியும் நின்றாள். அத்தகைமையளாகிய அவள் ஒப்பற்ற ஓர் ஆதாரமாகிய ஸ்ரீசக்கரத்தில் நீங்காது நிற்கின்றாள். அவளை அந்நூல்களின் வழிப்போற்றுக.*

*குறிப்புரை : 'வேதம் நாலுடன் தான்வைத்தனள்' என இயைக்க. ஒத்தல் தான் வைத்தற்கு ஏற்ப இருத்தல். முன்னர், "வைத்தனள்" என்று ''ஒத்தனள்'' என்றும் கூறிப்போந்தமையின், கூறுதல் அவற்றின் வழியதாயிற்று. ''நேரிழை'' என்பதில் இரண்டனுருபு தொகுத்தலாயிற்று.*

*இதனால், 'ஸ்ரீசக்கரத்தில் தேவியை வேத நெறியான் வழிபடுக' என்பது கூறப்பட்டது.*

*1164. தெளிவுரை :- மேற்சொல்லப்பட்ட சத்தி இளமையான தோற்றமுடையவள்; ஏழுலகிலும் நுண்ணியளாய் நிறைந்தவள்; அடக்கமான பெண்மை இயல்புடையவள்; அமுதமயமாம் பால் நிறைந்த தனங்களை உடையவள்; வீடு பெறுதற்குரிய உயிர்களை ஆட்கொண்டு, அவை தன்னை விட்டுப் பிரிதலை நீக்குபவள்*

**1163.** பத்து முகமுடை யாள்நம் பராசக்தி
வைத்தனள் ஆறங்கம் நாலுடன் தான்வேதம்
ஒத்தனள் ஆதாரம் ஒன்றுடன் ஓங்கியே
நித்தமாய் நின்றாள் எம் நேரிழை கூறே. **26**

---

*குறிப்புரை : 'சிறியள்' என்பது நீட்டலாயிற்று. இம் மந்திரத்தின் எல்லா அடிகளையும் ரகர எதுகைப்படவும், ஒன்றிரண்டு அடிகளை அவ் எதுகைப் படவும் பாடம் ஓதி, அவற்றிற்கேற்ப உரைப்பாரும் உளர். அவர், மேலைமந்திரத்தின் இறுதிச் சீரினையும் 'கூரே' எனப் பாடம் ஓதுவர். அவையெல்லாம் சிறவாமை அறிந்துகொள்க.*

*இளமைப் பருவ சத்தி, 'வாலை, வாலாம்பிகை' (பாலை, பாலாம்பிகை) எனப்படுவாள்.*

*இதனால், சத்தி பக்குவிகளுக்குச் சிறந்த தலைவியாய் வீடு பேறளித்தல் கூறப்பட்டது. இதனானே, ஸ்ரீவித்தை வீடுபேற்றையும் தருதல் பெறப்பட்டது.*

*1165. **தெளிவுரை :-** சிவத்தோடு வேற்றுமையின்றி நிற்பவளாகிய சத்தி அடியவரது தியானத்திலே பொருந்தி விளங்குகின்ற அழகிய பூங்கொம்பு போன்றவள்; அதனால், முன்னர் மனம் முதலிய அந்தக் கரணங்களின் வழியே தலைப்பட்டுப் பின்னர் உயிர்களினது அறிவுக் கறிவாய் விளங்குவாள்.*

*குறிப்புரை : குறி - இலட்சியம்; தியானம். பொறி - அந்தக்கரணம்.*

*இதனால், சத்தி முதற்கண் தியானத்தில் விளங்கிப் பின் அறிவினுள் விளங்குதல் கூறப்பட்டது.*

*1166. **தெளிவுரை :-** தன்னைக் கூடியதனால் விளைகின்ற இன்பத்தையுடைய வள்ளலாகிய சிவனுக்குத் தேவியாய் உள்ள சத்தி அடியேனைத் தன்வசப்படுத்தித் தவநெறியை அடையச்செய்தது, என் உள்ளத்திலே நின்று ஐம்புலக்கள்வர் தம் கள்ளத்தைப் போக்கி இரண்டறக் கலந்து, என்றும் உடனாய் இருந்ததாம்.*

*குறிப்புரை : தலைவி என்னை மயக்கி, யான் தவநெறி கொள்ளப் புரிந்தது, இருந்து, நீக்கி, கலந்து, புல்கி, எனக் கூட்டி*

**1164.** கூறிய கன்னி குலாய பருவத்தள்
சீறிய ளாய்உல கேழுந் திகழ்ந்தவள்
ஆறிய நங்கை அமுத பயோதரி
பேறுயி ராளி பிறிவறுத் தாளே. 27

**1165.** பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பெண்பிள்ளை
குறியொன்றி நின்றிடும் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்றி நின்றனள் ஆருயி ருள்ளே. 28

---

*முடிக்க. 'இஃது அவளை வழிபட்டதன் பயன்' என்பது குறிப்பெச்சம். எதுகை நோக்கி, "வள்ளல்" என்பதன் ஈறு கெடாது திரிந்து நின்றது.*

*இதனால், சத்தி தன்னை வழிபடுபவரை மலத்தின்வழிச் செல்லாது தடுத்துத் தன்வழிப்படுத்தித் தவநெறியருளுதல் கூறப்பட்டது.*

***1167. தெளிவுரை :-** உயிர்களுக்கு நலம் செய்ய விரும்பி அங்ஙனமே செய்துவருகின்ற போக சத்தி, உயிர்களிடத்துத் தான் தங்கியிருந்து ஆக்க இருக்கின்ற இன்பம் இது என்பதனை உலகர் ஒருவரும் அறியமாட்டார். பூவில் நிறம்போல உயிர்களிடத்தில் பொருந்தியிருக்கின்ற அவள், தான் அவ்வாறிருக்கின்ற குறிக்கோளி னின்றும் சிறிதும் மாறுபடாமலே இருக்கின்றாள். போகமா சத்தி - போகசிவமாகிய சதாசிவத்தின் சத்தியாகிய மனோன்மனி.*

***குறிப்புரை :** இருந்தருள் செய்கின்ற இன்பம் வீட்டின்பமே; உலக இன்பம் அன்று' என்றதாம் இருந்த இலக்கும் அதனைத் தருதலேயாம். "புதல்வி" என்பது முறை சுட்டாது. இளமை குறித்து நின்றது. 'பூவில் வண்ணம்போல' என்பது ஒன்றாய்க் கலந்திருத்தற்கு உவமை.*

*"பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்*
*எண்ணும் சுவையும்போல எங்குமாம் - அண்ணல்தாள்"*

*- சிவஞானபோதம் - சூ.2 அதி.1*

*என்றது காண்க.*

*இதனால், சத்தியது குறிக்கோள் வீட்டின்பத்தைத் தருதலேயாதல் கூறப்பட்டது.*

**1166.** உள்ளத்தி னுள்ளே உடனிருந் தைவர்தம்
கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து
வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்ததே. 29

**1167.** புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி
இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்
பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத்
திருந்த இலக்கில் இனிதிருந் தாளே. 30

---

***1168. தெளிவுரை :-*** *சத்தி, யான் உள்ளம் திருந்தித் தன்னை அடைய விரும்பிய நிலையில் அந்நிலையை நன்குணர்ந்து அவளும் எனது உள்ளத்தை விரும்பி, அதன்கண் இருப்பாளாயினாள். அவ் இருப்பு, இடையறாது ஓடும் நீர், தான் ஓடுகின்ற திசையை நோக்கி ஓடும் ஓட்டத்தை ஒப்ப இடையறாது இருக்கும் இருப்பாம்.*

***குறிப்புரை :*** *ஏந்திழையாகிய அம்மை எனது உள்ளத்தை இடமாகக் கொண்டு விரும்பி இருந்தாள். திருத்தமாகிய கலப்பில் தெளிந்து, அறிந்து தியானித்து, இடையீடில்லாத வியப்பற்ற நிலையில் பொருந்தியிருக்க, இடையூறுகளை விலக்கினால் அதுவே அம்மையோடு கலப்பதாம் என்றவாறு.*

*திருந்து புணர்ச்சி - நினைந்து மறந்து நினைந்து மறந்து போகாமல் என்றும் தைலதாரை போல இடையறாது கலத்தல். நிரந்தரம் - இடையீடில்லாமல். அந்தரம் - இடையீடு. அதிசயம் - விருப்பு. வியப்பு நிலையில் அம்மையைத் தன்னின் வேறாக நினைக்கும் தன்மை விளைதலின் உண்மைக் கலப்பு இலதாகும். அஃதின்றி 'நீயும் நானுமாய் ஏகபோகமாய்' இருக்க வியப்பு அகற்ற வேண்டும். ஆதலால் நிரதிசயமொடு என்றது. பொருந்த - கலக்க. விலக்கின் என்பதற்கு செயப்படுபொருள் வருவித்து உரைக்கப்பட்டது. அதுவே புணர்ச்சி - அதுவே அருளம்மையைக் கூடும் நெறியாம் என்பது.*

***1169. தெளிவுரை :-*** *'எனக்கு அது வேண்டும், இது வேண்டும்' என்று அவாவுகின்ற அவாவை விடுத்து, சந்திர மண்டலத்தில் உள்ள ஆயிர இதழ்த்தாமரையில் விளங்குபவளாகிய சத்தி விளக்கியருளிய மூன்று மண்டலங்களில் உள்ள பொருள்களைப் போற்றி செய்து*

**1168.** இருந்தனள் ஏந்திழை என்னுளம் மேவி
திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி
நிரந்தர மாகிய நீர்திசை ஓடு
பொருந்த விலக்கில் புணர்ச்சி அதுவே. **31**

---

*சுழு முனையில் நின்று பொருந்த நோக்கினால் விதியையும் வெல்லுதல் கூடும்.*

***குறிப்புரை :*** *ஈற்றடியை முதலடியின் பின்னர்க் கூட்டியுரைக்க. சுழுமுனையை, "சுழி" என்றார். மண்டலம் மூன்றாவன அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம். இவை 'உடம்பில் உள்ளன' என்பது அடுத்த மந்திரத்தில் கூறப்படும். "மூன்று" என்பது இடவாகுபெயர்.*

*எனக்கு அவ்வரம் வேண்டும் என்ற காமியப் பயனைக் கருதாமல் துதிக்க என்றது. சுழியுறநோக்கல் - புருவ மத்தியாகிய அநாகதத் தானத்தில் அம்மையின் அருள் மேனியை வைத்துத் தியானித்தல். வென்றிடலாகும் என்றது வெல்லுதற்கரிய விதியையும் வெல்லலாம் என்ற அம்மையின் அருளாற்றற் சிறப்புணர நின்றது, மதி மலராள் - சந்திரமண்டலத்தில் உள்ள ஆயிரம் இதழ்த் தாமரையாகிய பீடத்து எழுந்தருளியுள்ளவள்.*

*மண்டலம் மூன்று - வாக்பவ கூடமாகிய அக்னி மண்டலம்; காமராஜ கூடமாகிய சூரியமண்டலம்; சத்தி பீடமாகிய சோமண்டலம். இம்மூன்று மண்டலங்களிலும் படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களைப் புரிந்துகொண்டு அம்மை விளங்குவள். இதனையே வருகின்ற திருமந்திரத்திலும் அநுவதித்து உரைக்கின்றார் ஆசிரியர்.*

*1170.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய மூன்று மண்டலங்களும் அசுத்த மாயையின் காரியங்களாய் நிற்கும் உடம்பில் உள்ள இடங்களே. எனினும், உச்சிக்கு மேல் பன்னிரண்டங்குலத்தில் உணர்வு செல்லின் அது சுத்த மாயையைப் பொருந்தியதாகும். அங்ஙனம் உணர்வு செல்லும்பொழுது சத்தி, பிராசாத கலைகள் பதினாறில் ஒன்பதை ஏற்றுச் சந்திர மண்டலத்தைக் கீழ்ப்படுத்தி நிற்பாள்.*

***குறிப்புரை :*** *ஆறு ஆதாரங்களில் மூலாதாரம் முதல் சுவாதிட்டானம் முடிய அக்கினி மண்டலமும், சுவாதிட்டானத்திற்கு மேல் விசுத்தி முடியச் சூரிய மண்டலமும், விசுத்திக்கு மேல்*

**1169.** அதுஇது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதிமல ராள்சொன்ன மண்டலம் மூன்றே. **32**

---

*பிரமரந்திரம் முடியச் சந்திர மண்டலமும் ஆதலின், 'மூன்று மண்டலங்களும் உடம்பினுட்பட்டன' என்றார். 'உச்சியின் ஈராறாய் எழுதலையில் தோன்றும் இலக்கு' என்க. கலை - கூறு; அங்குலம். இவ்வாறன்றி, 'பிராசாதகலை பன்னிரண்டு, என உரைப்பின், அதற்கு அப்பால் உள்ளது பரசிவம் ஆதலின்' அதனை, "மாமாயை" என்றல் கூடாமை அறிக. ஆதார யோகத்தில் சவிகற்ப உணர்வு உடம்பைப் பற்றாது விடுதல் இன்றி, நிராதார யோகத்திலே அதனை விட்டு நீங்குதலின், அது நாத மாத்திரையாம் மாமாயை ஆயிற்று. பிராசாத கலைகளில் ஒன்பதாவதாகிய சத்தி கலையே ஆதாரத்தைக் கடந்த முதற் கலையாதலின், "ஏழிரண்டில், இந்துவொடு ஈறாக ஏன்றனள்" என்றார். ஓடு, எண்ணொடு. 'முன்னர் இந்துவை ஏன்று, பின் அஃது ஈறாதலை ஏன்றனள்' என்க. ஈறாதல். கீழ்ப்படுதல். பிராசாத கலைகளின் விளக்கம் மேல், 696 ஆம் மந்திர உரையில் தரப்பட்டது.*

*இதனால், சத்தி ஆதார நிராதாரத்தானங்களில் நிற்குமாறு கூறப்பட்டது.*

***1171. தெளிவுரை :-** வைகரியாதி வாக்குகளின் தோற்றம் உரைத்தல் நுதலிற்று. இந்துவினின்று தோன்றும் நாதமானது சூரிய ஒளிபோல வந்து நாக்கினால் கடையப்பெற்று வெளிப்படும். சோதியாய் இருதயத்தினின்று எழும் ஒலி கழுத்தினிடத்தில் உந்தப்படுவதாய், சுத்தமாயையையீறாக வுற்ற சிறப்பினையுடையது என்றவாறு.*

*இந்து என்றது பிறைமதி வடிவான அர்த்தசந்திரகலை, நிரோதினிகலை என்ற இரண்டையும். அதினின்று நாதகலை தோன்றுதலின் இந்துவினின்றெழும் நாதம் என்றது. நாதம் சூரியன் போல ஒளியுடன் விளங்குவது. அது நாவினடியாகிய தாலுத்தானத்தில் பொருந்தும்போது, பல வேறு வடிவான வர்ணங்களாக ஆகின்றது. வைகரிவாக்கு பிறக்கிறது. நாக்கில் மதிக்கப்படுவதற்கு முன்பு கண்டத்தில் ஒலிவடிவாக உந்தப்படுகிறது. அதற்கு மூலமான ஒலி இதயத்தானத்தில் விளங்குவதாம். இங்கு அதற்குப் பைசந்தி என்று பெயர். கண்டத்தில் மத்திமை. இந்துவிற்கு*

1170. மூன்றுள மண்டலம் மோகினி சேர்விடம்
ஏன்றுள ஈரா றெழுகலை உச்சியில்
தோன்றும் இலக்குற லாகுதல் மாமாயை
ஏன்றனள் ஏழிரண் டிந்துவொ டீறே. 33

1171. இந்துவி னின்றெழும் நாதம் இரவிபோல்
வந்துபின் நாக்கின் மதித்தெழும் கண்டத்தின்
உந்திய சோதி இதயத் தெழும் ஒலி
இந்துவின் மேலுற்ற ஈறது தானே. 34

---

*மேலும் அவ்வொலி உண்டு. அது சூக்குமை எனப்படும். இவ்வண்ணம் சூக்குமையாக இருக்கும் பெருமையினை உடையது இது எனப் பாராட்டுகிறார்கள். 'இந்துவின் மேலுற்ற ஈறதுதானே' என்பதால், இந்து என்பதற்குச் சுத்தமாயை என்று உரை கூறுவாரும் உளர்.*

*1172. **தெளிவுரை :-** மேல், "இந்துவின் மேல் உற்ற ஈறு" எனப்பட்ட அந்த நாதமே சொல்லுலகங்கள் எல்லாவற்றிற்கும் (வேதம், வேதாங்கம், ஆகமம், புராணம், இதிகாசம், மிருதி முதலிய எல்லா நூல்கட்கும், பலவாய் வழங்கும் மொழிகட்கும்) முதல். சில சுழிக் கூட்டத்தால் பூங்கொத்துப் போல்வதாய வடிவினையுடைய அது நிராதார யோகத்தில் பிராசாத கலைபதினாறில் முடிவாயுள்ள உன்மனா கலையிலும், ஆதாரயோகத்தில் ஆயிர இதழ்த் தாமரையிலும் மனம் யாதோர் அசைவுமின்றி நின்று வசமாகும்படி உயிரினது ஆற்றலை மிகக் குவிப்பதாகும். அதனால், அதனைக் காணுதலையே சத்தி தன் அடியவர்க்குப் பெரும்பேறாக அளித்துத் தானும் அவ்விடத்தே அவர்கட்குக் காட்சியளித்து நிற்பாள்.*

*__குறிப்புரை :-__ எழில் தூறு (அது) செய்யும் சுகந்தச் சுழி அது - அழகின் குவியலைச் செய்யும் நற்புணர்ப்பாகிய விந்து அதுவாம் என்றவாறு. தூறு - புதர், மிகுதி குவியல் என்பன ஒருபொருட் கிளவிகள். சுகந்தம் - நல்ல புணர்ப்பு. கந்தம் - கூட்டம் அல்லது புணர்ப்பு. நல்வாசனையும் ஆம். சுகந்தச் சுழியென்றது மாயையை. சுழி - விந்துவாகவே ஈண்டு சுத்தமாயையைக் குறிப்பிட்டதாம்.*

*பேறது செய்து - சிவமும் சத்தியுமாகிய தாமிருவரும் விந்து சத்திகளாகிய சுத்தமாயையைத் தோற்றுவித்து, பிறந்திருந்தாள் - அந்த*

1172. ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிரம்
மாறுதல் இன்றி மனோவச மாஎழில்
தூறது செய்யும் சுகந்தச் சுழியது
பேறது செய்து பிறந்திருந் தாளே. 35

---

*விந்துசத்தியினின்றும் உமாசக்தி தோன்றினள் என்பதாம்.*

*இதனால், சத்தி விந்துத் தானத்தில் உருவப் பொருளாய்க் காட்சியளித்துப் பின் அடியவரை ஆதாரயோக முடிவிலும், நிராதார யோக முடிவிலும் மனோலயம் பெற்றவராக ஆக்குதல் கூறப்பட்டது.*

***1173. தெளிவுரை :- சந்திரகலையில் ஈறாக விளங்கும் சூக்குமை வாக்குகளான பரசரீரத்தில் ஏந்திழையாகிய சத்தி மேற்கூறிய அவ்விடத்தே இனிது விளங்கயிருக்கின்றாள், பல புவனங்களில் உள்ளோரும் தாம் பேரானந்தத்தை அடைதற்குரிய செவ்விய வழியைப் பொருந்தித் தன்னை, 'போற்றி' என்று சொல்லித் துதித்துப் பெருமுயற்சி செய்யவும் சத்தி அவர்கள் முன் வெளிப்படாமல், மேற்கூறிய இடத்தே அந்த ஆனந்தம் விளையும்படி அங்கே விளங்கி நிற்கின்றாள்.***

***குறிப்புரை :-*** *ஈறு - உச்சி. அதன் கண் விளங்கும் மதிமண்டமலமாகிய சகத்தாரம். 'ஏந்திழை ஈறு இருந்தனள்' எனவும், 'மங்கை நல்லாள், புவனங்கள் வருந்த, திருந்திய ஆனந்தம் அதில் ஆக இருந்தனள்' எனவும் கூட்டி முடிக்க. "ஈறு" என்பது ஏழாவதன் தொகையில் ஒற்றிரட்டாமை, இரண்டாவதற்குத் திரிபு ஓதிய இடத்து நின்ற இலேசினால் அமையும். (தொல் - எழுத்து. 158). போற்றி செய்து ஏத்தி - துதித்து வணங்கி. வருந்த - முயற்சிக்க.*

*இதனால், மேற்கூறிய ஆதாரத்தது சிறப்புக் கூறப்பட்டது.*

***1174. தெளிவுரை :- சத்தியும், சிவனும் தம்மிற் கூடிநின்று, தம்மைப் போலவே மங்கையர் ஐவரையும், அவர்கட்கு ஏற்ற காளையர் ஐவரையும் கை கோத்துவிட்டு, அவர்களது கருத்தையும் செயலையும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் அத்தம்பதியர் தங்களுள் அன்பு செய்து கூடித் தங்கள் தொழிலைக் கடமையாக நன்கு நடாத்தி வருகின்றார்கள்.***

***குறிப்புரை :-*** *சத்தியும், சிவனும் இங்குக் குறிக்கப்பட்ட நிலை, வாகீசுவரியும், வாகீசுவரனுமாய் நிற்கின்ற நிலையாம். கொங்கை*

**1173.** இருந்தனள் ஏந்திழை ஈறுஅதில் ஆகத்
திருந்திய ஆனந்தம் செந்நெறி நண்ணிப்
பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி
வருந்த இருந்தனள் மங்கைநல் லாளே. **36**

---

*நல்லார் ஐவர், 'மனோன்மனி, மகேசுவரி, உருத்திராணி, திரு, வாணி' என்பவரும் அவருக்கு ஏற்ற காளையர் ஐவர் முறையே, 'சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன்' என்பவரும் ஆவர். இவர் செய்யும் செயல், முறையே, 'அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல்' என்பவையாம். இவர்களை இங்குக் குறித்தது முறையே, 'ஆஞ்ஞை, விசுத்தி, அனாகதம், மணிபூரகம், சுவாதிட்டானம் - மூலாதாரம்' என்னும் ஆதாரங்களில் வைத்து. எனவே, சத்தியும் சிவனும் வாகீசுவரியும், வாகீசுவரனுமாய் நிற்றல், அஞ்ஞைக்கு மேல் உள்ள தானங்களிலாம். ஆகவே, 'சத்தி சிவங்கள் இங்ஙனம் நிற்றலால், யோக நெறி, நின்று பயன் தருகின்றது' என்பது பெறப்பட்டது.*

*"மாரன்" என்பது 'அழகன்' என்னும் அளவினதாய் நின்றது. அங்குலி - கை விரல்கள் கூட்டுதல் - இருவர் கைகளையும் கோத்து விடுதல். 'மணம் செய்வித்தனர்' என்றபடி. "அகம், புறம்" என்பன ஆகுபெயராய், கருத்தையும் செயலையும், "பார்த்தனர்" என்பது அவர்கள் அவ் ஐவருடனும் உடனாய் நிற்றலையும் குறித்தன. 'கொங்கை நல்லாள்' என்பது பாடம் அன்று. "குமாரர்கள்" என்பது பருவம் குறித்து நின்றது. இலய நிலையின் கீழ்வந்து அதிகார நிலையில் நிற்பவர் என்பது தோன்ற, இவ்வாறு கூறினார். "சடங்கு" என்றது, திருமணச் சடங்கையும், தங்கட்கு உரிய கடமைகளையும்.*

*இதனால், சத்தியும், சிவனும் மேல் ஆதாரத்தினின்று, கீழ் ஆதாரங்களைப் புரந்தருளுதல் கூறப்பட்டது.*

*1175. தெளிவுரை :- புறத் தொழிலைச் செய்யும் அளவில் தவத்தில் நிற்போர், உடம்பில் அகமுகத் தியானித்தலில் பழகுவார்களாயின், அந்தத் தியான உணர்வு தொடர்ந்து முதிர்ந்து, சுழுமுனை பற்றுக் கோடாக மேல் ஏறிச் சென்று, உயிர்களின் அன்பிற்குச் சார்பாகிய சத்தியிடத்தில் மேற்கூறிய இடத்தில் சென்று அடங்கும்.*

*குறிப்புரை :- சடங்கு - இயம, நியமாதிச் சடங்குகள். கடம் - கும்பம். 'அதனால், அங்ஙனம் தியானிக்க என்பது குறிப்பெச்சம்*

**1174.** மங்கையும் மாரனுந் தம்மொடு கூடிநின்
றங்குலி கூட்டி அகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாருங் குமாரர்கள் ஐவரும்
தங்களின் மேவிச் சடங்குசெய் தார்களே. **37**

**1175.** சடங்கது செய்து தவம்புரி வார்கள்
கடந்தனி னுள்ளே கருதுவ ராயின்
தொடர்ந்தெழு சோதி துணைவழி ஏறி
அடங்கிடும் அன்பின தாயிழை பாலே. **38**

---

*“உள்ளே கருதுவராகில்” எனப் பின்னர்க் கூறியதனால், முன்னர், சடங்கது செய்தல் புறத்தின்கண்ணதாயிற்று. கூடம் - குடம்; என்றது, மண்ணாற் செய்யப்படும் குடம் போல்வதாகிய உடம்பைக் குறித்தது. அதன் உள்ளே கருதுதல், ஆதார பங்கயங்களிலாம். எனவே, புறமாவதும் உடம்பின் கண்ணதேயாய், சடங்காவன கர நியாசம், அங்க நியாசம் முதலியனவாம். அன்பினது ஆயிழை - அன்பினது வடிவாய அன்னை.*

*இதனால், மேற்கூறிய குமாரர்கள் ஐவரையும் அவர்தம் தேவியரோடு முறையாகத் தியானித்துச் செல்வோர், விந்துத் தானத்தில் மங்கை நல்லாளை மாரனோடு தலைப்படுவர் என்பது கூறப்பட்டது.*

*1176. தெளிவுரை :- துணைவழி ஏறுதற்குத் துணையாகின்ற மந்திரம் முதல் நிலையாகிய மூலாதாரத்திலே உள்ளது. அதுவே இரண்டாவது முதல் ஏழாவது முடிய உள்ள ஆறு நிலங்களின் தாமரைகளிலும் ஏற்ற பெற்றியிற் பொருந்தி, அவற்றைக் காத்து நிற்கும். அதனால், அம்மந்திரம் ஒன்றே அந்நிலங்களில் அழுந்தி விடுவதாகிய நிலையினை விடுத்து மேன்மேற் செல்லுதற்குச் சிறந்த துணையாம்.*

*குறிப்புரை :- பனிமலர் ஆறு - ஆதாரங்கள் ஆறினும் உள்ள நாலிதழ் முதல் ஆயிரம் இதழ் வரையுள்ள தாமரை மலர். ‘திகழ்ந்தெழு மந்திரம் மூலத்துமேலது; பனி மலர் ஆறினும் பாலித்திருக்கும்; ‘ஆலித்திருக்கும் அவற்றின் அகம்படி சீலத்தை நீக்க அதுவே முத்தாம்’ எனக்கொண்டு கூட்டி முடிக்க. ஆலித் திருக்கும் அவை - மகிழ்ந்து அழுந்தியிருத்தற்கு இடமாகிய அவை. அகம்படி சீலம் -*

1176. பாலித் திருக்கும் பனிமலர் ஆறினும்
ஆலித் திருக்கும் அவற்றின் அகம்படி
சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திரம்
மூலத்தின் மேலது முத்தது வாமே. 39

---

*ஆதாரங்களினுள்ளே அழுந்தியிருக்கும் நிலை.*

*மந்திரம், பிரணவம், அது பிராசாதமாய்ப் பரிணமித்து ஆறு ஆதாரங்களிலும், அவற்றிற்கு மேலும் பல கூறுகளாய் விளங்கி நிற்பதாம். ''முத்து'' என்றது, உயர்வுணர்த்தியவாறு. இதற்கு ஈண்டைக்கு இயைபில்லாத ஒரு பொருளையும் கூறுவார் உளர். மூலாதாரத்திலுள்ள குண்டலினி சத்தியும் சோதியும் பிரமரந்திரம் வரையில் செல்ல உதவும் மந்திரம் பிரணவ பஞ்சாக்கரமாகும். அன்றி ஸ்ரீம், ஹ்ரீம் என்பாரும், ஹம், ஸம் என்பாரும் உளர்.*

***1177. தெளிவுரை :-** மேல் (பா.1155இல்) கூறப்பட்ட யோக நற்சத்தி முத்து வதனம் முதலியவைகளை உடையவளாய், என் உள்ளத்தில் விரும்பி இருக்கின்றாள்.*

***குறிப்புரை :-** எனவே, 'அவளை அவ்வாறு தியானித்தல் வேண்டும்' என்பதாம். "சத்தி" என்பதை முதலிற்கொள்க. முத்து, பற்களைக் குறித்த உவமையாகுபெயர். வதனம் - முகம்; என்றது வாயினை. சதுரி - திறமை உடையவள். சகளி - உருவத் திருமேனி கொண்டவள். "பைந்தொடி" என்பது. 'தேவி' எனப் பொருள் தந்தது. ஏனையவை வெளிப்படை பத்துக்கரம் கூறப்படுதலால் ஐம்முகம் உடையளாதல் பெறப்பட்டது. சகளம் - வடிவம். வித்தகம் - மேன்மையான வியக்கத்தக்க பேரறிவு. அதனையுடையவள் வித்தகி.*

*இதனால் யோக சத்தியது வடிவு கூறப்பட்டது.*

***1178. தெளிவுரை :-** அக்கினி மண்டலம் முதலிய மூன்று மண்டலங்களுடன் அவற்றிற்குரியோராகிய, 'அக்கினிதேவன், நிலவோன், கதிரோன்' என்னும் மூவரும் கலந்து, அவரே சத்தியாய் முன்னிற்பர். அவர்களுக்கு உள்ளீடாக ஓங்காரத்தினின்றும் மேலெழுந்து செல்கின்ற மந்திர ஒளி உளதாகும். அக்கினி மண்டலத்துள் திருவடியும், வெங்கதிர் மண்டலத்துள் உடலும், மதி மண்டலத்துள் முகமுமாக ஒளிப்பிழம்பாய் நாம் மறந்தாலும் நம்மை விட்டு விலகாத வண்ணம் விளங்குவள் என்பது கருத்து.*

***குறிப்புரை :-** 'மேவிய மண்டலம் மூன்றுடன்' என்பதை. "கூடி"*

**1177.** முத்து வதனத்தி முகந்தொறும் முக்கண்ணி
சத்தி சதுரி சகளி சடாதரி
பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி என்னுள்ளம் மேவிநின் றாளே. **40**

**1178.** மேவிய மண்டலம் மூன்றுடன் கீழ்எரி
தாவிய நற்பதத் தண்மதி அங்கதிர்
மூவருங் கூடி முதல்வியாய் முன்னிற்பர்
ஒவினும் மேலிடும் உள்ளொளி ஆமே. **41**

---

*என்பதற்கு முன் கூட்டியுரைக்க. "கீழ் தாவியநற்பதம்" என்பவற்றால் முறையே எரியும், மதியும் பிண்டத்தில் நிற்குமிடம் குறிக்கப்பட்டன. அதனால், கதிருக்குரிய இடம் இடைப்பட்டது என்பதுதானே பெறப்படும். தாவிய நற்பதம் - உயரநிற்கும் இடம்; எனவே, அக்கினி அடியிலும், கதிர் இடையிலும், மதி முடியிலும் நிற்பனவாதல் அறிக. எரி முதலிய மூன்றும் அவ்வவற்றிற்குரிய தேவரைக் குறித்தன. அவரே சத்தியாய் முன்னிற்றலாவது, சத்தியது கலப்பால் அவனேயாக அறிய நிற்றல். அவர்களை 'அங்ஙனம் அறிந்து நோக்க உள்ளொளி மேலிடும்' என்பது ஈற்றடியில் கூறப்பட்ட பொருள்.*

*இதனால், மும்மண்டலங்களில் உள்ள மூவராகிய ஆதாரங்களைச் சத்தியின் வடிவாகக் கொண்டு வழிபடுதலும் உள்ளொளியைப் பெறுதற்கு வழியாதல் கூறப்பட்டது.*

***1179. தெளிவுரை :-*** **மேற்கூறிய உள்ளொளி உயர்ந்து செல்கின்ற** ***ஆறு ஆதாரங்களாகிய உறுப்புக்கள் வெண்மையான வேள்வித் தீயிலும் அவற்றின் அதிதேவர் வழியாகச் சத்தியைப் பொருத்தி விளங்கும். அதனால், அத்தீயின் வழியாகத் தேவர்கள் ஏற்கின்ற அவிசுகளும், யாவர்க்கும் எல்லாப் பயனையும் தருகின்ற சத்தியே யாய் நிற்கும்.***

***குறிப்புரை :-*** ***ஆகையால், 'ஆதார தேவர்களும், ஏனைத் தேவர்களும் சத்தியால் நிலை பெறுகின்றவர்களேயாவர்' என்பதாம். "உள்ளொளி யோங்கிய மூவிரண்டு அங்கங்கள்" எனக்கூட்டுக. "வெள் ளொளி அங்கி" என்றது, 'இனிது வளர்க்கப்பட்டு விளங்குகின்ற தீ', எனப் பொருள்தந்து, வேள்வித் தீயைக் குறித்தது. 'மூவிரண்டு அங்கங்கள்' என்றதனால், அவற்றின் அதிதேவரை, "அவர்" எனச் சுட்டியொழிந்தார். "கள்ளவிழ் கோதை" என்னும் உயர்திணையிடத்து இரண்டனுருபு தொக்குநின்றது. 'மூவிரண்டு அங்கங்கள் அங்கியில் அவரொடு மேவிக் கோதையைக் கலந்து உடனே நிற்கும்' என***

**1179.** உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்
வெள்ளொளி அங்கியின் மேவி அவரொடும்
கள்ளவிழ் கோதைக் கலந்துட னேநிற்கும்
கொள்ளவி சித்திக் கொடியமு தாமே. 42

**1180.** கொடிய திரேகை குருவுள் ளிருப்பப்
படிவது வாருணைப் பைங்கழல் ஈசன்
வடிவது ஆனந்தம் வந்து முறையே
இடுதல் ஆறங்கம் ஏந்திழை யாளே. 43

---

*இயைத்து முடிக்க, சித்திக் கொடி சத்தி. 'சித்திக்கொடியாகிய அமுதம்' என உருவகங்காண்க. 'அவி அமுதேயாம்' என்க. 'சுத்திக் கொடி' என ஓதிப் பிறிது பொருளுரைத்தல் பொருந்தாமை அறிக.*

*இதனால், சத்தி யோகியர்க்கு உள்ளமுதாதல் போலத் தேவர்க்கு வெளியமுதாய் நிற்றல் கூறப்பட்டது.*

*1180. தெளிவுரை :- "சித்திக்கொடி" என மேற்கூறப்பட்ட சத்தியது உருவம் ஆஞ்ஞை முதலிய மேல் நிலங்களில் வெளிப்படாது மறைந்து நிற்கும் நிலையில் யாவரும் மூழ்குவது சிற்றின்பத்திலேயாம். ஆகவே, சிவனது வடிவாய் உள்ள ஆனந்தத்தை (சிவானந்தத்தை, ஆறு ஆதாரங்களிலும் முறையே வந்து வழங்குகின்ற முதல்வி யோக சத்தியே.*

*குறிப்புரை :- இரேகை - மின்னல்போலத் தோன்றுகின்ற ஒளி யுருவம். குரு - திண்மை; என்றது உயர்வினை. அது மேல் நிலமாகிய ஆஞ்ஞை முதலியவைகளை உணர்த்திற்று. அந்நிலங்களில் சத்தி உருவம் எப்பொழுதும் இருப்பினும், அந்நிலங்களில் சத்தியைக் காணுமளவு யோகம் முதிரப் பெற்றவர்கட்கே அது காட்சிப் படுவதாகும். அந்நிலையில்தான் சிவானந்தம் தோன்றும். அதனை அந்நிலையில் எங்கும் ஏற்ற பெற்றியால் வழங்குபவள் யோக சத்தி. ஆகவே, அவளை அங்ஙனம் அடையாத பொழுது யோகியவரும் சிற்றின்ப வேட்கையைக் கடக்கமாட்டார் என்பது இதனுள் கூறப்பட்டது. கொடி - அம்மை. ரேகை - மின்னொளி போன்ற அம்மையின் உரு. குருவை அண்டத்துள்ளே பிரமன்பாலம் எனவும் உத்தர குருவெனவும் வழங்குவர். அதுபோல பிண்டத்துள் உச்சியைக் குறிப்பர் யோகிகள்.*

*வாருணை - நீர்ச்சத்தி. மதிமண்டலத்து ஊறும் அமுதம். இவள் சிற்றின்ப வேட்கையை உண்டாக்கி இன்புறுத்துபவள். 'வாருணைக்கண்' என உருபு விரிக்க. 'ஈசன் வடிவதுவாகிய ஆனந்தத்தை ஆறங்கங்களிலும் வந்து முறையே இடும் முதல் ஏந்திழையாள்' எனக் கூட்டுக. 'அவ் ஏந்திழை யாளே' எனச் சுட்டு வருவித்துக் கொள்க. 'படியது' என்பது பாடம் அன்று.*

*இதனால், சத்தி, சுவாதிட்டானம் முதலிய ஆதாரங்களில் மறைந்து நின்று சிற்றின்பத்தையும், ஆஞ்ஞை முதலிய மேல் நிலங்களில் வெளிப்பட்டு நின்று சிவானந்தத்தையும் தருதல் கூறப்பட்டது. இவ்வானந்த வாருணியாகிய அமுதத்தைப் பராசத்தி அங்கங்கள் தோறும் வந்து வந்து அன்னம் பரிமாறும் தாய் போலப் பரிமாறுவாள் என்பதனை "இடும்" என்று அருளியவாறு.*

***1181. தெளிவுரை :-*** *மேற்கூறப்பட்ட யோக சத்தி 'அயன், மால், உருத்திரர்' என்னும் மும்மூர்த்திகளும், அவர்களுக்குத் தேவியராய் உள்ளோரும், ஒளியை உடைய ஆதாரங்கள் ஆறுமாய் உள்ள ஆதார சத்தியும், 'கலை' என்னும் பொருளாகச் சொல்லப்படுகின்ற மேதை முதல் உன்மனை ஈறாக உள்ள பதினாறு நிலைகளையுடைய குண்டலினியும், மக்கள் அறிவில் பொருந்திப் புலன்களை அறிவிக்கின்ற திரோதாயியும், மந்திர மகேசுவர மகேசுவர மகேசுவரி களாய் உள்ள கூட்டத்தினரும் தன்னையடைந்து துதிக்கும்படி மேற்கூறிய மேல் நிலங்களில் எழுந்தருளியிருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *'ஏந்திழையாளும்' என்பது பாடமன்று. "மூவர்" எனப் பின்னர் வருதலின், வாளா, "ஏந்திழையார்" என்றார், காந்துதல் - ஒளி வீசுதல். ஆரம் - சக்கரம். 'கலையாகிய முதல்' என்க. முதல் பொருள். பராசத்தியின் சிறுகூறாதல் பற்றித் திரோதாயினை வேறுபோலக் கூறினார். (ஆயம் - மகளிர் கூட்டம்).*

*இதனால், யோக சத்தியது உயர்வு இனிது விளங்கக் கூறப்பட்டது.*

***1182. தெளிவுரை :-*** *'சத்தி' என்று யாவராலும் போற்றப்படுகின்ற தேவி, வேண்டுவார் வேண்டும் பயனைப் பெறுதற்குத் துணைபுரிகின்ற ஒரு கன்னிகை. ஆயினும், வீடு பேற்றைத் தரும் முதல்வி அவளே என்பதைப் பலர் அறியமாட்டாதவராய் அவளிடத்துத் தாம் செய்கின்ற அன்புக்கு உலக வாழ்வே பயனாக எண்ணிஅந்த அன்பினை வீணாக்கி யொழிகின்ற அறிவிலிகள் அவளை உலக வாழ்வை அளிப்பவளாகவே சொல்லிப் புகழ்ந்து,*

1181. ஏந்திழை யாரும் இறைவர்கள் மூவரும்
காந்தாரம் ஆறும் கலைமுதல் ஈரெட்டும்
மாந்தர் உளத்தியும் மந்திரர் ஆயமும்
சார்ந்தனர் ஏத்த இருந்தனள் சத்தியே. 44

1182. சத்தி என்பாள்ஒரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போல் கதறுகின் றாரே. 45

---

*அறிவுடையோரால் நாய் போன்றவராக வைத்து இகழப்படுகின்றனர். சாதகப் பெண்பிள்ளை - அன்பர்க்கு அருள் செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவள்.*

***குறிப்புரை :-*** *'இவரது நிலை இரங்கத் தக்கது' என்பது குறிப்பெச்சம். பொன்னும், மணியும் போல்வனவற்றை வாரி வழங்கும் வள்ளன்மையுடையவரிடத்துக் கூழும், காடியும் இரந்து பெறுவாரை யொத்தலின், "அப்பாவிகள்" என்றும்' அவர், தாம் எல்லாம் அறிந்தவர் போலக் கூறுதலை, நாய் விருந்தினரையும் கள்வர்போலக் கருதிக் குரைத்தலோடு உவமித்தும் கூறினார். ''பாவிகள் - புத்தியுடையோர்'' ஆதலின், அப்பாவிகள், புத்தியில்லாதவர் என்க. இனி, 'அந்தத் தீவினையுடையோர்' என உரைத்து, இரக்க மிகுதியால் அவ்வாறு கூறியதாகக் கொள்ளலுமாம்.*

*இதனால், சத்தியை யோக சத்தியாகக் கண்டு வழிபட்டு முத்திப் பயன் பெறுதலே அறிவுடைமை யாதல் கூறப்பட்டது.*

***1183. தெளிவுரை :-*** *பிறிது பயனை வேண்டாது தன்னைப் பெறுதலையே பயனாகக் கருதி, மந்திரங்களைச் சொல்லி, மறவாது தன்னை நினைக்கவும் வல்லவர்களுக்கே அம்மை தனது தாமரை மலர் போன்ற அழகு பொருந்திய சிவந்த திருவடிகளை அவர்களது உள்ளக் கமலத்தில் பதிய வைத்துக் காட்சி வழங்குகின்றாள். ஆகவே, அந்நிலையில் நின்று அவளது திருவடிகளைக் காண வல்லார் உலகருள் எவர்!*

***குறிப்புரை :-*** *முதலடியை இறுதியில் வைத்து உரைக்க. பிற பயன் கருதுவார் கோடுதல் (வளைதல்) உடையராகலின், அவரது நிலை நேரியதன்றாதல் தோன்ற, "நேரே நின்று" என்றார். சேவடி சிந்தை வைத்தல், அவ்விடத்துக் காட்சி தருதலை உணர்த்திற்று.*

1183. ஆரே திருவின் திருவடி காண்பர்கள்
நேரேநின் றோதி நினையவும் வல்லார்க்குக்
காரேய் குழலி கமல மலரன்ன
சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே. 46

1184. சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து
முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து
நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. 47

---

*இதனால், மேலை மந்திரத்துக் கூறிய நிலையது அருமை கூறப்பட்டது.*

***1184. தெளிவுரை :-*** *தேவியை முதலில் உங்கள் உடம்பில் சிரம் முதலிய இடங்களிலே வைத்தும், பின்பு இருதயம் முதலிய உறுப்புக்களிலே வைத்தும், அதன்பின் உங்கள் உள்ள திருவுருவத்தில் வைத்தும், அதன்பின் மூலம் முதலிய ஆதாரங்களில் வைத்தும் வழிபட்டு அவளோடு ஒன்றாகி நில்லுங்கள். அங்ஙனம் வழிபடும் பொழுது பிறவற்றை நினைத்தலாகிய குற்றத்தில் அகப்படுத்தப்படாத மனத்தை அவ்விடங்களிலே பிறழாது நிறுத்துதலையும், அவ்வவற்றிற்கு ஏற்ற மந்திரங்களில் அவளை எண்ணுதலையும் இன்றியமையாததாகக் கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *சமாதி - தியானம் (இடைவிடாது எண்ணுதல்). 'மந்திரம், கிரியை, பாவனை' என்னும் வழிபாட்டுப் பகுதி மூன்றனுள், "சந்தையில் வைத்து" என்பதனால் மந்திரமும், "நினைவு வைத்து" என்பதனால் பாவனையும், ஏனையவற்றால் கிரியையும் கூறப்பட்டன. சிராதிகளாவன, 'தலை, முகம், மார்பு, குய்யம், பாதம் முதலாக எஞ்சியவை' என்னும் ஐந்துமாம். இவ்விடங்களில் அம்மையின் தலை முதலியன முறையே பஞ்சப் பிரம, மந்திரங்களால் வைத்து எண்ணப்படும். இருதயம் முதலியவை யாவன, 'இருதயம், சிரசு, சூந்தல், கவசம், நேத்திரம், அஸ்திரம்' என்னும் ஆறுமாம். இவற்றில் அம்மையின் அங்கங்கள் அவ்வம் மந்திரங்களால் முறைப்படி வைத்து எண்ணப்படும். முந்தை - முன்னுள்ள இடம்; இஃது ஆகுபெயராய் அங்கு உள்ள திருவுருவத்தைக் குறித்தது. திருவுருவத்தில் மேற்கூறிய இருவகை மந்திரங்களால் மேற்கூறிய இருவகையாகவும், வேறு பல மந்திரங்களால் விரிவாகவும் வைத்து அம்மை வழிபடப்படுவாள். 'இருதயம், மூலம்' என்பன உபலக்கணமாய் நின்றன. மூலம் முதலிய ஆதாரங்களில் வைத்து*

**1185.** சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்
சிவாதியில் ஆகும் சிலைநுத லாளை
நவாதியில் ஆக நயந்தது ஓதில்
உவாதி அவளுக் குறைவில தாமே. **48**

---

*வழிபடுதலே யோகம் என்பது வெளிப்படை யோகத்திலும் கிரியை உளதாதலை நினைக்க. சந்தை - ஓசை; அஃது அதனையுடைய மந்திரத்தை உணர்த்திற்று. இங்ஙனம் செய்யும் வழிபாடுகளால் தேவியது காட்சியை நாளடைவில் பெறுதல் கூடும் என்பதாம்.*

*இதனால், சத்தி தன் அடியார்களது உடம்பும், அவர்கள் முன் நிற்கும் படிவங்களும் ஆகிய ஆதாரங்களில் நின்று அருள் புரிதல் கூறப்பட்டது.*

***1185. தெளிவுரை :-*** *தன்னைத் தியானித்துத் தன்னிடத்து வேறற ஒன்ற நிற்கும் உணர்வுடையவர்கட்குத் தலைவியாய், 'சிவா' என்பதை முதலாகக் கொண்ட மந்திரத்தால் பொருந்தி நிற்பவளாகிய சத்தியை, 'நவாக்கரி' எனப்படும் ஒன்பது பீஜங்களில் பொருந்த வைத்து அந்த மந்திரத்தை விருப்பத்துடன் ஓதினால், செயற்கையாய் நிற்கின்ற நிலைமை அவளிடத்துப் பொருந்துதல் இல்லையாம்.*

***குறிப்புரை :-*** *"நவாதி" என்பதில் 'பீஜம்' 'ஆதி' எனப்பட்டது. வித்து, 'முதல்' எனப்படுமாதலின். "அது" என்றது "சிவாதி" என முன்னே கூறப்பட்ட மந்திரத்தை, உவாதி - உபாதி; செயற்கை. சத்திக்குச் செயற்கை நிலையாவது, மலத்தின்வழி நின்று மறைத்தலைச் செய்தல். 'அஃது இலதாம்' எனவே, 'இயற்கையான தனது விளக்க நிலையை உடையவளாய் நிற்பாள்' என்பது போந்தது. முதலடி உயிரெதுகை.*

*இதனால், 'சத்தியை நவாக்கரியோடு கூடிய அஞ்செழுத்து மந்திரத்தால் வழிபடின் மருள்நிலை நீங்க, அருள்நிலையைப் பெறலாம்' என்பது கூறப்பட்டது. நவ பீஜம் 'நவாக்கரிசக்கரம்' என்னும் அதிகாரத்தில் கூறப்படும்.*

***1186. தெளிவுரை :-*** *சத்தி இந்நிலவுலகத்தில் தனக்கு இடமாகக் கொண்டு எழுந்தருளியுள்ள தலங்களில் அவள் எழுந்தருளியிருக்கின்ற வகைகளை விருப்பத்துடன் உணர்ந்து, நாள்தோறும் அவ்விடங்களை அடைந்து, அவளுக்குரிய மந்திரத்தோடு நீங்காது நிற்கின்ற 'பிரணவம், பீஜம், சத்தி, கீலகம்'*

**1186.** **உறைபதி தோறும் உறைமுறை மேவி**
**நறைகமழ் கோதையை நாள்தொறும் நண்ணி**
**மறையுட னேநிற்கும் மற்றுள்ள நான்கும்**
**இறைதிளைப் போதிடில் எய்திட லாமே.** **49**

---

*என்னும் நான்கினையும் தெய்வத்தன்மை மிகும்படி ஓதி வழிபட்டால், பயன்கள் பலவற்றை அடையலாம்.*

***குறிப்புரை :-*** *உறை முறையாவன : காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, அன்னபூரணி, அபிராமி முதலாகப் பலவாம். ஆங்காங்கு உள்ள அவ்வகைகளை அறிந்து அன்புடன் வணங்கின். அவ்வவற்றால் அடையும் பலன்கள் கைகூடும் என்பதாம். இறை - இறைமை, தெய்வத் தன்மை, திளைத்தல் - மிகுதல், 'திளைப்ப' என்னும் செயவென் எச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. எய்துதலும், 'அவ்வப்பயன்கள்' என்னும் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க. தலங்கள் பலவற்றில் சத்தி பீடங்களாய் உள்ளவை அம்மைக்குச் சிறந்தனவாம்.*

*1187.* ***தெளிவுரை :-*** *ஞானிகட்கு உரிய இருவினைப் பயனாவன, அம்மையிடத்தில் அன்பு செய்தலும் 'செய்யாமையுமாகிய அவற்றால் வருவனவாம்'.*

***குறிப்புரை :-*** *"ஆகும்" என்பது எச்சம். குலாம் - விளங்குகின்ற, மாதுரிகை - இனிமையைச் செய்பவள். கைதவம் - வஞ்சனை; அஃது அவளை ஐய உணர்வுடன் எண்ணுதல். 'கை தவமும் அஃது இன்றிக் கருத்துறு மாறும்' என்க. இவற்றால் விளையும் பயனை இவையேயாக உபசரித்துக் கூறினார். 'இருவினைப் பயன் மாதுரிகையோடு கைதவமும், அஃது இன்றிக் கருத்துறுமாறுமாம்' என இயையும். 'கருத்து அவள்பால் உறுமாறு' என்க. 'பிறரெல்லாம் எண்ணும் புண்ணிய பாவங்கள் போலாது ஞானியர் எண்ணும் புண்ணிய பாவங்கள் அம்மையை நினைதலும், நினையாமையுமேயாம்' என்றவாறு. எனவே, 'அவரது எண்ணமே உண்மை' என்பது அறியப்படும். ஒடு உருபைக் கண்ணுருபாத் திரித்துக் கொள்க. அன்றி, ஒடு 'அதனொடு மயங்கற்' பொருளது எனினுமாம்.*

*இதனால், உயர்ந்தோர்க்குச் சத்தியது வழிபாடு இன்றியமையாதல் கூறப்பட்டது.*

**1187.** எய்திட லாகும் இருவினை யின்பயன்
கொய்தளிர் மேனிக் குமரி குலாம்கன்னி
மைதவழ் கண்ணிநன் மாரிதுர்க் கையொடு
கைதவம் இன்றிக் கருத்துறு மாறே. **50**

---

*1188. **தெளிவுரை :-** சத்தியிடத்து மனம் செல்லும் பொழுது அதனை நன் மனமாகச் செய்து, அதன்கண் உள்ள எண்ணங் களெல்லாம் குவிகின்ற இடமாகிய இருதயத்தில் ஒப்பற்றவளாகிய அவளையே முதல்வியாக உணர்ந்து தியானி. அங்ஙனம் தியானித்தால், அவள் உன்னை மேன் மேல் உயரச் செய்வாள். அதனால், நீ முடிவில் சிவனது எண்குணங்களையும் பெற்று விளங்கலாம்.*

*குறிப்புரை :- மனம் திருந்தியபொழுது உண்டாகின்ற எண்ணம், 'எல்லாம் சத்தியின் செயலே' என்பதும், 'அவளையின்றி நமக்குச் சுதந்திரம் இல்லை' என்பதும், மற்றும் இவை போல்வனவுமாம். சிவனது எண்குணங்களாவன: 'தன்வயம், தூய உடம்பு, இயற்கையுணர்வு, முற்றுணர்வு, இயல்பாகவே பாசம் இன்மை, முடிவிலாற்றல், பேரருள், வரம்பில் இன்பம்' என்பன.*



துர்க்கை

**1188.** கருத்துறுங் காலம் கருது மனமும்
திருத்தி யிருந்தவை சேரும் நிலத்து
ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மேன்மேல்
இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆமே. 51

**1189.** ஆமைஒன் றேறி அகம்படி யான்என
ஓமஎன் றோதிஎம் உள்ளொளி யாய்நிற்கும்
தாம நறுங்குழல் தையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே. 52

---

*"எண்குணத்துளோம்" (தி.6 ப.98 பா.10) என்று நாவுக்கரசரும் அருளிச் செய்தமையால், திருவருள் பெற்றோர் இவ் எண்குணங்களையும் பெறுதல் அறியப்படும்.*

*இதனால், சத்தியது வழிபாடு உயிர்களை மேன்மேல் உயரச் செய்து, முடிவில் சிவமாகச் செய்தல் கூறப்பட்டது.*

***1189. தெளிவுரை :-*** *யான் ஆமையைப்போல ஐம்புல ஆசைகளைத் திருவருளுக்குள்ளே அடக்கி, மெல்லென மேலேறிச் சென்று, புறத்தே செல்லாது அகத்தே நிற்பவனாகி, ஓங்காரத்தை உச்சரித்து, எம்போல்வார்க்கு உள்ளொளியாய் விளங்குகின்ற யோக சத்தியைத் தரிசித்த பின்பு, அவள் சந்திரமண்டலத்தில் உள்ள நறுமணம் பொருந்திய தாமரை மலரைச் சூடி வெளிநின்றாள்.*

***குறிப்புரை :-*** *ஐம்புல ஆசையை அடக்குவோர்க்கு ஐந்துறுப்புக களையும் ஓட்டிற்குள் அடக்கிக்கொள்ளும் ஆமை உவமையாதல்.*

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்*
*எழுமையும் ஏமாப் புடைத்து. - குறள், 126*

*எனவும்,*

*புலன் அடக்கித் தம்முதற்கண் புக்குறுவார்; போதார்*
*தலன்நடக்கும் ஆமை தக. - திருவருட்பயன், 94*

*எனவும் போந்தவற்றால் நன்கறியப்பட்டது. 'ஒன்ற' என்னும் உவம உருபின் இறுதி அகரம் தொகுத்தலாயிற்று. அகம்படி - அகத்தேபடிந்து நிற்பவன். 'என' - என்று ஆகி. 'ஓம்' என்பது அகரச் சாரியை பெற்று வந்தது. சந்திரமண்டலம், சென்னி. அங்குள்ளது ஆயிர இதழ்த் தாமரை மலர். அதனைச் சூடிநிற்றல். ஆஞ்ஞை முதலாக வெளிப்பட்டு நிற்றல்.*

**1190.** சூடிடும் அங்குச பாசத்துளை வழி
கூடும் இருவளை கோலக்கைக் குண்டிகை
நாடும் இருபதம் நன்னெடு ருத்திரம்
ஆடிடம் சீர்புனை ஆடக மாமே. **53**

---

*இதனால், ஐம்புலன்களை அடக்கிப் பிரணவ யோகம் செய்தால் யோக சத்தியைத் தரிசித்தல் கூடும் என்பது கூறப்பட்டது.*

***1190. தெளிவுரை :-*** *யோக சத்தியை அணுகும் வழி சுழுமுனா நாடி அவளது இருகைகளில் காணப்படுவன சங்கமும், குண்டிகையும், அவளுக்குரிய சீருத்திர மந்திரம் சிகாரமும், வகர ஆகாரமும் ஆகிய இரண்டெழுத்துக்களால் ஆகிய சொல். அவள் நடனம் புரிகின்ற அரங்கு 'புகழை உடைய பொன்மன்று' எனப்படும் புருவநடு.*

***குறிப்புரை :-*** *அங்குசம்போல மேலே வளைந்து நிற்கும் முதுகந் தண்டினைச் சூழ்ந்து செல்லும் கயிறு போன்றுள்ளது பற்றி, சுழுமுனை நாடியை, "அங்குச பாசத் துளை" என்றார். அங்குசப் பாசங்கள் அம்மைதன் ஆயுதமுமாதல் பற்றி, "சூடிடும்" என்றார். 'இரு கோலக் கையில் வளை குண்டிகை' எனக் கூட்டுக. ருத்திரம், சீருத்திரப் பிரச்சினம். அஃது ஆகுபெயராய் அதன்கண் உள்ள மந்திரத்தைக் குறித்தது. 'வேத பாகங்களில் சிறந்தது சீருத்திரமே' என்பதைக் குறிக்க. வாளா, 'மந்திரம்' என்னாது, 'ருத்திரம்' என்றார். 'சிவா' என்னும் பதம் சீருத்திரத்துள் பலவிடத்து வருதல் அறிக. எழுத்தை, 'பதம்' என்றது, "வகரக்கிளவி" (தொல். எழுத்து, மொழிமரபு சூ. 48) என்பது போல ஆகுபெயர். "ஆடிடும்" என்பது பாடமன்று, 'சீர்' என்பது மிகுத்துக் கூறப்படுதலை உணர்த்திற்று.*

*இதனால், யோகசத்தியை அணுகுதற்குரிய வழி முதலியன கூறப்பட்டன.*

***1191. தெளிவுரை :-*** *உலகிற்கு முதல்வராம் 'அயன், மால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன்' என்னும் ஐவர்தாமும் சக்தியை வழிபட்டே தங்கள் பதவியைப் பெற்றார்கள் மற்றும் காமன், சாமன், சூரியன், அங்கி, சந்திரன் என்னும் இவர்களும் வந்து வணங்க அவள் வீற்றிருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *இங்குக் கூறப்பட்ட அயன் முதலிய ஐவர் அணுபட்சத்தினர் என்க. 'சாமன்' என்பான் காமனுக்குத் தம்பி என்ப.*

*இதனால், 'சத்தியே கடவுளர் பலர்க்கும் தலைவி' என்பது கூறப்பட்டது.*

**1191.** ஆம்அயன் மால் அரன்ஈசன் சதாசிவன்
தாம்அடி சூடிநின் றெய்தினர் தம்பதம்
காமனும் சாமன் இரவி கனலுடன்
சோமனும் வந்தடி சூடநின் றாளே. **54**

**1192.** சூடும் இளம்பிறை சூலி கபாலினி
நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை
நாகும் நடுவிடை ஞாளம் உருவநின்
றாடும் அதன்வழி அண்ட முதல்வியே. **55**

---

***1192. தெளிவுரை :-*** *உலக முதல்வியாகிய சக்தி இளம் பிறையைச் சூடிக் கொண்டும், சூலத்தையும் கபாலத்தையும் ஏந்திக் கொண்டும் என்றும் மாறாத கொடிபோல்பவளாய் இருப்பாள். இயல்பாகவே மலம் நீங்கியவள்; நேரிய (நுண்ணிய வேலைப்பாடமைந்த) அணி கலன்களையணிந்தவள். அவள் நடு நாடியாகிய சுழுமுனையிடத்து அதன் உள்துளையில் பிராணவாயு ஊடுருவிச் செல்லும்பொழுது அவ்வாயுவின் வழியே நின்று நடனம் புரிவாள்.*

***குறிப்புரை :-*** *"சூடும்" என்பது முற்று. "இளம்பிறை" என்பதில் இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. 'நடுநாடியிடை' என மாற்றி யுரைக்க. 'நாளம்' என்பது "ஞாளம்" எனப் போலியாயிற்று. உருவுதலுக்கு வினை முதல் வருவிக்க. 'அதன்வழி நின்று ஆடும்' என்க. 'ஆடுதல்' இங்கு விளங்கித் தோன்றுதல்.*

*இதனால், யோகிகட்கு அவரது அகக்காட்சியில் சத்தி விளங்கி நிற்றல் கூறப்பட்டது.*

***1193. தெளிவுரை :-*** *ஆகாயம் முதல் பூமி ஈறாகப் பார்த்தால் நாம் கண்டது சத்தியைத் தவிர வேறொரு பொருளும் இல்லை. சத்தி தான் மாத்திரமாய் நின்று உலகிற்கு முதற்பொருளாகாது சிவத்தொடு கூடி நின்றே முதற்பொருளாயிருத்தல், உலகம், 'ஆண், பெண்' என்னும் இரு பகுதிப்பட்டே நிற்றலைக் காண்கின்ற அதனானே அறியப்படும்.*

***குறிப்புரை :-*** *"கனங்குழை யல்லது கண்டதொன்றில்லை" என்றது, 'சத்தியது கலப்பில்லாமல் எதுவும் இல்லை' என்றவாறு. "கண்டன், கண்டி" என்பன, 'சிவம்' என்றும் 'சத்தி' என்றும் வரையறுக்கப்படும் தன்மையுடையவர்களாய் இருத்தலைக் குறித்தது. காரணம் - காரணத் தன்மை. "குண்டிகை, கோளிகை" என்பன ஆடவர் பெண்டிர் அவயவங்களை, 'குண்டு' எனவும் 'குழி' எனவும் மறைத்து வழங்கும் வழக்குப்பற்றி வந்தன. கோளிகை - கொள்வது. 'கோளகை' என ஓதலுமாம். ஈற்றில், 'அறியப்படும்' என்னும்*

1193. அண்ட முதலா அவனி பரியந்தம்
கண்டதொன் றில்லைக் கனங்குழை யல்லது
கண்டனும் கண்டியு மாகிய காரணம்
குண்டிகை கோளிகை கண்டத னாலே. 56

1194. ஆலம்உண் டான்அமு தாங்கவர் தம்பதம்
சாலவந் தெய்தும் தவத்தின்பந் தான்வரும்
கோலிவந் தெய்தும் குவிந்த பதவையோ
டேலவந் தீண்டி யிருந்தனள் மேலே. 57

---

*சொல்லெச்சம் வருவிக்க. கண்டன் - சிவன். கண்டி - சத்தி. குண்டிகை - பெண். கோளிகை - ஆண்.*

*இதனால், சத்தியே உலக முதல்வியாயினும், அவள் சிவனைப் பற்றி நின்றே முதலாதல் கூறப்பட்டது.*

***1194. தெளிவுரை :-*** *சத்தி, எல்லா உலகங்களையும் கடந்து சென்று எய்தப்படுவதாகிய சிவலோகத்திற்குத் தலைவனாகிய சிவனுடனே மிக அணிமையில் வந்து யோகியர்தம் உச்சியிலே இருக்கின்றாள். அவளை அடைதலாலே, சிவன் நஞ்சை உண்டதனால் அமுதத்தை உண்ணப் பெற்ற அந்தத் தேவர்கள் பதவிகள் மிகக் கிடைக்கும்; அதுவேயன்றிச் சரியை முதலிய தவங்களால் வருகின்ற சிவலோகத்து இன்பமும் கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *'ஆலம் உண்டானால் ஆங்கு அமுதுண்ட அவர்' என உருபும் ஒருசொல்லும் விரித்துக் கொள்க. கோலுதல் - விலக்குதல். ''கோலி வந்து'' என்பதில் ''வந்து'' என்பது இட வழுவமைதி, "குவிந்த" என்றது, 'முடிந்த' என்றவாறு. ஐ - தலைவன். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, ஈற்றடியின் பின் 'அவளால்' என்பது வருவித்துக் கொண்டு உரைக்க.*

*இதனால், சத்தியது அருளால் எல்லா இன்பமும் எய்தப்படுதல் கூறப்பட்டது.*

***1195. தெளிவுரை :-*** *உணவுப் பொருளாய் நின்று உடம்பையும், அது வழியாக உயிரையும் வளர்ப்பவளாகிய சத்தி, நாலிதழ்த் தாமரையாகிய மூலாதாரத்திலிருந்து மேலேற்றிப் பல ஆதாரங்களில் ஊன்றப்பட்டு வியாபித்து முடிவில் தலைக்குமேல் உள்ள துவாதசாந்தத்தில் முடிகின்ற பிரணவ வடிவாய் இருந்து அருள் புரிகின்றாள். இதனை அறியாது, பலர் மேலாகிய ஞானயோகம்*

1195. மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்
காலால் வருந்திக் கழிவர் கணத்திடை
நாலாம் நளினம்நின் றேற்றிநட் டுச்சிதன்
மேலாம் எழுத்தினால் ஆமத்தி னாளே. 58

---

*முதிர்தற்பொருட்டு மலை, காடு, தீர்த்தக்கரை முதலிய இடங்களை அடைந்து துன்புற்று விரைய இறந்தொழிகின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. "ஏத்தி" என்பது பாடமாயின், 'ஓதி' என உரைக்க, நட்டு, நடப்பட்டு, ஆமம் - உணவுப் பொருள் ஈண்டு அமுதத்தை உணர்த்தியது. ஆமத்தினாள் - அமுதமயமானவள். 'பிறர் கணத்திடைக் கழிவர்' என்றதனால், யோகத்தினர் நீண்ட நாள் வாழ்தல் பெறப்படும். கால் - பிராணவாயு. பிராணவாயுவைக் கட்டுப்படுத்துபவரே நீண்டகாலம் இறப்பின்றி வாழ்வர்.*

*இதனால், 'சத்தியைப் பிரணவ யோகத்தினாலே தலைப்படல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1196. தெளிவுரை :-*** *அடப்படாத உணவுப் பொருளாயிருந்து பின் அடப்பட்ட உணவாகவும் ஆகின்ற சத்தி, வயிற்றுத் தீயும், குண்டத் தீயுமாகிய ஓமத் தீக்களிலும் ஒப்பற்ற ஒருத்தியாய் இருந்து அவற்றை அடையும் பொருள்களைச் செரிப்பித்தும், அவியாக்கியும் உதவுகின்றாள். அவளது பெயராகிய திருவைந்தெழுத்தையே துணையாகப் பற்றி அமைதியுற்று இருப்பவர்கட்கு, தவத்தின் முதல்வியாகிய அவள் இனிது விளங்கி அருள்புரிவாள்.*

***குறிப்புரை :-*** *"இருந்து" என்னும் எச்சம் "அன்ன மயத்தினள்" என்பதில் தொக்குநின்ற "ஆவாள்" என்பதனோடு முடிந்தது. உணவு கொள்ளுங்கால் வயிற்றுத்தீயும் ஓமாக்கினியாகக் கருதப்படுதலை நினைக. வயிற்றுத்தீயில் நின்று மண்ணுலகத்தவர்க்கும், வேள்வித் தீயில் நின்று விண்ணுலகத்தவர்கட்கும் உதவுதலைக் குறித்தவாறு. இவ்வாறு யாவர்க்கும் உதவுபவளாகிய அவளை அஞ்செழுத்து வழியாக அடைந்து பயன்பெற வேண்டும் என்பதாம். 'நமசிவ' எனப்பாடம் ஓதின் யாப்புக் கெடுதலை நோக்குக. சத்தி சிவங்கட்கு இடையே வேற்றுமையின்மையின், சிவனது நாமத்தைச் சத்தியது நாமமாகவே அருளிச் செய்தார். 'நமச்சிவாயை என்று' எனப் பாடம் ஓதலுமாம். நியமம், "நேமம்" என மருவிற்று. ஆமாம் - ஆமசயம். சீரணிக்கும் தானமாகிய குடலில் அன்னமயமாக உபகரிப்பவள்.*

**1196.** ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்
ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்
நாமம் நமசிவ யவ்வென் றிருப்பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றாளே. **59**

**1197.** நிலாமய மாகிய நீள்படி கத்தின்
சிலாமய மாகுஞ் செழுந்தர ளத்தின்
சுலாமய மாகும் சுரிகுழற் கோதை
கலாமய மாகக் கலந்துநின் றாளே. **60**

---

*இதனால், சத்தி உயிர்களைச் சில ஆதாரங்களில் நின்று காக்குமாறு கூறப்பட்டது. இப்பாடலை 956 எண் பாடலுடன் ஒப்பிடுக.*

*1197.* ***தெளிவுரை :-*** *நிலவைப் போன்ற ஒளியையுடைய படிகத்தின் நிறத்தையும், ஒளிக் கல்லாகிய முத்தின் நிறத்தையும் உடையவளும், செறிந்த சுரிந்த கூந்தலை உடையவளும் ஆகிய சத்தி பிரணவ கலைகளின் வடிவாய் யோகிகளிடத்தில் கலந்து நிற்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், அவளை அக்கலை வழியாகக் காணுதலே சிறந்தது' என்பது குறிப்பெச்சம். படிகமும் தரளமும் அவற்றின் நிறத்தை உணர்த்தின. சிலா - கல். சுலாமயம் - ஒளி சூழுந்தன்மை. கலாமயம் - கலைகளின் வடிவு.*

*இதனால், சத்தி யோகிகளிடத்தில் நிற்குமாறு கூறப்பட்டது.*

*1198.* ***தெளிவுரை :-*** *சத்தி சிவனோடு தாதான்மியமாய் ஒன்றுபட்டு நின்றே, உயிர்களின் அறிவு, வேதம் முதலிய எண்ணிறந்த நூல்கள், காலம் முதலிய தத்துவங்கள் ஆகிய எல்லாப் பொருளிலும் அத்துவிதமாய் ஒன்றுபட்டிருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, அவளைச் சிவனது பண்பாகவே உணர்தல் வேண்டும் தனித்த ஒருத்தியாக எண்ணுதல் கூடாது என்பதாம். 'கற்பனை' - எண்ணம்; என்றது அறிவை. "கலைஞானங்கள்" என்பதை 'ஞானக்கலைகள்' என மாற்றிக் கொள்க. இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலை. காதலன் - பரசிவம்.*

**1198.** கலந்துநின் றாள்கன்னி காதல னோடும்
கலந்துநின் றாள்உயிர்க் கற்பனை யெல்லாம்
கலந்துநின் றாள்கலை ஞானங்கள் எல்லாம்
கலந்துநின் றாள்கன்னி காலமு மாயே. **61**

---

*உயிர்க்கற்பனை - உயிர்கள் உடம்போடு கூட்டப்படுதலாகிய படைப்பு. கலைஞானம் - பாசஞானம். காலம் - காலதத்துவம். காதலனோடும் என்பது பதிஞானமாகக் கலந்திருப்பதையும் கற்பனையெல்லாம் என்பது பசுஞானமாகக் கலந்திருப்பதையும், கலைஞானமெல்லாம் என்பது பாச ஞானமாகக் கலந்திருப்பதையும் உணர்த்துகின்றன.*

*இதனால், "அண்ட முதலா அவனி பரியந்தம்" (பா.1193) அனைத்தும் சத்தி மயமாமாறு இவ்வாறு என்பது கூறப்பட்டது. அவரவர் பரிபாகத்துக்கேற்ப அம்மை கலந்து அருள் செய்யும் முறை உணர்த்தப்பட்டது.*

***1199. தெளிவுரை :-** காலமாய் இருப்பவளும், எல்லா இடமுமாய் இருப்பவளும், உயிர்களின் எண்ணமும், விருப்பமும் கைகூட உதவியாய் இருப்பவளும், எல்லாப் பொருளிலும் தான் ஒன்றாயிருக்கும் கலப்பினைச் செய்தவளும், உயிர்களை மயக்கு கின்றவளும், அம்மயக்கம் நீங்கத் தெளிவைத் தருகின்ற மேன்மை வாய்ந்தவளும், மந்திரங்களின் ஆற்றலாய் நிற்பவளும், உயிர்களைக் காக்கின்றவளும் ஆகிய சத்தி தன்னில் ஒரு கூறாய் நிற்கின்ற சிவனிடத்துத் தான் அவனிடத்தில் ஒரு கூறாய் இருப்பாள்.*

***குறிப்புரை :-** கருத்து - உயிர்களுடைய எண்ணம். அருத்தி - அவர்களுடைய ஆசை. 'காலத்தி, கூலத்தி' என்பவை அத்துச் சாரியை தொகவந்தன, அனுகூலத்தை, "கூலம்" என முதற் குறைத்துக் கூறினார். கூலம் - கூட்டம். கூட்டமானவள் எனலுமாம். "எங்கு" என்பது பெயர்த்தன்மைப்பட்டது. மாகுலம் - உயர்குலம்; அஃதாவது தெளிவிக்கும் தன்மை. சண்டிகை - வேகம் (மந்திரத்தினது ஆற்றல்) ஆகின்ற தன்மையுடையவள். பாலினி - பாலனம் செய்பவள், 'சத்தியும், சிவனும் தம்மில் தாம் கூறாய் இருப்பர்' என்பதை விளக்க, "பாலவன்" என்றும், "பாகமதாம்" என்றும் கூறினார்.*

**1199.** காலவி எங்கும் கருத்தும் அருத்தியும்
கூலவி ஒன்றாகும் கூடல் இழைத்தனள்
மாலினி மாகுலி மந்திர சண்டிகை
பாலினி பாலவன் பாகம தாகுமே. **62**

---



சண்டி

*ஒன்றாகும் கூடல் இழைத்தனள் - தன்னைத் தியானிக்கும் உயிர்களோடு ஒன்றித்து நிற்கும் கலப்பினைச் செய்தாள்; என்றது அறிவானும் அறியப்படுபொருளுமாயிராது ஒன்றானாள் என்பதாம்.*

*மாலினி - பகமாலினி என்னும் நாமத்தின் ஒரு பகுதி. மாகுலி - குலா - மூலாதாரம் முதலியவற்றை இடமாகக் கொண்டவள். மந்திர சண்டிகை - நினைப்பவர்களைக் காக்கின்ற சண்டிகாதேவி. சண்டிகா - அடியார்களின் பாவங்களாகிற காட்டுக்குப் பெருங்காற்றுப் போல்பவள். பாலினி - காப்பவள். பாலவன் - பாலிப்பவனாகிய சிவன். அம்மையின் பாலவனாகிய சிவன் எனலுமாம்.*

*இதனால், பல்வகைப் பெருமைகளும் உடையவளாகிய சத்தி சிவனது கூறாயே நிற்றல் கூறப்பட்டது.*

***1200. தெளிவுரை :- பசிய பொன்போலும் சடைமுடியையும், ஒரே எண்ணத்தையும், திண்ணிய பத்துத்தோள்களையும், விருப்பத்தைத் தருகின்ற ஐந்து முகங்களையும், முகந்தோறும் மும்மூன்று கண்களையும் கொண்டு, யானையை உரித்துப் போர்த்து***

1200. பாகம் பராசத்தி பைம்பொற் சடைமுடி
ஏக இருதயம் ஈரைந்து திண்புயம்
மோக முகம்ஐந்து முக்கண் முகந்தொறும்
நாகம் உரித்து நடம்செய்யும் நாதற்கே. 63

1201. நாதனும் நாலொன்ப தின்மருங் கூடிநின்
றோதிடும் கூடங்கள் ஓரைந் துளஅவை
வேதனும் ஈரொன் பதின்மரும் மேவிநின்
றாதியும் அந்தமும் ஆகிநின் றாளே. 64

---

*நடனம் புரிபவனாகிய சிவபெருமானுக்கு அவனது ஒரு கூறாய் இருப்பாள் பராசத்தி.*

***குறிப்புரை :-*** *'சிவபிரானது பல்வகை உருவும், குணமும், செயலும் ஆகிய எல்லாம் சத்தியால் அமைவனவே' என்பதை விளக்க, அவனது உருவம் முதலியவற்றை வகுத்துரைத்து, 'அவனுக்குப் பாகம் பராசத்தி' என முடித்தார். ஆகவே, "பைம்பொற் சடைமுடி" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. நாகம் - யானை.*

*இதனால், 'சிவனின்றிச் சத்தி யில்லாமைபோலச் சத்தியின்றியும் சிவனில்லை' என்பதுணர்த்தி, இருவரும் யாண்டும் பிரிந்து நில்லாமை கூறப்பட்டது.*

***1201. தெளிவுரை :-*** *தலைவனாகிய இறைவனும், அவனால் செயற்படுத்தப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களும் ஏற்ற பெற்றியால் பொருந்தி நிற்பனவாகச் சொல்லப்படுகின்ற நிலையங்கள் ஐந்து உள்ளன. அவைகளில் பிரமன் முதலியோரும், பதினெண் கணங்களும், வந்து வணங்கச் சத்தி அவற்றிற்கு முதலும், முடிவுமாகி நிற்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *ஐந்து நிலையங்கள் என்றது, 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' என்னும் ஐந்து கலைகளை இவைகளிலே முப்பத்தாறு தத்தவங்கள் முதலிய பிற அத்துவாக்கள் ஐந்தும் ஏற்ற பெற்றியால் அடங்கி நிற்க, இறைவனும் அவற்றிற்கு ஏற்ற பெற்றியால் ஆதியும் அந்தமுமாம் தலைவனாய் நிற்றலின், சத்தியும் அங்கு அவ்வாறு நிற்கின்றாள் என்க. ''வேதனும் ஈரொன்பதின்மரும் மேவ நின்று" என்றது, அவளது பெருமை கூறியவாறு 'அவை மேவ' என இயையும் 'பதினெண் கணத்தவராவார் இவர்' என்பதை,*

*விரவுசா ரணரே, சித்தர், விஞ்சையர், பசாசர், பூதர்,*

**1202.** ஆகின்ற நாள்களில் ஐம்பத் தொருவர்கள்
ஆகிநின் றார்களில் ஆருயி ராம்அவள்
ஆகிநின் றாள்உட னாகிய சக்கரத்
தாகிநின் றான்அவன் ஆயிழை பாடே. **65**

---

*கருடர், கின் னரர், இயக்கர், காந்தர்வர், சுரர், தைத்தியர்,*
*உரகர் ஆகாச வாசர்உத்தர குருவோர் யோகர்*
*நிருதர், கிம் புருடர், விண்மீன் நிறைகணம், மூவா றாமே.*
*- சூடாமணி நிகண்டு - தொகுதி 12ல், 117*

*என்பதனான் அறிக. தைத்தியர் - அசுரர். நிருதர் - இராக்கதர், உத்தர குரு - போக பூமி, யோகர் - முனிவர். ''விண்மீன்'' என்றதும் அவற்றிற்குத் தலைவரை.*

*இதனால், சத்தி பஞ்சகலைகளிலும் ஏற்ற பெற்றியால் அனைத்திற்கும் ஆதியும், அந்தமுமாய் நிற்றல் கூறப்பட்டது.*

***1202. தெளிவுரை :-** உலகம் தோன்றும்பொழுது பஞ்ச கலைகளிலும் நிற்கும் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றும் முதலில் முறையானேதோன்ற, அவற்றிற்கு முதல்வர் ஐம்பத்தொருவரும் உடன் தோன்றி நிற்பர். அங்ஙனம் நிற்கும் அவர் எல்லார்க்கும் சத்தி உயிராய் உள் நிற்பாள் ஆகவே, அவ் எழுத்துக்களைப் பல்வேறு முறையில் தம்முட்கொண்ட சக்கரங்களில் எல்லாம் அச்சத்தி உயிராய் நிற்றல் பெறப்படுதலின், சிவனும் அவளிடத்து நீக்கமின்றி அச்சக்கரங்களில் நிற்பவனாவான்.*

***குறிப்புரை :-** மூன்றாம் அடியை, 'அங்ஙனம் ஆகிநின்ற அவள் நீங்காது நிற்கின்ற சக்கரம்' என எடுத்துக்கொண்டு உரைக்க. பின்னிரண்டடிகளில், ''ஆகிநின்றாருடன் நாயகி சக்கரத் - தாகிநின்றான் அவன் ஆயிழையோடே'' என்பதும் பாடமாய் உள்ளது.*

*இதனால், 'சக்கரங்களாக அமைக்கப்படுவனயாவும் சத்தி சிவமயமேயன்றித் தனியில்லை' என்பது கூறி, தனிப்பட்ட வேறு ஆற்றல் உடையனவாகக் கருதுதல் அறியாமையாதல் விளக்கப்பட்டது.*

***1203. தெளிவுரை :-** சத்தியோடு சிவத்திற்கு இடமான சக்கரம் ஆறும் இரண்டுமாக உள்ளன. அவற்றுள் மனம்சென்று வாய்ப்பதான ஆறு இடங்களில் அன்னை விளங்கி நின்றாள் என்றவாறு.*

**1203.** ஆயிழை யாளொடும் ஆதிப் பரனிடம்
ஆயதொ ரண்டவை ஆறும் இரண்டுள
ஆய மனந்தொ றாறுமுக மாமவற்
றேய குழலி இனிதுநின் றாளே. **66**

**1204.** நின்றனள் நேரிழை யோடுடன் நேர்பட
இன்றென் அகம்படி ஏழும் உயிர்ப்பெய்தும்
துன்றிய ஓரொன் பதின்மரும் சூழலுள்
ஒன்றுயர் வோதி உணர்ந்துநின் றாளே. **67**

---

*அண்டவை - அண்டவடிவான இடம்; என்றது சக்கரத்தை. வை - வைப்பிடம். ஆறும் இரண்டும் உள என நிற்கும் எண்ணும்மை ஓரிடத்துக் கெட்டது. இங்ஙனம் பிரித்தோதியது மூலாதாரமுதல் பிரமரந்திரம் வரையுள்ள ஆறு சக்கரங்களும் பிண்டத்தினுள்ளாக விளங்குதலானும், அவற்றிற்கு மேற்பட்ட உச்சியும் துவாதசாந்தமும் உடலைக்கடந்து விளங்குதலானும் என்க. இந்த ஆறாதாரச் சக்கரங்களிலும் மனம்பாயும். ஆதலால் வாய மனந்தொறு அறுமுகம் அவைதனில் என்றது. வாய் - வாய்த்த தியானமூலமாக ஆறாதாரங்களிலேதான் மனம் சென்றுபற்ற இயலும். அதுவரை அம்மையும் வேறாய் விளங்குவள். அதற்கு மேலனவாகிய ஈரிடமும் மனமிறந்த நிலை; அங்கு அருளம்மை வழங்குவள். ஆதலின் இங்ஙனம் கூறியது. இனிது நின்றாள் என்பதையும் நோக்குக.*

*இதனால், சத்தி தியான இடங்களில் விளங்குதல் கூறப்பட்டது.*

***1204. தெளிவுரை :-* என்னை அறிவித்து எனக்குள் அம்மை எழுந்தருளியிருந்தாள் எனல் நுதலிற்று.**

***நேரிழையாகிய பராசத்தி என்னுள்ளே நின்றாள்; உடல் நான்று விழாமல் நேர்பட, இன்று என் அகத்துள் படிவதான பிராணன் ஆறாதாரங்களையும் கடந்த ஏழாநிலையை எய்தும். உடலுட் பொருந்திய ஒன்றும் ஒன்பதுமாகிய வாயுக்களின் சூழலில் பிராணனாகிய ஒன்றே உயர்வானது என்றறிவித்துத் தானும் யானுணர விளங்கினாள் என்றவாறு.***

***நேரிழை நின்றனள்; (அவள்) ஓடு உடல் நேர்பட இன்று என் அகம்படி உயிர்ப்பு ஏழும் எய்தும்; துன்றிய ஓர் ஒன்பதின்மரும் சூழலுள் ஒன்று உயர்வு ஓதி உணர்ந்து நின்றாள் எனக் கூட்டுக.***

***நேரிழை நின்றனள் என்றது தமக்கு அருள் வழங்க அம்மை வெளிப்பட்டு நின்றதை வியந்து விரைந்து கூறியது.***

**1205.** உணர்ந்தெழு மந்திரம் ஓம்எனும் உள்ளே
மணந்தெழு மாகதி யாகிய தாகும்
கொணர்ந்தெழு சூதனும் சூதியும் கூடிக்
கணந்தெழும் காணும்அக் காமுகை யாமே. **68**

---

*அவளோடு என் உடல் கீழ்நான்று விழாமல் நேரே நட்டமாக இருக்க என் அகத்துள்ளே படிவதாகிய பிராணன் ஆறாதாரங்களையும் கடந்து ஏழாம் நிலையாகிய சிரமேற்றானத்தைச் சேரும்;*

*ஓரொன்பதின்மர் என்பதை உம்மைத் தொகையாகக் கொள்க. ஒருவரும் ஒன்பதின்மரும் என. அவர்கள் தச வாயுக்கள். அவர்கள் சூழல் - அவர்களுறைவிடமாகிய உடம்பு. ஒன்று - பிராண வாயு. அதுவே சிறந்தது உயர்ந்தது என்று அறிவித்து அதனோடு தானும் அடியேன் உணர வெளிநின்றாள் என்றவாறு. உணர்ந்து என்னும் செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்குக.*

*1205.* **தெளிவுரை :-** *உயிர் உணர்ந்து உணர்ந்து மேன்மேல் உயர்தற்குரிய மந்திரம் 'ஓம்' என்பதும் எனச் சொல்லப்படும். உணர்வால் இறையொடு கூடி மேன்மையுறுகின்ற முடிந்த பேறாகிய வீடுபேறும், பிறவும் அதனாலே கிடைக்கும். உயிரை இவ்வாறு மேல் நிலைக்குக் கொண்டு செல்கின்ற கள்வனும், கள்வியுமாகிய சிவனும், சத்தியும் இணைந்து நிற்றலும், அதனால் விரைய விளங்கும். அங்கு முன்னர்க் காணப்படுபவள் சிவனிடத்துப் பெருவியப்புடையளாகிய சத்தியே.*

**குறிப்புரை :-** *பிரணவம், சிவம், சத்தி, சுத்தமாயை, உயிர் ஐந்தும் பொருந்தியதாக இருத்தலை அநுபவத்தில் கண்டு எழுகின்ற மந்திரமாம். அதனை உச்சரிப்பதற்குள்ளாக ஆன்மா மாயையினின்றும் மலத்திலினின்றும் விலகி. சிவசத்திகளோடு கூடியிருத்தலாகிய கதி விளைவதாம். இவ்வண்ணம் ஆன்மாவைக் கொணர்ந்து மேலெழுவதாகிய நாதமும் விந்துவும். அப்பிரணவத்துடன் எழுவர் என்றது ஆன்மாநுபவமாவர் என்பதாம். சூதன் - நாதம். சூதி - விந்து சத்தி. அக்காமுகை காணும் ஆம் - அக்காமியான சத்தி வெளிப்பட்டு அருள்வள் என்பதாம். சத்தியைக் காமுகை என்றது சிவத்தோடிணைபிரியாது சிவகாமியாயிருத்தலின்.*

*1206.* **தெளிவுரை :-** *'ஆதி' எனப்படுபவளாகிய சத்தியும், 'ஈசன்' எனப்படுபவனாகிய சிவனும் வழிபாட்டிற்கு மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகின்ற வேள்வித்தீ, யோகத்தில் சிறப்பிடம் பெற்று*

1206. ஆமது அங்கியும் ஆதியும் ஈசனும்
மாமது மண்டலம் மாருத மாதியும்
ஏமது சீவன் சிகைஅங் கிருண்டிடக்
கோமலர்க் கோதையும் கோதண்ட மாகுமே. 69

1207. ஆகிய கோதண்டத் தாகும் மனோன்மனி
ஆகிய ஐம்ப துடனே அடங்கிடும்
ஆகும் பராபரை யோடப் பரைஅவள்
ஆகும் அவள்ஐங் கருமத்தள் தானே. 70

---

*நிற்கும் சந்திர மண்டலம், வாயு முதலிய பூதங்கள் என்னும் இவைகளாய் நின்று உயிருக்கு நலம் செய்கின்றனர். அவ்விடத்தில், சத்தி, யோகியரது உடம்பில் தோன்றுகின்ற நரை முதலியவை அங்ஙனம் தோன்றாது அகலச் சிகை கறுத்தல் முதலிய இளமைத் தன்மைகள் தோன்றும்படி அவரது ஆஞ்ஞைத் தானத்தில் விளங்கி நிற்பாள்.*

***குறிப்புரை :-*** *கோதண்டம் - சிறந்த முதுகுந்தண்டம்; நடுநாடியை. நடுநாடி வாயிலாகச் சத்தி உச்சியைப் பொருந்தின் உறுப்புச் சிவக்கும். உரோமம் கறுக்கும். ''ஆதியும், ஈசனும்'' என்பவற்றை முதலில் எழுவாயாக வைத்து, 'மாருதம், ஆதியுமாய்' என ஆக்கம் வருவித்து, 'ஏமம் ஆகின்றனர்' என முடிக்க. 'ஆம் அதுவாகிய அங்கி' என்க. இதனுள் "அது" என்றது வேள்வித் தீயைக் குறித்த பண்டறி சுட்டு. 'மா மண்டலம், மது மண்டலம்' எனத் தனித்தனிச் சென்று இயையும். மது, இங்கே அமுதம். பூதங்களில் மாருதத்தை ஆதியாகக் கூறினார். யோகத்திற்கு அது சிறந்ததாதல் பற்றி, 'ஏமம்' என்பது இடைக் குறைந்து நின்றது. இதன்பின் உள்ள "அது" பகுதிப்பொருள் விகுதி. "சீவன்" என்பது, சொல்லுவாரது குறிப்பால், யோகத்தில் நிற்கும் சீவனைக் குறித்தது. 'சீவனது சிகை' என்க. கோ - தலைமை; இஃது ஒரு சொல் தன்மை எய்தி நின்ற, 'மலர்க்கோதை' என்பதனுடன் இரண்டாவதன் பொருள்படத் தொக்கு நின்றது. கோதண்டத்தில்' என உருபு விரித்துக் கொள்க.*

*இதனால், அனைத்துமாய் நின்று காத்துவருகின்ற சத்தி சிவன் என்பாருள் சத்தி யோகத்தில் விளங்கிநின்று நலம் செய்தல் கூறப்பட்டது.*

***1207. தெளிவுரை :-*** *'மேன்மைத் தானம்' எனப்படுவதாகிய ஆஞ்ஞையில் சத்தி விளக்கமுற்றுத் திகழும் நிலையில் அது முதல்*

**1208.** தானிகழ் மோகினி சார்வான யோகி
போன மயமுடை யார்அடி போற்றுவர்
ஆனவர் ஆவியின் ஆகிய அச்சிவந்
தானாம் பரசிவம் மேலது தானே. **71**

---

*மூலாதாரம் ஈறாக நிற்கின்ற ஐம்பது எழுத்துக்களும் அவளிடத்தே செயலற்று அடங்கிவிடும். அஃது எவ்வாறெனின், சுத்த மாயையினின்றும் விருத்திப்படுகின்ற நால்வகை வாக்குகளில் அவ் எழுத்துக்களுக்கு முதல் நிலைகளாகிய 'பைசந்தி, சூக்குமை' என்னும் வாக்குகளாய் நிற்றலோடு, ஐந்தொழிலையும் தன்னுடையனவாக உடையவள் அவளேயாதலின்.*

*குறிப்புரை :-* 'மனோன்மனி' என்பது, 'சத்தி' என்னும் அளவாய் நின்றது 'மனோன்மனிபால்' என ஏழாவது விரிக்க. 'ஐம்பதும்' என்னும் முற்றும்மை தொகுத்தல் பெற்றது. உடனே - ஒருசேர. பைசந்தி சூக்குமை வாக்குகளை முறையே 'பராபரை, பரை' என்றல் வழக்கு. பராபரை - பரை அபரை இருதன்மையும் உடையது. எழுத்துகள் அடங்கவே, உயிரினது பல தலைப்பட்ட உணர்வு அடங்கிச் சத்தியையே உணர்ந்து நிற்றல் பெறப்பட்டது. ஆஞ்ஞையில் விளங்கி நிற்கும் சத்தியது விருப்பம், அவ்வுயிரினது உணர்வைத் தன்பால் அடக்கிக் கொள்ளுதலே யாதலின், அவளது விருப்பத்திற்கு மாறாகப் பிறிதொன்று நிகழ மாட்டாமை பின்னிரண்டடிகளால் விளக்கப்பட்டது. எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பளா தலானும், சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு புணரின் எத்தொழிலும் வல்லதாம் ஆதலானும், பஞ்சகிருத்தியம் பண்ணுவாள் என்றதாம், ஐம்பத்தொரு அக்கரங்களுக்கும் மூலமான பரா வாக்கைப் பரை என்றும், பைசந்தி வாக்கைப் பராபரை என்றும் வழங்குதல் மந்திர நூற்றுணிபாதலின் அதனை உணர்த்த 'பராபரையோடப் பரையவள்' என்றது.

இதனால், 'கோமலர்க் கோதை கோதண்டம்' ஆதலின் (முன்னை மந்திரம்) பயன் கூறப்பட்டது.

*1208.* **தெளிவுரை :-** சிவசத்தி தனக்கு இடமாகக் கொள்கின்ற குண்டலினி சத்தி, அவளைச் சார்பாகக் கொண்டு விளங்கும் யோகினி சத்தி என்னும் இவர்கள் நீங்கத் தாம் தூயராய் நிற்போரே ஆதி சத்தியைத் தலைப்படுவர். அவரது உணர்வில் அவையேயாய்க் கலந்து நிற்கின்ற ஆதி சிவமாம் நிலையை அடைகின்ற பரசிவம் அந்நிலைக்கு மேலுள்ளது.

**1209.** தானந்தம் மேலே தருஞ்சிகை தன்னுடன்
ஆனந்த மோகினி யாம்பொற் றிருவோடு
மோனையில் வைத்து மொழிதரு கூறது
ஆனவை ஓம்எனும் அவ்வுயிர் மார்க்கமே. 72

---

***குறிப்புரை :-*** *எனவே, 'அந்தப் பரசிவத்தின் சத்தியாகிய பராசத்தியும் மேற்சொல்லிய அனைத்திற்கும் மேல் உள்ளது' என்றவாறு. மோகினி பரிவாரசத்திகளுள் ஒன்று. இது தன் அதிகார எல்லைவரை தானே இயங்கும் ஆற்றலுடையது. யோகினி அதனைச் சார்ந்து ஆணைவழி நடப்பது. இவ்வியோகினி கூட்டமான ஆவரண சத்திகள் இவர்களால் காக்கப்படுகின்ற எல்லையைக் கடந்து சென்றால் விளங்குவது சத்தி ஆகும். அந்த மயமுடையாராக அவள் அடி போற்றுபவர்களே சிவமாவர்; பரசிவமுமாவர் என்பது கருத்து.*

***1209. தெளிவுரை :-*** *ஆதி சத்தி, யோகியரது உச்சியிலும், அதற்கு மேலுள்ள பன்னிரண்டு அங்குலமாகிய நிராதாரத்திலும் குண்டலி சத்தியோடு அவட்கு முன்னவளாம்படி வைத்துச் சொல்லப்படும் வியட்டிப் பிரணவநிலைகளே பிரணவ யோக நெறியாகும்.*

***குறிப்புரை :-*** *எனின், வியட்டிப் பிரணவநிலையை விளக்குதல் நுதலிற்று. தானாகிய சிவம், அதன் இறுதிக்கண்ணதாகிய சத்தி, அடுத்துத் தரப்படும் நாதம், அதனுடன் விளங்கும் ஆனந்த மோகினியாகிய மாயை, செம்பொற்றியவாகிய மலம் இவை முதலாக வைத்துச் சொல்லப்படுகின்ற பகுப்பினையுடையதானவை 'ஓம்' என்னும் அவ்வுயிர் வரும் மார்க்கமாம் என்றவாறு.*

*தான் என்பது வேற்று முதல்வனில்லாத சிவத்தைக்கு குறிப்பது; ஆகவே சிவம். சிவம் என்பது அகரம். அந்தம் - இறுதி. சிவபரம்பொருளை இறுதியாகவுடையது சத்தி. சத்தி சிவத்துள் ஒடுங்குதலின் சத்தி சிவத்தை இறுதியாகவுடைய அந்தம் என அழைக்கப்பட்டது. ஆகவே சத்தியக்கரமாகிய உகரம். மேலே தாம் சிகை - அடுத்து நிற்கின்ற செம்பொற்றிருவாகிய மலத்திற்கு மேலுள்ளதாகிய நாதம். சிகை - நாதம். ஆனந்த மோகினி - ஆனந்த வடிவான விந்து. ஆனந்தம் - சர்வானந்தகரமான திரிகோண சக்கரம். அதன் நடுவில் விளங்கும் மோகினி என்றது விந்துவை. ஆகவே சிவம், சத்தி, நாதம், விந்து, மலம் என்ற ஐந்தாகிய கூறுகளையுடைய பிரணவம் என்பதாம். அகார உகார நாத விந்து மகாரங்கள் பிரணவ வியட்டியாம் என அறிக.*

*இதனால், சத்தியை அடைதற்கும் பிரணவகலைகளில் அவையே யாய்க் கலந்து அவற்றைச் செயற்படுத்துபவள் சத்தி*

1210. மார்க்கங்கள் ஈன்ற மனோன்மனி மங்கலி
யார்க்கும் அறிய அரியாள் அவளாகும்
வாக்கும் மனமும் மருவஒன் றாவிட்டு
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. 73

1211. நுண்ணறி வாகும் நுழைபுலம் மாந்தர்க்கு
பின்னறி வாகும் பிரானறிவு அத்தடம்
செந்நெறி யாகும் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாமது சன்மார்க்க மாமே. 74

---

*என்பதை உணர்ந்து செய்யும் சத்தி யோகமே மிக மேலானதாதல் கூறப்பட்டது.*

*1210.* **தெளிவுரை :-** *ஆதி சத்தி, பலவகைப்பட்ட யோக நெறிகளையும் அவரவரது பக்குவத்திற்கு ஏற்ப அமைத்து வைத்தவள்; நிலையான மங்கலத்தை உடையவள்; ஆதலின், அவள் யார்க்கும் அறிதற்கரியவளாவாள். ஆயினும் பாச ஞானம், பசுஞானம் என்னும் இரண்டும் ஒருசேர நீங்கும்படி விட்டுப் பதிஞானத்தால் அறிகின்ற பெரியோர்க்கு அவரது அறிவுக்கறிவாய் அவள் விளங்குவாள்.*

**குறிப்புரை :-** *"மார்க்கம்" என்பதற்கு 'சமயங்கள்' என உரைத்தல் இவ்விடத்திற்கு இயைபற்றதாம். 'மனோன்மனி, மங்கலி' என்னும் பயனிலைகட்கு, மேல்நின்ற ''தான்'' என்பது எழுவாயாய்வந்து இயைந்தது. அறிவரிதாவதும், நுண்ணறிவாவதும் அவளது உண்மை இயல்பாம். ஆகவே, தடத்த நிலையில் அவரவரது பக்குவத்திற்கு ஏற்ப அறியப்படுவாள் என்பது "மார்க்கங்கள் ஈன்ற" என்பதனால் பெறுதும். 'வாக்கு, மனம்' என்பன முறையே பாச ஞானமும், பசு ஞானமும் ஆதலைச் சிவஞானபோத ஆறாம் சூத்திர உரையான் அறிக. 'ஒன்றாய் விட்ட' என்பதும் பாடம் அன்று. "பெருமை" என்றது அதனையுடைய பதிஞானத்தை. பதிஞானமே வியாபக ஞானமாதல் அறிக. பெருமையுடைய ஞானத்தைப் பெற்றோரே பெரியராதல் உணர்க.*

*இதனால், பல்வகையான யோகங்களாலும் அடையப்படுவது சத்தியின் தடத்த நிலையேயாதல் கூறி, 'அவை வாயிலாக ஞான நெறியை அடைய முயல்க' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*1211.* **தெளிவுரை :-** *மக்கட்கு ஐம்புலன்களில் செல்லுகின்ற அறிவு சுதந்திர அறிவாகவே தோன்றும்; ஆயினும், சிவனுடைய*

**1212.** **சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமும்**
**துன்மார்க்க மானவை யெல்லாம் துரந்திடும்**
**நன்மார்க்கத் தேவரும் நன்னெறி யாவதும்**
**சன்மார்க்கத் தேவியும் சத்திஎன் பாளே.** **75**

---

*அறிவு அவர்தம் அறிவை அவற்றின் பின்னே இருந்து செலுத்துகின்ற அறிவாய் நிற்கும். (அஃது இல்லையாயின், எவரது அறிவும் ஒன்றிலும் நுழைய மாட்டாது. ஆகவே, உயிர்களின் அறிவு இறைவனது அறிவின் வழி யவேயன்றிச் சுதந்திரம் உடையன அல்ல). இங்ஙனம் சிவனது அறிவாய காட்டினை (காட்சிக்குத் துணையாவதை) அறிவதே செந்நெறியாம். இனிச் சிவனை அடைய விரும்புவோர்க்கு அவனது அறிவாலே அவனை அறிதலே தக்க நெறியாம்.*

*குறிப்புரை :- நுண்ணறிவு - பசுபோதம். பிரானறிவு - பதிபோதம். தடம் - அடிப்பட்ட நெறி. சன்மார்க்கம் - ஞானநெறி. "நுண்ணறிவு" என்பது, 'இயற்கையில் நுண்ணிதாய்ப் புலன்களில் நுழையும் அறிவு' எனப்பொருள் தந்து நின்றது. இவ்விடத்து நின்ற "ஆகும்" என்பது 'போலும்' என்னும் பொருளது. நுழை புல மாந்தர்க்கு அவர்தம் அறிவு நுண்ணறிவாகும்; ஆயினும் பிரான் அறிவு பின்னறிவாகும்' எனக்கூட்டி, வேண்டும் சொற்கள் வருவித்து உரைக்க. தடம் - வழி. அத்தடம் - அவ்வாறு உணரும் நெறி. தன் நெறி - தன்னாலே தன்னை அறியும் நெறி. 'தன்னெறியாவது' என்பது பாடம் அன்று. சன்மார்க்கம் - நல்ல வழி; நன்மையைத் தரும் வழி. எனவே, பிறவெல்லாம் தீமையைத் தருவன வாயின. தீமையாவது பாசங்களையும், உயிரையும் இன்பப் பொருளாக அடைவித்தல். இங்ஙனமாகவே, 'பாச ஞான பசுஞானங்களை நீக்கிப் பதிஞானத்தால் உணரவரினும்' அது கொண்டு பதியாகிய சிவனை உணராது, பாசங்களையும், உயிரையும் உணர்தல் துன்பந் தரும் நெறியாதல் வலியுறுத்தப்பட்டதாம். இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், மேற்கூறிய பதிஞானத்தது சிறப்பும், அதனால், பயன் எய்துமாறும் கூறி, மேற்குறித்த ஞானநெறி பற்றி அறியற் பாலவை இனிதுணர்த்தப்பட்டன.*

*1212. தெளிவுரை :- ஒன்றாக அமைந்த நன்னெறி ஏனைத் தீநெறிகள் பலவற்றையும் போக்கிவிடும்; அந்நன்னெறிக்கு*

**1213.** சத்தியும் நானும் சயம்புவும் அல்லது
முத்தியை யாரும் முதல்அறிவா ரில்லை
அத்திமேல் வித்திடின் அத்தி பழுத்தக்கால்
மத்தியில் ஏற வழியது வாமே. **76**

---

*முதல்வராய கடவுளராயும், அவரால் தோற்றுவித்துக் காக்கப்படும் அந்நன்னெறி யாயும், அந்நன்னெறியால் அடையப்படும் அருட் சத்தியாயும் உள்ளவள், தலைமை பற்றி, 'சத்தி' என்று, அடைகொடாது யாவராலும் சொல்லப்படுகின்ற சிவசத்தியேயாவாள். சன்மார்க்கம் துன்மார்க்கத் தோடு துரத்தி நல்ல ஒழுக்கத்தை விளைவிக்கும். அதனையருளியவள் சத்தி என்பதாம்.*

*குறிப்புரை :-* "சன்மார்க்கமாக" என்றது, "தான் ஒன்றே முழு நன்னெறியாக'' என்னும் குறிப்பினதும், 'சமைதரு' என்றது, 'இயற்கையில் அமைந்த' என்னும் குறிப்பினதுமாயின. ''சமைதரு மார்க்கமும்'' என்னும் உம்மை, சிறப்பு. ''துன்மார்க்கமானவை'' என்றது, முழுத்தீமை முதலாகச் சிறிதே தீமையுடையது ஈறாக உள்ள ஏனை எல்லா நெறிகளையும், 'மேற்குறித்த முழு நன்னெறி முதலியவாகக் கூறிய மூன்றுமாயிருப்பவள் சிவசத்தியே எனக் கூறிய அதனால், 'அவ்வொன்றாய நன்னெறி சிவநெறியே' என்பது பெறப்பட்ட.

"முன்னெறி யாகிய முதல்வன், முக்கணன்
றன்னெறி யேசர ணாதல் திண்ணமே" - தி.4 ப.11 பா.9

என அப்பரும் அருளிச் செய்தார். நன்னெறியாவது சிவநெறி' எனவே, அதற்கு முதல்வராவார் சதாசிவர், மகேசுவரர், உருத்திரர் முதலியோராதல் பெறப்பட்டது. அவர் **சிவநெறியைத் தோற்றுவித்தலாவது, தம்பால் கேட்டற்கு உரியவர்கட்கு அதனை அறிவுறுத்தல். அதனைக் காத்தலாவது, ஆசிரிய மாணாக்கர் முறையால் வழிவழியாக விளங்கி வரச் செய்தல்**. சிவசத்தி நன்மார்க்கத் தேவர் முதலாக நிற்றல் கூறுவார், அந்நன்மார்க்கத்துச் சிறப்பினை முதற்கண் எடுத்துக் கூறினார்.

இதனால், சத்தி, மேற்கூறிய செந்நெறி முதலியனவாய் நின்று உயிர்கட்கு அருள்புரிதல் கூறப்பட்டது.

*1213. தெளிவுரை :-* 'சத்தியும், யானும், சிவமும்' என்னும் மூவர் தவிர, வீடுபேற்றினை அதன் முதல் பற்றி அறிபவர் ஒருவரும்

**1214.** அதுஇது என்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழல் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே. 77

---

*இல்லை. முதுகந் தண்டாகிய எலும்பின்கண் பிராண வாயுவைக் கும்பித்தால், அவ் எலும்பு பக்குவப்பட்டு, அந்தப் பிராண வாயு சுழுமுனையூடே மேல் ஏறிச் செல்லுதற்கு ஏற்றதாகும்.*

***குறிப்புரை :-*** *சயம்பு - சுயம்பு என்பதன் திரிபு. அத்தி - யானை. யானை என்றது விநாயகக் கடவுளை. ஈண்டு ஓ என்பதனை யுணர்த்திற்று. வித்து - விந்து என்பதன் வலித்தல் விகாரம். வித்திடலாவது 'ஓ' என்பதன்மேல் 'O' இடல். அப்போது 'ஓம்' என்றாகும்.*

*அத்தி - பிரணவம். பழுத்தக்கால் - தீயால் இரும்பு பழுத்தாற் போலப் பிரணவமானது குண்டலினியினால் வெதுப்புற்றபோது.*

*மத்தியில் - சுழிமுனையில் இறுதியாகிய ஆஞ்ஞா சக்கரத்தில், ஏற - உயர. அதுவே வழியாகும் - அதுவே பிரமரந்திர வழியாகும்.*

*'ஓம்' என்ற பிரணவத் தியானம் பண்ண, அது சித்தியாங்கால் ஆஞ்ஞா சக்கரத்தையடைய வழிதிறக்கும் என்பதாம்.*

*இதனால், முன்னர்ச் சத்தியை அடைந்து, பின் அவள் வழியாகச் சிவத்தை அடைவதாகிய முத்திக்கு வழி யோகம் என்பது கூறப்பட்டது. முத்திக்கு முடிநிலை வழியாகிய ஞானம் சத்தியேயாதல் அறிக.*

***1214. தெளிவுரை :-*** *வீடுபேற்றைத் தரும் வழியாவது 'அது' என்றும் 'இது' என்றும், சொல்லும் வழியில் எல்லாம் சென்று வாழ்நாளை வீணே கழிக்காமல், ஒருநெறியாய் உறுதிப்பட்ட மனத்துடன் சிவ சத்தியையே முத்தியைத் தரும் முதல்வியாகத் துணிந்து அவளை யோக நெறியால் சந்திர மண்டலத்திற் சென்று வணங்க வல்லவர்க்கு, வினை வழியாகிய பிறப்பு நெறியைக் கடக்கும் அப்பயனும் கூடும்.*

***குறிப்புரை :-*** *பதி - இடம். மது, இங்கே அமுதம்; அஃது அதனையுடைய சந்திரனை உணர்த்திற்று. 'மதுப்பதி' எனப் பின்முன்னோக்கி உரைக்க. "விதி" என்றது வினையை. வினை வழி - வினையால் உளதாகும் வழி.*

*இதனால், சத்தி யோகமே வீடுபேற்றைத் தருவதாதல் கூறப்பட்டது. சத்தியும், சிவமும் வேறல்ல ஆதலின், 'சத்தியோகம்,*

**1215.** வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் றன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. **78**

**1216.** ஓரைம்ப தின்மருள் ஒன்றியே நின்றது
பாரம் பரியத்து வந்த பரமது
தாரங் குழலாளும் அப்பதி தானும்முன்
சாரும் பதமிது சத்திய மாமே. **79**

---

*சிவயோகம்' என்பன வேறு வேறாகாமை அறிக.*

*1215.* ***தெளிவுரை :-*** *யாவரது ஆற்றலையும், எப்பொருளது ஆற்றலையும் வெல்லும் பேராற்றலை உடையவளாகிய சிவ சத்தியினது உண்மை நிலையைத் தவத்தால் உணர வல்லவர்க்கு' விதியின் வழியாகிய பிறப்பு, அப்பிறப்பிற்கு முதலாகிய 'வினை, எனப்படுகின்ற அந்தப் பெரியகட்டு, அதனால், வந்து சார்ந்து மயக்குகின்ற ஐம்புலன்கள் என்னும் இவ்வனைத்துத் தீமைகளையும் வெல்லுதல் கூடும்.'*

***குறிப்புரை :-*** *இது சொற்பொருட் பின்வருநிலை. "விழைபுலன்" என்றது, 'ஆசையை விளைத்து மயக்குகின்ற புலன்' என்னும் குறிப்பினதான உடம்பொடு புணர்த்தல். "தன்னை" என ஒருமையாற் கூறியது. 'ஒரு காலத்து வருவது ஒன்றேயாயினும், ஒவ்வொன்றும் அத்தன்மையது' என்றற்கு. காம இன்பத்தை, ஒருகலத்தே ஐம்புலனும் நுகரப்படுவதாகக் கூறுதல் விரைவு பற்றியாதலின், அதனிடத்தும், ஐம்புலன்கள் நுகரப்படுதல் ஒரு காலத்து ஒன்றேயாம் என்க. மங்கை தன் மெய்யுணர்வார்க்கும் அவளது ஆற்றல் உளதாம் ஆதலின் மேற்கூறிய எல்லாம் அவர்க்குக் கூடும் என்பார். ''வென்றிடு மங்கைதன் மெய்யுணர்வோர்க்கே" என்றார்.*

*இதனால், மெய்யுணர்வே தீமை அனைத்தையும் முற்றப் போக்குவதாதல் கூறப்பட்டது.*

*1216.* ***தெளிவுரை :-*** *தொன்று தொட்டு வழிவழியாகச் சத்தி சிவர்களைப் போற்றிவருகின்ற மரபு, ஐம்பதெழுத்துக்களின் அதி தேவரிடத்து அவர்கள் நிற்கின்ற முறைமையில் வைத்தேயாம். சத்தியும், சிவமும் முதற்கண்ணே சார்ந்திருக்கும் இடம் அவ் எழுத்துக்களும், அவற்றின் அதிதேவருமாம். இஃது உண்மையான ஒன்று.*

**1217.** **சத்தி யினோடு சயம்புவும் நேர்படில்**
**வித்தது இன்றியே எல்லாம் விளைந்தன**
**அத்தகை யாகிய ஐம்பத் தொருவரும்**
**சித்தது மேவித் திருந்திடு வாரே.** **80**

---

*குறிப்புரை :- 'ஆதலின் இது மரபாயிற்று' என்பது குறிப்பெச்சம். எழுத்துக்களை வழிபடுமிடத்துச் சத்தியும், சிவமும் அவற்றின் அதி தேவர் வழியாய்ப் பயன்தருதலை உணர்தற்கு. "ஓர் ஐம்பதின்மரும்" என அருளினார். __எழுத்துக்கள் அவற்றின் அதிதேவர் வழியாகவே பயன்தருதலை.__*

*எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவராம்*
*நண்ணிய விந்துவோடு நாதத்துக் - கண்ணிற்*
*பகர் அயன்மா லோடு பரமனதி தெய்வம்*
*அகரஉக ரம்மகரத் தாம்.*

*- சிவஞானபோதம், சூ.4 அதி.1*

*என்பதனானும் உணர்க. சத்தி சிவ வழிபாட்டிற்கு எழுத்து முறை சிறந்ததாதல் பற்றி அகாரம் முதலிய எழுத்துக்கள் முறையானே தொடர்ந்து வர அமையும் மந்திரங்களை, "மாலா மந்திரம்" எனச் சிறந்தெடுத்துப் போற்றுவர். பரம் - கடன்.*

*இதனால், சத்தி சிவ வழிபாட்டிற்கு எழுத்துமுறை (பீஜாக்கர மரபு) சிறந்ததாதல் கூறப்பட்டது. சத்தி வழிபாடு பற்றிக் கூறுவார். ஒப்புமை பற்றிச் சிவ வழிபாட்டினையும் உடன்வைத்துக் கூறினார்.*

*1217.* **தெளிவுரை :-** *சத்தியும், சிவமும் ஒருவர்க்கு உண்மையாற் கிடைப்பார்களாயின், எல்லாப் பயன்களும் அவற்றுக்குரிய காரணங்கள் இல்லாமலேயும் விளைந்து விடும். ஆதலால், அப்பொழுது ஐம்பத்தோர் அக்கரங்களின் அதிதேவர்களும் அச் சத்தி சிவங்களை வழிப்பட்ட பொழுது அவர்கள் உயிரினிடத்தும் கொடுமை நெறியின் நீங்கிச் செம்மையின் நிற்பவராவர்.*

**குறிப்புரை :-** *சத்தி சிவங்கள் எப்பொருளிலும் எக்காலத்தும் நீங்கி நிற்றல் இல்லையாகலின், ''நேர்படில்'' என்றது, பொதுமையானன்றி, உண்மையாற் கிடைத்தலையாயிற்று. ஆகவே, "அத்தகையாகிய" என்றதும், உண்மையால் நிற்கும் சத்தி சிவங்கட்கு ஆதாரமாதலையாயிற்று. 'தகையர் ஆகிய' எனற்பாலதனை ஆகுபெயரால், 'தகையாகிய' என்றார். ''அத்தகையராய் மேவித் திருந்திடுவார்" என்பது கருத்தாயிற்று. மேல், "ஓரைம்பதின்மருள்"*

**1218.** திருந்து சிவனும் சிலைநுத லாளும்
பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த
அருந்திட அவ்விடம் ஆரமு தாக
இருந்தனர் தானம் இளம்பிறை யென்றே. **81**

---

*எனக்கூறி, இங்கு "ஐம்பத்தொருவரும்" என்றது இரண்டும் மரபாதல் பற்றியாதலின், மலைவின்மை அறிக. "சித்து" என்றது உயிரை. "வித்தது, சித்தது" என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி. அத்தகையராய்த் திருந்துதலாவது, உலகியல் உணர்வை எழுப்பாது, மெய்ந்நெறி உணர்வை எழுப்புதல். இவர் இங்ஙனம் திருந்துதலை வலியுறுத்தற்கே முதலிரண்டடிகள் கூறப்பட்டன. வித்தின்றியே விளைதல், வினை முதலிய பிற நிமித்தங்கள் இன்றி அருளே நிமித்தமாக விளைதல். தெளிவு பற்றி எதிர்காலத்தை "விளைந்தன" என இறந்தகாலமாக்கிக் கூறினார். இது ''விச்சதின்றியே விளைவு செய்குவாய்'' என்ற திருவாசகத்தை நினைவூட்டுகிறது.*

*இதனால் எழுத்து முறை வழிபாட்டால் மேற் (பா.1215) கூறிய மங்கைதன் மெய்யுணர்வு பிறத்தல் கூறப்பட்டது.*

*1218. தெளிவுரை :- மெய்ந்நெறியில் விளங்குகின்ற சிவனும் சத்தியும், வந்து பொருந்திய வானவர்கள் தம்மை வணங்கித் துதிக்க, அவர்கள் பருகுதற்கு அந்த இடம் அரிய அமுதம் சுரக்கும்படி சந்திர மண்டலமே தமக்கு இடம் என்று சொல்லி, அங்கு வீற்றிருக்கின்றார்கள்.*

*குறிப்புரை :- திருந்து சிவன் - அருள் வழங்க, அம்மையோடு கூடிக் கருணை மேனி கொண்ட சிவம். 'வந்து பொருந்திய' என்பது 'தாம் இருக்கின்ற அந்தச் சந்திரமண்டலத்தில் வந்து பொருந்திய' என்பதாம். அவ்வாறு பொருந்துவோர் யோகியர், அவர் யோகத்தால் அவ்விடத்தில் உயர்ந்து செல்லுதலின், அவரை வானவரோடு ஒப்பித்து, அப்பெயராற் கூறினார். 'அவர் அருந்திட' எனத் தோன்றா எழுவாய் வருவித்து, அத் தொடரை, "அமுது ஆக" என்பதனோடு முடிக்க. ஆக - உண்டாக. "அவ்விடம்" "அங்கு" எனச் சுட்டுச் சொற்கள் செய்யுளில் முன் வந்தன 'அவ் இடம் ஆக' என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றப்பட்டது. இடையிரண்டடிகள் சிவனும் சத்தியும் தேவர்கள் போற்ற அவர்கள் பொருட்டு ஆலாக விடத்தை உண்டவர்' என, மற்றும் ஒரு நயம் தோன்ற வைக்கப்பட்டன. சிலைநுதலாள் - அம்மை. சிலை - வில்.*

**1219.** என்றும் எழுகின்ற ஏரினை எய்தினோர்
தன்றது வாகுவர் தாழ்குழ லாளொடு
மன்றரு கங்கை மதியோடு மாதவர்
துன்றிய தாரகை சோதிநின் றாளே. **82**

---

***இதனால், சிவனும், சத்தியும், ஞானயோகிக்குச் சந்திர மண்டலமாகிய ஏழாந்தானத்திலிருந்து மெய்யுணர்வைத் தந்து, அது வழியாகச் சிவானந்தத்தை நுகர்வித்தல் கூறப்பட்டது.***

*1219.* ***தெளிவுரை :-*** *என்றும் யோக நெறியால் குண்டலி வழி மேல் ஏறும் முயற்சியில் இடைவிடாது நிற்பவர், சத்தியைத் தலைப்பட்டு, முடிவில் அவளது உடைமையேயாய்விடுவார். இனி அச்சத்திதான் யோகியர்க்கு அவர் பொருந்தும் தானந்தோறும் விளக்கொளி, விண்மீன், திங்கள், கங்கை என்னும் இவைகளாய் ஏற்ற பெற்றியில் விளங்குவாள்.*

***குறிப்புரை :-*** *ஏர் - எழுச்சி; எழுகின்ற முயற்சி, அழகுமாம். 'தனது' என்பது எதுகை நோக்கி விரிந்தும், திரிந்தும் நின்றது. தனது - அவளது உடைமை. 'சிவானந்த வெள்ளம்' என்பது தோன்ற "மன் தரு கங்கை'' என்றார். மன் தரு; நிலைபேற்றைத் தருகின்ற (புலப்படுத்துகின்ற) (மாதவர்க்கு, என்னும் நான்கனுருபு தொகுத்தல் பெற்றது). விளக்கொளி முதலிய நான்காய் விளங்குதல் முறையே இருதயம் நெற்றி, உச்சி, உச்சிக்குமேல் பன்னிரண்டங்குலம் என்னும் இடங்களிலாம். 'சோதியாய்' என ஆக்கம் வருவித்துக்கொள்க.*

*இதனால், ஞான யோகியர்க்குச் சத்தி படிமுறையால் விளங்கும் காட்சி வகை கூறப்பட்டது.*

*1220.* ***தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு ஏற்ற பெற்றியில் விளங்குகின்றவளாகிய சத்தியை உண்மையாகத் தலைப்பட்டு அவளோடு ஒன்றுதலாவது, உள்ளொளியாகிய பதிஞானத்தால் உணர்தலேயாம். அவ்வாறு உணர்ந்தோர், இனத்தால் பசுக்களேயாயினும், அவர் வேண்டிய யாவும் வந்து நிறையும், மற்றும் மெய்யுணர்வு வகைகளும் விளங்கும். முதற்கண் காமியப் பயனைக் கைகூடச் செய்து, வேட்கை தணிவித்துப்பின் ஞானத்தையும் வழங்கும் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'நின்றவளாகிய நேரிழை' என்க. அருள்பெறாத மருள் நிலையது எளிமையும், பின்னர் அவர்பெறும் அருள்நிலையின்*

**1220.** நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட
ஒன்றிய வுள்ளொளி யாலே உணர்ந்தது
சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய
துன்றிடும் ஞானங்கள் தோன்றிடுந் தானே. **83**

**1221.** தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி
ஈன்றிடும் ஆங்கவள் எய்திய பல்கலை
மான்றரு கண்ணியும் மாரனும் வந்தெதிர்
சான்றது வாகுவர் தாம்அவ ளாயுமே. **84**

---

*அருமையுமாகிய நயம்தோன்ற, ''பிராணிகள்'' என்றாராயினும் 'பிராணனை வழிப்படுத்திய யோகியர்' என்பதே பொருளாகக் கொள்க. கேட்டல், சிந்தித்தல் முதலிய வகையானும், அவற்றின் விரியானும் ஞானங்கள் பலவாதல் அறிக.* ***பிராணி - பிராணனை உடையவர்கள் - பிராணயாமச் சிறப்பினை உணர்ந்தவர்கள்.***

*இதனால், சத்தியின் உண்மைக் காட்சி முறையும், அக்காட்சியும் பயன்களும் கூறப்பட்டன.*

*1221.* **தெளிவுரை :-** *மேற்கூறியவாறு ஞானங்கள் தோன்றும் பொழுது; சிவமும், சத்தியுமே அவரவர் விரும்பித் தொழுகின்ற தெய்வங்களாய் நின்று அருள்புரிகின்ற உண்மை விளங்கும். சிவசத்தியே அவரவரது பக்குவ நிலைக்கு ஏற்ப மேற்கூறிய தெய்வங்களையே முதற் பொருளாகக் கூறும் பற்பல சமய நூல்களைப் படைத்தவாறும் புலப்படும். தாம் (மேற்கூறிய ஞானங்களைப் பெற்றோர்) சத்தியும் சிவமுமேயாய்விட்ட அந்நிலையிலும் அவ்விருவரும் தமக்கு இன்றியமையாத உயிர்த் துணைவராய் நின்று உதவுதலும் காணப்படும்.*

**குறிப்புரை :-** *'ஞானங்கள் தோன்றும் பொழுது' என்பது இயைபினால் கொள்ள நின்றது. வேண்டுருவாதலில், வேண்டுதல் பிறர் உடையதும், உருவாதல் பின்வரும் சத்தி சிவங்களுடையது மாயின. ''ஈன்றிடும்'' என்றது. 'ஈன்றமை புலனாகும்' என்றவாறு. எய்திய - மேற்சொல்லிய உருவங்களைப் பொருந்திய. ''பல்கலை'' என்பதில் இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. 'எதிர்வந்து சான்றாகுவர்' என்பது, 'உதவி புரிந்து நிற்றல் இனிது காணப்படும்' என்பதாம். முத்தி யின்பத்தையும் சத்தியும், சிவனும் அம்மை அப்பராய் நின்று நுகர் விக்கவே உயிர் நுகர்வதாக, 'அறியாதார் சிலர்க்கு முத்தி நிலையில் சத்தி சிவரது உதவி வேண்டாத ஒன்று' என்னும் மயக்கம் உண்டாதல் போல, உண்மை ஞானிகட்கு*

**1222.** ஆயும் அறிவுங் கடந்(து) அணு வோரணி
மாயம தாகி மதோமதி ஆயிடுஞ்
சேய அரிவை சிவானந்த சுந்தரி
நேயம் தாம்நெறி யாகிநின் றாளே. **85**

**1223.** நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பிஞ்ஞக னோடும்
குறியது கூடிக் குறிக் கொண்டு நோக்கும்
அறிவொடும் ஆங்கே அடங்கிட லாமே. **86**

---

*உண்டாதல் இல்லை' என்பதை இறுதி யடியிற் கூறினார். இதனால், ஞானத்தின் பயன்கள் சில கூறப்பட்டன.*

*1222.* ***தெளிவுரை :-*** *பொருள்களை அறிதலில் மனத்தினும் நுண்ணியதாகிய அறிவையும் கடந்து, சிறுமையில் அணுவுக்கு அணுவாயும், பெருமையில் மகத்துக்கு மகத்தாயும் நிற்கின்றவளும், உயிர்களால் எட்ட ஒண்ணாதவளும் ஆகிய சிவசத்தி, உயிர்கள் விரும்புகின்ற எல்லா நெறிகளுமாய் நின்று அருள் புரிகின்றாள். அநுபூதி நிலையை அறிவிக்கிறார்.*

***குறிப்புரை :-*** *மாயம், இங்கு, வியப்பு. 'ஆயிடும் அரிவை' என இயையும்.*

*இதனால், 'சிவசத்தி அணுவுக்கு அணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் நிற்க வல்லளாதலின், வேண்டுருவாகிய தூய்நெறி ஈன்றிடுகின்றாள்' என மேலதன்கண் ஐயமறுக்கப்பட்டது.*

*1223.* ***தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு பலப்பல நெறிகளாய் நின்று உயிர்களுக்கு அருள்புரிகின்ற சத்தியை ஒருவனாகிய சிவனின் வேறாகாதவளாக அறிந்து அவளை அச்சிவனோடு ஒன்றவைத்தே அவரை பொருளாகப் பொருந்திக் குறிக்கொண்டு எண்ணும் அறிவுத்திறன் படைத்தவரே, அவ்வறிவால் அம்மை யப்பராகிய அவ்விருவரிடையே அடங்கி ஆனந்தம் எய்துவர்.*

***குறிப்புரை :-*** *குறி, குறிக்கப்பட்ட பொருள், 'குறியதுவாக' என ஆக்கம் வருவித்துக்கொள்க. குறிக்கொண்டு நோக்குபலாவது அயராது எண்ணுதல். பிஞ்ஞகன் - மயிற்பீலியை அணிந்த சிவம். குறியது கூடி - குறித்த ஆதாரங்களில் கூடி. குறிக்கொண்டு நோக்கும் - உறுதியாகத் தியானிக்கும்.*

*இதனால், சிவ சத்தியது உண்மை நிலையை அறிந்து அழுந்தி நிற்பவரே உண்மை ஞானியராதல் கூறப்பட்டது.*

**1224.** ஆமயன் மால்அரன் ஈசன்மேல் ஆம்கதி
ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்
தேமயன் நாளும் தெனாதெனா என்றிடும்
மாமய மானது வந்தெய்த லாமே. **87**

**1225.** வந்தடி போற்றுவர் வானவர் தானவர்
இந்து முதலாக எண்டிசை யோர்களும்
கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்
வந்தனை செய்யும் வழிநவில் வீரே. **88**

---

*1224.* ***தெளிவுரை :-*** *சுவாதிட்டானம், முதலிய ஆதாரங்களில் முறையே பொருந்தியிருக்கும் அயன், மால், உருத்திரன், மகேசுவரன் என்னும் இவர்கட்கு மேல் உள்ள 'விந்து' 'நாதம்' என்பவற்றுக்குரிய சதாசிவனும், அவனுக்கு மேற்பட்ட சத்தி, வியாபினி, சமனை, உன்மனை என்னும் நால்வரும் ஆகிய ஒன்பதுபேர் நிலைகளிலும் யோக நெறியால் பொருந்தியவழி ஆன்மா இன்ப மயனாய்த் தேனுண்ட வண்டு அக்களிப்பினால் இசைபாடித் திரிவதுபோலுந் தன்மையை அடைவான்.*

***குறிப்புரை :-*** *ஆமயன் - ஆகிய பிரமன். 'மாலாங் கதி' என்பது பாடம் அன்று. கதி - தானம்; இடம். 'ஒன்பதும்' எனத் தொகை கூறவே, 'மேலாங்கதி நான்கு' என்பது பெறப்பட்டது. 'தேமயனாய்' என ஆக்கம் வருவிக்க. மா - வண்டு. எய்தல், எய்தப்பெறுதல்.*

*இதனால், சிவ, 'சத்தியைப் பிரணவ யோகத்தால் தலைப்படுதல் சிறப்புடைத்தாதல்' கூறப்பட்டது.*

*1225.* ***தெளிவுரை :-*** *சத்தியையும், சிவனையும் அடைய விரும்புபவர் யாராயினும் அவர்களை வழிபட்டு அடைதல் அல்லது, பிறிதொரு வழியாலும் அடைய வல்லுநரல்லர். ஆதலின், மக்களில் அவர்களை அடைய விரும்பும் நல்லீர், நீவிரும் அதன் பொருட்டு அவர்களை வழிபடுதலையே நெறியாகக் கொண்டு பயிலுங்கள்.*

***குறிப்புரை :-*** *கொந்து - பூங்கொத்து. கோன் - தலைவன். மூன்றாம் அடியை முதலிற் கொண்டு. "வந்தடி போற்றுவர்" என்பதை இரண்டாம் அடியின் இறுதியில் கூட்டி, அதன் பின் 'ஆதலின்' என்னும் சொல்லெச்சம் வருவித்து உரைக்க. இந்து - இந்திரன்; இவனும் கிழக்கிற்குத் தலைவன். இந்து முதலான எண்டிசையோர்கள் - இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எண்திசைக்காவலர்கள் வந்தனை செய்தலையே 'வழி'*

**1226.** நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபம்
கவற்றிய கந்தம் கவர்ந்தெரி தீபம்
பயிற்றும் உலகினில் பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை யாமே. **89**

---

*என்றார் ஆகலின், அவ்விடத்துப் பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம், நவிலுதல் - பயிலுதல்.*

*இதனால், சிவன், சத்தி இவர்களை வழிபாட்டினால் அல்லது அடையலாகாமை கூறப்பட்டது.*

*1226. தெளிவுரை :- சத்தியைச் சிவனது ஆற்றலாக அறியும் அறிவில்லாதவர் சத்தியை வேறாகவும், சிவனிற் பெரியவளாகவும் கருதி அவளையே வழிபடினும், அவ்வழிபாடு தூய முறையில் அமைந்திருப்பின், சத்தியையேயன்றிச் சிவனையும் உவப்பிக்கும். நவிற்று நல் மந்திரம் - இடைவிடாது சொல்லப் பெறுகின்ற நல்ல மந்திரம்; அது சிவயநம என்னும் திருவைந்தெழுத்து.*

*நன்மலர் - மணமுள்ள மல்லிகை முதலிய பூக்கள். தூபம் கவற்றிய கந்தம் - தூபமிடுவதால் அனைத்தையும் அகத்திடும் கந்தம். கவர்ந்தெரி தீபம் - அனைத்தையும் கவர்ந்து விளங்கும் விளக்கு. பயிற்றும் உலகு - வினைப்போகத்தை உண்டு பயிலச்செய்யும் உலகு. அவி - வேள்வியிற் கொடுக்கப்பெறும் உணவு. சோதி - ஒளி வடிவ இறை. பார்ப்பதி பூசை சோதிக்கு ஓர் அர்ச்சனையாதலாவது சக்தனுக்குச் செய்யப்பெறும் பூசை சக்திக்கும் ஆதலின் தென்பக்க வாமம்பற்றி கூறியதாம் என்க.*

*குறிப்புரை :- 'கள், ஊன் முதலியன கொண்டு செய்யும் வாம முறை வழிபாடு சத்தி சிவரை உவப்பியாது' என்பார், நன் மந்திரம் முதலிய நற்பொருள்களை எடுத்தோதிப் பிறிதொன்றையும் கூறாதொழிந்தார். கவற்றுதல், விருப்பத்தை மிகுவித்து மனத்தை மறுகச் செய்தல். கவர்தல், நெய்யை உண்ணுதல், 'பயிற்றுதல்' என்பது. ''தேற்றா ஒழுக்கம்'' என்பதுபோல இங்குத் தன்வினையாயிற்று. 'பயிற்றும் பூசை' என இயையும். அவி - படையற் பொருள். "சோதி" என்றது, சிவனை. 'சோதிக்கும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. இதனுள், உயிரெதுகை வந்தது.*

*இதனால், '**சத்தி வழிபாடும் தூயதாயவழிச் சிவவழிபாடாய்ப் பயன்தரும்**' என்பது கூறப்பட்டது.*

*1227. தெளிவுரை :- உலகத் தோற்றத்திற்கு முன்னும்,*

**1227.** தாங்கி உலகில் தரித்த பராபரன்
ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி
பூங்கிளி தாங்கும் புரிகுழலாள் அன்று
பாங்குடன் ஏற்பப் பராசத்தி போற்றே. **90**

---

*ஒடுக்கத்திற்குப் பின்னும் ஒருவனேயாய் உள்ள சிவன், உலகைத் தொழிற்படுத்தி நிற்குங் காலத்தில், சத்தியை ஒருபாற் கொண்டு அவளோடு உடனாய் இருவராயே நிற்கின்றான். ஆதலின், மாணவனே, நீ சிவனோடு சத்தியையும் உடன் வைத்தே வழிபடு.*

*குறிப்புரை :- புரிகுழலாள் அன்று பராபரன் ஏற்ப, உலகில் தரித்த, ஒருவன் உலப்பிலி (ஆதலால்) பராசத்தி போற்று எனக் கூட்டிப் பொருள் கொள்க.*

*தாங்கி - அண்டங்கள் அனைத்தையும் தத்தம் கால எல்லைக்குள் கேடு புகுதாதே காத்து. தரித்தல் - தான் ஆதாரமாதல். 'தரா' என்ற பூமியின் பெயருக்கும், இப்பொருட்டாதல் தெரிக. உலகில் தரித்த - உலகில் நிலைபெற்ற அண்டங்களுக்கு ஆதாரமாயிருந்து தாங்கும் இறைவனே அண்டங்களை இடமாகக் கொண்டும் விளங்குவன் என ஆதார ஆதேயம் கூறப்பட்டது.*

*ஓங்கிய காலம் - நீண்ட காலம்; பேரூழிக்காலம். காலத்தொருவன் என்றது காலாதீதன் என்பதனை உணர்த்தியது. காலாதீதனே நித்யனாக முடியுமாதலின் உலப்பிலி என்றது. உலப்பிலி - அழிவில்லாதவன்.*

*வேதங்கள் கிளி ரூபமாக வந்து இறைவியிடம் அமர்ந்து பயில்கின்றன. ஆதலின் பூங்கிளி தங்கும் குழலாள் என்றருளியவாறு, பாங்கு - ஒருபக்கம்; மேனியிற்பாதி. பராசத்திபோற்றே என உபாசகனுக்கு உண்மை உணர்த்தியவாறு. உமை ஆதாரமாக, பராபரன் ஆதேயமாக விளங்குவதால் பராபரன் பேருழிக் காலத்தையும் கடந்து எல்லாவுலகையும் தான் தாங்கி விளங்குவார் என்பது கருத்து.*

*1228. தெளிவுரை :- மாணவனே, நீ, துவண்ட தோற்றத்தால் கொடி போலுதல் கொண்டு, நிறம் பற்றி, 'பசுங்கொடி' என்றும், பயன் பற்றி, 'நற்கொடி' என்றும், அழகு பற்றி 'ஒளிக்கொடி' என்றும், புகழப்படுபவளும், மெய்யுணர்ந்தோரது அன்பிற்குத் தலைவியும், மூன்று கண்களை உடையவளும் ஆகிய பராசத்திக்கு அன்பு செய்து*

1228. பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்
அற்கொடி மாதுமை ஆர்வத் தலைமகள்
நற்கொடி மாதை நயனங்கள் மூன்றுடை
விற்கொடி மாதை விரும்பி விளங்கே. 91

1229. விளங்கொளி யாய விரிசுடர் மாலை
துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கக்
களங்கொள் மணியுடன் காம வினோதம்
உளங்கொள் இலம்பியம் ஒன்று தொடரே. 92

---

*மேம்படு; அழகிய கொடி போல்பவராகிய கலைமகளும், திருமகளும் உன் பாதங்களைப் போற்றுவார்.*

***குறிப்புரை :-*** *அல் - இரவு (கருமை). விற்கொடி என்றது வில் போலும் வளைந்த புருவம். முதலடியை ஈற்றில் கூட்டி உரைக்க. 'பொற்கொடி மாதர்' என்பது பின்னர்க் கூறப்பட்ட மாதோடு உடன் எண்ணப்படு வாரைக் குறித்தது. இவ்வாறன்றி இயைபில்லாத மக்கட் பெண்டிரை எண்ணுதல் கூடாமையானும்' அங்ஙனங் கொண்டுரைப்பின் வாம நெறியாமாகலானும் அது பொருந்தாமை யறிக. __'பராசக்தியை வழிபடினும் கல்வியின் பொருட்டும், செல்வத்தின் பொருட்டும் கலைமகளையும், திருமகளையும் வழிபடுதல் இன்றியமையாது போலும்' என ஐயுற்றமாணாக்கனை, 'பேரன்படைப் பெருமக்கட்குப் பராசக்தியே அனைத்தையும் தருவாள்' எனத் தெளிவித்தவாறு__.*

*இதனால், சிவசத்தி வழிபாடு ஒன்றே அனைத்துப் பயன்களையும் தருதல் கூறப்பட்டது.*

***1229. தெளிவுரை :-*** *விளங்குகின்ற விளக்குப் போல்பவளும், மிக்க ஒளியுடைய மணி மாலைகள் அசையும் மார்பினை உடையவளும் ஆகிய பராசத்தி, செறிந்த இருள் மறையும்படி கண்டத்தில் நீல மணியைக் கொண்டு விளங்கும் சிவனுடன் இன்ப விளையாடலைக் கருதுகின்ற, நாணம் பொருந்திய ஒரு தோற்றத்தையும் நினைத்து வழிபடு.*

***குறிப்புரை :-*** *'வழிபடின் இன்பத்தைப் பெறுவாய்' என்பது குறிப்பெச்சம். இன்பத்திற்காகவும் பிறதேவியரை வழிபட*

**1230.** தொடங்கி உலகினில் சோதி மணாளன்
அடங்கி யிருப்பதென் அன்பின் பெருமை
விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை
ஒடுங்க உமையொடும் ஒருரு வாமே. **93**

---

*வேண்டுவதில்லை என்றபடி மணியையுடையவளை, ''மணி'' என்றார். களம் - கண்டம். களங்கொள் மணி - நீல கண்டராகிய சிவம். காமவிநோதம் உளங்கொள் இலம்பியம் - காதன்மையாகிற விளையாட்டைத் திருவுளம் பற்றிய எமது பேறாவாள்; இலம்பியம் - இலப்பியம் - அடையத்தக்கது - பேறு. உளங்கொண்டது நமது ஆணவ இருள் நீங்க.*

*இதனால், சத்தி வழிபாடு இன்பத்தையும் அளித்தல் வகுத்துக் கூறப்பட்டது.*

***1230. தெளிவுரை :-*** *பாம்பை அணிந்த விரிந்த சடையில் பெரிய கங்கை நீர் ஒரு புல்நுனியில் நீர்போல் அடங்கியிருக்கச் சிவன் சத்தியோடு இரு திறமும் ஒருவடிவிலே அமைய நிற்கின்றான். உலகில் பிறந்து அறிவு தொடங்க நின்ற நாள் முதலாக அவனது அழகிய அந்த மணக் கோலத்திலே அடங்கி நிற்பதே எனது அன்பின் பெருமையாகும்.*

***குறிப்புரை :-*** *'அதனால், இன்பம் முதலிய எந்த உறுதிப் பொருளிலும் எனக்குக் குறை இல்லை; உலகீர், நீவிரும் அவ்வாறு அடங்கி நின்று அனைத்துப் பயனையும் பெறுவீர்' என்பது குறிப்பெச்சம். 'மணாளன் பால்' எனத் தொகுக்கப்பட்ட உருபை விரித்துக்கொள்க. 'கங்கை பாம்பணிந்த சடையில் ஒடுங்க' என்றது ஓர் இன்ப நயம். 'பாம்பையும், கங்கையையும் அடக்கின ஆற்றலுடையவன்' என்பது உண்மைப் பொருள். விடம், ஆகுபெயர், 'ஒடுங்கி' என்பது பாடம் அன்று. சத்தியும் சிவமும், ஒளியும் சூடும் போல ஒரே வடிவாம்.*

*இதனால், **சிவனைச் சத்தியோடு உடனாகக் கண்டு வழிபடுவோர் எய்தாத பயன் இல்லை என்பது கூறப்பட்டது**.*

***1231. தெளிவுரை :-*** *பல உடம்புகளும், அவற்றில் உள்ள பல உயிர்களுமாய் நிறைந்த நிற்கின்ற சிவன் உயிர்களுக்குப் பல வேறு வடிவினனாய்க் காட்சியளித்தலை ஆராயின், அவையெல்லாம் அவன் தனது சத்தியோடு மணந்து மகிழ்கின்ற அருள் நாடகமே. உமையோடு கூடிக் களிப்பன மாயை என்றது, இருவரும் கூடி*

1231. உருவம் பலஉயி ராய்வல்ல நந்தி
தெருவம் புகுந்தமை தேர்வுற நாடின்
புரிவளைக் கைச்சினம் பொன்னணி மாதை
மருவி இறைவன் மகிழ்வன மாயமே. 94

1232. மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்
தாயம் புணர்க்கும் சலதி அமலனைக்
காயம் புணர்க்கும் கலவியுள் மாசத்தி
ஆயம் புணர்க்கும்அவ் வியோனியு மாமே. 95

---

*மாயைக் கலக்க அதனின்று சொல்லும் பொருளும் ஆகிய பிரபஞ்சம் உண்டாயின என்பதைக் குறிப்பான் உணர்த்தியவாறு.*

***குறிப்புரை :-*** *"பல" என்பது "உருவம்" என்பதற்கு முன்னும் சென்று இயைந்தது. எளியனாய்க் காட்சிப்படுதலை, தெருவம் புகுதலாகக் கூறினார். "இறைவன்" என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது. 'மகிழ்வனவாகிய மாயம்' என்க. அருவனாய் நிற்கின்ற சிவன் உருவனாய் விளங்குதல் சத்தியினாலே என்றவாறு.*

*இதனால், சிவன் உருவங் கொள்ளுதல் சத்தியால் என்பது கூறுமுகத்தால், சத்தியை மறத்தல் கூடாமை வலியுறுத்தப்பட்டது.*

***1232. தெளிவுரை :-*** *மாயையைக் கொண்டு உலகைச் சிருட்டிக்கத் திருவுளங்கொண்ட இறைவனும் சத்தியும் சிருட்டியுள் நிற்கு நிலை வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.*

*மாயையைக் கூட்டிவைக்கும் வளர்சடையானாகிய சிவம் தன் திருவடியோடு சம்பந்தம் உண்டுபண்ணும் கங்காதர மூர்த்தியைச் சத்தி தமது கலவியினால் திருமேனி கொள்ளச்செய்வர். அவரே கூட்டத்தை விளைவிக்கும் யோனியும் ஆம் என்றவாறு.*

*மாயம் புணர்க்கும் வளர்சடையான் - ஆன்மாக்கள் வினைக் கீடாக உடலொடு பொருந்த மாயையாகிய முதற்காரணத்தோடு கூட்டுவிக்கும் இறைவன்.*

*அங்ஙனம் மாயையொடு கூட்டி ஆன்மாக்களுக்குச் செய்வன திருவடிச் சேர்க்கையாகிய அருளலேயாதலின், தன் திருவடிச் சேர்க்கையூட்டவும் வல்லான் என்பது 'அடிதாயம் புணர்க்கம் சலநதியமலன்' என்றது. தாயம் - உரிமை; சம்பந்தம். அமலனைக் கலவியுள் காயம் புணர்க்கும் மாசத்தி - பரசிவத்தைத் தம் புணர்ச்சியால் திருமேனி கூட்டுவிப்பள் பராசத்தி என்பதாம்.*

**1233.** உணர்ந்தொழிந் தேன்ஆவ னாம்எங்கள் ஈசனைப்
புணர்ந்தொழிந் தேன்புவ னாபதி யானை
அணைந் தொழிந் தேன்எங்கள் ஆதிதன் பாதம்
பிணைந்தொழிந் தேன்தன் அருள்பெற்ற வாறே. **96**

---

*ஆயம் - கூட்டம். யோனி - விந்து. பராசக்தி விந்துசக்தியுமாவள் என்பதாம்.*

***1233. தெளிவுரை :-*** *உயிர்களால், 'அவன்' என்று சேய்மைச் சுட்டாகப் பொதுவே உணரப்படுபவனாகிய எங்கள் தலைவனாகிய சிவனை நான், 'அவன் அன்ன அருமையினன்' என முதற்கண் உணர்ந்தேன். பின்னர் அவன் உலக முதல்வியாகிய சத்தியை யுடைய சத்திமானாதலை அறிந்து அவனை அணுகினேன். அதன்பின்னர் அவனோடு ஒன்றினேன். முடிவாக ஒருஞான்றும் அவனை விட்டு விலகாத நிலைமையனாயினேன். இவையே நான் சிவனது திருவருளைப் பெற்ற முறைமை. அவன் நாம் உணர்ந்து ஒழிந்தேன் - அறியப்படு பொருளாகிய சிவத்தையும் அறிபவர்களாகிய நம்மையும் உணர்ந்து, சிவபரம்பொருளின் மேலான நிலையையும், ஆன்மாக்களினுடைய இழிதகைமையையும் அவனருள் உணர்த்த உணர்ந்து அவனது அருள் வியாபகத்துள் நாம் ஏகதேசியாக இருத்தலைத் தெளிந்து, நாம் என்னும் முனைப்பையே ஒழிந்தேன் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'நீவிரும் அவ்வாறே பெற்றுய்ம்மின்' என்பது குறிப்பெச்சம். ''புவனாபதியார்'' என்னும் உயர்வுப்பன்மை ஒருமையோடு மயங்கிற்று. 'ஈசற் புணர்ந்தொழிந்தேன்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். ஈசன் - உடைமையாக உடையவன். எங்கள் ஈசன் - எங்கள் அனைவரையும் அநாதியே உடைமையாகவுடைய இறைவன். பிணைதல் - துணையாகக் கோடல்.*

*இதனால், 'சிவனைச் சத்தி வழியாகவே பெறுதல் கூடும்' என்பது கூறப்பட்டது.*

***1234. தெளிவுரை :-*** *புகலிடமிதுவெனல் நுதலிற்று. பெரிய மனோன்மனி பெருமை பெற்றாள். நல்ல தாளினையுடைய இறைவனே நற்பயன் என்பர். திருவடி ஞானத்தைக் கற்றான் அறியும் கருத்தினை அறிவார்கட்கு, திருவடியாகிய முத்தியுலகமே அடைக்கலமாதற்குரிய தனித்த இடமாம் என்றவாறு.*

*மனோன்மனியும் இறைவனுமே பயனாவர். ஆதலால் அவளது உலகத்தை அடைக்கலத்தானமாக அடைதலே ஒப்பற்றநிலையாம் என்பது கருத்து.*

1234. பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி
நற்றாள் இறைவனே நற்பய னேஎன்பர்
கற்றான் அறியும் கருத்தறி வார்கட்குப்
பொற்றாள் உலகம் புகல்தனி யாமே. 97

1235. தனிநா யகன்னோ டென்நெஞ்சம் நாடி
இனியாள் இருப்பிடம் ஏழுல கென்பர்
பனியான் மலர்ந்தபைம் போதுகை ஏந்திக்
கனியா நினைவதென் காரணம் அம்மையே. 98

---

*கற்றான் - திருவடி சம்பந்தமான கல்வி கற்றவன். அவன் அறியும் கருத்தாவது தன்செயலாவதொன்று இன்றென்றும், எல்லாம் இறைவன் செயலே என்றும் அறிதல். தனிப்புகலாம் எனக்கூட்டி ஒப்பற்ற புகலிடமாம் எனப் பொருள்கொள்க.*

***1235. தெளிவுரை :-*** *ஒப்பற்ற தலைவனாகிய சிவனோடே எனது நெஞ்சத்தை விரும்பி இனியவளாய் இருக்கின்ற சத்தி ஏழுலகத்திலும் நிறைந்திருப்பவளே. ஆயினும், எனக்குத் தாயாகிய அவளை நான் நல்ல புதுமலர்களைக் கையில் கொண்டு உன்னுவது உள்ளங்கை நெல்லிக்கனியாகவே.*

***குறிப்புரை :-*** *'இனியார்' என்பது பாடம் அன்று "பனியால்" என்றது. 'குளிர்ச்சியோடு' என்றவாறு. காரண அம்மை - ஈன்ற தாய். 'அம்மையே' என்னும் இரண்டனுருபு தொகுத்தல் பெற்றது. 'அம்மையைப் போது கை ஏந்தி நினைவது கனியா' எனக் கூட்டுக.*

*இதனால், சத்தி பெரியவளும், அரியவளுமாயினும், வழிபடுவார்க்கு எளியளாதல் கூறப்பட்டது.*

***1236. தெளிவுரை :-*** *சிவனுக்கு அழகிய மனைவியும், உயிர்களுக்குத் தாயும் ஆகிய சத்தி, உயிர்களின் பல்வேறு நிலைகளிலும் அவற்றிற்கு ஆதாரமாய் நின்று, வேண்டுவனவற்றை வழங்குபவளாயும் இருப்பாள். அதனால், இன்று நமக்கு ஆதாரமாய் நிற்கின்ற நிலமகளும் அந்தச் சிவசத்தியாகவே எனக்குத் தோன்றுகின்றாள்.*

***குறிப்புரை :-*** *''செம்மனை, இம்மனை'' என்பவற்றில், நிலைக்களம் "மனை" எனப்பட்டது. ஈற்றில் உள்ள அம்மனை, அனைவர்க்கும் தாயாகிய சத்தியைக் குறித்தது.*

**1236.** அம்மனை அம்மை அரிவை மனோன்மனி
செம்மனை செய்து திருமக ளாய்நிற்கும்
இம்மனை செய்த இருநில மங்கையும்
அம்மனை யாகி அமர்ந்துநின் றாளே. 99

**1237.** அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அம்மையும் அத்தனும் ஆரறிவார் என்னை
அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. 100

---

*"பரஞானத் தால்பரத்தைத் தரிசித்தோர் பரமே*
*பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்"*
*- சிவஞான சித்தி, சுபக். 11-2*

*என்னும் முறைபற்றி, "இருநில மங்கையும் அம்மனையாகியமர்ந்து நின்றாள்" என்றார்.*

*இதனால், சத்தி அனைத்து ஆதார ஆதேயங்களுமாய் நிற்றல் முடித்துக் கூறப்பட்டது.*

*1237. தெளிவுரை :- உலகத்தாயும், தந்தையுமாகிய சத்தியும், சிவனும் என்பால் அன்புவைத்து எனக்கு ஆவன செய்தலல்லது, என்னைப் பெற்ற தாய் தந்தையர்தாம் என்னை எந்த அளவில் அறிந்து எனக்கு என்ன செய்யவல்லுவர்! ஆகையால், உண்மைத் தாயாகிய சத்தியும், தந்தையாகிய சிவனும், மகனாகிய யானும் மட்டும் ஒன்றி யிருந்த காலத்து யான் அவ்விருவரையே விரும்பி அவரிடம் அயரா அன்பு உடையவனாயினேன். உலகுயிர்களுக்கெல்லாம் சிவம் ஆதாரம்; அவருக்குச் சத்தி ஆதாரம். அவருக்குச் சிவம் ஆதாரம்.*

*குறிப்புரை :- 'அதனால், அளவிலா ஆனந்தத்தையும் பெற்றேன்' என்பது குறிப்பெச்சம். இரண்டாம் அடிக்கு, 'அம்மையும் அத்தனுந்தாம் என்னை யாராக அறிவர்?' என உரைக்க. 'உயிர்களே தம்மில் ஒன்றற்கு ஒன்று யாதும் செய்து கொள்ளல் இயலாது' என்பது முதல் இரண்டடிகளில் விளக்கப்பட்டது. அதனானே, உயிர்கட்குப் பெத்தம், முத்தி ஆகிய எக்காலத்தும் சத்தியும், சிவனுமே பரம ஆதாரமாதல் விளக்கப்பட்டதாம். இம்மந்திரம் முத்தி பஞ்சாக்கரப் பொருளதாய் நிற்றலை நுனித்துணர்ந்து கொள்க.*

*இதனால், உயிர்கட்குப் பரம ஆதாரம் இது என்பது வலியுறுத்தப்பட்டது.*

## 9. ஏரொளிச் சக்கரம்

*ஏர் ஒளி - மூலாதாரத்தினின்றும் மேல் எழுந்து துவாத சாந்தம் முடியச் செல்லும் ஒளி. இஃது உண்மையில் குண்டலினியே. இதன் எழுச்சிக்குத் துணைபுரிந்து யாண்டும் இதன் உடனாய் நிற்பது மூலா தாரத்தில் அடங்கியிருக்கும் வெப்பமாகிய மூலாக்கினி. அதனால் இவ்விரண்டையும் வேறுபாடின்றி ஒன்றாகவே குறிப்பிடுவர். இம்மூலாக்கினியை வளர்க்கும் முகத்தால் குண்டலி சத்தியை எழுப்பித் துவாத சாந்தத்தை அடையச் செய்யும் பிராசாத யோகத்தைப் பயக்கும் புறக் கிரியையாகிய சக்கர வழிபாட்டினை நாயனார் முப்பத்தாறு மந்திரங்களால் இவ்வதிகாரத்தில் அருளிச் செய்கின்றார். ஆதலின், இவ்வதிகாரம் 'ஏரொளிச் சக்கரம்' என்னும் பெயருடையதாயிற்று. இதனை, 'குண்டலினி சக்கரம்' எனினும் இழுக்காது. முன்னையதிகாரத்துள், "நெறியது வாய்நின்ற" எனவும், "ஆமயன் மால் அரன்" எனவும் (பா. 1223. 24) போந்த மந்திரங்களிற் கூறிய சாதனத்திற் சாதனமாய் அமைதலின் இஃது அவ்வதிகாரத்தோடு இயையுடையதாயிற்று. இவ்வதிகாரமும் பெரும்பான்மை அந்தாதி யாய் உள்ளது. பிராசாத நெறியான் அன்றிக் குண்டலி சத்தியைத் தலைப்படுதல் இயலாது. அதனால், இதனையறியாதார் வாளா மூலாக்கினியை மட்டுமே வளர்த்தொழிவர். சக்கரங்களாகப் புறத்தே தாமிரமாதி தகடுகளில் இயற்றப்படுவன யாவையும் அகத்தே ஆதாரங்களில் இயன்றனவாகிய ஆதாரசக்கரங்களை அறிவிப்பனவே. சக்கரபூசை அங்கங்கே பீசங்களையும், அதிதெய்வங்களையும், மந்திரங்களையும் வைத்துத் தியானிக்க உதவும் புறப்பூசை போல்வனவேயாதலின், அகப் பூசையாகிய ஆதார யோகத்தையே ஈண்டும் விளக்கக் கருதிய திருமூலதேவநாயப் பெருமான், மூலாதாரம் முதலான சக்கரங்களில் பஞ்சபூத பீசங்களும் அவையனைத்தும் ஒளிமயமாக*

**1238.** ஏரொளி உள்எழு தாமரை நாலிதழ்
ஏரொளி விந்துவி னால்எழும் நாதமாம்
ஏரொளி அக்கலை எங்கும் நிறைந்தபின்
ஏரொளி சக்கரம் அந்நடு வன்னியே. **1**

---

*மேல்நோக்கி வழங்கும் காட்சியும் உணர்த்தத் தொடங்கி, 'ஏரொளி' என்பதன் பெயர்க்காரணத்தைப் பின்னர் இவ்வதிகாரத்து 20-ம் திருமந்திரத்து விளக்குகின்றார். ஆதலின், அதற்கங்கமாக அவ்வோராத சக்கரத்தின் இயல்பையும், அக்கரத்தையும், பீசத்தையும், அதி தேவதையையும், அவை எல்லா பற்றினும் பராசத்தி வியாபித்து நிற்கும் நிலையினையும் முறையே உணர்த்துகின்றார்கள். ஏர் - எழுச்சி அல்லது அழகு. ஏரொளிச் சக்கரம் - மேல்நோக்கிய ஒளிவடிவான சக்கரம். மூலக்கனல் எங்கும் வியாபித்து அனைத்தையும் தம்முள் அடக்கி வேறொன்றும் தோன்றாமல் தானென்றேயாகித் தோன்ற நிற்கும் அநுபவத்தை அறிவிப்பது என்பது கருத்து.*

***1238. தெளிவுரை :-*** ***தன்னுள்ளே ஏரொளி எழப்பெறுவதாகிய தாமரை மலர் நான்கிதழ்களை யுடையது. அவ் ஏரொளியாவது, சுத்த மாயையினின்றும் தோன்றும் வாக்கேயாம். அவ்வொளி பல கூறுகளாய் வளர்ந்து உடம்பெங்கும் குறைவின்றி நிறையப் பெற்ற பின், உடலாகிய சக்கரம் (யந்திரம்) ஏரொளிச் சக்கரமாய்விடும். அப்பொழுது ஐம்பூதங்களில் ஒளிப் பொருளாகிய தீ, அச்சக்கரத்தின் நடுவிலே அணையாது நின்று ஒளிர்வதாம்.***

***குறிப்புரை :-*** ***'எழப்பெறுவதாகிய தாமரை' எனவே, 'அதுவே ஏரொளி தோன்றுவதாகிய முதலிடம்' என்பது பெறப்பட்டது. இது 'மூலாதாரம்' என்பதும், இதன் இயல்பும் முன்னையதிகாரத்தில் விளக்கப்பட்டன. இவற்றைத் தோற்றுவாய் செய்யவே, 'பிற ஆதாரங்களின் இயல்பையும் ஈண்டு நினைவு கூர்க' என்றதாயிற்று.***

**1239.** வன்னி எழுத்தவை மாபலம் உள்ளன
வன்னி எழுத்தவை வானுற ஓங்கின
வன்னி எழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி எழுத்திடு மாறது சொல்லுமே. **2**

**1240.** சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாம்
சொல்லிடும் அப்பதி அவ்வெழுத் தாவன
சொல்லிடு நூறொடு நாற்பத்து நால்உருச்
சொல்லிடு சக்கர மாய்வரும் ஞாலமே. **3**

---

*விந்துவினால் - 'விந்து' என்னும் காரணப் பொருளால். 'அவ் ஏரொளிக் கலை' எனச் சுட்டினை மாற்றி யுரைக்க. "எங்கும்" என்றது, 'உடலெங்கும்' என்னும் பொருளதே யாதலின், 'ஏரொளிச் சக்கரமாய் அமைவது உடம்பே' என்பது போந்தது. போதரவே, அஃது அங்ஙனம் அமையுமாற்றைப் புறத்துக் கண்டு வழிபடும் முறை இனி இங்குக் கூறப்படுவது என்பது விளங்கும். "அந்நடு" என்றது 'அதன் நடு' என்றவாறு. 'உடலாகிய சக்கரத்தின் நடுவே தீ நிற்கும்' எனவே, 'புறத்து வரையப்படும் சக்கரத்தின் நடுவில் அக்கினிக்குரிய 'ஹ்ரூம்' என்னும் பீசாக்கரம் அடைக்கப்படும் என்பது புலனாம்.*

*இதனால், இவ்வதிகாரப் பொருள்கட்குத் தோற்றுவாய் செய்யப்பட்டன.*

***1239. தெளிவுரை :-** தீயின் பீசாக்கரங்களே ஏனைய பூத அக்கரங்கள் எல்லாவற்றினும் சிறந்து நிற்கும். அதனால், அவை வானத்தையும் அளாவி நிற்கும். அவற்றையே 'சக்கரம்' என்று கூடச் சொல்லி விடலாம்; அவற்றைச் சக்கரத்துள் இடும் முறை இங்குச் சொல்லப்படும். வன்னி பீசம் ரம்.*

***குறிப்புரை :-** பிரணவத்தோடு கூடி நிற்றல் பற்றிப் பன்மையாக ஓதப்பட்டது. மூன்றிடத்தும் 'அவையே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தல் பெற்றது. ''சொல்லும்'' என்றது 'சொல்லப்படும்' என்றவாறு.*

*இதனால், மேல், ''அந்நடு வன்னி'' என்றதன் சிறப்புக் கூறப்பட்டது. இச்சிறப்பு, ஒளிச் சக்கரமாகிய இயைபு பற்றிக் கொள்ளப்படுவது என்க.*

***1240. தெளிவுரை :-** "விந்துவினால் எழும் நாதம்" என்புழிச் சொல்லப்பட்ட சுத்த மாயை வாக்காக விருத்திப்படுமிடத்துப்*

1241. மேல்வரும் விந்துவும் அவ்வெழுத் தாய்விடும்
மேல்வரும் நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரும் அப்பதி அவ்வெழுத் தேவரின்
மேல்வரு சக்கர மாய்வரும் ஞாலமே. **4**

1242. ஞாலம தாக விரிந்தது சக்கரம்
ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்
ஞாலம தாயிடும் அப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த எழுத்தே. **5**

---

*பன்னிரு பிராசாத கலைகளாயும் விருத்திப்படுவதாம். அக்கலைகளே சிவமாயும் விளங்கும். அவைகளை, நூற்று நாற்பத்து நான்கு அறைகளில் அமைக்க, மேற்கூறிய ஏரொளிச் சக்கரம் தோன்றுவதாம்.*

***குறிப்புரை :-*** *நாதம் - வாக்கு, அதன் கலைகளையும் நாதம் என்னும் பெயராற் கூறினார். "எழுத்து" என்றதும் அதனை, பிராசாத கலைகள் முன்னைத் தந்திரத்தில் சொல்லப்பட்டன. 'அவ்வெழுத்து அப்பதியாவன' என மாறிக் கூட்டுக. 'பதியும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. சிவசத்தியால் நேரே இயக்கப்படுதலால், 'சிவமும் ஆவன' என்றார். நூற்று நாற்பது அறைகள் அமையுமாறு முன்னர்க் காட்டப்பட்டது.*

*இதனால், ஏரொளிச் சக்கரத்தின் வடிவு பொதுமையிற் கூறி, அது திருவருளைப் பெறுதற்கு வாயிலாதற் சிறப்புக் கூறப்பட்டது.*

***1241. தெளிவுரை :-*** *உயிரெழுத்துக்களின் ஈற்றில் ஓதப்படும் விந்துவாகிய 'அம்' என்பது தனிஓர் எழுத்தாய் நிற்பினும், அகரம் முதலிய பிற உயிர்களோடு கூடி நிற்றலும் உடைத்து. முடிவில் உள்ள நாதமாகிய 'அ' என்பதும் அத்தன்மையது. சக்கரங்களில் முதற்கண் உள்ள அறையில் எந்த எழுத்து உள்ளதோ, அந்த எழுத்துக்குரிய கலையின் சக்கரம் அதுவாகும். அவ்விடத்து அச்சக்கரம் அக்கலைக்குரிய பிண்டமாதலேயன்றி அண்டமாயும் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *மேல்வரும் விந்துவும் 'ம்' என்னும் ஒலியுடைய தாகும். அதன்மேல் வரும் நாதம் ஓங்கும் எழுத்துடன் கூடி பதிக்குரிய அவ்வெழுத்துக்களே வரின் பூமி சக்கர வடிவாகும் என்றவாறு.*

*'அகாரம் உகரம் மகாரம் நாதம் விந்து' என்ற வியட்டிப்*

**1243.** விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விரிந்த எழுத்தது சக்கர மாக
விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே. **6**

**1244.** அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ் அன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாய் எழ
அப்பினில் அப்புறம் ஆகாச மாமே. **7**

---

*பிரணவத்துள் விந்து ஒற்றொலியாம். ஓங்கும் எழுத்துடன் நாதம் என்றது உச்சியிற்றோன்றும் எழுத்தாகிய 'ஸௌ' என்பதுடன் கூடியது என்பது. அப்போது ஸௌ: என ஆகும். அப்பதி அவ்வெழுத்து - பதிக்கு உரிய எழுத்தாகிய சிவயநம. ஆகவே ஓம் ஸௌ: சிவயநம என்ற எழுத்துக்கள் வரின் நாற்கோண வடிவாய சக்கரமாம் என்றவாறு. சக்கரமாய் வரும் ஞாலமே என்றதில் சக்கரமாகத் தன்னைத்தானே சுழலும் உலகம் எனவும் ஒருபொருள் தோன்ற நிற்றல் காண்க.*

*அவ்வெழுத்தாய்விடும் என்பதனை அகாரமாகிய சிவ எழுத்தாகும் என்றும், மேல்வரும் என்பதனைச் சென்னி அளவும் சென்ற எனவும் உரைகோடலும் ஒன்று.*

***1242. தெளிவுரை :-** ஏரொளிச் சக்கரம் பல உலகங்களையும் அமையும் பெருமையது. அதில் உள்ள விந்து நாதங்களும் அன்ன. அதனால் அச்சக்கரத்தில் இருக்கும் எழுத்துக்களை அறிவுடையோர் சிவமேயாக எண்ணுதலில் தலைப்படுவர்.*

***குறிப்புரை :-** 'எழுத்தை அப்பதியாக யோசித்தலில் ஞாலம் ஆயிடும்' என்க. மூன்றாம் அடியில் ''ஞாலம்'' என்றது அறிவுடையோரை. இதனால், ஏரொளிச் சக்கரத்தின் எழுத்துக்களைச் சிவமாக எண்ணுதல் வலியுறுத்தப்பட்டது.*

***1243. தெளிவுரை :-** சுத்த மாயையினின்று, விருத்திப் பட்ட எழுத்துக்கள் முதற்கண் 'நாதமும், விந்துவும்' என்னும் சூக்கும், சூக்குமாசூக்கும நிலைகளாய் நின்று, பின்னரே தூலமாயினவாம். அந்த எழுத்துக்களால் சக்கரங்கள் அமையுமிடத்து ஒடுக்க முறையில் முதற்கண் பிருதிவி சக்கரமும், அதன்மேல் அப்பு சக்கரமும் நிற்கும்.*

**1245.** **ஆகாச அக்கர மாவது சொல்லிடில்**
**ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை**
**ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்**
**ஆகாச அக்கரம் ஆவ தறிமினே.** **8**

---

***குறிப்புரை :-*** *'விந்துவும் நாதமும் ஆய்' என ஆக்கம் வருவித்து முடிக்க, ''விந்துவும் நாதமும்'' என்றது ஒடுக்கமுறை. விந்துவே, 'பைசந்தி' எனவும், நாதமே 'சூக்குமை அல்லது பரை' எனவும் சொல்லப்படும். விரிந்தநிலை மத்திமையும், வைகரியும், இச்சக்கரங்கள் அமையுமாற்றைப் பின்னர்க் காண்க. இதனால், ஏரொளிச் சக்கரத்தின் பகுதிகள் சில கூறப்பட்டன. விரிந்த எழுத்து விந்துவும் நாதமுமாகிய சிவசத்திகளிட மிருந்தேயாம். அதுவே சக்கரமாக, அதுவே பூமியாக, அதன்புறமாகவுள்ள நீராக விரிந்தன என்றவாறு.*

*விந்து வானிலிருந்து பஞ்சபூதங்களும், பௌதிகங்களும் தோன்றுவன என்று அறிவித்தவாறு.*

***1244. தெளிவுரை :-*** *மேற்சொல்லிய அப்புசக்கரத்தின்மேல் தேயு சக்கரமே, அதன்மேல் வாயுச்சக்கரமும், அதன்மேல் ஆகாய சக்கரமும் அமையும். நீர் மண்டலமாக விரிந்ததாகிய சக்கரம் அப்புறம் அனல் மண்டலமாகும். அப்புறம் காற்றெழ அப்புறம் ஆகாசமாம் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *முதலடி அனுவாதம், இம் மந்திரத்தில் அப்புவை அடியாக எடுத்தமையின்யாவும் அதன்மேல் உள்ளனவாக ஓதினார்.*

*இதனால், அவை மற்றும் சில கூறப்பட்டன.*

***1245. தெளிவுரை :-*** *ஆகாய பீசத்தைச் சொல்வதனால், ஆகாய சக்கரத்தில் அமைந்த எழுத்துக்கள் யாவும் அந்த ஆகாய பீசமாகவே ஆய்விடும். அதனால், ஆகாய சக்கரம் சிவானந்தத்தைப் பயக்கும் ஆற்றலுடையதாம். 'ஹ' என்பது தமிழொலி நோக்கி 'அ' எனத் திரிந்தது. 'ஹம்' என்பது ஆகாச பீசம்.*

***குறிப்புரை :-*** *"சொல்லிடில்" என்பது காரணப் பொருளில் வந்தது. இறுதிக்கண் இவ்வாறு கூறவே, ஏனைய பூத எழுத்துக்களைச் சொல்வதனால், அவ்வச்சக்கரத்தில், உள்ள எழுத்துக்களும் அவ்வாறாய்ப் பயன் தருதல் கொள்ளப்படும்.*

**1246.** அறிந்திடும் சக்கரம் ஐயைந்து விந்து
அறிந்திடும் சக்கரம் நாத முதலா
அறிந்திடும் அவ்வெழுத் தப்பதி ஓர்க்கும்
அறிந்திடும் அப்பக லோன்நிலை ஆமே. **9**

---

*இதனால், முன்னை இருமந்திரங்களில் எய்திவற்றிற்கு மேலும் ஒரு சிறப்புநிலை கூறப்பட்டது.*

*1246.* **தெளிவுரை :-** *இங்கு அறியப்பட்டு வரும் ஏரொளிச் சக்கரம், வரிசைக்கு ஐந்தாக ஐந்துவரியில் இடப்படும். இருபத்தைந்து புள்ளிகளால் அமைவது. (எனவே அப்புள்ளிகளை நேர்க் கோடுகளால் இணைக்கத் தோன்றும் நானான்கு (4 x 4 = 16) பதினாறு அறைகளால் அமைதல் பெறப்பட்டது). அவ் அறைகளில் உயிரெழுத்துப் பதினாறும் நாதம் முதலாக அடைக்கப்படும். இவ்வாறாக அமையும் இச்சக்கரம் பொதுவே சிவசூரியனால் விளக்கப்படுவது.*

*குறிப்புரை :- "நாதம் முதலா" என்றது ஒடுக்கமுறை பற்றி, உயிரெழுத்தின் ஈற்றில் நிற்கும் விசர்க்கத்தை 'நாதம்' என்றும், அதன் அயலில் நிற்கும் அநுசுவாரத்தை 'விந்து' என்றும் குறிப்பிடுதல் வழக்கு. பதி - பதம்; அறை. ஓர்க்கும் - பதிகளில் வைத்து நினைக்கப்படும். இருபத்தைந்து புள்ளிகளால் பதினாறு அறையுள்ள சக்கரம் அமைக்குமாறு.*

| | | | |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 |

*இதனால் ஏரொளிச்சக்கரத்தின் பகுதி வடிவம் கூறப்பட்டது.*

*1247.* **தெளிவுரை :-** *மாதுருகாட்சரங்களால் அகாரம் முதலிய ஆறு எழுத்துகள் சிவன் எழுத்துக்களும் ஏகாரம் முதலிய ஆறு எழுத்துக்கள் சத்தி எழுத்துக்களும், இவற்றுக்கு இடையே உள்ள*

**1247.** அம்முதல் ஆறும்அவ் ஆதி எழுத்தாகும்
எம்முதல் ஆறும்அவ் அம்மை எழுத்தாகும்
இரும்முதல் நாலும் இருந்திடு வன்னியே
இரும்முத லாகும் எழுத்தவை எல்லாம். 10

---

நான்கு எழுத்துக்கள் அங்க எழுத்துக்களும் ஆகும். ஆதலின், உடலெழுத்துக்கள் பலவும் இந்த உயிரெழுத்துப் பதினாறனுள்ளே அடங்கிநிற்கும்.

குறிப்புரை :- உயிரெழுத்துக்களில் ஆறாவது எழுத்தினையே 'இரு' எனத் தமிழ்முறையாற் குறித்தார். இதில் மூன்றாம் எழுத்தெதுகை வந்தது. நான்காம் அடியில், "முதல்" என்றது, 'முதன்மையான எழுத்து' என்றதாம். இரண்டாம் அடியின் முதற்சீரை முதலடியின் முதற்சீரே போலவும் மூன்றாம் அடியின் முதற்சீரை நான்காமடியின் முதற்சீரே போலவும் ஓதுவன பாடம் ஆகாமையறிக. உடலெழுத்துக்கள் பலவும் உயிரெழுத்துக்களில் அடங்கும் எனவே, அவ்வுயிரெழுத்துப் பதினாறினாற்றானே ஏரொளிச் சக்கரம் ஆக்கப்படும் என்றதாயிற்று. அங்ஙனம், அச்சக்கரம் அமையுமாறு;

| அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|
| உ | ஊ | ஏ | ஐ |
| ஓ | ஔ | அம் | அ: |
| ரு | ரூ | ளு | ளூ |

எழுத்துக்களின் வைப்பு முறையில் ஏழாவது முதலாகப் பத்தாவது முடிவாக உள்ள அந்நான்கு எழுத்துக்களை அம்முறையானே அடைத்தல் வேண்டுமாயினும், நாயனார் அவற்றை அங்கி எழுத்துக்களாக ஈற்றில் வைத்து ஓதினமையின் அவைகளை மேற்காட்டிய முறையானே அடைத்தல் வேண்டும். மேல் (பா.1240) "சொல்லிடு விந்துவும் ஈராறு நாதமாம்" என்றமையால், ஆதி எழுத்தாய அம்முதல் ஆறும், அம்மை எழுத்தாய ஏ முதல் ஆறும் ஆகிய பன்னீரெழுத்துக்களையும் முறையானே அகார கலை முதலிய பிரசாத கலை பன்னிரண்டிற்குரிய பன்னிரு கலைக்கும் உரிய எழுத்துக்களாகக் கொள்ளல் வேண்டும். "மேல்வரும் அப்பதி

*அவ்வெழுத் தேவரின் மேல்வரு சக்கரமாய் வரும்'' (பா.1241) என்றமையால், மேற்காட்டியவாறு இருபத்தைந்து புள்ளிகளால் பிறந்த பதினாறு அறைகளையுடைய சக்கரம் பன்னிரண்டு வரைந்து. அவை ஒவ்வொன்றின் முதல் அறையிலும் அ ஆ முதலிய பன்னிரண்டு எழுத்துக்களையும் முறையானே வைத்து ஏனைய எழுத்துக்களையும் முறையானே அடைத்து, எல்லாச் சக்கரங்களிலும் இங்குக் காட்டியவாறே நான்காம் வரிசையில் ஏழாம் உயிர் முதலிய நான்கினையும் அடைத்து முடிக்க. அகாரம் முதற்கண் நின்றது முதலிய சக்கரங்கள் முதலாக உன்மனா கலாசக்கரம் இறுவாய்ப் பன்னிரு பிராசாத கலா சக்கரங்களாய் விளங்கும். பிராசாத கலைகள் பன்னிரண்டில் வியாபினிக்கும், சமனைக்கும் இடையே வியோம ரூபினி முதலிய நான்கு கலைகள் அடங்கி நிற்கும். ஆதலால், எல்லாச் சக்கரங்களிலும் நான்காம் வரிசையில் உள்ள ஏழாம் உயிர் முதலிய நான்கு கலைகட்கும் உரிய எழுத்துக்களாகக் கருதிக்கொள்க.*

*பன்னிரண்டு சக்கரங்களிலும் உள்ள அறைகள் அனைத்தும் கூடி, (*12x16=192*) நூற்றுத் தொண்ணூற்றிரண்டாம் ஆயினும், ஏழாம் உயிர் முதலிய நான்கெழுத்துக்கள் உள்ள (*4x12=48*) நாற்பத்தெட்டு அறைகளை எண்ணாது விடுப்ப, எஞ்சிய அறைகள்* (12x12=144) *நூற்று நாற்பத்து நான்காய் வரையறைப்படும். அதனையே மேல் (பா.1240) "சொல்லிய நூறொடு நாற்பத்து நால்உரு" என்றார்.*

*இன்னும் ''விரிந்த எழுத்து அப்பதுவாக'' என்னும் மந்திரங்களில் (பா.1243, 44) அகார கலை முதலிய பன்னிரு கலைகளும் பிருதிவி முதலிய ஐம்பூதங்களில் நிற்கும் எனக் கூறினமையாலும், பிருதிவி முதலிய பூதங்கள் நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளாகவும் கருதப்படும் ஆதலாலும், அகார கலை முதலிய நான்கு கலைகளும் நிவிர்த்தி முதலிய நான்கு கலைகளிலும், அர்த்த சந்திரன் முதலிய நான்கு கலைகளும் சாந்தியதீத கலையிலும் நிற்க, சத்தி முதலிய நான்கு கலைகள் சாந்தியதீத கலைக்கு மேல் உள்ள மந்திர கலையில் நிற்கும் ஆதலாலும் அவற்றின்மேல் முறையானே அப்பன்னிரு சக்கரங் களையும் அமைத்தல் வேண்டும்.*

*இதனால், ஏரொளிச் சக்கரத்தில் அடைக்கப்படும் எழுத்துக்களது தொகையும், முறையும் கூறப்பட்டன.*

1248. எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்
எழுத்தவை ஆறது அந்தடு வன்னி
எழுத்தவை அந்நடு அச்சுட ராகி
எழுத்தவை தான்முதல் அந்தமு மாமே. 11

1249. அந்தமும் ஈறும் முதலா னவைஅற
அந்தமும் அப்பதி னெட்டுடன் ஆதலால்
அந்தமும் அப்பதின் மூன்றில் அமர்ந்தபின்
அந்தமும் இந்துகை ஆருட மானதே. 12

---

*__1248. தெளிவுரை :-__ ஏரொளிச் சக்கரத்தில் அடைக்கப்படும் எழுத்துக்கள் நூற்று நாற்பத்து நான்கும் மந்திர கலை உளப்பட ஆறு வட்டங்களில் நிற்பனவாம். அவ் ஆறுவட்டங்களின் நடுவே அமைந்த இடமே ஏரொளிச் சக்கரத்தின் நடுவிடமாக, அவ்விடத்திலே முதற்கண் (பா.1238) கூறிய வன்னி பீசமாகிய 'ஓம் ரம்' என்பது பொறிக்கப்படும். அவ்விடத்து நிற்கும் பிரணவமும், பீசமுமாகிய அவையே சிவசோதி சொரூபமாய் ஏரொளிச் சக்கரத்தில் உள்ள அனைத்து எழுத்துக் களிலும் தனது ஆற்றலால் வியாபித்து நிற்கும்.*

*__குறிப்புரை :-__ முதற்றொட்டு இதுகாறும் கூறிவந்த ஏரொளிச் சக்கரத்தின் முழுவடிவம் இங்குத் தனியாக கொடுக்கப்பட்டிருத்தல் காண்க.*

*இதனால், ஏரொளிச் சக்கரத்தின் ஒளி எழுத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

*__1249. தெளிவுரை :-__ உடலெழுத்துக்களில் கவர்க்கமாதி ஐவருக்கத்தின் ஈற்றெழுத்துக்களும், யகாராதி சகாராதி (ஶ) வருக்கங்களின் ஈற்றெழுத்துக்களும் அவ்வவ் வருக்கத்தின் முதலெழுத்துக்களோடு கூடி அனாகத சக்கரத்தோடே நீங்கி யொழிய, விசுத்தி, ஆஞ்ஞை என்னும் இறுதி இரண்டாதாரங்களிலே உயிரெழுத்துப் பதினாறனோடு மற்றிரண்டெழுத்துக் கூடப் பதினெட்டெழுத்தே நிற்றலால், எல்லா உயிர்கட்கும் புகலிடமாகிய பரசிவனும் ஏரொளிச் சக்கரத்தில் உள்ள பன்னிரண்டு எழுத்துக் கடந்து நிற்பவனாகவே எண்ணப்படுகின்றான். அதனால், யோகத்தின் முடிவும் சந்திர மண்டலத்தையும் கடந்து துவாதசாந்தத்தை அடைவதே யாகின்றது.*

**1250.** ஆஇின மானவை முந்நூற் றறுபதும்
ஆஇினம் அப்பதி னைந்தின் மாய்உறும்
ஆஇினம் அப்பதி னெட்டுட னாய்உறும்
ஆஇினம் அக்கதி ரோன்வர வந்தே. **13**

---

***குறிப்புரை :-*** *'முதலானவற்றொடு' என உருபு விரிக்க. முன்னை மந்திரத்தில் 'எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்' என்றதனானே, "அப்பதினெட்டு" எனப்பட்டவை எழுத்துக்களாதல் பெறப்பட்டது. இறுதி "அந்தம்" இரண்டும் முறையே சிவனையும், யோகத்தின் முடிவையும் உணர்த்தின. பன்னிரண்டைக் கடந்தவனை, பதின் மூன்றாவதில் நிற்பவனாகக் கூறினார். கை - பக்கம்; இடம். நாத காரியமாவன ஐம்பதெழுத்துக்களாக, அவற்றுட் சிலவற்றானே ஏரொளிச் சக்கரம் அமையும் என்றது என்னை? என்னும் ஐயத்தினை, முன்னிரண்டடிகளால் காரணங்காட்டி அறுத்தருளினார். பதின் மூன்றாந் தானவே துவாத சாந்தம்; அங்கே உள்ள பரவெளியே பரசிவன் விளங்கும் இடம்.*

*"ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று*
*மீதானத் தேசெல்க உந்தீபற;*
*விமலற் கிடமதென் றுந்தீபற" - திருவுந்தியார் - 8*

*என்றார் திருவுந்தியாரிலும், பதின்மூன்றாந் தானத்தில் நிற்றலை எடுத்தோதியது. பன்னிரண்டு எழுத்துக்களைக் கடந்தவனாக எண்ணப்படுதலை உணர்த்தற்கு. ஈற்றடியால். ஆதார யோகத்தோடு நின்றொழியாது, நிராதாரத்தின்வழி மீதானத்துச் செல்லுதலின் இன்றியமையாமையைக் குறித்தார்.*

*இதனால், இவ்வதிகாரத்தின் கண்ணது, ஓர் ஐயம் அறுக்கப்பட்டது. முதற்றொட்டு இதுகாறும் வந்த மந்திரங்களின் வழி, அமையும் சக்கர வடிவம் தனியாகக் காட்டப்பட்டிருத்தல் காண்க.*

***1250. தெளிவுரை :-*** *ஐம்பதெழுத்துக்களில் ஏரொளிச் சக்கரத்தில் உள்ள அவ்வுரெழுத்துக்கள் பன்னிரண்டுமே முந்நூற்றறுபது நாள்களாகிய ஆண்டும், பதினைந்து நாள்களாகிய பக்கமும், ஆறும், பன்னிரண்டும் ஆகிய இருதுக்களும், மாதங்களும் என்று இவை அனைத்துமாய் நிற்கும். அவற்றிற்கு அச்சிறப்பு, சிவ சூரியனது தோற்றத்தால் ஆனதாம். பக்கம் - பட்சம் - வளர்பிறை, தேய்பிறை. உருது - பருவம். ஆண்டுக்கு ஆறு.*

**1251.** **வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை**
**வந்திடும் அக்கரம் முப்ப திராசியும்**
**வந்திடும் நாளது முந்நூற் றறுபதும்**
**வந்திடும் ஆண்டும் வகுத்துறை அவ்விலே. 14**

**1252.** **அவ்வினம் மூன்றும்அவ் ஆடது வாய்வரும்**
**கெவ்வினம் மூன்றும் கிளர்தரு ஏறதாம்**
**தவ்வின மூன்றும் தழைத்திடும் தண்டதாம்**
**இவ்வினம் மூன்றும் இராசிகள் எல்லாம். 15**

---

*குறிப்புரை :- அஇனம் - அகரம் முதலிய உயிரெழுத்துக்கள், தொடை நோக்கி அகரம் நீட்டல் பெற்றது. எனவே, மேல் (பா.1246) "அறிந்திடும் அப்பகலோன் நிலையாமே" என்றதனை வலியுறுத்திய வாறாயிற்று. வலியுறுத்தவே, பிராசாத யோகிகட்கு இச்சக்கர பாவனா முதிர்ச்சியே காலக் கணக்காய் அமைதல் கொள்க.*

*இதனால், ஏரொளிச்சக்கர எழுத்துக்கள் பற்றியதோர் இயல்பு கூறப்பட்டது.*

*1251.* **தெளிவுரை :-** *ஏரொளிச் சக்கரமே மேற்கூறிய சிவசூரியன் தோன்றும் ஆகாச வழியாகும். அதனால், அதன்கண் உள்ள எழுத்துக்களே அச்சூரியன் இயக்கத்தால் அமைகின்ற நாழிகைகளும், அந்நாழிகையால் ஆம் நாட்களும், அந்நாட்களால் ஆம் மாதங்களும், அம்மாதங்களின் நாள் முந்நூற்றறுபதால் அமைகின்ற ஆண்டும் ஆகும்.*

*குறிப்புரை :- "அது" என்றது ஏரொளிச் சக்கரத்தை. செய்யுள் நோக்கி, நாழிகைக்குரிய 'அறுபது' என்பதும், இராசிக்குரிய 'பன்னிரண்டு' என்பதும் ஆகிய எண்ணுப் பெயர்கள் தொகுக்கப்பட்டன. "இராசி" என்றது மாதத்தை. 'அக்கரமே வந்திடும் நாழிகை அறுபதும், வந்திடும் நாளது முப்பதும் இராசி பன்னிரண்டும் வந்திடும் நாளது முந் நூற்றறுபதும் வந்திடும் ஆண்டு மாகிய அவ் வில்லாக வகுத்தரை' எனச் சொற்களை விரித்தும் மாறிக் கூட்டியும் பொருள் உரைத்துக்கொள்க. வில் - ஒளி, என்றது, 'சோதிட வகை' என்றவாறு.*

*இதனால், மேற்கூறிய சிறப்புப்படும் வகையெலாம் கூறப்பட்டன.*

*1252.* **தெளிவுரை :-** *இராசிகள் பன்னிரண்டில் இடபம் முதல் நான்கினை முதல் கூறாகவும், விருச்சிகம் முதல் நான்கினைக் கடைக் கூறாகவும், எஞ்சிய நான்கையும் இடைக் கூறாகவும் பகுத்து,*

**1253.** இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
இராசியுட் சக்கரம் என்றறி விந்துவாம்
இராசியுட் சக்கரம் நாதமும் ஒத்தபின்
இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே. **16**

---

*அக்கூறுகளை முறையே 'மேட வீதி, மிதுன வீதி, இடப வீதி' எனக் கொள்க. இராசிகள் பன்னிரண்டும் இங்ஙனம் இம் மூன்று வீதிகளாய் அமைவனவாம்.*

*குறிப்புரை :- பன்னிரண்டு இராசியும் மூன்று விதிகளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*அவ்வினமாகிய மூன்றும் மேட வீதியாய் வரும்; மேலோங்கிய மூன்றும் விளங்குகின்ற ஏராகிய இடப வீதியாம்; செம்மையாக மூன்றும் தழைக்கின்ற தண்டோடுகூடிய மிதுன வீதியாம் இராசிகள் எல்லாம் இவ்வகையான மூன்றினமாம் என்றவாறு.*

*பன்னிரண்டு இராசிகளும் மூன்று வீதிகளாம். அவை மேட வீதி, இடப வீதி, மிதுன வீதி என்பன. அவற்றுள், இடபம் சிங்கம் மிதுனம் கடகம் இனைய நான்கும் மேடவீதி மீனம் மேடம் கன்னி துலாமும் மான இடபவீதிக்கமைந்தன. "வில்லுமகரம் குடமே விருச்சிகம் சொல்லிய மிதுன வீதித்துறையே" என்ற பிங்கலத்தை கொண்டும் துணிக.*

*அவ்வின மூன்று, செவ்வின மூன்று, எவ்வின மூன்று என்பன அதுவும் அதற்கினமான மூன்றும் ஆக நான்கு என்னும் பொருளது. இவ்வண்ணமே ஏனையவற்றிற்கும் கொள்க. ஆடு - மேடம். ஏர் - இடபம். தண்டு - மிதுனம்.*



**1254.** நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்
நின்றிடும் நாதமும் ஓங்கும் எழுத்துடன்
நின்றிடும் அப்பதி அவ்வெழுந் தேவரில்
நின்றிடும் அப்புறம் தாரகை யானதே. **17**

---

*இராசிகள் பன்னிரண்டிலும் சூரியகதி இயங்கும் முறையை உணர்த்தும் இவ்வுரையே சிறத்தல் காண்க.*

*1253.* ***தெளிவுரை :-*** *ஏரொளிச் சக்கரத்தில் உள்ள பன்னிரு சக்கரங்களும் முறையே மேடம் முதலிய பன்னிரண்டு இராசியுள் நிற்பனவாகக் கருதித் தியானிக்கப்படும். அத்தியானம் பன்னிரண்டாம் ராசி முடியச்சென்று முற்றின், தியானிப்பவன் விந்து வொளியைப் பெற்றவனாய்த் திகழ்வான். அவன் பின்னும் அந்தத் தியானத்திலே அழுந்தி நிற்பின், நாத ஒலியைக் கேட்பவனாகவும் ஆவான். பன்னிரு சக்கரங்களும் பன்னிரண்டு இராசிக்குள் நிற்பவனவாகக் கருதும் கருத்திற்கு இதுவே பயனாகும். மூலாதாரம் முதல் ஒவ்வொரு ஆதாரத்திலும் 12 இராசிகளைப் பொருத்தித் தியானித்தால் ஒலியும் ஒளியும் விளங்கித் தோன்ற "நாத விந்துகலாதி நமோநம" என்று அருணகிரியாரைப் போலப் பாடி மகிழலாம்.*

***குறிப்புரை :-*** *"எங்கும் நிறைந்தபின்" எனவும் "ஒத்தபின்" எனவும் போந்த அனுவாதத்தால், அங்ஙனம் நிறைவுறும்படித் தியானித்தலும், ஒத்தலும் பெறப்பட்டன. 'விந்துவாம் என்றறி' எனமாற்றிக் கொள்க. பிராசாத கலைகள் பலவாயினும், இடைநிற்கும் விந்து நாத கலைகளையே சிறந்தனவாகக் கூறுவர். அக்கலைகள் அனுபவத்தில் முறையே ஒளியாயும், ஒலியாயும், தோன்றும் என்க.*

*இதனால், ஏரொளிச் சக்கரத் தியான முறையும், அதன் பயனும் கூறப்பட்டன.*

*1254.* ***தெளிவுரை :-*** *தம்மை அடுத்து நிற்கும் எழுத்துக் காரணமாகத்தாமும் விந்துவாய் நிற்கின்ற, ஏரொளிச் சக்கர எழுத்துக்கள், அன்ன காரணத்தானே நாதமாயும் நிற்கும். அவ்வெழுத்துக்களை அங்ஙனம் தியானித்தலில் சிறிதும் திரியாது நிற்பின், அந்நிலையின்பின் மேற்கூறிய ஒளிக்காட்சி விண்மீன்போலப் புலப்படும்.*

***குறிப்புரை :-*** *விந்து என்று சொல்லப்படுகின்ற குறியெழுத்து எல்லாம் நாதம் ஒலிஎழுப்ப ஒலித்தெழுந்து அவ்வவ்வாதாரங்களில் நிற்கும். அந்தந்த எழுத்துக்கள் அந்தந்த இராசியுள்ளே பொருந்தி வந்து விட்டது என்றால், அதன் பின்னர் நட்சத்திரங்கள் யாவும் நிலைபெற்று விடும். ஆதாரம் ஒவ்வொன்றுக்கும் இரண்டிரண்டு*

1255. தாரகை யாகக் சமைந்தது சக்கரம்
தாரகை மேலோர் தழைத்ததோர் பேரொளி
தாரகை சந்திரன் நற்பக லோன்வரத்
தாரகை தாரகை தாரகை கண்டதே. 18

---

*இராசிகளாகவும், நாலரை, நாலரை வீதம் 27 நட்சத்திரங்களையும் பிரித்தமைத்து தியானிக்க வேண்டும்.*

*ஆறு ஆதாரங்களில் விந்தெழுத்து, இராசி, நட்சத்திரம் வைத்து தியானித்து ஏரொளி எழுப்பலை வியந்து ஓதுகிறார்.*

*இதனால், மேற்கூறிய பயன்களுள் ஒன்றன் நிலை வகுத்துக் கூறப்பட்டது.*

***1255. தெளிவுரை :-*** *இவ்வண்ணமாக ஏரொளிச் சக்கரம் விண்மீனாகப் பொருந்தியது. அவ்விண்மீனினும் மிக்க பேரொளிப் பிழம்பாய்ச் 'சிவம்' ஓங்கி விளங்கியது. அதன் காரணமாக நட்சத்திர மண்டலத்தில் சூரியனும், சந்திரனும் வந்தன. விண்மீன் மண்டலமானது விண்மீன் ஒழுங்கு போன்றதொரு எழுத்து (அட்சர) வடிவமாக காணப்பட்டது.*

***குறிப்புரை :-*** *அதாவது விண்மீன்களே ஒளி ஒலி வடிவமான எழுத்துக்களாயின. வருதல்-புலனாதல். சிவ ஒளி பரவியதால் தாரகைகள் யாவும் வெறும் தாரகைகளாய் இல்லாமல் ஒலியோடு கூடிய எழுத்துக்களாயின. தாரகை - நட்சத்திர வடிவம், ஒளி, எழுத்து என்று மூன்று பொருளாகக்கொள்ளலாம்.*

*கரிய ஒளியானது அண்ட வடிவான பேருலகை மூடி, உலகங்கள் எங்கும் மண், நீர், தீ, காற்று, வான் ஆகிய ஒளிகளாக ஒக்க வளர்ந்து கிடந்து பிறகு ஒரே ஏரொளியாக நிறைந்து பரந்து நிற்கின்றது இந்த ஏரொளி.*

*சத்தியின் ஆற்றலாலேயே, ஐம்பெரும் பூதங்களும் ஒளி வடிவாகத் தோன்றுகின்ற இவை அனைத்தும் ஒரே வடிவாக ஏரொளியாகக் காட்சியைத் தருகின்றது. இந்த ஏரொளிச் சக்கரத்தை இரண்டு வடிவங்களில் அமைத்து ஆறாதார ராசி சக்கரமொன்றினையும் குறிப்பிட்டு அமைக்கின்றார்.*

*ஏரொளிச் சக்கரத்தின் முதல் வடிவம் ஐம்பூத கமலச் சக்கரம்.*

*காரொளியாகிய சக்தியாலேயே பஞ்ச பூதங்களும் தோன்றின. இப்பஞ்ச பூதங்களையும் தாரகா மண்டலச் சக்கரமாக அமைத்துக் காட்டுகின்றார் திருமூலர்.*

*இந்தத் தாரக மண்டலச் சக்கரம் விந்துவின் நாதமாகிய நேர்கோடு பொருந்த அமைவது. சக்கரங்களை நேர் கோடாக*

**1256.** கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாம்
கண்டிடு நாதமும் தன்மேல் எழுந்திடக்
கண்டிடு வன்னிக் கொழுந்தள வொத்தபின்
கண்டிடும் அப்புறங் காரொளி யானதே. 19

---

*இழுக்காமல் விந்து அதாவது புள்ளிகளை வைத்து ஒரு புள்ளிக்கும் மற்றொரு புள்ளிக்கும் இடையே தண்ட வடிவான நாதத்தையிழுத்து அமைத்தல் வேண்டும்.*







*சக்கரங்கள் அனைத்துமே விந்து நாத வடிவம். விளக்கொளி சிவம். அதனுள் இருக்கும் கரிய ஒளி சக்தி. இவையிரண்டும் கூடிய ஒளி சிவம். விளக்கொளியினுள் இருக்கும் புகை மண்டலம் சக்தி. இவற்றை சக்கரங்களாக அமைத்து தியானிக்கின்ற பொழுது சக்கரத் தினிடமாக தோன்றுகின்ற சோதி மண்டலம் சிவம். சோதிக்குமேல் காணப்படுகின்ற காரொளி மண்டலம் சக்தி என்று இனம் பிரித்துக் காட்டுகின்றார் திருமூலர்.*

*ஏரொளி சக்கரத்தின் இரண்டாம் வடிவம் தாரகைச் சக்கரம். தாரகையின் மேல் ஒரு பேரொளிப் பிழம்பாகிய சிவம் தழைத்து விளங்கியது. அதனால் நட்சத்திர மண்டலத்தில் சூரியனும், சந்திரனும் வல நட்சத்திர மண்டலமானது நட்சத்திர ஒழுங்கு போன்ற அக்கர வடிவாகக் காணப்பெறும். இதனுள் சிவயநம என்னும் திருவைந்தெழுத்தை தலை முதலாக மாறி அமைத்துத் தியானிக்கின் சிவ சூரிய தரிசனம் சித்திக்கும் என்று கூறுகின்றார்.*

**1257.** காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி காலொளி
வானொளி ஒக்க வளர்ந்து கிடந்த பின்
நேரொளி ஒன்றாய் நிறைந்தங்கு நின்றதே. **20**

---

*1256. **தெளிவுரை :-** மேற்கூறியவற்றாற் கண்டு தியானிக்கின்ற சக்கரத்தின் பயன் விந்துவாகிய ஒளிக்காட்சியின் வளர்ச்சியே. அவ்வளர்ச்சியோடுகூட அதற்குத் தக நாத ஒலியும் மிக மிகக் கேட்கப்படும். அவ்விரண்டனாலும் ஆன்மாவின் உள்ளொளியாய் அதனுட் கரந்து நின்ற சிவமும் அனுபவப் பட்டுவரும், அன்னதொரு சிவானுபூதிக்குப் பின் ஆன்மாவைத் தன்னுள் அடங்கக்கொண்டு விரிந்துள்ள சத்தி ஒளியாகிய நீல ஒளி காட்சிப்படுவதாம்.*

*__குறிப்புரை :-__ 'வளர்வது' என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி, கண்டிடும் நான்கில் இடை இரண்டும் 'அனுபவித்திடும்' என்னும் பொருளை இறுதியது, 'கண்டிடப்படும்' என்னும் பொருளது இஃதொன்றும் முற்று; ஏனையவை எச்சம். "வன்னி" என்றது 'ஒளி' என்றவாறு. 'காரொளியானது கண்டிடப்படும்' என்க. "எழுந்திட, ஒத்தபின்" என்ற அனுவாதங்களால், எழுதலும், ஒத்தலும் பெறப்பட்டமை அறிக. ஒத்தல், விந்து நாதங்களின் வெளிப்பாட்டுக்குச் சமமாதல். 'அப்புறக்காரொளி' என்பது மெலிந்து நின்றது. விந்து ஒளியை வளர்த்தலேயன்றிச் சிவஒளி சத்தி ஒளிகளையும் முறையானே பயக்கும். இதனானும் இச்சக்கரம் ஏரொளிச் சக்கரமாதல் காண்க.*

*இதனால், ஒளிக் காட்சி முதிர்வின்பின் நிகழ்வன இவை என்பது கூறப்பட்டது.*

*1257. **தெளிவுரை :-** யோக முதிர்ச்சியில் நீல ஒளியாய்க் காணப்படும் சத்திஒளி பூதாகாயத்தின் மேற்பட்ட பராகாயமாய் உலகத்தை தன்னுட் கொண்டு பரந்து நிற்றலாலே ஐம்பெரும் பூதங்கள் முதலிய பொருள்கள் பலவும் பயன் தரும் பொருளாய்ச் சிறந்து விளங்குகின்றன. அச்சத்தி ஒளியூடே அதனினும் நுண்ணிய சிவமாகிய மெய்ப்பொருள் ஒன்றுபட்டு அச்சத்தி ஒளி உள்ள பொருள்களில் எல்லாம் தானும் உடன் நிறைந்து நிற்கின்றது.*

*__குறிப்புரை :-__ காரொளி - சத்தி. பாரொளி - நிலம். சாரொளி - நெருப்பு. காலொளி - காற்று. சத்தியாலே பஞ்ச பூதங்களும் ஒரே வடிவமாக ஓரொளியாகத் திகழ்ந்தன. ஒவ்வொரு பூதமும்,*

**1258.** நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்
நின்ற இவ் அண்டம் நிலைபெறக் கண்டிட
நின்ற இவ் அண்டமும் மூல மலமொக்கும்
நின்ற இவ் அண்டம் பலமது விந்துவே. **21**

**1259.** விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்
விந்துவும் நாதமும் ஒக்க விதையதாம்
விந்திற் குறைந்திட்டு நாதம் எழுந்திடில்
விந்துவை எண்மடி கொண்டது வீசமே. **22**

---

*ஒன்றிலிருந்து நோக்க ஒன்று ஒளிப் பொருளாகத் தோன்றுகின்றன. பொதிந்து - நிறைந்து. சார் - பற்றி நிற்றல். நேர்மை - நுண்மை. இவ்வனைத்துங்கூடிய பேரொளி ஏரொளியாகும்.*

***1258. தெளிவுரை :-*** *மேற் கூறியவாறு சத்தியாகிய பராகாயம் பல அண்டங்கள் முதலிய எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிப் பரந்து நிற்பது, அவை நிலைபெறுதலைச் செய்தற் பொருட்டாம். இனி அவ்வண்டம் முதலிய பொருள்கள் மாயையின் விளைவுகளாய் உயிர்கட்குச் சிவத்தை மறைத்துத் தம்மையே காட்டி நிற்றலால், அவற்றை அவ்வாற்றாற் செயற்படச் செய்யும் சத்தியும் ஓராற்றால் ஆணவ மலத்தோடு ஒப்பதாம். சத்தி - திரோதான சத்தி.*

***குறிப்புரை :-*** *உம்மை இரண்டனுள் முன்னது சிறப்பு; பின்னது இறந்தது தழுவிய எச்சம். அவற்றுள் சிறப்பும்மையைப் பிரித்து, 'நின்றதும்' எனக்கூட்டி உரைக்க. 'அண்டம் நின்றதும் நிலைபெறக் கண்டிட' என முடியும். "இவ்வண்டம்" மூன்றனுள் இடையது ஒன்றும் பராகாயம்; ஏனையவை பௌதிக அண்டங்கள். பலம் - பயன்; விளைவு; 'காரியம்' என்றவாறு. "விந்து பலமதே; ஆதலின் சத்தியும் மூல மலம் ஒக்கும்" எனக் கூட்டி முடிக்க. இச்சத்தி இவ்வாற்றால் திரோ தானகரி எனப்படுதலும் அங்ஙனமாதற்குப் பயன் மூல மலத்தைப் போக்குதலும் ஆதல் வெளிப்படை மாயையையும் இங்கு "விந்து" என்றே போயினார். அதனுள் வியாப்பியமாம் ஒற்றுமை பற்றி.*

*இதனால், சத்தியது வியாபகத்தின் பயன் கூறப்பட்டது.*

***1259. தெளிவுரை :-*** *'ஏரொளிச் சக்கரம் எல்லா உலகங்களையும் அடக்கி நிற்கும்' என்பது விளக்குதற்கு இது முதல் நான்கு மந்திரங்களால் உலக உற்பத்தி முறையை உணர்த்துகின்றார்.*

*'விந்து, நாதம்' என்ற இரண்டு தத்துவங்கள் உலகிற்கு அடி*

**1260.** வீசம் இரண்டுள நாதத் தெழுவன
வீசமும் ஒன்று விரிந்திடும் மேலுற
வீசமும் நாதம் எழுந்துடன் ஒத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே. **23**

---

*நிலையாய் உள்ளன. அவை யிரண்டும் முதற்கண் நிற்றல் போலத் தனித்து நில்லாது சமமாய்க் கலந்து கீழ்வருமாயின், அங்ஙனம் கலந்த அக்கலப்பே உலகத்திற்கு முதலாய் நிற்கும். பின்பு விந்து மிகுதியாக நாதம் குறைந்து நிற்க வேண்டில், அங்ஙனம் நிற்றற்கும் நாதத்தினும் விந்துவை எண்மடங்கு மிகுதியாகக் கொண்ட ஒருநிலை முதலாக அமையும்.*

*குறிப்புரை :- ஒப்பற்ற தனிப்பெரும் பொருளாகிய சிவம் உலகத்தை எண்ணாது இயல்பாய் நிற்கும் நிலையில் 'சிவம்' என்னும் ஒரு பொருளேயாய் நிற்கும். பின் அது உலகத்தைத் தோற்றுவிக்க எண்ணும் பொழுது 'தானும், தன் சத்தியும்' என இருகூறுபட்டு நிற்கும். அவ் இரு கூற்றுள் சிவத்திற்கும், சத்திக்கும் முறையே 'நாதம், விந்து' என்பனவும் பெயராம். ஆகவே, நாதத்தின்றே விந்து தோன்றுவதாம். அத்தோற்றத்தின்கண் நாதமும், விந்துவும் முறையே தனித்தனி நின்று, பின் இரண்டும் சமமாய்க் கூடி நிற்கும். அந்நிலைக்குச் 'சதாசிவம்' அல்லது 'சாதாக்கியம்' என்பது பெயர். பின்னர், விந்துக் கூறு மிகுதியாக நாதக் கூறு குறைந்த ஒருநிலை உளதாம். அதற்கு, 'ஈசுரம்' அல்லது 'மகேசுரம்' என்பது பெயர். அம் மகேசுரத்திலிருந்து விந்து குறைய நாதம் மிகுந்த ஒரு நிலை தோன்றும். அதற்கு 'வித்தை' என்பது பெயர், இங்ஙனம் 'நாதம், விந்து, சாதாக்கியம், மகேசுரம், வித்தை' என்னும் ஐந்து நிலைகள் அமைந்த பின்னரே, உலகம் பலப்பல வகையில் வியத்தகத் தோன்றுவனவாம். ஆகவே, அவ் அனைத்துத் தோற்றங்கட்கும் முதலாய் அமையும் ஐந்து நிலைகளையே இம்மந்திரத்திற் கூறினார் என்க.*

*"ஒக்க விழுந்திடில்" என்றதனால் அவை இரண்டும் முன்னர்த் தனித் தனி நின்றமை பெற்றாம். "எழுந்திடில்" என்பது 'எழுந்திடல் வேண்டுமாயின்' எனப் பொருள் தந்தது. "எண்மடி" என்றது. மிகுதி கூறியவாறு. மூன்று, நான்காம் அடிகள் முறையே வித்தை மகேச்சுரங்களைக் குறித்தமையும், ஐந்து நிலைகளையும் சொற்பகலாது செய்யுட்கேற்பச் சுருங்கி வர ஓதி முடித்தமையும் அறிக. விந்துவை முற்கூறியது ஒடுக்க முறைபற்றி. 'விதை, வீசம் (பீசம்) என்னும் பொருட் சொற்கள் 'முதனிலை' என்னும் பொருளவாய்*

**1261.** விரிந்தது விந்துவும் கெட்டது வீசம்
விரிந்தது விந்துவும் நாதத் தளவு
விரிந்தது உட்பட்ட எட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விதையது வாமே. **24**

---

*நின்றன. இங்கும் இனி வருகின்றவற்றுள்ளும், 'விதை' என்னும் இடங்களில் எல்லாம் 'விரை' என்றே பாடம் ஓதுவாரும் உளர்.*

இதனால், உலகத்திற்கு முதல் முதனிலையாகிய ஐந்து பொருள்கள் கூறப்பட்டன. இவை ஐந்தும் இறைவனாகிய சிவனுக்கும், அவனுக்கு அவ்வந் நிலைகளில் இடமாய் நிற்கும் சுத்த மாயையின் விரிவுகட்கும் பொது என உணர்க. நாத விந்து நிலை வேறு பாட்டிற்குக் காரணம் முறையே சிவனது சத்தியின் 'ஞானம், கிரியை' என்னும் வேறுபாடேயாம். உலகில் ஆண் பெண் கூறுகளால் சுக்கில சோணிதங்களையும் 'விந்து, நாதம்' என்னும் பெயர்களால் கூறுப. ஆதலின் இம்மந்திரம் கருவுற்பத்தியாகிய வேறொரு பொருளையும் நயம்படத் தோற்றுவித்தது இப்பொருட்குப் பின்னிரண்டடிகள் கருவுற்பத்திக்குச் சோணிதம் குறைதல் நலமாதலைக் குறிக்கும்.

*1260.* **தெளிவுரை :-** *சிவத்தினின்றும் தோன்றும் உலக முதல்கள் இரண்டு உள்ளன. அவற்றுள் ஒன்று மேலாய் நிற்கும். (எனவே, மற்றொன்று கீழாய் நிற்பதாம்). சிவத்தினின்றும் தோன்றும் அவ் இரு முதல்களும் முதற்கண் தனித்து நின்றவாறு நில்லாது சமமாய்க் கூடி நின்றபின்பே சுத்தமாயை பல உலகங்கட்கு முதலாய் நின்று, அவையாய் விரியும்.*

**குறிப்புரை :-** *வீசம் - பீசம், வித்து. விதைபோன்ற ஒளி அணுக்கள். ''இரண்டு'' என்றது நாதவிந்துக்களையும், 'மேலுற விரிந்திடும்' என்றது நாதத்தையும் என்க. இங்கு, "நாதம்" இரண்டும் 'சிவம்' என்னும் பொருளவாய் நின்றன. "வீசமும்" என்னும் உம்மைகள் சிறப்பு. இறுதியதைப் பிரித்து விந்துவும்' எனக் கூட்டுக. "விந்து" இங்கு, சுத்த மாயை. 'விந்துவும் வீசமாய் விரிந்தது' என ஆக்கம் விரிக்க. காண் உம் அசைகள் 'விரைந்திடும், நாதமும்' என்பன பாடம் அல்ல.*

*இதனால், மேற்கூறிய ஐந்தனுள் சிலவற்றது இயல்பு வகுத்துக் கூறப்பட்டது. அவற்றுள் சாதாக்கியத்து இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டமை காண்க.*

*1261.* **தெளிவுரை :-** *விந்துவே அனைத்திற்கும் வித்தாம். சுத்த மாயையே அனைத்தையும் வியாபித்து நிற்பதாகலின், அதனை அறியாதார், 'முக்குண வடிவான பிரகிருதி ஒன்றே உலகிற்கு முதனிலை' எனக் கூறும் உண்மையன்றாய் ஒழிந்தது. சுத்த மாயை*

**1262.** விதையது விந்து விளைந்தன எல்லாம்
விதையது விந்து விளைந்த உயிரும்
விதையது விந்து விளைந்தவிஞ் ஞானம்
விதையது விந்து விளைந்தவன் தாளே. **25**

**1263.** விளைந்த எழுத்தவை விந்துவும் நாதம்
விளைந்த எழுத்தவை சக்கர மாக
விளைந்த எழுத்தவை மெய்யினுள் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திர மாமே. **26**

---

*வித்தை முதலாக நாதம் முடிய விரிந்துநின்று அறுபத்து நான்கு கலைகளாகச் சொல்லப்படுகின்ற நூல்களையும் தன்னுட் கொண்டு நிற்குமாயின், சுத்த மாயையே வியாபகமானது; அதுவே உலகிற்குப் பெரு முதல்நிலை.*

*குறிப்புரை :- உம்மைகள் சிறப்பு, முதலில் உள்ள "விந்துவும்" என்பதன்பின், 'அதனால்' என்பது வருவிக்க. இதனுள் "வீசம்" (பீசம்) என்றது, சாங்கியர் முதலிய பலருங்கூறும் முதனிலையைக் குறித்தது. அதுபற்றிக்கூறுவோரது கூற்று வீழ்தலை, அதுவே வீழ்தலாகக் கூறினார். 'உட்பட்ட எட்டெட்டுமாய் விரிந்ததாகில்' எனவும். 'அதுவே விதையாம்' எனவும் மாற்றுக. 'எட்டெட்டுமாய்' என ஆக்கம் வருவிக்க. 'உட்கட்ட' என்பதும், 'அளவினில்' என்பதும் பாடம் அல்ல. ''அறுபத்துநான்கு கலைகளும்'' என்றது. 'செல்லுலகம் அனைத்தும்'' என்றவாறு. இதனாலும், 'சொல்லுலகம் ஆகாய பூதத்தின் காரியமே' என்றொழியும் சாங்கியர் முதலியோரது கூற்றுக்களை மறுத்தார். "அகில்" என்பது. "நீரின்றமையா துலகெனின்" (திருக்குறள், வான் சிறப்பு. 10) என்பதிற்போலத்தெளிவுப் பொருள்தந்தது.*

*இதனானே மதத்தார் கூறும் கூற்றுக்களை மறுத்து மேற்கூறியவை வலியுறுத்தப்பட்டன.*

*1262. **தெளிவுரை :-** சுத்த மாயை முதனிலையாக நிற்பவே பலவகை உலகங்களும், அவற்றுள் வாழும் பல உயிரினங்களும், சவிகற்ப ஞானமும் உளவாவன. ஆயினும் அவை அங்ஙனம் உளவாதல் அம்மாயை சிவத்தை நிலைக்களமாகக் கொள்ளுதலாலேயாம்.*

*குறிப்புரை :- எல்லாம் விந்து பீஜத்தின் விளைவு என்கிறார். பீஜமாகிய விந்துவினின்று விளைந்தனவே அனைத்துலகும்,*

**1264.** மந்திரம் சக்கர மானவை சொல்லிடில்
தந்திரத் துள்ளெழுத் தொன்றெரி வட்டமாம்
தந்திரத் துள்ளும் இரேகையில் ஒன்றில்லை
பெந்தம தாகும் பிரணவம் உன்னிடே. **27**

**1265.** உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்
பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை
தன்னிட்ட டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே. **28**

---

*அனைத்துப் பொருள்களும், அனைத்துயிர்களும், சிறந்த ஞானம் அனைத்தும் ஆகிய எல்லாம்; அவ்விந்து பரசிவத்தின் திருவடியினின்று தோன்றின என்றவாறு.*

*1263. **தெளிவுரை :-** காரண காரியங்கட்கு உள்ள ஒற்றுமையால் விந்து நாதங்கள் காரியமாகிய எழுத்துக்கள் பலவும் விந்து நாதங்களாகவே கொள்ளப்படும். அத்தன்மையவான எழுத்துக்களாலே எல்லாச் சக்கரங்களும் அமைதலின், அச்சக்கரத் தியானத்தால் அவை உடம்பினுள் மூலாதாரம் முதலிய ஆதாரங்களில் நின்று உடம்பையும் விந்து நாதமயமாக்கி, ஆன்மாவையும் மந்திரான்மாவாகச் செய்யும்; அஃது எவ்வாறெனில் எழுத்துக்கள்தாமே மந்திரமாய் உருப் பெறுதலின்.*

*குறிப்புரை :- 'நாதமும்' என்னும் எண்ணும்மையைத் தொகாது வைத்தோதுதல் பாடம் அன்று. "ஆக" என்ற வினையெச்சம் காரணப் பொருளில் வந்தது. 'தியானத்தால்' என்பது ஆற்றலால் வந்தது. "நிற்கும்" என்பது, தன் காரியத்தையும் தோற்றுவித்து நின்றது. ஈற்றில் 'ஆதலின்' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. சக்கரங்களின் இயல்பாகப் பொதுப்படக் கூறினாராயினும், சிறப்புடைய இவ் ஏரொளிச் சக்கரத்தின் இயல்பு உணர்த்துதலே கருத்து.*

*இதனால், இச்சக்கரத்தால் எய்தும் பயன் கூறப்பட்டது.*

*1264. **தெளிவுரை :-** 'மந்திரம், சக்கரம்' என்பவற்றின் உண்மையைச் சொல்லுமிடத்து, அவைகளைக்கூறும் நூல்களின் கருத்து, 'நாதமாகிய உண்மை எழுத்து ஒன்றே சோதி மண்டலமாம்' என்பதே. ஆகையால், அவ்வுண்மை எழுத்துக்களை உணர்த்தும் கருவிகளாகிய ஆகாய ஒலியையும், அதற்கு அறிகுறியாய் உள்ள*

**1266.** பார்க்கலு மாகும் பகையறு சக்கரம்
காக்கலு மாகும் கருத்தில் தடம்எங்கும்
நோக்கலு மாகும் நுணுக்கற்ற நுண்பொருள்
ஆக்கலு மாகும் அறிந்துகொள் வார்க்கே. **29**

**1267.** அறிந்திடுஞ் சக்கரம் ஆதி எழுத்து
அறிந்திடுஞ் சக்கரம் மேலெழுத் தம்மை
பரிந்திடுஞ் சக்கரம்பார் அங்கி நாலும்
குவிந்திடுஞ் சக்கரம் கூறலு மாமே. **30**

---

*வரிவடிவத்தையும் மிகச் சிறப்பித்துக் கூறும் அந்நூன்மொழிகள் முகமனாய் (உபசாரமாய்) அமைவனவே. இதனை, உணர்ந்து பரமபந்தமாய் உள்ள பிரணவத்தைத் தியானிப்பாயாக.*

*குறிப்புரை :- 'தியானிப்பின் அது வேறாய்ப் புலப்பட்டுப் பந்தியா தொழியும்' என்பது கருத்து. உள்எழுத்து - உண்மையெழுத்து. அதனை "ஒன்று" என்றது வகைபற்றி. "ஒன்றே" என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. வரிவடிவைக் கூறவே, அவற்றால் அறியப்படும் ஒலிவடிவும் பெறப்பட்டது. மந்திரம் உச்சரிப்பதாலும், சக்கரம் இரேகைகள் கீறுவதாலும் மட்டும் பயன் தரா; மூலாதாரம் உள்ளிட்ட பிண்டத்து ஆதாரச் சக்கரங்களில் வைத்துப் பிரணவ முதலா தியானித்துச் சோதி வடிவாய்த் தரிசிக்க என்பதாம். ரேகை சக்கரத்தில் அமைந்த முக்கோணம், அறுகோணம், எண்கோணம் போன்ற கோடுகள்.*

*இதனால், மந்திரம், சக்கரம் என்பவற்றது உண்மை கூறிப் பிரணவத் தியானம் வலியுறுத்தப்பட்டது.*

*1265. தெளிவுரை :- தியானத்தின் பொருட்டு வரையப்பட்ட அறைகளில் பொருந்தி விளங்கும் எழுத்துக்கள் அவ் அறைகளின் எல்லைக் கோடுகளைக் கடந்து ஒன்று மற்றொன்றிற் செல்வதில்லை. ஆகையால், தியானிப்பவன் அவைகளைத் தனக்கு இயல்பாயுள்ள மறதியாகிய தடை அற்றொழிய, அவ் அறைகளின் வழியே நின்று நினைக்கும் நிலையுடையனாயின், மேற்சொல்லிய உண்மை மந்திரத்தை நேரே காணுதல் கூடும்.*

*குறிப்புரை :- 'உன்ன' என்பதன் ஈற்று அகரமும், 'பின்னி, பன்னி'*

**1268.** கூறிய சக்கரத் துள்எழு மந்திரம்
ஆறியல் பாக அமைந்து விரிந்திடும்
தேறிய அஞ்சுடன் சேர்ந்தெழு மாரண
மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே. **31**

**1269.** மதித்திடும் அம்மையும் மாமாதும் ஆகும்
மதித்திடும் அம்மையும் மங்கனல் ஒக்கும்
மதித்தங் கெழுந்தவை மாரண மாகில்
கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே. **32**

---

*என்பவற்றின் ஈற்று இகரமும் தொகுத்தலாயின. 'உன் வட்டம்' என இயைத்து வினைத்தொகை யாக்கலுமாம். தன் இட்டு - தன்னைக் கீழ்ப்படுத்தி.*

*இதனால், வரிவடிவங்கள் உபசாரத்தால் 'மந்திரம்' எனவும், 'சக்கரம்' எனவும் கூறப்படுகின்றன என்றமை பற்றி, அதன் கண் உறுதி நெகிழலாகாது என்பது கூறப்பட்டது. நெகிழின் பயன் விளையாது; நெகிழாத வழியே பயன் விளையும் என்றவாறு.*

*1266.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய முறைகளை அறிய வல்லவர்க்கு மந்திரங்களின் உண்மைக் காட்சியைக் காணுதலும், புறப்பகை அகப் பகைகளை நீக்குவதாய சக்கரத்தை நழுவ விடாது பற்றி அதனாற் பயன் அடைதலும், இருந்த இடத்திலிருந்தே எவ்விடப் பொருளையும் அகத்தில் காண்டலும், நுண்ணியவற்றிலும் நுண்ணிதாகிய சிவத்தைத் தன்னிடத்திலே பெறுதலும் கூடும். பிறப்பும் இறப்புமாகிய பகைகளை நீக்குகின்ற சக்கரம் என்றும் கொள்ளலாம்.*

***குறிப்புரை :-*** *பார்த்தலுக்குச் செயப்படு பொருள் மேல் நின்று வந்தது. 'கருத்தில் நோக்கல்' என இயையும், தடம் - வழி; இடம் ஆகு பெயர். நுணுக்கற்ற நுண்பொருள் - தன்னிலும் நுணுகியது ஒன்றில்லாத நனி நுண்பொருள்.*

*இதனால், மேலதன்கண் நெகிழ்வின்றி நிற்றலால் வரும் பயன்கள் பல கூறப்பட்டன.*

*1267.* ***தெளிவுரை :-*** *ஏரொளிச் சக்கரத்தில் உள்ள எழுத்துக்கள் மேல் "அம் முதல் ஆறும்" என்னும் மந்திரத்தில் (பா. 1247) கூறியபடி முதலில் ஆறும், ஈற்றில் ஆறும், இடையில் நான்கும் ஆகிய*

**1270.** கூடிய தம்பனம் மாரணம் வச்சியம்
ஆடியல் பாக அமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறார்
தேடிஉள் ஆகத் தெளிந்துகொள் வார்க்கே. **33**

---

*எழுத்துக்கள் முறையே 'சிவன், சத்தி, அக்கினி' என்னும் மூவருக்கும் உரியன ஆதலின், அவை முத்திறமும் கூடிநிற்கும் இச்சக்கரத்தின் பெருமை சொல்லில் அடங்குவதோ!*

*குறிப்புரை :- அறியப்படும் சக்கரத்துள்ள எழுத்து ஆதியாகிய சிவாக்கரமாகும். படைப்புக்காலத்து விரிதற்கேற்ப விளங்கும் எழுத்து வகாரமாகிய சக்தி எழுத்தாகும். இவ்வெழுத்துக்களுக்கு ஆதார மாயிருந்து தாங்கும் சக்கரம் பூமியும், நீரும், தீயும், காற்றுமாகிய நான்குமாகும். பரிந்திடும் - ஆதாரமாகத் தாங்கும். குவிந்திடும் - கூடிய.*

*1268. தெளிவுரை :- ஏரொளிச் சக்கரத்தில் உள்ள எழுத்துக்களாகிய மந்திரங்கள், சிற்றறிவினார் மதித்து விரும்பும் 'தம்பனம், வசியம், மோகனம், ஆகருடணம், உச்சாடனம்' என்னும் ஐந்தோடு 'மாரணம்' என்பதும் கூட ஆறாகின்ற மாறுபட்ட செயல்களை நல்லனவாக மதித்து விரும்புகின்றவர்கட்கு அவ்வாறே வேறுபட்டனவாகவும் அமைந்து விரிந்துநிற்கும்.*

*குறிப்புரை :- இரண்டாம் அடியை இறுதியில் வைத்துரைக்க. தம்பனம் முதலியவற்றின் இயல்புகள் முன்னைத் தந்திரத்திற் சொல்லப்பட்டன. 'மாறு மதித்து' என இயையும். மாறுபட்டனவற்றை, ''மாறு'' என்றார். மாரணம் பிறரைக் கொல்வதாகலின் அது மாறான தன்மையது எனக் கூறப்பட்டது.*

*1269. தெளிவுரை :- மேற்கூறிய அம் மந்திரங்கள் அவரவரது பக்குவத்திற்கு ஏற்ப, ஒருத்தியே ஆய அருட்சத்தியாயும், அளவற்றவளாய திரோதான சத்தியாயும் நிற்கும். அச்சத்திகள் பலவு மாகின்ற பராசத்தி நீறுபூத்த நெருப்புப் போல்பவள். ஆதலின், அம் மந்திரங்களால் உலகப் பயன்கள் கைகூடுமாயினும், பிறரை நலிய எண்ணுகின்ற தம்பனம் முதலியவைகளைச் சிறப்பாக மாரணத்தைப் பெரிதாக மதித்து அவற்றைச் செபித்தால் அவை சீற்றம் அடையும்; அதனால், அவ் இழி பயன்கள் கைகூட மாட்டா. அதாவது, ஏரொளி*

**1271.** **தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே**
**அளிந்த அகாரத்தை அந்நடு வாக்கிக்**
**குளிர்ந்த அரவினைக் கூடிஉள் வைத்து**
**அளிந்தவை அங்கெழும் ஆடிய காலே.** **34**

---

*மந்திரத்தையும், அதன் சக்கரத்தையும் அட்ட கன்ம வித்தைகளைப் பயன்படுத்திப் பெறும் காமியப்பயன்களுக்கு உபயோகப்படுத்தக் கூடாது என்கிறார். பஞ்சபூதங்கள் ஒருங்கு கூடுதல் ஏரொளி. மந்திரப் பிரயோக நோக்கம் மாறின் பூதங்கள் மாறிவிடும்.*

***குறிப்புரை :-*** *அருட்சத்தி, பராசத்தி இவர்களையே "அம்மை" என்றார், சிறப்பு நோக்கி. மாமாது - பெரியவள்; என்றது எண் பற்றி, "ஆகும்" என்பது எச்சம் மங்கி உள்ள அனல் அதன் இயல்பு அறியாது தீண்டினாரைச் சுடுமாதலின், அது அம்மையின் இயல்பறியாது தீங்கிற்குத் துணைபுரிய வேண்டி அணுகுவாரை ஒறுக்கின்ற பராசத்திக்குத் தொழில் உவமையாயிற்று. ''ஆகில்'' என்பதை, 'மதித்தங் கெழுந்தவை' என்றதனோடும் கூட்டுக. "காரணமாகில்" என்பது பாடம் அன்று. கொதித்து அங்கு எழுந்து - அவ்விடத்துக் கொதித்து எழுதலால். பின்னர், "கூடகிலா" என்றே ஒழிந்தாராயினும், அவற்றிற்கு எதிரானவை விளைதல் இதனால் பெற்றாம். இங்ஙனமாயினும் சிறுபான்மை அப்பயன்கள் அப்பொழுதைக்கு நலமாய் விளைதலும், மேல், "ஆறியல்பாக அமைந்து விரிந்திடும்" என்றதனாற் பெறுதும்.*

*1270.* ***தெளிவுரை :-*** *ஏரொளிச் சக்கரத்தின் சிறப்பை ஆராய்ந்து அதனை, 'இம்மை மறுமை நலங்களைப் பயக்கும் திருவருளின் வாயில்' என்பதாக உள்ளத்திலே தெளிந்து, அவ்வாற்றால் அதனை மேற் கொள்பவர்க்கு, மேலே கூறிய தம்பனம் முதலிய ஆற்றல்கள் விளையாட்டின் தன்மையாக அவர்களிடம் தாமேவந்து பொருந்தி நிற்கும். அதனால், அவர்களைக் கெடுக்க எண்ணுகின்ற பகைவரும் அவர் இருக்கும் திருவருளாகிய பாசறைக்குள் புகமாட்டாதவராவர்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், அவர் அவைபற்றி இச்சக்கர வழி பாட்டினைச் செய்யார்' என்பது குறிப்பெச்சம். தம்பனம் முதலிய ஆறனுள் மூன்றை எடுத்தோதிப் பிறவற்றை உபலக்கணத்தால் தழுவினார், வச்சியம் - வசியம்; ஆரியச்சிதைவு, ''ஆடியல்பாக அமைந்து செறிந்திடும்" என்றதனால், உயர்ந்தோரும் சிலவிடத்து உலகரை மகிழ்வித்தற்கு மாரணம் ஒழிந்தவற்றைப் பிறர்க்குத் தீங்கு*

**1272.** காலரை முக்கால் முழுதெனும் மந்திரம்
ஆலித் தெழுந்தமைந் தூறி யெழுந்தவாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திரம் மாறிக்கொள் வார்க்கே. **35**

**1273.** கொண்டஇம் மந்திரம் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டைஉள் நாவில் பகையற விண்டபின்
மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
என்றும் இதயத் தெழுந்து நமமே. **36**

---

*பயவாத வகையில் சிறுபான்மை செய்தல் பெறப்படும். "பகைவரும் வந்துறார்" என்றே போயினாரேனும், 'பகைவரது மந்திர வலிகளும், அவரால் ஏவப்படும் தீய தெய்வங்களும் புகமாட்டா' என்பதும் கொள்க.*

*"ஆதி மந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்*
*மாதி ரத்தினும் மற்றைமந் திரவிதி வருமே"*

*- தி. 12 ஞானசம்பந்தர் பு. 698*

*என சேக்கிழார் திருமொழி இங்கு ஆழ்ந்து உணர்தற்கு உரியது.*

*இம் மூன்று மந்திரங்களாலும், "ஏரொளிச் சக்கர வழிபாடு தம் பனம் முதலிய இழி பயன்களையும் பயப்பதாயினும், அஃது உயர்ந்தோர்க்கு ஆகாது" என்பது கூறப்பட்டது.*

*1271. தெளிவுரை :- ஏரொளிச் சக்கரத்துள் அகார கலா சக்கரத்தை மூலாதாரத்தில் கருதிக் குண்டலினியோடு பொருந்த வைத்துத் தியானத்தைத் தொடங்க. கலா சக்கரங்கள் பலவும் பிராணாயாமத்தால் முறையே அருளுருவாய் முதிர்ந்து பயன் தரும்.*

*குறிப்புரை :- 'சக்கர அகாரத்தை' எனக் கூட்டுக. அளித்தல் இரண்டிடத்தும் அருளுவதாம். ஆடுதல், அசைதல், இயங்கல். 'நாடிய கால்' என்பது பாடமாயின் 'நளிந்தவை' எனப்பாடம் ஓதுக. நளிதல் - செறிதல். குளிர்ச்சி, உறக்கத்தைக் குறித்தது. "வைத்து" என்றதனை. 'வைக்க' எனத் திரிக்க. "வைக்க" என்றே போயினாராயினும். 'வைத்துத் தொடங்க' என்றலே கருத்தாதல், பின்னர் "எழும்" என்பதனால் பெறப்படும். 'காலால்' என்னும் மூன்றனுருபு தொகுத்தலாயிற்று. 'காலால் எழும்' என உடம்பொடுபுணர்ந்து ஓதியதனால், 'பிராணாயாமம் செய்ய' என்பது கூறியதாம். அளிந்தவை - பிராண வாயுவோடு கூடியவை.*

*இதனால், ஏரொளிச் சக்கரத்தின் தியான முறை கூறப்பட்டது.*

***1272. தெளிவுரை :-*** *கால், அரை, முக்கால், ஒன்று என இங்ஙனம் பல வகையால் வரையறுக்கப்பட்ட மாத்திரைகளின் படி அகாரம் முதலிய கலைகள் மந்திரங்களாக உச்சரிக்கப்பட்டுத் தோன்றிப் பொருந்தி அழுந்தி நின்று வளர்ந்து தம் பயனைத் தந்து மேற்போய் பிறவியாகிய பகை நீங்கும்படி முற்றி நிற்குமாயின், ஏரொளிச் சக்கரத்தில் உள்ள அம்மந்திரங்களை அம் முறையானே மாறி நிற்கக் கொண்டு செபிக்கின்ற அவர்களுக்கு அம்மந்திரங்கள் அவர்களை மிகவும் விரும்புகின்றனவாய் அமையும்; 'அஃதாவது அவர்க்குக் கைவந்து நிற்கும்' என்பதாம். அகார உகாரங்கள் முழு மாத்திரை; மகாரம் - 1/2.; நாதம் - 3/4; பிந்து - 1/4. எல்லாம் சேர்ந்து 21/2 மாத்திரை பெறுகின்ற பிரணவ எழுத்தாயின.*

***குறிப்புரை :-*** *"காலரை முக்கால் முழுது" என்றது 'பல்வேறு வரையறையானவை' என்றவாறு. பிராசாதகலைகளின் மாத்திரையளவை 'பிராசாத சட்கம்' முதலிய நூல்களிற் காண்க. ஆலித்து - ஒலித்து; ஒலிக்கப்பட்டு, ஒலிக்கப்படுதல் சக்கரத்தில் உள்ள எழுத்துக்களின் வழியாம். "மாலுற்ற" என்றது முற்று 'மந்திரம் மாறிக் கொள்வார்க்கு மாலுற்ற' என்க. மால் உற்ற மந்திரம் - மந்திரமும் செபிப்பானும் வேறாகாது தன் வயமாக்கி ஆன்ம போதத்தையும் அடங்கச் செய்த மந்திரம்.*

*இதனால், 'ஏரொளிச் சக்கரம் மந்திரங்களை மாத்திரை பிறழாது உச்சரித்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1273. தெளிவுரை :-*** *பிராசாத கலைகளுக்குரிய மந்திரங்களாகக் கொள்ளப்பட்ட ஏரொளிச் சக்கர எழுத்துக்கள் இறைவன் எழுத்தாகவே ஆகி, யோக முறைப்படி உள்நாக்கில் மாறுபாடு நீங்க ஒலிக்கப்பட்ட பின்னர், முத்திக்கு நேரே வாயிலாகிய திருவைந்தெழுத்து இருதயத்திலே தோன்றி, அவ்வம்பலத்தில் நிறைந்து நிற்கின்ற, சிவமாகிய தூண்டாவிளக்காய் என்றும் ஒளிவிட்டு விளங்கும்.*

***குறிப்புரை :-*** *பண்டை - பண்டை நெறி. 'பண்டையின்' என ஐந்தன் உருபு விரிக்க. பகை - மாறுபாடு. 'இன்றும்' என்பது பாடம் அன்று, 'விண்டபின் நம எழுந்து ஆயிடும்' என முடிக்க. "நம" என்பது, திருவைந்தெழுத்தை முதற்குறிப்பாற் கூறியவாறு. பிராசாத யோகம் முதிர்ந்தவர்க்குத் திருவைந்தெழுத்து மந்திரம் எளிதில் பயன்தரும் என்றவாறு. மன்று - புருவநடு.*

*இதனால், ஏரொளிச் சக்கரத்தின் முடிந்த பயன் கூறப்பட்டது.*

## 10. வயிரவச் சக்கரம்

*சிவபெருமானது வேக வடிவங்களில் ஒன்றாய் விளங்குவது வயிரவ மூர்த்தம். இம்மூர்த்தியை வழிபடுவதால் பகைவரை வெல்லுதல் கூடுவதாம். அவரைப்பற்றி சக்கரவழிபாடு இவ்வதிகாரத்துள் ஆறு மந்திரங்களால் கூறப்படுகின்றது. வயிரவர் பிரமனது ஐந்து தலைகளுள் நடுத்தலையைக்கிள்ளி அத்தலையோட்டில் அவனது குருதியை ஏற்றதோடு, திருமால் முதலிய தேவர்களது குருதிகளையும் பிச்சையாக ஏற்று, இங்ஙனம் பலரது செருக்கினையும் அடக்கினவர். திருமாலினது நரசிங்க திரிவிக்கிரம அவதாரங்களில் சரபமாகியும், ஆபதுத்தாரண ராகியும் அவ்வுருவங்களை அழித்துச் செருக்கி நீக்கியும், அந்தகாசுரனுக்கு அஞ்சிப் பெண்வடிவங்கொண்டு திரிந்த தேவர்கள் பொருட்டு அவ்வசுரனை அழித்தும் உலகிற்கு நலம்புரிந்தவராவர். நரசிங்கத்தையும், திரிவிக்ரமனையும் உரித்துத் தோலைப் போர்த்துக் கொண்டமை பற்றி இவர், 'சட்டைநாதர்' எனவும் சொல்லப்படுகிறார். ஆகவே, பிரமசிரச்சேதர், சரபர், அந்தகாசுர சம்மாரர் என்னும் மூர்த்தங்கள் வயிரவ மூர்த்த பேதங்களாகும். திரிவிக்ரமனது முதுகெலும்பையே சிவபெருமான் வீணா தண்டமாகக் கொண்டுள்ளார் என்பதனால், அவ்வடிவம் வயிரவ பேதமாவதாம். வயிரவரையே முதன்மையாகக் கொள்ளும் மதம் 'வயிரவம்' எனப்படுவது. 'காபாலிக மதம்' எனப்படுவதும் இதுவே. இம்மதம் வயிரவரை வாமமார்க்கத்தில் வழிபடுவதனால் அஃது அகப்புறச் சமயமாக வைக்கப்பட்டுள்ளது. 'சத்திபேதம்' முதலியவைகளைக் கூறியது போலவே வைரவரை வழிபட வேண்டிய அம்மதமுறையால் வழிபடாது, __**சிவநெறிமுறையால் வழிபடுக என்றற்கே இது கூறுகின்றார் என்க**__. இவ்வதிகாரமும் அந்தாதியாய் உள்ளது. வயிரவர் - பயம் விளைவிப்பவர்.*

**1274.** **அறிந்த பிரதமையோ டாறும் அறிந்து**
**அறிந்த அச் சத்தமி மேல்வை குற்ற**
**அறிந்தவை ஒன்றுவிட் டொன்றுபத் தாக**
**அறிந்த வலமது வாக நடத்தே.** **1**

---

*1274. தெளிவுரை :- முற்பக்கம் (பூர்வ பக்கம்) பிற்பக்கம் (அபர பக்கம்) என்னும் இருபக்கங்களில் உள்ள பதினைந்து திதிகளையும் அவ்ஆறு திதிகளாகப் பிரிக்கும் முறையில் சக்கரத்தை அமைத்து, உவாக்களோடு கூடப் பதினாறு திதிகட்கும் பதினாறு*

*உயிரெழுத்துக்களில் அகாரத்தைக் கடையுவாவிற்கும், (அமாவாசைக்கும்) பதினாறாவது உயிரெழுத்தைத் தலையுவாவிற்கும் (பௌர்ணிமைக்கும்) உரியவாக வைத்து, ஏனையவற்றை ஆகாரம் முதலாக நேர்முறையில் முற்பக்க பிரதமை முதலியவற்றிற்கு உரியவாக எண்ணியும்; பதினைந்தாம் உயிர் முதலாக எதிர்முறையில் பிற்பக்கப் பிரதமை முதலியவற்றிற்கு உரியவாகவும் கொண்டு, முதல் அறை ஒன்றில் மட்டும் அகாரத்தையும், அடுத்து உள்ள அறைகளில் முறையே வலமாக ஆகாரம் முதல் பதினைந்தாம் உயிர்முடிய ஓர் எழுத்தை இவ்விரண்டு அறைகளிலும், பதினாறாம் உயிரெழுத்தை மட்டும் ஓர் அறையிலும் அடைக்க. (14x2) இருபத்தெட்டும், இரண்டும் ஆக முப்பது அறைகள் நிரம்ப, ஆறு அறைகள் நடுவில் வெற்றிடங்களாய் நிற்கும். அவற்றிற்கு நடுவில் 'ஓம் பம்' என்னும் பிரணவ பீசங்களையும், அவற்றின் கீழ்த் தொடங்கி, 'பைரவாய நம' என்னும் ஆறெழுத்துக்களை ஆறு அறைகளிலும் எழுதச்சக்கரம் நிரம்பியதாம். இரண்டிரண்டாய் உள்ள ஆகாரம் முதலியவற்றை அமாவாசை தொடங்கி அகரத்தை அடுத்த ஆகாரம் முதலியவற்றை ஒன்றுவிட்டு ஒன்றான அறைகளில் நேரே முற்பக்கப்பிரதமை முதலியவாக ஓர் எழுத்தைப் பத்துருச் செபித்துப் பௌர்ணிமை முடிவில் நடுவில் உள்ள பிரணவ பீசங்களோடு முலமந்திரத்தைப் பத்துருச்செபித்து அமாவாசை முதல் பௌர்ணிமை முடிய ஒவ்வொரு நாளும் இவ்வாறு வழிபாடு செய்தல் வேண்டும். பின்பு பௌர்ணிமை தொடங்கிப் பிற்பக்கப் பிரதமை முதல் ஒவ்வொருநாளும் பதினைந்தாம் உயிர் முதலாக எதிர் முறையில் அவ்வாறே ஒன்றுவிட்டொன்றாக ஒவ்வொர் எழுத்தையும் பத்துருச் செபித்து, முடிவில் மேற்கூறியவாறு நடுவில் உள்ள மந்திரத்தைச் செபித்து வழிபாடு செய்ய வேண்டும். வழிபடும் நாளில் அன்றைய திதிக்குரிய எழுத்து முதலாகத் தொடங்கி அதற்கு முன்னுள்ள எழுத்தில் வந்து முடியவே செபித்தல் வேண்டும். எழுத்துக்களை முதலில் பிரணவத்தையும், ஈற்றில் மகாரத்தையும் கூட்டி உச்சரித்தலே முறை. பதினைந்தாம் உயிரை மட்டும் ஹகாரத்தின் மேல் ஏற்றி 'ஹம்' எனக்கூறல் வேண்டும். அகாரம் ஒழிந்த பிற உயிர்களையும் ஹகாரத்தின் மேல் ஏற்றிக் கூறுதல் வடமொழி வழக்கு.*

***குறிப்புரை :-*** **வயிரவர் எந்நாளும் பாதுகாப்பவராதல் பற்றி, "கால பைரவர்" எனப்படுதலின், கதிரளவை, (சௌரமானம்) மதியளவை (சாந்திரமானம்) இரண்டிற்கும் பொதுவான திதிக்காலத்தை ஒட்டி வழிபடுதல் வேண்டும் என்பது இம் முறையால் அறிந்து கொள்ளப்படும். "வலமாக" என்றாரேனும் அது**

முற்பக்கத்தில் என்பது எழுத்து முறையாற் பெறப்படுதலின், பிற்பக்கத்தில் எதிர் முறையால் இடமாகச் செல்ல வேண்டும் என்பது உணர்ந்து கொள்ளப்படும். நடுவில் பிரணவம், பீசம், மூலமந்திரம் இவற்றை எழுதுதல் பொது முறையானே கொள்ளப்படும். 'நடவே' என்பது பாடம் அன்று இங்ஙனம் கூறப்பட்ட இச்சக்கர அமைப்பினைக் காண்க. இதனை சரநிலை உணர்த்தும் சக்கரமாகவும் ஞானிகள் கொள்வர். அதாவது வளர்பிறை பிரதமை முதல் துவிதை, திருதியை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி வரையிலும், அதற்கு மேல் சப்தமி விட்டு அஷ்டமி, நவமி விட்டுத் தசமி, ஏகாதசி விட்டு துவாதசி, திரயோதசி விட்டு சதுர்த்தசி ஆகிய 10 நாட்களிலும் சரமானது வலப்பக்கமாக இருக்க சுவாசம் நடைபெற வேண்டும் என்ற சரநிலை உணர்த்துவது இச்சக்கர அமைப்பு.



வயிரவச் சக்கரம்

மேல் வை குற்ற - பின்னர்ப் பொருந்தியுள்ள எழுத்துக்கள், இவற்றை 'சத்தமி முதலாக' என்றமையின், ஒரு சரிசையில் ஆறு எழுத்துக்கள் உள்ளமை விளங்கும்.

இதனால், வயிரவச் சக்கரத்தின் அமைப்புக் கூறப்பட்டது.

**1275.** **நடந்த வயிரவன் சூல கபாலி**
**கடந்த பகைவனைக் கண்ணது போக்கித்**
**தொடர்ந்த உயிரது உண்ணும் பொழுது**
**படர்ந்த உடல்கொடு பந்தாடல் ஆமே.** **2**

**1276.** **ஆமேவப் பூண்டருள் ஆதி வயிரவன்**
**ஆமே கபாலமும் சூலமும் கைக்கொண்டங்கு**
**ஆமே தமருக பாசமும் கையது**
**ஆமே சிரத்தொடு வாளது கையே.** **3**

---

*1275.* ***தெளிவுரை :-*** *இச்சக்கரத்தில் விளங்கும் வயிரவ மூர்த்தி, சிறப்பாகச் சூல கபாலங்களை ஏந்திய வேக வடிவத்தினர். அதனால், அவர் தம் அடியவரை வென்ற பகைவரைத் தாம் போர்ச்சூழ்ச்சி அற்றவராகச் செய்து, அவர்தம் உயிரையும் போக்கித் தமது வெற்றிக்கு அறிகுறியாக அவர்களது உயிர் நீங்கிய உடலங்களைப் பந்துபோல எறிந்து வீர விளையாட்டுச் செய்தருளுவார்.*

***குறிப்புரை :-*** *கண், இங்கே, அறிவு, "பகைவர்" என்றது அடியவர் தவச் செயலுக்குப் பகையாய் நிற்பவரை.*

*ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்*
*எண்ணின் தவத்தான் வரும். - திருக்குறள், 262*

*என்னும் திருக்குறள் உரையில் பரிமேலழகரும், "ஒன்னார், உவந்தார்" எனப்பட்டவரை. "தம் அறத்திற்குப் பகையாய் அழிவு செய்தார். அதனை உவந்தார்" என்றே கூறி, விளக்கம் தந்தமையும் இங்கே அறிதற்பாலது ஆம் - உளதாம்; நிகழ்வதாம்.*

*இதனால், இவ்வழிபாடு பகைவரை அழித்தற் பயனைத் தருவதாதல் கூறப்பட்டது.*

*1276.* ***தெளிவுரை :-*** *நரசிங்கன், திரிவிக்கிரமன் இவர்களது தோலைப் போர்த்தியுள்ள ஆதி வயிரவர் மேற்கூறிய சூல கபாலங்களைச் சிறப்பாக ஏந்தி விளங்குவார். இனித் தமருகம், பாசம் வெட்டப்பட்ட தலை, வாள் என்னும் இவைகளையும் அவர் கொண்டிருப்பர்.*

***குறிப்புரை :-*** *'ஆகம் மேவ' என்பது குறைந்து நின்றது. ஆகம் - உடம்பு; தோல்; ஆகுபெயர். ''ஆகம்'' என்றதனை வயிரவருடையதாக்கி, திருமேனியில் எலும்பு முதலியவைகளை விரும்பிப்பூண்ட என உரைத்தலுமாம். இதில் பூணுதற்குச் செயப்படுபொருள் ஆற்றலால் கொள்ளப்படும். இரண்டாம் அடி*

1277. கையவை ஆறும் கருத்துற நோக்கிடு
மெய்யது செம்மை விளங்கு வயிரவன்
துய்ய ருளத்தில் துலங்குமெய் உற்றதாய்ப்
பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. 4

---

*முதலிய மூன்றனையும் "ஆமே" என்பவற்றோடு முன்னே கூட்டி முடிக்க. அவ்விடத்து முதற்கண் நின்றது வயிரவரது செயலாம்.*

*இதனால், வயிரவரது கையில் உள்ள படைக்கலம் முதலியவை கூறப்பட்டன.*

***1277. தெளிவுரை :-* ஆறுகைகளும் நெஞ்சில் விளங்கும் படி நினைக்கப் படுகின்ற திருமேனி செந்நிறம் உடையதாக விளங்குகின்ற வயிரவ மூர்த்தியினது, தூயவர் உள்ளத்தில் துலங்கி நிற்பதாகிய வடிவம், உனது நெஞ்சிலும் உள்ளதாகக் கருதி, மாணவனே, நீ வஞ்சனையற்ற, மெய்யான அன்போடு அக்கடவுளை வழிபடுதலைச் செய்.**

***குறிப்புரை :-*** *'செய்தால் பகைவரை அழிக்கும் பயன் உனக்குக் கிட்டுவதாகும்' என்பது குறிப்பெச்சம். பொய் - வஞ்சனை. அஃதாவது உறுதிப்பாடு இன்மை. மேலே குறிப்பால் உணர்த்திய வயிரவ மூர்த்தி ஆறு கைகளை உடையவர் என்பது இங்கு*




வயிரவர் (பைரவர்)

1278. பூசனை செய்யப் பொருந்திஓர் ஆயிரம்
பூசனை செய்ய அதுஉடன் ஆகுமால்
பூசனை சாந்துசவ் வாது புகழுநெய்
பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே. 5

---

*வெளிப்படையாக உணர்த்தப்பட்டது. இதனை, இந்நூலாற் பெறுதும். பெறவே, மேற்கூறிய படைக்கலம் முதலியவைகளில் சூலம், தமருகம், வாள் என்பன வலக்கைகளிலும், பாசம், கபாலம், வெட்டப்பட்ட தலை என்பன இடக்கைகளிலும் இருத்தல் புலனாகும்; தலையும் கபாலமும் பிரமனுடையனவே. அவை முறையே தலையைக் கிள்ளினமையை நினைப்பிக்கும். நோக்கிடு மெய், வினைத்தொகை. 'செம்மையாக' என ஆக்கம் வருவிக்க. 'வயிரவன் மெய்' என இயையும்.*

***இதனால், வயிரவத் தியான முறை கூறப்பட்டது.***

***1278. தெளிவுரை :-*** *வயிரவ வழிபாட்டினைச் செய்ய விரும்பினால், மேற்கூறிய வயிரவச் சக்கரத்தினை மேற்கூறிய வகையில் ஓர் ஆயிரம் நாள் வழிபடல் வேண்டும். வழிபடின் அச்சக்கர வழிபாட்டின் பயன் கூடுவதாகும். அவ்வழிபாட்டினை, சந்தனம், சவ்வாது, புனுகுநெய் என்னும் இவைகளைச் சிறப்பாகக் கொண்டு செய்து, அது நிறைவெய்திய பின் பகைவர்பால் உங்கள் பகையைப் புலப்படுத்திக் கொள்ளுங்கள். ஓராயிரம் உரு செபித்துப் பூசிக்கவும். நல்ல தேனை நிவேதித்துப் பூசை செய்யவும். சாந்து, சவ்வாது, புனுகுச்சட்டம், பிழிந்த எண்ணெய் இவற்றைச் சாத்திப் பூசிக்கவும்.*

***குறிப்புரை :-*** *'அவ்வாறு செய்தால் வெற்றி கிடைக்கும்' என்பது குறிப்பெச்சம் வாம மார்க்கத்தை விரும்புவார் இதன் இரண்டாம் அடியை 'மதுவுடன் ஆகுமால்' எனப் பாடம் ஓதுவர்.*

*இதனால், வயிரவ வழிபாட்டு முறை கூறப்பட்டது.*

***1279. தெளிவுரை :-*** *ஒரு வரிசையில் ஆறு அறைகளை உடைய சக்கர வழிபாட்டின் பயன் கிடைக்கப்பெறின் பகைவர்பால் நீ கருதிய மாறுபாட்டுச் செயல் நீ நினைத்தவாறே முடியும். இனித்தம்பனம் முதலிய ஆறு செயல் ஆற்றலை அடைய விரும்பி இவ்வழிபாட்டினைச் செய்யின் அவ்விருப்பமும் இதனால் நிறைவுறும்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதற்கண் வைத்து உரைக்க.*

**1279.** வேண்டிய வாறு கலகமும் ஆயிடும்
வேண்டிய ஆறினுள் மெய்யது பெற்றபின்
வேண்டிய ஆறு வரும்வழி நீநட
வேண்டிய வாறது வாகும் கருத்தே. **6**

---

*'பகைவருள் கலகமும் வேண்டியவாறு ஆயிடும்' என்க. மெய் - சித்தி. 'ஏரொளிச் சக்கரத்திற் கூறப்பட்ட ஆறுபயன்கள் இதனாலும் கிடைக்கும்' என்றற்கு அதனையும் இறுதிக்கண் கூட்டிக் கூறினார். கலகம் - அட்ட கன்மங்களில் ஒன்று.*

*இதனால், இச்சக்கரத்தின் பயன் பலவும் முடித்துக் கூறப்பட்டது.*

**சத்தி பேதம்** (அருளது சத்தியாகும் அரன் தனக்கு)

| வ. எண் | தலைப்பு | பாடல் எண்கள் | பாடல்கள் | பேத விளக்கம் |
|---|---|---|---|---|
| 1. | திரிபுரைச் சக்கரம் | 1028–1057 | 30 | பிரம, விட்டுணு, உருத்திர லோகங் களுக்கு கலைமகள், திருமகள், உமை எனத் தலைவியாதல் பற்றி அம்மைக்கு திரிபுரை என்பது பெயர். ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி என்றும் கொள்வர். ஆரணி, ஜெனனி, உரோதயித்திரி என்றும் கொள்வர். முன்னர் திரோதான சத்தியாய் உலக இன்பத்தையும், பின்னர் அருட்சத்தியாய் வீட்டின்பத்தையும் தருபவள் திரிபுரை சுந்தரி, அந்தரி, சிந்துரப் பரிபுரை, நாரணி என்றும் சொல்லப்படுவாள். |
| 2. | வயிரவி மந்திரம் | 1058–1107 | 50 | பைரவர் அல்லது வயிரவரின் சத்தி வயிரவி. சூலம், கபாலம், கையேந்திய சூலி |
| 3. | பூரண சத்தி | 1108–1137 | 30 | சத்தியது பூரண நிலை |
| 4. | ஆதார ஆதேயம் | 1138–1237 | 100 | ஆதாரம் – நிலைக்களம். ஆதேயம்– அதன்கண் நிலைத்து நிற்கும் பொருள் (அதிதேவதை) நாடிசக்கரம் – ஆதாரம். பராசத்தி குண்டலினி முதலான பேதங்களோடு ஆதேய மாய் விளங்கும் சிவசத்திகள் ஒன்றற்கொன்று ஆதார ஆதேயம். ஸ்ரீசக்கரம், மேரு வழிபாடுகள். |

| 5. | சாம்பவி மண்டலச் சக்கரம் | 1280–1288 | 9 | சாம்பவி – சிவசத்தி. உமாமகேசுவரர், கல்யாண சுந்தரர், சோமாசுகந்தர் என்னும் வடிவங்களில் காணப்படும் அம்மையே சாம்பவி. சிவலிங்க வழிபாட்டில் ஆவுடையார் பீடம் – சத்தி. |
|---|---|---|---|---|
| 6. | புவனாபதிச் சக்கரம் | 1289–1300 | 12 | சத்தி அனைத்துப் புவனங்களுமாய் நிற்கும் பொழுது புவனை எனப்படு கிறாள். பஞ்சதசாட்சரி மந்திரம் சொல்லப்படுகிறது. இது காயத்ரியின் மற்றொரு வடிவம். ஸ்ரீவித்தையின் இயல்பு கூறப்படுகிறது. லலிதா திரிசதி தோத்திரம் சொல்லப் படுகிறது. பதினைந்து எழுத்து வழிபாடு |
| 7. | நவாக்கரி சக்கரம் | 1301–1400 | 100 | ஒன்பதெழுத்து வழிபாடு. (ஒன்பதெழுத்து பீஜம்) க்லீம், சௌம், ஔம், ஹௌம், கிரீம், கௌம், ஐம், ஹ்ரீம், ஸ்ரீம் என்ற பீஜங்களை 9 முறைகளில் மாற்றியமைத்து 9 வகையான சக்கரங்களாகத் தியானிப்பது. |

## சத்திபேதச் சுருக்கம்

I. பராசத்தி

II. ஆதிசத்தி

III. இச்சா, ஞான, கிரியா சத்திகள்

IV. சத்தி, விந்து, மகேசுவரி, உமை, திருமகள், வாணி

V. சிவகாமி, பார்வதி, இராஜராஜேஸ்வரி

VI. ஆரணி, ஜெனனி, உரோதயித்திரி

VII. வாமை, ஜேஷ்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சருவபூதமணி, மனோன்மனி

VIII. வராகி, துர்க்கை, மாரி, மகிடாசுரவர்த்தினி

## 11. சாம்பவி மண்டலச் சக்கரம்

*'சாம்பன், சாம்பசிவன்' என்னும் பெயர்கள், 'அம்பாவுடன் கூடியவன், அம்பாவுடன் கூடிய சிவன்' என்னும் பொருளுடையன. அம்பா - தாய்; சத்தி. இந்நிலையில் இச்சிவனோடு நிற்குஞ் சத்தியே சாம்பவி. கடவுளுக்கு 'ஒருவனாய் நிற்கும் நிலை, சத்தியோடு கூடி இருவராய் நிற்கும் நிலை' என இரண்டு உண்டு. முன்னது சொரூபம். பின்னது தடத்தம். 'சாம்பன், சாம்ப சிவன்' என்பன தடத்த நிலையை உணர்த்துதலும், தடத்தமெல்லாம் சத்தியால் ஆவன என்பதும் வெளிப்படை. அம்முறையில் சத்திமேல் வைத்துச் சொல்லப்படும் சக்கர வழிபாட்டிலும் சத்தியைச் சிவத்தோடு வைத்தே தியானித்தல் வேண்டும் என ஆங்காங்குக் கூறி வந்த நாயனார், இருவர்க்கும் உரியதாய் உள்ள சக்கர வழிபாட்டினையும் சத்தி மேல் வைத்தே இங்கு ஒன்பது மந்திரங்களால் உணர்த்துகின்றார். மாகேசுர மூர்த்தங்களில், 'உமா சகாயர், கல்யாண சுந்தரர், சோமாஸ்கந்தர்' என்னும் வடிவங்களில் காணப்படும் அம்மையே, சாம்பவி. சதாசிவ மூர்த்தமாகிய இலிங்கத் திருமேனியில் பீடம், சத்தியும், இலிங்கம் சிவமுமாதலின், அஃது இருவர்க்கும் பொது அதற்குரிய சக்கரத்தையே இங்கு 'சாம்பவி மண்டலம்' எனச் சத்திமேல் வைத்துக் கூறுகின்றார். அர்த்தநாரீசுர வடிவமும் இருவர்க்கும் விடுத்து அருவுருவத் திருமேனியே 'பொது' எனக் கொள்ளப்பட்டது. இவ்வதிகாரத்திலும் இறுதி ஒற்றொழிந்த பிற மந்திரங்கள் அந்தாதியாய் வருகின்றன.*

**1280.** சாம்பவி மண்டலச் சக்கரம் சொல்லிடில்
ஆம்பதம் எட்டாக இட்டிடின் மேலதாக்
காண்பதம் தத்துவம் நால்உள் நயனமும்
நாம்பதம் கண்டபின் நாடறிந் தோமே. 1

---

*1280. தெளிவுரை :- 'சாம்பவி மண்டலம்' என்னும் பெயரினதாகிய சக்கரத்தின் அமைப்பினை யாம் சொல்லின், வரிசைக்கு எட்டு அறைகளாக எட்டு வரிசையில் அறுபத்து நான்கு அறைகளைக் கீறி, அவற்றின் நடுவில் நான்கு அறைகளை, 'சிவம், சத்தி, நாதம், விந்து' என்னும் நான்கும் அருவத் திருமேனிகளாகக் கருதி, அவற்றையே அச்சக்கரத்தின் கண்களாக வைத்து, அனைத்தையும் முறை நோக்குதல் வேண்டும். அப்பொழுதே அச்சக்கர வழிபாட்டினை நாம் அறிந்தவராவோம்.*



சாம்பவி மண்டலச் சக்கரம்

***குறிப்புரை :-*** *'மண்டலம், சக்கரம்' என்பன ஒரு பொருட் சொற்களாதலின், 'சாம்பவி மண்டலச் சக்கரம்' என்பது இருபெயரொட்டு. 'இட்டிடின் காண்பதம்' என இயையும். மேல் என்றது இரட்டுற மொழிதலாய், உள்ளிடத்தையும், மேலிடத்தையும் உணர்த்தி, இரண்டாவது பொருளில் 'தத்துவம்' என்பதனோடு இயைய, "நால்" என்பது காண்பதும் என்பதனோடு சென்றியைந்தது. தத்துவம் நாலாக என ஆக்கம் வருவிக்க. 'உள்ளே நயனமும் கண்டு' எனக் காணுதலை நயனத்திற்குங் கொள்க. நாடு - நாடுதல்; வழிபடுதல்; முதனிலைத் தொழிற்பெயர்.*

***1281. தெளிவுரை :-*** *நாடறிந்த மண்டலமான இந்த நல்ல சக்கரத்தில் வளைதல் இல்லாது நேராய்ச் செல்லும் வீதிகளை நாற்புறத்தும் அமைத்து, அவற்றில் ஒவ்வொரு வீதிக்குள்ளாலும் நடுவில் இரண்டிரண்டு அறைகளை இடைவெளியாகவிடுக. 'நெடிய வீதி' எனப்பட்டவைகளில் உள்ள அறைகள் பதினாறாகும். இங்ஙனம் ஆனபின் வீதிக்குள் அமைந்த அறைகளின் எண்ணிக்கையும், உட்சுற்றில் உள்ள அறைகளின் எண்ணிக்கையும் தனித்தனி இருபதாம்.*

***குறிப்புரை :-*** *இரண்டழி பத்து - எட்டு. பத்துடனாறு - பதினாறு. பாடு அறி - படுதல் (உண்டாதல்) அறியப்பட்ட, பத்து, ஆறு என்பன அறைகள். ஈடேறுதல் - இடையீடின்றி வலம் செல்லல். 'நடுவீதி' என்பதும் 'ஏடற' என்பதும் பாடம் அல்ல.*

**1281.** நாடறி மண்டலம் நல்லஇக் குண்டத்துள்
கோடற வீதி கொணர்ந்துள் இரண்டழி
பாடறி பத்துடன் ஆறு நெடுவீதி
ஈடற நாலைந் திடவகை ஆமே. **2**

---



*இரண்டழி பத்து, பத்துடனாறு எனத் தனித்தனி இயைக்க. இரண்டழி பத்து - எட்டு. பத்துடனாறு - பதினாறு. எட்டுவரை கீறி ஏழு பதமுள்ள சக்கரம் அமைக்குங்கால் பிந்துவாகிய நயனத்தானம் நடுவில் உள்ள ஒருபதமாகவும், அதனைச் சுற்றியுள்ள முதல் வீதி எட்டு பதமாகவும், அதனைச் சுற்றியுள்ள இரண்டாம் வீதி பதினாறு பதமாகவும் அமைந்துள்ளமை காண்க. பதம் என்பது ஒரு கட்டமாதலை மந்திர சாத்திரங்களிலும், அகோரசிவ பத்ததியிலும், சாராவளியிலும் காணலாம்.*

*1282. தெளிவுரை :-* இருபது அறைகளை உடைய ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிவட்டமாய் நிற்கும் நல்ல வீதிகள் நான்கிலும் திசைக்கு நான்காகப் பதினாறு இலிங்க உருவங்கள் இருக்க, நடுவில் உள்ள நான்கு அறைகளிலும் அவ்வாறே நான்கு இலிங்கங்கள் நடுவில் உள்ள ஓர் இலிங்கத்துடன் நான்கு தாமரை மலர்களோடு நடுவொரு தாமரை மலரில் இருக்கும்.

*குறிப்புரை :-* பெருந்திசை பற்றிப் பதினாறே கூறினும், கோணத்திசை நான்கிலும் நான்கு இலிங்கங்கள் கொள்க. நள் - நடு; இதனைக் கோணத்திற்கும் கூட்டி, 'நள் நாலு கோணமும் நள் நால் இலிங்கமா' என்க. இதனானே, நடுவிலும் ஓர் இலிங்கம்

**1282.** நாலைந் திடவகை உள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியு நந்நால் இலிங்கமா
நாலுநற் கோணமும் நண்ணால் இலங்கமா
நாலுநற் பூநடு நண்ணல்அவ் வாறே. **3**

**1283.** ஆறிரு பத்துநால் அஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறிநீர் உம்மில் சிவாய நமஎன்று
கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே. **4**

---



*இருத்தல் கொள்ளப்படும். இதனால், இலிங்கங்கள் அனைத்தும் இருபத் தைந்தாகும். இது சதாசிவமூர்த்தியே மகேசுர மூர்த்தி தம் இருபத்தைந்து ஆதலை விளக்கும். ''அவ்வாறே'' என்பதனை, "கோணமும்" என்றதன் பின்னர்க் கூட்டுக. கோணமும் அவ்வாறே 'நண்ணலையுடையது' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

***1283. தெளிவுரை :-*** *(எட்டு எட்டு (8x8) அறுபத்து* ***நான்கு அறைகள் உள்ள இச்சக்கரத்தில் சுற்று வீதியில் உள்ளவை இருபத்தெட்டு, நடுவில் உள்ளவை நான்கு ஆக முப்பத்திரண்டுடன் திசைக்கு இரண்டாக நான்கு திசைகளிலும் இடைவெளியாக நிற்கும் அறைகள் எட்டுக்கூட அறைகள் நாற்பது நடுவு. நான்கு அறைகளின் நடுவையும் ஓர் அறையாகக் கொள்ள, கூடிய அறைகள் நாற்பத் தொன்று இவைகளில்).***

**1284.** குறைவதும் இல்லை குரைகழல் கூடும்
அறைவதும் ஆரணம் அவ்வெழுத் தாகில்
திறம்அது வாகத் தெளியவல் லாருக்
கிறவில்லை என்றென் றியம்பினர் காணே. **5**

---

*உடலெழுத்துக்களில் ஐவருக்கத்து இருபத்தைந்தையும் இருபத்தைந்து இலிங்கங்கட்கும் உரிய எழுத்துக்களாக நடுவண் ஐந்தில் தென்கிழக்கு முதலாகத் தொடங்கிப் பின் மேற்கு முதலாக வலஞ்சென்று இலிங்கங்கட்கு அணியவான கீழ் அறைகளில் அடைத்தல் வேண்டும். பின்னர் யகரமாதி நான்கு, கரமாதி நான்கு ஆக எட்டினையும் சுற்று வீதியில் இடைவெளியாக உள்ள எட்டு அறைகளில் மேற்கு முதல் வலமாக அடைத்து, உட்சென்று வெற்றிடமாய் உள்ள எட்டு அறைகளில் முறையே, 'ள, க்ஷ, ஓம், சி, வா, ய, ந, ம' என்னும் எட்டு எழுத்துக்களையும் அடைத்து நிரப்பிச் செபித்தல் வேண்டும். செபிக்கின் குறையின்றி வாழலாம்.*

***குறிப்புரை :-*** *ஆறு + இருபது + நான்கு + அஞ்சு = முப்பத்தைந்து. இரண்டாவது அஞ்சு, திருவைந்தெழுத்து, 'வேறு உருவாகக் கொண்டு' என ஒருசொல் வருவிக்க. உம்மில் கூறுமின் - வாய்க்குள் மெல்லெனச் செபியுங்கள். அஞ்செழுத்துக்களையே எடுத்துக் கூறினாராயினும் ஓங்காரமும் இயல்பாகக் கொள்ளப்படும். ஐவருக்கத்தது இருபத்தைந்து எழுத்துக்களும் மகேசுர எழுத்துக்களாய் நிற்றல் வெளிப்படையாக அறியப்படவே, பிரணவத்தோடு கூடிய திருவைந்தெழுத்து, சதாசிவ எழுத்தாதல் குறிப்பால் அறியப்படும். இவை இருதிறத்தனவும் இங்ஙனமாகவே, இவற்றிற்கு இடைநிற்கும் யகாரா பத்தும் ஆன்ம எழுத்துக்களாய் ஆன்மாவை மகேசுரர், சதாசிவர் இருவர்களிடை வைத்துக் கீழ்நின்று மேல் ஏற்றுவனவாம் என்க.*

***ஏரொளிச் சக்கரம் பிரணவயோக சக்கரமாய் முழுவதும் உயிரெழுத்துக்களாலே அமைதலும், இது சாம்பவ யோக சக்கரமாய் முழுவதும் உடலெழுத்துக்களாலும் திருவைந்தெழுத்தாலும் அமைதலும் கண்டு கொள்க.***

*இவை நான்கு மந்திரங்களாலும் சாம்பவி மண்டலச் சக்கரத்தின் அமைப்புக் கூறப்பட்டது. இவ்வாற்றால் அமைந்த இச்சக்கர வடிவைக் காண்க.*

*இதில் உள்ள எழுத்துக்களைக் ககாரம் முதலாம் ஒவ்வொன்றனையும் பத்துப் பத்து உருச் செபித்து, முடிவில்*

**1285.** காணும் பொருளும் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்
ஊணும் உணர்வும் உறக்கமும் தானாகக்
காணுங் கனகமும் காரிகை யாமே. **6**

---

*திருவைந்தெழுத்தையும் அவ்வாறு செபித்தல் ஒருவட்டமாகும் என்பது மேலை அதிகாரத் தொடர்ச்சியால் விளங்கும். **ஏரொளிச் சக்கர வழிபாடு ஞானசாதனமும், இது போக சாதனமும் ஆகும் என்க**. இம் மந்திரத்துள், "குறைகளும் இல்லையே" என்றது போகம் பற்றிய குறிப்பேயாம்.*

***1284. தெளிவுரை :-*** *வேதத்தால் மூலமந்திரமாகச் சொல்லப்படுவதும் திருவைந்தெழுத்தேயாதலின், அதனை அவ்வாறே தெளிய வல்லவர்கட்கு உலகப் பயன்களிலும் யாதும் குறைதல் இல்லை. வழிநிலைக் காலத்தில் 'இறப்பு' என்பது இல்லாமல், சிவபெருமானது ஒலிக்கும் வீரக்கழலையணிந்த திருவடியும் கிடைக்கும் என்று, அறிந்தோர் பன்முறையும் வலியுறுத்திக் கூறியுள்ளார்கள்.*

***குறிப்புரை :-*** *இரண்டு, மூன்றாம் அடிகளை முதலிற் கொண்டு, "இறவில்லை" என்பதனைக் "குறைவதும் இல்லை" என்பதன் பின் கூட்டி உரைக்க. 'குரைகழலும்' என்னும் சிறப்பும்மை தொகுத்த லாயிற்று அடுக்குப்பன்மைப் பொருட்டு. இறவு - இறப்பு.*

***1285. தெளிவுரை :-*** *ஐம்புல நுகர்ச்சியவாக உலகில் காணப்படுகின்ற பல பொருள்களும், நினைக்கின்ற பலதெய்வங்களை வழிபடுதல், போற்றப்படுகின்ற திவ்ய தலங்களில் வாழ்தல், பெருகி ஓடுகின்ற நதி முதலிய புண்ணிய தீர்த்தங்களில் மூழ்குதல் ஆகியவற்றால் வரும் பயன்களும் நுகர்ச்சியும் நல்ல அறிவும், கவலையற்ற உறக்கமும், எல்லாம் தானேயாய் நிற்கும் பொன்னும் ஆகிய எல்லாம் இச் சாம்பபி மண்டலச் சக்கர வழிபாட்டினால் கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *"தெய்வம்" முதலிய மூன்றும் அவற்றால் ஆம் பயனைக் குறித்தன. பொன் உண்டாயின் எல்லாம் உளவாம்' என்பது பற்றி "தானாகக்காணும் கனகம்" என்றார். காரிகை - சாம்பவி; என்றது அவளுக்குரிய இச்சக்கரத்தை. 'காரிகையால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று.*

**1286.** ஆமே எழுத்தஞ்சும் ஆம்வழி யேஆகப்
போமே அதுதானும் போம்வழி யேபோனால்
நாமே நினைத்தன செய்யலும் ஆகும்
பார்மேல் ஒருவர் பகையில்லை தானே. **7**

**1287.** பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்
நகையில்லை நாணாளும் நன்மைகள் ஆகும்
வினையில்லை என்றும் விருத்தமும் இல்லை
தகையில்லை தானும் சலமது வாமே. **8**

---

*இவை இரண்டு மந்திரங்களாலும் சாம்பவி சக்கர வழிபாடு எல்லாப்பயனையும் தருதல் கூறப்பட்டது.*

*1286. தெளிவுரை :-* திருவைந்தெழுத்து எஞ்ஞான்றும் நன்மைக்கு ஏதுவாம் வழி உண்டாகவே செய்யும். அதனையே தெளிந்து வல்லாராதல் யாருக்குக்கூடும்! கூடுமாயின், நினைத்தவற்றை முடித்தல் கூடும். கூடுதல் நமக்குப் பகைவரும் இலராவர்.

*குறிப்புரை :-* 'நாதமார்க்கத்து ஒழுகின் எய்தும் பயனுணர்த்துதல் நுதலிற்று. திருவைந்தெழுத்துத் தோன்றும் வழியாகவே போம்; அது செல்லும் வழியில் நீங்களும் செல்லின் நினைத்த காரியங்களைச் செய்யலாம்; பூமியில் ஒருவர் பகையும் இல்லையாம் என்றவாறு.

திருவைந்தெழுத்தும் போம் வழியாவது ஆதாரங்களில் நிலைபெறுத்தி, ஒவ்வோராதாரமாகக் கடந்து, துவாதசாந்தத்தை அடையும் வகையில் தியானித்தல். அங்ஙனமே உங்கள் தியானமும் மேலேறிச் செல்லின் நினைத்த யாவும் முடியும்; பகையுமில்லையாம் என்பது கருத்து.

*1287. தெளிவுரை :-* திருவைந்தெழுத்தை ஓதுபவரிடத்தில் பகை, பெரியோர் இகழும் இகழ்ச்சி, இருவினை, பொருந்தாச் செயல்கள், இடையூறு என்பவை இல்லையாம். நாள்தோறும் நன்மைகளே விளையும். அம்மந்திரமே மலத்தை முற்றக் கழுவித் தூய்மையைத் தரும் நீராம்.

**1288.** ஆரும் உரைசெய்ய லாம்அஞ் செழுத்தாலே
ஆரும் அறியாத ஆனந்த ரூபம்ஆம்
பாரும் விசும்பும் பகலும் மதியதில்
ஊரும் உயிரும் உணர்வது மாமே. **9**

---

*__குறிப்புரை :-__ பணிந்தவர் - பணியப்பட்டவர். 'தம்மால்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். "நாணாளும் நன்மைகள் ஆகும்" என்பதை, "தகையில்லை" என்பதன்பின் கூட்டி உரைக்க. மூன்றாம் அடி உயிரெதுகை. தகைவு - தடை. சலம் - தண்மை, மணம்.*

*இவை இரண்டு மந்திரங்களாலும், 'முத்தியைத் தருவதாகிய திருவைந்தெழுத்து மந்திரத்தைப் போகம் வேண்டுவோர் கணித்தல் பொருந்துமோ' எனப் பேரறிவில்லாதார்க்கு இச்சக்கரம் பற்றி எழும் ஐயம், 'திருவைந்தெழுத்து எல்லாவற்றையும் தரும்' எனக் கூறி நீக்கப்பட்டது.*

*__1288. தெளிவுரை :-__ மண்ணும், விண்ணுமாகிய எல்லா இடத்திலும், பகலும், இரவுமாகிய எல்லாக் காலத்திலும் வாழ்தலை யுடைய எல்லா உயிரும், அவற்றின் உணர்வுமாய் இருப்பது திருவைந்தெழுத்து. அதனால், எதனை வேண்டுவோரும் அந்த மந்திரத்தை ஓதலாம். ஓதுவதால் உலகில் பிறர் அறிந்திலாத விடய இன்பமும், இறை இன்பமும் மிகவும் உளதாம். சாம்பவி மந்திரத்தைச் செபிக்கத் தக்கார், தகாதார் என வேறுபாடில்லை. யாரும் செபிக்கலாம். ஆனந்தமாக இருக்கலாம்.*

*__குறிப்புரை :-__ மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. "அஞ்செழுத்து" என்பது தாப்பிசையாய் இடைநின்றது. ஆனந்த ரூபம் - இன்பமே உருவாம் நிலை. இன்பம் இருவகை இன்பத்திற்கும் பொதுவாய் நின்றது. "மதியதில்" என்பதிலும் தொகுக்கப்பட்ட எண்ணும்மையை விரிக்க. ஊர்தல் - உலாவுதல்; வாழ்தல்.*

*இதனால், மேலதனை முடிந்தது முடித்தலாகக் கூறி, அது வலியுறுத்தப்பட்டது.*

*இம்மந்திரத்தின் பின் முன்பு "ஆதார ஆதேயம்" என்னும் அதிகாரத்துட் போந்த. "உணர்ந்தெழு மந்திரம்" என்னும் மந்திரம் சிறிது வேறுபடப் பதிப்புகளில் காணப்படுதல் மிகையாகும்.*

## 12. புவனாபதிச் சக்கரம்

*சத்தி பல்வேறு நிலைகளில் பல்வேறு பெயர்களைப் பெற்று நிற்பாள். அம்முறையில் அனைத்துப் புவனங்களுமாம் நிற்கும் பொழுது "புவனை" எனப்படுகின்றாள். அவளை அந்நிலையில் வைத்து வழிபடும் சக்கர வழிபாட்டினை இங்குப் பன்னிரண்டு மந்திரங்களால் கூறுகின்றார். ''இவளும் தனியாய் நில்லாது சிவனோடு கூடியே நிற்பவள்" என்றற்கு, "புவனை" என்று ஒழியாது "புவனாபதி" என்றார். "பதி" என்பது ஆகுபெயராய்ப் "பதியோடு கூடி நிற்பவள்" எனப் பொருள் தந்தது. அம்மை புவனை, பாலை, திரிபுரையெனப் பரிபாகிகளின் தகுதிக்கேற்ப நின்று அருள்வழங்குவள். அவ்வம்மை நிலவும் சக்கரம் உணர்த்துதலின் இவ்வதிகாரம் புவனாபதி சக்கரம் என்னும் இப்பெயர்த்தாயிற்று. உதிக்கின்ற செங்கதிரை ஒத்த ஒளியும், வென்றடக்கிய புது ஜபமாலையும், பிறைமதிபோல வளைந்து கிடக்கின்ற ஒளி விடும் மாலையும், முக்கண்ணும், பன்னிற மணிகளிழைக்கப்பட்ட குண்டலமும், தாமரையும், கழுத்தில் மாலை காஞ்சி இரத்தின வளையல்கள் இவைகளும் ஆடையும், பாசம், அங்குசம், அபயம், வரதம் இவைகளைத் தாங்கிய கரமும் உடைய வளாகச் சிவந்த நிறத்துடன் தாமரைப்பூவில் எழுந்தருளி யிருப்பவளாகப் புவனையைத் தியானிப்பர். புவனை மந்திரமும், சக்கரமும், உபாசனையும், பூசையும் உணர்த்துகிறது இவ்வதிகாரம். எனவே, 'புவனா பதி' என்பது 'வகரக் கிளவி', (தொல், எழுத்து மொழிமரபு) ''மக்கட் சுட்டு'' (தொல். சொல். 1) என்பன போல இருபெயரொட்டாகு பெயராயிற்று. இதனுள்ளும் சில பாடல்கள் அந்தாதியாய் உள்ளன.*

**1289.** ககாராதி ஓர்ஐந்தும் காணிய பொன்மை
அகாராதி ஓர் ஆ றரத்தமே போலும்
சகாராதி ஓர்நான்கும் தாம்சுத்த வெண்மை
ககாராதி மூவித்தை காமிய முத்தியே. **1**

---

*1289. தெளிவுரை :- (மேல் (பா.1158) "தக்க பராவித்தை" என்னும் மந்திரத்தில் சொல்லப்பட்ட 'ஸ்ரீவித்தை' எனப்படும் பராவித்தையை மேற்கொள்ள மாட்டாத மெலியோர்க்கு அமைந்தது இச்சக்கரம் என்பது உணர்த்துதற்கு முதல் நான்கு மந்திரங்களால் ஸ்ரீ வித்தையின் இயல்பே கூறுகின்றார்). ககாரத்தை முதலில் உடைய ஐந்தெழுத்துக்களும் பொன்னிறம் உடையன; ஹகாரத்தை முதலில்*

*உடைய ஆறெழுத்துக்களும் செந்நிறம் உடையன; ஸகாரத்தை முதலில் உடைய நான்கெழுத்துக்களும் தூய வெண்ணிறம் உடையன. ககாரத்தை முதலில் உடையது முதலிய இம்மூன்று வித்தைகளும் 'போகம், மோட்சம்' என்னும் இரு பயன்களையும் தருவனவாகும்.*

***குறிப்புரை :-*** *ககாரத்தை முதலில் உடைமை பற்றி இவ்வித்தை (ஸ்ரீவித்தை) 'காதி வித்தை' என்றும் சொல்லப்படுகின்றது.*

*ககாராதி ஐந்தாவன : 'க, ஏ, ஈ, ல, ஹ்ரீம்' என்பன. ஹகாரத்தையே தமிழ் முறையால், "அகாரம்" என ஓதினார் ஹகாராதி ஆறாவன; 'ஹ, ஸ, க, ஹ, ல, ஹ்ரீம்' என்பன. ஸகாரத்தையே அவ்வாறு "சகாராதி" என்றார். ஸகாராதி நான்காவன; 'ஸ, க, ல, ஹ்ரீம்' என்பன. இப்பதினைந்தெழுத்தின் தொகுதி, 'பஞ்ச தசாட்சரி' எனப்படும்.*

*சத்திக்குரிய மந்திரங்களில் தலையானதாகக் கொள்ளப்படுவது, 'லலிதா திரிசதி தோத்திரம்' என்னும் முந்நூறு நாமங்களைக் கொண்ட கோவை. அந்நாமங்கள் இங்கு காட்டிய எழுத்துக்களில் ஒவ்வொன்றை முதலாகக் கொண்டு ஓரெழுத்திற்கு இருபதாக (15 x 20) முந்நூறு உள்ளன. எனவே, அவற்றின் முதலெழுத்துக்களின் தொகுதியே இப்பஞ்ச தசாட்சரியாம்.*

*இப் பதினைந்தெழுத்தும் இம்மந்திரத்திற் சொல்லப்பட்டவாறு மூன்று பகுதிகளாகக் கொள்ளப்படுகின்றன. ஒவ்வொரு பகுதியும் 'ஹ்ரீம்' என்பதை ஈற்றில் அறியத்தக்கது. இம்மூன்று பகுதிகளும் முறையே 'வாக்பவ கூடம், காமராஜ கூடம், சத்தி கூடம்' எனப்படுகின்றன. இம் மந்திர மாலையின் பெருமை, இப்பகுதிகளின் பெருமை, இவ் வெழுத்துக்களின் பெருமை முதலியவை இம்மாலையின் பூர்வ பாகம், 'வரிவஸ்யாரகசியம்' என்னும் நூல் முதலியவற்றில், பலவாகச் சொல்லப்படுகின்றன. இவற்றிற்கு முதல் நூல், 'திரிபுரை' என்னும் சத்திக்குரிய உபநிடதமாகிய திரிபுரோபநிடதமாம்.*

*'இப் பஞ்ச தசாட்சரி மந்திரம் காயத்திரியின் மற்றொரு வடிவம்' எனவும், இன்னும் 'பொதுவாக யாவராலும் அறிந்து சொல்லப்பட்டு வரும் காயத்திரியினும் இது மிக மேலானது' எனவும், 'காயத்திரியை வெளிப்படையாகக் கூறும் வேதம் இதனை அவ்வாறு கூறாமல், மிக மறைபொருளாகச் சில சங்கேத (குறியீட்டுச்) சொற்களால் கூறுகின்றது எனவும், இங்ஙனமாகவே, இவ் எழுத்துக்களைக் கொண்ட லலிதா திரிசதி தோத்திர வழிபாடே எல்லா வழிபாட்டின் பயனையும் தந்து, 'ஸர்வ பூர்த்திகரி' யாகின்றது*

**1290.** ஓரில் இதுவே உறையும் இத் தெய்வத்தைத்
தேரில் பிறிதில்லை யானொன்று செப்பக்கேள்
வாரித் திரிகோணம் மாவின்ப முத்தியும்
தேரில் அறியும் சிவகாயந் தானே. 2

---

*எனவும் கூறுவர். இம்மந்திர வழிபாட்டிற்குரிய ஸ்ரீ சக்கரம் பற்றி மேற்குறித்த பராவித்தை கூறிய இடத்தில் சொல்லப்பட்டது. 'ஸ்ரீ0' என்பது இலக்குமி பீசம் எனவும், இதனை இவற்றோடு கூட்டி சோடசாட்சரியாகக் கொள்வது மிக உயர்ந்தோர்க்கு உரியது எனவும் கூறுவர். இவ் அக்கரத்தை நாயனார் புவனாபதி சக்கரத்திற்குக் கூறுகின்றார்.*

*'வாக்பவ கூடம்' முதலிய மூன்று பகுதிகளின் நிறங்கள் வரிவஸ்ய ரகசியத்தில் முறையே, 'பிரளய கால அக்கினியின் நிறம், கோடி சூரியப்பிரகாச நிறம், கோடி சந்திரப்பிரகாசநிறம்' எனச் சொல்லப்பட்டன. அவற்றை நாயனார் இங்குக் கூறியவாற்றோடு இயைவானவாகக் கொள்ளுதலே ஏற்புடைத்து, 'கண்ட' என்பது இங்கு, 'காணிய' எனத் திரிந்து நின்றது. காமிய முத்தி, உம்மைத்தொகை, 'போலும்' என்பது உரையசை. இவற்றைத் தருவனவற்றை ஒற்றுமை பற்றி இவையாகவே கூறினார்.*

*இதனால், சத்தி வழிபாடாகிய ஸ்ரீவித்தைக்குரிய பஞ்ச தசாட்சர மந்திரத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

***1290. தெளிவுரை :-** மாணவகனே, யான் உனக்கு ஒரே முடிவைச் சொல்லுகின்றேன்; கேள்; உண்மையை ஆராயுமிடத்து மேற்கூறிய பதினைந்தெழுத்து மந்திரமே மந்திரங்களில் தலையாயது, இம்மந்திரத்திற்குரிய தேவிதன் பெருமையை ஆராயின் இவளையன்றித் தெய்வம் வேறில்லையாம். இம்மந்திரத்தைக் கொண்ட 'ஸ்ரீசக்கரம்' எனப்படுகின்ற முக்கோணச் சக்கரமே பேரின்பமாகி வீட்டின்பக் கடலாயும் விளங்கும். இன்னும் ஆழ்ந்து நோக்கின் ஸ்ரீசக்கரமே மெய்யுணர்ந்தோர் காணும் சிவன் வடிவாகிய சிதாகாசமாம். திரி கோணமே சிவன் மேனி.*

***குறிப்புரை :** "யானொன்று செப்பக் கேள்" என்பதை முதலிற் கொள்க. ''இதுவே'' என்றது, மேற்கூறிய ககாராதி பதினைந்தெழுத்துக்கூடிய மந்திரத்தை, "இத்தெய்வம்" என்றது, "இதன் தெய்வம்" என்றவாறு பிறிது - பிறிது தெய்வம். வாரி - கடல் 'திரிகோணம் மா இன்ப வாரியாம் முத்தியும்' எனக்கூட்டுக. 'மனமின்ப' என்பது பாடம் ஆகாமை அறிக.*

*உம்மை, சிறப்பு, காயம் - சரீரம், சிவனுக்குச் சரீரமாவது சிதாகாசமேயாதலை அறிக. 'சிதாகாயம்' எனப்பாடம் ஓதினுமாம்.*

**1291.** ஏக பராசத்தி ஈசற்காம் அங்கமே
ஆகம் பராவித்தை ஆம் முத்தி சித்தியே
ஏகம் பராசத்தி யாகச் சிவன்உரு
யோகம் பராசத்தி உண்மைஎ ட்டாமே. **3**

---

*திரிகோணங்களால் ஆகின்ற ஸ்ரீசக்கரம் ஆதார ஆதேயம், என்னும் அதிகாரத்தில் காட்டப்பட்டது.*

*இதனால், மேற்கூறிய மந்திரத்தின் சிறப்பும், அதனோடு தொடர்புடையவற்றது சிறப்பும் கூறப்பட்டன.*

***1291. தெளிவுரை :-*** *பராசத்தியாய் உள்ளது ஒன்றே; அதுவே பரசிவத்திற்கு வடிவம். அந்தச் சத்திக்கு வடிவம், 'பராவித்தை' எனப்படும் ஸ்ரீவித்தை. அந்த வித்தையால் முத்தி, சித்தி இரண்டும் உளவாம். இனிப் பராசத்தி ஒன்றேயாயினும் சிவன் அங்கியாய் நிற்கச் சத்தி அவனுக்கு அங்கமாய் நிற்றல் உண்மையால், எட்டாய்ப் பிரிந்து நிற்றல் உண்டாகின்றது.*

***குறிப்புரை :-*** *"ஏக பராசத்தி" என்றது உடம்பொடு புணர்த்தல், "அங்கமே" என்னும் ஏகாரம் பிரித்துக் கூறப்பட்டது. எட்டுப் பிரிவாவன; 'பரை, ஆதி, விந்து, மனோன்மனி, மகேசுவரி, உமை, திருமகள், கலைமகள்' என்னும் நிலைகளாம். 'சிவன் அங்கியாகத் தான் அங்கமாதல் உண்மையின்' என்றமையால், 'சிவனது சங்கற்பமே இங்ஙனம் பிரிதற்குக் காரணம்' என்பது பெறப்பட்டது.*

*"எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்"*

*என்ற சிவஞானசித்தி (சூ.2-75)யை நோக்குக. 'சிவன் உருவாம் யோகம் பராசத்திக்கு உண்மையால் எட்டாம்' என்க. 'சிவகுரு' என்பது பாடம் அன்று. யோகம் - தொடர்பு. 'பராசத்தியே ஏனை ஏழுமாம்' என்றற்கு அதனையும் உடன் கூட்டி எண்ணினார்.*

*இதனால், ஸ்ரீவித்தைக்குரிய தெய்வமாகிய சத்தியது இயல்பு தெளிவிக்கப்பட்டது.*

***1292. தெளிவுரை :-*** *பராசத்தி வழிபாடாகிய பராவித்தையால், அச்சத்தி பேதங்களாகி மேற்கூறிய எட்டும் அட்டாங்க யோகத்தின் வழியே படிநிலைகள் எட்டினையும் அடையச்செய்து, முடிவில் நாதாந்தத்தில் சேர்க்கும். அதன்பின் பரசிவத்தை அடைவதற்குத் தடையாய் உள்ள விந்து நாதங்களும் அகன்றொழியும். (ஒழியவே பரசிவத்தைக்கூடிப் பரானந்தம் எய்தலாம்). இத்தகைய பராவித்தை அறிவாலும், ஆற்றலாலும் கீழ் நிலையில் உள்ளோர்க்கு இயலாததாம்.*

**1292.** எட்டாகிய சத்தி எட்டாகும் யோகத்துக்
கட்டாகும் நாதாந்தத் தெட்டும் கலப்பித்த(து)
ஒட்டாத விந்துவும் தான்அற் றொழிந்தது
கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே. **4**

**1293.** ஏதும் பலமாம் இயந்திரரா சன்னடி
ஓதிக் குருவின் உபதேசம் உட்கொண்டு
நீதங்கும் அங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங் கெடச் செம்பில் சட்கோணந் தான்இடே. **5**

---

*குறிப்புரை :- கட்டு - நிலை. அவை எட்டாவன; ஆறு ஆதாரம், சகத்திரதாரம், நிராதாரம் என்பன, 'யோகத்தால் கட்டாகும்' எட்டும் கலப்பித்தது நாதாந்தத்துக் கலப்பித்தது' என்க. 'சத்தி யோகத்துக் கலப்பித்தது' எனவே, பராவித்தையைக் கிரியையளவில் மட்டுமின்றி, யோக நிலையில் கொண்டு செய்தவழியே பெரும்பயன் உளதாதல் கூறப்பட்டதாம். 'அப்பெரும்பயனும் முத்தியே' என்பார், "ஒட்டாத விந்துவும் தான் அற்றொழிந்தது" என்றார். நாதத்தால் வரும் ஞானத்தை "வைந்தவ ஞானம்" என்றே கூறுவராகலின், 'நாதமும் அற்றொழிந்தது' என்னாது, 'விந்துவும் அற்றொழிந்தது' என்றார்.*

*"ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானம் உண்டேல்
சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேர லாமே"*

*என்னும் சிவஞான சித்தி (சூ 1 - 26)யை இங்கு நினைவு கூர்க.*

*"ஒழிந்தது" என்பது வினைப்பெயர். அது, "கிட்டாதொழிந்தது" என்பதனோடு முடிந்தது. ஸ்ரீசக்கர வழிபாட்டின் முறையும், பயனும் கூறும்முகத்தால் அதனது சிறப்புணர்த்தி, அது மெலியோர்க்குக் கூடாமை கூறப்பட்டது.*

*1293. தெளிவுரை :- இதுமுதலாகவே புவனாபதிசக்கரம் கூறுகின்றார். வழிபடுவோர்க்கு எப்பயனையும் தருவதாய், 'இயந்திரராசன்' எனப்படுகின்ற புவனாபதி சக்கரத்தை எந்தத் துதியினாலேனும் துதித்து, அதனை வழிபடும் முறையைக் குருவின் உபதேசத்தால் அறிந்து, நீ இயல்பாகச் செய்துவருகின்ற கர நியாச அங்க நியாசங்களை இவ்வழிபாட்டிற்கு ஏற்பச்செய்து, பிறவி நீக்கத்தைச் சிறப்பாக விரும்பி, செப்புத்தகடு ஒன்றில் முதலில் அறுகோணச் சக்கரத்தை வரை.*

*குறிப்புரை :- பலம் ஆம் - பயன் விளைதற்கு ஏதுவாய, 'இயந்திர ராசன்' என ஆண்பாலாகக்கூறியது. வடமொழி மதம். 'இதனைப் புவனாபதியாகவே கருதுக' என்றற்கு, "அடி ஓதி" என்றார். அங்க*

**1294.** சட் கோணந் தன்னில் சிரீம்இரீம் தானிட்டு
அக்கோணம் அறின் தலையில்இரீங் காரம்இட்
டெக்கோண முஞ்சூழ் எழில்வட்டம் இட்டுப்பின்
மிக்கீரெட் டக்கரம் அம்முதல் மேல்இடே. **6**

---

*நியாசமே கூறினாராயினும் கரநியாசமுங் கூறுதல் கருத்தாம். 'அவைகளே இதற்கேற்பச் செய்க' என்றது, 'இச் சக்கரத்தில் அடைக்கப்படும் பீசங்களாலே செய்க' என்றபடி அவற்றை வருகின்ற மந்திரங்களில் காண்க.*

*1294.* **தெளிவுரை :-** *மேற்கூறியவாறு வரையப்பட்ட அறுகோணச் சக்கரத்தின் அறைகளில் 'ஸ்ரீம், ஹ்ரீம்' என்னும் பீசங்களைப் பொறித்து, அச்சக்கரத்தின் ஆறுமூலைகளின் மேலும், 'ஹ்ரீம்' என்னும் பீசத்தை மட்டும் எழுதி, எல்லா மூலைகளும் உள்ளே அடங்கும்படி அவற்றைச் சுற்றி வட்டம் ஒன்று வரைந்து, அவ்வட்டத்திற்கு வெளியில் திக்கிற்கு ஒன்றாக எட்டுத் தாமரையிதழ் தோன்ற அமைத்து, அவ் இதழ்களின் கீழே வட்டத்தில் வடக்குமுதல், திக்கிற்கு இரண்டாக உயிரெழுத்துப் பதினாறதனையும் அகாரம் முதலாக முறையானே எழுதுக.*

**குறிப்புரை :-** *"சட்கோணந் தன்னில்" என்ற ஒருமையால், "சட்கோணம்" என்பது ஆகுபெயராய், அவற்றாலாய சக்கரத்தைக் குறித்தாம். "இட்ட இதழ்கள்" எனப் பின்னர் அனுவதித்துக் கூறலால், அவற்றை இடுதல் இங்குக் கொள்ளப்பட்டது. 'மிக்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல் பெற்றது. மிகுதல் உயர்தலாதலின், அஃது உயிரெழுத்தை உணர்த்தி நின்றது. உயிரெழுத்து என்றே கூறினாராயினும், விந்துவொடு கூட்டியே கொள்க. முதலடியில் இனவெதுகை வந்தது.*

*1295.* **தெளிவுரை :-** *சக்கரத்தைச் சூழ்ந்த வட்டத்திற்கு வெளியில் உள்ள இதழ்களின் இடைநிலம் எட்டிலும் எட்டு ஹகார மெய்யை உகார உயிர் புணர்ந்து எழுதி, இவ் இதழ்கள் எட்டிலும் பொருந்தி நிற்க, 'க்ரோம், ஹ்ரோம்' என்பவற்றைப் பொறிந்து, இதழ்களின் இடப்பக்கங்களில் 'ஆம், க்ரோம்' என்னும் பீசங்களை எழுதுக.*

**குறிப்புரை :-** *"அதன் மேலே" என ஒருமையாற் கூறியது, ஒற்றுமை நயங்கொண்டு. இங்ஙனம் கூறுதலை, 'சாதியொருமை' என்பர். "மேலே விட்டு" என்றது, "மேலே ஏற்றி" என்றவாறு. 'இதழ்களின் மேலே கிட்டும் படி இட்டு' என்க. 'மேவ' என்பது ஈறு குறைந்து நின்றது.*

*1296.* **தெளிவுரை :-** *பொருந்திய சக்கரத்தின் வெளியே உள்ள இதழ்களின் வலப்பக்கங்களில் எங்கும் வரிசையாக, 'க்ரோம் ஹ்ரோம்' என்பவற்றை எழுதி, எல்லாவற்றையும் கேடில்லாத*

**1295.** இட்ட இதழ்கள் இடைஅந் தரத்திலே
அட்டஹவ் விட்டிட் டதன்மேலே உவ்விட்டுக்
கிட்ட இதழ்களின் மேலே கிரோம்சிரோம்
இட்டுவா மத்துஆம் கிரோம்என் மேவிடே. 7

**1296.** மேவிய சக்கரமீது வலத்திலே
கோவை யுடைய குரோம்சிரோம் என்றிட்டுத்
தாவில் இரீங்காரத் தால்சக் கரஞ்சூழ்ந்து
பூவை புவனா பதியைப்பின் பூசியே. 8

---

*ரீங்காரத்தால் வளைத்து முடித்தபின், அம்மையாகிய புவனாபதியை வழிபடு.*



புவனாபதிச் சக்கரம்

**1297.** **பூசிக்கும் போது புவனா பதிதன்னை**
**ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்**
**பேசிப் பிராணப்பிர திட்டை யதுசெய்து**
**தேசுற் றிடவே தியான மது செய்யே.** **9**

---

*குறிப்புரை :- "பின்" என்பதனை "சூழ்ந்து" என்றதன் பின்னர்க் கூட்டுக. இச்சக்கரத்திற்குச் சொல்லப்பட்ட பீசாட்சரங்கள், 'ஸ்ரீம், ஹ்ரீம், ஹீ0, க்ஷோம், ஸ்ரோம், ஆம்' என்னும் ஆறுமேயாதலால், கர நியாச அங்க நியாசங்களும் இவற்றானே செய்யப்படும் என்க. அங்ஙனம் செய்யுங்கால் கரநியாசத்தைத் தர்ச்சனி (பெருவிரல்) முதலாக முறையே ஐந்து விரல்களிலும், ஆறாவதாக அகங்கை புறங்கைகளிலும் நிறசிக்க. அங்க நியாசம் இருதயம் முதலாகச் செய்யப்படுதல் இயல்பு.*

*இவை நான்கு மந்திரங்களாலும் புவனாபதிச் சக்கரத்தை அமைக்கும் முறை கூறப்பட்டது. இங்ஙனம் அமைந்த சக்கர வடிவை முன்பக்கத்தில் காண்க.*

*1297.* **தெளிவுரை :-** *புவனாபதி யம்மையை வழிபடும் பொழுது முதலில் மனத்தைக் காமாதி குற்றங்களின் நீக்கித் தூய்மையுடையதாகப் பண்ணி, அகத்தில் அவளது உருவத்தை நினைவுகூர்ந்து, பின்பு வெளியில் கும்பம், (நிறை குடம்) விம்பம், (திருவுருவம்) இச்சக்கரம் என்பவைகளில், அவ்வம் மறைமொழிகளால், (மந்திரங்களால்) ஆவாகனம், (வரவழைத்தல்) தாபனம், (இருத்துதல்) சந்நிதானம், (முகநோக்கம்) சந்நிரோதனம், (வேண்டிக்கோடல்) என்பவைகளால் விளக்கம் பெற நிறுத்திப்பின் உபசாரங்கள், (முகமன்கள்) பலவும் செய்து முடித்து, அவளது ஒளிமிக்க வடிவம் மனத்திலே நன்கு பொருந்தும்படி தியானித்து நில்.*

**குறிப்புரை :-** *"அகத்தில்" என்பது தாப்பிசையாய் இடை நின்றது. அகத்தினில் ஆவாகனம் - நினைவுகூர்தல், புறத்தினில் ஆவாகனம் - வரவழைத்தல், பிராணப் பிரதிட்டை - உயிர் கொடுத்து நிலைப் பித்தல், என்றது, ஆவாகனம் முதலிய நான்கையும் உணர்த்திற்று. இவை புறத்திலாதல் வெளிப்படை, அதனால், இவை செய்யப்படும். இடங்களாகிய கும்பம் முதலியனவும் பெறப்பட்டன. "பேசி" என்பதற்குச் செயப்படுபொருள் வருவித்துக்கொள்க. "பிரதிட்டை செய்து" என்றே போயினாராயினும், பின்னர்ச் செய்யப்படும் உபசாரங்கள் ஆற்றலால் விளங்கும். அவை அபிடேகம் (திருமுழுக்கு) அலங்காரம், (ஒப்பனை, இஃது ஆடை, அணிகலம், சந்தனம், பூமாலை, இவைகளை அணிந்து அழகுசெய்தலாம்). தூபம் (நறும்புகையிடுதல்) தீபம், (பல விளக்குவகை*

**1298.** செய்ய திருமேனி செம்பட் டுடைதானும்
கையில் படைஅங் குசபாசத் தோடபயம்
மெய்யில் அணிகலன் ரத்தின மாம்மேனி
துய்ய முடியும் அவயவத் தோற்றமே. **10**

---

*காட்டல்) நிவேதனம், (நைவேத்தியம் - படையல்கள்) அருச்சனை, (மலரிடல்) நிருத்தம், (ஆடல்) கீதம், (பாடல்) வாத்தியம், (பல்லியம்) பிரதட்சிணம், (வலம் வரல்) நமஸ்காரம், (அடி பணிதல்) பிரார்த்தனை, (வேண்டுகோள்) என்பன. 'செபம்' (மந்திரம் கணித்தல்) என்பது இவற்றுடனே கொள்க. தேசு, ஆகுபெயர்.*

*இதனால், புவனாபதி அம்மையது வழிபாடு முறை கூறப்பட்டது.*

*1298. **தெளிவுரை :-** புவனாபதியம்மை தன் வடிவில் விளங்குவன செம்மைநிறம், செம்பட்டு உடை, கைகளில் அங்குசம், பாசம் என்னும் படைக்கலங்களும், அபய வரதங்களும், அவயங்களில் அவ்வவற்றிற்கு ஏற்ற அணிகலன்கள், தலையில் இரத்தின கிரீடம் என்பவாம்.*

*குறிப்புரை :- ''அபயம்'' என்றதனால், வரதமும் உடன் கொள்ளப்படும். மெய், அவயவம் இவை ஆகுபெயர்கள். "இரத்தினமாம் மேனி" என்றது "இரத்தின உருவான" என்றவாறு. "தோற்றம்" உடையவற்றை, தோற்றம் என்றார்.*

*இதனால், புவனாபதி தியானத்திற்கு அவளது வடிவு கூறப்பட்டது. <u>மேல் பராவித்தை கூறியவிடத்தில் (பா.1158) அம்மைதன் வடிவம் வேறாகக் கூறப்பட்டிருத்தலை நோக்குக</u>.*

*1299. **தெளிவுரை :-** புவனாபதிக்கு முறைப்படி வழிபாடு செய்யும் பொழுது, மேலாடையை எடுத்து அரையில் கச்சு போலக் கட்டிக் கொண்டு செய்தல் வேண்டும். நிவேதனம் பால் அடிசிலேயாம், நிவேதிக்கும் மந்திரம் "ஓம் நாரதாயை சுவா:" என்பது, இம் மந்திரத்தால் நான்கு திசைகளிலும் நிவேதனம் செய்தல் வேண்டும. வழிபாடு யாவும் முடிந்த பின்பு பராங்முக அர்க்கியத்தால் அம்மையை முகம் மாற்றிய பின்பே நிர்மாலிய நிவேதனத்தைக் கைக்கொள்ளல் வேண்டும்.*

*குறிப்புரை :- தோல் - உடம்பு; ஆகுபெயர். "பால் போனகம்" என்றமையால், வாம மார்க்க நிவேதனங்கள் கூடாவாயின. "மந்திரத்தால் பயின்றேத்தி" என்பதை, துதித்து என்பதன்பின் கூட்டுக. நான்கு திசைகளிலும் நிவேதித்தல் கூறினமையால், விம்பத்திலும் அம்மையை நான்கு முகம் உடையவளாகக் கொள்ளுதல்*

**1299.** தோற்போர்வை நீக்கித் துதித்தடைவில் பூசித்துப்
பாற்போ னகம்மந் திரத்தால் பயின்றேத்தி
நாற்பால "நாரதா யைசுவாகா" என்று
சீர்ப்பாகச் சேடத்தை மாற்றியபின் சேவியே. **11**

**1300.** சேவிப் பதன்முன்னே தேவியைஉத் வாபனத்தால்
பாவித் திதய கமலம் பதிவித்தங்
கியாவர்க்கு மெட்டா இயந்திர ராசனை
நீவைத்துச் சேமி நினைந்த தருமே. **12**

---

*பெறப்பட்டது. பாகம் - சமைக்கப்பட்ட பொருள். நிர்மாலியத்தையே ''சேடம்'' (எஞ்சியது) என்றார். அதனைக் கொள்ளுதலைச் சேவித்தலாகக் கூறியது மரபு பற்றி.*

*இதனால், புவனாபதி வழிபாட்டிற்கு, முன்னர் எய்தியவற்றின் மேல் சில கூறப்பட்டன.*

*1300. தெளிவுரை :- 'சேடம்' எனப்படுகின்ற நிவேதப் பொருளைக் கைக்கொள்வதற்கு முன், கும்ப விம்ப சக்கரங்களில் நிறுவப்பட்ட தேவியை ஒடுக்கிக் கொள்ளுதற்குரிய மந்திரம் கிரியை பாவனைகளால் இருதயத்தில் ஒடுக்கி, யாவர்க்கும் அணுகுதற்கரிய மேலான இச்சக்கரத்தை நீ வைப்புப்பொருள் போல உள்ளத்திலே மறவாது வை, பின்பு இது நினைத்தவற்றையெல்லாம் உனக்குக் கொடுக்கும்.*

*குறிப்புரை :- 'பராங்முக அர்க்கியத்திற்குப் பின் இதுவும் செய்க' என்றற்கு, 'சேவிப்பதன்முன்' என மீட்டுங் கூறனிார். உத்வாபனம் - மீட்டுக் கொள்ளுதல். இதனை, 'உத்வாகனம்' என்றல் பிழை. இஃது இதற்குரிய மந்திரம் முதலியவற்றைக் குறித்த ஆகுபெயர். "பாவித்து" என்றது, 'இருதயத்துள் ஒடுக்கி' என்றவாறு, "இதய கமலம் பதிவித்து" என்றது, பின்னர் மறவாது ஊன்றிக்கொள்ளுதலை, 'தேவியைப் பதிவித்து, இயந்திர, ராசனைச் சேமி' என்க. ''நினைந்த'' என்பது அஃறிணைப் பன்மை வினைப்பெயர். 'நினைந்தது' என்பது பாடம் ஆகாமை அறிக.*

*இதனால், இச்சக்கர வழிபாட்டினை நிறைவு செய்யும் முறை கூறி, முடிக்கப்பட்டது. பலர்க்குப் பயன்படுதல் பற்றி, ''இயந்திரராசன்'' எனப்பட்ட இதன் வழிபாட்டில் இதனைக் கூறியதனால், ஏனைச் சக்கரங்களின் வழிபாட்டிற்கும் இஃது உரியதாதல் அறியப்படும்.*

## 13. நவாக்கரி சக்கரம்

*மேல் பதினைந்தெழுத்து, ஆறெழுத்து என்னும் அளவில் சத்திக்குச் சொல்லப்பட்ட வழிபாடுகள்போல, ஒன்பதெழுத்துக்களைக் கொண்டு செய்யப்படும் வழிபாடும் உள்ளதால், அதனை இவ்வதிகாரத்தில் நூறு மந்திரங்களால் உணர்த்துகின்றார். இதுவும் எல்லாப் பயனையும் தருவது என்பது இதனுள் அறியப்படும். இதனை மேற்கொள்ளத் தக்காரும் உயர்ந்தவரே யாவர். இவ்வதிகாரமும் அந்தாதியாய் வருதல் காணத்தக்கது.*

**1301.** நவாக்கரி சக்கரம் நான்உரை செய்யின்
நவாக்கரி ஒன்று நவாக் கரியாக
நவாக்கரி எண்பத் தொருவகை யாக
நவாக்கரி அக்கிலீம் சௌமுதல் ஈறே. 1

**1302.** சௌம்முதல் அவ்வொடும் ஹௌவுடன் ஆம்கிரீம்
கௌவும்ம் ஐமும் கலந்திரீம் சிரீம்என்
றொவ்வில் எழும்கிலீம் மந்திர பாதமாச்
செவ்வுள் எழுந்து சிவாயநம என்னவே. 2

---

*1301. **தெளிவுரை :-** நவாக்கரி சக்கரத்தின் இயல்பை நான் உனக்குச் சொல்லுமிடத்து, ஒன்பதெழுத்துத் தொகுதியில் ஒவ்வொன்றும் ஒன்பதெழுத்தாகின்ற முறையால் ஒன்பதெழுத்துக்கள், 'எண்பத்தோரெழுத்து' என்னும் தொகை பெறும்படி ஒன்பதெழுத்தாய் நிற்கும் அத்தொகுதியாவது 'ஸௌம்' என்னும் ஈற்றையும், 'க்லீம்' என்னும் முதலையும் உடையது.*

*குறிப்புரை :- இம் முதல் ஈறுகளை உடைய எழுத்து அனைத்தையும் வருகின்ற மந்திரத்தால் அறிக. தொகுதியைச் சுட்டுதற்கு, 'நவாக்கரம்' என்னாது "நவாக்கரி" என்றார். "முதல் ஈறே" என்றது எதிர் நிரனிறையாதல் வருகின்ற மந்திரத்தாற் பெறப்படும்.*

*இதனால், நவாக்கரி சக்கரம் அமையுமாறு தொகுத்துக் கூறப்பட்டது.*

*1302. **தெளிவுரை :-** ஸௌம், ஔம், ஹௌம், கிரீம், கௌம், ஐம், ஹ்ரீம், ஸ்ரீம் என்று இவை ஒத்து வருதலால் விளையும் க்லீம் என்பதை மந்திர முதலாகக் கொண்டு சிவாயநம எனக்கூறுக என்கிறார்.*

*நெடுக்காக 10 கோடுகளும், குறுக்காக 10 கோடுகளும் வரைந்தால் 81 அறைகள் கிட்டும். அகலவாக்கில் 9 அறைகளும், நீளவாக்கில் 9 அறைகளும் அமையப்பெறும். க்லீம் என்று தொடங்கி மேற்கண்ட 8 மந்திர எழுத்துக்களும் முதல் வரியில் வரிசை முறைப்படி அவ்வறைகளில் நிரப்பப்படும். இரண்டாவது வரியில் சௌம் என்ற மந்திர எழுத்துடன் தொடங்கப்படும். மூன்றாவது வரியில் ஔம் என்ற மந்திர எழுத்துடன் தொடங்கப்படும். இவ்வாறாக மந்திர எழுத்துக்களை அறைகளிலே பதித்துக்கொண்டே சென்றால் முதலடியின் ஈற்றெழுத்தான ஸ்ரீம் ஈற்றடியான ஒன்பதாவது அடியில் முதலாவதாக எழுதப்பெறும். அனைத்து அறைகளையும் சுற்றிலும் ஓம் வரையவும்.*

*இவ்வாறாகப் பொறித்துவிட்டு ஓம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் சிவாயநம என்று ஆரம்பித்து கீழ்க்கண்டவாறு நிறைவு செய்யவும்.*

1. ஓம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் சிவாயநம
2. ஓம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சிவாயநம
3. ஓம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் சிவாயநம
4. ஓம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் சிவாயநம
5. ஓம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் சிவாயநம
6. ஓம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் சிவாயநம
7. ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் சிவாயநம
8. ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் சிவாயநம
9. ஓம் ஸ்ரீம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் க்ரீம் கௌம் ஐம் ஹ்ரீம் சிவாயநம

*என்று செபித்தால் பரிபூரண பலன் கிடைக்கும்.*

*இவை திருமூலதேவநாயனார் அருளிய சுத்த நவாக்கரியாகும். சாக்தேய தந்திர முறைபற்றிச் சிலர் ஓம், க்லீம், ஸ்ரீம் சாமுண்டாயை விச்சே என்பது நவாக்கரியென்பர். அது சாமுண்டீஸ்வரியை மந்திர தெய்வமாகக் கொண்டு காமியப்பயன் ஒன்றையே தர வல்லதாய் இந்திரசால வேலைசெய்யப் பயன்படுமேயன்றி புத்தி முத்திகளைத் தாராது. பின்வரும் மந்திரங்களில் திருமூலதேவ சித்தநாதர் அருளிச் செய்வதை நோக்குக. ஆதலின் துறவிகளும், ஞானபீடாதிபதிகளும், சுத்தாத்வித சைவ சித்தாந்திகளும் பஞ்சாக்கரக் கலப்பில்லாத*

*நவாக்கரியை யோதின் மகாநரங்களை எய்துவர் என்று உணர்க. 1346, 1347, 1348 பாடல்களை இப்பாடலோடு சேர்த்தே பொருள் கொண்டால் சுலபமாகப் புரியும். பாடவரிசை பேதம் ஏற்பட்டுள்ளதையும் உணரலாம்.*

***குறிப்புரை :-*** ***"அவ்" என்பது வகர ஈற்றுச் சுட்டுப் பெயர். விந்துவை நோக்கிப் பன்மையாகக் கூறினார். 'ஔம்' என்பதை இங்கு 'ஹௌம்' என ஓதல் வேண்டாமை அறிக. 'கௌம், ஐம்' என்பவற்றில் செய்யுள் நோக்கி விந்துவிற்கு முன் ஓர் உகரம் தந்தும், எண்ணும்மை கொடுத்தும் ஓதினார். 'கலந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. ஔவில் பொருந்தில்; என்றது, 'பொருந்தியபின்' என்றவாறு. முதற்கண் உள்ள எழுத்துத் தலையாய் நிற்றலின்***

| க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் |
| ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் |
| ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் |
| கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் |
| கௌம் | ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் |
| ஐம் | ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் |
| ஹ்ரீம் | ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் |
| ஸ்ரீம் | க்லீம் | சௌம் | ஔம் | ஹௌம் | கிரீம் | கௌம் | ஐம் | ஹ்ரீம் |

**I. நவாக்கரி சக்கரம்**

**1303.** நவாக் கரியாவதும் நானறி வித்தை
நவாக் கரியுள்எழும் நன்மைகள் எல்லாம்
நவாக் கரிமந்திரம் நாவுளே ஓத
நவாக் கரிசத்தி நலந்தருள் தானே. 3

**1304.** நலந்தரு ஞானமும் கல்வியும் எல்லாம்
உரந்தரு வல்வினை உம்மைவிட் டோடிச்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. 4

---

*ஈற்றெழுத்தை, "பாதம்" என்றார். செவ்வுள் எழுந்து - செம்மையான நெறியில் முயன்று. 'நவமே' எனற்பாலது, 'நவே' எனக் குறைந்து நின்றது. நவம் - நவாக்கரமாம். 'நமஎன்னே' என்றே பாடம் ஓதுதல் அந்தாதிக்கு ஒவ்வாமை அறிக.*

*இதனால், நவாக்கரி சக்கரத்திற்குரிய, நவாக்கரங்கள் முழுதும் எடுத்தோதப்பட்டன.*

***1303. தெளிவுரை :-** நவாக்கரி சக்கர வழிபாடும் நான் சிறந்த ஒன்றாக அறிந்த வழிபாடாம். அதனால், நலங்கள் பல விளையும். ஆதலின், நவாக்கரி மந்திரத்தை நாப் புடைபெயரும் அளவாகக் கணித்தால், அம்மந்திரத்திற்குரிய சத்தி எல்லா நன்மைகளையும் தருவாள்.*

***குறிப்புரை :-** 'நவாக்கரியின் உள்நின்று எழும்' என்க. அஃதாவது 'நவாக்கரி வழிபாடு ஏதுவாக' என்றவாறு.*

***1304. தெளிவுரை :-** நவாக்கரி சக்கர வழிபாட்டினால் பெருந்தன்மையைத் தருவதாகிய அனுபவ ஞானமும், அதற்கு ஏதுவாகிய கலா ஞானமும் வலியுற்று நிலைபெறும். அதற்கு முன்னே உம்முடைய வலிய வினைகள் உம்மை நோக்காது விட்டு ஓடிவிடும். 'அஃது எவ்வாறு' எனில், இவ்வழிபாட்டினால், வேண்டுவோர் வேண்டுவதைத் தருகின்ற சிவனது திருவருள் கைவந்து, உமக்குத் துன்பத்தைத் தரஇருந்த அந்தத் தீய வினைகள் ஓட்டும் ஆதலால்.*

***குறிப்புரை :-** 'சிரமம்' என்பது, இடைக்குறைந்து, 'சிரம்' என நின்றது செய்வது, இனிச் செய்யக்கடவது; இது சாதியொருமை, உம்மை, சிறப்பு. ''அகற்றி வாய்த்திடும்'' என்பதை, 'வாய்த்து அகற்றிடும்' என மாற்றி முடித்து, இறுதியில் 'ஆதலால்' என்னும்*

**1305.** கண்டிடும் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை
கொண்டிடும் உள்ளே குறித்த வினைகளை
வென்றிடும் மண்டலம் தருவிக்கும்
நின்றிடும் சக்கரம் நினைக்கு மளவே 5

**1306.** நினைத்திடும் அச்சிரீம் அக்கிலீம் ஈறா
நினைத்திடும் சக்கரம் ஆதியும் அந்தமும்
நினைத்திடும் நெல்லொடு புல்லினை உள்ளே
நினைத்திடு அருச்சனை நேர்தரு வாளே. 6

---

*சொல்லெச்சம் வருவிக்க. முதல் அடி இன எதுகை.*

*இவை இரண்டு மந்திரங்களாலும் நவாக்கரி வித்தையும் ஸ்ரீவித்தையோடு ஒத்த சிறப்புடையதாய்ப் பயன்தருதல் பொது வகையிலும், சிறப்பு வகையிலும் கூறப்பட்டது.*

***1305. தெளிவுரை :-*** *நவாக்கரி சக்கரத்தை வெள்ளி, பொன், செம்பு என்னும் இவற்றுள் ஒன்றாலான தகட்டிலே அமையுங்கள்; பின்பு மனத்திலும் அதனை ஊன்றி நினையுங்கள். அங்ஙனம் நினைத்தலால் உள்ளத்தில் நிலைபெறுகின்ற அச்சக்கரம் உம்மை நோக்கி வருகின்ற வினைகளை வெல்லவும், உலகத்தை வெற்றிகொள்ளவும் நீவிர் நினைப்பீராயின் நினைத்த அளவிலே அப்பயன்களை உங்களுக்குத் தரும்.*

***குறிப்புரை :-*** *'சக்கரத்தை வெள்ளி முதலியவற்றில் கண்டிடும்; உள்ளே கொண்டிடும்; நின்றிடும் சக்கரம் நினைக்கும் அளவே வென்றிடும்; தருவிக்கும்' எனக் கூட்டி முடிக்க. இதில் இனவெதுகை வந்தது.*

*இதனால், நவாக்கரி சக்கரத்தை அமைத்தற்காம் பொருள்களும், அவற்றால் ஆம் பயனும் கூறப்பட்டன.*

***1306. தெளிவுரை :-*** *உன்னத்தக்க ஸ்ரீம், க்லீம் என்பவற்றை ஈறாக உடைய நவாக்கரங்களை அங்ஙனமே வைத்து உன்னப்படுகின்ற சக்கரத்தின் முதலெழுத்துமுதல் ஈற்றெழுத்து முடிய, இச்சக்கர சத்தி தன்னுள்ளே விரும்புகின்ற செந்நெல், அறுகம்புல் என்பவற்றை நீயும் மனத்திலே கொண்டு அவற்றைக்கொண்டு அருச்சனை செய். அப்பொழுது உனது*

**1307.** நேர்தரு மந்திர நாயகி யானவள்
யாதொரு வண்ணம் அறிந்திடு பொற்பூவை
கார்தரு வண்ணம் கருதின கைவரும்
நார்தரு வண்ணம் நடந்திடு நீயே. 7

**1308.** நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாம்
கடந்திடும் காலனும் கண்ணிய நாளும்
படர்ந்திடும் நாமமும் பாய்கதிர் போல
அடைந்திடும் வண்ணம் அடைந்திடு நீயே. 8

---

*அருச்சனையை அச்சத்தி ஏற்றுக்கொள்வாள்.*

*குறிப்புரை :- மூன்றாம் அடியில் "நினைத்திடும்" என்பதற்கு எழுவாய் வருவித்துக் கொள்க. "நேர்தருவாள்" என்பது, 'நேர்ந்து மேற்குறித்த பயன்களைத் தருவாள்' என்றவாறு.*

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |

**II. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1306) (அச்சிரீம் முதல்அக்கிலீம் ஈறாக)

*இதனால், சக்கர வழிபாட்டிற்கு ஆவதொரு சிறப்புமுறை கூறப்பட்டது.*

***1307. தெளிவுரை :-*** *வழிபடுவார்க்கு நேர்வந்து அருள் புரிகின்ற அந்தச் சக்கர சத்தி என்ன நிறத்தை உடையவள்? அழகிய தேவியாகிய அவள் மேகம்போலும் நிறத்தை உடையவள். இதனை அறிந்து அவள்பால் உனது அன்பு செல்லும் வண்ணம் நீ நட; அப்பொழுது நீ நினைத்தவையெல்லாம் உனக்குக் கைகூடும்.*

***குறிப்புரை :-*** *'திரிகை' என்பது கடைக்குறைந்து நின்றது. திரிகை - சக்கரம். "யாதொரு வண்ணம், கார்தரு வண்ணம்" என வினாவும், விடையும் தாமே கூறினார். 'யாதொரு வண்ணம்' என வினாவி அறிந்திடு என்று உரைப்பினும் ஆம். "கார்தரு" என்பதில் தரு உவம உருபு.*

*இதனால் இச்சக்கரசத்தியது தியான வண்ணம் கூறப்பட்டது.*

***1308. தெளிவுரை :-*** *இச்சக்கர சத்திபால் நீ அன்புசெய்து ஒழுகினால் நீ இவ்வுலகில் நினைக்கின்ற நன்மைகள் எல்லாம் நினைத்தபடியே முடியும்; கூற்றவன் உன்னைக் கொண்டுபோவதற்குக் குறித்துவைத்த நாளும் அங்ஙனம் கொண்டுபோகாமலே கடந்து விடும். உனது பெயர் உலகெங்கும் பரவும்; உனது உடம்பின் நிறம் பகலவனது விரிந்து வீசுகின்ற கதிர்கள் போல விளங்குவதாகும். இப்பயன்களை யெல்லாம் இவ்வகையில் நீ எய்துவாயாக.*

***குறிப்புரை :-*** *"கண்ணிய" என்பதனை 'எண்ணிய' எனவும்; ஓதுவர். 'வண்ணம் கதிர்போல அடைந்திடும்' எனக்கூட்டுக.*

*இதனால், இச்சக்கர வழிபாட்டின் இம்மைப் பயன் வகுத்துக் கூறப்பட்டது.*

***1309. தெளிவுரை :-*** *பொன், வெள்ளி, நவமணிகள் ஆகிய பொருள்கள் யாவும் குறைவின்றி உன்பால் வந்துசேரும்; நல்வினையா லன்றிச் சிவனது அருளால் ஆம் செல்வங்கள் கிடைக்கும். தேவர்கள் பதவியும் தாமாகவே வரும்; இவையெல்லாம் இங்ஙனம் ஆமாற்றை அறிந்து இச்சக்கர வழிபாட்டினை நீ செய்.*

***குறிப்புரை :-*** *"அருளும்" என்பது எச்சம். அருளால் வரும் செல்வம் வினையால் வரும் செல்வம் போல மயக்கம்*

**1309.** அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்
அடைந்திடும் ஆதி அருளும் திருவும்
அடைந்திடும் அண்டத் தமரர்கள் வாழ்வும்
அடைந்திடும் வண்ணம் அறிந்திடு நீயே. **9**

**1310.** அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்
தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன்
பரிந்திடு வானவன் பாய்புனல் சூடி
முரிந்திடு வாளை முயன்றிடும் நீரே. **10**

---

*செய்யாமையால் 'அச்செல்வமே இதனால் கிடைக்கும்' என்றார். "அறிந்திடு" என்றது. தன் காரியம் தோன்ற நின்றது.*

*இதனால், இவ்வழிபாட்டின் இம்மை மறுமைப் பயன் இரண்டும் ஒருங்கு கூறப்பட்டன.*

*1310. தெளிவுரை :- மெய்யறிவுடையோர் உண்மை அமரர்களாதல் பொருட்டு அறிந்து வழிபடுகின்ற தேவதேவனும், வானத்தைப் பிளந்துகொண்டு கீழே பாய்ந்த வலிய ஆகாய கங்கையைச் சடையில் சூடிக்கொண்டவனும் ஆகிய சிவபிரான் பணிகின்ற சத்தியை நீவிர் வழிபட்டு மேற்கூறிய பயன்களைப் பெறுங்கள்.*

*குறிப்புரை :- அமரர் - இறவாதவர், இப்பெயர் மார்க்கண்டேயர் போலும் சிவனடியார்கட்கே உண்மையில் பொருந்தும் ஆதலின், சிவபெருமானை, ''அறிந்திடுவார்கள் அமரர்களாகத் தெரிந்திடு தேவன்" என்றார். வானோர் - வானுலகில் உள்ளவர். 'வானோராகிய தேவர்கள்' என்க. 'வானத்து வன்புனல்' என்றவாறு. சடையில் புல் நுனிமேல் துளியளவாக மலர் போலும்படி எளிதில் ஏற்றமை தோன்ற, "சூடி" என்றார். முரிதல் - வளைதல்; இங்கு, பணிதலைக் குறித்தது. நாயக நாயகி பாவம் பற்ற இன்பச்சுவை தோன்றச் சிவன் உமைதன் ஊடலைத் தீர்க்க அவளை அடி பணிவதாகப் புனைந்துரை கூறும் இலக்கிய மரபினை இங்குச் சத்திதன் பெருமை புலப்படுதற்கு எடுத்தாண்டார். "முரிந்திடுவானை" என்பது பாடம் ஆகாமை அறிக.*

**1311.** நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்
பாரணி யும்இரீம் உன்சிரீம்; ஈறாம்
தாரணி யும்புகழ்ந் தையல்நல் லாளைக்
காரணி யும்பொழில் கண்டுகொள் வீரே. **11**

---

*இதனால், சத்திதன் பெருமை கூறும் முகத்தால், மேற்கூறிய பயன்கள் உளவாதல் வலியுறுத்தப்பட்டது.*

***1311. தெளிவுரை :-*** *நீங்கள் வழிபடுகின்ற நவாக்கரி சக்கரத்தின் வகை ஒன்பதில் "ஹ்றீம்" என்பது முதலாகவும், 'ஸ்ரீம்' என்பது இறுதி யாகவும் அமையும் வகை சிறந்ததாகும்.*

***குறிப்புரை :-*** *இதனைப் பின்னர்க் காட்டப்படும் சக்கரத்தில் கண்டு கொள்க. "சக்கரம்" என்பதில் ஏழுனுருபு விரிக்க, வண்ணங்கள் - எழுத்துக்கள். பார் - நிலம், என்றது சக்கரம் அமைந்த தகட்டினை. அணிதல் - அழகு செய்தல். 'இவ்வகைச் சக்கரம் மிக அழகாக*

| ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்றீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |

**III. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1311) (ஹ்றீம் முதல் ஸ்ரீம் ஈறாக)

**1312.** கண்டுகொள் ளும்தனி நாயகி தன்னையும்
மொண்டுகொள் ளும்முக வசியம தாயிடும்
பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்
நின்றுகொ ளும்நிலை பேறுடை யாளையே. 12

**1313.** பேறுடை யாள்தன் பெருமையை எண்ணிடில்
நாடுடை யார்களும் நம்வச மாகுவர்
மாறுடை யார்களும் வாழ்வது தான்இலை
கூறுடை யாளையும் கூறுமின் நீரே. 13

---

*அலங்கரிப்படும்' என்பது இதனால் விளங்கும். உம்மை, முற்றுப் பொருட்டாய் நிலமுழுதும் எனப்பொருள் தந்தது. 'பொழிலின்' என ஒப்புப் பொருளில் வந்த ஐந்தன் உருபு விரிக்க. பொழில் போலுதல், தண்ணிய திருவருளைத் தந்து இன்புறுவித்தல்.*

*இதனால், இச்சக்கர வகைகளுள் ஒன்று சிறந்ததாதல் உணர்த்தப்பட்டது.*

*1312.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய வகைச் சக்கரத்தின் வழி ஒப்பற்ற அச்சத்தியைக் காணுங்கள். கண்டால், முகந்து கொள்ளலாம் போலும் முக வசீகரம் உங்கட்கு உண்டாகலாம். அநாதி பரஞ்சுடராகிய சிவபெருமானும் நீவிர் காணநின்று, அழிவற்ற அவளைத் தன்பால் எடுத்து வைத்துக் கொள்வான்.*

***குறிப்புரை :-*** *பண்டு கொள்ளுதல் - அநாதியாம் தன்மையைக் கொண்டிருத்தல். பரமாய பரஞ்சுடர் - மேலானவற்றிற்கெல்லாம் மேலான சுடர் ஈற்றடி இன எதுகை.*

*இதனால், மேற்கூறிய வகையின் வழிபாட்டினால் சிவபரஞ்சுடரது காட்சியும் எய்துதல் கூறப்பட்டது.*

*1313.* ***தெளிவுரை :-*** *நீங்கள் பெறத் தக்க பேறுகட்கெல்லாம் உரியவளாகிய சத்தியின் பெருமையை அறிந்து வழிபட்டால் மன்னரும் நும் வசப்படுவர்; பகைவர்கள் சீவித்திரார். ஆதலின், சிவனது ஒரு கூற்றைத் தனதாக உடைய அவளை நீவிர் துதியுங்கள். இரண்டாம் அடி உயிரெதுகை.*

***குறிப்புரை :-*** *எண்ணுதல் - அய்ந்தளித்தல். இது தன் காரியம் தோன்ற நின்றது.*

1314. கூறுமின் எட்டுத் திசைக்கும் தலைவியை
ஆறுமின் அண்டத் தமரர்கள் வாழ்வெனல்
மாறுமின் வையம் வரும்வழி தன்னையும்
தேறுமின் நாயகி சேவடி சேர்ந்தே. 14

1315. சேவடி சேர்ந்து செறிய இருந்தவர்
நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்
பூவடி இட்டுப் பொலிய இருந்தவர்
மாவடி காணும் வகையறி வாரே. 15

---

*இதனால், அனைத்துப் பேற்றையும் சத்தி தரவல்லளாதல் தெரிவிக்கப்பட்டது.*

***1314. தெளிவுரை :-*** *சத்தி எல்லா உலகங்களையும் உடையளாதலை அறிந்து துதியுங்கள்; அதனால், உலகின் சில பகுதிகட்குத் தலைவராயுள்ள தேவர்களது வாழ்வுவேண்டும் என்னும் ஆசையை நீக்குங்கள்; இன்னும், மீள மீள இவ்வுலகில் பிறக்கும் நிலையையும் நீங்குங்கள். முடிவாக அச்சத்தியது திருவடியைச் சேர்ந்து மயக்கமெல்லாம் அற்றுத் தெளிவு பெறுங்கள்.*

***குறிப்புரை :-*** *'அமரர்களது அண்டத்து வாழ்வு' எனக் கூட்டுக. ஆறுதல் - தணிதல்; நீங்குதல். வாழ்வு எனல் - வாழ்வு வேண்டும் என விரும்புதல்.*

*இதனால், இவ் வழிபாட்டினை முத்தியை விரும்பிச் செய்தல் சிறந்ததாதல் கூறப்பட்டது.*

***1315. தெளிவுரை :-*** *சத்தி தன் திருவடியில் சேர்ந்து நீங்காது இருக்க எண்ணினவர் அவளது மந்திரத்தை நாவிற்குள்ளே சொல்லித் துதிப்பர். புறத்திலே மலர்களை அவளது திருவடியிலே தூவி விளக்கம் பெற்றிருப்பவர். அவளது பெருமை பொருந்திய திருவடிகளைத் தரிசிக்கும் வழியை அறிந்தவராவர்.*

***குறிப்புரை :-*** *'சேர' என்பது பாடம் அன்று.*

***<u>இதனால், அருச்சனையிலும் செபம் சிறந்ததாதல் கூறப்பட்டது. சக்கர வழிபாட்டில் செபமே முதன்மையாதல் வெளிப்படை</u>.***

***1316. தெளிவுரை :-*** *நவாக்கரி சக்கர வகைகளுள் 'ஐம்' என்பதை முதலாகப் பொருந்திச் செல்லுகின்ற சக்கரம் அந்த 'ஐம்' என்பது*

**1316.** ஐம்முத லாக அமர்ந்தெழு சக்கரம்
ஐம்முத லாக அமர்ந்திரீம் ஈறாகும்
ஐம்முத லாகி யவற்றுடை யாளை
ஐம்முத லாகி வழுத்திடும் நீயே. **16**

---

*முதலாகப் பொருந்திப் பின்பு, 'ஹ்ரீம்' என்பதை ஈற்றில் உடையதாகும். அந்த 'ஐம்' என்பதை முதலாகக் கொண்டு அனைத்தெழுத்துக்களையும் தன்னுடையனவாக உடைய அந்தச் சக்கர சத்தியையே உன்னுடைய அறியாமையைப் போக்கும் தலைவியாக அறிந்து நீ துதிசெய்.*

*குறிப்புரை :- 'துதித்தல், உனது அறியாமை நீங்கி மெய்யறிவு பிறக்கும்' என்பது கருத்து. மை - இருள், மலம் - 'அதற்கு முதல்வி' என்றது, 'அதனை ஏற்றவழியால் கழுவுபவள்' என்றவாறு. மேலை*

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |

**IV. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1316) (ஐம் முதல் ஹ்ரீம் ஈறாக)

1317. வழுத்திடும் நாவுக் சரசிவள் தன்னைப்
பகுத்திடும் வேதம்மெய் யாகமம் எல்லாம்
தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லாளை
முகத்துளும் முன்னெழக் கண்டுகொளீரே. 17

1318. கண்டஇச் சக்கரம் நாவில் எழுதிடில்
கொண்டஇம் மந்திரம் கூத்தன் குறியதாம்
மன்றினுள் வித்தையும் மானுடர் கையதா
வென்றிடும் வையகம் மெல்லியல் மேவியே. 18

---

*மந்திரத்தில் "வகை" என்பதில் உள்ள ஐகாரமே இதில் ஆதியாகக் கொள்ளப்பட்டது. 'அவர்க்குடையாளை' என்பது பாடம் ஆகாமை அறிக.*

*இதனால், 'இச்சக்கர வழிபாடு அஞ்ஞானத்தைப் போக்கும்' என்பது உணர்த்தி, மற்றொரு வகையின் சிறப்பு வகுத்துக் கூறப்பட்டது.*

***1317. தெளிவுரை :-*** *மேற்கூறிய சக்கர சத்தி சிவாகமங்கள் கூறும் வாகீசுவரியாம், 'வேதம்' என்றும், 'ஆகமம்' என்றும் இவ்வாறு பலவாகப் பகுத்துச் சொல்லப்படும் நூல்கள் அனைத்தையும் தனது ஒரு நாவினாலே எளிதிற் சொல்ல வல்லவளாகிய இச்சத்தியை நீங்கள் உங்கள் வாக்கிலும் விரையத் தோன்றும் வண்ணம் வணங்குங்கள்.*

***குறிப்புரை :-*** *'வணங்கினால் கலா ஞானமும் நிரம்பவரும்' என்பது கருத்து. 'உங்கள் முகத்துளும்' என்பது ஆற்றலால் வந்தது. வாயை 'முகம்' என்றல் வடமொழி வழக்கு. "முன்" என்றது 'விரைய' என்றவாறு. முதலடி உயிரெதுகை. இவ்விரு மந்திரங்களிலும் 'வகுத்திடும்' என்றேயும் பாடம் ஓதுப.*

*இதனால், மேற்கூறிய மலநீக்கத்தோடு கலாஞான நிறைவும் மேலைச் சக்கர வழிபாட்டால் உளதாதல் கூறப்பட்டது.*

***1318. தெளிவுரை :-*** *மேற்சொல்லிய வகையில் அறியப்பட்ட இச்சக்கரத்தினை, நாவில் பதித்துக்கொண்டால், இதற்குக் கொள்ளப்பட்ட இந்த எழுத்துக்களே எழுத்துக்களாய் விடும். அதனால், திருவம்பலத் தியானமாகிய தகர வித்தையும் மக்களுக்குக் கைவர, ஞானசத்தி பதிதலால், இவ்வழிபாட்டைச் செய்பவனும் உலக மாயையை வெல்லுபவனாவான்.*

**1319.** மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாள்தனைச்
சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்
பல்லிய லாகப் பரந்தெழு நாள்பல
நல்லிய லாக நடந்திடுந் தானே. **19**

**1320.** நடந்திடும் நாவினுள் நன்மைகள் எல்லாம்
தொடர்ந்திடும் சொல்லொடு சொற்பொருள்கள் தானும்
கடந்திடும் கல்விக் கரசிவளாகப்
படர்ந்திடும் பாரில் பகையில்லை தானே. **20**

---

*குறிப்புரை :-* "மானுடர்" என்பது வேறு முடிபு கொண்டு பொதுமையுணர்த்தி நிற்றலின், "வென்றிடும்" என்பது பால்வழு ஆகாதாயிற்று. வெல்லுதற்கு 'இவன்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. சத்தி சிவத்தின் வேறன்மை, 'கொண்ட இம்மந்திரம் கூத்தன் எழுத்தாம்' என்ற இதனானும் நன்கறியப்படும். இஃது அறியாதார் சத்தியை வேறு நிற்பவளாக மயங்கி, ஏற்றங் கூறி மகிழ்வர். இதனுள் இன எதுகை வந்தது.

இதனால், இச்சக்கரவித்தையே தகர வித்தையின் பயனையும் தருவதாதல் கூறப்பட்டது.

*1319.* **தெளிவுரை :-** மெய்ப்பொருளாம் இயல்பினளாகிய இச்சத்தியை இங்குக் கூறிய இம்மந்திரத்தின் வழியே பற்றி அவ்வழிபாட்டில் நில்லுங்கள். பல்வேறு வகையினவாய் மிக்குச் செல்லுகின்ற உங்கள் நாள்கள் பலவும் நல்ல நாள்களேயாய்ச் செல்லும்.

*குறிப்புரை :-* முதலடியை, 'மெய்ப்பொருளாகிய மெல்லியலாள்தனை' என மாற்றிக்கொள்க. பல்லியல்பு, இருவினைகளுக்கு ஈடாகப் பல்வேறான எண்ணமும், செயலும், நுகர்ச்சியும், நல்லியல்பு, எல்லாம் திருவருட் செயலாகத் தோன்றுதல் அங்ஙனம் தோன்றின் வினைப்பயன்கள் வாதியாமையோடு, தீமை தானும் நன்மையாச் சிறக்கும். (திருமுறை. 6)

இதனால், இவ்வழிபாட்டினால் வினைப் பயன்களால் தாக்குண்ணாமை கிடைத்தல் கூறப்பட்டது.

*1320.* **தெளிவுரை :-** இச்சக்கர சத்தி வாகீசுவரி யாதலின், இவளது அருள் கிடைக்கப் பெற்றவனுக்கு அவன் வேண்டிய

1321. பகையில்லை கௌம்முதல் ஐம் அது ஈறாம்
நகையில்லை சக்கரம் நன்றறி வார்க்கு
மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம்
வகையில்லை யாக வணங்கிடுந் தானே. 21

1322. வணங்கிடும் தத்துவ நாயகி தன்னை
நலங்கிடும் நல்லுயி ரானவை யெல்லாம்
கலங்கிடும் காம வெகுளி மயக்கம்
துளங்கிடும் சொல்லிய சூழ்வினை தானே. 22

---

*நன்மைகள் யாவும் அவன் சொன்ன அளவிலே அங்ஙனமே முடியும். வழக்கும் செய்யுளு மாய்த் தொடர்கின்ற சொற்கள் அனைத்தையும், அவற்றின் பொருளோடு அவன் முற்ற உணர்ந்தவனாவான். விரிந்து கிடக்கின்ற இவ்வுலகில் ஓரிடத்தும் அவனுக்குப் பகையாவார் இல்லை. (நண்பரும் உறவினருமே உளராவர் என்பதாம்).*

***குறிப்புரை :–*** *"கல்விக் கரசிவ ளாக" என்பதனை முதலில் கொண்டு உரைக்க. 'அரசி' என்பதன் இகரம் தொகுத்தலாயிற்று. "படர்ந்திடும்பர்" என்றது. 'பிரபஞ்சம்' என்பதன் பொருள்பற்றிக் கூறியவாறு. கூறவே ஓரிடத்தும் பகையில்லாமை கூறியதாயிற்று. கல்வியைக் கரை கண்டவர்க்கு, 'யாதானும் நாடாம் ஊராம்' (குறள். 397) என்பது ஈற்றடியாற் கூறியவாறு.*

*இதனால், வாகீசுவரி வழிபாட்டினால், மேன்மைச் சொல்லும், நிறைபுலமையும் உளவாதல் கூறப்பட்டது. மேன்மைச் சொல்லை, 'நாவசைத்தால் நாடசையும்' என்று குறிப்பர்.*

***1321. தெளிவுரை :–*** *இனி, 'கௌம்' என்பதை முதலாகவும் 'ஐம்' என்பதை இறுதியாகவும் கொண்ட சக்கரத்தின் பெருமையை நன்கு அறிந்து வழிபடுகின்றவர்கட்கு இவ்வுலகில் வெளிப்படையாய் வருகின்ற பகைவரும், மறைவாக நின்று புறங்கூறுபவரும் இலராவர். (நண்பரும், உறவினருமாய் நெஞ்சாரப் புகழ்கின்றவரே உளராவர் என்றபடி). மேலும் பல்வேறு வகையினவாய உயிர்களும் இவனை எதிர்க்க வழியில்லாமல் பணிந்து நடக்கும். யான் சொல்லிய இவை மிகையாதல் இல்லை; உண்மையேயாம்.*

***குறிப்புரை :–*** *'ஐம் அது ஈறாம் சக்கரம் நன்றறிவார்க்கு'*

| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |

**V. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1321) (கௌம் முதல் ஐம் ஈறாக)

*என்பதனை முதலிற் கொள்க. 'சொல்லிய மிகை இல்லை' என மாற்றி, இறுதிக்கண் வைத்து உரைக்க. "உரு" என்றது, அவற்றோடு கூடிய உயிரை. அரிமா, புலி முதலிய கொடு விலங்குகள் பாம்பு முதலிய நச்சுயிர்கள் முதலிய பலவும் அடங்குதற்கு, "பல் உரு" என்றார். இவை 'பணிந்து நடக்கும்' என்பதனால், தம் கட்டளைப்படியே நடத்தல் பெறப்பட்டது.*

*இதனால், மற்றொரு வகைச் சக்கர வழிபாட்டின் சிறப்பு வகுத்துக் கூறப்பட்டது.*

***1322. தெளிவுரை :-** மும்மலங்களால் வருந்துகின்ற பல உயிர்களுள் பக்குவம் எய்தப் பெற்ற உயிர்கள் சத்திதன் பெருமையை உணர்ந்து அவளை வணங்கும். அவ்வணக்கத்தின் பயனாக அவைகளைப் பற்றியுள்ள, 'காமம், வெகுளி, மயக்கம்' என்னும் முக்குற்றங்களும் நீங்கும். அவை நீங்கவே 'அவற்றால் உண்டாகும்' என நூல்கள் சொல்லிய வினைகளும் இல்லையாம்.*

**1323.** தானே கழறித் தணியவும் வல்லனாய்த்
தானே நினைத்தவை சொல்லவும் வல்லனாய்த்
தானே தனிநடங் கண்டவள் தன்னையும்
தானே வணங்கித் தலைவனு மாமே. **23**

**1324.** ஆமே அனைத்துயிர் ஆகிய அம்மையும்
தாமேசகலமும் ஈன்றஅத் தையலும்
ஆமே அவளடி போற்றி வணங்கிடில்
போமே வினைகளும் புண்ணிய னாகுமே. **24**

---

***குறிப்புரை :–*** *"நலங்கிடும்" என்றது உயிர்களின் பொது வியல்பு உணர்த்தியது. 'காமம் முதலியவை கலங்கிடும்' எனவும், 'வினை துளங்கிடும்' எனவும் முன்னே கூட்டி முடிக்க. முதலடி உயிரெதுகை; ஈற்றடி இனவெதுகை. 'துலங்கிடும்' என்பது பாடமாயின், அதனை நேரே காமம் முதலியவற்றிற்கு முடிபாக்கி, 'வினை கலங்கிடும்' எனக் கூட்டி முடிக்க. நலங்கிடுதல் - அடங்குதல்.*

*இதனால், 'சத்தியை இச்சக்கர வழியாக வழிபடுதல் பக்குவர்க்கே உண்டாம்' என்பதும் அதனால் அவர்க்கு உளவாம் பயனும் தொகுத்துக் கூறப்பட்டன.*

***1323. தெளிவுரை :–*** *பக்குவ முதிர்ச்சியால், சத்தியை வழிபடுபவன், தனது தவற்றைத் தானே திருத்தியமையவும், தான் ஆய்ந்துணர்ந்த வற்றைப் பிறருக்குச் செவியறிவுறுக்கவும் வல்லனாய், இறைவனது ஒப்பற்ற நடனத்தை எஞ்ஞான்றும் காண்பவளாகிய சத்தியையும் தானே விரும்பி வழிபட்டுச் சமயத் தலைவனாயும் விளங்குவான்.*

***குறிப்புரை :–*** *கழறுதல் - இடித்துத் திருத்தல். தணிதல் - அடங்குதல் நினைத்தல், இங்கு அதன் காரியம் தோன்ற நின்றது. எஞ்ஞான்றுமாவது படைப்பிற்கு முன்னும், காப்புக் காலத்தும், அழிப்பிற்குப் பின்னும் எனவும், இடையறாமை எனவும் வரும் இரண்டுமாம். அவ்வாறு காண்பவள் சத்தியன்றிப் பிறர் இன்மையின் அவளை, 'தனி நடம் தானே கண்டவள்' என்றார். எனவே, அவள், நடிப்பவனின் வேறல்லளாதல் உணரப்படும். படவே, அவளை வணங்குதலால் இப்பயன்கள் உளவாதல் தெளிவு. தானே*

**1325.** புண்ணிய னாகிப் பொருந்தி உலகெங்கும்
கண்ணிய னாகிக் கலந்தங் கிருந்திடும்
தண்ணிய னாகித் தரணி முழுதுக்கும்
அண்ணிய னாகி அமர்ந்திருந் தானே. 25

**1326.** தானது கம்இரீம் கௌமது ஈறாம்
நானது சக்கரம் நன்றறி வார்க்கெலாம்
கானது கன்னி கலந்த பராசத்திக்
கேனது! வையம் கிளரொளி யானதே. 26

---

*வணங்குதல், பிறர் வலிசெய்ய வேண்டாது, தானே இயல்பால் வணங்குதல்.*

***1324. தெளிவுரை :-*** *தானே எல்லாமாய் நிற்கின்ற சத்தி, அனைத்துயிராகியும் நிற்கின்றாள். எல்லாப் பொருள்களும் தம் தன்மையில் தாமேயாயும், சத்தியின் வியாபகத்தால் தம்மை ஈன்ற அவளாகியும் நிற்கும். ஆகையால் பக்குவன் அவளை வணங்கிய வழியே வினை நீக்கமும், தவப் பேறும் ஆகிய பயன்களை எய்துவான்.*

***குறிப்புரை :-*** *'அம்மையும்' என்னும் உம்மையைப் பிரித்து ''அனைத்துயிர்'' என்பதனோடு கூட்டி, 'ஆகிய அம்மை அனைத்துயிரும் ஆம்' எனவும், 'சகலமும் தாமே ஆம், ஈன்ற அத் தையலும் ஆம்' எனவும், 'ஆதலின் அவள் அடிபோற்றி வணங்கிடினே வினைகளும் போம்; புண்ணியன் ஆகும்' எனவும் கூட்டி உரைக்க. புண்ணியம், இங்கு தவம்.*

***1325. தெளிவுரை :-*** *சத்தியைப் பக்குவ முதிர்ச்சியால் வழிபடுபவன் உலக முழுவதும், தவமிகுதியால் வரும் பெருமையுடைய வனாகவும், அருளுடைமையால் இனியவனாகவும், அனைவர்க்கும் உரியவனாய் விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *'பெருமை, தவத்தினாலாயது' என்பதும், 'இனிமை அருளால் ஆயது' என்பதும் தோன்றுதற்கு வேறு வேறு தொடராக வைத்து ஓதினார். அமர்தல் - அமைதல். அமர்ந்திருத்தல், ஒரு சொல் நீர்மையது.*

*இவை மூன்று மந்திரங்களாலும் அவர்க்கு வரும் பயன்களே வகுத்துக் கூறப்பட்டன.*

**1327.** ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரின்
களிக்கும் இச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கும் மழையுடன் செல்வம் உண் டாக்கும்
அளிக்கும் இவளை அறிந்துகொள் வார்க்கே. 27

**1328.** அறிந்திடுஞ் சக்கரம் அற்சனை யோடே
எறிந்திடும் வையத் திடரவை காணின்
மறிந்திடும் மன்னனும் வந்தனை செய்வான்
பொறிந்திடும் சிந்தை புகையில்லை தானே. 28

---

***1326. தெளிவுரை :-*** *தானே சக்கரமாகின்ற முதலெழுத்து 'க்ரீம்' என்பது, ஈற்றெழுத்து 'கௌம்' என்பதுமாக அமைகின்ற அந்தச் சக்கரமே ஞானத்தை விரும்புவார்க்கு நான் சொல்வது. அது சத்திக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற நல்ல சோலையாய் விளங்கும். ஆயினும், அதில் வேறறக் கலந்து நிற்கின்ற அவளுக்கு அஃது எதன்பொருட்டு*

| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |

**VI. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1326) (க்ரீம் முதல் கௌம் ஈறாக)

**1329.** **புகையில்லை சொல்லிய பொன்னொளி உண்டாம்**
**குகையில்லை கொல்வ திலாமையி னாலே**
**வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாம்**
**சிகையில்லைச் சக்கரஞ் சேர்ந்தவர்க் காமே.** **29**

**1330.** **சேர்ந்தவர் என்றும் திசையொளி யானவர்**
**காய்ந்தெழும் மேல்வினை காணகி லாதவர்**
**பாய்ந்தெழும் உள்ளொளி பாரிற் பரந்தது**
**மாய்ந்தது காரிருள் மாறொளி தானே.** **30**

---

*வேண்டும்! உலகம் ஒளி பெற்று விளங்குவதே அதன்பயன்.*

*குறிப்புரை :- பல அக்கரங்கள் உள்ள சக்கரங்கள் முதற்கண் உள்ள எழுத்தின் சக்கரமாகவே கூறப்படுதலின், முதலெழுத்தை, 'தான் அதுவாவது' என்றார். 'க்ரீம்' என்பதை, 'கம்' எனவும், 'இரீம்' எனவும் செய்யுள் நோக்கிப் பிரிந்து ஓதினார். 'நான் சொல்வது' என ஒருசொல் வருவிக்க. 'கன்னிக்கு' என்னும் நான்கனுருபு தொகுத்தலாயிற்று. 'அது கன்னிக்குக் கான்' என்க. ஆதலுக்கு 'அதனால்' என்னும் வினை முதல் வருவிக்க. ஒளியாவதும் ஞானமே. "ஆனதே" என்பதன் பின் 'பயன்' என்னும் பயனிலை எஞ்சி நின்றது.*

*இதனால், நவாக்கரி சக்கரத்தின் வகை ஒன்றனது சிறப்புக் கூறப்பட்டது.*

*1327. **தெளிவுரை :-** இச்சக்கரத்தில் நின்று ஞானத்தை வழங்குகின்ற சத்தி ஒருவனது உள்ளத்தில் நிலைபெறுவாளாயின், அவனது உள்ளம் அவனையும் அறியாமல் ஒரு களிப்பினையுடைய தாகும். தன் அடியவரைப் பல்லாற்றானும் நன்னிலையில் வைத்துக் காக்கின்ற இச்சத்தியது பெருமையை அறிந்து இவளை அடைகின்றவர்கட்கு இது பற்றிய ஆராய்ச்சியில் இதனைக் காரணங் காட்டித் தெளிவிப்பதாகிய அருள்மழையுடன், பொருட் செல்வத்தையும் இவள் உண்டாக்குவாள்.*

*குறிப்புரை :- ஒளிக்கும் - ஒளியைச் செய்யும். களித்தலுக்கு, 'அது' என்னும் எழுவாய் வருவிக்க. ஈற்றடியை இதன் பின் கூட்டுக. இச்சிந்தை - இது பற்றிய சிந்தனை. தெளிக்கும் மழை, கருணை மழை.*

***1328. தெளிவுரை :-*** *உண்மையை நோக்குமிடத்து, இங்கு அறியப்படுகின்ற இச்சக்கர வழிபாட்டினால் உலகத்துன்பங்கள் அழிக்கப்படும். பிணங்குகின்ற அரசனும் இணங்கி வணங்குதல் செய்வான். தீக்குணத்தை உடைய உள்ளம் அஃது இன்றித் திருந்தும்.*

***குறிப்புரை :-*** *"எறிந்திடும்" என்பது செயப்பாட்டு வினைப் பொருட்டாய் நின்றது. "காணின்" என்பதை முதலிற் கூட்டி உரைக்க. பொறிதல், பொறியோடு கூடியதாய் இருத்தல் பொறி, தீப்பொறி, 'புகையில்லையாம்' அஃதாவது, 'தணிந்து குளிரும்' என்க. 'அருச்சனை' என்பது பாடம் ஆகாமை அறிக.*

***1329. தெளிவுரை :-*** *மேற்சொல்லியவாறு தீக்குணம் அகலும்: முன்பு யோக நிலையிற் சொல்லிய பொன்போலும் உடல் ஒளியும் உண்டாகும் பகை யாதும் இல்லாமையால், அரண்தேட வேண்டுவதில்லை. இப்பயன்களைப்பெற உலகருக்கு வகை இல்லை. தனக்கு மேல் ஒன்றில்லாத இச்சக்கர வழிபாட்டினை மேற்கொண்டவர்க்கே இவை கிடைப்பனவாம்.*

***குறிப்புரை :-*** *தொடர்பு தோன்ற, ''புகையில்லை'' என அனுவதித்தார். "குகை" என்றது, 'கரந்துறையும் இடம்' என்றவாறு. அஃறிணையும் அடங்க, "கொல்வது" எனப் பொருளாக வைத்துப் பொதுப்பட ஓதினார். கொல்வது, சாதியொருமை. இதனைத் தொழிற் பெயராக வைத்து, 'பாவம் இன்மையால் நரகம் இல்லையாம்' எனவும் உரைப்ப ''சிகை'' என்று, மேல் உள்ளதனைக் குறித்ததாம். சிகையில்லையாகிய சக்கரம் என்க. 'சேர்ந்தவர்தாமே' என்பது பாடமன்று.*

***1330. தெளிவுரை :-*** *இச்சக்கர வழிபாட்டினை மேற் கொண்டவரிடத்தில் மிக விரைந்து எழுகின்ற உள்ளொளியாகிய ஞானம் உலகில் பலராலும் அறியப்படும். ஆதலின், ஆணவத்தால் விளையும் அறியாமையும், திரிபுணர்வும் கெடும். அதனால் இவர்கள் எட்டுத் திசைக்கும் விளக்குப்போல்பலரும், தம்மை வந்து வருத்துகின்ற ஆகாமிய வினை தோன்றப்பெறாதவரும் ஆவர்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. 'திசைக்கு' என நான்காவது விரிக்க. மாறுஒளி - திரிந்த உணர்வு. "மாய்ந்தது" என்பதை இதனோடு கூட்டுக. முதலடி இனவெதுகை.*

**1331.** ஒளிவது ஹௌம்முன் கிரீமது ஈறாம்
களியது சக்கரம் கண்டறி வார்க்குத்
தெளியது ஞானமும் சிந்தையும் தேறப்
பளியது பஞ்சாக் கரமது வாமே. **31**

**1332.** ஆமே சதாசிவ நாயகி யானவள்
ஆமே அதோமுகத் துள்அறி வானவள்
ஆமே சுவைஒளி ஊறோசை கண்டவள்
ஆமே அனைத்துயிர் தன்னுள்ளும் ஆமே. **32**

---

*இவை நான்கு மந்திரத்தாலும் இச்சக்கர வழிபாட்டின் பயனே கூறப்பட்டது.*

*1331. தெளிவுரை :- ஒளியை உடையதாகிய 'ஹௌம்' என்னும் பீசத்தை முதலிலும், 'க்ரீம்' என்னும் பீசத்தை இறுதியிலும் கொண்ட,*

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |

**VII. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1331) (ஹௌம் முதல் கிரீமது ஈறாக)

**1333.** தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்
டென்னுளு மாகி இடம்பெற நின்றவள்
மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளும்
கண்ணுளும் மெய்யுளும் காணலு மாமே. **33**

---

*களிப்பைத் தருவதாகிய அச்சக்கரத்தின் உண்மையை நன்குணர்ந்தவர் கட்குத் தெளிவாகிய ஞானமும் தோன்ற, அதனை உள்ளமும் பற்ற, அதனால், அச்சக்கரம் எல்லா ஞானத்திற்கும் இடமாயுள்ள திருவைந் தெழுத்துமாய் விடும்.*

***குறிப்புரை :-*** *கண்டறிதல், ஒருபொருட்பன்மொழி. தெளி, முதனிலைத் தொழிற்பெயர். "தேற" என்பது "ஞானம்" என்பதனோடு இயையுங்கால் 'உண்டாக' எனப் பொதுமையில் நிற்பதாம். 'பள்ளி' என்பது இடைக் குறைந்து நின்றது. பள்ளி - இடம். 'பள்ளியாகிய பஞ்சாக்கரம்' என்க. 'பஞ்சாக்கரமதுவும்' என்னும் சிறப்பு உம்மை தொகுத்தலாயிற்று.*

*இதனால், நவாக்கரி சக்கரத்தின் மற்றொரு வகையினது சிறப்புக் கூறப்பட்டது.*

***1332. தெளிவுரை :-*** *'சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை' என்னும் மூன்று மாயைகளினின்றும் மூவகைக் கருவிகளைத் தருபவளாகிய சத்தி, அக்கருவிகளைப் பெறும் உயிர்களாய் நிற்றலேயன்றி, இச் சக்கரத்துள்ளும் இதுவேயாய் நிற்பாள்.*

***குறிப்புரை :-*** *"ஆமே" ஐந்தில் முதல் மூன்றும், இறுதி ஒன்றும் இச்சக்கரத்துள் நிற்றலையும், ஏனையது அது அதுவாதலையும் குறித்தன. சதாசிவ நாயகி - சதாசிவனுக்கு நாயகி; மனோன்மனி அறிவானவள், வித்தியேசுரனுக்கு நாயகியானவள், வித்தியேசுவரி. சுவையொளி ஊறோசை கண்டவள், சீகண்டனுக்கு நாயகியாகிய உமை. அதோமுகம் - கீழிடம். இஃது இடவாகுபெயராய் அசுத்த மாயையை உணர்த்திற்று. இதனைக் கூறவே முன்னர்ச் சுத்த மாயையும், பின்னர்ப் பிரகிருதி மாயையும் கொள்ளக் கிடந்தன. ''சுவையொளி ஊறோசை'', ஆன்ம தத்துவம் அனைத்திற்கும் உபலக்கணம். பிரகிருதி மாயையில் ஆன்ம தத்துவத்தைக் கண்டமை கூறவே, அசுத்த மாயையில் வித்தியா தத்துவத்தைக் கண்டமையும்,*

**1334.** காணலு மாகும் கலந்துயிர் செய்வன
காணலு மாகும் கருத்துள் இருந்திடில்
காணலு மாகும் கலந்து வழிசெயல்
காணலு மாகும் கருத்துற நில்லே. **34**

**1335.** நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்
கண்டிடும் உள்ளம் கலந்தெங்கும் தானாகக்
கொண்டிடும் வையம் குணம்பல தன்னையும்
விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. **35**

---

*சுத்த மாயையில் சிவ தத்துவத்தைக் கண்டமையும் பெறப்பட்டன. காணுதல் - தோற்றுவித்தல். ஈற்றடியில், ''தன்னுள்'' என்றது, சக்கரத்துள் என்றவாறு. "சட சித்துக்கள் அனைத்திற்கும் முதல்வியாய் நிற்கும் சத்தி இச்சக்கரத்தில் விளங்குவள்" என்றவாறு.*

*இதனால், 'இச்சக்கரத்தின் தெய்வம் இது' என்பது கூறப்பட்டது.*

*1333. தெளிவுரை :- இச்சக்கரத்தில் நின்றும், உலக முழுதையும் தன்னுடையதாகக் கொண்டு, என் உள்ளத்திலும் இருந்தும் எல்லாப் பொருளும் தன்னிடத்தில் அடங்க நிற்கின்ற சத்தி, பஞ்ச பூதங்களின் உள்ளும், என் கண்ணின் உள்ளும், உடம்பின் உள்ளும் காணக் கூடியவளாகின்றாள்.*

*குறிப்புரை :- கண்ணுட் காணப்படுதல் புறக்காட்சியாலும், உடம்புட் காணப்படுதல் அகக் காட்சியாலுமாம். ஆகவே 'உயிர்களின் அகத்தும், புறத்தும் காணப்படுகின்ற இவளை நீவிரும் இவ்வழிபாட்டினால் காண்பீராக' என்றதாயிற்று. பின்னிரண்டடிகள் இனவெதுகை.*

*இதனால் அத்தெய்வத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

*1334. தெளிவுரை :- சத்தியின் துணையாலே உயிர்கள் செயற்பட்டு வரும் முறைகளை உணரலாம். 'எப்பொழுது' எனின், அவள் உனது உள்ளத்தில் விளங்கும்பொழுது அப்பொழுதே அவள் உயிர்களுக்கு உய்யும் வழியைச்செய்து வருதலையும் உணரலாம். ஆதலின், இவ்வுணர்வுகளைப் பெற நீ உனது உள்ளம் அவளிடத்திற் பொருந்தும் வகையில் நிற்பாயாக.*

**1336.** மெய்ப்பொருள் ஔம்முதல் ஹௌமது ஈறாக்
கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரம்
தற்பொரு ளாகச் சமைந்தமு தேச்சரி
நற்பொரு ளாக நடுவிருந் தாளே. 36

**1337.** தாளதி னுள்ளே சமைந்தமு தேசுவரி
காலது கொண்டு கலந்துற வீசிடில்
நாளது நாளும் புதுமைகள் கண்டபின்
கேளது காயமும் கேடில்லை காணுமே. 37

---

*__குறிப்புரை :-__ இரண்டாம் அடி நான்காம் அடிகளில் "காணலுமாகும்" என்றவை அனுவாதம். "உயிர் செய்வன" என்றது வினைவழி ஒழுகுதலையும், ''வழிசெயல்'' என்று பக்குவம் வருவித்தலையுமாம். கலக்கப்படுதல், கருத்துள் இருத்தல் முதலியவற்றிற்கு வேண்டும் 'சத்தி' என்பது முன்னை மந்திரத்தினின்றும் வந்தியைந்தது.*

*இதனால், 'அச்சத்தியை ஒருதலையாகத் தியானிக்க' என்பது கூறப்பட்டது.*

*__1335. தெளிவுரை :-__ சத்தியது தியானத்தால் ஏழுலகங்களில் ஒன்றைச் சுட்டியறியும் ஏகதேச உணர்வு நீங்கப்பெற்று, அனைத்தையும் ஒன்றாகக் காண்கின்ற வியாபக உணர்வு வரப்பெற்ற உயிர் அவ்வுணர்வானே தனது வியாபகத்தையும் உணர்வதாகும். அதனால், முக்குண வயப்படுதலும், வினைத் தொடக்கும் ஒழியும். அஃது ஒழியவே, அவ்வுயிர் மெய்ப்பொருளைத் தலைப்படும்.*

*__குறிப்புரை :-__ 'உள்ளம் - உயிர், வையம் எங்கும் கலந்து தானாகக் கொண்டிடும்' எனக் கூட்டுக. கொள்ளுதல் - அகப்படுதல்; என்றது அகப்பட்டிருத்தலை உணர்தலை. முக்குண வயப்படுதலினின்றும் நீங்குதலாவது, பிராரத்துவத்தை நுகர்தலும், அதனால் ஆகாமியத்தைச் செய்யாமையுமாம். ''வல்வினை'' என்றது சஞ்சிதத்தை. 'மூவினைத் தொடக்கும் அறச் சீவன் முத்தனாம்' என்றபடி, முதலடி இனவெதுகை.*

*இதனால், அந்தத் தியானத்தால் பயன் கூறப்பட்டது.*

*__1336. தெளிவுரை :-__ சத்தி 'அமுதேசுவரி' என்னும் பெயருடன்,*

| ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | சௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |

**VIII. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1336) (ஔம் முதல் ஹௌமது ஈறாக)

*மெய்ப் பொருளை உணர்த்தும் 'ஔம்' என்னும் பீசம் முதலாகவும், 'ஹௌம்' என்னும் பீசத்தை ஈறாகவும் பொருந்திக் கைப்பொருள் போலத் தப்பாது பயன்தருகின்ற சக்கரத்தைத் தனது பொருளாகக் கொண்டு நன்மையைத் தருகின்ற ஒருபொருளாய் அதன் நடுவில் இருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *நன்மை - பயன். இனவெதுகையும், ஆசெதுகையும் வந்தன.*

*இதனால், நவாக்கரி சக்கரத்தின் மற்றொரு வகையும், அதற்குரிய தெய்வமும் கூறப்பட்டன.*

***1337. தெளிவுரை :-*** *இச்சக்கரத்திலே தனது திருவடி பொருந்த நிற்கின்ற அமுதேசுவரி, வாசி யோகத்தால் வெளிப்படத் தோன்றும்படி பிராண வாயுவை அவள்பாற் கலக்கச் செய்யின், ஒவ்வொரு நாளும் புதுமைகள் பல தோன்றும். உடம்பும் அழிதலை*

**1338.** கேடில்லை காணும் கிளரொளி கண்டபின்
நாடில்லை காணும் அந் நாள்முதல் அற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணும் கருத்துற் றிடத்துக்கே. **38**

**1339.** உற்றிட மெல்லாம் உலப்பிலி பாழாகிக்
கற்றிடமெல்லாம் கடுவெளி யானது
மற்றிட மில்லை வழியில்லை தானில்லை
சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. **39**

---

*யொழிந்து நிலை நிற்கும் ஆதலின், அங்ஙனம் செய்யப்படும் யோக முறையை வல்லார் வாய்க் கேட்டு, அதனை மேற்கொள்வாயாக.*

***குறிப்புரை :-*** *'சமைந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'அமுதேசுவரி' என்னும் பெயரானே, அவள் 'சகத்திராரம்' எனப்படுகின்ற சந்திர மண்டலத்தில் வீற்றிருந்து அமுதத்தைப் பொழிபவள் என்பது பெறப்பட்டமையின், வாளா, "வீசிடில்" என்றொழிந்தார். 'அமுதேசுவரி கலந்துற, காலதுகொண்டு வீசிடில்' எனக்கூட்டுக. "கேள் அது" என்பதனை இறுதியில் வைத்து உரைக்க. காண், உம் அசைகள்.*

*இதனால், 'அச் சக்கர தெய்வத்தை யோக நெறியாலே தலைப்படுக' என்பது கூறப்பட்டது. இரண்டாமடி உயிரெதுகை.*

***1338. தெளிவுரை :-*** *பேரொளிப் பொருளாகிய அமுதேசுவரியை மேற்கூறியவாறு கண்டபின் காண விரும்பவேண்டுவது ஒன்றும் இல்லை; உடம்பிற்கு அழிவும் இல்லை. அழிவு இல்லாமையால், நாள் முதலிய பாகுபாடுகளையுடைய காலம் நீங்கினமையின், காலத்தோடு கூடிய தம் பயனைத் தருகின்ற இடப்பாகுபாடுகளும் இல்லையாம். இனி முற்கூறிய பேரொளியால் உயிரினது குறிக்கோள் பொருந்திய இடத்திற்குச் செல்லும் வழி நன்கு காணப்படுதலின், அதன்பின் அவ்வழியை மூடி மறைக்கும் வினைக்காடு இல்லையாம்.*

***குறிப்புரை :-*** *"கிளரொளி கண்டபின்" என்பது தாப்பிசையாய் இடை நின்றது. நாடு, முதனிலைத் தொழிற்பெயர். "அற்றபின், கண்டபின்" என்ற அனுவாதத்தால், அறுதலும், காணுதலும் தாமே பெறப்பட்டன. மாடு - பக்கம்; இட வேறுபாடு. செல்லுதலை "வருதல்" என்றது, இட வழுவமைதி. கருத்து - குறிக்கோள். உற்ற*

**1340.** நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்
நின்றிடும் உள்ளம் நினைத்தவை தானொக்கும்
நின்றிடும் சத்தி நிலைபெறக் கண்டிட
நின்றிடும் மேலை விளக்கொளி தானே. **40**

---

*என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று. 'உற்ற இடத்துக்கு வரும் வழி' என மேலே கூட்டுக. இதனுள்ளும் 'காண், உம்' என்பன அசைநிலைகள்.*

*இதனால், மேற்கூறிய யோகக் காட்சியால் உளவாம் பயன்கள் கூறப்பட்டன.*

***1339. தெளிவுரை :-*** *கிளரொளியாகிய அமுதேசுவரியைக் கண்டபின் அக்காட்சி சலித்தற்குச் சிறிதும் இடனில்லாதபடி உறைத்து நில். நின்றால், காணப்பட்ட இடங்கள் யாவும் அழிவற்ற பாழாய், கற்ற நூல்கள் தாமும் வெற்ற வெளியாய் அவ்விடத்திற்குப் பயன் செய்யாதவையாய்விடும். அங்ஙனம் ஆகாத இடங்களும், நூல்களும் இல்லை யாம். அதனால், அவளிடத்தினின்றும் விலகிச் செல்லுதற்கு, ஏதுவே யில்லை. இனி, விலகிச்செல்ல, 'தான்' என்று ஒரு முதலும் இல்லையாம்.*

***குறிப்புரை :-*** *உலப்பில் பாழாக்கி - என்றும் அழியாத சூனியமாக்கி. ஈற்றடியை முதலில்வைத்து உரைக்க. 'உற்ற, கற்ற' என்பவற்றது ஈற்று அகரம் தொகுத்தலாயின். உறுதல் - எதிர்ப்படுதல். பாழாதல், காட்சிப்படாதொழிதல். நூலை, 'புலம்' என்பவாகலின், அதனை இங்கு "இடம்" என்றார். கடுமை - மிகுதி. கடு வெளி - வெளியாந் தன்மையை மிக உடையவெளி. 'ஆகும்' என்னும் எதிர்காலம் துணிவுபற்றி இறந்தகாலமாயிற்று. "மற்றிடம் இல்லை" என எதிர்மறுத்தும் கூறினார், வலியுறுத்தற் பொருட்டு. "வழியில்லை" என்ற காரண மொழிக்கு, விலகுதலாகிய காரிய மொழி "சலிப்பற" என்பதனால் பெறப்பட்டது. தான் இலனாதலும், தன்னை உணரும் நிலை நீங்குதலேயாம்' சத்தியை ஒழித்துத் தன்னையும், பிறவற்றையும் உணரின் துன்பமாம் ஆதலின், வரம்பில் இன்பத்தில் அவை இலவாயின. 'சற்றிடம் இல்லையாக' என ஆக்கம் வருவித்து உரைக்க.*

*இதனால், 'மேற்கூறிய காட்சியில் அசைவற நின்று, பெரும் பயன் எய்துக' என்பது கூறப்பட்டது.*

**1341.** விளக்கொளி ஸௌம் முதல் ஔமது ஈறா
விளக்கொளிச் சக்கரம் மெய்ப்பொரு ளாகும்
விளக்கொளி யாகிய மின்கொடி யாளை
விளக்கொளி யாக விளங்கிடு நீயே. **41**

---

***1340. தெளிவுரை :-*** *அமுதேசுவரியைச் சலிப்பின்றிக் காணின், நிலை பெற்றுள்ள ஏழ் கடல், ஏழ் நிலம் முதலிய யாவும், அலைவின்றி நிலைத்த, அவ்வுள்ளத்தில் நினைத்தவாறே ஆகும். முடிவாக கிளரொளியாகிய அச்சத்தி ஒழிவின்றித் தன்னிடத்தில் நிலைபெற்று நிற்கும். அமுதேசுவரியின் அருளில் தோய்ந்தவன் தன்னில் அனைத்தையும் கண்டு, தான் அனைத்திலுமாய் தேவியை மேலை நிலத்து விளக்கொளி போல் கண்டு விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி தாப்பிசையாய் முன்னும், பின்னும் சென்று இசைந்தது. "புவி" என்றது தீவுகளை. 'நினைத்தவாறே ஆம்'*

| ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் |
| ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் |
| ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் |
| ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் |
| கௌம் | கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் |
| கிரீம் | ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் |
| ஹௌம் | ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் |
| ஔம் | ஸௌம் | க்லீம் | ஸ்ரீம் | ஹ்ரீம் | ஐம் | கௌம் | கிரீம் | ஹௌம் |

**IX. நவாக்கரி சக்கரம்** (பாடல் எண் 1341) (ஸௌம் முதல் ஔம் ஈறாக)

## நவாக்கரி சக்கர வகைகள்

| வ. எண் | பாடல் எண் | நவாக்கரி மந்திரம் | பயன் |
|---|---|---|---|
| 1. | 1302 | ஓம் க்லீம் செளம் ஒளம் ஹெளம் கிரீம் கெளம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் சிவாயநம | வினைகளை வெல்லவும், உலகை வெல்லவும், நினைத்த அளவில் அப்பயன்கள் நடக்கவும். |
| 2. | 1306 | ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் கெளம் கிரீம் ஹெளம் ஒளம் செளம் க்லீம் சிவாயநம | பொன், பொருள், தேவர் பதவி கிடைக்கும். உடம்பு ஒளிபெற்று விளங்கும். நினைக்கின்ற காரியங்கள் நடக்கும் |
| 3. | 1311 | ஓம் ஹ்ரீம் ஐம் கெளம் கிரீம் ஹெளம் ஒளம் செளம் க்லீம் ஸ்ரீம் சிவாயநம | முக வசீகரம் ஏற்படும். மன்னரும் வசப்படுவர். பகை ஒழியும். |
| 4. | 1316 | ஓம் ஐம் கெளம் கிரீம் ஹெளம் ஒளம் செளம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் சிவாயநம | அறியாமை நீங்கும். அஞ்ஞானம் போகும். கலாஞானம் நிரம்பப் பெறுவீர். உலகமாயையை வெல்லலாம். தகரவித்தையின் பயன் தரும். |
| 5. | 1321 | ஓம் கெளம் க்ரீம் ஹெளம் ஒளம் செளம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் சிவாயநம | வெளிப்பகை, புறங்கூறல் ஏற்படாது. பல்வேறு உயிர்களும் (விலங்குகள்) எதிர்க்காமல் பணிந்து செல்லும். காமம், வெகுளி, மயக்கம் நீங்கும். |

| வ. எண் | பாடல் எண் | நவாக்கரி மந்திரம் | பயன் |
|---|---|---|---|
| 6. | 1326 | ஓம் க்ரீம் ஹெளம் ஔம் சௌம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் கிரீம் சிவாயநம | உள்ளக்களிப்பு உண்டாகும். பொருட் செல்வமும் பெறலாம். உலகத் துன்பங்கள் அழியும். பிணங்கும் அரசனும் இணங்குவான். தீய உள்ளம் திருந்தும். |
| 7. | 1331 | ஓம் ஹெளம் ஔம் சௌம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் கௌம் கிரீம் சிவாயநம | பிராரத்த வினைகளை வேகமாக நுதர்தலும், ஆகாமியத்தை செய்யாமையும் கூடும். |
| 8. | 1336 | ஓம் ஔம் சௌம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் கௌம் கிரீம் ஹெளம் சிவாயநம | ஒவ்வொரு நாளும் புதுமைகள் தோன்றும். உடம்பு அழிதலையொழிந்து நிலைபெறும். தன்னில் அனைத்தையும் காணலாம். ஏழ்கடல், நிலம் முதலியவற்றைக் காக்க, பயன்படுத்த, அழிக்க முடியும். |
| 9. | 1341 | ஓம் சௌம் க்லீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஐம் கௌம் கிரீம் ஹெளம் ஔம் சிவாயநம | உயிர் நல்வழியில் செயல்பட உதவி கிடைக்கும். |

**1342.** விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்
விளங்கிடு மெல்லிய லானது வாகும்
விளங்கிடு மெய்நின்ற ஞானப்பொருளை
விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. 42

---

*என்றது, 'அவற்றைக் காக்கவும், அழிக்கவும் அவற்றைத் தன் விருப்பப்படி பயன்படுத்தவும் வல்லனாம்' என்றவாறு. மேலை விளக்கொளி - மேற்கூறப்பட்ட விளக்கொளி; 'மேலிடமாகிய சந்திர மண்டலத்தில் விளங்கும் விளக்கொளி' என்றுமாம்.*

*இதனால், அக் காட்சியின் பயன் வேறும் சில கூறப்பட்டன.*

*1341.* ***தெளிவுரை :-*** *விளக்கொளி போல்வதாகிய 'ஸௌம்' என்னும் பீசம் முதலும், ஔம்' என்னும் பீசம் ஈறும் ஆகி நிற்பின் அச் சக்கரம் விளக்கொளிச் சக்கரமாம். அது மெய்ப்பொருளாயே நிற்கும். எல்லாவற்றையும் விளக்கியருள்கின்ற ஒளியாகிய சத்தியை அச்சக்கரத்தில் விளக்கொளி வடிவமாகவே நீ கருதி வழிபடு.*

***குறிப்புரை :-*** *காரணப் பொருளில் வந்த "ஈறாக" என்பது "ஆகும்" என்பதனோடு முடிந்தது. மூன்றாம் அடியில் உள்ள விளக்கொளி, வினைத்தொகை. விளங்கிடு - அறிந்திடு. இங்ஙனங் கூறவே, இச்சக்கரத்தின்மேல் விளக்கை வைத்தலும் பொருந்துவதாயிற்று.*

*இதனால், நவாக்கரி சக்கரத்துள் ஒன்றன் முறைமை கூறப்பட்டது.*

*1342.* ***தெளிவுரை :-*** *விளங்கி நிற்பதாக மேலைமந்திரத்திற் சொல்லப்பட்ட மெய்ப்பொருளை இன்னதெனக் கூறின், அது சிவ சத்தியேயாம். தானே விளங்குத் தன்மையுடையதும், மெய்ம்மை யானதும் அறிவே வடிவாய் உள்ளதும் ஆகிய அந்தப்பொருளை உணர்பவர்களே ஞானம்பெற்றவராவர்.*

***குறிப்புரை :-*** *மேலை மந்திரத்துள் "மெய்ப்பொருள்" எனவும், "மின்கொடியாள்" எனவும் வேறுவேறு போலக் கூறப்பட்டவை அங்ஙனமாகாது ஒன்றேயாதலை முன்னிரண்டடிகளில் விளக்கிப் பின்னிரண்டடிகளில் அப்பொருள்களின் சிறப்புணர்த்தினார்.*

**1343.** தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமும் ஆக்கி அழித்தவள்
தானே அனைத்துள அண்ட சகளமே. **43**

**1344.** அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணினும்
கண்டத்தி னுள்ளே கலப்பறி யார்களே. **44**

---

*''விளங்கிடும், வரும்'' என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி, "மெய்ப்பொருள்" என்னும் ஒருபெயர் கொண்டன. "மேல்" என்றது மேல் நின்ற இடத்தை. 'வந்த' எனற்பாலதனை, "வரும்" என்றதும், 'தாமே' எனற்பாலதனை ''தானே'' என்றதும் வழுவமைதி மெய்ம்மையும், ஞானமும் ஆதல் கூறவே. ஆனந்தம் ஆதலும் கொள்ளப்படும். சத்தி அஃறிணையாகவும் கூறப்படுதல் பற்றி எழுவாயை, 'ஆனது' எனக் கூறினார்.*

***1343. தெளிவுரை :-*** *மேற்கூறிய மெய்ப்பொருளாகிய சத்தி, தான் ஒருத்தியே பூதாகாயமாகி எங்கும் நிறைந்தும், பராகாயமாகி எல்லாவற்றிற்கும் மேலாகியும் நிற்பாள். தானே எல்லாப் பொருளையும் தோற்றுவித்து அழிப்பவளாகவும், தானே பலவாயுள்ள அண்டங்களையும் தனது வடிவமாக உடையவளாவாள்.*

***குறிப்புரை :-*** *பூதாகாயமாய் நிற்கும் நிலைமை கூறவே, பராகாயமாய் நிற்கும் நிலையும் கொள்ளப்பட்டது. சகளமாய் நிற்பவளை, "சகளம்" என்றார்.*

*இவை இரண்டு மந்திரங்களாலும் அச்சக்கர தெய்வத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

***1344. தெளிவுரை :-*** *அளத்தற்கு அரிய பொருளாய் அனைத்து அண்டங்களிலும் பரவி நிற்பவளும், உடம்பினுள்ளே தானே பரவெளியை அமைத்துள்ளவளும் ஆகிய சத்தியது தன்மைகள் பலவற்றை ஓம குண்டத்தில் பலர் மந்திரம் கிரியை பாவனைகளால் காண்பார்களாயினும், உடம்பினுள்ளே அவள் பொருந்தி நிற்கும் நிலையை அவர் அறிதல் இல்லை.*

**1345.** கலப்பறி யார் கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யார்உட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் தானே. **45**

**1346.** தானே எழுந்தஅச் சக்கரம் சொல்லிடின்
மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்
தேனே இரேகை திகைப்பற ஒன்பதில்
தானே கலந்த வரைஎண்பத் தொன்றுமே. **46**

---

*குறிப்புரை :- பரவெளியை அமைத்தமையாவது, தியானத்தானங் களாகிய ஆதார நிராதாரங்களை நிறுவினமை. 'கண்டவள் குணம்' என இயைக்க. கண்டம் - வரையறைப்பட்டது. இங்கு, உடம்பு சத்தியைக் கிரியை முறையால் உணரும் உணர்வோடே அமைந்து, யோக முறையால் உணர்தலை மேற்கொள்ளாது ஒழிவாரை நோக்கி இவ்வாறு இரங்கிக் கூறினார் என்க. குண்டம் - ஓமகுண்டம்; நாபித்தானம். அதுவே அக்கினி மண்டலம். அதில் பைசந்தி வாக்காக நாதம் விளங்கி, உதானன் என்ற காற்றால் உந்தப்பட்டு கண்டத்தில் வைகரி வாக்காகிப் பொருளுணர்த்தும்.*

*இதனால், அச்சத்தியைக் கிரியை முறையால் வழிபடுதலோடு ஒழியாது, யோக முறையால் தலைப்படுதல் வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது.*

*1345. **தெளிவுரை :-** சிவ சத்தி இருக்க அவளை வணங்காமல் சில தேவர்களை நாடிச் சென்று வணங்குதலால், தலை இருந்தும் அஃது அற்றொழிந்த உடலை உடையார்போல ஆகி விட்டவர்கள் தாம் அடையத்தக்க பொருள் எது என்பதனையும், உலகம் அழிவது என்பதனையும் வாழும் பொழுதே உடலோடு கூடிய தம் உயிரை நல்வழியிற் செயற்படச் செய்வதனையும் அறிவாரல்லர்.*

*குறிப்புரை :- "கலப்பு" என்னும் தொழிற்பெயர் ஆகுபெயராய், கலக்கப்படும் பொருளை உணர்த்திற்று. சிலைப்பு - ஒலிப்பு. செயற்படாதிருத்தலை, 'பேசாதிருத்தல்' எனக் கூறும் வழக்குப் பற்றிச் செயற்படுதலை 'ஒலிப்பு' என்றார். நாடுதல் அதன் காரியம் தோற்றி நின்றது தலைப் பறி - தலையது நீக்கத்தை உடையது.*

**1347.** ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்
வென்றிகொள் மேனி மதிவட்டம் பொன்மையாம்
கன்றிய ரேகை கலந்திடும் செம்மையில்
என்றியல் அம்மை எழுத்தவை பச்சையே. **47**

**1348.** ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய
வாய்ந்தஇப் பெண்எண்பத் தொன்றில் நிரைத்தபின்
காய்ந்தவி நெய்யுட் கலந்துடன் ஓமமும்
ஆய்ந்தவி உயிர் ஆகுதி பண்ணுமே. **48**

---

*கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை. - குறள். 9*

*என்றதனை நினைவு கூர்க.*

*இதனால், சத்தியை அணுகாதவர் எய்தும் குற்றம் கூறப்பட்டது.*

*1346. **தெளிவுரை :-** ஒன்ப தெழுத்துக்களால் இயல்பாக அமைந்த சக்கரத்தின் இயல்பைக் கூறின், நெடுக்காகப் பத்துக் கோடும், குறுக்காகப் பத்துக்கோடும் இட்டு, ஒன்பதிற்றொன்பது (9x9) எண்பத்தொன்றாகின்ற அறைகளை அறிவாயாக.*

*குறிப்புரை :- "மானே, தேனே" என்பன மகடூஉ முன்னிலை. இதுவும் நூல் வழக்கு. "மதி" என்பதனை இறுதிக்கண் கூட்டுக. "வரை, இரேகை" என இருகாற்கூறி, நெடுக்கும் குறுக்கும் கொள்ள வைத்தார். ஈற்றடியில் 'வானே கலந்த' எனப்பாடம் ஓதுதல் சிறக்கும். இங்ஙனம் இச்சக்கரம் அமையுமாறு காண்க.*

*1347. **தெளிவுரை :-** மேற்கூறிய சக்கரத்தின் இயல்பை இன்னும் சொல்லும்பொழுது, வெற்றியைக் கொண்ட அதன் வடிவமாகிய அறைகளின் நிறம் பொன்மை; அழுந்த இடப்பட்ட கோடுகளின் நிறம் செம்மை. ஞாயிற்றைப் போல ஒளிவிட்டு விளங்கும் சத்தி வடிவமாகிய எழுத்துக்களின் நிறம் பச்சை.*

*குறிப்புரை :- அறைகள் சதுர வடிவினவாயினும் 'சக்கரம்' எனப்படுதல் பற்றி, "வட்டம்" என்றார். மதி வட்டம், வினைத்தொகை செம்மையில் - செம்மை நிறத்தில். என்று - சூரியன்.*

*இவை இரண்டு மந்திரங்களாலும் சக்கரவடிவு கூறப்பட்டது. இவ்வடிவைப் பா. 1301 உரைப்பகுதியில் காண்க.*

**1349.** பண்ணிஅப் பெண்ணைப் பரப்பற நீபிடி
எண்ணிய நாட்களில் இன்பமும் எய்திடும்
நண்ணிய நாமும் நான்முகன் ஒத்தபின்
துண்ணிய மேயநற் சொக்கனு மாமே. **49**

**1350.** ஆகின்ற சந்தனம் குங்குமம் கத்தூரி
போகின்ற சாந்து சவாது புழுகுநெய்
ஆகின்ற கப்பூரம் அகோ சனம்நீரும்
சேர்கின்ற ஒன்பதும் சேரநீ வைத்திடே. **50**

---

*1348. **தெளிவுரை :-** பொருந்திய மரப் பட்டையில் எழுதப்பட்டுப் பொருந்திய எழுத்துக்களை மேற்சொல்லிய எண்பத்தோர் அறைகளில் அடைத்த பின்பு, வெண்ணெய் அப்பொழுது காய்ந்து அடங்கியதனால் உண்டான நெய்யில் நன்கு ஆய்ந்த அரிசியால் முறைப்படி அடப்பட்ட சோற்றைக் கலந்து உயிர் ஆகுதியால் ஓமம் பண்ணி வழிபடுங்கள். அவி - உப்பின்றி அட்டயாகச் சோறு. உயிர் ஆகுதி - பிராணாகுதி.*

*__குறிப்புரை :-__ "ஏய்ந்த" என்பது "மரம்" என்பதனோடு முடிந்தது. 'உரித்தற்குப் பொருந்திய மரம்' என்றபடி. 'எழுதிய வாய் வாய்ந்த' என்க. "பெண்" என்றது சத்தியை. அது மேலை மந்திரத்திற் கூறியவாறு அவளது வடிவாய் நிற்கும் எழுத்திற்கு ஆகுபெயர். 'ஆய்ந்த' என்பதன் அகரம் தொகுத்தலாயிற்று. "நூலாக் கலிங்கம்" என்பதிற் போல "ஆய்ந்த" என்னும் பெயரெச்சம் அவிக்குக் காரணமாகிய அரிசிக்கு உரித்தாய், ஒற்றுமை பற்றி அவிக்குப் புணர்க்கப்பட்டது. 'ஆய்ந்த அவியை, காய்ந்து அவிந்த நெய்யுள் உடன் கலந்து ஆகுதி உயிரால் ஓமம் பண்ணும்' எனக் கூட்டுக.*

*இதனால், இச்சக்கரத்தை வழிபடும் முறை கூறப்பட்டது.*

*1349. **தெளிவுரை :-** மேற்கூறிய முறையில் ஓமம் செய்து அச்சத்தியை நீ மெல்லப் பிடி, பிடித்தால், கணக்கிட்டுக் கூறப்பட்ட நாள்களுக்குள்ளே நன்மை உண்டாகும். ஓமத்தைச் செம்மையாக வளர்த்தமையால், 'பிரமனுக்கு நிகரான பிராமணனாயினேன்' என்ற புகழை உலகத்தார் சொல்லும் அளவிற்கு இவ்வழிபாட்டில் சிறந்து நின்றபின், விரைவில் அவன் மிக உடல் அழகு பெற்றும் விளங்குவான்.*

**1351.** வைத்திடும் பொன்னுடன் மாதவம் நோக்கிடின்
கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்
தச்சிது வாகச் சமைந்தஇம் மந்திரம்
அர்ச்சனை ஆயிரம் ஆயிரம் சிந்தியே. **51**

**1352.** சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்
எந்தாய் கரங்கள் இருமூன்றும் உள்ளன
பந்தமா சூலம் படைபாசம் வில்அம்பு
முந்தை கிலீம்எழ முன்னிருந் தாளே. **52**

---

*குறிப்புரை :-* 'பண்ணிய பொன்னை' என்பதும் 'துண்ணென நேயநற் சேர்க்கலு மாமே' என்பதும் பாடம் அல்ல. எண்ணிய நாள் ஒரு மண்டலம்; நாற்பத்தெட்டுநாள். இதனை வழக்குப் பற்றிக் கொள்ள வைத்தார். 'நான்முகனோடு' என உருபு விரிக்க. சொக்கன் - அழகன்.

*1350.* **தெளிவுரை :-** மேற்கூறிய சக்கரத்திற்கு ஆகும் பொருள்கள், 'சந்தனம் குங்குமப்பூ, மான்மதம், கண்ணேறு போதற்கு ஏதுவான கருஞ்சாந்து, சவ்வாது, புனுகுசட்டம், நெய், கோரோசனை, நீர்' என்னும் ஒன்பதுமாம். இவற்றை ஒருங்கு கூட்டி வைத்துக்கொண்டு வழிபாட்டினைத் தொடங்குவாயாக.

*குறிப்புரை :-* இவை ஆட்டுதல், பூசுதல், அணிவித்தல் முதலாக ஏற்ற பெற்றியாற் பயன்படுவன என்க.

இதனால், 'இவ்வழிபாட்டிற்குச் சிறப்பாக வேண்டும் பொருள்கள் இவை' என்பது கூறப்பட்டது.

*1351.* **தெளிவுரை :-** இச்சக்கரத்தில் வைத்துத் தியானிக்கப்படும் பொன் போன்றவளாகிய சத்தியுடன் பொருந்தத்தக்க சிறந்த வழிபாடு யாது என ஆராயின். சத்தியை மிக இளையவளாகவும், அவளுக்கு உரிய மந்திரம் இவ் எழுத்துக்களேயாகவும் கொண்டு, தேவிதன் ஆயிர நாமங்களால் ஆயிரமுறை அருச்சனை செய்தல் என அறிவாயாக.

*குறிப்புரை :-* 'பொன்னுடன் பொருந்தும் மாதவம்' என ஒருசொல் வருவிக்க. 'தைத்து' என்பது 'தச்சு' எனப் போலியாயிற்று. கைச் சிறு - மிகச் சிறிய. தைத்தல் - உள்ளத்தில் பொருத்துதல்.

**1353.** இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்
இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மர்
இருந்தனர்சூழ எதிர்சக் கரத்தே
இருந்த கரம்இரு வில்லம்பு கொண்டே. 53

**1354.** கொண்ட கனங்குழை கோமுடி ஆடையாய்க்
கண்டஇம் மூர்த்தம் கனல்திரு மேனியாய்ப்
பண்டமர் சோதிப் படரித மூனவை
உண்டங் கொருத்தி உணரவல் லாருக்கே. 54

---

*'சமைந்த இம் மந்திரம் இதுவாக' என மாற்றிக் கொள்க. இது, இந்நிலை; தேவி இளையளாய் விளங்கும்கோலம். 'ஆயிரம் ஆயிரம் எனச் சிந்தி' என்க. சிந்தி - சிந்தித்து உணர். இன எதுகையும், ஆசெதுகையும் வந்தன. தச்சு - வசியம். சமைந்த - அமைந்த.*

*இதனால், 'இச்சக்கரத்தைத் தேவியது ஆயிர நாமத்தால் ஆயிர முறை அருச்சிக்க' என்பது கூறப்பட்டது. ஆயிரம் - சகஸ்ர நாமம். ஆயிரம் ஆயிரம் - இலட்சார்ச்சனை.*

*1352. **தெளிவுரை :-** வழிபடுவோரது உள்ளத்திலே ஒளி விட்டு விளங்குபவளாய், 'க்லீம்' என்னும் பீசத்தை முதலில் வைத்துக் கணிக்க. அங்ஙனம் கணிப்பவர்களது கண்முன் தோன்றிநின்று அருளுகின்ற சத்தியாகிய எம் தாயது ஆறு கைகளிலும் உள்ளவைகளில் படைகள் ஆவன. விடாது பற்றிய 'சூலம், பாசம், வில், அம்பு' என்பன. ஓம் க்லீம் சௌம் ஔம் ஹௌம் கிரீம் கௌம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் சிவாயநம எனக் கொள்க.*

*குறிப்புரை :- ஏனை இருகரங்கள் அபயமும், வரதமுமாதல் நன்கறியப்பட்டது. ஈற்றடியை முதலடியின் பின்னர்க் கூட்டுக. 'எந்தை' என்பதும், 'உள்ளது' என்பதும் பாடம் அல்ல. 'இருமூன்றிலும்' என உருபு விரித்து, "படை" என்பதை அதன் பின்னர்க் கூட்டி உரைக்க.*

*இதனால், நவாக்கரிசக்கரத்துள் ஒன்றில் விளங்கும் சத்தியது வடிவு கூறப்பட்டது.*

*1353. **தெளிவுரை :-** வழிபடுவோனுக்கு எதிரே மேற்கூறிய சக்கரத்தில் சக்கர தேவியைச் சூழ்ந்து ஒவ்வொருத்திக்கு எண்மராக*

**1355.** உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழும் ஓசை ஒளியது காணும்
தணந்தெழும் சக்கரம் தான்தரு வாளே. **55**

**1356.** தருவழி யாகிய தத்துவ ஞானம்
குருவழி யாகுங் குணங்களுள் நின்று
கருவழி யாகுங் கணக்கை அறுத்துப்
பெருவழி ஆக்குமப் பேரொளி தானே. **56**

---

*அறுபத்து நால்வர் சூழ எண்மர் சத்திகள் இருப்பர். அவர்கள், கையில் வில்லும் அம்பும் கொண்டிருப்பர்.*

*குறிப்புரை :- அவ் எண்மர் வாமை முதலியோராவர், 'அறுபத்து நால்வரும் எண் வகையாய் உள்ள எண்மர்கன்னிகள் இருந்தனர்' (பா.1067 பார்க்க) என்க. 'இருந்த கரம் இரண்டில் வில் அம்புகொண்டு' என்றவாறு. இருந்த அனைத்துக் கரம் நான்கு, 'எதிர் சக்கரத்தே' என்பது முதலாகத் தொடங்கி, மேற்கூறியவாறு முடித்து, "இருந்தனர் சூழ" என்பதை வேறு தொடராக்கியுரைக்க.*

*இதனால், மேற்கூறிய சத்தியது பரிவாரங்கள் கூறப்பட்டன.*

*1354. தெளிவுரை :- மணிகளால் கனமான குழை, அரசு முடி நல்ல ஆடை இவைகளை உடையதாய்க் காணப்படுகின்ற இவ்வடிவம் நெருப்புப் போன்றதாய் இருக்க, இயல்பாகவே பல இதழ்களையுடைய விளக்கம் மிக்க தாமரைமலர் இருக்கையில் எழுந்தருளியிருக்கின்ற ஒருத்தி, தன்னை உணரவல்லவர்க்குத் தன் இருப்புத் தோன்ற நிற்பாள்.*

*குறிப்புரை :- படர்தல் - பலவாய் விரிதல்.*

*இதனால், அச்சத்தியது உருவச் சிறப்புச் சில கூறப்பட்டன.*

*1355. தெளிவுரை :- உணர வல்லார்க்கு உள்ளவள் ஆகின்ற அச்சத்தியை உள்ளே உணர்ந்து காணின், அவள் எங்கும் தானாய்க் கலந்து அருள்மழையைப் பொழிவாள்; (எவ்விடத்திலும் அவ்அடியவனுக்குத் தடையின்றி அருளுவாள் என்றபடி) அவள் அங்ஙனம் அருளும்பொழுது அவளோடு கூடி இனிய ஓசையும், அழகிய ஒளியும் தோன்றும். அவளும் அச்சக்கரத்தினின்றும் வெளிப்பட்டு வருவாள்; வந்து, வேண்டும் வரங்களைத் தருவாள்.*

**1357.** பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்
சீரொளி யாகித் திகழ்தரு நாயகி
காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்
பாரொளி யாகிப் பரந்துநின் றாளே. **57**

**1358.** பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக்
குவிந்த கரம்இரு கொய்தளிர்ப் பாணி
பரிந்தருள் கொங்கைகள் முத்தார் பவளம்
இருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே. **58**

---

***குறிப்புரை*** *:- ஓசையாவன தோத்திரங்களாலும், வாக்கியங்களாலும் ஆவன. இரண்டாம் அடி உயிரெதுகை.*

*இதனால், அச்சத்தி வழிபடுவார்க்கு முன்னின்று அருளுமாறு கூறப்பட்டது.*

*1356.* ***தெளிவுரை*** *:- மேலெல்லாம் 'பேரொளி' எனச் சொல்லப்பட்ட சத்தி, வீடுபேற்றைத் தரும் வழியாகிய உண்மை ஞானம் ஆசிரியர் வழியாகப் பெருகும் செயலிடமாக விளங்கி நின்று. பிறவிக்கு ஏதுவாகும் அவை தோன்றுகின்ற முறைமையை அழித்து, மேலான நெறியாகிய அருளை வழங்குவாள்.*

***குறிப்புரை*** *:- செயலை, "குணம்" என்றார். கணக்கு - வரையறை; நியதி.*

*இதனால், அவளால் ஞானமும் எய்துதல் கூறப்பட்டது.*

*1357.* ***தெளிவுரை*** *:- பொதுவாக, 'பேரொளி' எனக் குறிக்கப்படுகின்ற, பெரிய ஒளிகட்கெல்லாம் பெரிய ஒளியாகிய சிவனது சிறப்புப் பொருந்திய ஒளியாய்த் திகழ்கின்றமையால் அவனுக்கு நாயகியாய், இயல்பிலே நீல நிறம் உடையவளாய்ப் பூமியில் எங்கும் நிறைந்து நிற்கின்றாள்.*

***குறிப்புரை*** *:- பராசத்தியாகப் பரசிவத்தோடு நின்ற நிலையில் பேரொளியாகிய பெருஞ்சுடராயும், ஆதி சத்தியாய் நின்ற நிலையில், ஆன்மாக்களுடைய பரிபாக நிலைக்கு ஏற்பச் சீரான ஒளியாகவும், பால்மொழிக் கன்னியாகிய உமையான நிலையில் காரொளிக் கன்னியாகவும், பிரபஞ்சமாக விரிந்துநின்றபோது பூமியின் நிறமாகிய பொன்னிறமாகவும் விரிந்தனள் என சிருட்டிக்கிரமத்து வியாபித்திருக்கும் நிலை அறிவித்தவாறு.*

**1359.** மணிமுடி பாதம் சிலம்பணி மங்கை
அணிபவ ளன்றி அருளில்லை யாகும்
தணிபவர் நெஞ்சினுள் தன்னரு ளாகிப்
பணிபவர்க் கன்றோ பரகதி யாமே. **59**

**1360.** பரந்திருந் துள்ளே அறுபது சத்தி
கரந்தனர் கன்னிகள் அப்படிச் சூழ
மலர்ந்திரு கையின் மலரவை ஏந்தச்
சிறந்தவர் ஏத்தும் சிரீம்தன மாமே. **60**

---

*1358. **தெளிவுரை :-** உடம்பிற்கு வெளியே நீட்டியுள்ள இருகைகள் இரு தாமரை மலர்களை ஏந்தியிருக்க, உடம்பிற்கு உள்ளே அடக்கியுள்ள இரு கைகள் யாதும் ஏந்தாதே விளங்க, உயிர்கட்குத் தாயாகி அருளுகின்ற தனங்கள் முத்து மாலையும், பவழ மாலையும் உடையனவாக, உடுத்தியுள்ள ஆடை மிகச் சிறந்த ஆடையாய் மணிகளால் பொதியப்பட்டு அவள் மாட்டு இருந்தது.*

*குறிப்புரை :-* "ஏந்தி" என்பதனை, 'ஏந்த' எனத் திரிக்க. 'யாதும்' ஏந்தாதவை' என்பதை விளக்க, "கொய்தளிர்பாணி" என இயல்பு கூறி யொழிந்தார். அவை அபய வரதங்களாதல் இயல்பாக அறிவிக்கப் பட்டது. "பாணி, பவளம்" என்பவற்றின் பின் 'ஆக' என்பன வருவிக்க. பின்வரும் 'ஆக' என்பதற்கு. 'பொருந்த' என்பது பொருள். பொதிந்தன்று - பொதிந்தது. இதனுள் உயிரெதுகை வருக்க எதுகைகளுடன் மூன்றாமெழுத்தெதுகை வந்தது. பாணி - கை.*

*இதனால், அவளது வடிவச் சிறப்பு வேறு சிலவும் கூறப்பட்டன.*

*1359. **தெளிவுரை :-** தலையில் இரத்தின கிரீடத்தை அணிபவளும் பாதத்தில் சிலம்பை அணிபவளும் ஆகிய இச்சத்தியையன்றித் 'திருவருள்' என்பது வேறில்லை. ஆகவே, பிற தெய்வங்களின் மேல் செல்லும் அவா அடங்கித்தன்னை நினைப்பவர் நெஞ்சினுள்ளே தான் தனது இயல்பாகிய அருளோடு விளங்கிப் பின்னும் பலவாற்றால் தன்னை வழிபடுவார்க்கு அன்றோ இவள் மேலான கதியாயும் நிற்பாள்!*

**1361.** **தனமது வாகிய தையலை நோக்கி**
**மனமது ஓடி மரிக்கில்ஓ ராண்டில்**
**கனமவை அற்றுக் கருதிய நெஞ்சம்**
**தினகர னாரிடச் செய்திய தாமே.** **61**

---

*குறிப்புரை :-* *'தலையில்' என்பது ஆற்றலால் விளங்கிற்று. "அணிபவள்" என்பதை "மணிமுடி" என்றதன் பின்னர்க் கூட்டுக. தணிதலுக்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. "அணிபவள்" முதலிய மூன்றனையும், 'அணிந்தவர்' என்பது முதலாகப் பிறிது பொருள்படப் பாடம் ஓதுவாரும் உளர்.*

*இதனால், அவளது வடிவச் சிறப்புச் சில கூறி, அவளே பரகதியாதல் கூறப்பட்டது.*

*1360.* **தெளிவுரை :-** *இச்சத்தி, தன்னை வழிபடுவோனது உள்ளத்திலே நிறைந்திருந்து, அறுபத்து நால்வரும், எண்மரும் ஆகிய சத்திகள் மேற்கூறப்பட்டவாறு (பா.1353) தன்னைச் சூழ்ந்திருக்க, பரந்த இரு கைகளில் இருதாமரை மலர்களையும் மேற்கூறியவாறு (பா.1358) ஏந்தி, உணர்ந்தவர்கள் துதிக்கின்ற 'ஸ்ரீம்' என்னும் பீசத்திற்குரிய திருமகளாய் நின்று செல்வத்தையும் அளிப்பாள்.*

*குறிப்புரை :-* *அறுபத்து நான்கில், 'அறுபது' என்னும் பெரெண்ணினை மட்டுமே கூறி நினைவுறுத்தார். மேற்கூறியவைகளை மீளவும் நினைவுகொள்ளச் செய்தது, அவற்றை நன்கு தியானிப்பித்தற்கு. கரத்தல் - அடங்குதல்; கீழ்ப்படிதல். 'கிரீம் ஆகிய தனம்' என்க. "தனம்" என்றது அதனைத்தரும் திருமகளை உணர்த்திற்று. இங்ஙனம் உணர்த்தி நிற்கக் கூறியது. வழிபடுபவனுக்குச் செல்வத்தைத் தருதலை உணர்த்தற்கு. இச்சக்கரத் தலைவியாகின்ற சத்தி, இதன் ஒரு பகுதியாகிய ஸ்ரீம் ஆகிநின்று அருளுதற்கு ஐயமில்லை என்றவாறு உயிரெதுகையும், மூன்றாமெழுத்தெதுகையதும் வந்தன. இலக்குமி பீஜம் - ஓம் ஸ்ரீம் சிவாயநம.*

*இதனால், பரகதியாய் நிற்கும் அவள் செல்வத்தையும் தருதல் கூறி, ஐயமறுக்கப்பட்டது.*

**1362.** ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்
போகின்ற பேரொளியாய மலரதாய்ப்
போகின்ற பூரண மாக நிறைந்தபின்
சேர்கின்ற செந்தழல் மண்டல மானதே. **62**

**1363.** ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்
ஆகின்ற ஐம்பத் தறுவகை யானவள்
ஆகின்ற ஐம்பத் தறுசத்தி நேர்தரும்
ஆகின்ற ஐம்பத் தறுவகைச சூழலே. **63**

---

*1361. **தெளிவுரை :-** சத்தியை 'ஶ்ரீம்' பீச வழிச் செல்வத் தலைவியாக வைத்து, மனம் பற்றித் தியானித்து வந்தால், ஓராண்டிற்குள் அம்மனம் செல்வத்தில் உள்ள பற்றாகிய சுமை நீங்கப்பெற்று, ஞான சூரியனாகிய சிவனிடத்திற் செல்லும் செயலை உடையதாகும்.*

***குறிப்புரை :-*** *'ஸ்மரிக்கில்' என்பது "மரிக்கில்" எனத்தற்பவ மாயிற்று. 'சுமை' என்றது, வேண்டாததாதல் பற்றி. நேரே திருமகளை வழிபடுவார்க்கு மேலும் மேலும் அச்செல்வத்தில் பற்றி மிகுமாகலின், அதனை விட வேண்டுவார் செல்வத்தின் பொருட்டும் சிவ சத்தியையே திருமகளாக வைத்து வழிபடல் வேண்டும் என்றவாறு. தினகரன் - சூரியன்.*

*இதனால், இச்சத்தி தரும் செல்வத்தது சிறப்புக் கூறப்பட்டது.*

*1362. **தெளிவுரை :-** பக்குவம் முதிர்தற்கு முதலாய் உள்ள மூலாதாரத் தாமரையினின்றும் வளர்ந்து செல்கின்ற மூலாக்கினி, சுவாதிட்டானம் முதலிய, மற்றை ஆதாரங்களில் உள்ள தாமரை மலர்களில் பொருந்திச் சென்று, அவற்றிற்கு மேலும் துவாத சாந்தம் வரை போகின்ற பூரண ஒளியாய் நிறைந்த பின்பு, அவ்வக்கினி யோகியின் உடம்பு முழுதுமான மண்டலமாய் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'அப்பொழுது மனம் பற்றற்றதாகும் ஆதலின், அம்முறையானே சத்தியைத் தியானிக்க' என்பது குறிப்பெச்சம். 'போகின்ற பேரொளி' என்பது பாடம் அன்று.*

*இதனால், பற்றறுதியை விரும்புவார் சிவ சத்தியை வழிபட வேண்டுதல், மேலும், யோக நெறியால் வழிபடின், விரையப் பயன் தருதல் கூறப்பட்டது.*

**1364.** சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமா
ஆங்கணி முத்தம் அழகிய மேனியும்
தாங்கிய கையவை தார்க்கிளி ஞானமாய்
ஏந்து கரங்கள் எடுத்தமர் பாசமே. **64**

**1365.** பாசம தாகிய வேரை அறுத்திட்டு
நேசம தாக நினைத்திரும் உம்முளே
நாசம தெல்லாம் நடந்திடும் ஐயாண்டில்
காசினி மேலமர் கண்ணுத லாக்குமே. **65**

---

*1363. **தெளிவுரை :-** வழிபடுவோன் ஆக்கம் பெறுதற்கு ஏதுவாகிய இச்சக்கரத்தில் வீற்றிருக்கும் சிவசத்தி, மாதுருகாட்சரம் ஐம்பத்தொன்றும், வியட்டிப் பிரணவமாகிய சூக்கும அக்கரம் (அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து) ஐந்தும் ஆகிய ஐம்பத்தாறு அட்சரங்கட்கும் தலைவியாகிய முழுமுதல்வி. பிற சத்திகள் யாவரும் தனித்தனி இடங்களையுடைய அவற்றுள் ஒவ்வொன்றற்கே முதல்வியராவர்.*

*குறிப்புரை :- 'ஆகவே, இச்சத்தியே வழிபட எல்லாப் பயன்களும் எய்தும்' என்பதாம். 'ஐம்பத்தாறு' என்பது தொகைக் குறிப்பாய் அக்கரங்களை உணர்த்திற்று. ஐம்பத்தாறும் வகையேயாக, அவற்றின்வழி விரியாய்ப் பிறக்கும் எழுத்துக்கள் அளவில் ஆதலின், "ஐம்பத்தறு வகை" என்றார். "சத்தி" என்பது அஃறிணையாய் ஒரு கால் பன்மையும் உணர்த்துமாதலின், "ஐம்பத்தாறு சத்தி" என ஓதினார். நேர்தரல், பொருந்துதல், சூழல் - இடம்; என்றது, சக்கர அறைகளை.*

*இதனால், சிவ சத்தியது முழுமுதல் தன்மையை விளக்கி மேலது தெளிவிக்கப்பட்டது.*

*1364. **தெளிவுரை :-** அவளது அழகிய மேனி சுற்றிலும் ஒளி வீசி விளங்குவது. அதில் கேசாதி பாதம் அணியப்பட்ட அணிகள் முத்தாலாகியன. கீழ் இரண்டு கைகளில் கிளியும், ஞான முத்திரையும், உயர எடுத்த இரண்டு கைகளில் பாச அங்குசங்களும் விளங்கும்.*

*குறிப்புரை :- "மேனியும்" என்னும் உம்மை சிறப்பு, "அழகிய மேனி" என்பதை முதலிற் கூட்டி உரைக்க. பாசத்தைக் கூறவே, அங்குசமும் பெறப்பட்டது.*

**1366.** கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி
பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்
விண்ணமர் சோதி விளங்க ஹிரீங்காரம்
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. **66**

**1367.** மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்
கண்டத் துள்ளே கருதி யிருந்திடும்
விண்டகத் துள்ளே விளங்கி வருதலால்
தண்டகத் துள்ளவை தாங்கலு மாமே. **67**

---

*இதனால், வருகின்ற மந்திரத்திற் கூறப்படும் பயனுக்கு ஏற்புடைய வடிவு கூறப்பட்டது.*

*1365.* **தெளிவுரை :-** *சத்தியை மேற்கூறிய வடிவினளாக உங்கள் உள்ளத்தில் அன்போடு தியானியுங்கள்; துன்பங்கள் யாவும் ஒழியும்; ஐந்தாண்டிற்குள்ளே, பிறவிக்கு முதலாகிய மலங்களைப் போக்கி, 'பூமியிலே காணப்படும் சிவன்' என்னும் நிலையை நீங்கள் அடையச் செய்வாள்.*

**குறிப்புரை :-** *இரண்டாம் அடியை முதலிற் கொள்க. வேராதல் பிறவிக்கு, 'கண்ணுதலாகுமே' என்பது பாடம் அன்று. மேல், (பா. 1361) 'ஓராண்டில் தினகரனாரிடச் செய்தியதாம்' என்பது சிவயோக சித்தியைக் கூறியதும் இது சிவமாந் தன்மைப் பெருவாழ்வைக் கூறியதும் என்க. காசினி - பூமி. நாசம் - கேடு.*

*இதனால், பிறிதொரு பயன் பற்றிய வழிபாடு கூறப்பட்டது.*

*1366.* **தெளிவுரை :-** *அருட் சத்தியின் அருள் கிடைத்தற்குரிய வழியில் நாதமும் ஒத்து நிற்கும்படி நிற்க வேண்டில், சிவசோதி விளங்கும்படி சத்தியை வழிபடுதற்குரிய சக்கரம் ஹ்ரீங்கார சக்கரமேயாம்.*

**குறிப்புரை :-** *இச்சக்கரம் முன்னை யதிகாரத்திற் கூறிய புவனாபதி சக்கரமே. அதிகாரம் வேறாய வழியும் அதனைக் கூறியது. அதன்வழி நின்று அருளாகியப் பின் இங்குக் கூறிய சிவமாதலை எய்துக என்றற்கு கண் - கண்ணோட்டம்; அருள்.*

*இதனால், ஒரு பயன்கருதி மேற்போந்ததொன்று மறித்துணர்த்தப்பட்டது.*

*1367.* **தெளிவுரை :-** *நவாக்கரி சக்கரத்துள் விளக்குப் போல ஒளிவிட்டுத் தோன்றுகின்ற சத்தியை உள்ளத்திலே கண்டு, பின்*

**1368.** **தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்**
**தோங்கி யெழுங்கலைக் குள்உணர் வானவள்**
**ஏங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட**
**வாங்கிய நாதம் வலியுட னாகுமே.** **68**

**1369.** **நாவுக்கு நாயகி நன்மணி பூண்ஆரம்**
**பூவுக்கு நாயகி பொன்முடி ஆடையாம்**
**பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தள்**
**ஆவுக்கு நாயகி அன்றமர்ந் தாளே.** **69**

---

*இடையறாது தியானித்திருங்கள். அத்தியானத்தில் அவள் மேலும் விளங்க முற்று வருதலால், சுழுமுனையில் உள்ள ஆதாரங்களில் நிகழும் அனுபவங்களை நீங்கள் முறையானே பெற்று உயரலாம்.*

*குறிப்புரை :-* விண்டு - தனது இயல்பைப் புலப்படுத்தி. தண்டு - முதுகந்தண்டு; அஃது ஆகுபெயராய்ச் சுழுமுனை நாடியை உணர்த்திற்று. 'நவாக்கரி சக்கரங்களை முறையாக வழிபட யோகம் படிமுறையால் முதிர்ந்து பயன்தரும்' என்றவாறு. அவை - அம்மை, பிராணன் என்ற இரண்டையும்.

இதனால், நவாக்கரி சக்கர வழிபாட்டின் பயன் ஒன்று கூறப்பட்டது.

*1368. தெளிவுரை :-* உந்தித்தானம் தாங்கியுள்ள தாமரை மலராகிய ஆதார சக்கரத்தினின்றும் வளர்ந்தெழுவதாகிய பிராசாத கலைகளுக்குள் அறிவு வடிவாய் நிற்கின்ற சத்தி, பிராசாத யோகி வருந்தும்படி வருகின்ற அவனது பிறப்பை நீக்க எண்ணி, அங்ஙனமே நீக்குதலால், அவனைத் தன்வழிப்படுத்திவந்த நாதம் அவனது வழிக்கு துணையாய் அவன் வயமாகும். நாதம் வாங்குதலாவது நாதம் வெளிப்படாதவாறு உபாசகன் மூலாதாரத்தைச் சுருக்குதலாகிய மூலபந்தம் செய்தலாம். மூலபந்தத்தை ஒருவன் ஒழுங்காக விதிப்படி செய்யின் பிராணன் அபானன் ஆகிய வாயுக்கள் இரண்டும் சுழுமுனையிற் பிரவேசிக்க நாதம் வெளிப்படும். நாதமும் முற்கூறிய இரண்டும் சேர்ந்து இதயத்தின் மேற்சென்று நாதபிந்துக்கள் ஒன்றுபட்டுப் பிரமந்திரத்திற் செல்கின்றன. அதனாற் பிறவியறுதலும் நாதபலமும் விளையும் நாபித் தடமலர் மண்டலம் - மணிபூரக சக்கரம். ஏங்க - வருந்த. வாங்கிய நாதம் - வெளிப்படாதவாறு பந்தித்த நாதம்.

**1370.** **அன்றிரு கையில் அளந்த பொருள்முறை**
**இன்றிரு கையில் எடுத்தவெண் குண்டிகை**
**மன்றது காணும் வழியது வாகவே**
**கண்டங் கிருந்தவர்க் காரணி காணுமே.** **70**

---

*குறிப்புரை :- உந்தித் தானச் சக்கரம், மணிபூரகம். அது மேதா கலைத்தொடக்கமாதலின் அதனையே பிராசாத கலை ஓங்கி எழும் இடமாகக் கூறினார். ஈற்றடியில் கூறியது. மேல் (பா.1366) "நாதம் பகையற" என்றதேயாதலை நோக்குக.*

*இதனால், மேற்கூறிய வழிபாட்டினால் வாசியோக மேயன்றிப் பிராசாத யோகமும் கைவருதல் கூறப்பட்டது.*

*1369.* **தெளிவுரை :-** *நாதத்திற்குத் தலைவியாகிய வாகீசுவரி நல்ல மாணிக்கத்தால் ஆகிய ஆபரணத்தையும், ஆரத்தையும் அணிந்தவள். செந்தாமரை மலராம் இல்லத்திற்குத் தலைவியாகிய திருமகள் பொன்னாலாகிய முடியையும், ஆடையையும் கொண்டவள். பாடல்களுக்குத் தலைவியாகிய கலைமகள் பால்போலும் வெண்ணிறம் பெற்றவள். பசுக்களாகிய உயிர்கள் அனைத்திற்கும் தலைவியாகிய சிவசத்தி படைப்புக் காலந்தொட்டே இவரிடத்து இருந்து அருள் புரிகின்றாள்.*

**குறிப்புரை :-** *அவரவர் தோற்றப் பொலிவுகளை எடுத்துக் கூறியது, அவர்களிடையே உள்ள தார தம்மியங்களைக் குறிப்பாற் கூறி, சிவசத்தி அவர் எல்லாரிடத்தும் உள்நின்று பல செயல்களையும் ஏற்ற பெற்றியால் அவர்வழி நிகழ்வித்தலை உணர்த்தற்கு. 'அங்கமர்ந்தாளே' என்பது பாடம் ஆகாமை அந்தாதிக்கு ஏலாமையான் அறியப்படும்.*

*இதனால், வேறு வேறு தேவியர் வழி பெறப்படும் பயன்களும் சிவ சத்தியால் தரப்படுவனவேயாதல் கூறப்பட்டது.*

*1370.* **தெளிவுரை :-** *யோகப் பயிற்சித் தொடக்க காலத்தில் இடை பிங்கலைகள் இருபக்கங்களிலும் பன்னிரண்டும், நாலும் பதினாறுமான மாத்திரைக்காலமான அளந்த பிராணவாயுவாகிய பொருளை ஒழுங்கு படுத்தும் முறையும் இன்று நவாக்கரி தியானத்தால், பெரிய கையில் எடுத்த வெண்குண்டிகையாகிய சுழுமுனையும் ஆகிய இந்த இரண்டையும், புருவமத்தியாகிய மன்றைக் காணும் வழியாகக் கண்டு புருவமத்தியாகிற விசுத்தித்*

**1371.** காரணி சத்திகள் ஐம்பத் திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்கும்
காரணி தன்னரு ளாகிநின் றாளே. 71

**1372.** நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடில்
கண்டஇவ் வன்னி கலந்திடும் ஓராண்டில்
கொண்ட விரதம்நீர் குன்றாமல் நின்றிடில்
மன்றினில் ஆடும் மணியது காணுமே. 72

---

*தானத்தை விட்டு இறங்காது அங்கேயே இருந்தனர் பரமகாரணியாகிய சத்தியைக் காண்பார் என்றவாறு.*

*சித்த பரிபாஷையாக மந்திர செபத்திற்கு இன்றியமையாத பிராணயாம முறைகளை இருகையிலளந்த பொருள் முறை என்றும், எடுத்த வெண்குண்டிகை என்றும் கூறுதல் உற்று அறிக. உத்தம மத்திம அதம பிராணாயாம அளவுகளைக் குறிக்க அளந்த என்றும், சுழு முனையில் பிராணாயாமம் செய்தபோது மூலத்தினின்று குண்டலினி சக்தியையும், கணலையும் எடுத்து மேற்சேறலின் எடுத்த என்றும் குறிப்பித்தவாறாம். மற்று, சபை, விசுத்தி என்பன ஒருபொருட் கிளவிகள். பிராணாயாம முறைகளையே சித்தசபையாகிய விசுத்தியைக் காணும் வழியாகக் கொண்டவர்களே சத்தியைத் தரிசிப்பார்கள் என்பதாம். காரணி - எல்லாம் தோன்றற்குக் காரணமாக இருப்பவள்.*

*1371. தெளிவுரை :- எப்பொருட்கும் காரணியாகிய சிவ சத்தி, பிற சத்திகளாய்க் கன்னியராய் உள்ள ஐம்பத்திருவராய்ச் சக்கரங்களுள் மறைந்து தனது இயல்பான அருள் வெளிப்பட நிற்கின்றாள்.*

*குறிப்புரை :- "காரணி" என்பன பலவும் சொற்பொருட் பின்வரு நிலையாய் நின்றன. சத்திகள் ஐம்பதிருவராவார். ஐம்பத்தோர் அக்கரங்கட்கும், ஓங்காரத்திற்கும் உரியவர் என்க.*

*இதனால், எந்த அக்கரங்கள் எந்த வகையில் அமைந்த சக்கரமாயினும் அதில் நின்று அருள்புரிபவள் சிவ சத்தியே என்பது உணர்த்து முகத்தால், நவாக்கரி சக்கரங்களும் அன்னவாதல் கூறப்பட்டது.*

**1373.** கண்டஇச் சத்தி இருதய பங்கயம்
கொண்டஇத் தத்துவ நாயகி யானவள்
பண்டை அவாவுப் பகையை யறுத்திட
இன்றென் மனத்தில் இனிதிருந்தாளே. **73**

**1374.** இருந்தஇச் சத்தி இருநாலு கையில்
பரந்தஇப் பூக்கிளி பாசம் மழுவாள்
கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங்
குரந்தங் கிருந்தவள் கூத்துகந்தாளே. **74**

---

*1372.* ***தெளிவுரை :-*** *நவாக்கரி சக்கரத்தில் நிற்கின்ற சத்தி உங்கள் உள்ளத்தில் நிலைபெறும் வகையில் நீங்கள் ஒழுகினால், உங்களைக் கண்டுகொண்டிருந்த ஒளியாகிய சத்தி ஓராண்டில் உங்கட்கு வெளிப்படுவாள். அதற்குப் பின்னும் நீங்கள் அவ்வொழுக்கம் சிறிதும் குறையாதபடி கடைப்பிடித்து நின்றால், மேற்கூறிய அம்பலத்தில் நடிப்பவன் உங்கட்குக் காணப்படுவான்.*

***குறிப்புரை :-*** *இதன்கண் இனவெதுகை வந்தது. வன்னி-சோதி.*

*இதனால், உறுதியான ஒழுக்கம் படிமுறையில் பயனை மேன்மேலாகத் தருதல் கூறப்பட்டது.*

*1373.* ***தெளிவுரை :-*** *எல்லா உயிரையும் காண்கின்றவளும், எனது உள்ளத் தாமரையை இடமாகக் கொண்டு இருக்கின்ற மெய்ப்பொருளானவளும் ஆகிய இச்சத்தி, தொன்று தொட்டு வருகின்ற எனது 'அவா' என்கின்ற பகையை அறுத்து அருள் செய்தற் பொருட்டே என் உள்ளத்தில் இனிது வீற்றிருக்கின்றாள்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், அவளை நீங்களும் உங்கள் உள்ளத்துள் இருக்கச் செய்தால் உங்கட்கும் அவ்வாறு அருள் செய்வாள்' என்பது குறிப்பெச்சம்.*

> *இன்பம் இடையறா தீண்டும் அவாஎன்னும்*
> *துன்பத்துள் துன்பங் கெடின். - குறள், 369*

*என்ப ஆகலின், அவாவே பெரும்பகையும், அதனைப் போக்குதல் முதற்பயனும் அயின. 'அவா' என்பதன் ஈற்றில் ஓர் உகரம் கூட்டி ஓதினார். இதனை, 'பண்டை ஆயு' எனவும், 'பண்டை வாயு' எனவும் தாம் வேண்டுமாறே ஓதி, அவற்றிற்கு ஏற்ப உரைப்ப. இதனுள்ளும் இனவெதுகை வந்தது.*

**1375.** **உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்**
**பரந்த பவளமும் பட்டாடை சாத்தி**
**மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து**
**தழைந்தங் கிருந்தவள் தான்பச்சை யாமே. 75**

**1376.** **பச்சை இவளுக்குப் பாங்கிமார் ஆறெட்டு**
**கொச்சையார் எண்மர்கள் கூடி வருதலால்**
**கச்சணி கொங்கைகள் கையிருங் காப்பதாய்**
**எய்ச்ச இடைச்சி இனிதிருந் தாளே. 76**

---

*இதனால், இச்சத்தி வழிபாடு ஆசையை அறச்செய்தல் கூறப்பட்டது.*

*1374. **தெளிவுரை :-** என் உள்ளத்தில் இருக்கின்ற இவளே எட்டுக்கைகளை உடையவளாயும், அக்கைகளில், 'தாமரை மலர், கிளி, பாசம், மழு, வாள், எதிர்வரும் கருவியைத் தடுக்கின்ற கேடகம், வில், அம்பு' என்ற இவைகளை ஏந்தி வீரநடனம் புரிபவளாயும் விளங்குவாள்.*

*குறிப்புரை :- கைகளின் பரப்பை அவற்றில் உள்ள படைக்கலங்கள் மேல்வைத்து ஓதினார். 'பரந்த இருநாலுகையில்' எனக் கூட்டினும் ஆம், உரம் இங்கு, வீரம். இதன்பின் உள்ள 'தங்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. இவ் அடியில் மோனை ஈற்றயச்சீரின் இறுதி அசைக்கண் வந்தது.*

*இதனால், நவாக்கரி சக்கர சத்தியது மற்றொரு வடிவு வேறுபாடு கூறப்பட்டது.*

*1375. **தெளிவுரை :-** மேற்கூறிய வீர சத்தி பச்சை நிறங்கொண்டவள்; பொன்முடியை விரும்பிக் கவித்தவள்; ஆரமாகப் பரந்த முத்துக்களையும், பவளங்களையும் அணிந்து, பட்டாடை உடுத்து, புடை பரந்த கொங்கைகளின்மேல் இரத்தினக் கச்சு அணிந்து, மிகவும் பொலிவுடன் விளங்குவாள்.*

*குறிப்புரை :- 'தான் பச்சையாம்' என்பதை முதலிற் கொள்க. அவ்வாறின்றி முதற்கண் எழுவாய் வருவித்துரைத்தலுமாம். தான், மேற்கூறப்பட்டவள். 'பச்சையம்மன்' என ஒரு தேவி தமிழ்நாட்டில் இருத்தல் இங்கு நினைக்கத்தக்கது. 'பச்சையம்மாள், பச்சையப்பன்'*

**1377.** தாளதி னுள்ளே தயங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்து கம் ஜம் என்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே. **77**

**1378.** விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்
கண்ணமர் கூபம் கலந்து வருதலால்
பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது
தண்ணமர் கூபம் தழைத்தது காணுமே. **78**

---

என்னும் பெயர்கள் இவளை ஒட்டியே மக்களுக்கும் இடப்படுகின்றன. இது மூன்றாமெழுத்தெதுகை பெற்றது.

இதனால், மேற்கூறிய சத்தியது வடிவழகு வகுத்துக் கூறப்பட்டது.

*1376. **தெளிவுரை :-*** பச்சை நிறம் உடைய இச்சத்திக்குப் பொதுமைப் பாங்கியர் நாற்பத்தெண்மரும், அணுக்கப்பாங்கியர் எண்மரும் சேர்ந்து பணிவிடை புரிந்து வருதலால், அவர்கள் அம்மருங்கும் பெரிய காவலாய் இருக்க இவள் பெருமையோடு வீற்றிருக்கின்றாள்.

***குறிப்புரை :-*** மேல் (பா.1363) 'ஐம்பத்தாறு சத்திகள்' எனப்பட்டார் இங்ஙனம் நாற்பத்தெண்மரும், எண்மருமாய்ப் பிரிந்து நிற்கின்றார் என்க. எண்மர், முதற்கண்நிற்கும் அகாரத்திற்கும், இறுதி இரண்டெழுத்திற்கும் சூக்கும பஞ்சாக்கரத்திற்கும் உரியவராகக் கொள்ளுதல் பொருந்தும். கொச்சையார் - கொஞ்சிப் பேசும் சொற்களையுடையவர். இப்பெயரும், ''கச்சணி கொங்கைகள்'' என்றதும் பாங்கிமார்களையே. "கொங்கைகள்" என்ற பன்மை மகளிர் மேலது. கை - பக்கம்; என்றது திசைகளை எனவே, எட்டுத் திசைக்கும் எண்மர் உளர் எனவும், ''ஆறெட்டு'' என்றதனால், 'அவருள் ஒருத்திக்கு அறுவர் துணையாவர்' எனவும் கொள்க. 'எய்த்த' என்பது "எச்ச" எனப் போலியாயிற்று.

இதனால், இச்சத்தி தனது முதன்மை தோன்ற வீற்றிருக்கும் முறை கூறப்பட்டது.

*1377. **தெளிவுரை :-*** நாவடியில் பொருந்திய ஒளிவடிவாய்

**1379.** கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்திதயங்கி வருதலால்
ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து
பாபத் தறுக்கப் பரந்தன சூலமே. 79

---

விளங்குகின்ற சத்தியைப் பிராண வாயுத் துணையாக, 'கம், ஐம்' என்று செபிக்கும் செபத்தால் தலைப்பட்டு அன்போடு வழிபட்டு, அதன் பயனாக மிக்க ஒளியுடைய உடம்போடு வானத்தில் இயங்கும் (ஆகாய கமனம் செய்யும்) ஆற்றலைப் பெறுவாயாக.

*குறிப்புரை :-* அந்தாதி நயம் வேண்டி, சிறுபான்மை லகரத்திற்கு ளகரம் போலியாகும் முறைமையை மேற்கொண்டு, 'தாலது' எனற்பாலதனை, 'தாளது' என ஓதினார். 'கம்' என்பதும் ஆகாயத்திற்குரிய பீசமாகும். 'ஐம்' என்பது ஐகத்துக்குத் தலைவியாம் ஐகதா தேவிதன் பீசம். இவற்றைச் செபித்து இவளை வழிபடவே வான்வழி இயங்கும் ஆற்றல் உண்டாவதாம். 'ஐம்' என்னாது, 'ஐம்' எனப் பொதுப்பட ஓதுதல் பாடமாகாது. மிக்க ஒளியது நிறம் வெண்மையாகலின், "பாலதுபோலப் பரந்து" என்றார். முதலடி இனவெதுகை.

இதனால், இச்சத்தியை ஒரு சிறப்புப் பயன் கருதி வழிபடும் முறைமை கூறப்பட்டது.

*1378. தெளிவுரை :-* நன்கமைந்த சூரிய மண்டலமானது பிராணவாயு கும்பிக்கப்பட்டுத் தங்கியிருக்கின்ற, கொப்பூழின் அடியாகிய சுவாதிட்டானத்திற்கும், இருதயத்திற்கும் இடைக்கண் உள்ள மணிபூரகத்திலும் கலந்து நிற்றலால், குளிர்ச்சியுடைய அந்த மணிபூரகமும் சிறந்து நிற்கின்றது.

*குறிப்புரை :-* மூன்றாம் அடியை முதலில் கூட்டி உரைக்க. "ஆங்கு" என்றது, 'அவ்விடங்கட்கு' எனப் பொருள்தந்தது. சூரிய மண்டலமாவது, 'மணிபூரகம், அநாகதம்' என்னும் இரண்டு ஆதார எல்லைக்குட்பட்ட பகுதி. அஃது அன்னதாதலாலே நீர்மண்டலமாய் உள்ள மணி பூரகமும் சிறப்பதாயிற்று என்றவாறு. நீர்மண்டலமே இன்னதாயிற்றுவாயிற்று. 'ஞாயிற்று மண்டலத்தாலே யாவும் நலமுறுகின்றன' என்றவாறு. இங்ஙனமாகவே மேற்கூறியவாறு வானில் இயங்கும்வன்மை பெற்றவர் நலம்பல எய்துவர் என்பதாம்

**1380.** சூலந்தண் டொள்வாள் சுடர்பர ஞானமாம்
வேலம்பு தமருகம் மாகிளி வில்செண்டு
காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு
கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே. **80**

**1381.** எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்
எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராய்
எண்ணிய பூவித முள்ளே யிருந்தவள்
எண்ணிய எண்ணம் கடந்துநின் றாளே. **81**

---

*நீர்மண்டல மாயதை, "கூபம்" என்றார். கூபம் - குளம். இங்கு குளம் போன்ற கண்ணைக் குறித்தது. பண் - நாதம்.*

*இதனால், மேற்கூறிய பயனைப் பெற்றாரது சிறப்புக் குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*1379.* ***தெளிவுரை :-*** *சூரிய மண்டலத்துச் சத்தியின் கூறு மணிபூரக சத்தியோடு கலந்து நிற்றலால், மணிபூரக சத்திக்குப் பத்து முகங்கள் உள்ளனவாம். பத்து முகங்கள் உளவாகவே கைகள் இருபது உள்ளன. பாபத்தை அறுப்பது சூலம் ஆதலால், சூலங்கள் பல கைகளில் உள்ளன.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதலிற் கூட்டி உரைக்க. 'ஆபத்தைப் போக்குகின்ற கைகள்' என்க. 'பாபத்தை' என்னும் ஐகாரம் தொகுத்தலாயிற்று. 'பாசம் அறுக்க' என்பது பாடம் அன்று.*

*இதனால், "தழைத்தது" என மேற்கூறப்பட்ட ஆதாரத்தில் விளங்கும் சத்தியது வடிவு கூறப்பட்டது.*

*1380.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய சத்திதன் கைகள் இருபதில் மேற்கூறியவாறு பல சூலங்களுடன், 'தண்டு, ஒளி பொருந்திய வாள், நெருப்பு, மேலான ஞானமாகிய வேல், அம்பு, தமருகம், கிளி, வில், செண்டு, தாமரை மலர், பாசம், மழு, கத்தி, அழகிய சங்கு' என்பன உள.*

***குறிப்புரை :-*** *சுடர், ஆகுபெயர், குவிந்த - குவிந்தன; சேர்ந்தன. 'கை எண்ணதில் சேர்ந்தன' என்க. எண் - தொகை. சூலமல்லாது இங்குக் கூறப்பட்டவை பதினான்கு. அபயமும், வரதமும் இயல்பாக உள்ளன. ஆகவே, எஞ்சிய நான்கு கைகளிலும் சூலமே உளவாதல் மேலை மந்திரத்தால் பெறப்பட்டது. செண்டு, ஓர் ஆயுதம். 'கொண்டு' என்பது பாடம் அன்று. இரண்டாமடியில் முதல் இரு சீர்களை*

**1382.** கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு
தொடர்ந்தணி முத்துப் பவளம் கச்சாகப்
படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு
மடந்தை சிறியவள் வந்துநின் றாளே. 82

**1383.** நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே
கண்டிடு மேரு அணிமாதி தானாகிப்
பண்டைய வானின் பகட்டை அறுத்திட்டு
ஒன்றிய தீபம் உணர்ந்தாற்குண் டாமே. 83

---

*வகையுளி செய்து கொள்க.*

*இதனால், மேற்கூறிய சத்தியின் கைகளில் உள்ளவை கூறப்பட்டன.*

*1381.* **தெளிவுரை :-** *தியானத்திற்குப் பொருந்தி சுவாதிட்டானம் முதலிய நான்கு ஆதாரங்களில் உள்ள தாமரையிதழ்கள் நாற்பத்து நான்கில் அமர்ந்திருக்கும் நாற்பத்து நான்கு சத்திகளோடும் தானும் நாற்பத்து நான்கு சத்தியாய் அந்த நாற்பத்து நான்கு இதழ்களிலும் வீற்றிருக்கின்ற சிவ சத்தி. அவ்வாதாரங்களில் வைத்துத் தியானிக்கின்ற தியானத்தைக் கடந்தவளாவாள்.*

**குறிப்புரை :-** *'அஃதாவது, ஆஞ்ஞை முதலிய மேல் நிலங்களில் இருப்பவள்' என்பதாம். எண் - எண்ணம்; முதனிலைத் தொழிற்பெயர். அஃது எண்ணத்திற்கு உரிய இடத்தை உணர்த்திற்று. "சத்திகள்" இரண்டில் முன்னது, சத்திகளைப் பெற்று நின்றவரைக் குறித்த முகமனுரை. அவர்களை அஃறிணை போலவே கூறியதும் இதுபற்றி மேல் நிலத்தில் உள்ள சத்தி, கீழ்நிலங்களில் உள்ள தெய்வங்களிடமாக நின்று அருள்புரியும் முறை கூறியவாறு.*

*இதனால், இச்சக்கர வழிபாட்டில் நிகழும் பல தியானங்கட்குப் பயன் தருபவள் சிவசத்தியாதல் விளக்கப்பட்டது.*

*1382.* **தெளிவுரை :-** *கீழ் நிலங்களைக் கடந்து மேல் நிலத்தில் இருப்பவளாகிய அச் சத்தி அடியவர் பொருட்டு, தலையிற் கவிக்கும் முடி பொன்னால் இயன்றதும், காதில் அணியும் தோடு மாணிக்கத்தால் இயன்றதும், கழுத்து முதலியவற்றில் தொடரப் பொருந்திய அணிகள் முத்துக்களால் இயன்றனவும், கச்சுப் பவளத்தால் இயன்றதும், அரையில் உடுத்திய உடை பட்டினால்*

**1384.** **உண்டோர் அதோமுகம் உத்தம மானது**
**கண்டஇச் சத்தி சதாசிவ நாயகி**
**கொண்ட முகம்ஐந்து கூறுங் கரங்களும்**
**ஒன்றிரண்டாகவே மூன்றுநா லானவே.** **84**

---

*இயன்றதும், பாதத்தில் அணிவது சிலம்புமாக, இளம் பெண்ணாய்க் கீழ் நிலங்களிலும் வந்து நிற்கின்றாள்.*

*குறிப்புரை :-* "பொன் முடி, மாணிக்கத்தோடு" முதலியவற்றை, 'முடிபொன், தோடு மாணிக்கம்' முதலியனவாக மொழிமாற்றி, எல்லா இடங்களிலும் 'ஆக' என்பதை இயைத்துக் கொள்க. 'அல்குல் ஆடைபட்டு' எனக் கூட்டுக. பாதம் ஆகுபெயர், "மடந்தை சிறியவள்" என்பது இருபெயரொட்டு. 'சிறியவளாய்' என ஆக்கம் வருவிக்க. சிறியவள், வாலை. "சிறியவளாய்" என்பதை, 'சிறீயினில், குமீறியில், கமீறியில்' என்பனவாக வேறு வேறு ஓதி, 'அவ்வப் பீசாக்கரத்தில் வந்து நின்றாள்' எனவும் பொருள் கொள்வர். கும் - க்ரோம்.

*இதனால், மேலைச்சத்தி கீழ் நிலங்களில் இளையவளாய் நிற்றலும், அவளது வடிவமும் கூறப்பட்டன.*

*1383.* **தெளிவுரை :-** *படிமுறையால் மேருவின்மேல் ஏறிச் சென்று, முடிவாகப் பார்க்கின்ற அதன் உச்சியில் அணிமா ஆதி அட்ட சித்திகளும் கைவந்தவனாய் நின்று, பழைய வெளியிடத்தில் உள்ள புறக் கவர்ச்சிகளை ஒதுக்கித் தள்ளி அவ்விடத்தில் பொருந்திய ஒளியை உணர்ந்து நிற்பவனுக்கு, மேற் சொல்லிய சத்தி இடையறாது உடன் நிற்றல் உளதாகும்.*

*குறிப்புரை :-* இரண்டாம் அடி முதலாகச் சென்று, "உண்டாம்" என்பதனை முதலடியின் இறுதியில் கூட்டி உரைக்க. இதன்கண் இன எதுகை வந்தது. நிரந்தரம் - இடையீடின்றி. பகட்டு - வீண் பெருமை.

*இதனால், மேற்கூறிய சத்தி, என்றும் உடனாகப்பெறும் பயனைப் பெறுமாறு கூறப்பட்டது.*

*1384.* **தெளிவுரை :-** *சதாசிவனது சத்தியாகிய சதாசிவைக்கு (அவனைப் போலவே) யாவரும் காண உள்ள முகங்கள் ஐந்து. எனினும், ஆறாவதாக அதோமுகம் ஒன்றும் (அங்ஙனமே) உண்டு. மேலான அந்தமுகமே, மேல் "சிறியள்" (வாலை. பா. 1382) எனப்பட்ட சத்தி. இனிச் சதாசிவைக்கு முகம் ஆறானதற்கு ஏற்பக் கரங்களும்*

**1385.** நன்மணி சூலம் கபாலம் கிளியுடன்
பன்மணி நாகம் மழுகதி பந்தாகும்
கன்மணி தாமரை கையில் தமருகம்
பொன்மணி பூணாரம் பூசனைக் கானவே. **85**

**1386.** பூசனைக் கன்னிகள் எண்ணைவர் சூழவே
நேசவண் சத்திகள் நாற்பத்து நேரதாய்க்
காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவர்
மாசடை யாமல் மகிழ்ந்திருந் தார்களே. **86**

---

*ஒருமுகத்துக்கு இரண்டாகப் பன்னிரண்டு ஆயின.*

*குறிப்புரை :- "சதாசிவ நாயகி கொண்ட முகம் ஐந்து" என்பதனை முதலில் வைத்து. அதன்பின், 'எனினும்' என்பது வருவிக்க. 'உத்தமமான அது' என்பதில் ஓர் அகரமும், 'அதுவே' என்னும் ஏகாரமும் தொகுத்தல் பெற்றன. "கொண்ட" என்பதற்கு, 'யாவரும் அறியக் கொண்ட' என்பது ஆற்றலால் வந்தது. 'ஒன்றுக்கு' என நான்காவது விரிக்க.*

*மூன்று நால் - பன்னிரண்டு, ஈற்றடி எண்ணலங்காரமாயும் நின்றது. இரண்டாம் தந்திரத்துள், 'சிவனுக்கு அதோமுகம் ஒன்று உண்டு' என்பதும், 'அதுவே நிலவுலகத்தார்க்கு முருகன் முதலாக வந்து அருள் புரிவது' எனவும் கூறியவாறே (அதிகாரம், அதோமுக தரிசனம்) இங்கும் கூறப்பட்டமை நோக்கத் தக்கது. இதனுள்ளும் இன எதுகை வந்தது.*

*இதனால், மேல் நிலச் சத்தியது முழு நிலையின் பகுதியே கீழ் நிலத்திற்கு வந்து அருளுவதாதல் கூறப்பட்டது.*

*1385. **தெளிவுரை :-** சதாசிவையின் கைகளில், 'நல்ல ஒலியை எழுப்புகின்ற மணி, சூலம், கபாலம், கிளி, பாம்பு, மழு, கத்தி, பந்து, தாமரை மலர், தமருகம்' என்னும் இவைகள் இருத்தலாலும், பொன்னாலும், மணியாலும் ஆகிய அணிகலன்கள், மாலைகள் என்பவற்றை அவள் அணிந்திருத்தலாலும் அவளது கூறாகிய சத்திகளது வழிபாட்டிலும் இவை கொள்ளப்படும் பொருள்களாயின.*

*குறிப்புரை :- "பன் மணி" என்றது நாகத்திற்கு அடை. 'ஆகும் தாமரை' என இயையும். ஆகும் - ஏந்துதற்குப் பொருந்திய, கன்மணி தாமரை - மாணிக்கக் கல்போலும் செந்தாமரை மலர், மணி முதலிய*

**1387.** தாரத்தி னுள்ளே தங்கிய சோதியைப்
பாரத்தி னுள்ளே பரந்துள் ளெழுந்திட
வேரது ஒன்றி எழுந்த மனோமயம்
காரது போலக் கலந்தெழும் மண்ணிலே. **87**

**1388.** மண்ணில் எழுந்த மகார உகாரங்கள்
விண்ணில் எழுந்த சிவாய நமஎன்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே. **88**

---

*பத்துடன், அபயமும், வரதமும் கூடக் கைகள் பன்னிரண்டாதல் அறிக. பூணும், ஆரமும் மேனியில் அணியப்படுவன. 'பூசனை யானதே' என்பது பாடம் அன்று.*

*இதனால், மேற்கூறிய சத்திகள் பலரது வடிவுகள் அவ்வாறானமைக்குக் காரணம் கூறப்பட்டது.*

*1386. தெளிவுரை :- நவாக்கரி சக்கரங்களின் அடியில் சதுரமாய் உள்ள 'பூபுரம்' என்பதின் நான்கு மூலைகளிலும் ஒரு மூலைக்குப் பதின்மராக, வழிபடுதற்குரிய நாற்பதின்மர் தேவியர் சூழப் பொருந்தியிருப்பவர்கள், அருள்வடிவாகிய சிவசத்திக் கூறுகள் தங்களிடம் சேர்ந்திருந்தாலே, இடையூறின்றி மகிழ்ச்சியுடன் இருக்கின்றார்கள். அவர்களுக்கு நேராக விந்துவில் சத்தியாகிய பரை வீற்றிருப்பதை விளக்குவது இம்மந்திரம்.*

*குறிப்புரை :- 'கன்னிகள், சத்திகள்' என்பவற்றை அடிமாற்றி ஓதுதல் பாடமன்று. "காசினிச் சக்கரத்துள்ளே" என்பதை முதலில் வைத்தும் "கலந்தவர்" என்பதை முதலடியின் இறுதியிற் கூட்டியும் உரைக்க. காசினிச் சக்கரம் - பூப்பிரஸ்தாரம். பூப்பிரஸ்தாரம், கைலாச பிரஸ்தாரம், மேருப் பிரஸ்தாரம் எனச் சக்கரம் மூன்று வகைப்படும்.*

*இதனால், நவாக்கரி சக்கரங்களின் பூபுரத்தில் தேவியர் பலர் இருத்தல் கூறப்பட்டது. "நேசவண் சத்திகள் நாற்பத்து நேரதா - மாசடையாமல் மகிழ்ந்திருந்தார்களே" என்றது, இவர்கட்கும் சிவசத்தியது அருள் இன்றியமையாததனை நினைவுறுத்தியவாறு.*

*1387. தெளிவுரை :- மேற்கூறிய பூபுர தேவியர்பால் விளங்குகின்ற ஒளிவடிவான சிவசத்தியை உடம்பின் அகத்திலே ஆதாரங்களில் தியானிக்கின், எழுச்சி பெற்றுப் புற விடயங்களின் மேல் செல்லுகின்ற மனம், நிலத்திற் கலந்த நீர் அந்நிலத்தின்*

**1389.** என்றங் கிருந்த அமுத கலையிடைச்
சென்றங் கிருந்த அமுத பயோதரி
கண்ட கரம்இரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் கிருந்தது வண்ண அமுதே. **89**

---

*தன்மையதே ஆனாற் போலத் தியானிப்போனது தன்மைக்கு மாறாகாமல் அவனோடே பொருந்தி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *தாரம் - ஆதாரம். இது மேற்கூறிய சக்கரங்களுக்கு உரியதாய்ப் பூபுரத்தைக் குறித்துப் பின் அவற்றில் உள்ள தேவியர்களைக் குறித்தது. பாரம் - பருவுடல். "பரந்து" என்பதை, 'பரக்க' எனத் திரிக்க 'மண்ணிலே காரது போலக் கலந்தெழும்' என மாற்றிக் கொள்க. கார் - மேகம்; அது நீருக்கு ஆயிற்று. 'தாரம்மூலாதாரம்' எனவும், 'சோதி அதன் கண் உள்ள தீ' எனவும் கொண்டு, 'யோக முயற்சியால் மனோலயம் உளதாம்' என்பதே இம்மந்திரத்திற்குப் பொருளாக உரைப்பாரும் உளர். வேர் - ஒலிகளுக்கெல்லாம் வேரான பிரணவ நாதம்.*

*இதனால், இச்சக்கர வழிபாட்டில் சிவ சத்தியை மறவாமை வேண்டுதல் கூறப்பட்டது.*

*1388.* ***தெளிவுரை :-*** *பிருதிவி மண்டலமாகிய மூலாதாரத்தினின்று பிரணவமாகிய சூக்கும எழுத்தாய்ப் புறப்பட்ட நாதம், பின் வளர்ச்சி யுற்று ஆகாச மண்டலமாகிய ஆஞ்ஞையில் 'சிவாய நம' என்னும் தூல எழுத்தாய் வெளிப்பட்டு, அதற்குப் பின் கண்ணில் ஒளி வடிவாயும் என்னிடத்துப் பதிந்து நின்றது. ஆதலின் ஒளிக்காட்சி ஒருவராலும் காணப்படாதது அன்று; மற்றும் அது தன்னைக் காணுலுறுவார்க்குக் காட்சி தரவேண்டும் என்றே முன் வரும் இயல்புடையது.*

***குறிப்புரை :-*** *'விண்ணில் சிவாய நம என்று எழுந்து கண்ணில் எழுந்தது' என்க. பூபுர சத்திகட்கு உள்ளாயிருக்கும் சிவ சத்தியது காட்சி நாத தரிசனத்தின் வழிக் கூடும் என உணர்த்தியவாறு. தோற்ற முறை பற்றி, 'அகார உகார மகாரம்' என்றலேயன்றி, ஒடுக்கமுறை பற்றி 'மகார உகாரம் அகாரம்' என்றலும் கூடுமாதலின், 'மகாரம் உகாரங்கள்' என்றார். மோனை நயம் வேண்டாது, 'அகார உகாரங்கள்' என்றேயும் பாடம் ஓதுப. கொல், அசை.*

**1390.** அமுதம தாக அழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழும் உள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேடிலி தானே. **90**

**1391.** கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்
நாடிலி கன்னிகள் நாலொன் பதின்மரும்
பூவிலி பூவித முள்ளே யிருந்தவர்
நாளிலி தன்னை நணுகிநின் றார்களே. **91**

---

*இதனால், மேல், "தாரத்தினுள்ளே தயங்கிய சோதி" எனப்பட்ட சத்தியைத் தரிசிக்குமாறு கூறப்பட்டது.*

*1389. தெளிவுரை :- அமுதேஸ்வரின் நிறம் முதலியன உணர்த்துதல் நுதலிற்று. காட்சி வழங்குதற்காக என்று சந்திர மண்டலமாகிய ஆஞ்ஞாசக்கரத்தில் இருந்த அமுத கலையிடத்துச் சென்று தங்கிய அமுதம் போன்ற பாலைத் தாங்குகின்ற தனங்களை யுடையவளான சீபரமேசுவரி கண்டமும், கரங்களும் முறையே வெள்ளிபோல வெண்மை நிறமாகவும், பொன்னிறமாகவும் கொண்டு, கரம் ஒன்றில் மண்ணாற் செய்யப்பெற்ற கமண்டலம் தாங்கி எழுந்தருளியிருக்கும். அதன் நிறம் அமுதம்போல வெண்மையாம் என்றவாறு.*

*குறிப்புரை :- 'அதனை அவள் அடியவர்க்கு அள்ளிவழங்குவாள்' என்பது குறிப்பு. விந்துத் தானத்தில் அமுதம் உளதாதல் பற்றி அதனை "அமுத கலை" என்றார். 'தானம் அமுதம்; தானும் அமுத பயோதரி, அவற்றுக்குமேல் அவள் இரு கைகளில் அமுத பாத்திரத்தைக் கொண்டுள்ளாள்; அவள் தன் அடியவர்க்கு அமுதத்தை வழங்கத்தடை என்னை' என்பது நயம். 'கரத்தில்' என உருபுவிரிக்க. 'இரு மண்டைவாய்' என இயையும். அமுதத்திற்கு அழகு வெண்மை, இஃது இன எதுகை பெற்றது.*

*இதனால், ஆஞ்ஞையில் உள்ள சத்தியை அடைவோர் அமுதுண்ணப் பெறுதல் கூறப்பட்டது.*

*1390. தெளிவுரை :- அல்லி மொட்டுப்போலக் குளிர்ச்சியுடன் தோன்றுகிற முத்துப்போலும் நிறத்துடன், ஆநந்தமயமாக விளங்கும்*

**1392.** நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியும்
கண்டது சோதி கருத்துள் இருந்திடக்
கொண்டது ஓராண்டு கூடி வருதற்கு
விண்ட ஔகாரம் விளங்கின அன்றே. **92**

**1393.** விளங்கிடு வானிடை நின்றவ ரெல்லாம்
வணங்கிடு மண்டலம் மன்னுயி ராக
நலங்கிளர் நன்மைகள் நாரண னொத்துச்
சுணங்கிடை நின்றவை சொல்லலு மாமே. **93**

---

*ஒடுக்கமற்ற பரமேசுவரி அமுதம்போல நோக்கினார்கட்கினிமையும் வெண்மையும் சாவாமையும் மகிழ்ச்சியும் ஊட்டவல்ல அழகிய மேனியுடன் படிகம்போல நினைப்பவர் மனத்துள் பரிபூரணமாக விளங்கும் என்றவாறு.*

*கௌமுதம் - ஆனந்தம். முத்தினது பருமைக்கும் குளிர்ச்சிக்கும் குமுதம் உவமை. கேடிலி, அழகிய மேனியுடன் படிகமதாகப் பரந்தெழும் என்க.*

*இதனால், அச்சத்தி அவர்க்கு அமுதம் வழங்குமாறு கூறப்பட்டது. இதனுள் அவளது திருக்கோலமும் உடம்பொடு புணர்த்தலால் கொள்க.*

*1391. தெளிவுரை :- வியட்டியாய் நின்ற சிவ சத்திகள் முப்பத்தறுவரும், அவரைத் தேட வேண்டாது தம்மிடத்தே பொருந்தப் பெற்ற தேவியர் முப்பத்தறுவரும் ஆகப் பூபுரத்தை யிடமாகக் கொண்டு விளங்கும் தாமரை மலர்களின் இதழ்களில் உள்ள இவர்கள் நாள் வரையறையின்றி எந்நாளும் வழிபடுகின்ற அடியவன்பால் பொருந்தி நிற்பார்கள்.*

*குறிப்புரை :- ''முப்பத்தறுவர்'' எனவே, இவர்கள் தத்துவங்களைச் செலுத்துவோராதல் பெறப்படும். படவே, இவர்களது விளக்கத்தைப் பெற்றோன் தத்துவத் தொடக்கின நீங்குதல் விளங்கும். பின்னிரண்டடிகளில் உயிரெதுகை வந்தது.*

*இதனால், நவாக்கரி சக்கர வழிபாட்டை வாழ்நாளளவும் செய்ய, மாயைத் தொடங்கு நீங்குதல் கூறப்பட்டது. நாடிலி - நாடற்கரிய. பூவிலி - பிறப்பில்லாதவள். பூ - பிறப்பு. நணுகல் - பொருந்தல்.*

**1394.** ஆமே அதோமுகம் மேலே அமுதமாய்த்
தானே உகாரம் தழைத்தெழும் சோமனும்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. **94**

---

*1392.* ***தெளிவுரை :-*** *நவாக்கரி பீசத்தால் சித்தியெல்லாம் பெருகுதல் உணர்த்துதல் நுதலிற்று.*

*இதயத் தாமரையில் நிறைந்து விளங்கும் ஒளியுருவுடைய சிவம் நின்றது. அதன் ஒளியாகிய சத்தி மண்டலத்துள் நீங்காது அனவரதமும் விளங்கக் கண்டதாம். இங்ஙனம் கண்டு கொண்டதாகிய ஒளி சித்தியாதற்கு ஓராண்டுக்காலம் முற்கூறப்பட்ட ஔகாராதி பீசங்கள் விளங்கின என்றவாறு.*

*வன்னி - தீயுருவச்சிவம். ஔகராதி ஒன்பது பீசங்களையும் ஓராண்டுச் செபிக்க மனத்துள் வன்னி வடிவச் சிவமும் சோதி வடிவச் சிவையும் வெளிப்பட்டுச் சித்தி தருவர் என்பது கருத்து.*

*இதனால், அவ்வழிபாட்டினை ஓராண்டுச் செய்வார் பெறும் பயன் கூறப்பட்டது.*

*1393.* ***தெளிவுரை :-*** *ஒளிவிட்டு விளங்குகின்ற வானுலகத்தில் உள்ள தேவர் யாவரும் வழிபடுகின்ற நவாக்கரி சக்கரம் மக்கள் உள்ளத்தில் நிலைபெற்ற பின் அதனால் உண்டாகும் இன்பம் மிகுகின்ற நன்மைகள் பரம பதத்தில் இருக்கும் மாயோனுக்கு உள்ள நன்மைகளை ஒக்குமாயின், அவற்றின் பெருமைகளை வினைத்துன்பத்தில் நின்று கொண்டு சொல்ல இயலுமோ!*

***குறிப்புரை :-*** *''மன்னுயிர்'' என்றது தலைமை பற்றி மக்களுயிரைக் குறித்தது. "ஆக" என்பதை 'ஆனபின்' எனவும் "ஒத்து" என்பதை, 'ஒக்கின்' எனவும் திரித்துக் கொள்க. "நாரணன்" ஆகுபெயர். சுணங்கு - நலிவு. ஒன்று, மூன்று அடிகள் உயிரெதுகை பெற்றன.*

*இதனால், இச்சக்கர வழிபாடு போகத்தை மிகத் தருதல் கூறப்பட்டது.*

*1394.* ***தெளிவுரை :-*** *பிரணவ கலைகளுள் உகாரகலை மிகுந்து ஓங்கி முற்றுகின்ற சந்திர மண்டலம் நெற்றிநடு முதலாகிய மேல்*

**1395.** பொற்கொடி யாரிடைப் பூசனை செய்திட
அக்களி யாகிய ஆங்காரம் போயிடும்
மற்கட மாகிய மண்டலந் தன்னுளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. **95**

**1396.** பேதை இவளுக்குப் பெண்மை அழகாகும்
தாதை இவளுக்குத் தாணுவுமாய் நிற்கும்
மாதை இவளுக்கு மன்னும் திலகமாக்
கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே. **96**

---

*நிலங்களில் அமுதமாய், கீழ்நோக்கியுள்ள ஆயிர இதழ்த் தாமரையாய் விளங்கும். சோலைகளில் வெளிநிற்கின்ற கற்பகத் தருபோலும் சிவசத்தி, அச்சந்திர மண்டலத்தின் கீழுள்ள தாமரை மலர்களில் தேவியர் பலராய் விளங்குவாள்.*

*குறிப்புரை :- இரண்டாம் அடியை முதலில் வைத்து, "மேலே அமுதமாய் அதோமுகம் ஆம்" எனக் கூட்டி உரைக்க. 'தானேயாய்' என ஆக்கம் வருவிக்க. தானேயாதல், மிகுந்திருத்தல், அகார கலை பிரணவத்தின் தொடக்கமாக உகாரகலையே அதன் எழுச்சியாதல் அறிக. கா - சோலை.*

*சத்தி எழுந்தருளியிருத்தற்குச் சிறந்தது சோலையாதலின், அவளை அவ்விடத்து வெளிநிற்பவளாகக் கூறினார். இது சிறப்பாகக் கடம்பாடவியைக் குறிக்கும் என்பர். "கற்பகம்" என்றது உருவகம். சந்திர மணடலத்தில் நேரே விளங்குகின்ற சிவசத்தி. கீழ் ஆதாரங்களில் தேவியர் பலரிடமாக விளங்குவாள் என்றபடி. முதலிரண்டடிகளில் இது குறிப்பால் உணர்த்தப்பட்டது. இரண்டாமடி இன எதுகை பெற்றது. 'தாமே' என்பது பாடமன்று.*

*இதனால், 'ஆதார யோக முறையால் சத்தியை அடைக' என்பது கூறப்பட்டது.*

*1395. **தெளிவுரை :-** ஆதாரங்களில் விளங்கும் சாதன தேவியரைச் சிவசத்தியுடன் கூட வழிபடின், போக்குதற்கரிதாகிய அகங்காரம் நீங்கும். அங்ஙனம் வழிபட்டவன் அகங்காரத்தினின்று நீங்கி, நிறைந்த அமுதக்குடம் போலும் சந்திர மண்டலத்தில் சாத்திய தேவியாகிய சிவசத்தியைத் தலைப்படுவான்.*

**1397.** குவிந்தனர் சத்திகள் முப்பத்திருவர்
நடந்தனர் கன்னிகள் நாலெண்மர் சூழப்
பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே
இருந்தனர் காணும் இடம்பல கொண்டே. **97**

**1398.** கொண்டங் கிருந்தனர் கூத்தன் ஒளியினைக்
கண்டங் கிருந்தனர் காரணத் துள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்குத் தேடுமால்
இன்றென் மனத்துள்ளே இல்லடைந் தாளுமே. **98**

---

*குறிப்புரை :- "பொற்கொடியாளுடன்" என மேற்போந்ததனை அனுவதித்ததனால், பூசிக்கப்படுவார் சாதன தேவியராதல் பெறப்பட்டது. அகரம், பண்டறிசுட்டு. "அக்களியாகிய ஆங்காரம்", இருபெயரொட்டு. மத்கடமாகிய மண்டலம், சந்திர மண்டலம். சாத்தியத்தை, "பின்" என்றார். அக்களி - அக்களிப்பைத் தருவதாகிய ஆணவம். மன் - நிலைபெற்ற. கடம் - வெளி.*

*இதனால், ஆதார தேவியரது வழிபாட்டின் இன்றியமையாமை கூறப்பட்டது. இரண்டாம் அடி இன எதுகை.*

*1396. தெளிவுரை :- பெண்ணாகக் காணப்படுகின்ற இச் சத்திக்கு அங்ஙனம் காணப்படுதலே ஏற்புடைத்து. இவளுக்குத் தலைவனாய் உள்ள சிவன் அங்ஙனம் தலைவனாதலேயன்றித் தந்தையாயும் நிற்கும் இயல்புடையவனாவான். அழகியாய் உள்ள இச்சத்திக்கு இப்பூ மண்டலமே நெற்றித் திலகமாய் நிற்க, எண்ணிறந்த சத்திகள் சூழ்ந்து பணி செய்ய, இவள் உயரிய ஆசனத்தில் வீற்றிருக்கும் பெருமையுடையள்.*

*குறிப்புரை :- 'அப்பெண்மையே' எனச் சுட்டுவருவித்துத் தேற்றே காரம் விரிக்க. 'பெண்மையே ஏற்புடைத்தாம்' என்றது, சிவத்தின் வழிநிற்பவளாதல் குறித்து. எனினும், இவளும், சிவனும் உலகத்துப் பெண்டிரும் ஆடவரும்போல இருவேறுபட்டவர்கள் அல்லர்' என்றற்கு, "தாதை இவளுக்குத் தாணுவுமாய் நிற்கும்" என்றார். தாணு - தலைவன், தாணு தாதையுமாய் நிற்கும்' என மாறிக் கூட்டுக. பெண்மை - பேணுந்தன்மை. அதாவது இயங்குவ நிற்பவான அனைத்தையும் பாதுகாக்கும் தன்மை. தாணு - தூணனைய தந்தை.*

**1399.** **இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை**
**இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை**
**இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்**
**இல்லடைந் தானுக்கில் லாததில் லானையே.** **99**

---

*மாது - அழகு. ஐகாரம் சாரியை. அழகு இயற்கையாலும், செயற்கையாலும் உள்ளது. அவற்றுள் செயற்கை 'அழகிய பூமியே திலகமாகின்ற அத்துணைப் பெரியாள்' என்பதை மூன்றாம் அடியிலும், பிறர் யாவரும் இவளுக்குக் கீழ்பட்டவர்களே' என்பதை நான்காம் அடியிலும் குறித்தார். குவிதல் - இங்கு, உயர்தல், 'குவிந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.*

*1397. **தெளிவுரை :-** சிவ சத்தியின் கூறாகிய முப்பத்திருவர் சத்திகள் தலைமை பெற்று நிற்கின்றனர். அவர்கள் வழிப்பட்டு முப்பத்திருவர் தேவியர் ஒழுகுகின்றார்கள். இவ்இருதிறத்தாரும் ஒரு தாமரை மலரில் சூழ விரிந்தபல இதழ்களில் இடம் பெற்று இருக்கின்றனர்.*

***குறிப்புரை :-** இங்குக் கூறிய தாமரை மலர் மேற்காட்டிய சக்கரங்களில் உள்ளனவாம். அவற்றின் இதழ்கள் எட்டாகும். அவற்றில் அகம், நுனி, இருபுறம் என்பவற்றால் இடங்கள் முப்பத்திரண்டாம். அம் முப்பத்திரண்டிலும் தேவியர் முப்பத்திருவர் இருக்க, அவர்களிடமாகச் சத்திகள் முப்பத்திருவரும் உளர் என்க. இம்முறை ஆதார பங்கயங்கட்கும் பொருந்துவதாம். 'பரந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. இதன் கண் மூன்றாமெழுத்தெதுகை வந்தது.*

*இதனால், சிவசத்திகளும், அவர்கள் வழியொழுகும் தேவியரும் சக்கரங்களிலும், உடம்பகத்து ஆதாரங்களிலும் நின்று பயன் தருமாறு கூறப்பட்டது.*

*1398. **தெளிவுரை :-** சிவனது விளக்கமாம் சத்திகளையும், அவள்வழி நிற்கும் தேவியரையும் பல சக்கரங்களிலும் உடம்பினுள் ஆதார பங்கயங்களிலும் வழிபட்டுக் கொண்டிருப்பவர்கள், உலகத்திற்குக் காரணமாய் உள்ள முதற்பொருளைக் கண்டிருப்பார்கள். அம்முதற் பொருளை வேதங்களும் எங்கும்*

**1400.** ஆனை மயக்கும் அறுபத்து நால்தறி
ஆனை யிருக்கும் அறுபத்து நால்ஒளி
ஆனையிருக்கும் அறுபத்து நால்அறை
ஆனையும் கோடும் அறுபத்து நாலிலே. **100**

---

*சென்று தேடி அலைகின்றன. ஆயினும் இஃது இன்று எனது உள்ளத்தையே இல்லமாகக் கொண்டு அதனை ஆளுகின்றது. ஒளி - சத்தி. கூத்தன் - சத்தன்.*

*குறிப்புரை :- ''கூத்தன் ஒளியினை'' என்பதையும், காரணத்துள்ளது' என்பதையும் அவ்வவ் வடியின் முதலிற் கூட்டி யுரைக்க. காரணத்து - காரணமாகின்ற நிலையில், நான்காமடி இன எதுகை பெற்றது.*

*1399.* ***தெளிவுரை :-*** *இல்லத்தைத் திறமையாக ஆளுகின்ற துணைவியைப் பெற்றால், அவளுக்கேயன்றி, பெற்ற அவனுக்கும் இல்லாத நன்மை ஒன்று இல்லை. (எல்லா நன்மைகளும் குறைவின்றி உளவாம்). அதனால், அவன் பிறரிடம் சென்று இரந்து பெற வேண்டுவதுயாதும் இல்லை. ஆகவே, இன்ப நுகர்ச்சியில் தேவரும் அவனுக்கு நிகராகார். ஆதலின், 'இல்லாதது' என்பது யாதும் இல்லாதவனாகிய சிவனையே அவனுக்கு உவமிக்க. என்றும் நிலைத்த மாறாத இல்லாகிய திருவருளம்மையின் திருவடியைப் பெற்றவர் இல்லடைந்தாராவர். அத்தகைய திருவடியை அடைந்தவர் யாண்டும் எவரிடத்தும் ஒன்றினையும் இறவார் என்றும் பொருள் கொள்வர்.*

***குறிப்புரை :-*** *இல் - இல்லாள். 'மனமாகிய இல்லத்தை நன்முறையில் ஆண்டு துணைபுரியும் அளவில் சிவ சத்தி தன் அடியவனுக்கு வாழ்க்கைத் துணைவிபோல்வாள்' என்பது பற்றி, ''இல்லதென் இல்லவள் மாண்பானால்'' (குறள், 53) எனவும், "இல்லாளத்திருக்க இல்லாத தொன்றில்லை" (மூதுரை) எனவும் போந்த உலகியல் முறையை எடுத்தோதி, சத்தியது அருள் கிடைக்கப் பெறுதல் பெரும்பேறாதலை விளக்கினார். ஈற்றில் வருவித்து உரைத்த 'உவமிக்க' என்பது சொல்லெச்சம்.*

*இவை இரண்டு மந்திரங்களாலும் மேற்கூறியோரை, மேற்கூறிய இடங்களில் வழிபடுதலின் பயன் கூறப்பட்டது.*

***1400. தெளிவுரை :-*** *ஐம்புலன்களாகிய யானைகளையும் மயக்கி அடங்கச் செய்து கட்டி வைக்கும் அறுபத்து நான்கு தறிகளாயும், இடப வாகனத்தின்மேல் வருகின்ற தலைவனாகிய சிவபிரானிடத்தில் உள்ள அறுபத்து நான்கு சத்திகளாயும் விளங்குவன பிரணவத்தை முதலாகக் கொண்ட பிராசாத மந்திரத்தின் அக்கரங்கள் அடங்கிய சக்கரத்தில் உள்ள அறுபத்து நான்கு அறைகள், அவ் அறைகளை உடைய சக்கரத்தை வழிபட்டால், மத யானையும் வணங்கும் கடவுள் தன்மையைப் பெறலாம்.*

***குறிப்புரை :-*** *"ஆனை" நான்கில் இரண்டாவதை, 'ஆன் + ஐ' எனப் பிரித்துப் பொருள்கொள்க. ஏனைய மூன்றும் சொல் ஒன்றாயினும் வேறு வேறு பொருளைக் குறித்தலின் சொற்பின் வருநிலை. இரண்டாம் அடி, மடக்கு, முதலடியில், உள்ள ஆனை, உருவகம், மூன்றாம் அடியில் உள்ள ஆனை உவம ஆகுபெயராய் அதனோடொத்த ஓங்காரத்தைக் குறித்தது. நான்கம் அடியில் உள்ளது அஃறிணை இயற்பெயராய், ஆற்றலால், மதங்கொண்ட யானையைக் குறித்தது. கோடுதல் - வளைதல்; வணங்குதல். 'ஆனையும், அதன் கொம்பும் அறுபத்து நாலு அறைகளில் அடங்கிவிடும்' என்பது நயம். "அறுபத்து நால்" என்பது அதன் வழிபாட்டின்மேல் நின்றது. அதில் உள்ள 'இல்' எதுப் பொருட்கண் வந்த ஐந்தாம் உருபு. அறுபத்து நான்கு அறைகளும் அறுபத்து நான்கு சத்திகளாதல் இரண்டாமடியில் கூறப்பட்டது. இச்சக்கரம் எட்டெழுத்துக்களால் ஆவதாகலின், 'அட்டாட்சரி சக்கரம்' எனவும் அவை பிராசாத அட்சரங்கள் ஆதலின், 'பிராசாத சக்கரம்' எனவும் சொல்லப்படும்.*

***நான்காம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.***

# ஐந்தாம் தந்திரம்

## 1. சுத்த சைவம்

*முன்னைத் தந்திரத்தில் சத்தி வழிபாட்டு நெறி முறைபற்றி விரித்துக் கூறிய நாயனார், இனிச் சிவ வழிபாட்டு முறையையே விரித்துக் கூறுவாராய், இத்தந்திரத்தில் சமய வேறுபாடுகளையும், சமய ஒழுக்க வேறுபாடுகளையும் வகுத்துணர்த்தியருள்கின்றார்.*

*அவற்றுள் இம்முதலதிகாரத்தில் சைவ வேறுபாடுகளின் வகைகளையும், அவ்வகைகளுள் சுத்த சைவத்தையும் நான்கு மந்திரங்களால் உணர்த்தியருள்கின்றார். சுத்த சைவம் சடங்களவிலே நில்லாது, சம்பிரதாயங்களையும் கடந்து, தலைவனையும், தடையையும், தன்னையும் அறிந்து, தடையினின்றும் நீங்கித் தலைவன் திருவடிச் சார்பு பெற்று வாழ்வதாம்.*

**1401.** ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற
பேரறி வாளன் பெருமை குறித்திடின்
ஏருமிம் மூவுல காளி இலங்கெழும்
தாரணி நால்வகைச் சைவமு மாமே. 1

---

**1401.** தெளிவுரை :- *பல உலகங்களையும், அவை அடங்கியுள்ள பல அண்டங்களையும் ஒருசேரப் படைக்கின்ற பேரறிவினையுடைய வனாகிய சிவனது பெருமையைக் கூறுமிடத்து, எழுச்சியை உடைய இந்த உலகங்கள் மூன்றினையும் தன்னடிப் படுத்து ஆள்கின்ற தலைவனாம் அவன், விளங்கித் தோன்றும் நிலைக்களம் நால்வகைச் சைவமுமாகும்.*

*குறிப்புரை :- 'ஊர், உலகம் என்பன அவற்றிற்கு இடமான உலகத்தையும், அண்டத்தையும் ஆகுபெயரால் உணர்த்தின, ஏர்தல் - எழுச்சியுறுதல். 'மேருவும்' என்பது பாடமன்று. 'இலங்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "தாரணி" என்றது, 'நிலைக்களம்' என்றவாறு. சைவ சமயத்தின் பெருமை கூறுவார், அதன் முதல்வனாகிய சிவனது பெருமையை முன்னர்க் கூறினார்.*

*இதனால், 'முழுமுதற் கடவுளாகிய சிவன் விளங்கித் தோன்றும் சமயம் சைவசமயமே' என்பதும், 'அது நால்வகைப்படும்' என்பதும்*

1402. சத்தும் அசத்தும் சதசத்தும் தான்கண்டு
சித்தும் அசித்துமுன் சேர்வுறா மேநீத்த
சுத்தம் அசுத்தமும் தோய்வுறா மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. 2

---

*கூறப்பட்டன. அந்நால்வகையும் வருகின்ற மந்திரங்களிலும் அதிகாரங்களிலும் அறியப்படும்.*

1402. ***தெளிவுரை :-*** *சுத்த சைவர்க்கு, சத்தாகிய பதியின் இயல்பையும், அசத்தாகிய பாசத்தின் இயல்பையும், இவற்றிற்கு இடைப்பட்டுச் சதசத்தாய் நிற்கின்ற பசுவின் இயல்பையும் உணர்ந்தபின், அறிவுடைப் பொருளாகிய உயிர்களுள்ளும், அறிவில் பொருளாகிய பாசங்களும் ஒன்றாகாது வேறுபட்ட பொருளாய், சுத்தமாயுள்ள வைந்தவங்களிலும் அசுத்தமாயுள்ள மாயேயங்களிலும் தோய்ந்தும் தோயாமலிருக்கின்ற நித்தியப் பொருளாகிய பரசிவம் ஒன்றே குறிப்பொருளாம்.*

***குறிப்புரை :-*** *எனவே, தத்துவ ஞானத்தை விரும்புவது 'சுத்த சைவம்' என்றதாம். ஆகவே, சிவஞான பாடியம் முதலியவற்றில் 'சுத்த சைவம்' என்னும் பெயராற் குறிக்கப்படும் சுத்த சைவம் அன்று இது என்பது விளங்கும்.*

| | |
|---|---|
| *சத்து* | *- சிவன்* |
| *அசத்து* | *- பாசம்* |
| *சதசத்து* | *- உயிர்* |
| *சித்து* | *- அறிவு* |
| *அசித்து* | *- அறியாமை* |

| | |
|---|---|
| நனவு | - விழிப்பு (அ) சாக்கிரம் |
| கனவு | - சொப்பனம் |
| உறக்கம் | - சுழுத்தி |
| பேருறக்கம் | - துரியம் |
| உயிர்ப்படக்கம் | - துரியாதீதம் |

*சத்து - மாற்றமின்றி என்றும் ஒரு படித்தாய் நிலைத்து இருப்பது. அசத்து - மாற்றத்தை உடையது, சதசத்து - இவ்விரண்டில் எதனோடும் சார்தற்கு உரியதாய்ச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பது. "சத்து" முதலிய ஐந்தும் ஆகுபெயராய் முன்னர் அத்தன்மையுடைய பொருளை யுணர்த்திப் பின் அவற்றது இயல்பை உணர்த்தின. 'கண்டபின்' என்பது 'கண்டு' எனத் திரிந்தது. "நீத்த, நின்ற" என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி, "பரம்" என்னும் ஒரு பெயர் கொண்டன. அச்சித்தும், நின்று' என்பன பாடமல்ல. "சுத்தம், அசுத்தம்" என்பன*

**1403.** கற்பன கற்றுக் கலைமன்னும் மெய்யோகம்
முற்பத ஞானம் முறைமுறை நண்ணியே
சொற்பதம் மேவி துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. **3**

---

*அவற்றையுடைய பொருள்களைக் குறித்தன. வைந்தவம் - விந்துவின் காரியம். விந்து - சுத்தமாயை, மாயேயம் - மாயையின் காரியம், மாயை - அசுத்த மாயை, 'நித்தப் பரம்' என்பது தொடைநோக்கி மெலிந்து நின்றது. 'ஞேயம்' என்பது 'நேயம்' என மருவிற்று. 'அறியப்படுபொருள்' என்பது இதன் பொருள்.*

*இதனால், நால்வகைச் சைவத்துள் 'சுத்த சைவமாவது இது' என்பது கூறப்பட்டது.*

1403. ***தெளிவுரை :-*** *கற்கத் தக்கவனாகிய சிவாகமங்களைக் கற்று, அவைகளிலே சிறப்பாகப் பொருந்தியுள்ள பிராசாத யோகத்தின் வழிப் பிரணவ ஞானத்தைப் படிமுறையால் பொருந்தி, சாலோகம் முதலாகச் சொல்லப்பட்ட பதமுத்திகளையும் அடைந்து, இவையெல்லாவற்றின் விளைவாகவும் அதிதீவிரபரிபாகமும், அதிதீவிர சத்திநிபாதமும் வரப்பெற்று, அனைத்துப் பொருளுக்கும் மேலாய், ஆன்ம வியாபகத் திற்கும் மேலான வியாபகப் பொருளாகிய பரசிவப் பொருளைத் தலைப்பட்டவரே 'சைவ சித்தாந்திகள்' எனப்படுகின்றனர்.*

*துரிசு - அழிவனவற்றை விரும்பிச் சார்தல்.*

***குறிப்புரை :-*** *"சைவ சித்தாந்தர்" என்றது 'சித்தாந்த சைவர்' என்றவாறு. எனவே, 'சைவாகம நெறிகளின் வழி ஒழுகி, அதனால், பதமுத்தி, பரமுத்திகளை அடைவதே சித்தாந்த சைவம்' என்றதாயிற்று.* ***ஆகவே, சித்தாந்த சைவமே மேற்கூறிய சுத்த சைவமாதல் பெறப்பட்டது.*** *"மெய்யோகம்" என்றது, 'பொருளுணர்வுக்குக் காரணமான நாதத்தையுணரும் யோகம்' என்றவாறு. முற்பதம் - முதற்சொல்: பிரணவம்.*

*சாத்திரம் படித்தால் மட்டும் அமையாது, அநுபவமும்*

**1404.** வேதாந்தம் சுத்தம் விளங்கிய சித்தாந்தம்
நாதாந்தம் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த போதாந்த மாகப் புனஞ் செய்ய
நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. **4**

---

*முறைமுறையே பெற்று, ஆண்டவனுடைமை நாம் என்ற புத்தி பதிந்து, அதனால் ஆன்மபோத மழிந்து பதிபோதம் மேவப்பெற்று, பதியைத் தரிசித்தவர்களே சைவசித்தாந்திகளாவர் என்பது கருத்து.*

*இதனால், 'சித்தாந்த சைவமானது இது' என்பது கூறப்பட்டது.*

**1404. *தெளிவுரை :-*** *வேதத்தின் முடிந்த பொருள் இன்னது எனத் தெளிவாக விளங்குவதாகிய சித்தாந்த சைவத்தில் நின்று, நாத முடிவான தத்துவங்களைக் கண்டு கழித்தோரே, பின் ஒரு காலும் அசைவில்லாத திண்ணிய மெய்யுணர்வைப் பெற்றவராவர். பின்னும் அவர் 'நான்' என்னும் தற்போதமும் கழலும்படி உணர்வு திருந்தப் பெறுவாராயின், நாதமுடிவில் விளங்கும் நிறை பரம் பொருளாகிய சிவமாந்தன்மையைப் பெறுவர். அதனைப் பெற்றோரே உண்மை ஞானத்தால் உண்மை ஞேயத்தை எய்தினோராவர்.*

***குறிப்புரை :-*** *'சுத்தமாய்' என ஆக்கம்வருவிக்க. 'சித்தாந்தத்துக்கண் நின்று கண்டோர்' என்பதில் இடைநின்றன தொக்கன. "பூதம்", ஏனைத் தத்துவங்கள் பலவற்றிற்கும் உபலக்கணம். தத்துவங்களின் அந்தத்தில் உள்ள போதம், 'நான்' என்னும் பசுபோதம். அஃது அந்தமாதலாவது, நீங்குதல். புனம்செய்தல் - புனத்தைத் திருந்தச் செய்தல் போலச் செய்தல். ஞான நேயம் - ஞானத்தினால் பற்றப்படும் ஞேயம்* ***'வேதாந்தம் தெளிவாதல் சைவ சித்தாந்தத்திலே'*** *என்பதை, "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" (சிவப்பிரகாசம், 7) என்பதனால் அறிக.*

*இதனால், சித்தாந்த சைவத்தின் சிறப்பும், அதன்கண் நின்றாரது பயனும் கூறப்பட்டது.*

## 2. அசுத்த சைவம்

*இது முதல் மூன்று மந்திரங்களால் அசுத்த சைவம் உணர்த்துகின்றார். 'அசுத்த சைவம்' என்றது, 'சுத்த சைவமல்லதாய், அதனோடு ஒருபுடை யொத்திருப்பது' என்றபடி.*

*அசுத்த சைவமாவது திருவேடப்பொலிவோடு, சரியை, கிரியை என்னும் இரண்டில் மட்டும் நிற்பார் நிலையாம்.*

1405. இணையார் திருவடி ஏத்தும்சீரங்கத்து
இணையார் இணைக்குழை ஈரணை முத்திரை
குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்றாது
அணைவாம் சரியை கிரியையி னார்க்கே. 1

---

1405. ***தெளிவுரை :-*** *சரியை, கிரியை நெறிகளில் நிற்பவர்க்குச் சிவனது இரண்டு திருவடிகளைத் தாம் வணங்குதற்குரிய கோலமாக உடம்பில் ஒன்று இரண்டாய்ப் பிணைந்த இருகுழைகள். இரண்டாகப் பொருந்திய முத்திரைகள், இரட்டை வடமாக அமைந்த கண்ட சரமும் ஆகியவை குறையாது பொருந்துதற்கு உரியன.*

*இணையார் இணைக்குழை - காது ஒன்றுக்கு இரண்டாகப் பொருந்திய இரு குண்டலங்கள் (ஆறுகட்டி)*

*தலைமாலை - சிரத்தில் அணியப்படும் உருத்திராக்க மாலை*

*இணைக்கண்ட மாலை - செபமாலை, கண்ட மாலை ஆகிய இரண்டு உருத்திராக்க மாலைகள்.*

***குறிப்புரை :-*** *சீர் - அழகு. அஃது அதனைத் தருவதாகிய கோலத்தைக் குறித்தது. இணையார் குழையை, 'ஆறுகட்டியும், சுந்தரவேடமும்' என்றும், இவை 'ஆசிரியர்க்கு உரியன' என்றும் கூறுவர். 'இவ்வாசிரியர் கிரியா குரவரே' என்பது இம் மந்திரத்தாற் பெறுதும். இருமுத்திரைகளாவனவற்றை, 'இடபக்குறியும் சூலக் குறியும்' எனத் திருநாவுக்கரசரது வரலாறு பற்றிக் கூறுதல் கூடும். அவர் சமண சமயஞ் சார்ந்திருந்த மாசு தீரவே அவற்றை வேண்டிப் பெற்றமையால், அவை சமய விசேட தீக்கைகட்கு உரியனவாக*

**1406.** காதுப்பொ னார்ந்த கடுக்கன் இரண்டுசேர்த்
தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன்
சோதனை செய்து துவாதெச மார்க்கராய்
ஓதி யிருப்பார் ஒருசைவ ராகுமே. **2**

---

*இங்குக் கூறப்பட்டன எனலாம். "குன்றாது அணைவாம்" என்றது, 'தவறாது பொருந்துவது' என்றபடி. எனவே, சுத்த சைவர்க்கு அவை இலவாயினும் குற்றமின்றாதல் அறியப்படும்.*

*இதனால், 'அசுத்த சைவருள் ஒருசாரார் இவர்' என்பது கூறப்பட்டது.*

**1406. *தெளிவுரை :-*** *காதில் பொன்னாற் செய்யப்பட்டுப் பொருந்திய கடுக்கன் இரண்டை அணிந்து, சிவாகமங்களில் சொல்லப்படுகின்ற 'தூலம், சூக்குமம், பரம்' என்னும் மூன்று உடம்புகளையும் சோதித்துத் தூய்மை செய்யப் பெற்று, துவாதச கலாப் பிராசாதயோக நெறியில்நின்று, அந்நிலைக்கு ஏற்பத் தாம் உபதேச முறையாற் பெற்ற திருவைந்தெழுத்தையும் ஓதுபவர் மேற்கூறியவரின் வேறுபட்ட ஒருசார் சைவராவர்.*

***குறிப்புரை :-*** *தூல உடம்பையே "திருமேனி" என்றார். சமய விசேட தீக்கைகளால் தூய்மை பெற்றமை தோன்ற அவ்வாறு கூறினார். சூக்குமம் பர உடம்புகளை "உட்கட்டு" எனக் குறித்தார். "செய்து" என்றது, 'செய்வித்துக் கொண்டு' என்றபடி. ஒருசைவர் - மற்றொரு சைவர்; என்றது 'ஞானச்சைவர்' என்றவாறு. மேலை மந்திரத்துள் சரியை கிரியையினுள்ளும், இதன்கண் யோகம் ஞானத்துள்ளும் அடக்கப்பட்டன. இங்குக் குறிக்கப்பட்ட ஞானம் கேள்வியளவினது. இவற்றை "சோதனை செய்து" எனவும், "துவாதெச மார்க்கராய்" எனவும் போந்த குறிப்புகளால் அறிக.*

*இதனால், அவருள் மற்றொருசாராரது இயல்பு கூறப்பட்டது.*

**1407. *தெளிவுரை :-*** *பாரத வருடத்தின் ஒன்பது பகுதிகளையும் சென்று கண்டவரே அவைகளில் உள்ள சான்றோர் ஆராய்ந்துகண்ட அரிய உண்மையைக் கண்டவராவர். அதனால், அவர் எல்லாவற்றையும் உணர்ந்த இறைவனது நவந்தரு பேதங்களையும் உணர்ந்தோரும், பின்னர்க் கூறப்படும் கடுஞ்சுத்த*

**1407. கண்டங்கள் ஒன்பதும் கண்டவர் கண்டனர்**
**கண்டங்கள் ஒன்பதும் கண்டாய் அரும்பொருள்**
**கண்டங்கள் ஒன்பதும் கண்டவர்க் கண்டமாம்**
**கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. 3**

---

*சைவருக்கு நிகரானவரும் ஆவர். கண்டங்கள் என்றால் ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா என்ற உலக அளவிலும் கொள்வர்.*

*குறிப்புரை :- பாரத வருடத்தின் ஒன்பது கண்டங்களாவன:- 'இந்திரம், கசேரு, தாமிரவர்ணி, கபத்தி, நாகம், சாந்திரம், காந்தருவம், வாருணம், குமரி' என்னும் பெயருடையவாகச் சொல்லப்படுகின்றன.*

*'பரத கண்டமே 'கடவுள் நிலம்' (புண்ணிய பூமி)' என்றும், 'அது மேற்குறித்த ஒன்பது கண்டங்களையுடையது' என்றும் 'அக் கண்டங்கள் அனைத்திலும் அரும்பொருளை - மெய்ப்பொருளை ஆராய்ந்துணர்ந்த 'அறிவர்' பலர் நிரம்ப உளர்' என்றும் ஆகமங்கள் கூறுதலால், 'அவை அனைத்திலும் தொண்டரொடு கூடிச் சென்று தூநீராடியும், தொழுதகு படிவங்களை வணங்கியும், அறிவரை அடி பணிந்து அரும் பொருள் கேட்டும் வருவோர் அசுத்த சைவராயினும் மெய்ப்பொருளைக் கண்ட சுத்த சைவர் எனச் சொல்லத்தக்க பெருமையுடையவர்' என்றவாறு. 'பரத கண்டத்துக் கண்டங்கள் ஒன்பதுள்ளும் குமரிக் கண்டமே சிறந்தது' என்பதும் சிவாகம நூல் துணிபு. இரண்டாவதாய் நின்ற "கண்டங்கள்", இடவாகு பெயர். "கண்ட" எனப் பொதுப்படக்கூறிய அதனால், அது முழுதுங் கண்டதாயிற்று. இறைவனது பேதங்களை "மாகண்டம்" என்றார். அப்பேதங்கள் ஒன்பதும் மேலே கூறப்பட்டன.*

*இதனால், 'சுத்த சைவரல்லாதார் தீர்த்த யாத்திரை தல யாத்திரைகளை இன்றியமையாது மேற்கொள்ளல் வேண்டும்' என்பது கூறப்பட்டது. இதன் பயன் ஞானத்தைப் பெறுதலாகும்.*

> *"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்க்கு*
> *வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"*
>
> *- பராபரக் கண்ணி, 156*

*என்ற தாயுமானவர் மொழி இங்கே நினைக்கத்தக்கது. இந்தப் பாடலில் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன. கடுஞ்சுத்த சைவரே என்று ஈற்றடி நிறைவுபெறுதலால் இப்பாடல் கடுஞ்சுத்தசைவம்*

**1408.** ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையும் முழுஎண்ணெண் சித்தியும்
ஏனை நிலமும் எழுதா மறையீறும்
கோனொடு தன்னையும் காணும் குணத்தனே. 4

---

*என்ற தலைப்பின் கீழ் இடம்பெற வேண்டியதோ என்ற ஐயம் எழுகிறது.*

1408. ***தெளிவுரை :-*** *'ஞானத்தை விரும்புபவன்' என்று சொல்லப்படுவோன், உலகில் விளங்கித் தோன்றுகின்ற சமய நூல்கள் அனைத்தையும் உணர்ந்த உணர்வோடு, மன ஒடுக்கம் வரும் நிலையையும், முழுமையாக எண்ணப்படுகின்ற 'எட்டு' என்னும் தொகையைப் பெற்றுள்ள சித்திகளையும், இவ்வுலகமேயன்றி, ஏனை மேல் கீழ் உலகங்களின் இயல்புகளையும், இருக்கு முதலிய நான்கு வேதங்களின் முடிவாகிய 'ஆரணியகங்கள், உபநிடதங்கள்' என்பவற்றின் பொருள்களையும், எல்லாவற்றிற்கும் முதல்வனாகிய இறைவனது இயல்பையும், அவனுக்கு என்றும் அடிமையாகின்ற தனது இயல்பையும் உணரும் பண்புடையவனேயாவன்.*

***குறிப்புரை :-*** *"ஞானி" என்றது மேற்கூறியவாறு பொருள் படுமாற்றைப் பின் வருவனவற்றால் அறிக. நன்நூல் - ஞானநூல். இங்ஙனம் பல நூலும் கண்டபின்பே, பொய் பொய்யாய் ஒழிய மெய் மெய்யாய்த் தோன்றும் என்பது பற்றி, இங்ஙனம் ஓதினார். "நூல் பல கல்" (ஆத்திசூடி) என்று ஔவையாரும் கூறினார். "கல்லா நெஞ்சில் - நில்லான் ஈசன்" (தி.3 ப.40 பா.1) என்று அருளிச் செய்ததும் இது பற்றி. "கண்டதைக் கற்கப் பண்டிதன் ஆவான்" என்பது பழமொழி. இதில் "கண்டது" என்பது கொள்கை வேறுபட்ட அறிஞர் பலரும், "இதுவே நன்னூல்" எனக் கண்டது என்பதாம். சைவ சந்தான குரவர் நால்வருள் ஒருவர் அருட் குரவரது அருளுரையைப் பெறுதற்குமுன் 'சகலாகம பண்டிதர்' எனப் பலராலும் புகழப் பெற்றிருந்தமை அறியத்தக்கது.*

*இதனால், சுத்த சைவராக வேண்டுவார் கேள்வி ஞானத்திற்குப் பின் சிந்தனையால் முதிர்ச்சி பெறவேண்டுதல் கூறப்பட்டது.*

## 3. மார்க்க சைவம்

*இது முதல் பதினொரு மந்திரங்களால் மார்க்க சைவம் உணர்த்துகின்றார். மார்க்க சைவம் - சாதன சைவம். திருநீறு, உருத்திராக்க தாரணம், சரியையாதி நெறிகள் முதலான சைவ மார்க்களினின்று பழகி ஞானம் பெறுவது மார்க்க சைவம். ஆன்மபோதம் கெட்டுச் சிவயோகத்தில் திளைப்பது.*

**1409.** பொன்னால் சிவசாதனம்பூதி சாதனம்
நன்மார்க்க சாதன மாஞான சாதனம்
துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனம்
சன்மார்க்க சாதன மாம்சுத்த சைவர்க்கே. **1**

**1410.** கேடறு ஞானி கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தி
னூடுறு ஞானோ தயன்உண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசை வன்பத்தன் நித்தனே. **2**

---

**1409.** *தெளிவுரை :- சுத்த சைவநிலையை அடைய வேண்டுவோர் கொள்ளத்தக்க முதற் சாதனங்கள், பொன்னாற் பொதியப்பட்ட உருத்திராக்கங்களின் மாலை, விபூதி என்னும் இரண்டுமாம். இவை நன்மையைத் தருகின்ற பெரிய ஞான சாதனமும், தீமை தோன்றாவாறு செய்கின்ற பெரிய காப்புச் சாதனமுமாம். ஆதலால், அவர்கட்கு இவை இன்றியமையாச் சாதனங்களாகும்.*

*குறிப்புரை :- எனவே, 'இச்சாதனத்தளவில் நிற்போர் ஒரு கூற்று மார்க்க சைவர்' என்றதாயிற்று. முதற்கண் ''சாதனம்'' என்றது உருத்திராக்கத்தை, இதனை "எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால்" (தி.6 ப.61 பா.3) என்பதிலும் காண்க.*

*இதனால், மார்க்க சைவத்துள் ஒரு பகுதி கூறப்பட்டது.*

**1410.** *தெளிவுரை :- பின்னர்க் கெட்டொழியாது நிலை பெற்று நிற்கும் ஞானத்தை உணர்ந்தவனும், அதனால் 'ஞான வேந்தன்' எனப் புகழப்படுபவனும், அழிவில்லாத வேத முடிவில் தொடங்கி விரிந்த சிவாகமங்களின் நாற்பாதங்களினுள்ளும் பொருந்தி விளங்கும் பொருள்கள் விளங்கப்பெற்ற அறிவையுடையவனும், அவற்றால் உண்மை முத்தியாகிய பரமுத்தியைப் பெறும் தகுதியை அடைந்தோனு மாகிய பெருமை பொருந்திய சுத்த சைவனுக்குத் தொண்டு பூண்டவன் பிறவிப் பயனைப் பெற்றவனாவன்.*

*குறிப்புரை :- எனவே, 'இவன், மார்க்க சைவத்துள் மற்றொரு*

**1411.** **ஆகமம் ஒன்பான் அதில்ஆன நாலேழு**
**மோகமில் நாலேழும் முப்பேதம் உற்றுடன்**
**வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மைஒன்**
**றாக முடிந்த தருஞ்சுத்த சைவமே. 3**

---

பகுதியினன்' என்பது பெறப்பட்டது. இதனுள் சுத்த சைவனது பெருமையையே விரித்து, 'அவன்பால் பத்தி பூண்டவன் சித்தன்' எனக் கூறப்பட்டது. சித்தன் - சித்திக்கப் பெற்றவன். பெறுதலுக்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. "சித்தாந்தம்" என்றது சிவாகமங்களை.

இதனால், சுத்த சைவர்க்குத் தொண்டு பூண்டொழுகுதலும் மார்க்க சைவத்தின் ஒரு பகுதியாதல் கூறப்பட்டது.

**1411.** *தெளிவுரை :-* தொல் ஆகமங்கள் ஒன்பதே. 'இருபத்தெட்டு' என்பன அவற்றினின்றும் விரிந்தனவாம். 'சிவபேதம், உருத்திரபேதம், தேவ பேதம்' என்னும் முப்பேதங்களும் 'இருபத்தெட்டு' என்னும் அவற்றில் சொல்லப்படுவனவே. ஆகமங்கள் எத்துணையாக விரிந்து, எத்துணைப் பேதப்பட்டிருப்பினும் தற்போதத்தைப் போக்க வல்ல, வேதாந்தத் தெளிவாம் சித்தாந்தமாகிய அவற்றின் துணிபு ஒன்றேயாக முடிந்ததே சுத்த சைவநிலை வாய்ப்பதாகும்.

*குறிப்புரை :-* எனவே, 'அங்ஙனம் பல ஆகமங்களின் பொருள்களையும் ஒருமைப்பட உணர்தலும் மார்க்க சைவப் பகுதியாம்' என்றதாயிற்று. இங்குக் கூறப்பட்ட ஆகமம் பற்றிய செய்திகளை முதல் தந்திரம் - ஆகமச் சிறப்பு அதிகாரத்தில் காண்க. ஆன - ஆனவை. மெய்ம்மை - முடிந்த பொருள்.

இதனால், சைவாகமங்களின் பொருள்களை ஒன்றோடு ஒன்று முரணாதவாறு ஒருமைப்படக் காண்டலும் மார்க்க சைவமாதல் கூறப்பட்டது.

**1412.** *தெளிவுரை :-*

| | |
|---|---|
| கேவலம் | - பிறவிக்கு முன்னுள்ள நிலை |
| சகலம் | - பிறவிக்கு வந்த பின் அடையும் நிலை |
| சுத்தம் | - மலபரிபாகம் ஏற்பட்டு பக்குவம் அடைந்த நிலை |
| அவத்தை | - நிலை. உயிர் உடலிலுள்ள நிலைகள். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பவை. |

'சுத்தம், அசுத்தம், மிச்சிரம்' என்னும் மூவகைப் பல்வேறு நிலைகளையும், மாயை கன்மங்களின் காரண காரிய நிலைகளையும்

**1412.** **சுத்தம் அசுத்தம் துரியங்கள் ஓரேழும்**
**சத்தும் அசத்தும் தணந்த பராபரை**
**உய்த்த பராபரை உள்ளாம் பராபரை**
**அத்தன் அருட்சத்தி யாய்எங்கு மாமே.** **4**

---

*கடந்து, பரையாகவும், அபரையாதற் குரியவளாயும் உள்ள, சிவனது அருளாகிய சத்தி, எல்லாப் பொருள்களையும் நடத்துபவளாய், அவற்றின் உட்பொருளாகி எவ்விடத்திலும் நிறைந்து நிற்கின்றாள். பராபரை - சத்தி.*

*குறிப்புரை :-*

| | |
|---|---|
| *அசுத்தம்* | *- மலத்துள் அழுந்திச் செயலற்று நிற்கும் நிலையாகிய கேவலநிலை. அதனுள் மூன்றாவன சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்பன.* |
| *சுத்தம்* | *- மலத்தின் நீங்க நிற்பதாகிய நிலை. அதில் இரண்டாவன சாக்கிரமும் சொப்பனமும்.* |
| *துரியம்* | *- கடந்தநிலை. அதில் இரண்டாவன துரியமும் துரியாதீதமுமாம். தணந்த பராபரை - கேவலம், சகலம், சுத்தம், துரியம் ஆகிய இந்நிலைகளிலிருந்து ஆன்மாக்களை வழிநடத்தித்தான் அவற்றின் நீங்கியிருப்பதே சத்திக்கு இயல்பாதலின் இங்ஙனம் கூறியது.* |

*இதனால், அத்தனது அருள்நிலையை அடைந்தோர் மார்க்க சைவராதல் கூறப்பட்டது.*

**1413.** ***தெளிவுரை :-*** *எங்குமாய் நிற்கும் அருட் சத்தியை அடைந்து நிற்கும் நிலைக்குமேலே, எல்லாப் பொருளையும் கடந்த பராசத்தியை அடைந்தவர், அச்சத்திக்கு முதலாய பரசிவமேயாய், சித்தும் சடமு மாய உலகங்களுள் யாதும் தோன்றாது சிவோகம் பாவனையில் அழுந்தி, பரமுத்தி நிலையில் விளையும் பேரின்பமாகிய ஆனந்த சத்தியில் மூழ்கியிருப்பர். அவரது பேறே ஏனை எல்லார் பேற்றினும் சிறந்த பேறாகும்.*

*குறிப்புரை :- "தணந்தவர்" என்றது மேற்கூறிய "தணந்தபரையை" அடைந்தவர் என்றவாறு. எல்லாமாய் நிற்பவள் அருட்சத்தியும், எல்லாவற்றையும் கடந்து நிற்பவள் ஆனந்த சத்தியும் ஆதலின் அந்*

**1413.** சத்தும் அசத்தும் தணந்தவர் தானாகிச்
சித்தும் அசித்தும் தெரியாச் சிவோகமாய்
முத்தியுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினோர்
சித்தியும் அங்கே சிறந்துள தானே. **5**

**1414.** தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
உன்னத் தகும் சுத்த சைவர் உபாயமே. **6**

---

*நிலையே முடிந்த பேறாயிற்று. 'உளது' என்பது ஈறு தொகுத்தலாயிற்று. 'உளதாமே' எனப் பாடம் ஓதலுமாம்.*

*இதனால், 'மேற் கூறப்பட்டவர் மார்க்க சைவரேயாயின், அவருக்கு மேலேயுள்ள சுத்தசைவராவார் யாவர்? என்னும் ஐயத்தினை நீக்குதற்கு. 'அருள் நிலையைக் கடந்து ஆனந்த நிலையை எய்தினோர் சுத்த சைவர்' என்பது கூறப்பட்டது.*

**1414.** *தெளிவுரை :- ஆன்மா, 'யாதும் செய்யாது அமைதியாயுள்ள பரசிவன், 'சதாசிவன்' எனப்படுகின்ற ஐந்தொழில் முதல்வன். அப்பதியோடு ஏனைப் பசு பாசங்கள், அநாதி தொட்டே உள்ள ஆணவப் பிணிப்பாகிய முதற்பந்தம், அது நீங்கி நின்ற வீடு' என்னும் இவற்றை ஐயந்திரிபு அற ஆராய்ந்துணர்தல் என்பர். இவை சுத்த சைவராவார் தமக்கு உரிய உபாயமாகும்.*

*குறிப்புரை :- 'மாசற்ற வீட்டினை' எனக் கூட்டியுரைக்க. 'சுத்த சைவராவார் உபாயமாம்' என ஆக்கம் வருவித்து உரைக்க.*

*இதனால், 'தத்துவ ஆராய்ச்சி மார்க்க சைவமாம்' என்பது கூறப்பட்டது.*

**1415.** *தெளிவுரை :- சுத்த சைவராய் உள்ளார்க்கு உளதாகின்ற அனுபவத்திற்கு, எங்கும் நிறைந்த பொருளாகிய சிவனிடத்தே வைக்கப்பட்டதனால் பிற பற்றுக்கள் நீங்கிய ஆன்ம போதத்தில், வேதாந்தம், சித்தாந்தத்தோடு ஒற்றுமைப்பட்டுத் தோன்றப்பெற்ற உணர்வோடு, பிராசாத கலைகள் பன்னிரண்டும் காட்சிப்பட, அதனால் இடையறாது விளங்கும் பேரின்பமே காரணமாம்.*

**1415.** பூரணந் தன்னிலே வைத்தற்ற அப்போதத்
தாரண வந்த மதிசித்தாந் தத்தொடு
நேரென ஈராறும் நீடும் நெடும்போகம்
காரண மாம்சுத்த சைவர்க்குக் காட்சியே. 7

**1416.** மாறாத ஞானம் மதிப்பற மாயோகம்
தேறாத சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்
பேறான பாவனை பேணி நெறிநிற்றல்
கூறாகும் ஞானி சரிதை குறிக்கிலே. 8

---

***குறிப்புரை :-*** *அதனால், அத்தகைய பிராசாத யோகத்தில் நிற்பவர் மார்க்க சைவராதல் பெறப்பட்டது. இம்மந்திரத்தில் பாடங்கள் மிகத் திரிந்துள்ளன. 'காட்சிக்கு' என்னும் நான்கனுருபு இன்னோசை நோக்கித் தொகுக்கப்பட்டது.*

*இதனால், பிராசாத யோக நெறியும் மார்க்க சைவமாதல் கூறப்பட்டது.*

**1416. *தெளிவுரை :-*** *சித்தாந்த சைவத்தின் அங்கமாகும் மார்க்க சைவரது ஒழுக்கத்தைச் சொல்லுமிடத்து, தொன்று தொட்டுத் தொலையாது நிற்கின்ற தற்போதத்தைப் பெரிதாக எண்ணாமல், அஞ்ஞானத்தி னின்றும் நீங்கமாட்டாத அறிவை மேற்கூறிய உயர்ந்த யோகமாகிய பிராசாத யோகத்தால் அஞ்ஞானத்தினின்றும் ஆக்கி, பெறற்கரிய பேறாகிய சிவோகம் பாவனையைத் தலைப்பட்டு அதனைப் போற்றி அந்தப் பதிஞான நெறியில் நிற்றலேயாகும்.*

***குறிப்புரை :-*** *'யோகத்தால்' என உருபு விரிக்க. சிவம், ஆகுபெயர். ''பேறான'' என்பது, 'சிறந்த பேறாகிய' என்னும் பொருளைக் குறித்தது. "கூறாகும்" என்னும் பெயரெச்சம், "ஞானி" என்பதன் முதனிலையோடு முடிந்தது. ஞானமாவது, சித்தாந்த ஞானமே யாதல் அறிந்து கொள்க.*

*இதனால், மார்க்க சைவரது ஞான ஒழுக்கம் கூறப்பட்டது.*

**1417. *தெளிவுரை :-*** *சிவாகமங்களை உணராது வேதாந்தத்தை மட்டும் உணர்ந்தோர் முதற் பொருளை உண்மை மாத்திரையான்*

1417. வேதாந்தங் கண்டோர் பிரமவித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர்நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மல்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணர் அன்ன சைவர் உபாயரே. 9

1418. விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காமல் எணப்படும்
அண்ணலைச் சென்றணு காபசு பாசமே. 10

---

*உணர்ந்தவரே. அதன் இயல்பையும், அதனைப் பெறுமாற்றையும் பெற்ற வழி உளதாகும் பயனையும் அறிந்தவரல்லர். பிராசாத நெறியால் நாத முடிவைக் கண்டவர் அசைவில்லாத யோகிகளேயாவர்; ஞானிகள் அல்லர். சைவாகமங்களை வேதாந்தத்தோடு ஒற்றுமைப்பட வைத்து உணராது தனிப்பட வைத்து உணர்ந்தோர் பொதுச் சைவரே; உண்மைச் சைவர் அல்லர். ஆதலால், அவர் மார்க்க சைவரே; சுத்த சைவர் அல்லர்.*

*குறிப்புரை :- இதன் ஈற்றடியின் பாடம், "சாதாரணர்; அன்ன சைவர் உபாயரே" என இங்குள்ளபடியாவது, "சாதாரணர் அன்னர் சைவம் உபாயமே" என்றாவது ஓதப்படல் வேண்டும். மார்க்க சைவருள் இங்குக் கூறப்பட்ட சாதாரண சைவர் பாசுபதர் முதலிய அகப்புறச் சமயிகள் என்க. இவரைக் கூறுவார், மேற்கூறிய மார்க்க சைவரை அனுபவித்தும், புறச் சமயத்தாராகிய ஏகான்மவாதரைப் புடைபட வைத்தும் கூறினார்.*

*இதனால், சிவாகமத்தைப் பொதுவாக உணர்தலும் மார்க்க சைவமாதல் கூறப்பட்டது.*

**1418.** *தெளிவுரை :- பரந்துஎழும் மேகக் கூட்டம் அருவமாகிய ஆகாயத்தைப் பற்றமாட்டாது, பல காட்சிப் பொருள்களும் கண்ணொளியைத் தமக்கு இடமாகக் கொண்டு நிற்க மாட்டா. அவை போல, எண் வரையறையில்லையாம்படி முடிவின்றி எண்ணப் படுவனவாகிய பசுக்களைப் பற்றிநிற்கின்ற பாசங்கள், தலைவனாகிய சிவனைச் சென்று அணுகமாட்டா.*

*குறிப்புரை :- இதனுள் இரண்டு எடுத்துக்காட்டுவமைகள் கூறப்பட்டன. 'பாசம்' என்னாது ''பசு பாசம்'' என்றதனால்,*

**1419.** ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகாரம் நீங்கியே
நின்ற பராற்பர நேயத்தைப் பாதத்தால்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. **11**

---

*'பசுக்களைப் பற்றுகின்ற அவை பதியாகிய இறைவனைப் பற்ற மாட்டா' என்ற தாயிற்று. ஆகவே, அப்பாசங்களால் தோற்றுவிக்கப்பட்ட அறிவைக் கொண்டோ, அவற்றின் நீங்கியவழி எதனையும் அறியமாட்டாத தனது அறிவைக்கொண்டோ உயிர் இறைவனை அறியமாட்டா' என உணர்த்துதல் இம்மந்திரத்தின் கருத்தாதல் விளங்கும். அதனால்,* ***'பதி ஞானத்தால் பதியைத் தலைப்பட்டு உணர்வோரே சுத்தசைவர்' என்பதும், 'அவ்வாறன்றி, பாசஞான பசுஞானங்களால் உணர்வோர் மார்க்க சைவரே' என்பதும் கூறியவாறாம்.*** *"அண்ணலைச் சென்றணுகா" என்பதை இறுதியிற் கூட்டி உரைக்க.*

*இதனால், மேற்கூறியவர் எல்லாரும் சுத்த சைவராகாது மார்க்க சைவராதற்குக் காரணம் கூறப்பட்டது.*

***1419. தெளிவுரை :-*** *மேற்கூறிய, 'சிவனும், சீவனும் ஒருபொருளே' என்று கூறும் "பிரம வித்தியாவாதமும், இருவரும் வேறு வேறானவர்களே'' எனக் கூறும் வேதாந்தம் அல்லாத அசுரௌத வாதமும் இன்றி, 'இருவரும் கலப்பினால் ஒன்றாய் பொருள் தன்மையால் வேறாய் இருப்பவர்' என்னும் சித்தாந்த அத்துவித ஞானத்தில் நிலைபெற்று நின்று, பொருளில்லாத சூனியம்' எனத்தக்க பல சமயத் தொடக்கினின்றும் நீங்கி, அந்தச் சமயங்கள் அனைத்திற்கும் மேலே உள்ள முதற் பொருளாகிய, அறியப்படுபொருளாம் சிவனை, அவனது திருவடி ஞானத்தின்வழியே சென்று பொருந்திப் பின் அவனேயாகி விடுதலே சித்தாந்த ஞானத்தின் பயனாகும்.*

***குறிப்புரை :-*** *நிராகாரம் - உருவின்மை; என்றது பொருள் யாதும் இல்லாத சூனியத்தை. மூன்றாம் அடியில் 'நின்று' என்பது பாடம் அன்று. 'பராபரை' என்பது பாடமாயின், "பாதம்" என்பதற்கு 'நிபாதம்' எனப் பொருள் உரைத்து, "நேயத்தை" என்பதை அதன் பின்னர்க் கூட்டியுரைக்க. "சென்று" என்பதன்பின், 'தலைப்பட்டு' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், அசுத்த சைவம். மார்க்க சைவம் என்பவற்றது நிலை இனிது விளங்குவதற்குச் சுத்தசைவத்தினது சிறப்புக் கூறப்பட்டது.*

## 4. கடுஞ் சுத்த சைவம்

*இது முதல் ஐந்து மந்திரங்களால் கடுஞ் சுத்தசைவம் உணர்த்துகின்றார். கடுமை, இங்கு அருமை யுணர்த்தும். அருமை, சுத்தசைவ நிலையில் நிற்றலில் உள்ள அருமையாம். ஞானம் முதிரவே, வேடமாதிய சாதனங்களில் உள்ள பற்றும் தானே கழலுமாதலின், அவை நீங்கி, ஆடம்பரமின்றி மலமாயை கன்மங்களின் நீங்கிய சிவபோதக நிலை கடுஞ்சுத்த சைவமாம்.*

**1420.** வேடங் கடந்த விகிர்தன்றன் பால்மேவி
ஆடம் பரமின்றி ஆசாபா சஞ்செற்றுப்
பாடொன்று பாசப் பசுத்துவம் பாழ்படச்
சாடும் சிவபோ தகர்சுத்த சைவரே. 1

---

**1420.** **தெளிவுரை :-** *துறவுக் கோலம் இன்றியே, ஆசையாகிய தளையையும் அறுத்தெறிந்து, துன்பத்தொடு படுதற்கு ஏதுவாகிய மலங்களாகின்ற பசுத்துவம் இல்லையாம்படி அடித்துப் போக்குகின்ற சிவஞானச் செயலரே கடுஞ்சுத்த சைவராவர்.*

*குறிப்புரை :-* விகிர்தன் - எல்லாவற்றையும் வியத்தகு நிலையில் வேறுவேறாகச் சிருட்டித்துக் காத்துத் தன்னுள்ளே அடக்கிக் கொள்பவராகிய பரசிவம். இல்லம் துறந்து, எங்கும் செல்பவரே துறவுக் கோலத்தை உடையராவர். ஆகலின், "வேடங் கடந்து" என்றது இல்லந்துறத்தலாகிய புறத்துறவு இன்றி, அகத் துறவு மாத்திரம், உடையராதலைக் குறித்தது. இவர் சிவனிடத்தே அடங்கியிருத்தல், அலை ஒழியாத கடலில் அலைவின்றி மூழ்குதலோடு ஒக்கும் அருமை யுடைத்தாதல் அறிக. ஆடம்பரம் - ஆரவாரம். வேடங்கடந்தமை முன்னே கூறப்பட்டமையின், இது தமது நிலையைப் பிறர் அறிதற்கு ஏதுவாம் பேச்சினைக் குறிக்கும். இது முற்கூறியதினும் அருமை யுடையதாம். போதகர் - போதத்தை விடாதே செயற்படுவோர். "சுத்தசைவர்" என்றது, அதிகாரத்தால் கடுஞ்சுத்த சைவரையாயிற்று.

*இதனால், 'கடுஞ் சுத்த சைவ நிலை இது' என்பது கூறப்பட்டது.*

**1421.** **தெளிவுரை :-** *தூல சூக்கும பர உடம்புகளாய் நிற்கும் முப்பத்தொரு தத்துவங்களும், அவற்றிற்கு மேல் உள்ள ஐந்து*

1421. உடலான ஐயைந்தும் ஒன்றும் ஐந்தும்
மடலான மாமாயை மற்றுள்ளம் நீவப்
படலான கேவல பாசந் துடைத்துத்
திடமாய்த் தனையுறல் சித்தாந்த மாமே. 2

1422. சுத்தச் சிவனுறை தானத்தில் தோயாமல்
முத்தர் பதப்பொருள் முத்திவித் தாம்மூலம்
அத்தகை ஆன்மா அரனை அடைந்தற்றால்
சுத்த சிவமாவரே சுத்த சைவரே. 3

---

*தத்துவங்களும் ஆக முப்பத்தாறு தத்துவங்களும் விரிவான நிலையை யுடைய பெரிய மாயையாம். அவற்றை ஆன்மா நீக்கின் அறிவை மறைத்து நிற்கும் ஆணவ மலத்தைக் கழுவித் தனது இயற்கை நிலையை உறுதிப்பட எய்தும். அவ்வாறு எய்துவதே சித்தாந்தச் சைவ நெறியாகும்.*

***குறிப்புரை :-*** *"உடலான" என்பது "ஐந்தும், ஓராறும்" என்னும் இரண்டோடே பொருந்தி நின்றது. அவற்றிற்கு மேல் உள்ள ஐந்தும் சுத்த தத்துவங்கள். அவை ஆன்மாக்களுக்கு உடம்பாய் வருதல் இல்லை. மடல் - விரிவு. 'படலம்' என்பது, அம் குறைந்து நின்றது. கேவல பாசம் - ஆன்மாவோடு இயல்பாக ஒட்டி ஒன்றாய் நிற்கும் பாசம்; ஆணவ மலம், உள்ளம் - ஆன்மா. ஆன்மா என்றும் சிவ வியாபகத்தில் உள்ளதே யாகலின், அந்நிலை தோன்றாதவாறு மறைத்துள்ள ஆணவம் நீங்கியவுடன் தனது இயற்கை நிலையை எய்தலாவது சிவ வியாபகத்தில் இருத்தலை உணர்ந்து இன்புறுதலேயாதல் அறிக. "சித்தாந்தம்" என்பதே சுத்த சைவம் ஆதலின், 'அந்த நெறியில் கடுஞ்சுத்தசைவர் இவ்வாறு நிற்பர்' எனக் கூறியவாறு.*

*இதனால், மேற்கூறிய அரு நெறியின் இயல்பு வகுத்துக் கூறப்பட்டது.*

**1422.** ***தெளிவுரை :-*** *தடத்த சிவன் எழுந்தருளியிருக்கின்ற சுத்தமாகிய சிவலோகத்தை அடையினும் அங்குப் பற்றுக் கொள்ளாமல் 'முத்தர்' என்னும் சொல்லுக்குப் பொருளும் முத்தியாகிய நிலத்திற்கு வித்தும் ஆகியிருக்கின்ற அந்தத் தகுதியையுடைய முத்தான்மா ஆகின்றவர் அவ்வாற்றால் சிவனைச்*

**1423.** நானென்றும் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பரம்
தானென்றும் நான் என்ற தத்துவம் நல்கலால்
தானென்றும் நானென்றும் சாற்றகில் லேனே. **4**

---

*சார்ந்து, அதனால், மூலமலம் பற்றறக் கழிந்தவழிச் சொரூப சிவனோடு இரண்டறக் கலப்பர். அங்ஙனம் கலப்பவரே உண்மைச் சுத்த சைவராவர்.*

***குறிப்புரை :-*** *'அதனால்' வேடம் முதலியவற்றை மேற்கொள்ளாமலே அத்தகுதியையுடையராய் இருப்பர் கடுஞ்சுத்த சைவர்' என்பது குறிப்பெச்சம் 'சுத்தத்தானம்' என இயையும். 'சிவனுரை' என்பது பாடமன்று. "மூலம்" என்பதை, அற்றால் என்பதற்கு முன் கூட்டி உரைக்க. அத்தகைய ஆன்ம நிலையை அடைந்தவரை "ஆன்மா" என்றே கூறியது ஆகுபெயர். இஃது இயற்கையில் அஃறிணை இயற் பெயராய்ப் பன்மைகுறித்து நின்று பின் ஆகுபெயர் ஆயிற்று. 'சுத்த சிவமாவர்; அவரே சுத்த சைவர்' என இருசொல் நீர்மைப்படுத்து உரைக்க. 'சிவலோகத்தை அடைந்தாரும் பற்று நீங்காதவழி மீள நிலத்திற்பிறப்பர்' என்பதும், 'பற்றற்றிருப்பின், அவ் விடத்திற்றானே சிவன் முன்னின்று அவரை முத்தியிற் சேர்த்துவன் என்பதும் சிவாகம உண்மையாதலின் (சிவஞான சித்தி. சூ. 8. 25) அவரையே "முத்தர் பதப் பொருள்" என்றும் "முத்திக்கு வித்து" என்றுங் கூறினார். திருவள்ளுவநாயனாரும் இத்தகையோரை, "வரன் என்னும் வைப்பிற் கோர் வித்து" (திருக்குறள், 24) என அருளிச் செய்தார்.*

*இதனால், கடுஞ் சுத்தசைவரது சிறப்புக் கூறப்பட்டது.*

**1423. *தெளிவுரை :-*** *'நான் எங்கே யிருக்கின்றேன், 'தத்' பதப் பொருளாகிய பரம் எங்கே உள்ளது' என்று நான் தேடி அலையும் நிலையில், 'தான் அதோ உள்ளது, நான் இதோ உள்ளேன்' என வேறு வேறு கண்டு எண்ணுமாறு 'இரண்டு' என்னும் எண்ணிற்கே இடம் இல்லாது, என்னுள் ஒன்றாயே நிற்கின்ற அது எனது அலைவுக்கு இரங்கி வெளிப்பட்டு வந்து, தான் என்றுமே நானாய் - என் உயிருக்குயிராய் - ஒன்றியிருக்கிற உண்மையை உணர்த்தினமையால், நான் இப்பொழுது 'தான்' என்று அதனைத் தனியாகவும், 'நான்' என்று என்னைத் தனியாகவும் எண்ணிச் சொல்லும் தன்மை இலே னாயினேன். தத்துவ மசி - தத் + துவம் +*

**1424.** சாற்றரி தாகிய தத்துவம் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. **5**

---

*அசி - அது நீ ஆகிறாய்.*

*குறிப்புரை :- 'தற்பதம்' என்பது பாடமாயின், "பதம்" என்பதைச் சொல்லாகு பெயராகக் கொண்டு உரைக்க.*

*"தேடிக் கண்டு கொண்டேன் - திரு*
*மாலொடு நான்முகனும்*
*தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே*
*தேடிக் கண்டு கொண்டேன்" (தி.4 ப.9 பா.12)*

*என்றதும் இங்கு நினைக்கத்தக்கது.*

*இதனால், புறக்காட்சியற்று அகக் காட்சியில் உறைந்து நிற்றல் கடுஞ்சுத்த சைவமாதல், தம்நிலை உணர்த்து முகத்தால் கூறப்பட்டது.*

**1424. தெளிவுரை :-** *சொல்ல இயலாத மேற்குறித்த உண்மை நிலை கிடைக்கப் பெற்றால், பொறுத்தற்கரிய ஐம்புலன்களும் தம் குறும்புகள் நீங்கி அடங்கிவிடும். பாசஞான பசு ஞானங்களைக் கடந்து மேலாய் விளங்கும் பதிஞானம் நொந்தா விளக்குபோல நிலைபெற்று ஒளிரும். அதன் பயனாகப் பின்னர்ப் பதிப்பொருள், மேலான சாயுச்சியமாய்க் கிடைக்கும்.*

*குறிப்புரை :- 'அத் தத்துவம்' எனச் சுட்டு வருவித்து உரைக்க. பால் - அப்பால்.*

*இதனால், கடுஞ் சுத்த சைவத்தின் அருமையும், பயனும் கூறப்பட்டன.*

## 5. சரியை

### *(உடம்பினால் இறைவனை வழிபடுவது)*

*மேல், சைவத்தின் வகைகளைக் கூறி, இங்கு நின்றும் சைவத்தில் உள்ள ஒழுகலாறுகளை உணர்த்துவான் தொடங்கி, முதற்கண் எட்டு மந்திரங்களால் சரியை கூறுகின்றார். தொடக்க அதிகாரமாதலின், பிற ஒழுக்கங்களும் இதனுள் பொதுப்பட உடன் வைத்துக் கூறப்படுகின்றன. சமயதீக்கை பெற்று உடலால் சிவத் திருப்பணிகள் செய்தல். நாடும் நகரமும் தேடித்திரிந்து சிவபெருமான் என்று பாடுதலும், ஆலய வழிபாடு செய்தலும், அகல நின்று செய்யும் புறம்படித் தொழில்கள் சரியையில் அடங்கும்.*

**1425.** **நேர்ந்திடும் மூலன் சரியை நெறியேதென்**
**றாய்ந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்**
**ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்**
**தோர்ந்திடுஞ் சுத்தசை வத்த துயிரதே.** **1**

---

**1425.** *தெளிவுரை :- 'மூலன் உடன்பட்டுக் கூறிய சரியை நெறி யாது' என்று ஆராய்கின்ற கஞ்சமலையமானே, கந்துருவே' 'பூமியில் உண்மையை ஓர்ந்து உணரச் செய்வதாகிய சுத்த சைவத்தின் உயிர் நாடியாம் நெறிகள் இவை' எனக் கூறுகின்றேன்; கேண்மின்கள்.*

*குறிப்புரை :- 'மூலன் நேர்ந்திடும் சரியை' என மாற்றிக் கொள்க. 'கஞ்சன் முதலியோர் நாயனார்க்கு மாணாக்கர் என்பது பாயிரத்துள்ளே அறியப்பட்டது. அவர் பெயரை ஒரோவழி நாயனார் எடுத்தோதுதல் செய்வர். ''சரியை நெறி எது'' என்று எடுத்துக்கொண்டு, ''சைவத்துக்கு உயிர் கேண்மின்'' எனப் பொதுப்படக் கூறியது, "சரியையோடு பிறவற்றையும் கூறுவன்" என்றவாறு. இதனானே இவ்வதிகாரத்துள் பிறவும் பொதுப்பட உடன் வைத்துக் கூறுதல் பெறப்படும். இதனுள் பொருட்பின்வருநிலையும் வந்தது.*

*இதனால், இனிவரும் அதிகாரங்கட்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

**1426.** உயிர்க்குயிர் ஆய்நிற்றல் ஒண்ஞான பூசை
உயிர்க்கொளி நோக்கல் மகாயோக பூசை
உயிர்ப்புறும் ஆவாகனம் புறப் பூசை
செயிர்க்கடை நேசம் சிவபூசை யாமே. **2**

---

*1426. **தெளிவுரை :–** உயிர்க்கு உயிராய் உள்ள பொருளை உணர்ந்து ஆராய்ந்தறிவது ஞானபூசை. உயிர்க்கு உணர்வுண்டாக்கு கின்ற பிரணவத்தைப் பல வகையாலும் காணுதல் பெரியயோக பூசை. புறத்தில் விளங்கும் மூர்த்தி உயிருடையதாகும்படி மூர்த்திமானை அதன்கண் வருவித்துச் செய்தல் புறப்பூசை. இனிக் குற்றம் தீர்ந்த அன்புடன் செய்வனயாவும் சிவனுக்குச் செய்யப்படும் பூசையாம்.*

***குறிப்புரை :–*** *அதனால், 'அன்பின்றி நிகழின் இங்கு எடுத்தோதப் பட்டனவும் பூசை யாதலில்லை' என்றதாம்.*

*நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே*
*புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்;*
*பொக்கம் மிக்கவர் பூவும்நீ ருங்கண்டு*
*நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே. - தி5 ப90 பா9*

*எனவும்,*

*அன்பேஎன் அன்பேஎன் றன்பால் அழுதரற்றி*
*அன்பேஅன் பாக அறிவழியும் - அன்பன்றித்*
*தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாம்*
*சாற்றும் பழமன்றே தான்.*
*- திருக்களிற்றுப்படியார், 55*

*எனவும் போந்தன காண்க. இதனுள் யாவற்றையும் "பூசை" என்றே குறித்தலின், 'பசுக்களாகிய உயிர்கள் பதியாகிய இறைவனை எவ்வாற்றாலும் வழிபட்டு நிற்றலே சைவத்தில் உள்ள உய்யும் நெறி' என்பது விளங்கும். 'அவ்வழிபாடுதான், 'ஞான யோகக் கிரியா சரியைகள்' என நான்காய் நிற்கும்' என்பது அம்முறையானே கூறப்பட்டது. முதல் மூன்று அடிகளிலும் முறையே ஞானம் முதலிய மூன்றனையும் கூறி, 'அவையல்லாத பிறவெல்லாம் சரியையாம்' எனப் பொதுப்படக் கூறினார் என்க. 'பிராசாத யோகம்' என்பார், "மகா யோகம்" என்றார். "ஆய் நிற்றல்" என்பது, 'ஆய்' என்னும் முதனிலை, 'ஆய்ந்து' என வினையெச்சப் பொருள் தந்தது. 'உயிர்ப் பெறும்' என்பது பாடமாயின், 'பகரஒற்று விரித்தல்' என்க. செயிர் - குற்றம். 'அறன்கடை' என்பது அதன் மறுதலையைக் குறித்தல் போல, 'செயிர்க்கடை' என்பது அதன் மறுதலையைக் குறித்தது.*

*இதனால், சைவத்தின் ஒழுகலாறு நால்வகைத்தாதலும், அவற்றின் இயல்பும் தொகுத்துக் கூறப்பட்டன.*

**1427.** **நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்**
**தேடித் திரிந்து சிவபெரு மான்என்று**
**பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்**
**கூடிய நெஞ்சத்தைக் கோயிலாக் கொள்வனே. 3**

---

**1427.** ***தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *"நன்மை" என்றது விளக்கத்தை. இதனை முன் உள்ள "நாடு, நகரம்" என்பவற்றிற்கும் கூட்டி, 'நல்ல நாட்டையும், அதனுள் நல்ல நகரத்தையும், அதனுள் நல்ல திருக்கோயிலையும் கருதித் தேடித் திரிந்து' என உரைக்க.*

*"தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்*
*நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்"*

*- தி.5 ப.5 பா.5*

*என அருளிசெய்ததும் அறிக. நெஞ்சத்தை உடையாரது தொழிலை நெஞ்சத்தின் மேல் ஏற்றி, "கூடிய நெஞ்சம்" என்றார். கொள்ளுதற்கு எழுவாய், முன்னர் வந்த சிவபெருமானைச் சுட்டும். 'அவன்' என்பது வருவிக்க. இங்ஙனம் விரித்துக்கூறிய இவை, 'சரியை' என்பது அதிகாரத்தால் பெறப்பட்டது. 'நெஞ்சத்து' என்பது பாடம் அன்று.*

*இதனால், சரியை ஒழுக்கமாவன சில கூறப்பட்டன.*

**1428.** ***தெளிவுரை :-*** *சரியையில் நிற்போர் பத்தியையுடைய 'பத்தர்' என்றும், கிரியையில் நிற்போர் அணுக்கத் தொண்டு செய்யும் அத்தகுதியை யுடைய 'தொண்டர்' என்றும், இயமம் முதலிய யோக நிலைகளில் நிற்போர் 'சாதகர்' என்றும் ஞானத்தில் நிற்போர் 'சித்தர்' என்றும் பெயர் பெறுவர். இவருள் முதல் இருவரும் திருவேடத்தைத் தவிராது பூண்பர்.*

*சரியை - பத்தர்*
*கிரியை - தொண்டர்*
*யோகம் - சாதகர்*
*ஞானம் - சித்தர்*

***குறிப்புரை :-*** *எனவே, பின்னையிருவரும் பெரும்பான்மையும் புறக்காட்சி யிலராகலின், திருவேடம் இன்றியும் காணப்படுவர் என்பது போந்தது. பத்தர் - பத்தியுடையவர். அணுக்கத்தொண்டே 'தொண்டு' எனப்படுமாதலின், இவர் 'தொண்டர்' எனச் சிறப்பித்துக் கூறப் பட்டாராயினர். அணுக்கத்தொண்டினை 'பணிவிடை' என்பர். சித்தர் - பேறு பெற்றவர். 'சாதகர் தூயோகர்' என்பது பாடமாயினும் இதுவே பொருள் என்க.*

**சரியையில்;**

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 1. உவமை | அரும்பு | மலர் | காய் | கனி |
| 2. மார்க்கம் | தாசமார்க்கம் | சற்புத்திர மார்க்கம் | சகமார்க்கம் | சன்மார்க்கம் |
| 3. சீடனின் நிலை | சீலம் (ஒழுக்கம்) | நோன்பு (சாதனம்) | செறிவு (காதல்) | அறிவு (ஞானம்) |
| 4. வழிபாட்டு நிலை | உருவநிலை (மகேசுவர வடிவங்கள்) | அருவுருவ(சிவலிங்க) வழிபாடு | அருவ(மந்திர) வழிபாடு | இவையெல்லாம் கடந்த நிலை |
| 5. பக்குவநிலை | மந்தமம் | மந்ததரம் | தீவிரம் | தீவிரதரம் |
| 6. பரவுபவர் நாமம் | பத்தர் | தொண்டர் | சாதகர் (சிவ யோகியர்) | சித்தர் (சிவ ஞானியர்) |
| 7. திருமுறை சான்று | முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள் பின்னம் அவனுடைய ஆரூர் கேட்டாள் | பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள் | அன்னையையும், அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாள் அகலிடத்து ஆசாரத்தைத் தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள். | தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே |
| 8. முத்திநிலை | சாலோகம் (கடவுள் உலகம் அடைதல்) பதமுத்தி | சாமீபம் (கடவுளின் அருகிருத்தல்) பதமுத்தி | சாரூபம் (கடவுளின் உரு அடைதல்) பதமுத்தி | சாயுச்சியம் (கடவுளை ஒன்றி வாழ்தல்) பரமுத்தி |
| 9. மெய் வழிபாடுகள் | உடலின் செயற்பாடு மிகுந்த வழிபாடுகள் சரியை. (மெய்) அகல நின்று செய்யும் புறம்படித் தொழில்கள். | (உடலும், உள்ளமும்) மொழியும், மெய்யும் இணைந்த வழிபாடு கிரியை. அணுகி நின்று செய்யும் அகம்படித் தொழில்கள். | யோகம் என்றால் ஒன்றுபடுதல். இரண்டற்று நிற்றல். மனவழிபாடு (உள்ளம்). | ஞானம் ஒன்றே வீடுபேற்றிற்கு நேர்வாயில். ஞானம் எனப்படுவது சிவனே முதல்வன் எனத்தெளிந்து நிற்றலேயாகும். "கிரியை மருவும் அவையாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம்" - சிவப்பிரகாசர் |
| 10. சரியையில் | தெய்வம் உண்டென நினைத்தல் - அவரவர் இல்லத்தில் ஒரு தெய்வத்திரு உருவின் படத்தை வைத்து வழிபடல் – உத்தூளனமாக நெற்றிப்பொட்டில், பொட்டளவு திருநீறு இட்டுக்கொள்ளுதல் – திருக்கோயிலுக்குச் செல்ல வேண்டுமென்ற உணர்வு ஏற்படுதல் - கோயிலுக்குப் போக ஆரம்பித்தல் - கோயிலில் இறைவன் திருவுரு முன்னின்று வணங்குதல் - எந்தவித வேறுபாடுகளும் தெரியாமல் அனைத்து உருவவழிபாடும் செய்தல் - இறைவன் ஒருவன் உளன் என்ற உணர்வுமட்டும் உண்டு. ஆனால் வேறு எந்தத் தெளிவுமில்லை. | அவரவர் வினைகள் ஒத்துப்போகும் காலத்து இறைவனைப் பற்றிச் சிந்திக்கும் அறிவில் சற்றுத்தெளிவு ஏற்படுதல். அவருக்குப் பணிசெய்ய வேண்டும் என்ற ஆர்வம் முளையிடுதல். வீட்டிலே பூசை அறை/இடம் ஏற்படுத்திக் கொண்டு படங்களுக்கு முன் விளக்கிட்டு வழிபட ஆரம்பத்தல் – அடிக்கடி கோயிலுக்கும் சென்றுவருதல் – ஆலயத்தைத் தூய்மையாக வைத்திருக்க வேண்டுமென்று திருவலகு, திருமெழுக்கிடத் தொடங்கி, நந்தவனம் அமைத்து மலர்ப்பணி செய்தல் - அடியார்களை வணங்கி அரன் பணியும், அடியார் பணியும் செய்தல் - சிறுசிறு தெய்வ வழிபாட்டு நூல்களைப் படித்தல் – திருவிழாக்களிலே/ குடமுழுக்குகளிலே கலந்துகொள்ளுதல் – ஒருபடி முன்னேறிய நிலையில் தகுந்த குருவையணுகிச் சமயதீக்கைப்பெற்று திருஉத்திராக்கம், திருநீறு உடலில் 16 இடங்களில் முப்புண்டரிகமாக அணிந்து, | சமயதீக்கை பெற்றுத் தினமும் பஞ்சபாத்திரத்துடன் ஆன்மார்த்த பூசை செய்துவரும் நாளில் மேலும் தெளிவு பிறக்கத் திருவருள் கூட்டுகிறது. திருவருள் வாய்க்கப் பெற்றவர்கள் அதைச்சந்தி வழிபாடாகக் காலை 6.00 மணி, மதியம் 12.00 மணி, மாலை 6.00 மணி என்ற முச்சந்திப் பொழுதாகவே பூசை செய்ய ஆரம்பிப்பார்கள். தினமும் சற்று நேரம் ஓரிடத்தில் அமரவேண்டும். தியானம் செய்ய வேண்டுமென்ற உணர்வு ஏற்படுகிறது. கோயிலுக்குச் சென்றாலும் வழிபாடு, திருத்தொண்டுப்பின் ஓரிடத்தில் அமர்ந்து தியானம் புரிய ஆரம்பித்தல் ——— பேச்சு சற்றுக்குறைதல் இதயகமலத்திலே இறைவனை எழுந்தருளச் செய்து தியானித்து. அவரையே மனப்பூர்வமாக மனதில் நினைக்க வேண்டுமென உணர்ந்து அதற்காக முயற்சி செய்தல். நினைத்தவர் மனம் கோயிலாகக் கொண்டவன் –அப்பர் | சைவம் சார்ந்த நிகழ்வுகளில் முழுமையாக ஈடுபடுதல் – அதைப் பற்றிய பயிற்சி வகுப்புகளில், சொற்பொழிவுகளில் கலந்து கொள்ளுதல்; தேவாரம், திருவாசகம் போன்ற பன்னிரு திருமுறை நூல்களை ஓத ஆரம்பித்தல். பிறவியின் அருமையைக் கொஞ்சம் கொஞ்சமாக உணர்தல் - "ஞானம் ஈசன்பால் அன்பே" என்றபடி மெதுவாக அன்பு செலுத்தத் தொடங்கல். தியானம் மற்றும் அன்பு செலுத்தலால் ஓர் அருளனுபவம் ஏற்படல். இறைவழிபாடு |

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 10. சரியையில் | | திருவைந்தெழுந்து ஓதவேண்டும் என உந்தப்பட்டுக் குருவைத் தேடி அலைதல் – காலம் கனியும் காலத்தில் குருவின் திருவருள் வாய்க்கப்பெற்று - நகரம் முதலான தூலபஞ்சாக்கரம் ஓதும் பேறு பெறல். இந்தச் சமய தீக்கை ஒருவர் சைவ சமயம் புகுவதற்காகச் செய்யப்படுவது, சமயதீக்கை பெறாதவர் சைவசமயி ஆகார். இஃதின்றித் திருநீற்றைப் பதினாறு இடங்களில் நீரில் குழைத்துப் பூசமுடியாது. ஐந்தெழுத்து ஓத முடியாது. மலர் அர்ச்சனைகளை இறைவன் ஏற்கமாட்டார். சிவாகமங்களைக் கேட்கும் உரிமை அளிக்கப்படுகிறது. சமய தீக்கைத் தூல உடம்பைப் பலவகைகளில் தூய்மைப் படுத்துகிறது. தன் முனைப்பு நீங்கி "எல்லாம் அவன் செயல்" என்னும் நிலைக்கு வருகிறான். சிவதீக்கை ஆன்மாவுக்கேயன்றி உடலுக்கல்ல.<br>"சமயம் மலசுத்தி தன்செயல் அற்றிடும்"<br>- திருமந்திரம் 1432<br>"தாதமார்க்கம் சாற்றில், சங்கரன்தன் கோயில்<br>தலம் அலகிட்டு, இலகு திருமெழுக்கும் சாத்திப்<br>போதுகளும் கொய்து, பூந்தார் மாலை கண்ணி<br>புனிதர்க்குப்பல சமைத்துப் புகழ்ந்து பாடித்<br>தீதில் திருவிளக்கிட்டுத் திருநந்தவனமும்<br>செய்து திருவேடம் கண்டால், அடியேன் செய்வது<br>யாதுபணியீர்" என்று பணிந்து அவர்தம் பணியும்<br>இயற்றுவது, இச்சரியை செய்வோர் ஈசனுலகு இருப்பர்<br>- சித்தியார் 271<br>நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சேநீ வா நித்தலும்<br>எம்பெருமானுடைய கோயில்புக்கு - அப்பர்<br>"எவரேனும் தாமாக இலாடத்து இட்ட" - அப்பர்<br>"நாடும் நகரமும் நற்றிருத்திருக்கோயிலும்" தீக்கை நயனதீக்கை, பரிச தீக்கை, வாசகதீக்கை, மானசதீக்கை, சாத்திரதீக்கை, யோகதீக்கை என்று செய்யப்படும் முறைபற்றிப் பலவகையாகப் பேசப்படும். திருக்கோயில் பணிகள், குருநாதர், அடியவர் சேவைகள் திருவுருவங்களைத் தீண்டாது வழிபாடு செய்தல்.<br>25 மூர்த்தங்களை வழிபடல். விநாயகர், முருகன் வழிபாடு, சுற்றுத் தேவதைகளை வழிபடல். | என் உள்ளம் கவர் கள்வன் - சம்பந்தர்<br>எத்தான் மறவாதே நினைக்கிறேன் மனத்துன்னை<br>- ஆரூரர்<br>இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்தாள் வாழ்க - மணிவாசகர்<br>அகப்பூசை செய்தல் (திருவுருவங்களை உள்ளத்தில் தியானித்தல்) ஐந்தெழுத்தைத் தியானத்தால் கணித்தல்.<br>நெறிவழியே சென்று நேர்மையுள் ஒன்றித்<br>தறி இருந்தாற் போல் தம்மையிருத்திச்<br>சொறியினும் தாக்கினும் துன்னென்றுணராக்<br>குறி அறிவாளர்க்குக் கூடலுமாமே<br>- திருமந்திரம் 1438<br>"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்" - திருவாசகம்<br>தமது உடலை நேராகச் சிறிதும் அசைவற நிறுத்திப் பிறர் கீறினாலும், தாக்கினாலும் அவற்றால் உணர்வு பிறழாது தியானப்பொருள் ஒன்றையே எவன் நினைக்கிறானோ அவனுக்குச் சிவனருள் கிட்டும். கொசு கடித்தாலே தாங்காத நமக்கு இன்னும் எத்தனை பிறவிகளோ? காலைச்சந்தி 6.00 மணி, மதியம் உச்சி 12.00 மணி, மாலைச்சந்தி 6.00 மணி என்ற மூன்று நேரங்களிலும் அனுட்டானம் செய்வது உத்தமம். காலையில் மட்டும் செய்துவிட்டு மற்றைய சந்திவழிபாடு செய்ய முடியாதவர்கள் உச்சி, மாலை வேலைகளில் இருந்த இடத்தில் இருந்தபடி மானசீகமாகவே வழிபாடு செய்யலாம். அது பூசலார் வழிபாட்டையொக்கும்.<br>அட்டாங்க யோகங்களுள் முதல் இரண்டான இயமம், நியமம் இவற்றைப் பின்பற்றத் தொடங்குதல்.<br><u>இயமம்</u> - யோகநிலைக்குத் தடையாய் உள்ளவற்றிலிருந்து நீங்குதல்.<br><u>**தள்ளத்தக்க செயல்கள்**</u> - பாவங்கள் – கொலை, களவு, சினம், வஞ்சம், பொறாமை, சூழ்ச்சி, பால்கவர்ச்சி (காமம்), பிறன்மனை விழைதல், மது, அறியாமை.<br><u>நியமம்</u> - யோகநிலைக்குக் கொண்டு சேர்க்க.<br><u>**கொள்ளவேண்டியன**</u> (புண்ணியச் செயல்கள்) தவம், சந்தோசம், பொறுமை, அன்பு, அறிவு, அடக்கம், பெரியாரைத் துணைகோடல், கல்வி, மனங்கலங்காமை, குறைந்த அளவான உணவு, தானதர்மங்கள், இறையுணர்வு, நன்றியுணர்வு, ஈசுவர பூசை, செபம், செயல் தூய்மை. | முடிந்தபின்தான் உணவு உண்ணவேண்டும் என்ற பக்தி வைராக்கியம் ஏற்படுதல். மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாக வணங்கியவர் தாம் கற்றுக்கொண்ட சரியை முற்றினவர் ஆவார். திருக்கோயில் வழிபாடே சரியை. |

**கிரியையில்**

<table>
<tr><th></th><th>சரியை</th><th>கிரியை</th><th>யோகம்</th><th>ஞானம்</th></tr>
<tr>
<td>11. கிரியையில்</td>
<td>சிவலிங்கத் திருமேனியின்மேல் பற்று ஏற்பட்டுத் தீவிரமாக வழிபடவேண்டும் என்ற எண்ணம் வரும். பல ஆண்டுகள் சமய தீக்கைப் பயிற்சிக்குப்பின் ஆன்மார்த்த பூசைகளை மேலும் வலுப்படுத்த மனம் விளையும். அடியார்களுடன் கூட்டுறவும், பல சிவ வழிபாட்டு நிகழ்ச்சிகளில் (நித்திய, நைமித்திக, கும்பாபிசேக விழாக்கள்) கலந்துகொள்ளும் வாய்ப்பும் பெற்று, திருமுறைகள், நால்வர் பெருமக்கள், 63 நாயன்மார்கள், தோத்திர, சாத்திர நூல் ஆசிரியர்கள் ஆகியோர்பால் ஈர்க்கப்பட்டதன் விளைவாக விசேட தீக்கை பெற வேண்டுமென்ற ஆர்வம் வரும். ஏற்கனவே சமயதீக்கை கொடுத்த ஆசானிடமோ, வேறு ஆசானிடமோ விசேட தீக்கை பெற்று விரிவான இல்ல பூசைக்குத் தயாராகுதல் – படிகம், உலோகம் அல்லது கல்லால் ஆன சிவலிங்கத்திருமேனியைத் தகுந்த அளவான நந்தியுடன் பெற்றுத் தினசரி பூசைக்குத் தயாராகுதல் – பூசைப்பொருட்கள் அனைத்தையும் சேகரித்து வைத்துக்கொண்டு தினமும் அதிகாலை 5.00 மணிக்கு எழுந்து உடற்பயிற்சி, காலைக் கடன்களை முடித்து 6.00 மணிக்கு பூசையறையுள் இருக்க வேண்டும். முதலில் சமய தீக்கையில் கற்றுக்கொண்ட அனுட்டான கிரியையாக முடித்துக்கொண்டு, பஞ்ச சுத்தி செய்து சிவவேடத்துடன் (திருநீறு, திருஉத்திராக்கம் அணிந்துகொண்டு ஐந்தெழுத்தையே செபித்துக்கொண்டு இருத்தல்) சிவலிங்கத் திருமேனியை, எள்ளெண்ணெய், ஆனைந்து, திருமஞ்சனப்பொடி, மஞ்சள்பொடி, அரிசிமாப்பொடி, நெல்லிப்பொடி, பஞ்சாமிர்தம், நெய், தேன், கருப்பஞ்சாறு, பால், தயிர், இளநீர், பழரசம், எலுமிச்சை, திருநீறு, சுத்த அன்னம், சொர்ணம், கமண்டல மஞ்சனநீர், சந்தனம், பன்னீர் ஆகிய 21 பொருட்களால் அபிடேகம் செய்து, திருவமுதூட்டிப் பின் திருமேனியைத் துடைத்துப் புத்தாடை அணிவித்துத் திருநீறு, சந்தனம், குங்குமமிட்டு மலர்மாலை சுற்றி,</td>
<td>மீன் தன்னுடைய முட்டைகளைக் கண்ணால் நோக்கிக் குஞ்சு பொரித்து எல்லா நிறைவையும் செய்வதுபோல ஆசாரியன் கண்ணாலேயே கொடுப்பது நயனம். திருமேனியைத் தொட்டுக் கொடுப்பது பரிசம். மெய்கண்டார் அருள்நந்தி சிவத்துக்குக் கொடுத்தது நயனம். நாவரசருக்கு இறைவன் நல்லூரில் மூவிலைச்சூலம் பொறித்ததும், சுந்தரருக்குப் பெருமான் சித்தலிங்க மடத்தில் கொடுத்ததும், மணிவாசகருக்குத் திருப்பெருந்துறையில் கொடுத்ததும் பரிசம். கொற்றவன்குடி உமாபதிசிவம் பெற்றான் சாம்பானுக்குக் கொடுத்தது பரிசம். முள்ளிச் செடிக்குக் கொடுத்தது நயனம்.<br><br>காலவமுனிவருக்கு இறைவன் கொடுத்தது பரிசதீக்கை.<br><br>"புத்திர மார்க்கம் புகலில், புதிய விரைப்போது<br>புகை, ஒளி, மஞ்சனம், அமுது முதல்<br>கொண்டு, ஐந்து<br>சுத்திசெய்து, ஆசனம், மூர்த்தி, மூர்த்தியின் ஆம்<br>சோதியையும் பாவித்து, ஆவாகித்துச் சுத்த<br>பத்தியினால் அருச்சித்துப் பரவிப் போற்றிப்<br>பரிவினோடும் எரியில்வரும் காரியமும்<br>பண்ணி<br>நித்தலும் அக்கிரியையினை இயற்றுவோர்கள்<br>நிமலன்தன் அருகு இருப்பர், நினையும்காலே"<br>- சித்தியர் 272<br><br>ஐந்து சுத்தி – பூத சுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி.<br><br>"நறைமலி தரும் அளறொடு, முகநகுமலர்<br>புகைமிகு வளர் ஒளி<br>நிறைபுனல் கொடுதனை நினைவொடு<br>நியதமும் வழிபடும் அடியவர்<br>குறைவுஇல பதமனை தரஅருள் குணம்உடை<br>இறைஉறை வளபதி<br>சிறைபுனல் அமர்சிவபுரம்அது நினைவர்<br>செயமகள் தலைவரே"<br>– திருஞானசம்பந்தர்<br><br>ஆக சிவபூசை வழிபாடே கிரியையில் கிரியை.<br><br>"சமையம் மலசுத்தித் தன் செயல் அற்றிடும்<br>அமையும் விசேடம் அரன் மந்திர சுத்தி</td>
<td>அகத்தே பூசை, ஓமம், தியானம் மூன்றிற்கும் மூன்றிடம் வகுத்துக்கொண்டு செய்யும் அந்தரியாகம். மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாதகம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களிலும் இறைவனை ஏற்றி வழிபடுதல். அவற்றிற்குண்டான அதிதேவதைகளை அறிந்து மூர்த்தியின் சொரூபத்தைத் தியானித்தல்.<br><br><table><tr><th>ஆதாரம்</th><th>உடலின் இருப்பிடம்</th><th>அதி தேவதை</th><th>மந்திரம்</th><th>தலம்</th></tr><tr><td>1.மூலா தாரம்</td><td>குதம், குறி இவற்றின் நடு</td><td>விநாயகர்</td><td>ஓம் நமசிவய</td><td>ஆரூர்</td></tr><tr><td>2.சுவாதிட் டானம்</td><td>நாபிக்கும், குறிக்கும் நடு</td><td>பரமன்</td><td>ஓம் நமசிவய</td><td>ஆனைக்கா</td></tr><tr><td>3.மணி பூரகம்</td><td>நாபிக் கமலம்</td><td>திருமால்</td><td>நமசிவய</td><td>அண்ணா மலை</td></tr><tr><td>4.அநாதகம்</td><td>இதயம்</td><td>உருத்திரன்</td><td>சிவயநம</td><td>சிதம்பரம்</td></tr><tr><td>5.விசுத்தி</td><td>கண்டம்</td><td>மகேசன்</td><td>சிவயசிவ</td><td>காளத்தி</td></tr><tr><td>6. ஆக்ஞை</td><td>புருவநடு</td><td>சதாசிவம்</td><td>சிவயசிவ சிவசிவ</td><td>காசி</td></tr></table><br>"சினமலி அறுபகை மிகுபொறி சிதைதரு<br>வகைவளி நிறுவிய<br>மனன் உணர்வொடுமலர்மிசை எழுதருபொருள்<br>நியதமும் உணர்பவர்<br>தனதெழில் உருவதுகொடுஅடைத குபரன்<br>உறைவது நகர்மதில்<br>கனமரு வியசிவபுரம் நினைபவர் கலைமகள் தர<br>நிகழ்வரே"<br>- திருஞானசம்பந்தர்<br><br>"உயிராவணமிருந்து உற்றுநோக்கி<br>உள்ளக்கிழியின் உரு எழுதி" - அப்பர்<br><br>"முக்குணம் புலனைந்துடனடக்கி மூலவாயுவை<br>எழுப்பஇரு வழியை" - திருவாதவூரடிகள் புராணம்<br><br>முப்போதும் ஐந்தெழுத்து செபம். அட்டாங்க யோகத்தில் ஆசனம் பராணாயாமம் ஆகிய அடுத்த இரண்டு நிலைகளுக்கு ஆன்மா செல்லுதல்.<br><br>ஆசனம் - இருக்கும் முறை. உடல் உறுப்புகளை வெவ்வேறு நிலைகளில் நிறுத்தி அசைக்கும் பயிற்சி. 100 வகையான ஆசனங்கள் புறச்செயலுக்கு - உடல் ஆரோக்கியத்திற்கு உதவும்<br><br>"உடம்பார் அழியின் உயிரார் அழிவார்"</td>
<td>சமய, விசேட தீக்கைகளில் அழுந்தி வழிபாடு செய்துபின் நடக்கும் அந்தரதியான உறைப்பின்கண் நிகழும் ஒரு அனுபவ உணர்வுதான் ஞானம்.<br>முப்பொருளுண்மை, அந்தக்கரணங்கள், 36 தத்துவங்கள், 6 ஆதாரங்கள் என்ற சைவசித்தாந்தப் பேருண்மைகளையும், உடல் நுட்பங்களையும் கிரியையில் யோகத்தையும் செயலாற்றி முடித்த ஆன்மாவிற்குச் சிறிதுசிறிதாக ஞானம் வருகிறது.<br><br>"ஞானநூல்தனை ஓதல், ஓதுவித்தல், நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல் நன்றா ஈனமிலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவன் அடி அடைவிக்கும் எழில்ஞான பூசை, ஊனமிலாக் கன்மங்கள், தபம், செபங்கள், தியானம் ஒன்றுக்கொன்றுயரும், இவையூட்டுவது யோகம் ஆனவையால் மேலான ஞானத்தால் அரனை அர்ச்சிப்பார், வீடு எய்தஅறிந்தோர் எல்லாம்".<br>சித்தியார் - 275<br><br>"நின்பூசனை என்றும் முடிவதில்லை நம்பால்" என்ற இறைவன் வாக்கைத் தலைமேற்கொண்டு விசேடதீக்கையில் பல ஆண்டுகள் பூசனைகளை இடைவிடாமல் செய்து கொண்டிருக்கும் காலத்தில் மனம் அடுத்த நிலைக்குச் செல்லாமா என்று யோசிக்க</td>
</tr>
</table>

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 11. கிரியையில் | தூபதீபமிட்டு, அன்னம் வைத்து ஒளிதீபம் காட்டி மலர் அர்ச்சனைக்குத் தயாராகுதல். 1008 மலர்கள் கொண்டு போற்றி, வாழ்க, வெல்க என்ற மந்திரங்களுடன் கூடிய அர்ச்சனை செய்ய வேண்டும். அபடேக நிகழ்வுகளின் போது அந்தந்த இடத்துக்குரிய திருமுறைகளைச் சொல்லிக் கொண்டே செய்ய வேண்டும். நகார பஞ்சாக்கர உபதேசம் பெற்றுச் சமயதீக்கை செய்துவந்த ஆன்மாவுக்கு இப்போது விசேட தீக்கையில் சூக்கும பஞ்சாக்கரமாம் சிகார மந்திரம் கைவரப் பெறுகிறது. சிவயநம என்றோ அல்லது பீஜ எழுத்துக்களுடன் கூடிய ஓம் சிவயநம என்றோ ஜெபித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.<br><br>ஐவகை சுத்தி – பூசைப்பொருள் தயாரித்தல் – திருமுழுக்காட்டுடன் கூடிய 1008 மலர் அர்ச்சனை தினமும் செய்தல் – ஆயிரக்கணக்கான முறை சிவயநம ஓதுதல் என்று ஆன்மா விசேட தீக்கையில் கிரியையில் சரியை நிலைமையில் இயங்கிக் கொண்டிருக்கிறது. வேந்தரும், அவர்தம் துணைவியாரும் இந்தப்படிநிலையில் இன்று வரை இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். இதைப்போலவே ஒவ்வொருவரும் அவரவர் படிநிலையை உணர்ந்து செயல்படவேண்டும்.<br><br>கந்தவர்க்கமுங்கிளர் மணப் புகையுங்<br>கவின் கொடீபமும் புனிதமஞ்சனமுங்<br>கொந்தவிழ்ந்த நன்மலரு மற்றுளவுங்<br>கொண்டு மாயையின்<br>குணங்களொன்றிலராய்<br>ஐந்துசுத்தி செய்து அகம்புறமிறைஞ்சி<br>யங்கியின் கடன் முடித்தருள் வழிநின்<br>றிந்த நற்பெருங் கிரியை யன்புடனே<br>யியற்ற வல்லவ ரெம் மருங்கிருப்பர்<br>– திருவாதவூரடிகள் புராணம் | "சமையு நிருவாண ங்கலாசுத்தியாகும்<br>அமைமன்னு ஞானமார்க்கம் அபிடேகமே"<br>– திருமந்திரம் 1432<br><br>"பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்<br>ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை<br>நேசித்திட்டன்னமும் நீர்சுத்திசெய்தல் மற்<br>றாசற்ற சற்புத்திர மார்க்கமாகுமே"<br>- திருமந்திரம் 1476 | **சிறந்த ஆசனங்கள்**<br>பத்மாசனம் - தாமரை இருக்கை, பத்திராசனம் - இலை இருக்கை<br>குக்குடாசனம் - மயில், கோழி இருக்கை<br>சிங்காசனம் - சிம்ம இருக்கை, சுகாசனம் - சுக இருக்கை<br><br>**பிராணாயாமம்** - பிராணனை முறையாக அடக்கும் பயிற்சியே பிராணாயாமம்.<br><br>இது இயமம், நியமம், ஆசனம், தியானம் ஆகிய எல்லாவற்றுக்கும் உதவியாக இருப்பது. இந்த ஒன்றின் செம்மை வாய்த்தாலே ஏனைய எல்லாம் அமையும் என்பது திருமூலர் கருத்து. பிராணாயாமம் என்பது மூன்று கூறுகளைக் கொண்டது. உள் இழுப்பது - வெளியேற்றுவது – உள்ளிறுத்தல்/ வெளிநிறுத்தல் இவை முறையே<br><br>பூரகம்- ரேசமம் - கும்பகம் எனப்படும்.<br>16 மாத்திரை அளவு நேரம் உள்ளிழுத்து<br>64 மாத்திரை அளவு நேரம் உள்நிறுத்தி<br>32 மாத்திரை அளவு நேரம் வெளியிட்டால் அது உத்தமம். ஒரு நாளைக்கு நாம் 21,600 தடவை மூச்சு விடுகிறோம். நமது ஆயுளை நிர்ணயித்த இறைவன் ஆயுளையும், சுவாசத்தையும் கணக்கிட்டு நமக்குத் திசுக்களையும், உடலமைப்பையும் வடிவமைத்து அந்தக் காலம் மட்டும் வாழவைக்கிறான். எனவே மூச்சைக்கட்டுபடுத்தினால் ஆயுளைக் கூட்டவோ / குறைக்கவோ முடியும். நமது உடலில் கீழ்க்காணும் பத்துவகையான வாயுக்கள் உள்ளதாகத் திருமூலர் குறிப்பிடுகிறார் (653).<br>1. பிராணன் - உயிர்வளி – மூக்கு<br>2. உதானன் - எழுவளி - வாய்<br>3. அபானன் - விழுவளி - எருவாய்<br>4. சமானன் - நிறைவளி - உடம்பெங்கும் பரவியுள்ள நிலை<br>5. வியாதன் - அறுவளி – உணவைச் செரிப்பிக்க உதவுதல்<br>6. நாகன் - தும்முவளி - வேண்டாப்பொருள் வெளியேற்றம் | ஆரம்பிக்கும். சமயதீக்கை, விசேடதீக்கை என்ற இருநிலைகளுக்கு அடுத்து நிருவாண தீக்கை பெறத்திருவருள் கூட்டிவைக்கும். நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை – என்னும் ஐவகை கலாசுத்தியே – நிர்வாண தீக்கை. அந்நிலையில் ஆசான் அமைவார். நகார, மகாரங் களற்ற அதிசூக்கும பஞ்சாக்கர உபதேசம் (சிவயசிவ அல்லது சிவாய) பெற்று விசேடதீக்கை போன்றே தினமும் திருமேனிக்குப் பூசைசெய்து, மலர்சாற்றி வழிபடும் பேறு கிடைக்கும். நிருவாணதீக்கை அறுவகை அத்துவா(வழி) ஆகிய மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்பனவற்றைத் தூய்மைப்படுத்தி மலமகற்றும் முறையாகும்.<br><br>வரும் வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு பொருளைப் பதிபுண்ணியத்துக்காகச் செலவிடுவது. சிவன் கோயில்பூசனைகளுக்கு உதவுதல் - திருப்பணி - குடமுழுக்கு நடக்க ஆவன செய்தல் - நிறையப் பேருக்குத் தீக்கைச்செய்வித்தல் - பூசை முறைகளைச் சொல்லிக்கொடுத்து ஊக்குவித்தல் - சிறுசிறு நூல்களை வெளியிடுதல் – சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், இசைநிகழ்ச்சிகள் |

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 11. கிரியையில் | | | 7. கூர்மன் - நோக்குவளி - கண்களைப் பல திசையில் திருப்ப உதவும்<br>8. கிரிகரன் - சோம்புவளி – கொட்டாவி முதலிய சோம்பலை உண்டு பண்ணுதல்<br>9. தேவதத்தன் - நுண்வளி – கண் இமைத்தல், வாயசைத்தல்<br>10.தனஞ்செயன் - பருவளி - உடம்பை வேறுபடுத்தும் பயிற்சி. உயிர்போன பின் உடலை விளங்கச் செய்தும் வெளியேறும்.<br>இந்தப் பத்தையும் முறையாக இயங்க வைக்க உதவுவது பிராணாயாமம். அவ்வாறு பயில்பவர் உடல்நலம் /மனநலம் நன்றாக இருக்கும். நரை, திரை, மூப்பு வரத் தாமதமாகும். நல்ல பிராணா யாமத்தால் - உச்சக்கட்ட நிலைமையில் அட்டமாசித்திகளும் கைவரப்பெறும்<br>- திருமந்திரம் 642. | நடத்துதல், மாகேசுவர பூசைகள் செய்தல்.<br>அதிசூக்குமத்துக்கும் மேற்பட்ட யகார (ஆன்மாவாகிய நான் அழிந்த நிலையில்) மற்ற இருதலைமாணிக்கமாய சிவசிவ என்னும் மந்திரம் (இதுவும் ஐந்தெழுத்தே) ஓதும் உரிமை பெற்று வாழ்தல். இந்நிலையிலும் அபிடேக, 1008 மலர் வழிபாடு தொடர வேண்டும். முக்தியிலும் மலவாசனை வரும். அப்போதும் நம்மைக் காப்பவை பூசனையும் ஐந்தெழுத்துமே.<br>ஒருநாளும் அர்ச்சனை தவறியொழியாதபடி செய்தவரே நுண்ணியதான கிரியை முற்றினவர் ஆவார்.<br>"சமயக் கிரியையில் தன்மனம் கோயில்சமய மனுமுறை தானே விசேடம்சமயத்து மூலந்தனைத் தேறல் மூன்றாம்சமயாபிடேகம் தானாம் சமாதியே" - திருமந்திரம் 1488 |

யோகத்தில்

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| (அட்டாங்க யோகங்கள்)<br><br>13. யோகத்தில் | **பிரத்தியாகாரம்**<br>பிரத்தியாகாரம் என்றால் எப்போதும் புறத்தே ஓடிக்கொண்டிருக்கும் மனத்தைப் பொறிகளின் வழியே செல்லவிடாமல் அகத்தே நிறுத்திப் பழகுதல் ஆகும். பொறிகளின் வழியே மனத்தைப் போகவிடாமல் செய்ய சிறந்த முறை மடைமாற்றம் செய்யும் முறையே என்கிறார் திருமூலர். அதற்குரிய நெறிகளில் ஒன்றாகத்தான் ஆகுஞ்சன முத்திரை, கேசரி முத்திரை, சாலந்தர முத்திரையுடன் மூச்சுப் பயிற்சி செய்வதைக் குறிக்கின்றார்.<br>ஆகுஞ்சனம் - ஆ - பசு, குஞ்சனம் - இறுக்குவது. அதாவது பசுமலமிட்ட பின் மலவாயை இறுக்குவது போன்று நாம் நம் எருவாயை இறுக்கிப் படித்துக் கொண்டு மூச்சை மூக்கினால் இழுத்து ஒவ்வொரு சக்கரத்திலும் நினைவை நிறுத்திக் கொண்டுவருவது.<br>கேசரிமுத்திரை - பார்வையை மேல்நோக்கிச் செலுத்துதல்<br>சாலாந்தர முத்திரை - பிராணன் கண், காது வழியே வெளியேறாமல் தடுக்க, நாக்கினை உள்நோக்கி மடித்து, உள்நாக்குப் பக்கமாக வைத்துக்கொண்டு செய்யும் பயிற்சி.<br>எனவே மலவாயை இறுக்கி மேல் இழுத்துப் பிடித்துக் கொண்டு மனத்தை உச்சியில் வைத்துப் பார்ப்பதால் பொறிகள் வழி மனம் செல்லாதவாறு பிரத்தியாகாரம் செய்யலாம். மனத்தை மூலாதாரம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை போன்ற ஆதாரங்களால் வைத்துப் பார்த்தாலும் பிரத்தியாகாரம் கைகூடும். திருமந்திரம்: 581-585<br>மூலத்துவாரத்தை முக்காரம் இட்டிரு<br>மேலைத்துவாரத்தின் மேல்மனம் வைத்திரு<br>வேல்ஒத்த கண்ணை வெளியில் விழித்திரு<br>காலத்தை வெல்லும் கருத்து இதுதானே<br>-திருமந்திரம்:564<br>அபான வாயு வெளியேறும் மலவாயை அடைக்க - தலையில் உள்ள பிரமதந்திரம் என்னும் வாயிலை நினைக்க - அகவெளியில் உணர்வைத் செலுத்துக. நீ காலத்தை வெல்லலாம். | **தாரணை**<br>தாரணை என்றால் தரிக்கச் செய்து - ஓரிடத்து நிலைப்பது-நிலைகுத்தி நிற்பது - அலையும் மனம் பிரத்தியாகாரப் பயிற்சியின் மூலம் ஓரிடத்தில் சிறிது நேரமாயினும் தன்னை மறந்து, தலத்தின் நிலை மறந்து ஒன்றின்மீது ஒன்றி நிற்கும் நிலை.<br>தாரணை வாய்த்தால் கண்ணும், செவியும் செயல் மறந்து நிற்கும். பிரத்தியாகாரத்தின் செம்மையே தாரணை.<br>மூலாதாரத்தில் குண்டலினியாகிய கிரியா சக்தியோடு கூடியுள்ள பிராணனைத் தாரணைப் பயிற்சியில் எழுப்ப, தலைநடுவே உள்ள சிற்சக்தியெனப்படும் மனோன்மணியோடு சேரும்படி செய்யின் (சகஸ்ராரம்) முதியவனும், இளையவன் ஆவான். ஆறு ஆதார சத்திகளை அடைந்தவர்களுக்குக் கிடைக்கும் யோகத்தில் பலன் யோகத்தில் சரியையும், யோகத்தில் கிரியையும் ஆகும்.<br>அழிவிலாக் கிரியையினான் ஆதல்<br>சத்திமத்தான் ஆதல்<br>அத்துவா சுத்திபண்ணி மலமகற்றி<br>ஒழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானம்<br>உதிப்பத்து உற்பவம் துடைப்பன் அரன்<br>ஒரு மூவர்க்கும்<br>வழுவிலா வழி ஆறாம் மந்திரங்கள் பதங்கள்<br>வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்<br>கழிவிலாது உரைத்தமுறை ஒன்றின்ஒன்று<br>வியாத்தி<br>கருதுகலை சத்தியின்கண் சத்தி சிவன் கண்ணாம்<br>- சித்தியார் 258<br>அத்துவா எல்லாம் அடங்கச் சோதித்தது<br>சித்துருவாய் நின்றார் தெளிவறிவது எந்நாளோ?<br>- தாயுமானவர் | **தியானம்** தாரணை என்பது எதுவோ அதுவே தியானமும் ஆகும். ஆனால் ஒரு சிறுவேறுபாடு. இடைமீடுபட்டு நிலைகுத்தல் நிலை ஏற்படின் அது தாரணை. யாதொரு இடைமீடும் இன்றிக் குறைந்தது சிலநாழிகைகளாவது ஒன்றில் நிலைத்துநிற்கும் நிலை தியானம். பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி = ஞானத்துள் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல்.<br>பிரத்தியாகாரம் - பொறிவழிச் சென்ற மனத்தை<br>மூலாதாரம் முதலிய<br>ஆறு ஆதாரங்களின் வழிச் செலுத்துதல்<br>தாரணை - அங்ஙனம் சென்றமனத்தை<br>மீளவும்புறத்தே பொறி<br>வழிச்செல்லாது தடுத்து அவ்வாத ரத்திலே<br>நிறுத்தல்<br>தியானம் - அங்ஙனம் நின்ற மனத்தால்<br>அவ்வாதாரநிலைகளை<br>எல்லாம் ஊன்றி நினைத்துப்பார்த்தல்<br>சமாதி - அத்தியான முதிர்ச்சிகளால்<br>தன்னைமறந்து அல்<br>வாதாரப்பொருளேயாய் விடுதல்<br>உள்ளொளிக் காட்சி கிடைக்கப்பெற்று நிற்றல்<br>யோகத்தில் யோகமாகும்.<br>சகமார்க்கம் புலன் ஒடுக்கித் தடுத்து, வளி<br>இரண்டும்<br>சலிப்பற்று, முச்சதுரம் முதல் ஆதாரங்கள்<br>அகமார்க்கம் அறிந்து, அவற்றின்<br>அரும்பொருட்கள் உணர்ந்தங்கு<br>அணைந்துபோய், மேலேறி<br>அலர்மதுமண்டலத்தின்<br>முகமார்க்க அமுது, உடலம் முட்டத் தேக்கி<br>முழுச் சோதி நினைந்து இருத்தல்<br>முதலாவினைகள்<br>உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும்<br>உழத்தல், உழந்தவர் சிவன்தன் உருவத்தைப்<br>பெறுவர்<br>சித்தியார் : 273<br>ஏழாந்தானமாகிய சகத்திராரத்தில் நிற்போர்க்கு விளைவது யோகத்தில் யோகம். | **சமாதி**<br>அந்நெறி இந்நெறி<br>என்னாது அட்டாங்கத்<br>தன்னெறி சென்று<br>சமாதியிலே நின்மின்<br>நன்னெறி செல்வார்க்கு<br>ஞானத்தில் ஏகலாம்<br>புன்னெறி ஆகத்தில்<br>போக்கில்லை ஆகுமே.<br>- திருமந்திரம் 533<br>மனம் சமாதிநிலையில் அடக்கப் பெற்றவரே எண் வகை யோகம் முற்றினவர் ஆவார்.<br>பரசித்திபெறுதல் - யோகத்தில் ஞானம்<br>யோகச் சமயமே யோகம் பல<br>உன்னல்<br>யோக விசேடமே அட்டாங்க<br>யோகமாம்<br>யோக நிர்வாணமே உற்ற<br>பரதோயம்<br>யோகாபடேகமே ஒண்சித்தி<br>உற்றலே<br>- திருமந்திரம் 1447<br>"மெய்ம்மைச் சிவயோகமே யோகம், அல்லாதஎல்லாம் அவயோகம் என்றே அறி<br>- களிறு 74<br>யோகச் சமாதியினுள்ளே<br>அகலிடம்<br>யோகச் சமாதியினுள்ளே<br>உளரொளி<br>யோகச் சமாதியினுள்ளே<br>உளசத்தி<br>யோகச் சமாதி உகந்தவர்<br>சித்தரே<br>திருமந்திரம் - 1470 |

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 13. யோகத்தில் | பூரக, ரேசகம் செய்து கும்பக்கப்பட்ட பிராணவாயு கீழ்ப் போகாதவாறு எருவாயை அடைத்து அதனால் போகாது வாயுவை மூலாதாரம், சுவாதிட்டானம் முதலாக மேல் நோக்கில் போகச் செய்து ஆஞ்ஞைக்குக் கீழே உள்ள இடை ஆதாரங்கள் ஒவ்வொன்றிலும் மனத்தை நன்றாகப் பொருந்த வைத்து அங்கு கருதப்படுகிற கடவுளால் அவ்ஆதாரயோகம் கைவரும் அளவும் அவரை வழிபட்டிருப்பவர்கட்கு யோகநிலை முற்றும் கை வரும் காலம் வரை இறவாமலே இருத்தலும் கூடும் - திருமந்திரம்:571.<br><br>இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் போன்ற எளிய அட்டாங்க யோகங்களுள் சிலவற்றைச் சரியையில் கிரியை நிலையிருந்தே பழகி அனுபவித்து வந்தாலும் அவைமுற்றுப் பெறுவது இந்த நிலையில்தான்.<br><br>மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களில் நினைவை நிறுத்தி மூச்சுப் பயிற்சி செய்தால் நன்மை.<br><br>பல வருடங்களை நிருவாண தீக்கையில் வழிபாடு செய்யும்போது திருவருளினால் ஆசானையணுகி ஆசாரியபிடேகம் பெறவேண்டும் என்ற உணர்வு வரும். தகுந்த ஆசானை யணுகிச் சமய, விசேட, நிருவாணத் தீக்கைகளைச் செய்விப்பதற்கு உரிமை பெற்ற ஆசாரியபிடேகம் செய்து கொள்ளுவது. "யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று நிறைய மாந்தர்களைச் சைவர்களாகவும், சிவனடியார்களாகவும் மாற்றுவது/ தீக்கை கொடுப்பது | | | உருவ, அருவுருவத் திருமேனிகளைப் பற்றாகக் கொண்டு, செய்தல் சாலம்ப யோகம்.<br>அருவநிலையை அடிப்படையாகக் கொண்டு செய்தல் நிராலம்ப யோகம் |

ஞானத்தில்

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| 14. ஞானத்தில் | கேட்டல் (ஞானசாத்திரப் பொருளைக் குருவிடம் கேட்டல்)<br>- திருநாவுக்கரசு சுவாமிகள்<br><br>சூரிய காந்தக் கல்லினிடத்தே, செய்யச்<br>சுடர் தோன்றியிடச் சோதி தோன்றுமாபோல<br>ஆரியனாம் ஆசான்வந்து அருளால் தோன்ற<br>அடிஞானம் ஆன்மாவில் தோன்றும்; தோன்றத்<br>துரியனாம் சிவன் தோன்றும்; தானும் தோன்றும்;<br>தொல்உலகம் எல்லாம் தன்உள்ளேதோன்றும்;<br>நேரியனாய்ப் பரியனுமாய்; உயிர்க்குயிராய், எங்கும்<br>நின்றநிலை எல்லாம் முன்நிகழ்ந்துதோன்றும்<br>- சித்தியார் 280/326<br><br>ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை<br>ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று<br>ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்<br>ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே<br>- திருமந்திரம் 1448<br><br>பக்குவமடைந்த ஆன்மாவிற்கு, அவ்வான்மா முற்செய்த தவத்தால் இறைவனே ஞானகுருவாகத் தோன்றி உணர்த்தியதை உணர்த்தியவாறே உணர்ந்து நிற்குமாறு உபதேசிக்க அதனைச் செவிவழியாகக் கேட்டு நிற்றலே "கேட்டல்" எனப்படும். எதைக் கேட்கிறான்?. ஞானகுருவாகிய இறைவர் என்ன அறிவுரை கூறுகிறார்? "நீ உன் உடம்பு, ஐம்பொறிகள் முதலிய கருவிக் கூட்டத்துள் அகப்பட்டு, அவை உனக்கு வேறானவை என்பதை உணராமல் "அவையே நான்" என மயங்கி நிற்கிறாய். அவைகளுக்குவரும் தோற்றம், அழிவு, மெலிவு, விரிவு, மேன்மை முதலியவற்றை உன்னுடையதெனக் கருதித் துன்புறுகிறாய். அவையோடு கூடியிருத்தல் உன் உண்மையியல்பன்று. அக்கருவிகள் சடப்பொருட்கள். நீயோ அறிவுடை சித்துப்பொருள். உனக்குஅம் மாற்றங்கள் இல்லை. நீ அநாதி. சத்தைச் சார்ந்த நிலையாக இரு. | சிந்தித்தல் (அப்பொருளை காரணகாரிய இயைபுபடுத்தி எடுத்துக் காட்டுகளுடன் சிந்தித்தல்) திருஞானசம்பந்த சுவாமிகள்<br><br>மிக்கதொரு பக்குவத்தில் மிகு சத்திநிபாதம்<br>மேவுதலும், ஞானம் விளைந்து ஒரு குருவின் அருளால்,<br>புக்கு அனுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள்,<br>பூதலத்தில் புகழ் சீவன் முத்தராகித்<br>தக்கபரியம் அப்பரியம் இன்றி, ஒட்டில்<br>தானியத்தில் சமபுத்திபண்ணிச் சங்கரனொடு<br>ஒக்க உறைந்து இவர் அவனை, அவன் இவரை விடாதே<br>உடந்தையாய்ச் சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர்<br>- சித்தியார் 281<br><br>நீர்நிலையை மூடியிருக்கும் பாசி, அதன்மீது கல்லை எறிந்ததும்<br>சற்றே விலகிப் பன்சிறிது நேரத்தில் மீண்டும் மூடிக்<br>கொள்வதுபோல பதிஞானத்தால் கேட்டல் மூலம் உயிரை<br>விட்டுநீங்கிய மும்மலங்களும், சிற்சில நேரங்களில்<br>பழக்க வாசனையால் மீண்டும் வந்துபற்றிக் கொள்ளும்.<br>அப்படிநேரின் இறைவனை இடைவிடாது சிந்தித்து நிற்க<br>அம்மலவாசனை நீங்கும். வாசனைமல நீக்கம் சிந்தித்தால் நடைபெறும்.<br><br>தாம் கேட்டவற்றை நூல்களிற்கூறியவற்றோடு ஒட்டிவைத்து ஆராய்ந்து உணர்தலே சிந்தித்தல். அவ்வாறு சிந்திக்குங்கால் பலப்பல ஐயங்கள் எழும். மீண்டும் மீண்டும் சிந்தித்தலே அவ்வையங்களை நீக்கும். உலகியலிலும் நில்லாமல், திருவருளிலும் உறைந்து நில்லாமல் அங்குமிங்குமாக உயிர் அலமருகின்ற ஊசலாட்ட நிலைநீங்குவதற்கு "சிந்தித்தல்" என்ற படிநிலை உதவியாக இருக்கும். எதைச் சிந்திப்பது? எவ்வாறு சிந்திப்பது? | தெளிதல் (அப்பொருளை ஐயந்திரிபின்றித் தெளிதல்) நம்பியாரூரர்<br><br>அறியாமை, அறிவு அகற்றி, அறிவின் உள்ளே<br>அறிவுதனை அருளினால், அறியாதே அறிந்து,<br>குறியாதே குறித்து, அந்தக்கரணங்களோடும்<br>கூடாதே வாடாதே குழைந்து இருப்பை ஆகில்<br>பிறியாத சிவன் தானே பரிந்து தோன்றிப்<br>பிரபஞ்ச பேதம் எல்லாம் தானாய்த் தோன்றி<br>நெறியிலே இவைஎலாம் அல்லவாகி<br>நின்று, என்றும் தோன்றிடுவன் நிராதரன் ஆயே<br>- சித்தியார் 282<br><br>தெளிவறியாதார் சிவனை அறியார்<br>தெளிவறியாதார் சீவனுமாகார்<br>தெளிவறியாதார் சிவமாகமாட்டார்<br>தெளிவறியாதவர் தீரார் பறப்பே<br>- 1460 திருமந்திரம்<br><br>கேட்டலில் - ஆசிரியர் அறிவுரையைக் கேட்கும்,<br>சிந்தித்தலில் - கேட்டவற்றைச் சிந்தித்துப்<br>பொருத்தத்தை ஞானநூல்<br>வழி ஆய்ந்தும் இருந்துவர ஒரு<br>தெளிவு கிடைக்கும்.<br><br>தெளிதலில் - உயிர் திருவருள் நிலையை<br>உள்ளதை உள்ளவாறு உணர்ந்து<br>அதன்வயப்பட்டு ஒன்றி அவ்வருளால் அன்றி<br>ஒன்றை அறிதலும், செய்தலும் இல்லாது நிற்கும்.<br>தன்செயல் எதுவுமில்லை. எல்லாம் திருவருட்<br>செயலே என உணர்ந்து அத்திருவருளிலே<br>அடங்கி நிற்கும். தெளிதல் - திருவருளில்<br>அழுந்திய நிலை<br><br>திருவருள் உணர்நிலை - அருள்நிலை<br>கண்முதலில் சூரிய ஒளியைப் பொருந்திப்பின்<br>அதன் வழியாகச் சூரியனைக் காணுதல்போல,<br>ஆன்மா முதலில் சிவனது சத்தியாகிய<br>திருவருளை உணர்ந்த பின்னே சிவனை<br>உணரும்.<br>- சி.ஞா.போ. பத்தாம் நூற்பா. | நிட்டை கூடல்<br>(சிவபெருமானாகிய<br>அப்பொருளை விட்டு<br>எந்நேரமும் நீங்காமல் நின்று<br>அவரையே<br>நினைத்திருத்தல்) -<br>மாணிக்கவாசக சுவாமிகள்<br><br>புண்ணியம் மேல்<br>நோக்குவிக்கும்; பாவம்கீழ்<br>நோக்கும்;<br>புண்ணியனைப் பூசித்த<br>புண்ணியத்தினாலே,<br>நண்ணிய ஞானத்தினால்,<br>இரண்டையும் அறுத்து,<br>ஞால மொடுகீழ்மேலும்<br>நண்ணான் ஆகி,<br>எண்ணும் இகலோகத்தே<br>முத்திபெறும் இவன்தான்<br>"எங்கு எழில்<br>என்ஞாயிறுஎமக்கு?" என்று<br>குறைவின்றிக்<br>கண்ணுதல்தன்<br>நிறைவுதனில் கலந்து,<br>காயம்<br>கழிந்தக்கால், எங்குமாய்க்<br>கருது அரன்போல் நிற்பன்<br>- சித்தியார் 283<br><br>ஞாலம் அதில் ஞானநிட்டை<br>உடையோருக்கு<br>நன்மையொடு<br>தீமையில்லை; நாடுவது<br>ஒன்றில்லை;<br>சீலம் இல்லை; தவமில்லை;<br>விரதமொகு ஆச்சிரமச்<br>செயலில்லை;<br>தியானமில்லை;<br>சித்தமலமில்லை;<br>கோலம் இல்லை; புலன்<br>இல்லை; கரணம் இல்லை;<br>குணம் இல்லை; குறி<br>இல்லை; குலமும் இல்லை;<br>பாலருடன் உன்மத்தர் பசாசர்<br>குணம் மருவிப் |

| | சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|---|
| | "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்<br>தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு<br>அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"<br>- சி.ஞா.போ. 8<br>"மன்னவன்றன் மகன் வேடரிடத்தே தங்கி" - சித்தியார் 8<br>கேட்டலில் முப்பொருள் இயல்பு உணரப்படும் மும்மலங்களும் நீங்கும்<br>ஐம்பொறிகளோடு கூடி வாழ்ந்தாலும் அவற்றில்<br>அழுந்தி நில்லாமல் அவற்றை வேறாகக் கண்டு<br>விலகி நிற்கும். இந்நிலையில் உயிர் உலகத்தை நோக்குதலைவிடுத்துத் திருவருளை உணர்ந்து நிற்கும்<br>- சி.ஞா.போதம் எட்டாம் நூற்பா | "ஊனக்கன் பாசம் உணராப் பதியை ஞானக்கண்ணினிற சிந்தை நாடி"<br>-போதம் 9<br>பதிஞானத்தையே கண்ணாகக் கொண்டு ஆராய்ந்து,சிந்தித்து உணர்தல். பாசப்பொருள் நிலையற்றது என்ற உண்மையை சிந்தித்துச் சிந்தித்துச் சிறந்தது உணர்ந்து அவற்றின் மீதுள்ள பற்றை விட்டொழிந்தால் பதிஞானம் உண்டாகும்.<br>ஐந்தெழுத்து உச்சரிப்பே பாச நீக்கத்துக்கும் பதிஞானத்துக்கும் அடிகோலும். சமாதி நிலை கைவரப் பெறாதார்க்கும் விதிப்படி ஐந்தெழுத்தை உச்சரிக்குங்கால் அதுவே வீட்டுநெறியைக் காட்டும்.<br>ஆக சிந்தித்தல் என்னும் படிநிலையில் சிந்திக்க சிந்திக்க, மலவாசனை தேய்ந்து தேய்ந்து பெரிதும் மங்கிப்போய் அது மீண்டும் முறுகி எழாதவாறு வலுவற்றுப்போய் சிவதரிசனம் கிடைக்கும்.<br>- சி.ஞா.போ. ஒன்பதாம் நூற்பா | | பாடலினொடு ஆடல் இவை பயின்றிடி னும் பயில்வர்<br>- சித்தியார் 284<br>ஞானம் பெற்றோர் சிவரூபத்தைக் கேட்டு,<br>சிந்தித்து, தெளிந்து அதன் முடிநிலை<br>இன்பமாகிய சிவானுபவத்தைப் பெறுவது நிட்டை<br>தெளிந்தநிலையில் திருவருளைச் சார்ந்த<br>அளவிலேயே இப்பேரின்பம் விளையாது.<br>அத்திருவருள் வழி சிவத்தையறிந்து அதனைடைந்து<br>அழுந்தும் போதே பேரின்பம் விளையும்.<br>அத்திருவருள் வழி சிவத்தில் அழுந்தியநிலை<br>ஆனந்தநிலை,<br>உயிரின் அறிவு, இச்சை, செயல் மூன்றும்<br>பறிதொன்றின்பாற் செல்லாது முதல்வன் ஒருவனையே<br>பற்றிநிற்கும் நிலையை இவ்வுடம்பு உள்ளபோதே<br>எய்திநிற்றலே நிட்டைகூடல்<br>- சி.ஞா.போதம் - 11ஆம் நூற்பா |

**1428.** பத்தர் சரியை படுவோர் கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்
சுத்த இயமாதி தூயோகர் சாதகர்
சித்தர் சிவஞானம் சென்றெய்து வோர்களே. **4**

**1429.** சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர்
சேர்ந்தஎண் யோகத்தர் சித்த சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அர்ச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே. **5**

---

*இதனால், காரணப்பெயர் கூறும் முகத்தால், சரியை முதலிய நான்கிலும் நிற்போரது தராதரம் உணர்த்தப்பட்டது.*

**1429. *தெளிவுரை :-*** *சிவமாந் தன்மையை எய்தினோரே மெய்ஞ் ஞானம் முற்றினவராவர். மனம் சமாதி நிலையில் அடங்கப் பெற்றவரே அட்டாங்கயோகம் முற்றினவராவர். ஒருநாளேனும் அர்ச்சனை தவறி யொழியாதபடி செய்தவரே நுணுகியதான கிரியை முற்றினவராவர். நெடுந்தொலைவான நாட்டிலும் சென்ற மூர்த்தி தலம் தீர்த்தங்களை முறைப்படி வணங்கினவரே தாம் ஏற்றுக்கொண்ட சரியை முற்றினவராவர்.*

***குறிப்புரை :-*** *“தான்” என்றது பன்மை யொருமை மயக்கம்.*

*இதனால், ‘சரியை முதலியவற்றில் நிற்பவர் அவற்றைக் கடைப்பிடியாகக் கொண்டு முதிர்தல் வேண்டும்’ என்பது கூறப்பட்டது.*

**1430. *தெளிவுரை :-*** *கிரியை வழிபாட்டிலும், யோக வழி பாட்டிலும் சிவனது அருள் உருவம் நிற்கும். ஞானவழிபாட்டில் உருவம் அற்ற அருவ நிலை தோன்றும். இவ்வழிபாடுகள் சத்தி நிபாத நிலைக்கு ஏற்பக் குருவின் வழி நூல் நெறியாற் செய்யப்படுவன. இவ்வாறன்றி அன்பு காரணமாகத் தத்தமக்கு இயலும் வகையிற் செய்யப்படுவன இவற்றினும் உயர்ந்த வழிபாடாய் அமையும்.*

***குறிப்புரை :-*** *நிரல் நிறையில் கிரியை, யோகம் இரண்டும் ‘உரு’ எனவரும் ஒன்றனோடே இயைதற் பொருட்டு, “கிரியை யோகங்கள்” எனத் தொகைப்படுத்து ஓதினார். ‘உரு’ என்பதன் ஈற்று முற்றியலுகரம் உயிர்வரச் சிறுபான்மை கெட்டது. இவை, பருவத்துத் தேர்ந்திடும் பூசை எனச் சுட்டுப் பெயர் வருவித்து முடிக்க. தேர்தல்,*

**1430.** கிரியையோ கங்கள் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு அமரும் அரூபம்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
உரியன நேயத் துயர்பூசை யாமே. **6**

**1431.** சரியைஆதி நான்கும் தம்ஞானம் நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்தம் ஆறும்
பொருளானது நந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே. **7**

---

*கேட்டல் சிந்தித்தல்களால் மெல்ல உணர்தல். உரியன, இயலுந் திறம்பற்றிக் கொள்ளுதற்கு உரியன. இவை திருநீலகண்டத்துக் குயவனார், அதிபத்தர் முதலியோரால் கொள்ளப்பட்ட செயல்கள் போல்வன. இவையெல்லாம் உலகத்தார்க்குச் சரியை போலவும், பொதுச் சிவபுண்ணியங்கள் போலவும் தோன்றுதலின், இவ்வதிகாரத்துட் கூறினார். 'நேயத்து உரியன' என மாற்றிக் கொள்க. எடுத்த எடுப்பில் இதன்கண் நெறிகள் பலவும் தொகுத்துக் கூறப்படுதலும் நோக்கத்தக்கது.*

*இதனால், 'நூன்முறை வழிபாடு, அன்பு முறைவழிபாடு' என வழிபாடு இருவகைத்தாதல் உணர்த்தப்பட்டது. இவற்றை முறையே, 'விதி மார்க்கம், பத்தி மார்க்கம்' என்பர்.*

**1431.** *தெளிவுரை :- 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நான்கு நெறிகளும், அவற்றில் முடிவாக உள்ள தகுதி பெற்ற ஞானம் ஒன்றிலே 'ஞானத்திற் சரியை' முதலிய நான்கும் விரிந்துள்ள இவையே வேதத்தின் தெளிவாய் அமைந்த சிவாகம நெறி. அதனையே பொருளாகின்ற நிலையைச் சிவபெருமான், அறியாமையுடைய மக்கள் அதனினும் நீங்கித் தனது ஒளியுலகத்தை யடைந்து தன்னை வணங்கி வாழ்தற் பொருட்டு' வைத்துள்ளான்.*

*குறிப்புரை :- அதனால், இவையே வீட்டு நெறிகளாம்' என்பது கருத்து. ஏனை வேத நெறிகள் இம்மை, மறுமை என்னும் உலக நெறிகளாம் என்க. "சித்தாந்தம்" என்பது இங்குச் சிவாகமத்திற்குப் பெயராய், அது பற்றிக் கொள்ளப்படும் நெறிகளைக் குறித்தது. அந்நெறிகள் ஆறாவன, 'பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவ சமவாத சைவம், சிவ சங்கிராந்தவாத சைவம், ஈசுர அவிகாரவாத சைவம், நிமித்த காரண பரிணாமவாத சைவம்' என்னும் அகச் சமயங்கள், இவற்றுள், இறுதியில் உள்ளது*

*'சிவாத்துவித சைவம்' எனவும் படும். ஐக்கியவாத சைவமும் சிவாகம நெறியேயாயினும், அது அவ் ஆகமங்கள் முதன்மையாகக் கூறும் ஆணவ மலத்தைக் கொள்ளாமையால், வேதாந்தத் தெளிவாகாது. அகப்புறச் சமயங்களோடு கூட்டி எண்ணப்படுகின்றது. சிவலோகத்தை அடைந்து வாழும் வாழ்வுகள் யாவும் பதமுத்திகளே. அகச்சமயங்கட்குப் பதமுத்திகளே பயன் என்றதனால், பரமுத்தி சித்தாந்த சைவத்தினன்றி எய்தலாகாமை அறியப்படும்.*

*சரியாதி தருஞானம் நான்கு - சரியையில் ஞானம், கிரியையில் ஞானம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் ஞானம் என்பன.*

*வேதாந்தம் ஆறு: காபிலம், காணாதம், பாதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமினியம் என்பன.*

*சித்தாந்தம் ஆறு : பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன.*

*பொருளானது - உயிர்கட்கு ஈடேறும் உபாயப் பொருளாக அமைந்தது.*

*மருளாகும் மாந்தர் - அநாதியே மூல மலத்தால் மறைப்புண்டு மயங்கிய ஆன்மாக்கள்.*

*இதனால், 'சரியை முதலியவைகளே வீட்டு நெறிகள்' என்பது வலியுறுத்தப்பட்டது.*

**1432. தெளிவுரை :- *வீட்டு நெறிகளாகிய சரியை முதலியவை களில் நிற்க விரும்புவோர், ஆசிரியரை அடைந்து தீக்கை பெற்று நின்ற வழியே அவை உண்மைச் சரியை முதலியனவாய்ப் பயன்தரும். அத்தீக்கை, 'சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம்' என நான்கு வகைப்படும்.***

***சமய தீக்கை தூல உடம்பைப் பல வகையில் தூய்மைப்படுத்து வதாகும். அதன் பயனாக, மாணவன், இது காறும் எல்லாச் செயல்களையும் தன்னால் ஆகின்றனவாகவேயாக மயங்கியிருந்த மயக்கம் நீங்குமாறு. 'எல்லாம் அவன் செயல் (சிவன் செயல்)' ஆதலை உணரும் வாய்ப்பினைப் பெறுவான். அதனை அடுத்துச் செய்யப்படும் விசேட தீக்கை சிவமந்திரங்களைப் பீசங்களோடு கூட்டி உபதேசித்து, அதனால் பெரும்பயன் அடையச் செய்வதாகும். சாந்தத்தை உடைய நிருவாண தீக்கை, 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தி யாதீதை' என்னும் கலைகள் ஐந்தில் ஏனைய பொருட்***

**1432.** சமையம் மலசுத்தி தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி
சமையநிரு வாணங் கலாசுத்தி யாகும்
அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே. **8**

---

*பிரபஞ்சம், சொற்பிரபஞ்சங்களாய் அடங்கியுள்ள அத்துவாக்களிடமாக நிற்கும் சஞ்சித கன்மங்களை ஆகுதிகளால் அழித்து, மாணவனது ஆன்மாவை நின்மலம் (மாசற்றது) ஆக்குவதாம். அதற்குமேல் உள்ள அபிடேகம்' ஆசிரியராய் விளங்கிப் பிறர்க்கும் தீக்கை செய்தற்கு உரிய பெரிய ஞானத் தகுதியுடையவர்க்கு அவ் ஆசிரியத்தன்மையை அபிடேகம் செய்து அளிப்பது.*

***குறிப்புரை :-*** *சமய தீக்கை பெற்றவன், 'சமயி' எனப்பட்டுச் சரியையில் நிற்றற்கு உரியன். 'இந்நிலையில் கணிக்கப்படும் மந்திரங்கள் நிர்ப்பீசம்' என்னும் கொள்கை பற்றி இதனை நாயனார் 'மந்திரசுத்தி' என்றாராயினார். எனினும், இங்கும் மந்திரங்களைச் சபீசமாகச் சொல்லும் வழக்கமும் காணப்படுகிறது. விசேட தீக்கையில் மந்திரங்கள் சபீசமாகச் சொல்லும் அதிகாரத்தைத் தந்து, கிரியையிலும் யோகத்திலும் நிற்பித்தலால் இதனையே "மந்திர சுத்தி" என்றார். மந்திரம் ஆறத்துவாக்களில் ஓரத்துவாவேயாம். நிருவாண தீக்கையில் மட்டுமே ஏனை ஐந்தத்துவாக்களையும் அடக்கியுள்ள கலைகளைச் சுத்தி செய்து சஞ்சித கன்மம் துடைக்கப்படுதலால், அதனையே "கலா சுத்தி" என்றார். நிர்ப்பீசம் - பீசாக்கரங்களோடு கூடாதது. சபீசம் - பீசாக்கரத்தோடு கூடியது. 'சமயம், விசேடம், நிருவாணம்' என்னும் மூன்றிலும் 'நிர்ப்பீசம், சபீசம்' என்னும் இரண்டுமே உள என்றலும், சமயம் நிர்ப்பீசமே; ஏனைய இரண்டும் சபீசமே, என்றலும் ஆகிய இருவேறு கொள்கைகளும் ஆகமங்களில் உள என்பர். 'சபீச தீக்கை உயர்ந்தோர்க்கே செய்யப்படும்' என்பது ஒரு படித்தான கொள்கை யாகையால், 'விசேடமும், நிருவாணமும் சபீசமே' என்னும் கொள்கையில் 'அவ்இரு தீக்கையும் உயர்ந்தோர்க்கே செய்யப்படுவன' என்பது விதியாய் அமையும். "அமை மன்னும்" என்பதற்கு.'அமைந்து நிலைபெறும்' எனப் பொருள் உரைக்க.*

*இதனால், சரியை முதலியவற்றைக் கூற எடுத்துக் கொண்ட நிலையில் அவற்றிற்கு உரிமையைத் தரும் தீக்கை வகைகள் இம்முதல் அதிகாரத்தில் சொல்லப்பட்டன.*

## 6. கிரியை

*இது முதல் ஐந்து மந்திரங்களால் கிரியை உணர்த்துகின்றார். (விசேட தீக்கை பெற்று சிவனைப் பூசித்தலே கிரியை. உடம்பு, மனம் கிரியை வழிபாடு. அணுகி நின்று செய்யும் அகம்படித் தொழில்கள்).*

**1433.** பத்துத் திசையும் பரம்ஒரு தெய்வமுண்டு
எத்திக் கினில்இல்லை என்பது இனமலர்க்
கொத்துத் திருவடி நீழல் சரண்எனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே. 1

காணுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

---

**1433.** *தெளிவுரை :-* *எல்லாத் தெய்வங்கட்கும் மேலான ஒரு தெய்வமாகிய சிவபிரான் பத்துத் திசைகளிலும் நிறைந்திருக்கின்றான். அவனை எந்தத் திசையில் 'இல்லை' என்று கூறமுடியும்! ஆதலால், பலவகை மலர்க் கூட்டத்தைக் கொண்டு அவனது திருவடியையே புகலிடமாகக் கருதி வழிபட்டால், பொங்கிப் புரண்டு வருகின்ற வினையாகிய கடல் வந்து மோத மாட்டாது ஒழியும்.*

*குறிப்புரை :- 'ஆதலின், அதனைச் செய்க, என்பது குறிப்பெச்சம். இரண்டாம் அடியில், ''எத்திக் கினிலில்லை'' என்பதைப் பிறவாறு ஓதுவன பாடமாகா என அறிந்து கொள்க. 'கொத்தோடு' என மூன்றாவது விரிக்க.*

*இதனால், 'கிரியையாவது சிவபெருமானை மலர்தூவி வழிபடுதலேயாம்' என்பது கூறப்பட்டது.*

*இதன் பின் பதிப்புக்களில் உள்ள "காணுறு கோடி" என்னும் மந்திரம், பின்னர் ஏழாம் தந்திரத்தில் 'குருபூஜை' அதிகாரத்தில் வருவது.*

**1434.** *தெளிவுரை :-* *தலைவனாகிய சிவபெருமானது நடனம் புரிகின்ற திருவடிகளைத் துதியுங்கள். ஏனெனில், 'ஞானக்கன்றுகளின்*

**1434.** கோனக்கன் றாய குரைகழல் ஏத்துமின்
ஞானக்கன் றாய நடுவே உழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழும்
ஆனைக்கன் றீசன் அருள்வெள்ள மாமே. **2**

**1435.** இதுபணிந் தெண்டிசை மண்டல மெல்லாம்
அதுபணி செய்கின் றவள்ஒரு கூறன்
எதுபணி மானுடர் செய்பணி ஈசன்
பதிபணி செய்வது பத்திமை யாமே. **3**

---

*கூட்டம்' எனத் தக்க அடியார் கூட்டத்தின் நடுவே திரிந்து கொண்டிருப்பவனும், வானத்தில் வாழும் பசுக்கன்றுகளாகிய தேவர்களால் தொழப்படுபவனும் ஆகிய சிறப்பால் யானையை ஒத்த அடியவனுக்கே மறுமையில் சிவனது திருவருட் பெருக்கு உளதாகும்.*

***குறிப்புரை :-*** *'கோன் நக்கன் தாய குரை கழல்' எனவும் 'ஞானக் கன்று ஆய நடுவே' எனவும், 'ஆனைக்கு அன்று' எனவும் கண்ணழித்து உரைக்க. "உழிதரும், கைதொழும்" என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி, "ஆனை" என்னும் ஒருபெயர் கொண்டன. "ஆனைக்கே" என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தல் பெற்றது. 'அருள் பள்ளமாமே' எனவும் பாடம் ஓதுவர். 'வள்ளமாமே' என்பது பாடமன்று.*

*இதனால், கிரியையுள் தோத்திரம் சிறந்ததோர் உறுப்பாதல் கூறப்பட்டது. "பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி" (தி.6 ப.31 பா.3) என்றார் நாவுக்கரசரும்.*

***1435. தெளிவுரை :-*** *உலகங்கள் அனைத்தையும் செயற்படுத்தலாகிய அச்செயலைச் செய்பவளாகிய அம்மையும் அதனைச் செய்தல் அவளை ஒரு கூற்றிலே உடைய சிவனிடத்து இக்கிரியைத் தொண்டைச் செய்தேயாம். அங்ஙனமாயின், 'மக்கள் செய்யத்தக்க பணி' யாது என்பார்க்கு, பதியாகிய அவனிடத்துச் செய்யுங் கிரியையே' என்பது கூற வேண்டுமே! இனி, 'பத்திமை' எனக் கூறப்படுவது இக்கிரியையேயாம்.*

***குறிப்புரை :-*** *"பணிந்த" என்பது, 'பணியைச் செய்து' என இருசொல் நிலைமைத்தாய் நின்றது. 'எண்டிசை மண்டலம் எல்லாம் செய்கின்றவள் அது பணி அவளொரு கூறன்பால் இது பணிந்து'*

**1436.** பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தால்
சித்தம் குருவரு ளால்சிவ மாகுமே. **4**

---

*எனக் கூட்டியுரைக்க. அம்மையும் இறைவனை வழிபட்டு வரம்பெற்றமை பல இடங்களில் வெளிப்படை. "கூறன்" என்பதில் ஏழாவது இறுதிக் கண்தொக்கது. மூன்றாம் அடியிலும் 'இது பணி' என ஓதுதல் பாடமாகாது. 'பதியாகிய ஈசன் பணி' எனக் கூட்டுக. 'இது செய்வதே பத்திமை' என வேறு தொடராக்கியுரைக்க. சரியை முதலிய நான்கனுள் முன்னிரண்டும் 'பத்திச் செயல்கள்' எனவும், பின்னிரண்டும், 'ஞானச் செயல்கள்' எனவும் பொதுவாக வழங்கப்படுமாறு அறிக. இது வருகின்ற திருமந்திரத்தாலும் பெறப்படும்.*

*இதனால், கிரியையது சிறப்பு கூறப்பட்டது.*

**1436. *தெளிவுரை :-* *பத்தியை வேண்டுபவன், முன்னே சரியை கிரியைகளிற் பழகிப் பின்பு சத்திநிபாத முதிர்வால் குற்றம் அற்ற சிவயோகத்தில் மனத்தை செலுத்தும் வழியிலே பொருந்தி, அதனால், முதிர்ந்து வருகின்ற ஞானத்தால் குருவருள் வாய்க்கப் பெற்றுப் பின்பு அவ்வருளானே சிவத்தை அடைந்து சிவமேயாவான்.***

***குறிப்புரை :-*** *அதிகார இயைபுபற்றி, கிரியை முற்கூறப்பட்டது. ''சுத்தம்'' என்றது பிறவற்றைக் கீழ்ப்படுத்துத் தான்மிக்குத் தோன்றுதலை. அடயோகம் முதலியவற்றால் மலம் நீங்காமையின் அது நீங்குதலாகிய சிவயோகத்தை, "துரிசற்ற யோகம்" என்றார். உய்த்தலுக்குச் செயப்படுபொருள் வருவிக்க. ''சித்தம்'' என்றது அறிவை. "குருவருளால்" என்ற அனுவாதத்தால், குருவருள் ஆதலும் பெறப்பட்டது. 'சரியை கிரியைகளாகிய பத்தி நெறியில் நின்றோன் பின்பு யோக ஞானங்களாகிய ஞான நெறியைத் தலைப்பட்டுப் பின் அது வழியாகச் சிவமாம் தன்மைப் பெருவாழ்வு எய்துவன்' என்றவாறு.*

*இதனால், மேற்கூறிய பத்தி நெறி, ஞானம் வாயிலாக வீட்டைத் தருதல் கூறப்பட்டது.*

**1437.** அன்பின் உருகுவன் ஆளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்
என்பினுட் சோதி இலிங்கம்நின் றானே. 5

---

1437. ***தெளிவுரை :-*** *செம்பொன் போலும் திருமேனியும், அதனுட் சிறப்பாகக் குறிக்கத் தக்க தாமரை மலர்போலும் திருவடிகளும் என் கண்முன் தோன்றினாற்போல, என் உடம்பகத்து இருதய கமலத்தில் ஒளியாய் விளங்குகின்ற சிவன், புறத்தில் இலிங்க மூர்த்தியிடமாக எனக்கு விளங்கி நிற்கின்றான். அதனால், அடியேன் அவன்மேல் வைத்த அன்பினால் மனம் நெகிழ்ந்து உருகுகின்றேன்; அவன் இடும் பணிகளைச் செய்கின்றேன்; எல்லாம் செய்து அவனை வேண்டுவது அவனது அருள் ஒன்றையே.*

***குறிப்புரை :-*** *"மொழிவது எனக்கருள்" என்பதை முதலடியின் இறுதியிற் கூட்டி அஃது ஈறாக அனைத்தையும் ஈற்றில் வைத்து உரைக்க. "செய்" உவம உருபு. 'இலிங்கு நின்றானே. இலங்குகின்றானே' என்பன பாடமல்ல. இடும்பணி, ஆகமத்தின் வழியாகப் பணித்த பணிகள். மோனை நயம் கருதாது, 'நாளும் பணி செய்வன்' என்றலுமாம். இரண்டாம் அடி இன எதுகை.*

*இதனால், இலிங்க மூர்த்தியின் சிவனை முடிமுதல் அடிகாறும் தோன்ற வெளிநிற்கப் பாவித்து வழிபடுதலே கிரியையாதலும், அது பயன் கருதாது அன்பே காரணமாகச் செய்யப்பட்ட வழியே உண்மை யாதலும் கூறப்பட்டன. "என்பினுட் சோதி இலிங்கம் நின்றான்" என்பதனால், கிரியையாளன் அவ்வாறு அகத்தும் புறத்தும் வழிபடல் வேண்டும் என்பதும் கூறியதாயிற்று.*

## 7. யோகம்

*இது முதல் பத்து மந்திரங்களால் யோகம் உணர்த்துகின்றார். யோகமென்பது மனத்தை இறைவனிடம் சேர்த்தலும் மூலாதாரத்துள்ள குண்டலினியோடு கூடிய உயிரைத் துவாத சாந்தத்தில் விளங்கும் சிவத்தோடு சேர்த்தலுமாகிய இரண்டுமாம்.*

**1438.** நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்
தறிஇருந் தாற்போலத் தம்மை இருத்திச்
சொறியினும் தாக்கினும் துண்ணென் றுணராக்
குறிஅறி வாளர்க்குக் கூடலு மாமே. 1

**1439.** ஊழிதொறூழி யுணர்ந்தவர்க் கல்லது
ஊழிதொறூழி உணரவுந் தானொட்டான்
ஆழி அமரும் அரிஅயன் என்றுளார்
ஊழி முயன்றும்ஓர் உச்சியு ளானே. 2

---

**1438.** ***தெளிவுரை :-*** *வளி நிலை (பிராணாயாமம்) முறைப்படியே மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களிலும் உணர்வாய் ஏறிச்சென்று இறுதியில் சிவனது அருவத் திருமேனியில் நிலைத்து நின்று, ஊன்றி நிறுத்தப்பட்ட தூண்போலும்படி தமது உடலை நேராக நிமிர்த்துச் சிறிதும் அசைவற நிறுத்தி, அதனைப் பிறர் கீறினாலும் தாக்கினாலும் அவற்றால் உணர்வு பிறழ்ந்து விரைய அவரை நோக்குதல் இல்லாது, தியானப்பொருள் ஒன்றையே உணர்ந்திருக்க வல்ல மாயோகிகட்கே அந்தத் தியானப் பொருளாகிய சிவனை அடைதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *நெறி - ஆதாரங்கள். அவை ஆறாகும். தறி - தடி. நேர்மை - நுண்மை. அஃது அருவத்தை யுணர்த்திற்று. "தாம்" ஆகுபெயர். 'இவ்வாறிருப்பார் யோகிகளே' என்பது வெளிப்படையாதலின், 'யோகியர்' என்பதனை எடுத்தோதாதே போயினார்.*

*இதனால், 'யோகத்தினது இயல்பு இது' என்பது கூறப்பட்டது.*

**1439.** ***தெளிவுரை :-*** *யோகப் பயிற்சியால், பல ஊழிகள் செல்லவும் எடுத்த உடம்பு நீங்காது நிற்க, அதன்கண் நின்று அவ்வூழிகளைக் காண வல்லவர்க்கல்லது, ஊழிகள்தோறும் காரணக் கடவுளர்களது தொழிலிற்பட்டுப் பிறந்து இறந்து*

**1440.** பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணரவல் லார்கட்கு
நாவி அணைந்த நடுதறி ஆமே. **3**

---

*உழல்பவர்கட்கு அப்பிறப்புக்களில் பல்லூழிகள் சென்றாலும் அவர் தன்னை உணர நில்லான் சிவன். பாற்கடலில் பள்ளி கொள்பவனாகிய மாயோனும், பிரமனும்' என்று சொல்லப்பட்ட தலைமைத் தேவர்களே பல்லூழிக் காலம் தேடியும் காணவராமல் அவர்களது ஆற்றலுக்கு அப்பாற்பட்டு அவன் நின்றதே அதற்குச் சான்று.*

***குறிப்புரை :-*** *"உச்சி" என்றது, மேல் உள்ள இடத்தை.*

*இதனால், இறைவன் 'சரியை, கிரியை' என்பவற்றில் போலன்றி யோகத்தில் வெளிப்பட்டு விளங்குதல் கூறப்பட்டது.*

**1440. *தெளிவுரை :-*** *பூ மலர்தற்குமுன் அதன் மணம் அதனுள் அடங்கியிருத்தல் போல, உயிர் பக்குவப்படுதற்கு முன் அதன் அறிவுக்கு அறிவாய் அதனுள்ளே தோன்றாதிருந்த சிவம், பக்குவத்தால் உள்ளமும், உடலும், எழுதப்பட்ட ஓவியம் போல அசைவற்று நிற்கப் பெற்ற யோக உணர்வினர்க்கு வெளிப்பட்டு விளங்கும். அப்பொழுது அவர்களது உள்ளமும், உடலும் புனுகு பூனையால் கூடப்பட்ட மூங்கில் தறி அதன் மதநீரால் மணம்பெற்றுத் திகழ்ந்தது போலச் சிவமணம்கமழப் பெற்றுச் சிவதனுவும், சிவகரணமுமாய் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *''பூத்தது'' என்பதனை மூன்றாம் அடியில் இறுதியிற் கூட்டி, அதன்பின், 'அதனால்' என்னும் சொல்லெச்சமும், ''ஆம்'' என்பதற்கு வினைமுதலும் வருவித்து உரைக்க. புனுகு பூனையே, 'கத்தூரி மான்' எனப்படுகின்றது. இதன் மதமே மிக்க நறுமணம் கமழ்வதாகிய கத்தூரி, கத்தூரியே 'மான் மதம்' என்றும், "மிருக மதம்" என்றும் சொல்லப்படுவது. இவ்விலங்கினிடமிருந்து இதன் மதத்தைக் கொள்ள வேண்டுவோர் இதனைக் கூட்டில் அடைத்து நல்லுணவு கொடுத்து, இதற்கு இன்ப வேட்கை மிகும்படி செய்வர். அதுபொழுது இஃது அக்கூட்டினுள் முன்பே பொருத்தப்பட்ட மூங்கிற் குழாயை அணைந்து தனது மதத்தை வெளிப்படுத்த, அதனை அம்மக்கள் எடுத்துக் கொள்வர். அம்மதம் உள்ள பொழுதும், எடுக்கப்பட்ட பின்பும் அம் மூங்கிற் குழாய் தன்னுள்ளே அம்மணம் கமழப் பெறுவதாயே இருக்கும். அதனையே,*

**1441.** உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை உறவே தெளிந்திருள் நீங்கினால்
முந்தைப் பிறவி மூலவித் தாழுமே. 4

**1442.** எழுத்தொடு பாடலும் எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியை நீக்கா
அழித்தலைச் சோமனோ டங்கி அருக்கன்
வழித்தலைச் செய்யும் வகைஉணர்ந் தேனே. 5

---

*"நாவி அணைந்த நடுதறியாமே" என உவமித்தார். ஆக்கம், உவமை குறித்து நின்றது.*

*"நாவியின்கண் - போதுறு மதம் விடுத்துப்*
*புன்மலங் கொள்ளு மாபோல்"*
*- பிரபுலிங்க லீலை, பிரபுதேவர் வந்த கதி, 28*

*என்ற சிவப்பிரகாசர் மொழியிலும் இம் மான்மதம் குறிப்பிடப்படுதல் காணலாம்.*

*இதனால், மேற்கூறிய சிவ விளக்கம் உவமையில் வைத்து இனிது விளக்கப்பட்டது.*

**1441.** *தெளிவுரை :- உலகீர்! நீவீர், உய்திக்குக் காரணமாய்ப் பொருந்தியுள்ள பொருளை அறியவில்லை. ஆயினும், 'யாம் உய்ந்தோம், உய்ந்தோம்' என்று மயங்கி உரைக்கின்றீர். மலரில் மணம்போல உம்மிடத்து உள்நின்று தோன்றக்கூடிய சிவனை, யோக நெறியால் உள்ளத்தில் பொருந்தக்கண்டு, அதனால் உம் மயக்கம் நீங்கப் பெற்றால், தொன்று தொட்டு வருகின்ற பிறவிக்கு மூலகாரணமாய் உள்ள ஆணவ மலம், கீழ்ப்பட்டு அடங்கிவிடும்.*

*குறிப்புரை :- 'உறுபொருள் காண்கிலீர், உய்ந்தமை என்பீர்' எனவும், 'மலரிற் கந்தம்' எனவும் மாற்றியுரைக்க. 'யோக நெறியால்' என்பது அதிகாரத்தால் வந்தது. ஆணவம் ஆழ்தலாவது தனது சத்தி மடங்கிக் கிடத்தல். மூலவித்தாமே, மூலவித்தாகுமே' என்பன பாடம் அல்ல.*

*இதனால், யோகத்தால் ஆணவ சத்தி மெலிவடைதல் கூறப்பட்டது.*

**1443.** விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ னாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுணர் வாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயின் விண்ணவ னாகுமே. **6**

---

**1442.** ***தெளிவுரை :-*** *இயல்நூற் கல்வி, பாடல்களை ஓதுதல், மற்றும் அறுபத்து நான்கு கலைகளையும் பயிலல் இவையெல்லாம் இகழ்ச்சிக்குரிய பாசத்தால் விளையும் பிறவியை நீக்கமாட்டா. அதனால், நான் அப்பிறவியை அழிக்கும் முறையை, 'சந்திர கலை, சூரிய கலை, அக்கினி கலை' எனப் பெயர்பெறும் மூச்சின் இயக்கங்களை நெறிப்படச் செய்யும் வகையால் அறிந்து கொண்டேன்.*

***குறிப்புரை :-*** *பழித்தலைப் பாசம் - பழியின்கண் நிற்கும் பாசம். 'பிறவியும் நீங்கா' என்பது பாடம் அன்று. 'அழித்தலை உணர்ந்தேன்' என இயையும். இதற்குமுன், 'அதனை' என்பது வருவிக்க. 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்னும் நாடிவழி இயங்கும் பிராணன் 'சந்திர கலை' முதலிய பெயர்களைப் பெறுதல் அறிக. ''வழித்தலை'' என்பதன்பின், 'பட' என்பது எஞ்சி நின்றது. 'வகையால்' என உருபு விரிக்க. நூலறிவு ஒன்றே பிறவியை நீக்கமாட்டாது; அதற்கு யோக முயற்சி வேண்டும்' என்றதாம்.*

*இதனால், யோகம் பிறவி நீக்கத்திற்கு வழியாதல் கூறப்பட்டது.*

**1443.** ***தெளிவுரை :-*** *யோகத்தைத் தியானப் பொருளிடத்து வைக்கும் பேரன்புடன் செய்த வழியே அதனால் விளையத்தக்க பயன்கள் யாவும் விளையும்.*

***குறிப்புரை :-*** *'இல்லையேல், ஒரு பயனும் விளையாது' என்பதாம். நான்கிடத்தும், 'செயினே' என ஏகாரத்தை மாற்றியுரைக்க. மெய்த்தவன் - மெய்ப்பொருளைத் தலைப்பட்டு அதுவானவன். இது, 'மெய்' என்னும் பெயரடியாகப் பிறந்த வினைப்பெயர். இதன்பின், "ஆகும்" என்ற செய்யுமென் முற்று, உயர்திணை ஆண்பாலில் வந்தது. ஈற்றில் வருவதும் அன்னது. இடை நின்ற இரண்டும் 'உண்டாகும்' என்னும் பொருளன. விண் - சிவலோகம். "மெய்த்தவனாகும்" முதலிய நான்கும் சிறப்புடைப் பொருளை முற்படக் கிளக்கும் முறையிற் கூறப்பட்டன. முதலடியில் 'மெய்த்தவராகும்' என்பது பாடமன்று. இரண்டாம் அடியில் 'மெய்யுரையாகும்' எனப்பாடம் ஓதி,*

**1444.** பேணிற் பிறவா உலகருள் செய்திடும்
காணில் தனது கலவியு ளேநிற்கும்.
நாணில் நரக நெறிக்கே வழிசெயும்
ஊனிற் சுடும்அங்கி உத்தமன் றானே. 7

**1445.** ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்
எத்தனை ஆயிரர் வீழ்ந்தனர் எண்ணிலி
சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாய்
அத்தன் இவனென்றே அன்புறு வார்களே. 8

---

*'குருமொழி கிடைக்கும்' எனவும் பொருளுரைப்பர்.*

*இதனால், 'யோகம் பயன் தருதலும் அன்புள்ள வழியே' என்பது கூறப்பட்டது.*

**1444. *தெளிவுரை :-*** *உடம்பினுள் நின்று வெப்பத்தைத் தருகின்ற மூலாக்கினியாய் உள்ள சிவன், அவ்வக்கினியை அணையாது ஓம்பி நின்றால் வீட்டுலகத்தை அளித்தருள்வான். அவ்வக்கினியை எழுப்பிக் காணும் அளவில் நின்றால், அங்ஙனம் நிற்கும் யோகிக்கு அவன் உறவான பொருளாய்ப் பல நலங்களைச் செய்தருள்வான். இவ் இரண்டும் இன்றி, உலகரது பழிப்பு நோக்கி அந்நெறியிற் செல்ல ஒருவன் கூசுவனாயின், அவன் நரகத்தை நோக்கிப் போகும் வழிக்கே வகையைச் சிவன் உண்டாக்குவான்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், மூலாக்கினியை எழுப்பிப் பயனடையும் விருப்பமும், ஆற்றலும் உடையோர் உலகரது இகழ்தல் புகழ்தல்களை நோக்காது, அதன்கண் முயல்க' என்பது குறிப்பெச்சம். "கலவியுள்" என்பதில், 'உள்' என்பது ஏழனுருபு. ஈற்றடி இனவெதுகை பெற்றது.*

*இதனால், யோகத்திற்குத் தகுதியுடையோர் தப்பாது அதன் கண் முயலல் வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது.*

**1445. *தெளிவுரை :-*** *யோகத்தில் விருப்பங்கொண்டு, மேற்கூறியவாறு மூலாக்கினியை ஓம்பி நின்றவனைத் தனது பூத உடலை விட்டுப் போவதற்குள், நீதிக்கு ஒத்த செங்கோல் அரசராயும், அமர முனிவராயும் உள்ளோர் எத்தனை ஆயிரவர் இறந்தார்கள்! எண்ணில்லாதவர் இறந்தார்கள். அதனால், சித்தர், தேவர், மும்மூர்த்திகள் ஆகியோரும் மேற்கூறிய யோகியை, 'இவனே சிவன்' என்று பெருமையாகப் பேசி, அவனிடத்து அன்புடையராவர்.*

**1446.** யோகிக் கியோகாதி மூன்றுள தொண்டுற்றோற்
காகத் தகுங்கிரியை ஆதி சரியையாம்
தாகத்தை விட்ட சரியைஒன் றாம் ஒன்றுள்
ஆகித்தன் பத்தியுள் அன்புவைத் தேனே. **9**

---

***குறிப்புரை*** **:-** 'விரும்பி நின்றே செயின்' எனவும் பேணின் எனவும், மேற்போந்த அதிகாரம் அறாது வருதலின், இம்மந்திரமும் அவனது சிறப்புக்கூறுவதேயாய், ''இவன்'' எனப்பட்டவனும் அவனேயாயினான் என்க. 'தேவ இருடியர், முனிவர்' என்பார், "உலப்பிலி மாதவர்" என்றார். அவர் அவ் இருடியரும், முனிவரும் ஆயது முன்னைப்பசு புண்ணியத்தால் ஆதலின், அப்புண்ணியந் தீர்ந்தவழி அவரும் அப்பதவியின் நீங்குதல் பற்றி, அவரையும் வீழ்வாருள் ஒரு சாராராக ஓதினார். இங்குக் கூறும் யோகம் சிவயோகமாதலின், இவன் இறவாது வீட்டுலகம் புகுவன் என்க. 'எண்ணிலி, உலப்பிலி' என்பவற்றை ஓர் எண்ணுப் பெயர்போலவும் வைத்து ஓதுவார் இந்நாயனார்.

இதனால், சிவனிடத்துச் செய்யும் அன்போடு கூடிய யோகத்தை உடையவனது பெருமை கூறப்பட்டது.

**1446.** ***தெளிவுரை*** **:-** யோக நெறியில் நிற்பவனுக்கு, 'யோகம், கிரியை, சரியை' என்னும் மூன்றும் செய்ய உரிமை உண்டு. கிரியை நெறியில் நிற்பவனுக்கு, 'கிரியை, சரியை' என்னும் இரண்டும் செய்ய உரிமை உண்டு. உலகியல் அவாவை விட்டுச் சரியையில் நிற்பவனுக்கு அஃது ஒன்றற்குமட்டுமே உரிமை உண்டு. அங்ஙனமாயினும் எந்த ஒன்றில் அன்புடையவனாயினும் அவனது அன்பை நான் விரும்புகின்றேன்.

***குறிப்புரை*** **:-** 'சரியை முதலியவற்றுள் எந்த ஒன்றில் நின்றோரும் பின்னர் உலகியலில் வீழாது வீடு பெறுதல் உறுதி' என்பதாம். இம் மந்திரத்துள் திரிவுபட்ட பாடங்கள் பற்றி இடர்ப்பட்டுப் பொருளுரைப்பர். ஆதிசரியை - முதற்படியாகிய சரியை, மூன்றாம் அடியில் 'சரியையில் ஒன்றேயாம்' என விரிக்க. ஈற்றடியில் "ஆகி" என்பது பெயர். அதன்பின் ஒற்றுமிக்கது செய்யுள் விகாரம்.

**1447.** யோகச் சமயமே யோகம் பலஉன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே உற்ற பரோதயம்
யோகாபி டேகமே ஒண்சித்தி உற்றலே. 10

---

*"........................ ஞானி நாலினுக்கும் உரியன்;*
*ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்*
*யோகி; கிரியா வான்தான் ஒண்கிரியை யாதி*
*ஆனஇரண் டினுக்குரியன்; சரியையினில் நின்றோன்*
*அச்சரியைக் கேயுரியன்"*

*எனச் சிவஞான சித்தியிலும் (சூ.12-5) இவ்வாறே கூறப்படுதல் காண்க.*

*இதனால், யோகி, 'சரியை, கிரியை' என்னும் இரண்டில் நிற்பாரின் உயர்ந்தவனாதல் கூறப்பட்டது. அங்ஙனமாயினும் 'அவை பசு புண்ணியங்கள் போல மலத்தின் வழிப்பட்டன ஆகா' என்றற்கு "ஒன்றுள் ஆகித்தன் பத்தியுள் அன்புவைத்தேனே" என்றருளிச் செய்தார்.*

**1447.** *தெளிவுரை :- யோக நூல் பற்றி யோக வகைகள் பலவற்றையும் உணர்தல் 'யோகத்தில் சரியை' எனப்படும். இயமம் நியமம் முதலிய எட்டுநிலைகளிலும் நிற்றல் 'யோகத்தில் கிரியை' எனப்படும். உள்ளொளிக் காட்சி கிடைக்கப் பெற்று நிற்றல். 'யோகத்தில் யோகம்' எனப்படும். மூன்றாம் தந்திரத்தில் 'பரசித்தி' எனக் கூறப்பட்ட அவற்றைப் பெறுதல் 'யோகத்தில் ஞானம்' எனப்படும்.*

*குறிப்புரை :- சரியை முதலியவற்றை அவற்றிற்குரிய தீக்கைப் பெயர்களாற் கூறினார், 'யோக நிலையில் அவ் அவ்யோகப் பகுதிகளே அவ்வத் தீக்கைகளாயும் அமையும்' என்றற்கு நிர்வாண தீக்கை ஞான தீக்கையாயினும் சாதகருக்கு ஞானத்தை முதிர்விக்கப் பிராசாத யோகம் உண்மை பற்றி யோகப் பகுதியாகக் கூறினார். அதற்கேற்ப ஞானத்தின் மிக்க ஆசாரிய நிலையையே 'ஞானம்' என்றார். வருகின்ற அதிகாரத்து இறுதியிலும் இவ்வாறே கூறுதல் காணத்தக்கது. யோகத்தில் சரியை முதலியன பிறவாறு கூறப்படினும், 'இவ்வாறு கூறுதலும் உண்டு' என்பது இதனால் பெறப்படுகின்றது. "உற்றல்" என்பதில் றகர ஒற்று விரித்தல்.*

*இதனால், யோகத்தின் படிநிலைகள் பல கூறப்பட்டன.*

## 8. ஞானம்

*இது முதல் பத்து மந்திரங்களால் ஞானம் உணர்த்துகின்றார். ஞானமாவது அறிவு. இது பரம்பொருளைச் சார்ந்து சிவானந்தத்தையே எப்போதும் அனுபவிக்கச் செய்யும் பரஞானத்தையே ஈண்டு உணர்த்துகிறது. "ஞானம் ஈசன்பால் அன்பே".*

**1448.** **ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை**
**ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று**
**ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்**
**ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே.** **1**

---

**1448.** *தெளிவுரை :-* ஞானத்திற்கும் மேலான ஓர் அறநெறி உலகத்தில் இல்லை. இருப்பதாகக் கருதும் சமயம் யாதேனும் உண்டாகுமானால், அது நல்ல சமயம் ஆகாது. ஞானத்தின் நீங்கிய எந்தச் சாதனங்களும் முடிநிலை முத்தியைத் தரமாட்டா. அதனால், ஞானத்திற் சிறந்தவர்களே மக்களுட் சிறந்தவராவர்.

*குறிப்புரை :-* மேற் சரியை முதலியவற்றின் சிறப்புக்களை இதுபோல மிக உயர்த்துக் கூறாமையால், 'அவையெல்லாம் ஞானம் வாயிலாக வீட்டிற்குச் சாதன மாதலல்லது நேரேசாதனமாவன அல்ல' என்பதும், 'ஞானம் ஒன்றே வீட்டிற்கு நேர்ச்சாதனம்' என்பதும் பெறப்பட்டது.

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமம்சொல்ல, 'அல்லவாம்' என்னும்
ஊனத்தார் என்கடவர்! அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம்; உயர் மெய்ஞ்ஞானந்தான்
ஆனத்தால் அதுபோவ தலர்கதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் விடப் பந்தம் அறும்; முத்தி ஆகும்"

எனச் சிவஞான சித்தியிலும் (சூ. 8. 27) இவ்வாறே வலியுறுத்தி ஓதினமை காண்க.

ஞானம் - மெய்யுணர்வு. அஃதாவது, 'பொருளல்லவற்றைப் பொருள் என்று உணராது' (குறள். 351) மெய்ப்பொருளை உணர்தல். இது 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களின் இயல்பை அளவை களாலும், பொருந்துமாற்றானும் நன்கு சிந்தித்தத் தெளிதலாலே உளதாவதாம். இதனையே, வடமொழியில் 'தத்துவஞானம்' என்பர். இம்மெய்யுணர்வாவது சிவஞானமே

**1449.** சத்தமும் சத்த மனமும் தகுமனம்
உய்த்த உணர்வும் உணர்த்தும் அகந்தையும்
சித்தம்என் றிம்மூன்றும் சிந்திக்கும் செய்கையும்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. 2

---

*என்பதையும் சித்தியார் மேற்குறித்த செய்யுளின் இறுதியில்,*

*"ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்;*
*இறைவனடி ஞானமே ஞானம் என்பர்"*

*எனக் கூறி முடித்தது. உண்டி சுருக்கல், கொல்லாமை, புலால் உண்ணாமை, ஐம்பொறி யடக்கல், உயிர்கள்மாட்டு இரக்கம் முதலிய பொது அறங்களும், நித்திய நைமித்திக கன்மங்களாகிய சிறப்பறங்களும் ஞானத்தை உணரும் பக்குவத்தை உண்டாக்குவன வன்றி, அவை தாமே ஞானமாய் நின்று வீட்டினைப் பயவா. ஆதலின், அவற்றையே 'ஞானம்' என்றாயினும், 'ஞானத்தினும் மேம்பட்டன' என்றாயினும் கூறுவார் உளராயின், அவர்கூற்று அறியாமையின் பாற்பட்டதாகும் என்ப தனையே முதலிரண்டு அடிகளில் குறித்தார். அங்ஙனம் கூறுவோர் சமணரும் பௌத்தரும் ஆகிய அவைதிகரும், வைதிகருள் மீமாஞ்சகரும் ஆவர். ஆகவே, அவரது மதங்களை உளத்திற் கொண்டே இதனைக் கூறினார் என்க. அவருள் மீமாஞ் சகரையே மாணிக்கவாசகரும்,*

*"விரத மேபர மாக வேதியரும்*
*சரத மாகவே சாத்திரங் காட்டினர்"*

*- தி.8 போற்றித் திருவகவல், 50-51*

*என்று அருளிச் செய்தார். இடை இரண்டு அடிகளில் வந்த மிகுதி,*

*"மிகுதியான் மிக்கவை செய்தாரை"*

*என்பதிற்போலப் புறம்பாதலை உணர்த்திற்று.*

*இதனால், ஞானத்தது சிறப்புக் கூறப்பட்டது.*

***1449. தெளிவுரை :-** ஓசை முதலிய புலன் வகைகளும், அவற்றைப் பொறிகளின் வழிச்சென்று பற்றுகின்ற மனமும், பின்பு அம்மனம் பொதுப்படப்பற்றி ஐயுற்றதை ஒருதலையாகத் துணியும் புத்தியும், எவ்விடத்தும் எழுச்சியுற்று எவ்வுணர்வையும் உணரத் தூண்டுகின்ற அகங்காரமும், அம்மூன்றானும் பெற்ற தெளிவுணர்வைப் பதியக் கொண்டு பின்னும் நினைப்பதாகிய சித்தமும் என்னும் இவற்றினது இயல்பை நன்குணர்தலே ஓசை*

*முதலிய ஐம்புலன்களையும் கடந்த ஞானிகள் பெற்ற ஞானமாகும்.*

***குறிப்புரை :-*** *அந்தக்கரணம் நான்கனுள் ஒலி வடிவானது மனம், அம்மனத்தான் அடைவிக்கப் பெறும் அறிவு புத்தி, இது நல்லது, இது கெட்டது என்று பொருளின் வேறாயிருந்து நான் இஃதறிந்தேன், அவர் இது செய்தார், செய்யார் என்ற முனைப்பு அகந்தை. இம்மூன்றையும் சிந்தித்துணர்வது சிந்தை. இவைகட்கு மூலகாரணமான நாதத்தை வென்றவரே ஞானிகள்; அவர்கள் நெறியே சன்மார்க்கநெறி என்பதாம். ஓசை முதலிய புலன்களே காரண நிலையில் தன் மாத்திரைகளாய் நின்று ஆகாயம் முதலிய பூதங்களைத் தோற்று வித்தலாலும், பின்னும் தன்மாத்திரையாய் ஐம்பூதங்களோடும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களுக்குத் துணையாய் நின்று அவை தத்தம் காரியங்களைச் செய்ய உதவுதலாலும், 'ஞானேந்திரியம், கன்மேந்திரியம், மாபூதம்' என்பவற்றையும் 'புலன்வகை' என அடக்கினார். எவ்விடத்தும் "சத்தம்" என்றது, ஏனைப் பரிசம் முதலியவற்றிற்கு உபலக்கணம். அஃது அதன் வகையை உணர்த்திற்று. ஆகவே, 'புலன்வகை' என்றதனால், 'பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து' ஆக இருபது கூறப்பட்டனவாம். இவற்றோடே மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கு கூறப்பட்டமையால், சிவாகமங்களில் 'ஆன்ம தத்துவம்' என எண்ணப்படும் இருபத்து நான்கு தத்துவங்களும் கூறப்பட்டதாயிற்று. சிறிது சிறிது வேறுபாட்டோடே இவை வைதிக சமயங்கள் எல்லாவற்றாலும் உணரப்பட்டன. ஆதலின், இவற்றது இயல்பை உணரும் ஞானத்தையே தத்துவஞானமாக ஓதினார். "சுவைஒளி ஊறோசை" என்னும் திருக்குறளையும் நோக்குக (குறள், 27). வைதிக சமயங்களின் வழியும், அவற்றிற்கு ஒத்த அளவில் சைவாகமங்களின் வழியும் இவற்றின் இயல்பை உணர்ந்த பின்பு, சைவாகமம் பற்றியே சிறப்பாக உணரத் தக்க வித்தியா தத்துவங்களின் இயல்பை விரைய உணர்வர் என்பது கருத்து. வித்தியா தத்துவம், 'காலம், நியதி' கலை, வித்தை, அராகம், புருடன், மாயை' என ஏழு. சிவதத்துவம், 'சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம்' என ஐந்து. ஆக, 'தத்துவம் முப்பத்தாறு' என்பது சைவாகமங்களின் முடிபு. இவற்றின் இயல்பெல்லாம் அவ் ஆகமங்களிலும், அவற்றை முதலாகக் கொண்டெழுந்த பிரகரணங்களிலும், மெய்கண்ட சாத்திரம் முதலிய சித்தாந்த நூல்களிலும் காணப்படுகின்றன.*

*சிவ தத்துவம் ஐந்தும் ஏனைத் தத்துவங்களை இயக்கி நிற்கும் முறையால் ஆன்மாவிற்கு உதவுவன அன்றி, அவை ஏனைத் தத்துவங்கள்போல் ஆன்மாவிற்குநேரே உடம்பாய்ப் பொருந்தி*

**1450.** தன்பால் உலகம் தனக்கரு காவதும்
அன்பால் எனக்கரு ளாவது மாவன
என்பார்கள் ஞானமும் எய்தும் சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே. **3**

---

*நின்று உதவுவன அல்ல. வித்தியா தத்துவங்கள் ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் வெளிப்படுதற்குக் காரணமாய், அதனோடு ஒட்டி ஒன்றாய் நின்று ஆன்மாவை ஆன்மாவாகச் செய்யும் இயல்புடைமையால் அவை அனைத்தையுமே 'புருடன்' என ஒன்றாக வைத்து, தத்துவங்களை, 'இருபத்தைந்து' என்றே கூறுதலும் உண்டு.*

*"ஐயஞ்சின் அப்புறத் தானும், ஆரூ ரமர்ந்தஅம் மானே"*

*- தி.4 ப.4 பா10*

*என்ற திருநாவுக்கரசர் திருமொழி இம்முறை பற்றி எழுந்ததே. தத்துவங்கள் மாயையின் காரியங்களாம். அவற்றின் இயல்பை ஆராய்ந்து உணரவே அவற்றினின்றும் நீங்குதல் உளதாம் என்க. தொகுத்தல் பெற்ற அகரத்தை விரித்து, 'சித்தம் என்ற செய்கையும்' என இயைக்க. செய்கையுடையதனை, "செய்கை" என்றார்.*

*இனால், தத்துவங்களை ஆராய்ந்து உணர்தல் ஞானமாதல் கூறப்பட்டது.*

**1450. *தெளிவுரை :-* *சிவனது வியாபகத்தில் உள்ள உலகம் சிவனது உடைமையும், அடிமையுமாய் அவனுக்கு உரித்தாதலை உணர்தலையே 'ஞானம்' என்றும், <u>சிவனிடத்து வைத்த அன்பு காரணமாக அவனது திருவருள் தமக்குக் கிடைக்கப் பெறுதலையே 'சிவோகம் பாவனை' என்றும் ஞானிகள் கூறுவார்கள்.</u> அவ் இரண்டையும் பெற்றோர், அவற்றின் பயனாகப் பின்பு, அறியத்தக்க பொருளையே அறிந்து, அதில் அழுந்துவார்கள்.***

***குறிப்புரை :-* *'ஆவதும், ஆவதும் - ஞானமும், சிவோகமும்' என்றது நிரல்நிறை. "என்பார்கள்" என்பதனை மூன்றாம் அடியின் இறுதியிற் கூட்டி உரைக்க. "தன்" என்றது சிவனாதல் விளங்குதற்கே, பின்னர், "எனக்கு" எனத் தம்மேல் வைத்துக் கூறினார். "பெற்றிடும்" என்பதற்கு, 'அந்நிலையை எய்தினோன்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. சடமும், சித்துமாகிய இருவகை உலகத்துள் <u>சடம் சிவனது உடைமையும், சித்து சிவனது அடிமையும் ஆம் என்க.</u>***

***இதனால், தத்துவ ஆராய்ச்சியால், 'யான்' எனத் தன்னையே முதல்வனாக மதிக்கும் அகமயக்கமும், பலவற்றையும் தனித்தனி***

**1451.** இருக்குஞ் சேம இடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகும் உலகம்
தருக்கிய ஆசார மெல்லாந் தருமே
திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே. **4**

---

'எனது' எனப் பற்றும் புற மயக்கமும் நீங்கி. எல்லாம் சிவனது அடிமையும், உடைமையுமாகின்ற உண்மையை உணர்தலே ஞானமாதல் கூறப்பட்டது. இதனையே, 'தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்" (சிவஞானபோதம் - அவையடக்கம்) என்றார் மெய்கண்ட தேவநாயனார்.

**1451.** *தெளிவுரை :-* மாறுபாடில்லாத ஞானத்தை ஓர்ந்துணர்ந்தவர்க்கு அவர் இருத்தற்குரிய பாதுகாவலான இடம் 'பிரமம்' எனப்படுகின்ற சிவமே. ஏனெனில், உலகம் 'இயங்கியற் பொருளும், நிலையியற் பொருளும்' என்னும் ஈரினமாய் நின்று உணர்வை அலைப்பனவாம். (ஆதலின், அவை அவர்க்கு இருத்தற்குரிய இடமாகா என்பதாம்). ஆதலின், சிவ வியாபகத்திற்கு நிற்கின்ற பெருமகிழ்வோடு செய்கின்ற செயல்களே, எல்லா இன்பங்களையும் தருவனவாம்.

*குறிப்புரை :-* ஈற்றடியை முதலில் வைத்தும், 'உலகம் சராசர வருக்கமாகும்' என மாற்றியும் உரைக்க. முதல் இரண்டடிகள் காரிய காரணப் பொருளவாய் நின்றன. தருக்குதலோடு நிகழ்கின்ற ஆசாரத்தை, "தருக்கிய ஆசாரம்" எனறார். ஆசாரம் - நடை; செயல்கள் "எல்லாம்" என்றது, 'உலகர்க்கு 'நன்மை, தீமை' என இருவகையாய்த் தோன்றி நிகழும் பலவும்' என்றவாறு. 'அருள்வழி நின்று செய்யின், தீயசெயல்களும் நல்ல செயல்களாய் இன்பம் பயக்கும்' என்றதனால், 'அருளை மறந்துசெய்யின், நல்லசெயல்களும் தீயசெயல்களாய்த் துன்பம் பயக்கும்' என்பது போந்தது.

"அரனடிக் கன்பர் செய்யு ம்பாவமும் அறமதாகும்;
பரனடிக் கன்பி லார்செய் புண்ணியமும் பாவ மாகும்;
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே"

என்னும் சிவஞான சித்திச் செய்யுளும் (சூ. 2.29), திருமுறைகளிலும் இத்தக்கன் வரலாறு சண்டேசுர நாயனார் வரலாறுகள் சிறந்தெடுத் தோதப்படுதலும் நன்குணரத்தக்கன. 'சிவவியாபகத்தின்நீங்கி உலகிடைப்புகின் தீங்கு வருதலையுணர்ந்து ஞானிகள் அதனின் நீங்காது அதனுட்டானே நிற்பர்' என்பதை உமாபதிதேவர்,

**1452.** அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமும் குரைகழல் நீங்கா
நெறியறி வார்க்கிது நீத்தொளி யாமே. **5**

---

*"புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவர்; போதார்*
*தலநடக்கும் ஆமை தக. - திருவருட் பயன், 94*

*என்று அருளிச் செய்தார். இதனானே,*

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்*
*எழுமையும் ஏமாப் புடைத்து. - குறள், 126*

*என்னும் திருவள்ளுவர் திருமொழியும் இப்பொருட் குறிப்புடைய தாதல் அறிந்து கொள்ளப்படும்.*

*இதனால், தன் பணியறுத்து அருள்வழி யொழுகுதல் ஞானமாதல் கூறப்பட்டது.*

**1452. தெளிவுரை :-** *தமது அறிவிற்குச் சிவனது அருளே முதலாதலை உணரும் உணர்வும், அவ்வுணர்வால் அதற்குட்டானே அடங்கி நிற்கும் அடக்கமும், அடங்கி, அதனைமறவாது உணர்கின்ற உணர்வால் பெருகுகின்ற அன்பும் என்னும் இவை ஒருசேரக் கூடி நீங்கா திருக்கின்ற அந்த உள்ளமாகிய கோயிலிலே நீங்காதிருக்கின்ற பேரரு ளாளனாகிய சிவனது அருட்டிரு மேனி, அருட்குணம், ஒலிக்கின்ற கழலையணிந்த திருவடி இவைகளை மறவாதிருக்கின்ற முறையை உணர்ந்த ஞானிகட்கு இவ்வுலகமாகிய இருள் நீங்கி, ஞானமாகிய ஒளி பிரகாசிக்கும்.*

**குறிப்புரை :-** *'குரை கழலும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. ஈற்றடியில் 'இது நீர்த்தொனி யாமே, நீர்த் தோணி யாமே' என்பன பாடம் அல்ல. 'அறிவும்............... பிறியா நகர்' என்க.*

*இதனால், அருளது உபகாரத்தை உணர்தல் முதலிய மூன்றும் ஞானமாதல் கூறப்பட்டது.*

**1453. தெளிவுரை :-** *ஞானத்தை விரும்பி எழுச்சி பெற்ற உள்ளத்தில், பிராணவாயுவாகிய ஊர்தியை விரும்பி ஏறி மேலே செல்லும்பொழுது வழியில் எதிர்ப்படுகின்ற இடந்தோறும், சந்திர மண்டலத்திலிருந்து பெருகும் அமுத தாரை நிரம்பியிருக்கக் கண்டு, அதனால் உடற்கும் உள்ளத்திற்கும் வருவனவாகிய குறைகளைப் போக்கி நிலைபெற்று ஒளிமயமாக ஆகுங்கள்.*

**1453.** ஞானம் விழைந்தெழு கின்றதோர் சிந்தையுள்
யானம் விழைந்தெதி ரேகாண் வழிதொறும்
கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு
ஊனம் அறுத்துநின் றொண்சுட ராகுமே. 6

**1454.** ஞானிக் குடன்குணம் ஞானத்தில் நான்குமாம்
மோனிக் கிவைஒன்றும் கூடா முன் மோகித்து
மேனிற்ற லால்சத்தி வித்தை விளைத்திடும்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே. 7

---

*குறிப்புரை :-* சிந்தை ஞானம் விளையும் பூமியே; அதில் யோகம் விளைந்து ஆறாதாரங்களாகிய வழிகள் தோறும் போய், மதி மண்டலத்து அமுதத்தைக் கண்டு உயிர்க் குற்றமாகிய அறியாமையை அகற்றிச் சிவப்பரஞ்சுடர் ஆகுக என்று உபாயம் உரைத்தருளியவாறு. இரண்டாம் அடியில் 'ஏனம்' என்பது பாடம் அன்று. உடற்கு வரும் குறைகள். 'நரை, திரை, மூப்பு, சாக்காடு' என்பன. உள்ளத்திற்கு வரும் குறை, ஒருவழி நில்லாமை. இவை யோகத்தால் நீங்குதல் அறிக. ஒளி, உடற்பொலிவும், ஞானமும் என்க.

இதனால், ஞானவேட்கை யுடையோர் யோகத்தால் உள்ளமும் உடலும் நிலையுடையதாகப் பெறின், இப்பிறப்பிலே அதனைத் தப்பாது அடைதல் கூறப்பட்டது.

**1454.** *தெளிவுரை :-* ஞானத்தைத் தலைப்பட்டவனுக்கு, ஞானத்திற் சரியை முதலிய நான்கு படிகள் உள்ளன. நான்காவது படியிற் சென்று முற்றிய மௌன எல்லையை அடைந்தவனுக்குப் பின் இவை என்றும் வேண்டாவாம். ஞானத்தைத் தலைப்படுதற்குமுன் யோகத்தையே 'ஞானம்' என மயங்கிச் சத்தி மண்டலத்திலே நின்று, அங்குள்ள சத்தியைத் தரிசித்தோர்க்கு அந்தச்சத்தி ஞானத்தைத் தருதலாகிய பயனைத்தரும். அதற்குக் கீழ் உள்ள ஆறு ஆதார சத்திகளை அடைந்தவர்கட்குக் கிடைக்கும் பயன் யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை என்பனவேயாம்.

*குறிப்புரை :-* 'ஆறு ஆதாரங்களிற் பெறுவன யோகத்தில் சரியையும், யோகத்தில் கிரியையும்'. எனவே, 'ஏழாந் தானமாகிய சகத்திராரத்தில் நிற்போர்க்கு விளைவது யோகத்தில் 'யோகம்' என்பது போந்தது. குணம் - இயல்பு. வித்தை - ஞானம். தானி - ஆதாரசத்தி 'குலத் தோர்க்கு' என்னும் நான்கனுருபு தொகுத்தல்.

**1455.** ஞானத்தில் ஞானாதி நான்குமாம் ஞானிக்கு
ஞானத்தில் ஞானமே நான்என தென்னாமை
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. **8**

---

*பல ஆதாரங்களிலும் விளங்குவது ஒரு சத்தியேயாதல்பற்றி ஒருமையாற் கூறினார். 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல்' என்னும் நான்குமே ஞானத்திற் சரியை முதலிய நான்கு என்க. நிட்டை கூடினவனையே "மோனி" என்றார்.*

*இதனால், யோக முதிர்ச்சி யுடையோன், பின் ஞானத்தில் சென்று அதன் நான்கு படிகளில் ஏறுதல் கூறப்பட்டது.*

**1455.** ***தெளிவுரை :-*** *ஞானத்தில் ஞானத்தை அடைந்தவனுக்கு, அந்த ஞானத்திற்குக் கீழுள்ள மூன்றும் முன்பே கைவந்தனவாம். ஞானத்தில் ஞானமாவது 'யான், எனது' என்னும் ஞாதுரு ஞானங்கள் தோன்றாது ஞேயம் ஒன்றேயாக அதனுள் அழுந்துதல். ஞானத்தில் யோகமாவது தத்துவாதீதத்தில் எல்லையற்ற சிவ ஒளியில் சேர்தல். ஞானத்தில் கிரியையாவது தத்துவக் கூட்டத்தினின்றும் விடுபடு மாற்றைச் சிந்தித்தல்.*

***குறிப்புரை :-*** *சிந்தித்தல் கூறியதனானே, தான் தத்துவங்களின் வேறாதலைக் கேள்வியுறுதல் ஞானத்தின் சரியை என்பது அறியப்படும். ''ஞானி'' என்றது இவ்வாறே பொருள்படுதல் அறிந்துகொள்க.*

*இதனால், 'மேற் குறித்த நான்கு படிகள் இவை' என்பது கூறப்பட்டது.*

**1456.** ***தெளிவுரை :-*** *ஞானத்தில் ஞானம் முதலியவற்றை அடைவோன், முதற்கண் வினைக்கட்டு அற்றவனாயும், இரண்டாவது சிவஞானத் தால் ஞேயமாகிய சிவத்தைத் தரிசித்தவனாயும், மூன்றாவது மும் மலங்களின் வாசனையும் நீங்கிய நின்மலனாயும், முடிவில் சிவனை அனுபவமாய்ப் பெறுதலாகிய முத்தியை அடைந்த, முடிந்த பேறுடையவனாயும் விளங்குவன்.*

***குறிப்புரை :-*** *ஞானாதி நண்ணுவோனது தன்மையைக் கீழிருந்து கூறும் முறையாற் கூறினார். இந்நான்கு அனுபவங்களும் கேட்டல் முதலிய நான்கினாலும் நிகழ்வனவாதல் அறிக. வினைக்கட்டு நீங்கினமைகூறவே, அதற்குப் பற்றுக்கோடாகிய மாயைக்கட்டு நீங்கினமையும் தானே பெறப்பட்டது. கண்ணல் - கருதல். கரை ஞானம் - மேல் எல்லையாகிய ஞானம். 'கரை*

**1456.** நண்ணிய ஞானத்தில் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவம் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயம் கரைஞானம் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. **9**

**1457.** ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டல்
ஞான விசேடமே நாடு பரோதயம்
ஞானநிர் வாணமே நன்றறி வானருள்
ஞானாபி டேகமே நற்குரு பாதமே. **10**

---

*ஞானத்தால்' என உருபு விரிக்க. திண்மை வாதனை காரணமாக அசைதல் இன்மை. 'உறைப்பு' என்றபடி. சித்தன் - சித்திக்கப் பெற்றவன்.*

*இதனால், மேற்கூறிய நான்கு படிகளிலும் நிகழும் அனுபவங்கள் கூறப்பட்டன.*

**1457.** *தெளிவுரை :-* ஞானத்திற் சரியை முதலிய நான்கையும் பெற்றோர் முறையே ஞான சமயி, ஞான புத்திரன், ஞான சாதகன், ஞான ஆசாரியன் என்பவராயும் நிற்பர்.

| | |
|---|---|
| ஞானத்தில் சமயதீட்சை | பரம்பொருளை விரும்பும் ஆன்மாவாகிய தன்னைக் காணலாம். அதாவது ஆன்ம தரிசனம். |
| ஞான விசேடம் | தேடப்படும் பரன் வெளிப்படுதல். சிவதரிசனம். |
| ஞான நிர்வாணம் | திருவருட்பதிவு சிவபோகம். |
| ஞானாபிடேகம் | சிவகுருவின் பாதத்தில் தோய்தலாகிய சிவயோகம். |

*குறிப்புரை :-* நாடும் தனைக்காண்டல் 'நான் யார்' என்று ஆராய்கின்றவன் தன்னை 'இன்னான்' என அறிதல், பர உதயம் - பரம் பொருட்காட்சி நன்றறிவான் - எல்லாவற்றையும் நன்கு அறிகின்ற சிவன். அருள் - அவனது அருளைப் பெறுதல். இங்கு, 'நற்சிவோகம் பாவம்' என்ற பாடமும் காணப்படுகின்றது. குரு பாதம் - குருவாம் நிலை.

*இதனால், மேற்கூறிய நால்வரும் உலகில் விளங்கும் முறை கூறப்பட்டது.*

## 9. சன்மார்க்கம் (நன்னெறி)

*மேற்கூறிய சரியை முதலிய நான்கும் நான்கு நெறிகளாய் நிற்றலை அந்நெறி வகைகளோடு இயைபுபடுத்திக் கூறக்கருதித் தொடர்புபற்றி மேல்நின்ற ஞானம் முதலாக எடுத்துக்கொண்டு, எதிர் நிரனிறை வகையாற் கூறுகின்றார். அவற்றுள் ஞானமே 'சன்மார்க்கம்' எனப்படுதலைப் பத்து மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1458.** சாற்றுஞ்சன் மார்க்கமாம் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. 1

சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய
வையத்துள் ளார்க்கு வகுத்துவைத் தானே.

---

**1458.** *தெளிவுரை :- எல்லாவற்றினும் மேலானதாகச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற சொரூப சிவத்தின் உண்மை இயல்பை விளக்குவனவாகிய வேத சிவாகமங்களில் ஞானப் பகுதியின் பொருளை உள்ளவாறு உணர்ந்து, அதனால் 'வெகுளி, காமம், மயக்கம்' என்னும் முக்குற்றங்களும் நீங்கிச் சிவத்தோடு ஒன்று படும் நிலை சித்திக்கப்பெற்றுக் காலனை வென்றவரே குறிப்பொருளை (இலட்சியப் பொருளை) அறிந்து அடைந்தோராவர்.*

*குறிப்புரை :- 'சன்மார்க்கமாம் சுடர்' என இயையும். இயல்பினை, "தோற்றம்" என வைத்து, காரணத்தைக் காரியமாகக் கூறினார். சிவாகமங்களும் சுருதியாதல் அறிக. 'சுருதியில் கண்டு' என உருபு விரித்து முடிக்க. சுடர் - ஞானம்; அஃது அதனை உணர்த்தும் பகுதியைக் குறித்தது. "சீற்றம்" என்றது உபலக்கணம். கூற்றத்தை வெல்லுதலாவது, தூல உடம்பை விட்டு எமலோகம் போகாது, தூல, சூக்கும, பர உடம்புகளாகிய அனைத்தையும் விடுத்து இறைவனை அடைதல். 'வெல்வார்' எனற்பாலது, துணிபு பற்றி 'வென்றார்' எனப்பட்டது.*

*இதனால், சரியை முதலிய நான்கனுள் முடிவாகச்*

**1459.** தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தரும்முத்திச் சார்பூட்டும் சன்மார்க்கந் தானே. 2

**1460.** தெளிவறி யாதார் சிவனை அறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. 3

---

*சொல்லப்படுகின்ற உண்மை ஞானம், பிறவியாகிய பெருந்துன்பத்தை நீக்கிச் சிவானந்தமாகிய எல்லையில் இன்பத்தைத் தருதலால், 'சன்மார்க்கம் - நன்னெறி' எனப்படுவதாயிற்று என்பது கூறப்பட்டது. 'இதனின் மிக்க நன்னெறி பிறிதில்லை' என்பதாம்.*

*(இதன் பின் பதிப்புக்களில் உள்ள "சைவப்பெருமை" என்னும் மந்திரம் இத்தந்திரத்தின் இறுதியதிகாரத்தில் வருவது).*

**1459.** *தெளிவுரை :- குருபத்தி செய்யும் நன்மாணாக்கர் கண்ணால் காணுதல், திருமுழுக்கு, ஒப்பனை, புகை, ஒளி, படையல், மலரிடல் முதலாக முறைப்படி வழிபடுதல், தியானித்தல், தீண்டி அடிவருடல் முதலியன செய்தல், துதித்தல், பாதுகையைத் தலைமேல் தாங்குதல் முதலியவற்றால் குருவை வழிபட்ட வழியே சன்மார்க்கமாகிய ஞானம் கைகொடுத்து, முத்தி நிலையைத் தரும்.*

*குறிப்புரை :- 'குருபத்தி செய்யும் குவலயத்தோர்' என்று எடுத்துக் கொண்டு, ''சூட'' என்பதன்பின், 'அவர்க்கு' என ஓதற்பாலதனை இவ்வாறு ஓதினார். "கீர்த்திக்க" என்பது வடநூல் மதமுடிபு. 'குவலயத் தோர்க்கே சன்மார்க்கம் சார்பு ஊட்டும்; முத்தி தரும்' எனக் கூட்டுக. சார்பு ஊட்டுதல், தன்னோடு இயைபினை உண்டாக்குதல். தான், அசை.*

*இதனால், 'ஞானம், நல்லாசிரியரானே (சற்குருவாலே) தரப்படும். நன்னெறி - சன்மார்க்கமாம்' என்பது கூறப்பட்டது. அந்நெறி ஞானமேயாதல் அறிக. இதனுள் குருபத்தி செய்யும் வகையும் கூறப்பட்டமை காண்க.*

**1460.** *தெளிவுரை :- குருவருளால் பெறப்படும் உண்மை ஞானத்தைப் பெறாதவர் சிவனது இயல்பை உணரமாட்டார். அதனால், அவர் ஆன்மலாபத்தை அடைதற்குரிய ஆன்மாவும்*

**1461.** தானவ னாகித்தான் ஐந்தாம் மலம்செற்று
மோனம தாம்மொழிப் பால்முத்த ராவதும்
ஈனமில் ஞானானு பூதியில் இன்பமும்
தானவ னாய்உற லானசன் மார்க்கமே. **4**

**1462.** சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமும்
சன்மார்க்கத் தார்க்கு இடத்தொடு தெய்வமும்

---

*ஆகார். ('சடத்தோடொப்பர்' என்பதாம்). ஆதலின், அவர் சிவமாம் நிலையைப் பெறுதலும், அப்பேற்றால் பிறவியற்றவராதலும் இல்லை.*

***குறிப்புரை :-*** *கேட்டுச் சிந்தித்துத் தெளிவதனையே "தெளிவு" என்றார். உம்மை, எச்சப்பொருட்டு.*

*இதனால், குருவருளாலன்றிப் பிறவாற்றாற் பெறும் ஞானங்கள் உண்மை ஞானம் அல்லவாய், நன்னெறி சன்மார்க்க மாகாதொழிதல் கூறப்பட்டது.*

**1461. *தெளிவுரை :-*** *சீவன் சிவனேயாய் நிற்கும் முறையால் அஃது ஐந்து மலங்களை அழித்து, மௌனோபதேசத்தின் வழி முத்தி நிலையைப் பெறுதலும், பின் குறையில்லாத ஞானத்தால் உண்டாகும் அனுபவத்தில் விளைகின்ற இன்பமும் ஆகிய இவையே சீவன் சிவனேயாய் விடுகின்ற சன்மார்க்கமாகும்.*

***குறிப்புரை :-*** *மோனமொழி - சின்முத்திரையோடு இருந்து காட்டும் உபதேசம். "தான் அவனாதல்" இரண்டனுள் முன்னது அவ்வாறு உணர்தலாகிய சாதனையையும், பின்னது, அங்ஙனமே யாதலாகிய பயனையும் குறித்தன. ஐந்து மலங்களாவன. 'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம்' என்பன. "மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற் பொரு மத்துறவே" (தி.8 நீத்தல் விண்ணப்பம், 29) என மணிவாசகரும் அருளிச் செய்தார். மௌனோபதேசம், சின்முத்திரையால் உணர்த்தல். இனி, 'மௌன நிலையைத்தரும் மொழி' என்றும் ஆம்.*

*இதனால், ஞானமே சன்மார்க்கமாதல், ஏதுக்காட்டி விளக்கப்பட்டது.*

**1462. *தெளிவுரை :-*** *எந்நிலையில் நிற்போர்க்கும் நோக்கும் திசை, இருக்கும் இருக்கை, உறையும் இடம், தியானிக்கப்படுகின்ற தெய்வம், இணங்கும் கூட்டம், வழிபடப்படும் குறி முதலிய எல்லாம் சன்மார்க்கத்தார்க்குப் போலவே குருவருளால் கொள்ளத்தக்கனவாம்.*

சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தரிசனம்
எம்மார்க்கத் தார்க்கும் இயம்புவன் கேண்மினோ. 5

1463. சன்மார்க்க சாதனந் தான்ஞானம் ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கம் தானவ னாகும்சன் மார்க்கமே. 6

---

*__குறிப்புரை :-__ 'அங்ஙனமே கொண்டவழியே அவை சன்மார்க்கத்திற்குரிய மார்க்கமாய் தாமும் சன்மார்க்கமாம் தன்மையைப் பெறும். இன்றேல் துன்மார்க்கமாய்விடும்' என்றவாறு. 'சற்குருவே இங்குக் கூறிய திசை முதலியவற்றைச் சிவனையடையும் முறையில் உணர்த்துவர். பிறர் அதுமாட்டாது பிறவற்றை உணர்த்துவர்' என்பதாம். ''சன்மார்க்கத்தார்க்கு'' என்றது, 'சன்மார்க்கத் தார்க்கு உள்ள' என்றவாறு. "சன்மார்க்கத்தார்க்கும்" என்னும் உம்மை அசைநிலை. 'எம்மார்க்கத்தார்க்கும் ஆம்' என ஒருசொல் வருவிக்க. ''இயம்புவன் கேண்மின்'' என்றது 'என் சொல்லைக் கேளுங்கள்' என வலியுறுத்தவாறு.*

*இதனால், சன்மார்க்கம் அல்லாதன நல்லன ஆகாமை கூறப்பட்டது.*

*__1463. தெளிவுரை :-__ ஞானம் ஒன்றே சன்மார்க்கத்தில் கொள்ளப்படும் சாதனமாகும். அந்தச் சாதனம் பின் ஞேயமாகிய சாத்தியத்தை அடைவிக்கும். சன்மார்க்கம் முதலியவைகளில் ஞானமல்லாத பிறவே சாதனங்களாம். பிற மார்க்கங்களைக் கடந்து சன்மார்க்கத்தில் நிற்போர் அதில் துரியத்தைக் கடந்தபொழுது விரும்புகின்ற சன்மார்க்கம் சீவன் சிவமாம் தன்மையாகிய சன்மார்க்கமே.*

*__குறிப்புரை :-__ 'ஞானத்தான் சன்மார்க்க சாதனம்' என மாற்றி, 'அதனால், ஞேயம் ஆம்' என வேறு தொடராக்கியுரைக்க. பிறவற்றை, 'பேதை - பேதைமை' என்றது, ஞானமல்லவாதல் பற்றி. 'ஞானமாவது, தத்துவ ஞானமே' என்பது மேலே கூறப்பட்டது. சன்மார்க்கத்தில் நிகழ்வதை, "துன்மார்க்கம் விட்டது" என்றார். துரிய நிலையிலும் திரிபுடி ஞானம் அற்றொழியாமையால் "துரிசு" என்றார்.*

**1464.** சன்மார்க்கம் எய்த வரும்அருஞ் சீடர்க்குப்
பின்மார்க்கம் மூன்றும் பெறவியல் பாமென்றால்
நன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே. 7

**1465.** அன்னிய பாசமும் ஆகும் கருமமும்
முன்னும் அவத்தையும் மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமும்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. 8

---

*இதனால், அதீதமாகிய ஆனந்த நிலையே சன்மார்க்கத்தில் சன்மார்க்கமாதல், துரிசறுதலாகிய ஏதுக்காட்டி விளக்கப்பட்டது.*

1464. ***தெளிவுரை :-*** *சன்மார்க்கம் கைவரப்பெறும் தகுதியை அடைய விரும்பும் அரிய மாணாக்கர்க்கு, அதற்கு முன்னே ஏனை, யோகம் முதலிய மூன்றும் முற்ற வேண்டுதலே முறையாகுமாயின், வீடடையும் நெறியாவது, தன்னைச் சிவனுக்கு உரிய பொருளாக உரிமைப்படுத்து அறிதலேயாகின்றது. 'இதுதான் ஆசிரியன்மார் தம் மாணாக்கர்க்கு அறிவுறுத்தத்தக்க நெறி' என்று உண்மை வேதம் தனது துணிவாகக் கொண்டு கூறுகின்றது.*

***குறிப்புரை :-*** *அருமை, பக்குவ நிலை. "என்றால்" என்பது, 'என்பதே முறை என்றால்' எனத் தெளிதற் பொருள் உணர்த்தி, ஏனைப் பசுபுண்ணியத்தளவில் அத்தகுதி வாராமை உணர்த்திற்று. நன்மை - வீடு. அதனை அடையும் மார்க்கம். ''நன்மார்க்கம்'' எனப்பட்டது. 'சிவனொடு படுத்து' என ஒரு சொல் வருவித்து, படுத்தல், நாடல் இரண்டற்கும் 'தன்னை' என்னும் செயப்படுபொருள் வருவித்துக் கொள்க. இம்மந்திரம், 'சிவ ஞானமாகிய சிறப்புணர்வின்றி, பிரம்ம ஞானமாகிய பொதுவுணர்வே வீடு பயக்கும்' என்பதே வேதத்தின் முடிபு, என்பாரை மறுத்துக் கூறியது.*

*இதனால், உண்மைச் சன்மார்க்கம் சிவஞானமேயாதல் கூறப்பட்டது.*

**1466.** பசுபாசம் நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சம் கசியக் கசிவித்து
ஒசியாத உண்மைச் சொரூபோ தயத்துற்று
அசைவான தில்லாமை ஆனசன் மார்க்கமே. **9**

---

**1465.** *தெளிவுரை :-* *பூர்வபக்க மதங்களின் உணர்வுக்கு அப்பால் உள்ள பிரதி பந்தமாகிய ஆணவ மலத்தை, முன்னர் உணர்ந்து பின்னர் ஏனைய கன்மம், மூலப்பகுதி, அம்மதங்களால் உணரப்பட்ட சாக்கிரம் முதலிய அவத்தைகள். அவைகளில் தொடக்குண்டு நிற்கின்ற அறிவின் நிலைகள், பொருள்களிடையே உள்ள சிறியனவும், பெரியனவுமாகிய வேறுபாடுகள் என்பவற்றோடு தலைவனாகிய இறைவனையும் உணரும் சித்தாந்த ஞானம் வாய்க்கப் பெற்றவரே 'சன்மார்க்கத்தோர்' எனப்படுவர்.*

*குறிப்புரை :-* *'சித்தாந்த ஞானம் கைவரப்பெற்றவர்க்கே பிற வெல்லாம் பூர்வ பக்கமாதல் இனிது விளங்கும்' என்றவாறு. "முன்னும் அவத்தையும்" என்பதனை. "மூலப்பகுதியும்" என்பதன் பின்னர்க் கூட்டியுரைக்க. அதிபேதம் - பெரியவேற்றுமை. "தன்" என்றது ஒருவனான இறைவனை இது, "கண்டவர்" என்பதனோடு இயைதல் கூடாமையின், கண்டவரை உணர்த்தாமை அறிக.*

*இதனால், பிற ஞானங்கள் 'சன்மார்க்கம்' எனப்படாது, சித்தாந்த ஞானமே 'சன்மார்க்கம்' எனப்படுதல் பொருந்துமாறு கூறப்பட்டது.*

**1466.** *தெளிவுரை :-* *ஆன்மாவின் பசுத்துவம் காரணமாக வந்து பொருந்திய சம்பந்தங்களாகிய கருவி கரணங்கள் அனைத்தையும், 'தன்னின் வேறானவை' எனக்கண்டு கழித்துத் தன்னைப் பதியாகிய சிவனுடன் பொருத்தி, அங்ஙனம் முன்பு பொருந்தாதிருந்த நிலையில் மறந்திருந்த அவனது உபகாரத்தை இடைவிடாது உணர்தலால், முன்பு அன்பினால் நெகிழ்தல் இன்றி வன்மையுற்றிருந்த மனத்தை இப்பொழுது நெகிழ்ந்து உருகும்படி உருகப்பண்ணி, அவ்வன்பினாலே, என்றும் மாற்றம் இன்றி நிற்கும் மெய்ம்மையாகிய சிவனது தன்னியல்பு வெளிப்பாட்டில் அசைவின்றி நிற்றலே முற்ற*

**1467.** மார்க்கம்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது
மார்க்கம்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை
மார்க்கம்சன் மார்க்க மெனும்நெறி வைகாதோர்
மார்க்கம்சன் மார்க்க மதுசித்த யோகமே. **10**

---

*முதிர்ந்த சன்மார்க்கமாகும்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடி முதலாயவற்றில் கூறியவற்றை மெய்கண்ட தேவரும்,*

*"அயரா அன்பின் அரன்கழல் செலுமே"*

***- சிவஞானபோதம், சூ.11***

*என அருளிச் செய்தல் காண்க.*

*இதனால் முற்ற முதிர்ந்த சித்தாந்த ஞானத்தின் சிறப்புணர்த்து முகத்தால், அது சிறந்த சன்மார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1467. *தெளிவுரை :-*** *இங்குக் கூறிய சன்மார்க்கம் இதனைப் பெறுதற்குரியோர் பெறுதற் பொருட்டு வகுக்கப்படுவது. தலைசிறந்த நெறி, இந்தச் சன்மார்க்கமன்றி வேறொன்று இல்லை ஆயினும், இந்தச் சன்மார்க்கத்தை அடைந்து இன்புற்றிருக்க மாட்டாதவர்க்குரிய சன்மார்க்கம், மன ஒடுக்கத்தைப் பயனாக உடைய யோக நெறியேயாம்.*

***குறிப்புரை :-*** *முதலடியில், 'இம் மார்க்கம்' எனச்சுட்டு வருவித்து உரைக்க. இரண்டாம் அடி, 'இஃது ஒருதலையாக அடையத் தக்கது' என்பதனை நிலைபெறுத்தியது. மூன்றாம் அடியில் உள்ள தொடர். 'இந்நெறி' என்னும் சுட்டளவாய் நின்றது. "வைகாதோர்" என்றது, "சென்று வைக்காதோர்" எனப் பொருள் தந்தது. 'வைகாதோர் சன்மார்க்கம் சித்தயோக மார்க்கமாம்' எனக்கூட்டுக. சித்த யோக மார்க்கம் - மனம் ஒடுங்கும் நெறி.*

*இதனால், சன்மார்க்கத்தை அடையமாட்டாதார்க்கு அதனை அடையும் வழி கூறும் முகத்தால், வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

## 10. சகமார்க்கம்

*இது முதல் ஏழுமந்திரங்களால் யோகம் சகமார்க்கம் ஆமாறு கூறுகின்றார்.*

**1468.** சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது
மன்மார்க்கம் மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்
துன்மார்க்கம் ஞானத் துறதியு மாமே. 1

---

**1468.** *தெளிவுரை :-* *சிவநெறியில் யோகத்தை, 'சகமார்க்கம்' - ஒத்துடன் நிற்கும் தோழமை நெறி - எனக் கூறுதல், சன்மார்க்கமாகிய ஞானத்தின் தன்மையையே கொண்டு விளங்குதல் பற்றியாம். அதனால், சிவநெறியாம், உண்மை ஞானத்தால் உளதாகின்ற முத்திப் பேற்றுள் உய்க்கும். ஏனையோர் கூறும் யோகங்கள் ஓயாது பிறந்து இறத்தலை வெறாது விரும்பிக் கொள்வனவேயாகும். அவற்றால் ஞானமாகிய உறுதிப் பொருள் கிடைத்தலும் கூடுமோ!*

*குறிப்புரை :-* *சிவமாந்தன்மையைப் பெறுதற்கு அணித்தாம் நிலையை எய்துவித்தல் பற்றியே யோகம். 'சகமார்க்கம் தோழமை நெறி' எனப்படுகின்றது என்பதும், அதனால், அந்நிலையை எய்துவிக்க மாட்டாத பிற யோகங்கள் 'சகமார்க்கம்' என்பதற்குப் பொருளாகா என்பதும் கூறியவாறு. எனவே, பிற யோகங்களைச் சிவநூல்கள் யோகமாகக் கொள்ளுதல் இல்லை என்பது பெறப்பட்டது. யோகத்திலும் ஞானத்தன்மையே உளதாதல், ஆதார பங்கயங்களை ஆறு அத்துவாக்களாகவும், நிராதார சத்தி மண்டலம் கொள்ளப் படுதலும் அதற்கும் மேலான மீதானம் கூறப்படுதலும் பிறவுமாம். இவை அடயோகம், பாதஞ்சல யோகம் முதலியவற்றில் இல்லாமை அறிக.*

*"சன்மார்க்க ஞானமதின் பொருளும், வீறு*
*சமயசங்கே தப்பொருளுந் தான்ஒன் றாகப்*
*பன்மார்க்க நெறியினிலும் கண்ட தில்லை"*

*- ஆகார புவனம், 12*

*என்றார் தாயுமான அடிகளும்,*

*"மெய்ம்மைச் - சிவயோக மேயோகம்; அல்லாத*
*எல்லாம்*
*அவயோகம் என்றே அறி"* *- வெண்பா 74*

**1469.** மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவும் சிவனும் சமயமும் கூடார்
வெருவும் திருமகள் வீட்டில்லை யாகும்
உருவும் கிளையும் ஒருங்கிழப் பாரே. **2**

---

*என்ற திருக்களிற்றுப்படி இங்கு நினைக்கத்தக்கது. "பிறந்து, இறந்து உன்மார்க்கம்" என்றது, 'பிறந்து இறந்து உழன்றும் அதனையே விரும்புகின்ற மார்க்கம்' என்றவாறு. எனவே, அவை மல நடையேயாய் பிறவியை அறுக்கமாட்டா என்பது போந்தது. 'ஆனது' என்றது, பிறவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனி நோக்கிற்று. ''இறந்தும்'' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'அதனையே உன்னும் மார்க்கமாம்' என்க. "உறுதியும்" என்னும் உம்மை சிறப்பு. "ஆமே" என்பது எதிர்மறைப் பொருட்டு.*

*இதனால், சிவயோகத்தது சிறப்புக் கூறும் முகத்தால், அது 'சகமார்க்கம்' எனப்படுதற்கு ஏது கூறப்பட்டது.*

**1469. தெளிவுரை :-** ***சிரசிற்குமேல் பன்னிரண்டங்குலமாகச் சொல்லப்படுகின்ற நிராதாரத்தைப் பொருந்துகின்ற யோகநெறி யில்லாது, பிறவற்றையே யோகமாக மயங்குவோர், ஞான குருவையும், சிவனையும், உண்மைச் சமயத்தையும் அடையமாட்டார். அவர் அணிமாதியாக விரும்பும் சித்திகளாகிய செல்வத்தைத் தரும் திருமகளும் அவர்பால் அணுக அஞ்சுவாள்; மோட்சமும் அவருக்கு இல்லை. உடம்பையும், சுற்றத் தொடர்பையும் வீணே இழப்பர்.***

***குறிப்புரை :-*** ***துவாதச மார்க்கம், பிராசாத யோகமுமாம். மேற் காட்டிய திருக்களிற்றுப்படியின்படி, சிவயோகம் அல்லாதன அவ யோகமாதலை வலியுறுத்துக் கூறியவாறு, சுற்றமும் பயன் செய்யாமை கூறவே, இறைவன் தோழன்போல அணியனாய் நின்று அருளுதல் இன்மையும் தானே பெறப்பட்டது. அதனால், அவை சகமார்க்கம் ஆகாமை அறிக. "சிவனும்" என்பதில் இரண்டனுருபு தொகுத்தல் பெற்றது.***

***இதனால், சிவயோகமே சிவனை அணியனாக்கும் சகமார்க்கமாதல் எதிர்மறை முகத்தால் கூறப்பட்டது.***

**1470.** யோகச் சமாதியி னுள்ளே அகலிடம்
யோகச் சமாதியி னுள்ளே உளரொளி
யோகச் சமாதியி னுள்ளே உளசத்தி
யோகச் சமாதி உகந்தவர் சித்தரே. **3**

**1471.** யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகம் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. **4**

---

**1470.** *தெளிவுரை :-* சிவயோக சமாதியுள்ளே உலக முழுதும் அடங்கித் தோன்றும். உள்நிற்கும் ஒளியும் விளங்கும். அருட்சத்தியும் விளங்குவாள். ஆதலால், சிவயோக சமாதி பெற்றவரே எல்லாம் சித்திக்கப் பெற்றவராவர்.

*குறிப்புரை :-* "இடம், ஒளி" என்பவற்றின்பின், 'விளங்கும்' என்பது எஞ்சி நின்றது. உளர்தல் - அசைதல்; ஒளிவிடல். இவ்வொளி திரோதான சத்தியாம். 'அகலிடமும், இவ்வொளியும் உள்ளன' என்றது, கால இடங்களைக் கடந்த பொருள்கள் விளங்குதல் கூறியதாம். அருட்சத்தி விளங்குதலாவது, சத்திநிபாதம் முதிர்தல்.

இதனால், சிவயோகத்தால் உலகம் கடந்த வியாபகம் பெற்றுச் சிவனோடு ஒக்கும் நிலைவாய்த்தலால் அது சகமார்க்கமாதல் கூறப்பட்டது.

**1471.** *தெளிவுரை :-* சிவயோகிகட்கு யோகத்தோடு உலக போகமும் சுத்தபோகமாய் வரும். சிவயோகத்தால் சிவசாரூபம் கிடைக்கும். ஆகவே, இம்மை, மறுமை இரண்டையும் இழவாது பெறும் சிவயோகிக்கு அவன் உலகில் விரும்புகின்ற புருடார்த்தம் உளதாகும்.

*குறிப்புரை :-* இரண்டாம் அடியில், 'யோகத்தால்' என உருபு விரிக்க. 'உள்ளத்தின்கண் ஓர்கின்ற போகமாகிய புருடார்த்தம் சித்தியாகும்' என்க. அது, பகுதிப் பொருள்விகுதி.

இதனால், சிவரூபம் உற்றிடுதல் பற்றிச் சிவயோகம் சக மார்க்கம் ஆதல் தெரித்துக் கூறப்பட்டது.

**1472.** **ஆதார சோதனை யால்நாடி சுத்திகள்**
**மேதாதி ஈரெண் கலாந்தத்து விண்ணொளி**
**போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி**
**சாதா ரணங்கெட லாம்சக மார்க்கமே.** **5**

**1473.** **பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை**
**அணங்கி எறிவன் அயில்மன வாளால்**
**கணம்பதி னெட்டும் கருதும் ஒருவன்**
**வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றானே.** **6**

---

**1472.** ***தெளிவுரை :-*** *சிவயோகத்தில் ஆறு ஆதாரங்களிலும் சிவனது நிலைகளையே காணுதலால் உணர்வை உண்டாக்கும் நாடிகள் நல்லனவாகும். மேதாகலை முதலிய பதினாறு கலைகளின் முடிவில் பரவெளியில் விளங்கும் ஒளியாகிய சிவம் தோன்றும். சீவபோதம் ஒடுங்கிப் பஞ்சேந்திரியங்கள், அந்தக்கரணம் இவையும் சீவத்தன்மை கெடச் சிவத்தன்மையைப் பெறும். அதனால், அவ்யோகம் சகமார்க்கம் ஆதற்குத் தடையில்லை.*

***குறிப்புரை :-*** *சுத்திப்பட்டனவற்றை, "சுத்தி" என்றார். இதன்பின் 'ஆம்' என்னும் பயனிலையும், "விண்ணொளி" என்பதன்பின், 'தோன்றும்' என்னும் பயனிலையும் எஞ்சிநின்றன. 'ஆலயம்' என்பதும் 'ஒடுக்கம்' எனப்பொருள்தரும். சாதாரணம் - பொதுமை. "சகமார்க்கத்தே" என்பதனை, முதலில் வைத்து உரைக்க. 'சகமார்க்கமே' என்பது பாடமன்று.*

*இதனால், சிவயோகத்தின் பயன்கள் பலவும் கூறி, அது சகமார்க்கமாதல் விளக்கப்பட்டது.*

**1473.** ***தெளிவுரை :-*** *சிவயோகம் வல்லானது சிந்தையிடமாகப் பதினெண் கணங்களும் வணங்குகின்ற தனித்தலைவனாகிய சிவன் வந்து நிலைத்து நிற்பானாயின், பின்பு அவன் தன்னோடு இகலி நிற்கின்ற ஐம்பொறிகளாகிய பகைவர்களைத் தனது மனமாகிய கூரிய வாளால் தாக்கி வெட்டியொழிப்பான்.*

***குறிப்புரை :-*** *'பிணங்கி நிற்கின்றவையாகிய ஐந்தையும்' என்க. 'பிணங்கி நிற்கின்ற ஐயைந்தையும்' எனப் பிரித்து, 'இருபத்தைந்து தத்துவங்களையும்' எனவும் உரைப்பர். அணங்குதல் - வருத்துதல்.*

**1474.** வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்
வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகும்
உளங்கனிந் துள்ளம் உகந்திருப் பார்க்குப்
பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே. 7

---

'அணங்க' எனப்பாடம் ஓதுதலுமாம். 'அயில்மனம்' என்பது, 'இன்பதுன்பங்களை நுகர்கின்ற மனம்' என்னும் பொருட்டாய், 'சிலேடை வகையால் கூர்மையான மனம்' எனப் பொருள் தந்தது. இனி, 'மனத்துக்குக் கூர்மை நுண்ணிதாக நோக்கல்' எனலுமாம். 'அயிர்மனம்' என்பது பாடம் அன்று. யோகமாகிய அகவழிபாட்டினையே இங்கு, "வணங்குதல்" என்றார். 'நின்றானேல்' என்பதில், 'எனில்' என்பதன் மரூவாகிய 'ஏல்' என்பது எஞ்சி நின்றது. 'நாளை அவன் வாளொடு வெகுண்டு வந்தால், பின் நீ என் செய்வை' என்பதிற்போல, 'சிந்தை சிவன் வந்து நின்றானேல்' 'பின்னை ஐந்தையும் எறிவன்' என்றது, 'சிவன்வந்து நிற்கும் சிந்தையில்லாதார் அது மாட்டார்' என்பதைத் தோற்றுவித்து நின்றது.

இதனால், சிவயோகமே ஐம்பொறிகளை வென்று, சிவனோடு சிந்தையால் கூடி நிற்கின்ற சகமார்க்கமாதல் கூறப்பட்டது.

**1474.** தெளிவுரை :- மேற்கூறிய சிவன், வேடத்தால் வளப்பமான கனி (சிவப்பழம்) போன்ற பொலிவையுடையராய் உள்ள சரியை கிரியா மார்க்கத்தார்க்கும் வளப்பமான கனி கிடைத்தாற்போலும் உண்மையையே உடையனாவன். ஆயினும், யோகத்தால் உள்ளம் பழுத்து அவனை உள்ளத்தே விரும்பிக் கண்டு கொண்டிருப்பவர்க்குப் பழம் அளித்து பிழிந்து சாற்றைப் பொழிதல் போல மிக்க இன்பத்தைத் தருபவனாய் இருப்பன்.

குறிப்புரை :- வளங்கனி - வளவிதாகிய கனி. பகுதல் - கிழிதல். "பகுந்து" என்றது, 'கிழிந்து பொழிந்தாற் போன்று' எனப் பொருள் தந்தது. ஈற்றடி இனவெதுகை பெற்று நின்றது.

இதனால், சரியை கிரியைகள் சகமார்க்கமாகாது, யோகமே சகமார்க்கமாயினவாறு கூறப்பட்டது.

## 11. சற்புத்திர மார்க்கம்

### *(மகன்மை (அ) மைந்தர் நெறி)*

***இது முதல் ஏழுமந்திரங்களால், கிரியை சற்புத்திர மார்க்கம் ஆமாறு உணர்த்துகின்றார்.***

**1475. மேவிய சற்புத்திர மார்க்கம் மெய்த்தொழில்**
**தாவிப்ப தாம்சக மார்க்கம் சகத்தொழில்**
**ஆவது இரண்டும் அகன்று சகமார்க்கத்**
**தேவியோடு ஒன்றல் சன்மார்க்கத் தெளிவதே. 1**

---

**1475.** *தெளிவுரை :- விரும்பப்படுகின்ற சற்புத்திர மார்க்கமாகிய கிரியையாவது, அகத்தில் மட்டுமன்றிப் புறத்திலும் ஒளிவடிவில் சிவனை நிறுத்தி முகம் முதலிய உறுப்புக்களை நினைவால் (பாவனையால்) கண்டு பல முகமன்களும் (உபசாரங்களும்) செய்து வழிபடுதலாம். சகமார்க்கமாகிய யோகமாவது, உலகத்தோடு ஒட்டி நிகழும் முகமன் நிகழ்ச்சிகள் 'அகம், புறம்' என்னும் இரண்டிடத்தும் நிகழ்தலாகிய அத்தன்மை இன்றி, யோகத்தில் வெளிப்படும் யோக சத்தியை அகத்தில் கண்டு, அதனோடு ஒன்றாதலாம். அனைத்தினும் மேலான சன்மார்க்கமாவது, தெளிவான ஞானமேயாகும்.*

*குறிப்புரை :- 'உண்மை ஞானம் சன்மார்க்கமாய் நிற்க, உடனாய் நிகழும் திருவருளோடு கூடுமாற்றால் யோகம் சகமார்க்கமாதலின், அவ் இரண்டிற்கும் முன்னே நிகழும் ஒளியுருவ வழிபாடு சற்புத்திர மார்க்கமாயிற்று' என்பதாம். ஆகவே, இக்கருத்து இனிது விளங்குதற் பொருட்டே சகமார்க்க சன்மார்க்கங்களின் இயல்புகள் இங்கு எடுத்துக்காட்டப்பட்டன என்பது விளங்கும். சற்புத்திரமார்க்கம் - மகன்மை நெறி - அல்லது - மைந்தர்நெறி. மகன் தந்தைக்கு வேண்டும் உபசாரங்களை அணுக்கமாயிருந்து அவனது மெய்யைத்தீண்டி அன்புடன் செய்தல் போலச் செய்தலே கிரியையாதல் அறிக. 'அகல நின்று செய்யும் புறம்படித் தொழில்கள் சரியையாக, அணுகி நின்று செய்யும் அகம்படித் தொழில்களே கிரியை' என உணரலாம். 'கிரியைக்கு உரியது அருவுருவத் திருமேனி' என்பது "தாவிப்பது" என்றதனால் பெறப்படும்; என்னை? உருவத் திருமேனியாயின், வழிபடும் பொழுதெல்லாம் தாவித்து வழிபடல் வேண்டாமையின். இங்ஙனம் செய்யும் அருவுருவ வழிபாடு பின்னர் அருவ வழிபாடாகிய யோகத்தில் செலுத்த வல்லதாகும். அதனானே, கிரியையில் அக வழிபாடும் ஒரு பகுதியாய் நிகழ்கின்றது. அருவுருவத்*

**1476.** பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்திட் டன்னமும் நீர்சுத்தி செய்தல்மற்று
ஆசற்ற சற்புத்திர மார்க்க மாகுமே. **2**

---

*திருமேனி அல்லது ஒளியுருவமாவது இலிங்க வடிவாம்.*

*"மெய்த்தொழில்" என்றது 'கிரியை' என்றவாறு. "சகத் தொழில்" என்பது, 'உலகியலோடு ஒத்த மார்க்கம்' என்னும் பொருட்டாய்ப் பல முகமன் செயல்களை உணர்த்திற்று. இரண்டு - அகம், புறம் 'இரண்டினும் ஆவது அகன்று' என்க. 'சகமார்க்கம்..... இரண்டும் அகன்று..... தேவியோடு ஒன்றல்' என இயையும்.*

*இதனால், கிரியை சற்புத்திர மார்க்கம் ஆமாறு ஏனையவற்றோடு வைத்துக் காட்டி விளக்கப்பட்டது.*

***1476. தெளிவுரை :-** அருக்கிய, பாத்திய, ஆசமனாதி முகமன்களைச் செய்தலும், தோத்திரம் சொல்லலும், திருமேனியைக் கண்ணை இமை காத்தல்போலப் பேணிக் காத்தலும், வழிபாட்டு முடிவில் மந்திரத்தைப் பலமுறை கணித்தலும், பசி தாகம் முதலிய வற்றைப் பொறுத்துக் கொண்டு, செயல்களை விரையாது அமைந்து செய்தலும், உண்மையே பேசலும், காம வெகுளிகளாகிய மனக் குற்றங்கள் இல்லாதிருத்தலும், அன்போடு படைக்கப்படுகின்ற அன்னம், பெரிதும் உதவுகின்ற நீர் என்பவற்றையும் செயலாலும், பாவனையாலும் மிகத் தூயன ஆக்குதலும், மற்றும் இன்னோரன்ன செயல்கள் பலவும் அன்போடும், ஆர்வத்தோடும் செய்யப்படுதலால், கிரியை குற்றம் அற்ற சற்புத்திர மார்க்கம் ஆகின்றது.*

***குறிப்புரை :-** ''உற்றநோய் நோன்றல்'' (திருக்குறள்-291) முதலியவற்றை வாளா செய்யாது வழிபாடு பற்றிச் செய்தலை, "நற்றவம்" என்றார். 'இட்ட' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'இடுதல்' என்பது 'படைத்தல்' என்னும் பொருட்டாய் "அன்னம்" என்பதனோடும், 'உதவுதல்' என்னும் பொருட்டாய் ''நீர்'' என்பதனோடும் இயைந்தது. சிறப்புடைய இவ் இரண்டற்கும் நேசித்தல் கூறவே, பிறவற்றிற்கும் அஃது உண்மை தானே பெறப்பட்டது. ''அன்னமும்'' என்னும் சிறப்பும்மை ''நீர்'' என்பதனோடும் இயையும். அதனால், பிறவும் சுத்தி செய்யப்படுதல் தானே அமைந்தது. சுத்திகளை ஐந்தாகக் கிரியாபாதம் கூறும். அவை:*

**1477.** அறுகால் பறவை அலர்தேர்ந் துழலும்
மறுகா நரைஅன்னம் தாமரை நீலம்
குறுகா நறுமலர் கொய்வன கண்டும்
சிறுகால் அறநெறி சேரகி லாரே. **3**

---

*'பத சுத்தி, தான சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி' என்பன. இவற்றின் இயல்பெல்லாம் கிரியை பற்றிய நூல்களிற் கண்டு கொள்க.*

*இதனால், இவையெல்லாம் அன்பின் வெளிப்பாடாக நிகழ்தலால், கிரியை சற்புத்திர மார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1477. *தெளிவுரை :-*** *'அறுகாற் பறவை' எனப்படுகின்ற வண்டுகள் தேன் உள்ள மலர்களையே தேடித் திரியும்; வெறும் மலர்களை அணுக மாட்டா. வெண்ணிறத்தையுடைய அன்னப் பறவைகள் தாமரை மலரையே விரும்பியடையும்; நீலப் பூவை அடையமாட்டா. அவை போலச் சிவ வழிபாடு செய்வோர் சிவனுக்கு உவப்பாகின்ற நல்ல மலர்களையே பறிப்பர்; பிற மலர்களைப் பறியார். இவற்றையெல்லாம் நேரிற் கண்டும் நல்லறிவில்லாதார் இளமைக்காலத்திற்றானே சிவனை வழிபட்டு சிவபுத்திரராய் விளங்கும் வழியை அறிகின்றிலர்.*

***குறிப்புரை :-*** *"அலர்" என்பது, இசையெச்சத்தால், 'தேன் நிறைந்த மலர்' எனப்பொருள் தந்தது. 'அன்னம் தாமரையைக் கண்டு மறுகா; நீலம் குறுகா' எனக் கூட்டுக. மறுகுதல் - வருந்துதல்; வெறுத்தல். அஃது இன்மை விரும்புதலை உணர்த்திற்று. "அரன் நெறி சேரகிலார்" எனப் பின் வருதலின், நறுமலர் கொய்வார் அந்நெறியைச் சேர்ந்தோராதல் அறியப்படும். "சிறுகால்" என்பது 'முன் நேரம்' எனப் பொருள் தந்து இளமைப் பருவத்தைக் குறிக்கும்.*

*"கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்*
*துரும்பெழுந்து வேங்கால் துயராண் டுழவார்"* *- (நாலடி. 35)*

*என்பதனானும் அறிக. 'சிவ புத்திரராதற்கு இளமைப் பருவம் மிக ஏற்புடைத்து' என்றற்கு, 'சிறுகால் சேரகிலார்' என்றார்.*

*"முன்னடைந்தான் சம்பந்தன்" (தி.2 ப.40 பா.11) என ஞான சம்பந்தர் தாமே அருளியவாறும், சேய்ஞலூர் பிள்ளையாரும் அங்ஙனமே ஆயினவாறும், "முன் இளங் காலத்திலே பற்றினேன்"*

**1478.** அருங்கரை யாவ தரனடி நீழல்
பெருங்கரை யாவது பிஞ்ஞகன் ஆணை
வருங்கரை ஏகின்ற மன்னுயிர்க் கெல்லாம்
ஒருங்கரை யாய்உல கேழின் ஒத்தானே. **4**

---

*(தி.11 கபிலர் இரட்டை 12) எனப் பிறரும் அருளியவாறும் இங்கு நினைவு கூரத்தக்கன.*

*இதனால், கிரியை இளமைக் காலத்தேயும் கொள்ளத் தக்கதாய்ச் சற்புத்திர மார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1478.** *தெளிவுரை :-* *பிறவிக் கடலுக்கு காணுதற்கு அரிய கரையாய் உள்ளது அரனது திருவடி நிழலே. உலகில் உயிர்கள் ஒழுக வேண்டிய நெறிமுறையாகச் சொல்லப்படுவது அவனது ஆணையே. அவ்வாணையின்வழி அவனது திருவடி நிழலாகிய கரையை நோக்கிச் செல்கின்ற உயிர்கள் பலவற்றிற்கும் தொகை நிலையாய் அமைந்த ஒரு பேரரசினை உடையவனாய், அனைத்துலகின் மேலும் கோட்டம் இன்றி ஒருபடித்தான கருணையையே யுடையவனாய் அரன் இருக்கின்றான்.*

*குறிப்புரை :- ஆகவே, 'உயிர்கள் யாவும் அவ்வரசன் மைந்தரே யாய் இருந்தும், அதனை அறியாமல் மயங்குகின்றன' என்பதாம்.*

*"மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி*
*வளர்ந்தவனை யறியாது"* **- (சிவஞான சித்தி. சூ.8.1)**

*என்றமை காணத்தக்கது. 'உயிர்களாகிய மைந்தர்க்கெல்லாம் பெரு நிலையையும், பெருநலத்தையும் தருகின்ற பேரரசத் தந்தை அரன்' என்பது கூறுவார், 'அவனது திருவடி நிழலே உயிர்கள் அடையும் இடம்' என்பதும் அதனை அடையுமாறும் உடன் கூறினார். 'அவ்வடி நீழல்' என்பது பாடமன்று. 'பெருங்கரை' என்பதில் கரை, 'வரம்பு' என்னும் பொருளாய், ஒழுகும் நெறியைக் குறித்தது. அந்நெறியை இறைவன் தன் ஆணையாக வகுத்து வைத்திருத்தலை இரண்டாம் அடியிற் குறித்தார்.*

*''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி'' (திருக்குறள், 6) எனத் திருவள்ளுவரும் கூறினார். 'அரசாய்' என்பது,*

**1479.** உயர்ந்தும் பணிந்தும் முகந்தும் தழுவி
வியந்தும் அரனடிக் கேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயன்அது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மையன் யாமே. 5

---

*'அரைசாய்' எனப் போலியாய்ப் பின், 'அரையாய்' என நின்றது.*

*இதனால், எஞ்ஞான்றும் உயிர்கள் இறைவன் மைந்தராய் இருக்கும் உரிமையுடைமையின் கிரியை இளமைக் காலத்தில் மறந்தொழியினும் பின்னராயினும் அறிந்து மேற்கொள்ளுதற்கு உரித்தாய்ச் சற்புத்திர மார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1479. *தெளிவுரை :-*** *அரனது திருவடிகளின் நேரேநின்றும், வீழ்ந்தும், மனம் விரும்பியும், கைகளால் பிடித்தும், புகழ்ந்தும் முறைப்படி வழிபாடு செய்யுங்கள். அம்முறையீடு உலகப் பயனையும் தருவதாயினும், மானுடப் பிறப்பின் பயனாகிய வீடு பேற்றைத் தருவது அஃது ஒன்றே, ஆதலின், அதனை மேற்கொள்ள அஞ்சி ஒழிவாரிடத்தில் குற்றம் வந்து தங்குவதாம்.*

***குறிப்புரை :-*** *"தழுவி" என்புழியும் எண்ணும்மை விரிக்க. "முறை" என்பது அதன் வழிப்பட்ட செயலைக் குறித்து. 'விதி' என ஓதினுமாம். பிறவற்றைப் பயந்தும், என்பது "பிறவிப் பயன்" என்றதனால் போந்தது. ஈற்றடியைப் பிறவாறும் பாடம் ஓதுவர்.*

*இதனால், கிரியை இறைவன் மைந்தராகிய மக்கட் பிறப்பினர் யாவரும் தவறாது மேற்கொள்ளற்பாலதாய்ச் சற்புத்திர மார்க்கமாதல் கூறப்பட்டது.*

*"யாவர்க் குமாம்இறை வற்கொரு பச்சிலை"* ***-தி.10.பா.251***

*என இந்நாயனாரும்,*

*"உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணாராகில்.....*
*பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே"*

***-தி.6.பா.95பா.6***

*என்று திருநாவுக்கரசு நாயனாரும் அருளினமை அறிந்து போற்றற் குரியது.*

**1480.** நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்தன்னை
என்றுந் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்
துன்றுமலர் தூவித் தொழுமின் தொழுந்தொறுத்
சென்று வெளிப்படும் தேவர் பிரானே. **6**

**1481.** திருமன்னு சற்புத்திர மார்க்கச் சரிதை
உருமன்னி வாழும் உலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங்கை கூம்பத் தொழுது
இருமன்னு நாடோறும் இன்புற் றிருந்தே. **7**

---

*"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம்விரும்பும்
உண்மை யாவது பூசனை என உரைத்தருள"*

*-தி.12 திருக்குறிப்பு, 51*

*என்றே சேக்கிழாரும் கூறினார்.*

**1480.** *தெளிவுரை :-* எம் பெருமானாகிய சிவனை யான் அவன் முன்னே, நின்றும், கீழே வீழ்ந்தும் மிகுந்த மலர்களைத் தூவி வணங்குவேன். இஃது ஒருகாலத்தில் மட்டுமன்று; எக்காலத்துமாம். இவ்வாறு தொழுவாரிடத்தில் அவர் தொழுந்தோறும் தேவர் தலைவனாகிய சிவபிரான் சென்று வெளிப்பட்டு நிற்பான். அதனால், நீங்களும் அவனை அவ்வாறு வணங்குங்கள்.

*குறிப்புரை :-* தம்மை அடுத்தார்க்கு மலர் தூவித்தொழுமாறு பணித்தமையால், தாமும் அவ்வாறு தொழுதல் பெறப்பட்டது. "என்றும்" என்றது, 'யோக ஞானங்கள் கைவந்த பின்னும்' என்றவாறு.

இதனால், கிரியை, சிவனை வெளிப்படக் காணும் பயனைத் தருவதாய்ச் சகமார்க்க சன்மார்க்கங்களை அடைந்தோர்க்கும் ஒழியலாகாத சற்புத்திர மார்க்கமாதல் கூறப்பட்டது. இந்நாயனார் இம்மந்திரத்தில் தம் செய்கையை எடுத்துக் கூறினமையே இதற்குப் போதிய சான்றாகும். மற்றும் "புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க" (சிவஞான. சித்தி., சூ. 9.11) என்றற்றொடக்கத்தனவாகச் சாத்திரங்களிலும், வரும் உரையளவைகளும், நால்வர் ஆசிரியர் முதலியோரது ஒழுகலாறுகளுமாகிய சான்றுகள் பலவும் நோக்கி உணர்க.

**1481. *தெளிவுரை :-*** *மக்கள் உடம்பிற் பொருந்தி வாழ்கின்ற உலகத்தவரே! சிவனாகிய தந்தைதன் செல்வத்தில் பொருந்தி வாழ்தற்குரிய சற்புத்திர மார்க்கத்தின் மரபினைக் கூறுகின்றேன்; கேளுங்கள். பிறவிக்கு ஏதுவாய் நிலைபெற்றிருக்கின்ற ஆணவ மலம் தனது செயல் மடங்கி நிற்குமாறு உங்கள் இருகைகளும் ஒன்றாய்ச் சேர்ந்து குவியும்படி சிவனைத் தொழுது, என்றும் இன்பத்திலே பொருந்தியிருங்கள்.*

***குறிப்புரை :-*** *"கைகூம்ப" என்பதனை இரட்டுற மொழிந்து பாசத்திற்குச் 'செயல் மடங்க' எனவும், தொழுவார்க்கு, 'கைகள் குவிய' எனவும் உரைத்துக் கொள்க. கை செயலாதல், 'கையறுதல்' என்னும் சொற்பற்றியும் அறியப்படும். ஆணவம் செயல் மடங்குதல் ஆவது, தன் சத்தி மடங்கி நிற்றல். தொழுதல், மலர் தூவித் தொழுதலாம். இதனை, "கைகாள் கூப்பித் தொழீர்;- கடி - மாமலர் தூவி நின்று" (தி.4. ப.9 பா.7) என்பதனாலும் அறிக. 'இது செய்யாதார் வாளா பொழுது போக்குபவராவார்' என்பதை,*

> *தொழுது தூமலர் தூவித் துதித்துநின்*
> *றழுது காமுற் றரற்றுகின் றாரையும்*
> *பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்*
> *எழுதும் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே.*
>
> ***- தி.5 ப.21 பா.8***

*என்னும் நாவுக்கரசர் திருமொழியால் உணர்க. ஈற்றடியில் உள்ள 'மன், உம்' அசைகள். "உற்றிருந்து" என்பது ஒரு சொல்.*

*இதனால், சற்புத்திர மார்க்கத்து முறையும், பயனும் சுருங்கக் கூறி, அது வலியுறுத்தப்பட்டது.*

## 12. தாச மார்க்கம்

*இது முதல் ஐந்து மந்திரங்களால் சரியை தாச மார்க்கம் ஆமாறு உணர்த்துகின்றார்.*

**1482.** எளியநற் றீபம் இடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுகல் அதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ்சன மாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே. 1

**1483.** அதுவிது ஆதிப் பரமென்று அகல்வர்
இதுவழி சென்றங்கு இறைஞ்சின ரில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடும்
அதுவிதி நெஞ்சில் தணிக்கின்ற வாறே. 2

---

**1482.** *தெளிவுரை :- திருக்கோயிலில் விளக்கிடுதல், மலர்களைக் கொய்து கொடுத்தல், தொடுத்துக் கொடுத்தல், அலகிடல், மெழுகல், துதி பாடல், ஊர்தி சுமத்தல், பலவகைத் திருமஞ்சனப் பொருள்களைக் கொணர்ந்து கொடுத்தல் முதலிய எளிய பணிகளைச் செய்தல், தாச மார்க்கம், தொண்டர் நெறியாகும்.*

*குறிப்புரை :- "எளியன" என்பதை ஈற்றடியின் முதலிற் கூட்டி உரைக்க. எளிமையாவது, மன ஒருக்கம், பொறியடக்கம் முதலியன செய்ய வேண்டாமை. தளி - கோயில். இதனைக் குறிக்கும் "அது" என்னும் சுட்டுப்பெயர் செய்யுளில் முன் வந்தது. தூர்த்தல் - குப்பைகளைப் போக்கல்; அஃதாவது அலகிடல். பள்ளி - இருக்கை. சிவிகை முதலிய ஊர்திகள்; இஃது இடைக் குறைந்து நின்றது. அதற்குரிய பணியாவது சுமத்தல். 'தளித்தொழில்' என்பதில் தகரவொற்றுத் தொகுத்தல் பெற்றது. "தான்" என்பது கட்டுரைச் சுவைபட நின்று, 'புறத்தொழில் மாத்திரையால் சேய்மையில் நின்று செய்தலால் சரியை தாச மார்க்கமாயிற்று' என்பது விளக்கி நின்றது.*

*இதனால், 'சரியைத் தொண்டாவன இவை' என விளக்கும் முகத்தால், சரியை தாசமார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1483.** *தெளிவுரை :- 'அந்தத் தெய்வம் முதற்கடவுள், இந்தத் தெய்வம் முதற்கடவுள்' என்று பலவான எண்ணங்களைக் கொண்டு பலர் சிவனை அடையாது நீங்குவர். அதனால், 'சிவனை அடைவதே உய்யும் நெறி' என்று தெரிந்து, அவனை வணங்குவார் அரியர்.*

**1484.** அந்திப்பன் திங்கள் அதன்பின்பு ஞாயிறு
சிந்திப்பன் என்றும் ஒருவன் செறிகழல்
வந்திப்பன் வானவர் தேவனை நாடொறும்
வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. **3**

---

*'எல்லாத் தேவர்க்கும் தலைவன் சிவபெருமான்' என்பது வேதாகமங்களை உணரின் தெளிவாம். ஆதலால், அம்முறையே சென்று அவனையே விரும்பி அடையுங்கள். அவ்வாறு அடையும் முறையே மக்கள் உள்ளத்தில் பொருந்தி நிற்கும்படி ஆன்றோர் உணர்த்துகின்ற நெறியாகும்.*

***குறிப்புரை :-*** *"வேந்தனை" என்பது பின்னர் வருதலால், வாளா, "இறைஞ்சினரில்லை" என்றார். "வேந்தன்" என்றது, முன் 'அது, இது' எனச்சுட்டிய தெய்வங்கட்கு வேந்தனை என்றவாறு. "விதி" என்றது, சிறப்புப்பற்றி வேதாகம விதியையே குறித்தது. 'அதன் வழியே சென்று நாடும்' என்றதனால், அது சிவனே வேந்தனாதலை இனிது விளக்கி நிற்றல் பெறப்பட்டது. ஈற்றடியைப் பிறவாது ஓதுவன பாடம் அல்ல.*

*இதனால், 'சிவனுக்குரிய தொண்டுகளைச் செய்தலே, தொண்டர் நெறி' என்பது ஆன்றோர் துணிபாதலை விளக்கும் முகத்தால், சரியையே தாசமார்க்கமாதல் கூறப்பட்டது.*

**1484. *தெளிவுரை :-*** *நான் முதலில் இடநாடியின் வழியும், பின்பு வலநாடியின் வழியும் பிராண வாயுவை அடக்கியும், விட்டும் ஒப்பற்ற ஒருவனாகிய சிவனது திருவடிகளை என்றும் தியானிப்பேன். பின்பு அவனைப் புறத்திலும் சில இடங்களில் கண்டு வழிபடுவேன். இவை எல்லாமும் இங்குக் கூறிய தாசமார்க்கத்தில் இயன்றன.*

***குறிப்புரை :-*** *அந்தித்தல் - அடக்குதல். இதனை, "ஞாயிறு" என்பதற்கும் கூட்டுக. திங்கள் - சந்திர கலை. ஞாயிறு - சூரிய கலை. 'மந்திர செபம், தியானம்' என்பவையும் பிராணாயாமத்தோடு கூடிய வழிச் சிறந்து நிற்றலை முதல் இரண்டடிகளில் கூறியவாறு, புறத்தே சிவனை வழிபடும் இடங்களில் ஞாயிற்று மண்டலம் இங்கு முதற்கண் கொள்ளத்தக்கது. வகை, தாசமார்க்கமாதல் அதிகாரத்தால் பெறப்பட்டது. சரியையாகிய தாசமார்க்கத்தில் நிற்போர் சமயதீக்கை பெற்று மூல மந்திர செபம், சதாசிவத் தியானம். கதிர் வழிபாடு என்பவற்றை நாள்தோறும் தவறாது செய்வராயின், அவரது சரியைத் தொண்டு பொதுவாய் ஒழியாது சிறப்பாய் விளங்கிப் பயன் தரும் என்றவாறு.*

**1485.** அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி
உன்னுவர் உள்மகிழ்ந்து உள்நின் றடிதொழக்
கண்ணவன் என்று கருது மவர்கட்கு
பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. 4

**1486.** வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்
பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்

---

1485. ***தெளிவுரை :-*** *சிவனைத் தேவர்கள் ஆயிரம் பெயர்களைச் சொல்லி உளம் மகிழ்ந்து போற்றித் தியானிப்பர். அவர் அவன்பாலே நின்று அங்ஙனம் செய்யினும், அவன் தன்னைத் தமக்குக் கண்போலச் சிறந்தவன் எனக் கருதி, அன்பும், ஆர்வமும் கொண்டு வழிபடுகின்ற அடியவரது உள்ளத்தில் நீங்காது நின்று, அவர்கள்பாலே பேரருள் உடையவனாகின்றான்.*

***குறிப்புரை :-*** *தேவர்கள் ஆயிரம் பெயர்களைச் சொல்லிப் போற்றுதலை,*

*"பேரா யிரம் பரவி வானோர் ஏத்தும் - பெம்மானை"*
*- தி.6 ப.54 பா.8*

*என அப்பரும் எடுத்தோதியருளினார். தேவர்கள் எத்துணைப் பணி வுடையராயினும், 'யாம் தேவர்' என்னும் செருக்கு முற்றிலும் நீங்கப் பெறாமையின், அச்செருக்குச் சிறிதும் இல்லாத அடியார்களிடத்தே சிவன் மிக்க கருணையுடையவனாய் இருக்கின்றான் என்பதாம்.*

*"கனவிலும் தேவர்க் கரியாய் போற்றி*
*நனவிலும் நாயேற் கருளினை போற்றி"*
*- தி.8 போற்றித். 143-44*

*"தேவர் கனாவிலும் கண்டறியாச்*
*செம்மலர்ப் பாதங்கள்"*
*- தி.8 திருப்பொற். 16*

*என்பனவற்றையும் நோக்குக. 'உள்மகிழ்ந்து உன்னுவர்' என மாற்றிக் கொள்க. 'தொழவும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. தேவ இனத்தராய் அருகணைதல் பற்றி "உள்நின்று" என்றார். "பண்ணவன்" என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது. இரண்டாம் அடி இன எதுகை.*

*இதனால், சிறப்பு நிலைத் தாசமார்க்கமும் செருக்கு நீங்கி*

மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை
நேசித் திருத்த நினைவறி யாரே. 5

---

*அன்போடு கூடிய வழியே பெரும் பயன் தருவதாதல் கூறப்பட்டது.*

1486. ***தெளிவுரை :-*** *சிவபெருமானது புகழைக் கூறும் நூல்களை ஓதுதல், இயன்ற வகையில் சிவனை வழிபடுதல், மலர் கொய்து கொடுத்தல் முதலிய தொண்டுகளைச் செய்தல் என்னும் இவை போல்வனவற்றைச் செய்யினும், கல் வந்து விழப்பட்ட பாசிக் குளம் அக்கல்வீழ்ச்சியின் வேகம் உள்ள துணையும் பாசி நீங்கி நின்று, பின் பாசியுடையதாய் விடுதல் போல, மனத்தின் இயல்பை ஆராயுமிடத்து அத்தொண்டுகளில் ஈடுபடும் துணையும் அஃது ஐம்புல ஆசையின் நீங்கி நின்று, பின் அதனை உடைத்தாய்விடும். அப்பொழுது மக்கள் சிவன்பால் அன்பு கொண்டிருக்கும் நிலை இல்லாதவராவர்.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், புறத்தொண்டு இல்லாதபொழுதும், செபம், தியானம் என்ற இவற்றை யுடையராதல் யாவர்க்கும் நன்று' என்பது குறிப்பெச்சம். "பாசிக் குளத்தில் வீழ் கல்லாம் மனம்" என்றாராயினும், 'கல்வீழ் பாசிக் குளமாம் மனம்' என மாற்றியுரைத்தல் கருத்தென்க.*

*"பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்*
*படும்பொழுது நீங்கி அது விடும்பொழுதிற் பரக்கும்"*

*என்றார் சிவஞான சித்தியிலும் (சூ-8, 39). இரண்டாம் அடியிறுதியில் 'அவ்விடத்து' என்னும் சொல்லெச்சம் வருவிக்க.*

*இம்மந்திரம் பின்வருமாறும் ஓதப்படுகின்றது.*

*"வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்*
*பாசக் கிணற்றினில் வீழ்கின்ற பாவிகாள்*
*மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை*
*நேசித் திருக்க நினைவறி யீரே"*

*இது கொள்ளப்படுமாயின், இரண்டாம் அடியை முதல் அடியாகக் கொண்டு ஓதிக் கொள்ளுதல் நன்று.*

*இதனால், 'சிவனை எஞ்ஞான்றும் மறவாதிருக்க முயலல் வேண்டும்' என்பது, இறுதிக்கண், நான்குமார்க்கத்திற்கும் பொதுமையாக வைத்துக் கூறப்பட்டது.*

## 13. சாலோக மாதி

*மேல் 'சரியை' முதலிய பெயர்களாலும், 'சன்மார்க்கம்' முதலிய பெயர்களாலும், கூறப்பட்ட நான்கு நெறிகளது பயன் உணர்த்துவான் தொடங்கி, முதற்கண் இரண்டு மந்திரங்களால் அவற்றைத் தொகுத்து உணர்த்துகின்றார்.*

**1487.** சாலோகம் ஆதி சரியாதி யின்பெறும்
சாலோகம் சாமீபம் தங்கும் சரியையால்
மாலோகம் சேரில் வழிஆகும் சாரூபம்
பாலோக மில்லாப் பரனுரு ஆமே. 1

---

**1487.** *தெளிவுரை :- சாலோகம் முதற் பயன் அது சரியையாகிய முதல் நெறியாற் பெறப்படுவதாகும். கிரியையாகிய நெறியால் அந்தச் சாலோகப் பயனில் சாமீபப்பயன் உண்டாகும். சாலோகத்தில் சாமீபம் கிடைத்தால் அதன் பின் சாரூபம் வரும். முடிவாக விரிந்த பல உலகங்களில் யாதொன்றிலும் இல்லாது பரசிவத்தோடே ஒன்றாகின்ற பயன் கிடைப்பதாம்.*

*குறிப்புரை :- 'லோகம்' என்பது சிறப்புப் பற்றிச் சிவலோகத்தையே உணர்த்தலின், 'சாலோகம்' என்பது சிவலோகத்தை அடைந்து அங்கு எவ்விடத்தும் செல்லும் உரிமையைப் பெறுதலாம். "பெறும்" என்றது, 'பெறப்படும்' என்றதாம். ஏனைச் சாமீப சாரூபங்களும் அவ்வுலகத்தில் பெறும் பயனேயாதலின், அவற்றை, ''சாலோகம் தங்கும்'' எனவும், "மாலோகம் சேரில் ஆகும்" எனவும் கூறினார். இரண்டாம் அடியில், 'சாலோகத்துக்கண்' என உருபு விரித்துக் கொள்க. இவ்வடியில், 'சரியையால்' என்பது பாடம் அன்று. மூன்றாம் அடியிலும் அவ்வாறே 'மாலோகத்துக்கண்' என உருபு விரித்துக் கொள்க. மாலோகம் - பெரிய உலகம்; சிவலோகம் "சேரில்" என்பதற்கு, 'சாமீபம்' என்னும் வினைமுதல் மேலையடியினின்றும் வருவிக்க. வழி- பின்பு. பரன் - பரசிவன். அவன் உரு ஆதல், அவனோடு ஒன்றாதலாம். இதுவே சாயுச்சம். "வழி ஆகும்" என்றதனால் 'அஃது யோகத்தால் வரும்' என்பது பெறப்பட்டது. படவே எஞ்சி நின்ற ஞானத்தின் பயனே சாயுச்சமாதல் விளங்கிற்று' சாயுச்சம் - இரண்டறக் கலத்தல். சாலோக முதலிய பயன்கள் மூன்றும் முறையே பணியாளர், மைந்தர், தோழர் என்னும் இவர்கட்கு உள்ள உரிமையோடொத்தலின், சரியை முதலிய மூன்றும் முறையே*

**1488.** சமயம் கிரியையில் தன்மனம் கோயில்
சமய மனுமுறை தானே விசேடம்
சமயத்து மூலந் தனைத்தேறல் மூன்றாம்
சமயாபி டேகம் தானாம் சமாதியே. **2**

---

*'தாசமார்க்கம் சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம்' எனவும் சாயுச்சமே சிறந்த பயனாகலின் ஞானம் 'சன்மார்க்கம்' எனவும் பயன் பற்றிப் பெயர் பெற்றன என்றார் சிவஞான போத மாபாடியம் உடையார்.*

*இதனால், சரியை முதலிய நாானெறியின் பயன் சாலோகம் முதலிய நான்குமாதல் கூறப்பட்டது.*

**1488. *தெளிவுரை :-*** *தீக்கைகளில் சமயதீக்கை சிவனை மனத்தால் நினைக்கப் பண்ணும். விசேடதீக்கை சைவ சமய மந்திரங்கள் பலவற்றை பல முறையில் பயிலப் பண்ணும். மூன்றாவதாகிய நிருவாண தீக்கை சைவ சமயத்தின் முதற்பொருளாகிய சிவனது பெருமையை உள்ளவாறுணர்ந்து, 'அவனே முதற்கடவுள்' எனத் தெளியப் பண்ணும். சைவ அபிடேகம் தான் சிவமாயே நின்று பிறர் சிவனது திருவருளைப் பெறும் வாயிலாய் விளங்கப் பண்ணும்.*

***குறிப்புரை :-*** *இங்கு, "கிரியை" என்றது, சிவனது கிரியா சத்தியின் செயற்பாடாகிய தீக்கையை. இதனை முதலில் வைத்து, எல்லா வற்றோடும் கூட்டி உரைக்க. மனத்தைக் கோயிலாக்குதலாவது, சிவனைப் புறத்தில் பல வடிவங்களில் கண்டு தொழுதல் மாத்திரையான் அன்றி, தியானிக்கும் நெறியைத் தருதல். இதனை 'அனுட்டானம்' என்ப. பல மந்திரங்களைப் பல வகையில் பயிலல் எனவே, 'கிரியை, யோகம்' என்னும் இரண்டும் அடங்கின. தான் சிவமாய் நின்று, பிறரும் திருவருள் பெறுதற்கு வாயிலாவது ஞானாசிரியனாய் விளங்குதலாம். 'சரியை முதலிய நான்கும் சமயம் முதலிய தீக்கைகளால் இங்ஙனம் ஒன்றின் ஒன்று உயர்ந்த நிலைமை உடைய ஆதலின், பின்னர் அவற்றால் விளையும் பயனும் அன்னவாயின' என்றவாறு.*

*இதனால், மேற்கூறிய நெறிகட்கும், அவற்றின் பயன்கட்கும் உளவாய இயைபு கூறப்பட்டது. அபிடேகம் பெறாதோரும்*

## 14. சாமீபம்

*இறையுலகம் அடைந்தவன் இறைவனுக்கு அருகிலே இருக்கும் பேற்றைப் பெறுதல்*

**1489.** பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
பாசம் அருளான தாகும்இச் சாமீபம்
பாசம் சிரமான தாகும்இச் சாரூபம்
பாசம் கரைபதி சாயுச் சியமே. **3**

---

*ஞானியராய்ச் சாயுச்சம் பெறுவராயினும், அவரினும் ஆசிரியராய் விளங்கினோர் பிறரையும் உய்விக்கும் சிறப்புடையர் என்றற்கு அவரையே சாயுச்சம் பெறுவார்போலக் கூறினார்.*

**1489. *தெளிவுரை :-*** *சாலோகம், மாயா கருவிகள், 'தாமே உயிர் என்று உயிரை மருட்டி அதனை தம் வயப்படுத்தியிருந்த நிலை நீங்கித் தாம் அதனின் வேறாய சடங்களாதலைத்தோற்றி, அதன்வயப்பட்ட நிலையை உடையது. சாமீபம், அக்கருவிகள் அருள்வயப்பட்டதாய் உயிர் இறைவனை அணுகுதற்குத் துணைசெய்து நிற்கும் நிலையை உடையது. சாரூபம், அக்கருவிகள் சிவமயமாய் உயிருக்குச் சிவானந்தத்தைத் தரும் நிலையை உடையது. சாயுச்சம், அக்கருவிகள் யாவும் கழிய, உயிர் தான் நேரே சிவனைக் கூடியிருக்கும் நிலையை உடையது.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியில், 'சிரமானது' என்பது பாடம் அன்று. "பதி" என்பது, 'பதியோடு ஒன்றாய் இருக்கும் நிலை' எனப் பொருள்பட்டு, 'பழம் உதிர்ந்த கோடு' என்பது போல நீக்கப் பொருட்டாய வினைத் தொகையாய்க் ''கரை'' என்பதனோடு தொக்கது. "ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள" (தி.12 தடுத்தாட், 106) என்ற அனுபவநிலை. பாசம் அருளானதாதலை ஓர்ந்துணர்ந்துகொள்க.*

*இதனால், சரியை முதலியவற்றின் பயனாய சாலோகம் முதலிய நான்கின் இயல்பு வேற்றுமை கூறப்பட்டது.*

## 15. சாரூபம்

*'சாலோகம் முதலிய நாற் பயன்களுள் கீழ்ப்பட்ட முதல் இரண்டற்கும் மேற் பொதுவகையால் தொகுத்துக் கூறியனவே அமையும்' என விடுத்து, மேம்பட்ட ஏனை இரண்டனுள் சாரூபத்தை இரண்டு மந்திரங்களால் சிறப்பாக வகுத்தும் கூறுகின்றார்.*

**1490.** தங்கிய சாரூபந் தான்எட்டாம் யோகமாம்
தங்கும் சன்மார்க்கம் தனிலன்றிக் கைகூடா
அங்கத்து உடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக இழிவற்ற யோகமே. 1

**1491.** சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகும் சராசரம் போலப்

---

**1490.** தெளிவுரை :- *சாலோக சாமீபங்கட்கு மேலே பொருந்தியுள்ள சாரூபம் அட்டாங்க யோகங்களுள் எட்டாம் நிலையாகிய சிவ சமாதி கைவரப் பெற்றோர்க்கே கிடைப்பதாம். அந்தச் சாரூப நிலையினராய முதிர்ந்த யோகியர்க்கு அல்லது அதற்கு மேலே உள்ள சன்மார்க்கமாகிய ஞானம் உண்டாகமாட்டாது. மேலும் அட்ட அங்கங்களும் நிரம்பிய இந்த யோகத்தாலே காய சித்தியும் உண்டாகும். அதனால், இம்மையில் காய சித்தியும், மறுமையில் சாரூபமும் பெறுபவரே குறைவற்ற யோகத்தைப் பெற்றவராவர்.*

குறிப்புரை :- *'எட்டாம் யோகத்தால்' எனவும், 'அங்கத்தால்' எனவும் உருபு விரித்துக் கொள்க. "அங்கம்" என்றது அவற்றை முற்ற உடைய யோகத்தைக் குறித்த ஆகுபெயர். ''தனில்'' என்றது, யோகத்தையே குறித்தது, 'ஆவர்' என ஓதற்பாலதனை, "ஆக" என விதியாக ஓதினார். அன்றி 'ஆவர்' என்றே பாடம் ஓதலுமாம்.*

*இதனால், சாரூபம் வருமாறும், அவ்வாற்றானே பிற பயன்கள் கிடைத்தலும் கூறப்பட்டன. ''சன்மார்க்கம் தனில் அன்றிக் கை கூடாது" என்றதனால், 'சரியை முதலிய மூன்றற்கும் உண்மைப் பயன் ஞானமே' என்பதும், 'சாலோகம் முதலியவை இடைநிலைப் பயன்களே' என்பதும் போந்தவாறு அறிந்துகொள்க.*

**1491.** தெளிவுரை :- *பொன்மலையைச் சார்ந்த சராசரங்கள் யாவும் பொன்னேயாய் விளங்குதல்போல், திருக்கயிலாய மலையில்*

**பயிலும் குருவின் பதிபுக்க போதே**
**கயிலை இறைவன் கதிர்வடி வாமே. 2**

---

*கல்லால நிழலில் தென்முகக் கடவுளாய் நீங்காதிருந்து ஞான நெறியைத் தக்கார் வழியாக உலகிற்கு என்றும் அளித்து வரும் சிவபிரான் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானது உலகத்தை அடைந்த யோகிகளது உருவம் கயிலையில் மேற்கூறியவாறு வீற்றிருந்தருள்கின்ற பெருமானது ஒளி பொருந்திய உருவத்தோடு ஒத்த உருவமேயாகிவிடும்.*

*குறிப்புரை :- உவமை, "கதிர்வடிவாம்" என்பது அதனோடு ஒன்றேயாய் அதுவாகிவிடாது, அதனோடு ஒத்ததாம் என்பது விளக்கி நின்றது. 'லோக சயிலத்தினை' என மாற்றி உரைக்க. 'அச்சயிலம தாகும்' எனச் சுட்டியுரைக்க. உலோகம், இங்கு, பொன். முன்னர், "பொற் சயிலம்" என்றதனால், பின்னர், 'அச்சயிலம்' என்பது, 'பொன்' என்னும் பொருட்டாய் நின்றது. பொன் மலையைச் சார்ந்தன யாவும் பொன்னாய் விளங்குதலை,*

*"கனக மலையருகே - போயின காக்கையும்*
*அன்றே படைத்தது பொன்வண்ணமே" - தி.10 பா. 100*

*என்னும் பொன்வண்ணத் தந்தாதியானும் அறிக. "புக்க போதே" எனப் பொதுப்படக் கூறினாரேனும், யோகத்தால் ஒன்றிப் புக்க பொழுது' என்பது, "சார்ந்த பொழுதே" என்ற உவமையிற் போந்த சார்ச்சி வகையால் பெறப்பட்டது. படவே, கதிர்வடிவாதல் அவரது உருவமேயாதல் விளங்கிற்று. இவ்வுலகரும் தன் உலகத்தை அடைதற் பொருட்டுச் சிவபெருமான் அருள்புரியுமாற்றை உணர்த்தற்கு, "பயிலுங்குருவின் பதி" எனவும், "கயிலை இறைவன்" எனவும் அருளிச் செய்தார்.*

*"மண்ணுல கிற்பிறந்து - நுமை - வாழ்த்தும் வழியடியார்*
*பொன்னுல கம்பெறுதல் - தொண்ட - னேன்இன்று*
*கண்டொழிந்தேன்"*
*- தி.7 ப. 100 பா.5*

*என்று அருளிச் செய்ததும் காண்க.*

*இதனால், சாரூபத்தினது இயல்பு உவமையின் வைத்து விளக்கப்பட்டது.*

## 16. சாயுச்சியம்

*இனி இரண்டு திருமந்திரங்களால் சாயுச்சியம் உணர்த்துகின்றார்.*

1492. சைவம் சிவனுடன் சம்பந்த மாவது
சைவம் தனையறிந் தேசிவம் சாருதல்
சைவம் சிவந்தன்னைச் சாராமல் நீவுதல்
சைவம் சிவானந்தம் சாயுச் சியமே. 1

1493. சாயுச் சியம்சாக்கி ராதீதம் சாருதல்
சாயுச் சியம்உப சாந்தத்துள் தங்குதல்
சாயுச் சியம்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே. 2

---

1492. ***தெளிவுரை :-*** *'சைவம்' என்னும் சொல்லின் பொருள் 'சிவனுடன் தொடர்புற்று நிற்றல்' என்பது, ஆகவே, சீவன், தான் சிவனது அடிமை என்னும் உண்மையை உணர்ந்து அவனைச் சார்ந்து நிற்றலே நிறைவான சிவநெறியாம். சிவனைச் சார்ந்து நின்றபின்னும் அவனை யன்றிப் பிறிதொன்றையும் சாராது அறவிடுத்தும் அந்நெறி நிறை வுடையதாதற்கு இன்றியமையாதது. அத்தகைய நிறைவான சிவ நெறியின் பயன் சிவனது பேரின்பமே. அவ்வின்பத்தைப் பெற்று அதில் மூழ்கியிருக்கும் நிலையே சாயுச்சமாம்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியில், 'சிவந் தன்னை' என ஓதுதல் பாடம் அன்று. இவ்வடியை, 'சைவம் பசுபாசம் சாராமல் நீங்குதல் - (அல்லது) நீவுதல்' எனவும் ஓதுவர்.*

*இதனால், 'சிவநெறியின் முடிந்த பயன் சாயுச்சமே' என்பது பல்லாற்றானும் வலியுறுத்தப்பட்டது.*

1493. ***தெளிவுரை :-*** *சாயுச்சியம், சீவன் முத்தி நிலையில் சாக்கிராதீதமாய் அமைதியிற்படுத்தி, சிவம் அன்றிப் பிறிதொன்றும் தோன்றாமல் சிவம் ஒன்றையே தோற்றுவித்து, அறிவின்கண் சிவனது குணமான எல்லையில் இன்ப வெள்ளத்தைத் தந்து நிற்கும்.*

***குறிப்புரை :-*** *இவற்றைப் படிமுறையால் வேறு வேறு தொடராக ஓதினாரேனும் அவற்றை ஒருங்கெண்ணித் தொகுத்தல் கருத்து என்க. "முடிவிலா" என்பதனை "ஆனந்தம்" என்பதற்கு முன் கூட்டுக. மனம், கருவியாகுபெயர். குணத்தை "சத்தி" என்றார்.*

*இதனால், சிவநெறியின் முடிந்த பயன் இம்மையிற்றானே பெறப்படுதல் கூறப்பட்டது.*

"மூதறிவார்க்கு - அம்மையும் இம்மையே யாம்'

*என்பது திருவருட்பயன் (பா.99). இந்நிலை எய்தினாரையே, 'சீவன்முத்தர்' எனவும், 'அணைந்தோர்' எனவும் கூறுவர்.*

## 17. சத்தி நிபாதம் (சத்தி நன்கு பதிதல்)

*சரியை முதலிய மூன்றாகிய தவத்திற்கும், அதன் பயனாகிய ஞானத்திற்கும் ஏதுவாய் நிற்பது சத்திநிபாதம். அஃதாவது, இறைவனது சத்தி உயிர்களது பெத்த காலத்தில் மலங்களின் பக்கம் நின்று அவை வழியாக உயிர்களைப் பிறவித் துன்பத்தில் ஆழ்த்தி வந்த வன் கண்மையாகிய தனது செயற்கைத் தன்மையை அவற்றது மலபரி பாகம் காரணமாக விடுத்துத் தனது இயற்கையாய அருளேயாய் உயிர்களிடத்துப் பதிதல். நிபாதம் - வீழ்ச்சி. 'பதிதல்' என்னாது, 'வீழ்ச்சி' என்றற்குக் காரணம், 'பெத்தத்தில் உலகியலில் நின்ற உயிருக்கு இச் சத்தி பதிவு உண்டான உடன், ஓர் அவையிடத்தில் கல் வந்து வீழ்ந்தாற் போல்வதோர் அதிர்ச்சி யுண்டாதல்பற்றி' என விளக்குவர், சிவஞானபோத மாபாடியம் உடையார். சரியை முதலியவற்றையும், அவற்றின் பயன்களையும் உணர்த்தியபின், அச்சரியை முதலியவற்றிற்கு ஏதுவாய் நிகழும் இச்சத்தி நிபாதத்தைப் பதினாறு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*மல பரிபாகத்திற்கு ஏற்ப இச் சத்திநிபாதமும் முன்னர் மெல்ல நிகழ்ந்து, பின்னர் விரையநிகழும். அந்நிலை நால்வகைப் படுத்துச் சொல்லப்படுகின்றது. அவை, 'மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம்' என்பன. 'தரம்' என்பது மிகுதி யுணர்த்தும் வடமொழி விகுதியாதலின், முதற்கண் நிகழ்வதனை 'மந்ததரம்' எனக் குறித்தலே முறையாகின்றது. ஆயினும், அதனை 'மந்தம்' என்றலே வழக்கில் காணப்படுகிறது. சிவாக்கிர யோகிகள் தமது சிவநெறிப் பிரகாச நூற் செய்யுளில் அங்ஙனமே கூறி, சிவஞான சித்தி எட்டாம் சூத்திர உரையில் 'மந்ததரம்' என்பதில் 'தரப்புப் பிரத்தியயம் நியூனத்தில்' என்றும், 'தீவிரதரம்' என்பதில், 'தரப்புப் பிரத்தியயம் அதிகத்தில்' என்றும் கூறியுள்ளார். 'நியூனத்தில்' என்பது எவ்வாறு பெறப்படுகின்றது என்பது விளங்கவில்லை.*

*சிவஞான மாபாடியத்திலும் எட்டாம் சூத்திர பாடியத்தில் மந்தம் என்பதே முதலாவதாகக் காணப்படுகின்றது. இந்நூற் பதிப்புக் களிலும் மேற்காட்டிய முறையே இவ்வதிகாரத்தின் உட்பிரிவுப் பெயர்களில் காணப்படுகின்றது. சொல்லில் வேறுபாடன்றிப் பொருளில் எவர்க்கும் வேறுபாடில்லை; அதனால், இங்கும் அவ்வாறே கொள்ளப்படுகின்றது.*

**1. மந்தம்**

*நான்கு மந்திரங்களால் முதற் சத்திநிபாதம் உணர்த்துகின்றார்.*

| | |
|---|---|
| *மந்தம்* | *அற்ப அறிவைப் பெற்றவன்* |
| *மந்த தரம்* | *மந்தமாய் இருந்து மந்திரங்களை உபாசிப்போன்* |
| *தீவிரம்* | *யோகப்பயிற்சி செய்வோன்* |
| *தீவிரதரம்* | *ஞானமார்க்கத்தை அனுசரிப்போன்* |

**1494.** இருட்டறை மூலை யிருந்த கிழவி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி அவனை மணம்புரிந் தாளே. 1

**1495.** தீம்புல னானதிசையது சிந்திக்கில்
ஆம்பு லனாய்அறி வார்க்கமு தாய்நிற்கும்
தேம்புல னான தெளிவறி வார்கட்குக்
கோம்புலன் ஆடிய கொல்லையு மாமே. 2

---

**1494.** *தெளிவுரை :- இதன் சொற்பொருள் வெளிப்படை.*

*குறிப்புரை :- இஃது ஒட்டணியாய், "இருட்டறை" என்பது ஆணவ பந்தத்தையும் ''மூலையிருந்த'' என்றது, தன் இயல்பு தோன்றாது மறைந்திருந்ததையும், "கிழவி" என்றது அநாதியாய அருட் சத்தியையும், "குருடு" என்றது அஞ்ஞானத்தையும், "கிழவன்" என்பது ஆன்மாவையும், ''குணம் பல'' என்றது நிலையாமை உணர்வு, துறவுள்ளம் முதலியவற்றையும், ''மருட்டுதல்'' என்பது மேற்கூறியவாறு உலகியல் உணர்வில் ஓர் அதிர்ச்சியை உண்டாக்குதலையும், ''மணம் புரிதல்'' என்பது ஆன்ம அறிவிற் பதிதலையும் உணர்த்தி நின்றன. இருட்டறை மூலையிருத்தல் முதலாகக் கூறிய பலவற்றானும் இது சத்திநிபாதத்தின் முதற்படியின் இயல்பாதல் இனிது விளங்கும். "கிழவி" என்பதனை, 'குமரி' எனவும் பாடம் ஓதுப.*

*இதனால், சத்திநிபாதம் முதற்கண் நிகழுமாறு கூறப்பட்டது.*

**1495.** *தெளிவுரை :- 'உண்மையில் இன்பப் பொருளாய் உள்ள சிவனை அறிந்து அவனை அடையும் வழியை நாடினால், அங்ஙனம் அறிந்து நாடுவோர்க்கு அவன் தான் ஒருவனே இன்பப் பொருளாய்த் தோன்றித் தேவாமுதம்போலத் தித்தித்து நிற்பான். அவ்வாற்றால் அதற்குமேல் அவனது உண்மை நிலையைத் தெளிந்தவர்கட்கு அவன்*

**1496.** இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள்நீங்கா வண்ணமே ஆதி அருளும்
மருள்நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருள்நீங்கா இன்பம் புலம்பயில் தானே. **3**

---

*தனக்கு நல்ல புல்லும், நீரும், நிழலும் உள்ள இடம் யாது என நோக்கிய பசுவிற்கு அங்ஙனமே உள்ளதாய்க் கிடைத்த புனம்போல நின்று எல்லையில் இன்பத்தை அளிப்பான்'.*

***குறிப்புரை :-*** *"புலன்" என்பதனை நான்கிடத்தும் 'புனல்' எனப் பாடம் ஓதுவாரும் உளர். கோ - பசு. 'கோப்புலன்' என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது.*

*இதனால், இச்சத்திநிபாதம் வரப்பெற்றார்க்குச் சிவானந்த வேட்கை விளைதல் கூறப்பட்டது.*

***1496. தெளிவுரை :-*** *'ஆதி' எனப்படும் சத்தி (முற்பக்கத்து நிலவுபோல) ஆணவ இருளை நாள்தோறும் படிமுறையாகப் பல பிறவிகளிலும் நின்று கழித்து, அம்மலம் பரிபாகம் உற்ற காலத்து அருளாகிய தனது இயற்கை தன்னைவிட்டு நீங்கியது போலக் காட்டிய அதனைவிடுத்து அருளேயாதலில் மாறாது நின்று, தனது மறைத்தலினின்றும் நீங்கமாட்டாத தேவர்களை அவரவர்க்கு ஏற்ற நிலையில் வைத்து ஆள்பவனாகிய சிவனோடு நீங்காதுநின்ற அழிவில்லாத இன்பத்தை நுகர்தலாகிய நிலையை ஆன்மாவுக்கு அருளுவாள்.*

***குறிப்புரை :-*** *"ஆதி" என்பதனை முதலில் வைத்து "எண்ணில் பிறவி கடத்தி" என்பதனை அதன்பின்னரும், "அருளும்" என்பதனை இறுதியிலும் கூட்டி உரைக்க. "அருள்" என்பது "அருளாகிய இயல்பு" என்றவாறு. 'நீங்காவண்ணமாய்' என ஆக்கம் வருவிக்க. மருள் - மயக்கம். இது மலங்களின் காரியம். இக்காரியமும் சிவனது சத்தியின்றி நிகழாது. அதனால், அச்சத்தி இதனை நிகழ்த்துவிக்கும் நிலையில் 'திரோதானசத்தி' எனப்படுகின்றது. இங்கு, "ஆதி" என்றது திரோதான சத்தியையே. ஓரிடத்தினின்றும் நீங்கிப் பிறிதோ ரிடத்துச் செல்லுதலினின்றும் நீக்கி, நசித்தலை உணர்த்தற்கு, "பொருள் நீங்கா" என்றார். புலம் - அறிவு. அஃது ஆகுபெயராய் ஆன்மாவைக் குறித்தது. பயில் - பயிலல். நுகர்தல்; முதனிலைத் தொழிற்பெயர்.*

*இதனால், சிவனது சத்தி மலபரிபாகம் வருவதற்கு முன்பு திரோதானமாய் நின்று உபகரித்து, பரிபாகம் வந்தபின் அருட்சத்தியாய்ப் பதிந்து உபகரித்தல் கூறப்பட்டது.*

1497. இருள்சூழ் அறையில் இருந்தது நாடில்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போல்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள்சூழ் இறைவனும் அம்மையு மாமே. 4

## 2. மந்ததரம்

*இனி ஐந்து மந்திரங்களால் இரண்டாம் சத்திநிபாதம் உணர்த்துகின்றார்.*

1498. மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி
வெருட்டி வினைஅறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தாளே. 5

---

1497. ***தெளிவுரை :-*** *இருள் சூழ்ந்திருந்த அறையில் உள்ள பொருளைக் காணலுறும்பொழுது ஒளிமிக்க விளக்குச் சென்று எரிந்தாற்போல, அறியாமை சூழ்தலால் மயக்கம் பொருந்தி நின்ற உள்ளத்தாமரையின்கண் சிவன், அருள் மிகுந்து, அப்பனும், அம்மையுமாய் நிற்பான்.*

***குறிப்புரை :-*** *எனவே, விளக்குச் சென்று எரிந்தபொழுது அந்த அறையில் இருள் நீங்கினாற்போல, இறைவன் அருள் மிகுந்து நின்ற பொழுது உள்ளம் மருள் நீங்கி உண்மையை உணர்தல் பெறப்பட்டது. இது பயன் பற்றிய சுட்டிக்கூறா உவமை. பொருளாவது, இங்கு ஒளி, 'மயக்கத்து மலர்' எனவும், 'நந்தி ஆம்' எனவும் இயையும். "மலரின் கண்" என உருபுவிரித்து, அதனையும், "ஆம்" என்பதனோடு முடிக்க.*

*இதனால், முதற் சத்திநிபாதத்தின் இயல்பு உவமையில் வைத்து விளக்கப்பட்டது. முதற் சத்திநிபாதத்தில் சத்தி நிவிர்த்தியாய்ப் பதிந்து, நிலை, நிலையாமை உணர்வைத் தோற்றுவித்து, 'உலகப் பற்றை நீக்கும்' என்பர் சிவாக்கிர யோகிகள்.*

1498. ***தெளிவுரை :-*** *"இருட்டறை மூலை" என்னும் மந்திரத்திற் கூறியவாறு, ஆன்மாவைத் தன்வயமாக்கிப் பதிந்த சத்தி, பின்பு, ஆன்மாவின் மயக்க உணர்வை முற்றிலும் போக்கி, வினைகளை வெருண்டோட ஓட்டி, அவ்வினைகளால் உளவாகிய அலமரல் நீங்கியதனால் உண்டாகும் அமைதியை உணர்த்தி, சிவனை*

**1499.** கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்
கன்னித் துறைபடிந் தாடும் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடும் கருத்துண்டேல்
பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. **6**

---

*உணரமாட்டாதிருந்த அந்நிலையை நீக்கி, அவனது அருட்குணங்கள் பலவற்றை உணரப் பண்ணி, அவனது அருளில் விளங்கி நிற்கும் உணர்வைத் தருவாள்.*

***குறிப்புரை :-*** *அருட் சத்தி தனது முதற் பதிவில் உலகப் பற்று நீங்கச் செய்தபின், ''ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாந் துணையான்" (சிவஞானபோதம் - சூ. 8. அதி. 4) என்றவாறு. தனது இரண்டாம் பதிவில் சிவனது திருவடியை நோக்கிச் செலச் செய்தலை இவ்வாறு விரித்தார் என்க. 'இரண்டாம் முறையில் சத்தி பிரதிட்டையாய்ப் பதிந்து, மேற்கூறிய நிவிர்த்தி நிலையை நிலை பெறுத்தும்' என்பர் சிவாக்கிர யோகிகள். "புணர்ந்து" என்றது, 'புணர்ந்தபின்' என்றவாறு. "குணம்", இங்கு சிவனுடையன. புரிதலுக்கு, 'சத்தி' என்னும் எழுவாய் அதிகாரத்தால் வந்து இயைந்தது.*

*இதனால், இரண்டாம் சத்திநிபாதத்து இயல்பு கூறப்பட்டது.*

**1499.** ***தெளிவுரை :-*** *கன்னியாகுமரிக் கடல் துறையில் மூழ்கி விளையாடும் மாந்தர் அந்நீர் வடிவாய் நிற்கும் சத்தியின் பதிவில் மூழ்கி விளையாடும் எண்ணத்தினைக் கொள்கின்றாரில்லை. அக்கருத்து அவருக்கு உண்டாகுமாயின், அடுத்து ஒரு பிறவிதானும் உண்டாக மாட்டாது; வீடு பெறுவர்.*

***குறிப்புரை :-*** *கன்னித் துறை படிந்தாடிய ஆடவர் - முன்னர்ப் பெண்ணோடு பொருந்தி குண்டலினியின் ஆற்றலில் விளங்கிய ஆண் மக்கள், கன்னித் துறை படிந்தாடுங் கருத்திலர் - அதை மாற்றியமைக்கும் உபாயத்தை உணரவில்லை. கன்னித்துறை பந்தாடுங் கருத்துண்டேல் - அப்படி அதை மாற்றி அமைக்கும் உபாயத்தை உணர்ந்தவர்க்கு, பின்னைப்பிறவி பிறிதில்லை தான் - தொடர்ந்து வரும் பிறவித் துன்பம் இனி இல்லையாம். ஆண் பெண் கூட்டுறவைத் தெய்வக் கூட்டுறவாக மாற்றியமைக்கும் ஆற்றல் பெற்றவர்க்குப் பிறப்பு இல்லை.*

**1500.** **செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்**
**எய்த உணர்ந்தவர் எய்வர் இறைவனை**
**மைவென்று அகன்ற பகடுஉரி போர்த்தவெங்**
**கைய னிவனென்று காதல்செய் வீரே. 7**

**1501.** **எய்திய காலங்கள் எத்தனை யாயினும்**
**தையலும் தானும் தனிநா யகம்என்பர்**
**வைகலும் தன்னை வணங்கு மவர்கட்குக்**
**கையில் கருமஞ்செய் காட்டது வாமே. 8**

---

**1500.** *தெளிவுரை :-* *சிவனை யடையும் வேட்கை யுண்டாயினோரே, அவனை, 'சிவப்பன்' என்றோ, 'கருப்பன்' என்றோ, 'வெளுப்பன்' என்றோ, 'பச்சையன்' என்றோ நன்கு உணரவல்லவ ராவர். ஆதலால், அவனை, 'நெருப்புமிழுங் கண்களையுடைய பெரிய கொலை யானையை யாவரும் வியக்கும் வண்ணம் உரித்து அத்தோலைப் போர்த்த வெவ்விய கையை உடையவன்' என்று அறிந்து அவனை அடையும் வேட்கையுடையீராகுங்கள்.*

*குறிப்புரை :- செய்யன் கரியன் வெளியன் நற்பச்சையன் - மூலாதாரத்துக்குமேலே சுவாதிட்டானத்தில் விளங்கும் பிரமனும், அதன் தொடர்பாகிய மணிபூரகத்தில் விளங்கும் திருமாலும், வெளியான மூலாதாரத்தில் விளங்கும் உருத்திரரும் கண்டத்திலிருந்து மறைப்பினைச் செய்யும் மகேசுவரனும், எய்த உணர்ந்தவர். எய்வர் இறைவனை - பொருந்துவண்ணம் அறிந்தவர் இறைவனை அடைவர். மைவென்றகன்ற பகடுரி போர்த்த வெங்கையன் இவன் - இறைவனாகிய இவன் மையினையும் பின்னடையச் செய்யும் கருமையான யானையின் தோலை உரித்துப் போர்த்த அக்கினி காலையில் விளங்குபவன் என்று காதல் செய்வீர் - என்று அறிந்து உறுதியாகக் காதல் செய்யுங்கள்.*

*கரியன் - கள்வன்; மறைப்பைச் செய்யும் மகேசுவரன். நற்பச்சையன் - தண்மையானவன். காதலைச் செய்யுடிம - திருமால். பகடுரி போர்த்தல் - ஆணவத்தை அழித்தல்.*

*இறைவனை அடையின் ஆணவ இருள் நீங்கி அக்கினி கலை விளங்கும். யானையை உரித்துப் போர்த்தமை அவனது எல்லாம் வல்ல தன்மையை வெளிப்படையினாலும், ஐம்புல ஆசையை அறுக்கும் தன்மையைக் குறிப்பினாலும் உணர்த்தி, அவற்றை உணர்தல் அவன் மாட்டு அன்பு நிகழ்தற்கு ஏதுவாதலைக் கொள்ள*

1502. கண்டுகொண் டோம்இரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்
வண்டுகொண் டாடும் மலர்வார் சடைஅண்ணல்
நின்றுகண் டார்க்கிருள் நீக்கிநின் றானே. 9

---

*நின்றது. 'சிவனை அடையும் காதல் உடையவரே அவனை அடைதல் கூடும்; ஆதலின், அக்காதல் உண்டாதற்கு ஏதுவாய அறிவைப் பெறுங்கள்' என்றவாறு. 'அவ்வறிவும், அதன் வழியான இக்காதலும் சத்திநிபாதத்தால் உண்டாம்' என்பது கருத்து. இரண்டாம் அடியின் ஈற்றில், 'ஆகலான்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், சத்திநிபாதம் சிவஞானத்திற்கும், சிவ பக்திக்கும் ஏதுவாதல் கூறப்பட்டது.*

1501. ***தெளிவுரை :-*** ***'பிறந்து இறந்து உழன்ற காலங்கள் எத்துணையன கழியினும், அவ்வுழலலை நீக்கி நிலைபெறச் செய்யும் தலைவர் சத்தியும், சிவனுமாய அவரன்றிப் பிறர் இலர்' என, அனுபவம் வந்தோர் அறுதியிட்டுரைப்பர். இனித் தன்னை நாள்தோறும் தப்பாது வழிபடுவோர்க்குச் சிவன் கைமேல் பயனைப் பெறுவிக்கின்ற துணைவனாய் விளங்குவான்.***

***குறிப்புரை :-*** ***எய்திய காலங்கள் எத்தனையாயினும் - உலகிலுள்ள சீவபேதம் எத்தனை தரம் அழிந்து தோன்றினாலும், தையலுந்தானுந் தனிநாயகம் என்பர் - சத்தியும் சிவமும் என்றும் அழியாப் பெருமை உடையது என்பர். வைகலுந் தன்மை வணங்குமவர்கட்கு - நாடோறும் விடியற்காலையில் சிவசத்தியை வழிபடுவோர்க்கு, கையிற் கருமஞ்செய் காட்டதுவாம் - அவரது சுழுமுனையில் விளங்கி உணர்த்தியருளுவான்.***

***வைகல் - விடியற்காலை ஆறு நாழிகை. சந்திரன் ஆதிக்கம் குறைந்து சூரியன் ஆதிக்கம் மிகும் நேரம். அப்போது தியானம் செய்யின் உலக இச்சை மாறிக் கடவுள் இச்சை மிகும்.***

***அழியாத சிவசத்தியை வழிபடுவார்க்கு உண்மை ஞானம் உண்டாகும்.***

***இதனால், இரண்டாம் சத்திநிபாதம் கிரியையால் ஆன்மாவை உய்வித்தல் கூறப்பட்டது.***

## 3. தீவிரம்

*இனி, நான்கு மந்திரங்களால் மூன்றாவதாகிய சத்தி நிபாதம் உணர்த்துகின்றார்.*

**1503.** **அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்தில்**
**எண்ணிக்கும் ஏழேழ் பிறவி உணர்விக்கும்**
**உண்ணிற்ப வெல்லாம் ஒழிய முதல்வனைக்**
**கண்ணுற்று நின்ற களியது வாமே.** **10**

---

**1502.** **தெளிவுரை :-** *'சந்திர கலை, சூரியகலை' என்னும் இரு வாயுக்களை முறைப்படி தொடருமாற்றால் அவை ஒருவழிப்பட்டு முடியும் அவ்விடத்தை அடைந்து, அங்குள்ள ஒளியை நாங்கள் கண்டு பற்றிக்கொண்டோம். அவ்வொளியே முன்னே, முன்னை பலர் காண முயன்று காணாது இளைத்த பெரியோன்; எல்லா ஒளிகட்கும் மேலான ஒளியாய் இருப்பவன்; (சிவன்) அவன் அவ்விடத்தில் நிலைத்து நின்று தன்னைக் காண்பவர்க்கு அஞ்ஞான இருளைப் போக்குவான். வண்டு கொண்டாடும் மலர் - சகத்தரத்தானம்.*

**குறிப்புரை :-** *"ஆங்கு" எனப்பண்டறி சுட்டாற் குறித்து, ஒளிக் காட்சியைக் கூறினமையால் இஃது யோகத்தை உணர்த்தியதாதலின், "இரண்டு" என்றது இப்பொருட்டாயிற்று. ஆங்கு என்றது, ஆஞ்ஞைத் தானத்தை. மூன்றாம் அடி, 'சிவன்' என்பது உணர்த்தி நின்றது. இரண்டாம் சத்திநிபாதம் தனது முதிர்வில் யோகத்தையும் தருதல் கூறியவாறு. இதனுள் ஈற்றடி இனவெதுகை.*

*இதனால், இரண்டாம் சத்திநிபாதத்தால் யோகமும் உண்டாதல் கூறப்பட்டது.*

**1503.** **தெளிவுரை :-** *முன் துன்பமாய் நின்ற நிலை மாறி இப்பொழுது இன்பமாய் நிற்கின்ற சத்தி, சிவனால் கட்டிக் கொடுக்கப்பட்ட குடிலாகிய ஓர் உடம்பினுள் நின்று, 'ஏழ்' என்னும் வகையுட்டானே மாறி மாறி வருகின்ற பலவாகிய பிறப்புக்களிலும் உளவாகின்ற துன்பங்களையெல்லாம் உணரச் செய்வாள். பின் அவ்வுணர்ச்சி காரணமாக உயிரின் அகத்தேயுள்ள பல வகையான விருப்பு வெறுப்புக்களும் ஒழிந்துபோக, முதல்வனாகிய சிவனைக் கண்டு களிக்கும் களிப்புமாவாள்.*

**குறிப்புரை :-** *அண்ணித்தல் - இனித்தல். 'எண்ணுவிக்கும்' என்பது திரிபெய்தி நின்றது. "ஏழ் ஏழ்" ஒருசொல் அடுக்கு. அறிவு*

**1504.** பிறப்பை அறுக்கும் பெருந்தவம் நல்கும்
மறப்பை அறுக்கும் வழிபட வைக்கும்
குறப்பெண் குவிமுலைக் கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. 11

---

*உடம்பிடமாக நிகழ்தலின், அறிவின்கண் நிற்றலை உடம்பின்கண் நிற்பதாகக் கூறினார். "நிலவாத புலால் உடம்பே புகுந்து நின்ற - கற்பகமே" (தி.6 ப.95 பா.4) என்ற அப்பர் திருமொழியையும் காண்க. "பிறவி" என்பது, விடாத ஆகுபெயர். "கண்ணுற்று நின்ற" என்பது ஒரு சொல் நீர்மைத்து. அப் பெயரெச்சம் 'ஆறு சென்ற வெயர்' என்பதுபோல, ''களி'' என்னும் காரியப்பெயர் கொண்டது. "உணர்விக்கும்" "கண்ணுற்று நின்ற களியாகும்" என்றதனால், தீவிர சத்திநிபாதம் ஞானத்தைத் தருதல் பெறப்பட்டது. சிவாக்கிர யோகிகளும், "தீவிர சத்திநிபாதம் சிவஞானம் பிரகாசம்" என்றார். 'இதில் சத்தி வித்தையாய்ப் பதியும்' என்பதும் அவர் கூறுவது. இந்த ஞானம் சிவநூல்களைக் கற்றல் கேட்டல்களால் வரும் கருவி ஞானமே (அபர ஞானமே) என்க.*

*ஞானநூல் தனைஓதல், ஓது வித்தல்*
*நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல், நன்றா*
*ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்*
*இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை.*
*- சிவஞானசித்தி. சூ.8.23*

*என்பதில், முதலில் உள்ள மூன்றும் இந்த ஞானமேயாதல் அறிக.*

*"கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" - தி.1 ப.1 பா.2*

*என்று அருளிச் செய்ததும் இந்நிலையினரை நோக்கியே என்க.*

*இதனால், தீவிர சத்திநிபாதத்தின் இயல்பு கூறப்பட்டது.*

**1504. *தெளிவுரை :-*** ***இமய மலையில் தோன்றி வளர்ந்த மகளும், அபர ஞான பரஞானங்களையே இருதனங்களாகக் கொண்டு உயிர்கட்கு அந்த ஞானமாகிய பாலை ஊட்டி வளர்ப்பவளும் ஆகிய சத்தி, மேற்கூறியவாறு முதல்வனைக் கண்ணுற்று நிற்கும் ஞானத்தால் வழிபடுகின்றவர்கட்குத் தவங்கள் எல்லாவற்றினும் சிறந்த தவமாகிய சிவ புண்ணியத்தை வழங்குவாள்; அதனால் பிறப்பை ஒழிப்பாள்; சிவனை மறக்கும் மறதியாகிய அஞ்ஞானத்தை நீக்குவாள்; யாவரும் அவரை வழிபடும் நிலையில் உயர்த்து வைப்பாள்.***

**1505.** தாங்குமின் எட்டுத் திசைக்கும் தலைமகன்
பூங்குழல் கோதைப் புரிகுழ லாளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலம் தொடர்தலு மாமே. 12

**1506.** நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகினும் பன்மலர் தூவிப் பணிவன்
அணுகிய தொன்றறி யாத ஒருவன்
அணுகும் உலகெங்கும் ஆவியு மாமே. 13

---

***குறிப்புரை :-*** *காரண காரிய முறையால் முன் நிற்கற்பாலதாய பெருந்தவம் நல்கல், செய்யுள் நோக்கிப் பின் நின்றது. குறச்சாதியாகக் கூறியது, மலைமகளாதலை நயம்படக் குறித்தவாறு. சிறப்பு, இங்கு ஞானம், ஒடு உருபு, "வேலொடு நின்றான், கோலொடு நின்றான்" (திருக்குறள், 552) என்பவற்றிற் போலச் சிறப்பித்தற் பொருளில் வந்தது. நின்றார் - உரியராயினார்.*

*இதனால், தீவிர சத்திநிபாதத்தின் பயன் கூறப்பட்டது.*

**1505. *தெளிவுரை :-*** *எட்டுத் திசைக்கும் தலைவனாகிய சிவனை அவன் துணைவியோடும் அறிவினுள் அறிந்து மறவாதிருங்கள். ஏனெனில், அவ்வாறு இருக்கும் அறிவை உடையவர்கட்கே சத்திநிபாதம் தொடர்ந்து முதிர்வதாகும்.*

***குறிப்புரை :-*** *பூங்கமழ் கோதை - பல பூக்களின் மணம் நிறைந்த மாலை. புரிகுழலாள் - சுற்றிச் சுற்றிச் செல்லும் குழல் போன்ற சித்ரணி நாடியில் செல்பவள். தூங்கொளி - மயக்கம் நல்கும் ஒளி. சாதகர் நீல ஒளியைக் கண்டு கண்டு களிப்பதில் சிறிது உறக்கம் போன்ற நிலை உண்டாகிப் பிரபஞ்ச அறிவு குறையும். அருளில் பதிவதில் மன மகிழ்வுண்டாகி இளமை நலம் பெறுவர். மேலுள்ள அகுல சிவத்தையும் கீழுள்ள குல குண்டலினியையும் சேர்த்துத் தியானம் செய்ய வேண்டும்.*

*குண்டலினியைத் தியானம் செய்யின் நீல ஒளி தரிசனம் கிட்டி மன மகிழ்வு உண்டாம்.*

**1506. *தெளிவுரை :-*** *தனு கரணங்களின் வழிவருபவற்றுள் ஒன்றையும் நோக்குதல் இல்லாத சத்திநிபாதன், தன்னை யார் அணுகினாலும் அவர்கட்கு முதிர்ந்த ஞானம் ஒன்றையே உணர்த்துவன், சிவனைப் புறத்தில் மலர் தூவி வழிபடினும்*

## 4. தீவிரதரம்

*இனி, மூன்று மந்திரங்களால் தீவிரதர சத்திநிபாதம் உணர்த்து கின்றார். இஃது 'அதிதீவிரம்' எனவும் சொல்லப்படும்.*

1507. இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனும் ஞானத்தால் தன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. 14

---

*படுவான். தான் அடையும் எவ்விடத்திலும் அங்கு உள்ளார்க்கு உயிர்போலச் சிறந்து விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியை முதலிற் கொள்க. சத்திநிபாதர் தம்மை அணுகினவர்க்கு ஞானம் ஒன்றையே உணர்த்துவர், ''அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவார் ஆகலான்'' (சிவஞானபோதம், சூ.12. அதி. 2) என்பதில் எதிர்மறை முகத்தாற் கூறப்பட்டது. "பணிகினும்" என்பதை "பணிவன்" என்பதற்கு முன்னே கூட்டுக. உம்மை, அஃது ஒருதலை யாகாமை குறித்தது. "உலகெங்கும்" என்பதன்பின், 'அவ்விடத் தார்க்கு' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், தீவிர சத்திநிபாதம் வந்தோரது இயல்பு கூறப்பட்டது.*

**1507. *தெளிவுரை :-*** *இருவகை வினைகளும் ஒரு தன்மையவாக ஒத்து நிற்குங் காலத்தில் உண்டாவதே இனிய அருட்சத்தியது பதிவு. 'அஃது உண்டானபொழுது சிவன் குருமூர்த்தியாய் வந்து குற்றங்கள் யாவற்றையும் நீக்கி வழங்குவான்' எனப்படுகின்ற அந்த ஞானத்தாலே புருடன் தன் செயல் அற்று அருள் வழியில் நிற்பானாயின், மும்மலங்களும் பற்றற்று ஒழிய, அந்தச் சிவனே தானாவான்.*

***குறிப்புரை :-*** *சத்திநிபாதமாவது சிறப்புடைய இந்நான்காஞ் சத்தி நிபாதத்தின் இயல்புகளை இங்கே முற்ற எடுத்தோதினார். இரு வினைகளும் நேரொத்தலாவது அவற்றது பயன்களாகிய உலகியல் இன்பம், துன்பம் இரண்டனையும் ஒரு பெற்றியவாகவே உணர்ந்து, அவற்றில் விருப்பு வெறுப்புக்கள் இல்லாதிருக்கும் நிலையாம். இதுவே ஆணவ மலம் பரிபாகமானதற்கு அறிகுறியாகும். ஆகவே, இருவினை யொப்பும், மலபரிபாகமும் வந்தால், சத்திநிபாதம் வரும்' என்பர். ஞானத்தைப் பரிபாகம் வருமுன் உணர்த்துதல், வந்தபின் உணர்த்தா திருத்தல் இரண்டுமேகூடா ஆகலின், சத்திநிபாதம் வரப்பெற்றார்க்குச் சிவன் குருவாய் வந்து ஞானத்தை உணர்த்துதல்*

**1508.** இரவும் பகலும் இறந்த இடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை உன்னி
அரவம் செய்யாமல் அவளுடன் சேர
பரிவொன்றில் ஆளும் பராபரை தானே. 15

---

*ஒருதலையாம். இது பற்றிய செய்திகள் பலவற்றையும் சிவஞானபோத எட்டாம் சூத்திரத்திலும், அதன் உரைகளிலும் விளங்கக் காண்க. சத்தி நிபாதத்தின் வழிச் சிவன் வந்து செய்தலை அச்சத்தியே செய்வதாகக் கூறினார்.*

*இதனால், சத்திநிபாதத்து இயல்பெல்லாம் இதனுள் வைத்து முற்ற உணர்த்தப்பட்டது.*

**1508.** *தெளிவுரை :-* உயிர் தனு கரணாதிகளைப் பெறாது ஆணவத்தோடு மட்டுமே கூடிச் சடம்போலக் கிடந்த இராக் காலமாகிய கேவல நிலையும், பின் தனு கரணாதிகளைப் பெற்றுப் பிறப்பு இறப்புக்களில் உழன்று பகற் காலமாகிய சகல நிலையும் பின் ஒருபோதும் உண்டாகாது ஒழிந்த சுத்தநிலையாகிய முத்திக் காலத்திலே, சத்தியாகிய திருவருள் ஒன்றையே நோக்கித் தற்போதத்தைச் சிறிதும் எழாதபடி அடக்கி அவ்வருளோடே ஒன்றியிருக்க, அவ் அருளாகிய சத்தியும் இவன்பால் இரக்கம் மிக்கவளாய் இவனைத் தன் அடியவனாக ஏற்றுக்கொள்வாள்.

*குறிப்புரை :-* 'அதன்பின் துன்பம் ஏதும் இல்லை' என்பது குறிப்பெச்சம். கேவல சகலங்களை 'இரவு, பகல்' என்றல் மெய்ந்நூல் வழக்கு, "இரவும்பகலும் இறந்த இடம்" என்றதனால் 'அழிப்புடிக் கேவலம், படைப்புச்சகலம்' என்பனவும், 'உறக்கக்கேவலம், விழிப்புச் சகலம்' என்பனவும், 'மறப்புக் கேவலம், நினைப்புச் சகலம்' என்பனவுமாகிய இடைநிலை மாற்றங்களும் எய்தாது ஒழிந்த நிலை என்பது போந்தது. இதனை இவ்வாறே,

"இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே"

என்றும்,

"கங்குல் பகல் அற நின்ற எல்லையுளது எது"
- தாயுமானவர், திருவருள்விலா, 1

என்றும் பிறவிடங்களில் குறித்தல் காண்க. குரவம் செய்கின்ற - குராமலர் அழகைச் செய்கின்ற. அரவம் - ஓசை; பேச்சு; என்றது, தற்போதம் தலையெடுத்தலை. 'பரிவொன்றிலாளும்' என்பது பாடமன்று.

இதனால், சத்திநிபாத நிலையது அருமை கூறப்பட்டது.

**1509.** மாலை விளக்கும் மதியமும் ஞாயிறும்
சால விளக்கும் தனிச்சுடர் அண்ணல்உள்
ஞானம் விளக்கிய நாதன்என் னுள்புகுந்து
ஊனை விளக்கி உடனிருந் தானே. **16**

---

**1509.** ***தெளிவுரை :-*** *என்னுள் விளங்காது மறைந்து கிடைந்த ஞானத்தை அம்மறைவு நீக்கி விளங்கி எழச்செய்த என் குருநாதன் 'மாலை, இரவு, பகல்' ஆகியவற்றில் ஒரோவொரு காலத்தில் விளக்கத்தைத் தருகின்ற 'விளக்கு, சந்திரன், சூரியன்' என்னும் ஒளிகளுக்கும் ஒளியைத் தருகின்ற ஒப்பற்றபேரொளி' அவன் என் உள்ளே புகுந்து உயிரை மட்டுமின்றி உடலையும் ஒளியாய் விளங்கச் செய்து, பின் என்னைவிட்டு அகலாது உடனாயே இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *விளக்கு விளக்கந்தரும் காலத்தைக்கூறவே, ஏனை இரண்டும் விளக்கந்தரும் காலத்தையும் எடுத்துக்கூறுதல் கருத்தாயிற்று. 'விளக்கு முதலிய மூன்றும் காலத்தாலும், இடத்தாலும் வரையறுக்கப் படும் ஒளிகள்' என்பதை எடுத்தோதி, 'அவற்றுக்கும் விளக்கம் தரும் ஒளி' எனவும், 'ஒப்பற்றது' எனவும் கூறியவற்றால் அக இருளாகிய அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞான ஒளியாய் விளங்குதலும், அது பிறிதொன்றால் ஆகாமையும் குறிக்கப்பட்டன. மாயையும் கன்மும் ஆன்மா மருள்நிலையில் உள்ளபொழுது மருளாயும், அருள்நிலையை எய்தியபொழுது அருளாயும் நிற்கும் இயல்புடையனவாதல் பற்றி, 'ஊனையும் விளக்கினான்' என்றார். மாயையும், கன்மமும் இவ்வியல்பின ஆதலை,*

> *மாயைமா யேயம் மாயா வரும் இரு வினையின் வாய்மை*
> *ஆயஆ ருயிரின்மேவும் மருளெனில் இருளாய் நிற்கும்;*
> *மாயைமா யேயம் மாயா வரும்இரு வினையின் வாய்மை*
> *ஆயஆ ருயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்.*
>
> *- சிவப்பிரகாசம், உண்மை. 20*

*என்னும் 'சிவப்பிரகாசத்தால்' அறிக. 'தீவிரதர சத்திநிபாதத்தால் அனுபவ ஞானமாகிய நிட்டை கைவந்து, ஆன்மா சிவமாம் தன்மையைப் பெறும்' என்றவாறு. சிவாக்கிர யோகிகளும் இங்கு சத்தி சாந்தியாய்ப் பதிந்து, உபசாந்தத்தைத்தரும் என்றார். இப்பாட்டு இருவிகற்பம் பெற்றது.*

*இதனால், சத்திநிபாதத்தின் நிறைந்த இயல்பும், பயனும் கூறப்பட்டன.*

## 18. புறச்சமய தூடணம்

*இத்தந்திரத்துள் முதற்றொட்டுச் சைவ சமயத்தின் வகை களையும், அவற்றின் சிறப்பையும், அவைகளில் உள்ள ஒழுக்க நெறிகளையும், அந்நெறியின் பயனையும் கூறிவந்த நாயனார், இனி அவற்றை எதிர்மறை முகத்தான் வலியுறுத்த வேண்டிச் சைவம் அல்லாத பிறசமயங்களின் இழிபினை இருபது மந்திரங்களால் உணர்த்துகின்றார். சைவம் அல்லாத சமயங்களையே இங்கு, 'புறச்சமயம்' என்றார். தூடணம் - இகழ்ச்சி.*

*சமயங்களை ஆறாகக் கூறுதல் தொன்று தொட்ட வழக்கு. மற்றும் அவற்றை, 'புறம், அகம்' என இரண்டாகப் பகுத்து, ஒவ்வொன்றையும் ஆறாக வகுத்தலும் அவ்வழக்கு. அவ்வழக்கம் கால வேறுபாட்டாலும் கருத்து வேறுபாட்டாலும் சில வேறுபாடுகளை யுடையதாய்க் காணப்படுகின்றது. அவ்வேறுபாடுகளுள் நாயனார் காலத்தோடு ஓரளவு ஒத்த காலத்தனவாகிய சில நிகண்டுகளின்படி கூறப்படும் புறச் சமயங்கள், 'உலகாயதம், புத்தம், ஆருகதம், மீமாஞ்சை, மாயாவாதம், பாஞ்சராத்திரம்' என்பன.*

*இவற்றுள் முதல் நான்கும் கடவுட் கொள்கை இல்லாத மதங்கள். மாயாவாதம், 'கடவுள் யாராலும் அடைந்து அனுபவிக்கப்படும் பொருள் அன்று' என்னும் மதம். 'பாஞ்சராத்திரம் சிவன் முதற் கடவுள் அல்லன்' எனக் கூறும் மதம். ஆகையால், இவை அனைத்தும் சைவத்திற்குப் புறமாதல் வெளிப்படை. சாங்கியருள் ஒருசாராரே 'கடவுள் இல்லை' எனப் பிணங்கிக் கூறுவர். அதனால், சாங்கியம் பழைய காலத்தில் மேற்காட்டிய உலகாயதம் முதலிய ஆறுமே இங்கு, 'புறச்சமயம்' எனப்பட்டன எனலாம்.*

*நியாயம், வைசேடிகம், யோகம், சாங்கியம், வாமம், பௌராணிகம் அல்லது அனேகேசுரவாதம் என்பன, சிவனை இகழா விடினும், 'சிவனே முதற் கடவுள்' எனச் சிறப்பாகக் கொள்வன அல்ல ஆதல் பற்றி அவைகளையும் ஒருவகைப் புறச்சமயமாக எடுத்துக் கூறும் வழக்கம் பிற்காலத்தில் உண்டாயிற்று என்க.*

**1510. *தெளிவுரை :-* *முதுநூல்களின் கூற்றை அறவே புறக்கணித்து, முழுதும் தம் அறிவைக் கொண்டே ஆராய்தலாகிய அத்தொழிலில் நிற்கின்ற புறச்சமயங்கள் புறப்பொருள்களை எவ்வளவு ஆராய்ந் துணரினும், அவ்வாராய்ச்சி அறிவினுள்தானே***

**1510.** ஆயத்துள்நின்ற அறுசம யங்களும்
காயத்துள்நின்ற கடவுளைக் காண்கில
மாயக் குழியில் விழுவர் மனைமக்கட்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே. **1**

**1511.** உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளற் றலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பைப் புகுந்து புறப்படும்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. **2**

---

உள்ள கடவுளைக் காணமாட்டாதனவாகின்றன. அதனால், அவை பொய்ம்மையாகிய குழியில் வீழ்ந்து கெடுவன ஆகின்றன. ஆகையால், அவையெல்லாம் மனைவி மக்கள் முதலாகிய தளையில் அகப்பட்டுத் துன்புறுதற்கான வழிகளேயாகும்.

*குறிப்புரை :- மாயக்குழி - புறச்சமயக் கொள்கைகள். 'அறுசமயத்தவர் காண்கிலர், விழுவர்' என்பனவும் பாடம். 'அதனுள்' என்பதில் அன்சாரியை தொகுத்தல் பெற்றது, அறிவுள் நிற்பவனை ஒற்றுமைபற்றி உடலுள் நிற்பவனாக ஓதினார். முன்னும், பின்னும் பல இடங்களில் இவ்வாறே ஓதுதல் காண்க. மாயம் - பொய்; இங்கு மயக்கத்தைக் குறித்தது. "பதைக்கின்ற ஆறே" என்னும் பயனிலைக்கு. 'அவை' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க.*

*இதனுள் 'ஆய்தல்' என்பது 'சிவனே முதற்கடவுள்' என்னும் சைவத்தின் துணிபை முற்றாகவும், ஒருவாறாகவும் மறுத்துக் கூறுதலை ஆதலின், அச்செயலையுடையன மேற்கூறிய மதங்களேயாதல் அறிக. ஈற்றடியில் சகரமும் போலிவகையால் இன எதுகையாம். அன்றி, 'உயிரெதுகை பெற்றது எனினும் அமையும்'.*

*இதனால், புறச் சமயங்கள் சிவனது முதன்மையைச் சிறிதும் உணராதனவும், முற்ற உணராதனவுமாய்க் கேடுபயத்தல் கூறப்பட்டது.*

**1511. தெளிவுரை :-** *உயிர்க்கு உயிராய் அவற்றின் அறிவில் பொருந்தியிருத்தலை விரும்பி, அண்டத்தில் உலகெங்கும் நிறைந்தும், பிண்டத்தில் உள்ளக்கமலத்தில் தியானப்பொருளாய் விளங்கியும் நிற்பவனும், அருள் வள்ளலும், அனைத்துலகிற்கும் தலைவனும், பொள்ளல் நிறைந்த உடலில் உயிர்ப்பாய், உட்புகுதல் வெளி வருதல்களைச் செய்தும் உயிர்களால் அறியப்படாது மறைந்து*

**1512.** **உள்ளத்தும் உள்ளன் புறத்துளன் என்பவர்க்கு**
**உள்ளத்தும் உள்ளன் புறத்துளன் எம்மிறை**
**உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்கு**
**உள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே.** **3**

---

*நிற்பவனும் ஆகிய முதற்பெருங்கடவுளாம் சிவபெருமானைப் புறச் சமயிகள் தங்கள் கருத்தில் கொள்ளமாட்டாதவர்களாகின்றனர்.*

*குறிப்புரை :-* *'இஃது அவர் வினை யிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். 'எங்கும் நிற்றல் முதலிய பலவற்றிற்கும் உயிர்கள்மீது வைத்த கருணையே காரணம்' என்றற்கு, உள்ளத்துள்ளே நிற்றலை விரும்பினமையை முதற்கண் தனிப்பட எடுத்து ஓதினார். "உள்ளம்" என்பது அறிவைக் குறித்தது என்னை? "மலர்" எனப் பின்னர் இதயத்தைக் குறித்தலின். "தவம்" என்றது தியானத்தை. தவன் - தவத்தால் அடையப்படுபவன். புகுதல் புறப்படுதல்களைக் கூறினமையின், அஃது உயிர்ப்பாதல் விளங்கிற்று.*

*"என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்*
*கென்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே"* *- தி.5 ப.21 பா.1*

*என்று அருளினமையும் இங்கு நோக்கத்தக்கது. இறைவன் உயிர்களின் உயிர்ப்பாய் நிற்றல். அவை உடலொடு நிலைத்து நின்று, அந்தக் கரணங்களின்வழி வினைகளை நுகர்ந்தும், ஈட்டியும் வருதற் பொருட்டாம். உயிர்ப்பு இதயத்துடிப்பின் வழித்தாதலையும், இறைவன் இதய வெளியில் ஆடுபவனாகக் கூறப்படுதலையும் இங்கு நினைக்க. இங்ஙனம் உயிர்ப்பாய் உள்ளவனை அறியமாட்டாதவர் தங்களை அறிவராக (ஞானியராக)ச் சொல்லிக்கொள்ளுதல் நகை விளைப்பது என்பதாம். 'தலைவனை' என்னும் இரண்டனுருபு தொகுத்தல் பெற்றது.*

*இதனால், புறச்சமயிகள் உண்மை ஏதுக்கள் பல இருப்பவும் அவற்றைக் கொண்டு உண்மையைக் கருதியேனும் உணர மாட்டாதவ ராயிருத்தல் கூறப்பட்டது.*

**1512.** ***தெளிவுரை :-*** *எங்கள் இறைவனாகிய சிவபெருமானை அகச் சமயிகள் பொதுவாகவும், சிறப்பாகவும், 'அகம், புறம்' என்னும் இரண்டிடங்களிலும் உள்ளவனாக அறிந்து, இயன்ற அளவில் அவனை அணுக முயல்கின்றனர். அவர்கட்கு அவன் அவர்களது தகுதிக்கு ஏற்ப அவ்விடங்களில் ஏற்ற பெற்றியால் அகப்படுகின்றான்.*

**1513.** ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே. **4**

---

*புறச்சமயிகள் அவனை 'எவ்விடத்திலும் இலன்' எனக் கூறிப் பிணங்கு கின்றார்கள். அவர்கட்கு அவன் அவற்றுள் ஓரிடத்தும் காணப்படுதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *"உண்மையுமாய் இன்மையுமாய்" (தி.8 திருச்சதகம். 15) என்ற திருவாசகத்திற்கும் இதுவே கருத்தாதல் அறிக. நான்கிடத்தும் "புறத்தும்" என்னும் எச்ச உம்மை தொகுத்தல் பெற்றது. தான், அசைநிலை, ஏகாரம், தேற்றம்.*

*இதனால், புறச்சமயிகள் அச்சமயத்தை விட்டு அகச்சமயம் புகுந்தன்றி உய்யமாட்டாமை கூறப்பட்டது.*

**1513.** ***தெளிவுரை :-*** *புறச்சமயங்கள் ஆறனையும் தோற்றுவித்தவர்கள் மெய்ப் பொருளைக்கண்டு அதனைப் பிறருங் காண வழிகூறினாரல்லர். அதனால் சிவன் அந்த ஆறுசமயப் பொருளில் ஒன்றேனும் ஆயிற்றிலன். இந்த உண்மையை, உலகீர், தெளிமின்கள்! நன்கு தெளிமின்கள்!! தெளிந்தீர்களாயின், அதன்பின் தவற்றின் நீங்கி, நேர் வழியை அடைந்து, வீடுபெறுதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *''சமயம்'' என்றது இங்குப் புறச் சமயத்தையேயாதல் வெளிப்படை. காணுதல் - உணர்தல். அதுபின் பிறர்க்கு உணர்த்தி யதனைக் குறித்தது. இனி, "சமயம்" என்றதனை ஆகுபெயராக்கி, 'அவற்றை உணர்ந்தும் நூலை ஆக்கியவர்' என்று உரைப்பினும் ஆம். இச் சமயத்தவரும். இவர்தம் நூல்களும் பசுக்களும், பசு வாக்கியங்களும் ஆதலின், அவராலும் அவர்தம் நூலாலும் மெய்ப்பொருள் பற்றப் படாதாயிற்று.*

*இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை*
*நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்*
*தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்*
*அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன.*
*- தி.8 திருவண்ட. 79-83*

*எனவும்,*

**1514.** சிவமல்ல தில்லை இறையே சிவமாம்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை அறுசம யங்கள்
தவமல்ல நந்திதாள் சார்ந்துய்யும் நீரே. **5**

---

*சடங்கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண்குண்டர்*
*மடங்கொண்ட விரும்பியராய் மயங்கிஓர் பேய்த்தேர்ப்பின்*
*குடங்கொண்டு நீர்க்குச்செல்வார்.*

*- தி.1 ப.118 பா.10*

*எனவும் போந்த திருவாக்குகளும் புறச்சமயங்கள் மயக்க உரை களாதலை விளக்குதல் காண்க.*

*"அவன்" என்றது, மேல், "எம் இறை" என்றதனைச் சுட்டிற்று. "தேறித் தெளிமின்" என்றது ஒருபொருட் பன்மொழி; மறித்தும் இவ்வாறு கூறியது வற்புறுத்தற் பொருட்டு. மாறுதல் - நெறியின் நீங்குதல். 'அஃது இன்றி' எனவே, நேர்வழியைப் பற்றுதல் பெறப்பட்டது. 'வீடு' என்பது இல்லத்திற்கும் பெயராய் வழங்குதலின், அச் சொல்நயம் பற்றி "மனபுகலாமே" என்றார். 'வழி தவறிச் சென்று காடு மேடுகளில் அலையாமல், நேர்வழியைக் கண்டு, அதன் வழி விரைவில் இல்லத்தை அடைந்து இன்புறலாம்' என்பது நயம். இங்கு, ''அவன் அலன்'' என்றது, சிவமாய் விளங்காமையை ஆதலின், ''அறுவகைச் சமயத் தோர்க்கும்'' அவ்வவர் பொருளாய்'' (சிவஞானசித்தி - சுபக்கம் - பாயிரம் - மங்கல வாழ்த்து) என்றாற் போல்வன இதனொடு மாறுகொள்ளாமை அறிக.*

*இதனால், புறச் சமயங்கள் வீடாகிய பேரின்பத்தைப் பயவாமையேயன்றிப் பிறவியாகிய பெருந்துன்பத்தை மிகுவித்தல் கூறப்பட்டது.*

**1514.** *தெளிவுரை :- சிவம் அல்லது வேறு பதிப்பொருளும், சிவமாம் பயனைத் தருகின்ற தவம் அல்லது வேறு தவமும் இல்லை. ஆறாகக் கூறப்படுகின்ற புறச்சமயங்கள் தம்மை அடைந்தவர்க்கு இவ்வுலகில் வீண் முயற்சியாவதன்றி வேறு இல்லை. அதனால், அவை தவமாதல் இல்லை. ஆகையால் மெய்ப்பொருளை அடைய விரும்புகின்றவர்களே, நீங்கள் சிவபெருமானது திருவடியைச் சார்ந்து பிழைமின்கள்.*

*குறிப்புரை :- 'சிவம் அல்லதில்லை அறையே' என்பது பாடமாயின், 'சிவம்' என்பதன்றிப் 'பொருள் பொதிந்த சொல்*

**1515.** அண்ணலை நாடிய ஆறு சமயமும்
விண்ணவ ராக மிகவும் விரும்பியே
முண்ணின் றழியும் முயன்றில ராதலின்
மண்ணின் றொழியும் வகைஅறி யார்களே. **6**

---

*வேறில்லை' என உரைத்து, 'சிவமன்றி வேறு மெய்ப்பொருள் இல்லை' என்பது அதனாற் போந்த பொருளாகக் கொள்க. "சிவமாந் தவம்" என்பதில், பெயரெச்சம், 'நோய் தீரும் மருந்து' என்பது போலத் 'தவமல்லது இல்லை தவம்' என ஒருசொல் வருவிக்க. ''அவம்'' என்பதன்பின், 'ஆதல்' என்பது எஞ்சிநின்ற கருவிப்பெயர் கொண்டது. 'அவை தவமல்ல' என எழுவாய் வருவித்துக் கொள்க. "நீர்" என்றது உண்மையைத் தலைப்பட விரும்பினோரையாதலின், அவரே விளிக்கப்படுவாராயினர். ''சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு" (கொன்றை வேந்தன்) என்றார் ஔவையாரும்.*

*இதனால், 'புறச் சமயம் வேறு முயற்சியைப் பயத்தலல்லது' பயன் தாராமை கூறப்பட்டது.*

**1515. *தெளிவுரை :-*** ***சிவபிரானை இகழாது போற்றுகின்ற அகச் சமயங்கள் ஆறிலும் நிற்போர் அவ்வச்சமயக் கடவுளரது உலகத்தை அடைந்து இன்புற்றிருக்க, புறச் சமயிகள் அவற்றை விடுவித்துப் பிற விண்ணுலகங்களை அடைதலை மிகவும் விரும்பி, வினைக்கட்டி னின்றும் வெளிப்படமாட்டாது, அதனுள் நின்றே அழிகின்ற அவச் செயலால், அவர்கள் பிரகிருதிக்கு மேல் செல்லும் வழியை அறியாதவர் களேயாவர்.***

***குறிப்புரை :-*** ***'ஆறு சமயமும்' என்பது இரட்டுற மொழிதலாய், 'வேறு விண்ணவர் ஆக' எனப்பொருள் தந்து, "மிகவும் விரும்பியே" என்பதனோடும் இயைந்தது. "முள்" என்றது முட்புதரை. 'வினையைக் காடாக உருவகித்துக் கூறலும் மரபு' என்பது, ''நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்.... (தி.10 ஆறாம்தந்திரம்) என இதனுட் பின்வருதலும், "இருவினை மாமரம்" (தி.8 திருவண்டப். 87) என்றமையும் போல்வன பற்றி உணர்க. முயற்று - முயற்சி; என்றது தவத்தையாகலின், 'அதனை யிலர்' என்றது. அவச்செயலை உடையாராதலைக் குறித்தது. "மண்" என்றது அது முதல் பிரகிருதி காறும் உள்ள தத்துவங்கட்கு உபலக்கணமாய், அவ்வத் தத்துவ புவனங்களின் மேல் நின்றது.***

*அகச்சமயம் ஆறாவன:- பாசுபதம், மாவிரதம், வைரவம், சாத்தம், காணாபத்தியம், கௌமாரம் என்பன. காபாலமும்,*

**1516.** சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்
பவகதி பாசப் பிறவிஒன் றுண்டு
தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில்
அவகதி மூவரும் அவ்வகை ஆமே. 7

---

*காளாமுகமும், பாசுபதம், மாவிரதம் என்பவற்றுள்ளே அடங்கும், 'சாத்தம்' என்றது சுத்த சாத்தத்தையே; வாம மதத்தையன்று. இம்மதங்களில் நிற்போர் சிவதீக்கை பெறுதலில்லையாயினும், உருத்திரன் முதலியோரைச் சிவனது மூர்த்தி பேதங்களாகக் கருதி வழிபடுதலும், சிவனைத் தேவருள் ஒருவனாக வைத்து இகழ்தல் இன்மையும் உடைய ராகலின், இவரை "அண்ணலை நாடியசமயர்" என்றும், இவர் பிரகிருதிக்கு மேல் உள்ள சீகண்ட வுருத்திரர் முதலிய உருத்திரலோகங்களை அடைவர் ஆகலின் பிறரை "மண்ணின் றொழியும் வகையறி வார்களாய், விண்ணவராவர்" என்றும் அருளிச் செய்தார். இவருள் பாசுபதர் மதம் முதலியவற்றையே பொதுமையில் 'சைவம்' எனவைத்து, 'சைவம், வைணவம், சாத்தம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம்' எனச் சமயங்கள் ஆறு என்பாரும் உளராயினர். சைவத்தை நீக்கி, 'சௌமியம்' என்பது கூட்டி, 'ஆறு' என்பாரும் ஒருசாரார்.*

*'உலகாயதர் விண்ணவராக விரும்புதல் இன்மையின்' அங்ஙனம் விரும்புபவராகக் கூறியது புத்தர் முதலிய பிறரையேயாம். அவரெல்லாம் தாம் தாம் ஓர் உலகத்தை முத்தியுலகமாகக் கற்பித்துக் கொண்டு அவற்றின்கண் செல்ல விரும்பினாராயினும், அவர் அடைவது பிரகிருதிக்குக் கீழ் உள்ள தத்துவ புவனங்களையே என்பது நாயனாரது திருவுள்ளமாதலின் அவரை, 'மண்ணின்றொழியும் வகையறியாதவர்' என்று அருளிச் செய்தார்.*

*இதனால், புறச்சமயங்கள் பிரகிருதியைக் கடப்பிக்க மாட்டாமை கூறப்பட்டது.*

***1516. தெளிவுரை :-** சிவனது உலகத்தையும், சிவனையும் அடைவதே பிறவியற்ற முத்தியாம். அவையன்றி, 'முத்தி' எனப் பிறராற் கூறப்படுவன எல்லாம் முத்தியல்லாத பிறப்பு நிலையேயாம். அதனால், அவைகளில் எல்லாம் பாசத்தால் வருகின்ற பிறவியாகிய ஒரு பெருந் துன்பம் இருக்கவே செய்யும். அதனால், சிவனை நோக்கிச் செய்யப்படு வனவாகிய சரியை முதலிய நெறிகள் ஒருவனுக்குக் கிடைக்குமாயின், முத்தியுலகம் அல்லவாய்ப் பிறவி யுலகங்களாகிய 'அயன், அரி, அரன்' என்னும் குணமூர்த்திகள் மூவரது பதவிகளும் அத்தன்மையவாய்ப் போம்.*

**1517.** நூறு சமயம் உளவாம் நுவலுங்கால்
ஆறு சமயம்அவ் ஆறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
ஈறு பரநெறி இல்லா நெறியன்றே. **8**

---

***குறிப்புரை :-*** *அஃதாவது, 'அவன் அப்பதவிகளை எய்தாது, மேற்கூறிய சாலோகம் முதலியவற்றையே அடைவான்' என்பதாம். "கதி" என்றது பத முத்தி பரமுத்திகளை. பத முத்தியடைந்தோரும், "நாதனே முன்நிற்கின்" (கொன்றைவேந்தன்) பரமுத்தியை அடைவர் ஆதலின், அதுவும் 'பிறவியற்ற நிலை' எனப்பட்டது.*

*ஒன்று - ஒன்றாய் பெரிய துன்பம். 'உண்டே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தல். தவகதி - தவமாகிய நெறி. தவமாவது சரியை முதலியனவேயாதல் அறிக. 'அதனொடு நேர்தலாகிய ஒரு பேறு வாய்க்குமாயின்' என்க. "மூவர்" என்றது ஆகுபெயர்.*

*இதனால், அகச் சமயங்களை மேல்; 'அண்ணலை நாடிய' சமயங்களாகக் கூறினமை பற்றி, அவையும் தவநெறிபோலும்' எனவும், அவற்றால் அடையும் நிலைகளும் 'முத்திபோலும்' எனவும் நிகழும் ஐயம் அறுக்கப்பட்டது.*

**1517. *தெளிவுரை :-*** *சமயங்களைப் பற்றிச் சொல்லுமிடத்துச் சிறியனவும், பெரியனவும் ஆகிய பல வேறுபாடுகளால் சமயங்கள் மிகப் பலவாய் உள்ளன. 'அகம், புறம்' என்பவற்றுள் 'ஆறு' என ஒருவாறு வரையறுத்துக் கூறப்படும் சமயங்கள் மேற்கூறிய பலவற்றுள்ளே உள்ளனவாம். அங்ஙனம் சொல்லப்படும் சமயங்கள் பலவும் 'உண்மை' எனக் கொண்ட நெறிகளிலே மக்கள் நின்று இறுதியாக அடையும் மேலான நெறி, மேற் கூறிய அவற்றுள் ஒன்றிலும் இல்லாத நெறியாம்.*

***குறிப்புரை :-*** *'அந்நெறி சித்தாந்த சைவமாம்' என்பதே நாயனாரது திருவுள்ளமாதலும், அந்நெறி பிற சமயங்களில் இல்லாமையும் இத்தந்திரத்தின் தொடக்கத்திலே அருளிப் போந்த மந்திரங்களான் அறிக. "நூறு" என்றது, 'மிகப் பல' என்றவாறு. "ஆறு" எனப் பொதுப்பட அருளிச் செய்ததனால், அகம், புறம் இரண்டும் கொள்ளப்படுவன ஆயின. பின் வந்த ஆறு, நெறி. 'ஆற்றுள்', 'ஈற்று' என்னும் ஒற்றுக்கள் தொகுத்தல் பெற்றன. நில்லா - நின்று. 'அவற்றுள் இல்லா நெறி' என்க.*

*இதனால், 'சித்தாந்த சைவத்துக்கு நிகராகாமை பற்றி இங்கு இகழ்ந்து கூறினும், பிற சமயங்கள் அதற்குப் படிகளாய் உள்ளன' எனக் கூறி, ஐயம் அறுக்கப்பட்டது*

**1518.** கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவன்எங்கும் தோய்வற்று நிற்கின்றான்
குற்றந் தெரியார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பார்களே. **9**

---

1518. ***தெளிவுரை :-*** *தம் குரல் பிற உயிர்கட்கெல்லாம் கடியனவாய் வெறுக்கப்படுதலை அறியாது உவகையால் உரத்துக் கத்துகின்ற கழுதைகள்போலப் பாழ்நெறி நூல்களை உரத்து ஓதுகின்ற கன்மிகள், தம் குற்றத்தை உணர மாட்டார்கள். தூயனவாகிய சிவன் எல்லாப் பொருளிலும் நிறைந்து நின்றும், ஒன்றிலும் தோய்வின்றி நிற்கின்ற சிறப்பை அறிவு நூல்களைக் கற்கும் முகத்தால் உணர்ந்து பாராட்ட மாட்டார்கள். மற்று, மயக்கம் மிகுந்து, வீணே பிறந்தும், இறந்தும் உழல்வார்கள்.*

***குறிப்புரை :-*** *"கத்தும்" என உடம்பொடு புணர்த்ததனால் பயனில்லாத நூல்களாம். உவமை அதுபற்றியதாகலின் உவமிக்கப்பட்டார் பயனில்லாத நூல்களை ஓதுபவராயினர். பாராட்டிக் கற்கின்றவர்களைக் குறித்து.*

*அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா*
*துலகநூல் ஓதுவ தெல்லாம் - கலகல*
*கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்*
*போஓந் துணையறிவா ரில். - நாலடி, 40*

*என்றார் பிறரும். கலதி - முகடி; ''கலதிகள்'' என்றது, 'நல்வினையில்லார்' என்றதாம். "சுத்த சிவன்" என்றது, 'பிறவற்றிற் கலந்தும் அந்நிலை கெடான்' என்றற்கு. 'தோய்வுற்று' என்பது பாடமன்று. "குற்றந் தெரியார்" என்பதை முதலடியின் இறுதியிற் கூட்டி யுரைக்க. 'குற்றந் தெரியார்' என்பது பாடமாயின், அஞ்ஞானமாகிய குற்றம் நீங்கப் பெறார்; அதனால், குணங்கொண்டு கோதாட்டார்' என்க. 'அக்குணங் கொண்டு' எனச் சுட்டு வருவித்து உரைக்க. கோதாட்டல் - பாராட்டல்.*

*"குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி"*
*- தி.8 திருவம்மானை - 20*

*என்று அருளிச் செய்தார் வாதவூரடிகளும், மூன்றாம் அடி இன வெதுகை பெற்றது.*

*இதனால், பிற சமயங்களின் நிற்பாரது கல்வியின் இழிவு கூறப்பட்டது.*

**1519.** மயங்குகின் றாரும் மதிதெளிந் தாரை
முயங்கி இருவினை மூழை முகப்பா
இயங்கப் பெறுவரேல் ஈறது காட்டில்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி ஆமே. 10

---

**1519.** *தெளிவுரை :- புறச் சமயங்களில் நின்று அறிவு மயங்குகின்றவர்களும் சைவசமயத்தை அடைந்து அறிவு தெளிந்தவர்கள்பால் சென்று கூடி, இருவினைப் பயன்கள் அகப்பையால் முகக்கும் அளவில், உடலூழாய்க் கழியும்படி ஒழுகு வல்லவராயின், அவர்கட்கு அவ்வுடல் வாழ்க்கை முடிகின்ற நிலை தோன்றும்பொழுது யம பயம் இல்லாது ஒழிய, ஒப்பற்ற பரமுத்தி நிலை கிடைக்கும்.*

*குறிப்புரை :- "மயங்குகின்றாரும்" என்னும் உம்மை இழிவு சிறப்பு. 'தெளிந்தாரும்' என்பது பாடமன்று. மூழை - அகப்பை. மூழை முகப் பதாவது உணவை முகக்கின்ற அகப்பை அதனை முகந்தொழிதல் அல்லது உண்ணுதல் இன்றி வாளா புறத்தே ஊற்றிவிடுதல் போல இருவினைகளின் பயனாகிய இன்பத்துன்பங்களை விருப்பு வெறுப்பின்றி உடலூழாக்கிக் கழியவிடுதல். இந்நிலை திருவருள் நெறியில் நிற்பார்க்கல்லது கூடாமையானும், திருவருள் நெறி சைவ சமயத்தில் அல்லது இல்லாமையானும், 'புறச் சமயத்தவர் சைவ சமயிகள்பால் பகை பாராட்டாது நட்புக்கொண்டு பழகுவாராயின், பேரின்பமாகிய நலத்தைப் பெறுவர்' என்றார்.*

*நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்*
*கினத்தியல்ப தாகும் அறிவு. - குறள், 452*

*எனவும்,*

*கல்லாரே யாயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின்*
*நல்லறிவு நாளுந் தலைப்படுவர். - நாலடி, 39*

*எனவும் கூறப்படுதல் அறியத்தக்கது. "காட்டில்" என்பது 'தோன்றில்' எனத் தன் தன்வினையாய் நின்றது. "கெட்டு" என்பதனை, 'கெட' எனத் திரிக்க. "அவர்க்கு" என்பதனை, "பெறுவரேல்" என்பதன் பின்னர்க் கூட்டி உரைக்க. "ஈறது.... ஆமே" என்பதற்குப் பிறவாறும் உரைப்ப.*

**1520.** சேயன் அணியன் பிணிஇலன் பேர்நந்தி
தூயன் துளக்கற நோக்கவல் லார்கட்கு
மாயன் மயக்கிய மானுட ராம்அவர்
காயம் விளைக்கும் கருத்தறி யார்களே. **11**

**1521.** வழியிரண் டுக்கும்ஓர் வித்தது வான
வழியது பார்மிசை வாழ்தல் உறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழிவறி வார்நெறி நாடகில் லாரே. **12**

---

*இதனால், புறச் சமயத்தவரும் சைவ சமயிகளை அடையின் பயன் பெறுதல் கூறப்பட்டது.*

**1520.** *தெளிவுரை :-* *சேயர்க்குச் சேயனாயும், அணியர்க்கு அணியனாயும் நின்று, ஒன்றிலும் தொடக்குண்ணாதிருக்கின்ற அவனது பெயர் 'நந்தி' என்பதாகும். அவன்தன்னை அலைவின்றி ஒரு பெற்றியே நோக்கி நிற்பார்க்குத் தெளிவைத் தருபவனாயும், அங்ஙனம் நோக்காதார்க்கு மயக்கத்தைத் தருபவனாயும் இருக்கின்றான். அவனது மாயத்தால் மயங்கிய மக்களாகிய புறச்சமயிகள் தமக்குக் கிடைத்துள்ள மக்கள் உடம்பு தரும் பயனை அறியும் அறிவிலராய் அப்பயனை இழப்பர்.*

*குறிப்புரை :-* *'சேயன் அணியன் ஆகிய பிணியிலனது பேர் நந்தி' என்க. பிணி - பிணிப்பு; முதனிலைத் தொழிற்பெயர். சேயன் முதலிய மூன்றும் எதிர்மறை வினைக்குறிப்புப் பெயர். பின்னர், ''மாயன்'' என்றலின், ''தூயன்'' என்பது அதன் மறுதலையை உணர்த்திற்று. மாயன் - மாயத்தை - மயக்கத்தை - செய்பவன். 'துளக்கற்ற நோக்குவார்க்குத் தூயன்'. எனவே, மாயனாதல், அங்ஙனம் நோக்காதார்க்காயிற்று. ஐந்தொழிலில் அருளலையே 'தெளிவித்தல்' எனவும், மறைத்தலையே 'மயக்குதல்' எனவும் கூறினார். இவை இரண்டும் அவரவரது பக்குவம் பற்றியாம். அதனால், பக்குவம் இல்லாதார் புறச் சமயங்களையே 'மெய்ச்சமயம்' என மயங்கி, மக்கட் பிறப்பின் பயனை எய்தாதொழிவர் என்பதாம்.*

*"பரசம யங்கட் கெல்லாப் பாக்கியம் பண்ணொ ணாதே"*

*என்ற சிவஞான சித்தியையும் (சூ.2-91) நோக்குக.*

*இதனால், புறச் சமயங்களின் நீங்குதல் பக்குவம் இல்லாதார்க்குக் கூடாமை கூறப்பட்டது.*

**1522.** மாதவர் எல்லாம்மா தேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப் படும்நந்தி
பேதம்செய் யாதே பிரானைஎன்று கைதொழில்
ஆதியும் அந்நெறி ஆகிநின் றானே. 13

---

**1521. *தெளிவுரை :-*** *'பிறப்பு, வீடு' என்னும் இருவழிகட்கும் வித்தாய் உள்ளது, நிலவுலகில் வாழ்தலாகிய ஒரே வழியாம். அதனால், இவ்வுலகில் வாழ்பவர் யாவராலும் அடையப்படுவது, பிறவிச் சூழலின் நிலையை அறிந்து, அதனை அகற்ற வல்ல ஆசிரியனது உபதேசமாகிய வழியே. ஆயினும், அத்தகைய ஆசிரியன் உளனாதலைக் கண்டு வைத்தும், தாம் கெடும் நெறியை அறிந்து அந்நெறியிலே செல்வோர் அவ்வாசிரியன் அறிவுறுத்தும் நெறியைப் பெற விரும்புதல் இலர்.*

***குறிப்புரை :-*** *"உறுதல்" என்றது, அதன் செயப்படுபொருள் மேல் நின்ற ஆகுபெயர். "சுழி" என்பதற்கு, 'தலைப்பொறி' என உரைப்பினும் ஆம். 'சொல்லாகிய வழி' என்க. 'முன்னின்றும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'அந்நெறி' எனச் சுட்டு வருவித்து உரைக்க.*

*இதனால், புறச் சமயிகள் நல்லாசிரியரை யடுத்து நன்னெறியை உணர அறியாமை கூறப்பட்டது.*

**1522. *தெளிவுரை :-*** *பெரிய தவத்தையுடையோர் யாவரும், 'மகா தேவன்' என்பதைத் தன் பெயராக உடைய சிவனே முதல்வன் என ஒருபடித்தாகக் கூறுவர். அதனால், அவர் கூறியவாறே அறியப்படுபவ னாகிய சிவனைச் சிறிதும் வேறுபடாத அக்கருத்துடன், 'முதல்வனே' என்று அழைத்துக் கும்பிட்டால், அந்தச் சிவனும் நன்னெறியாய் நின்று நலம் தருவான்.*

***குறிப்புரை :-*** *நாதம் - தலைமை. பிரான், அண்மை விளி. பயனிலைப் பெயராகக் கொண்டுரைப்பின். அது முன்னரே கூறப்பட்டதாதல் அறிக. ''நந்தியை'' என்னும் இரண்டனுருபு தொகுத்தல் பெற்றது. "அந்நெறி" என்பதே, 'அம் நெறி' எனப் பிரித்துப் பொருள் கூறுக. அம் - அழகு; நன்று. 'அந்நெறி' எனச் சுட்டாகவே கொள்ளின், 'தானே பிரானாம் நெறி' என உரைக்க.*

*இதனால், 'சிவ நெறி யல்லாதன பலவும் அறியாதார்*

**1523.** அரநெறி அப்பனை ஆதிப் பிரானை
உரநெறி யாகி உளம்புகுந் தானை
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரனறி யாவிடிற் பல்வகைத் தூரமே. 14

**1524.** பரிசறி வானவன் பண்பன் பகலோன்
பெரிசறி வானவர் பேற்றில் திகழும்
துரிசற நீதினை தூய்மணி வண்ணன்
அரிதவன் வைத்த அறநெறி தானே. 15

---

*கொள்ளும் மயக்க நெறியே' என்பது கூறப்பட்டது.*

**1523.** *தெளிவுரை :- 'உலகியலின் மேம்பட்ட வீட்டு நெறியாது' என்று ஆராய்கின்ற அன்பர்களது உள்ளம், சிவ நெறித் தந்தையும், முதற் கடவுளும், ஞான நெறியாய் ஞானிகளது உள்ளத்து விளங்கு பவனும் ஆகிய சிவனை அறியா தொழியுமாயின், அவ்வுள்ளங்கள் பலவகையாலும் வீட்டு நெறிக்கு மிகச் சேய்மைப்பட்டனவேயாகும்.*

*குறிப்புரை :-*

*பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையும் என்றும்*
*விரவிய துயர்க்கீ றெய்திவீடுபே றடைது மென்றல்*
*உருவமில் விசும்பின்தோலை உரித்துடுப்பதற்*
*கொப்பென்றே*
*பெருமறைபேசிற்றென் னின்பின்னுமோர்சான்று*
*முண்டோ.*

**- *கந்தபுராணம், தட்சகா, உபதேசப், 25***

*எனவும்,*

*மானிடன் விசும்பைத்தோல்போல் சுருட்டுதல்*
*வல்லனாயின்*
*ஈனமில் சிவனைக் காணா திடும்பைதீர் வீடு மெய்தும்*
*மானமார் சுருதி கூறும் வழக்கிவை ஆத லாலே.*
*ஆனமர் இறையைக் காணும் உபாயமேயறிதல் வேண்டும்*

**- *காஞ்சிப் புராணம், சனற்குமாரபடலம், 43***

*எனவும் இதனை மொழிபெயர்த்துக் கூறியவற்றையும் இங்குக்*

**1525.** ஆன சமயம், அதுஇது நன்றெனும்
மான மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த உருவது வாமே. **16**

---

*காண்க. உரம் - அறிவு. "உரனென்னும் தோட்டி" (குறள், 24) என்பதும் காணத்தக்கது. "பரன்" என்பதை அவ்விடத்துத் தொகுக்கப்பட்ட இரண்டனுருபை விரித்து, "புகுந்தானை" என்பதன்பின் கூட்டி உரைக்க.*

*இதனால், புறச்சமயங்கள் வீட்டுநெறி ஆகாமை கூறப்பட்டது.*

**1524.** *தெளிவுரை :- மாணவனே, உயிர்களது வினையின் தன்மைகளை அறிந்து அவற்றிற்கு ஏற்ப அவைகளைப் படைப்புத் தொழிலிற் படுத்துகின்ற பிரமன், உயர்குணமாகிய 'சத்துவ குணத்தை உடையன்' எனக் கூறப்படுகின்ற மாயோன், பகலவன், மக்களோடு படுத்து நோக்குங்கால் உயர்ந்தோராக எண்ணப்படுகின்ற இந்திரன் முதலிய தேவர்கள் இவர்களது பதவியில் விளங்க விரும்பும் உனது விருப்பம் அரும்படி நீதூய மாணிக்கம் போலும் நிறத்தை உடைய சிவனைநினை; ஏனெனில் அவன் அருளிச்செய்த சிவநெறி ஒன்றே அடைதற்கு அரிய நல்ல நெறியாகும்.*

*குறிப்புரை :- பெரிது, 'பெரிசு' என மருவிற்று. அப்பண்புகொள் பெயர். 'பெரும்பொருள்' என நின்று, உயர்வை யுடையாரைக் குறித்தது. அன்றி ஆகுபெயராய் நின்ற பண்புப்பெயர்' என்றலுமாம். 'பெரிசாக' என ஆக்கம், வருவிக்க. "திகழும்" என்பது திகழ விரும்பும் காரணத்தின்மேல் நின்றது. 'வண்ணனை, என்னும் இரண்டனுருபு தொகுத்தல் பெற்றது. அருமை, நிலையுடையதாதல் பற்றிக் கூறப்படுவது.*

*இதனால், புறச்சமயங்கள் பிற தேவர்களது பதவிகளை நிலையுடையனவாகக் கருதும் குற்றத்தைப் பயப்பனவாதல் கூறப்பட்டது.*

**1525.** *தெளிவுரை :- 'அதுவே பொருத்தமான சமயம், இதுவே நன்றான சமயம்' என ஓரோர் காரணம் பற்றிப் பற்றுக் கொண்டு பிதற்றுகின்ற மக்களது பிதற்றலால் உண்டாகின்ற மயக்கம் உம்மை விட்டு நீங்க, நீவிர் நாதம் கடந்த கடவுளாகிய சிவனை நினையுங்கள்; ஏனெனில், அந்த நினைவே குற்றமற்ற வகைமையைத் தருவதாம்.*

**1526.** அந்நெறி நாடி அமரர் முனிவரும்
சென்னெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்
முன்னெறி நாடி முதல்வன் அருளிலார்
செந்நெறி செல்லார் திகைக்கின்ற வாறே. 17

**1527.** உறுமா றறிவதும் உள்நின்ற சோதி
பெறுமா றறியிற் பிணக்கொன்றும் இல்லை
அறுமா றதுவான அங்கியுள் ஆங்கே
இறுமா றறிகிலர் ஏழைகள் தாமே. 18

---

*குறிப்புரை :- மானம் - அபிமானம். 'மாயம்' என்பது பாடமன்று. "மனிதர் மயக்கம்" என்னும் ஆறாவதன் தொகை 'வாளது வெட்டு' என்பதுபோல நின்றது. ''மயக்கமது'' என்னும் அது, பகுதிப்பொருள் விகுதி. 'ஒழிய' என்பதன் ஈற்று அகரம் குறைந்து நின்றது. அன்றி வினைத்தொகையாக்கி, 'ஒழிக்கின்ற கடவுளை' எனலுமாம். ''கானம்'' என்னும் இசையின் பெயர் சொல்லொற்றுமையால் நாத தத்துவத்தைக் குறித்தது. "உரு" என்பது 'வண்ணம்' என்னும் பொருட்டன்மையை உணர்த்திற்று. உருவைத் தருவதனை "உரு" என்றார்.*

*இதனால், புறச்சமயிகள் தம்மில் ஒற்றுமையிலாராய் மாறுபட்டுப் பலதலைப்பட்ட கருத்துக்களைக் கூறி மக்களை அலைக்கழிப்பவராதல் கூறப்பட்டது.*

*"தம்மை - உணரார்; உடங்கியைந்து தம்மிற்*
*புணராமை கேளாம் புறன்"*

*என்றார் சிவஞான போத (அவையடக்க)த்திலும்,*

**1526.** *தெளிவுரை :-* தேவர்களும், முனிவர்களும் 'சிறப்புடைய நெறியாது' என ஆராய்ந்து உணர்ந்து சென்ற நெறியையே நேரிய நெறியாகக் கொண்டு ஒழுகி, அதனால், சிவனேயாய் நின்ற பேற்றினைப் பெற்றார் சத்திநிபாதர். மற்றுச் சத்திநிபாதம் இல்லாதவர் தம் மனம் சென்ற நெறியையே நேரிய நெறியாக்கொண்டு முற்கூறிய நேரிய நெறியிற் செல்லமாட்டாது, பிறவிக் கடலுட் கிடந்து கலங்குகின்றது இரங்கத்தக்கது.

*குறிப்புரை :- 'இரங்கத்தக்கது' என்பது சொல்லெச்சம். அம்நெறி - அழகியநெறி. ''முதல்வன் அருள்'' என்றது*

**1528.** வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையம்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. **19**

---

*சத்திநிபாதத்தை, பின்னதில், "அருளிலார்" என்பதனால், முன்னதில் "அஃது உடையார்" என்பது பெறப்பட்டது. முன்நெறி வினைத்தொகை.*

*இதனால், புறச்சமயங்கள் சத்திநிபாதம் வாயாத உலகர்க்கே உரியனவாய்ப் பிறவிக் கடலைக் கடப்பியாமை கூறப்பட்டது.*

1527. ***தெளிவுரை :-*** *அடையத்தக்க நல்ல நெறியை அறிய எழுகின்ற அறிவைச் சாருமாற்றை அறிந்துவிடுமாயின், பிழை யாதும் இல்லையாகும். ஆனால், அறிவில்லாத மக்கள், குற்றங்கள் யாவும் எரிந் தொழிதற்கு ஏதுவாம் நெருப்பாகிய அந்த அறிவினுள் புகுந்து தம் அல்லலை ஒழியுமாற்றை அறிகின்றார்களில்லை.*

***குறிப்புரை :-*** *'அதனால், அவர்கள் புறநெறிகளிற் சென்று அல்லல் உறுகின்றார்கள்' என்பது குறிப்பெச்சம். "அறிவது" என்றது அறிவை. உம்மை சிறப்பு அறுதற்கும், இறுதற்கும் வினை முதல்கள் வருவிக்கப்பட்டன.*

*இதனால், புறச் சமயங்கள் மயக்க அறிவினையுடையார்க்கு ஆவன ஆதல் கூறப்பட்டது.*

**1528.** ***தெளிவுரை :-*** *பிறவிச்சுழலிலே கிடந்து எய்துகின்ற துன்பங்களையெல்லாம் போக்கி, அதனால், அறிவுடையவர் பழிக்கும் பழியையும் போக்கிக்கொள்ள விரும்புவார்க்கு நிலத்திலே பயணம் செய்தல் போன்ற நல்லவழி ஒன்று உண்டு. அதைப் போற்றி அடைதல் அத்துன்பங்கள் நீங்கும் காலம் வரப்பெறாதோ ரெல்லாம் சுழிவழியே பயணம் செய்வோர் போலப் புறச் சமயிகள் கூறும் கற்பனை உரைகளை 'மெய்' என்று கேட்டு அவற்றின்படியே நடப்பர்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, முதலடியில், "வையம்" என்பதனை முன் வைத்து, "பரவலும் ஆம்" என்பதற்கு முன்னே கூட்டி உரைக்க. "வையத்தின்கண் வழி நடக்கும்" என்க. தரை வழியாகப் பயணம் செய்வோர் துன்பம் இன்றிக்குறித்த இடத்தை அடைதலும், சுழிவழியாகப் பயணம் செய்வோர்*

**1529.** வழிசென்ற மாதவம் வைக்கின்ற போது
பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே
வழிசெல்லும் வல்வினை ஆர்திறம் விட்டிட்டு
உழிசெல்லில் உம்பர் தலைவன்முன் ஆமே. **20**

---

*ஓரிடத்தும் தரையை அடையாவிடின் சுழன்று கொண்டே இருப்பவராதலும் அறிக. காலம், சத்தி நிபாதம் காலம், "ஒன்று உண்டு" எனக்கூறியொழிந்தமையால், 'அஃது அருமறையாய், (அரிய இரகசியமாய்) தக்கார்க்கே உணர்த்தப்படுவது' என்னும் குறிப்பினதாயிற்று. அவ்ஒன்றாவது, சித்தாந்த சைவமாம்.*

*இதனால், புறச் சமயங்கள் வெறும் சுழற்சியாய்ப் பயன் தாராது உலகரை மயக்கி நிற்பனவாதல் கூறப்பட்டது.*

**1529. *தெளிவுரை :-* "வையத்தின் கண் வழி நடக்கும் பரிசு ஒன்று உண்டு" என மேற்கூறப்பட்ட வழியிலே சென்றதாகிய பெரிய தவம் தனது பயனைக் கொடுக்கின்ற காலத்தில் மக்கள் தங்கட்குப் பழிவரக் கூடியதான வலிய வினைக்கட்டினை அறுத்தொழித்து, அது காரணமாக, முன்பெல்லாம் அழிவு வழியில் சென்று கொண்டிருந்த அச்செயலில் பொருந்துதலாகிய தன்மையை விடுத்து நல்ல இடத்தை அடைவர். அங்ஙனம் அடைந்தால், தேவர் பிரானாகிய சிவன் வெளிநின்று அருள் புரிவான்.**

***குறிப்புரை :-* 'வைக்கின்ற' என்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 'வாய்க்கின்ற' எனப்பாடம் ஓதலுமாம். பழி, அறிவுடையோர் பழித்துச் சொல்லும் சொல். "அழி" என்னும் முதனிலைத் தொழிற்பெயர் அதனைத்தரும் வழியை உணர்த்திற்று. 'அழிவில் செல்லும் அவ்வினை' என்க. ஆர்தல் - பொருந்துதல். "உழி" என வாளா கூறினமையின், சிறந்த இடமாயிற்று. அது, ஞானமாகிய நிலம் என்க. "செல்லில் என்ற அனுவாதத்தால், 'செல்லுவர்' என்பதும் பெறப்பட்டது.**

***இதனால், தவம் உடையார்க்கே புறச்சமய மயக்கம் நீங்கிய பயன் உண்டாதல் கூறப்பட்டது. தவமாவது, மேற்கூறிய சரியை முதலிய மூன்றுமே யாதலை நினைக. இங்கு, "மாதவம்" என்றதும் அதனைக் குறித்தற் பொருட்டேயாம்.***

## 19. நிராசாரம்

*புறச்சமயங்களின் தன்மை கருதி இகழ்ந்தொதுக்கிய நாயனார், சைவ சமயத்தைச் சார்ந்தும் அதன் நெறியில் ஒழுகாதவர் புறச் சமயிகள் போலவே பயன் பெறாதொழிதல் பற்றி அவரது இழிபினை அச்சமயங்களின் இழிபை அடுத்து ஏழு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*ஆசாரம் - ஒழுக்கம். நிராசாரம் - ஒழுக்கம் இன்மை. சிவஞான சித்தியிலும் "புறச்சமய நெறிநின்றும்" (சூ.8-11) எனத் தொடங்கி, "சென்றால் சைவத்திறத்தடைவர்; இதில் சரியை, கிரியா யோகம் செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்'' எனவும், "சைவமாம் சமயம் சாரும் ஊழ்பெறல் அரிது; சால உயர் சிவ ஞானத்தாலே - போழிள மதியினானைப் போற்றுவார் அருள் பெற்றாரே" (சூ. 2-91) எனவும் கூறியவாறறிக. இவ்வதிகாரத்தை, 'நிராகாரம்' என்றல் பாடமன்று.*

**1530.** சிமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு
சமையங்கள் பெற்றனர் சாத்திரம் ஓதி
அமைவறிந் தோம்என்பர் ஆதிப் பிரானும்
கமையறிந் தாருள் கலந்துநின் றானே. 1

---

**1530.** *தெளிவுரை :- மலைபோன்றவர்களாக மதிக்கப்படுகின்ற தேவர் பலருக்குரிய புறச்சமயங்களைத் தமக்கு உரியனவாகக் கொண்டோர் அவற்றின் நூல்களை ஓதி, 'அதனால், நிறை நிலையை அறிந்து விட்டோம்' என்று பெருமை பேசிக்கொள்வார்கள். ஆயினும், முதற் கடவுளாகிய சிவபெருமான் அவர்களது உள்ளத்தில் தோன்றாது மறைந்து, பொறையுடைமை, வெகுளாமை முதலிய ஒழுக்கங்களை உடையவரது உள்ளத்திலே விளங்கி நிற்கின்றான்.*

*குறிப்புரை :- சிமயம் - மலை. ஆக்கம், உவமை குறித்து நின்றது. 'மலைபோல்வாராக மதிக்கப்படுதல். அறிவு நிரம்பாதாரால்' என்க. 'இமையங்கள்' என்பது பாடமன்று. ''சிமையம், சமையம்'' என்பவற்றில் அகரத்திற்கு ஐகாரம் போலியாய் வந்தது. அமை, முதனிலைத் தொழிற்பெயர். அமைதல் - நிரம்புதல். கமை - பொறை. இது மற்றைய ஒழுக்கங்கட்கு உபலக்கணம். 'புறச்சமய நூல்களையே உண்மை நூல்கள் என மயங்கினாராயினும், அவை பற்றிப் பிற*

**1531.** **பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி**
**தாங்கு மனிதர் தரணியில் நேரொப்பர்**
**நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்**
**ஏங்கி உலகில் இருந்தழு வாரே.** **2**

---

*சமயங்களைப் பழித்து நிற்றலை விடுத்து, அவை கூறும் ஒழுக்கத்தை உடையராயி னார்க்குச் சிவன் அருள்புரிவன்' என்றவாறு. இதனானே சிவநூலை ஓதினார்க்கும் இது குறிப்பாற் கூறப்பட்டவாறு அறிக.*

*இதனால், நூல்களை ஓதியவழியும் ஒழுக்கம் இல்வழிப் பயன் இன்றாதல் கூறப்பட்டது. இதனை,*

*"ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்"*

*- கொன்றை வேந்தன், 11*

*மறப்பினும் ஒத்துக்கொளலாகும்; பார்ப்பான்*
*பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.*

*- குறள், 134*

*என உயர்குலத்தோர்மேல் வைத்தும்,*

*"ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்*
*ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"*

*- முதுமொழிக்காஞ்சி*

*ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்*
*பேதையிற் பேதையார் இல்.*

*- குறள், 835*

*எனப் பொதுப்பட வைத்தும் பிறவிடங்களிலும் கூறுமாறு அறிந்து கொள்க.*

**1531.** *தெளிவுரை :- நன்மை அமைந்த சிவபெருமானது திருவடிகளை எப்போதும் தாங்கி நிற்கின்ற மனத்தை உடையவர் இப்பூமியில் தமக்குத் தாமே ஒப்பாரும் பெருமையை உடையவராவார். அவ்வாறின்றி அவற்றை எஞ்ஞான்றும் நீங்கி நின்ற வண்ணமாய் ஒருபோதும் நினையாதவர் உலகில் விரும்பியது ஒன்றனையும் பெறாது வாளா இருந்து துன்புறுவார்கள்.*

**1532.** இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்
அருந்தவம் மேற்கொண்டங் கண்ணலை எண்ணில்
வருந்தா வகைசெய்து வானவர் கோனும்
பெருந்தன்மை நல்கும் பிறப்பில்லை தானே. 3

**1533.** தூரறி வாளர் துணைவன் நினைப்பிலர்
பாரறி வாளர் படுபயன் தானுண்பர்

---

***குறிப்புரை :-*** *'தமக்கு நேர் தாமேயாவர்' என்பதனை, "நேர் ஒப்பர்" என்றார். இது, செல்வம் முதலிய எல்லாவற்றாலுமாம். ஏங்குதல் - விருப்பம் நிறைவுறாமையால் அதனையே நினைத்துக் குறையுறுதல். இதனை 'ஏக்கறுதல்' எனவும் கூறவர். 'இரந்தழுவார்' எனப்பாடம் ஓதி, "இரத்தலை மேற்கொண்டு அதனானும் நிரம்பப் பெறாது துன்புறுவர்" என்று உரைப்பினுமாம்.*

*வானகம் ஆண்டுமந் தாகினி ஆடிநந் தாவனஞ்சூழ்*
*தேனக மாமலர் சூடிச்செல் வோரும், சிதவல் சுற்றிக்*
*கானகந் தேயத் திரிந்திரப் போரும் கனகவண்ணப்*
*பானிற நீற்றற் கடியரும், அல்லாப் படிறருமே.*

***- பொன்வண்ணத்தந்தாதி, 12***

*என்றாற்போல்வனவற்றையும் இங்கு நினைக.*

*இதனால், சிவனடியை நினைதல் நினையாமைகளே ஒழுக்கமும், இழுக்கமுமாதல் கூறப்பட்டது.*

***1532. தெளிவுரை :-*** *வாழும் வழி யாதும் அறியாது திகைத்திருந்து அழுகின்றவர்களும், முன்னர் வாழ்வுடையராய் இருந்து பின்னர்க் கேடு எய்தினவர்களும் (தாம் முழுத் தீவினையும், அரைத் தீவினையும் உடையராய் இருத்தலை அறிந்து அவை ஒழிதற்பொருட்டு) அந்நிலை யில் அரிய தவம் செய்தலை மேற்கொண்டு சிவபிரானை நினைவரா யின், தேவ தேவனாகிய அவன் அவர்களது தாழ்நிலையை நீக்கி, உயர் நிலையைத் தருவன் - அதுவே யன்றி அவர்கட்குப் பிறப்பற்ற வீடுபேறும் உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *'சிவபிரானை நினைத்தலே மேலான தவமாம் என்றற்கு, "அருந்தவம் மேற்கொண்டு" என்றார்.*

காரறி வாளர் கரந்து பிறப்பர்கள்
நீரறி வாளர் நெடுமுகி லாமே. 4

1534. அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி
பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங்
குறியது கண்டும் கொடுவினை யாளர்
செறிய நினைக்கிலர் சேவடி தானே. 5

---

*இதனால், சிவ பத்தியாகிய தவ ஒழுக்கம் உடையோர் தீவினையின் நீங்கி நலம் பெறுதல் கூறப்பட்டது.*

**1533.** *தெளிவுரை :-* தூர்ந்த அறிவினை உடையோர் தோன்றாத் துணையாயுள்ள இறைவனை நினைக்கமாட்டாது யாதொரு பயனையும் எய்தார். தூல அறிவினை உடையோர் வருவதை அனுபவித்துக் கொண்டிருப்பர். மயக்க அறிவினை உடையோர் உள்ளதை 'இல்லை' என்று சொல்லி மறைத்து, அதனால், பின் வறியராய்ப் பிறப்பர். அறத்தின் தன்மையை அறிந்த அறிவினை உடையோர் பெரிய மேகம் போலப் பலர்க்கும் கைம்மாறு கருதாது உதவி, அதனால், பின் செல்வராய்ப் பிறப்பர்.

*குறிப்புரை :-* தூரறிவு, படுபயன் என்பன வினைத்தொகை, பாரறிவு, காரறிவு என்பன பண்புத்தொகை. தூர்ந்த அறிவாவது அறிவின்மை; பேதைமை. 'துணைவனை' என்னும் இரண்டன் உருபு தொகுத்தல் பெற்றது. "நினைப்பிலர்" என்றது தன் காரியமும் உடன் தோன்ற நின்றது. 'நாகரது பலி' என்பது போலும் ஆறாவதன் தொகை எனினுமாம். 'காரறிவு, மயக்க அறிவு' என்பதனை, "களவென்னும் காரறிவாண்மை" (குறள், 287) என்பது பற்றியும் உணர்க. நீர் - நீர்மை. நீர்மையை அறியும் அறிவினை ஆளுதல் உடையார்' என்க. ஆக்கம் உவமை குறித்து நின்றது. 'ஆவரே' என்னாது 'ஆமே' என்றது ஆரிட அமைதி. "கரந்து" என்றதனால், 'வறியவராய்ப் பிறப்பர்' என்பது பெறப்பட்டது. படவே, முகில்போல்வார் செல்வராய்ப் பிறத்தல் கூறப்பட்டதாம்.

இதனால், அவரவர் அறிவு நிலைக்கு ஏற்பவே அவரவரது ஒழுக்கம் உண்டாகுமாறு கூறுமுகத்தால், மெய்யறிவினை யுடையோர் சிவ பத்தி யுடையராய் ஒழுகல் வேண்டும் என்பது கூறப்பட்டது.

**1535.** மன்னும் ஒருவன் மருவு மனோமய
னென்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்
துன்னி மனமே தொழுமின் துணையிலி
தன்னையும் அங்கே தலைப்பட லாமே. 6

**1536.** ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்
றாங்கார மற்ற அனுபவம் கைகூடார்
சாங்காலம் உன்னார் பிறவாமை சார்வுறார்
நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே. 7

---

1534. ***தெளிவுரை :-*** *சிவனது திருவடியாகிய, ஞானத்தொடு பொருந்தி வருவித்து எளிய ஒப்பற்ற ஓர் தோணி, வினையாகிய சரக்கினை அது நின்ற உடலாகிய மூட்டையோடு சிவலோகமாகிய பழைய நகரத்தை அடைந்து, இறக்கிவிடுகின்ற அறிகுறிகளை அறிந்தும், தீவினை யுடையோர் அத்திருவடிகளைப் பொருந்தி நிற்க எண்ணுவதில்லை.*

***குறிப்புரை :-*** *"அறிவுடன் கூடி அழைத்தது" என்றது 'நல்ல தோணியை அறிந்து அழைத்து அதில் ஏறுதல் அறிவுடையோர்க்கன்றி ஆகாமைபோலச் சிவனடியை வேண்டிப்பெறுதல் ஞானிகட்கு அல்லது ஆகாது' எனக் கூறியதாம். பறி - கூடை, அது சரக்குப் பொதிந்த மூட்டையைக் குறித்தது. தோணி, பறி, பழம்பதி என்பன சிறப் புருவகங்கள். அறிகுறிகள், அவ் அடியைப் பற்றினோர் மாட்டுக் காணப்படும் ஏமாப்பு, நமனையும் அஞ்சாத அச்சமின்மை (தி.6 ப.98 பா.1) முதலியன. தோணி - பிரணவம். பிரபஞ்சத்தைக் கடக்கச் செய்யும் தோணி என்றும் சொல்லலாம்.*

*இதனால், அறிவேயன்றி, ஒழுக்கமும் நல்வினையுடையார்க்கன்றி வாயாமை கூறப்பட்டது.*

**1535.** ***தெளிவுரை :-*** *அழிவிலனாகிய இறைவன் தன்னை நினைப்பவரது நினைவே வடிவாய் விளங்குபவன் என்று வேதாகமங்கள் சொல்லவும் அதனை அறியாது இவ்வுலகத்தில் உள்ள அறிவிலிகள் அவனை நினையாது இகழ்ந்தொழிவார்கள். நீவிர் அங்ஙனம் செய்யாது மனம் பொருந்தி அவனை வணங்குங்கள்.*

*வணங்கினால், அப்பொழுதே ஒப்பற்ற ஒருவனாகிய அவனை அடைதல் கூடும்.*

***குறிப்புரை :-*** *மனோமயன் - எண்ண மயமாய் இருப்பவன். "என்னில்" என்பது, அதனை உணர்ந்து நினைதலே அவனைத் தலைப்படுதற்குக் காரணமாதலைக் குறித்தது. 'மனிதர்' என்னும் விதப்பு, "மனிதத்தன்மை இலர்" என்னும் இகழ்ச்சிக் கூறப்பட்டது.*

*இதனால், அறிவிலும் ஒழுக்கமே சிறந்த சாதனமாதல் கூறப்பட்டது.*

**1536. *தெளிவுரை :-*** *பிரணவத்தின் உள்ளே விளங்குவதாகிய ஒளியைக் கண்டு அறிவினுள்ளே வெளிப்படுதலால் உண்டாகின்ற அனுபவத்தை அடையப் பெறார்; இறப்பு என்றாயினும் ஒருநாள் உளதாதலை நினையார்; அதனை நினைந்து, மேலும் பிறந்து இறத்தலை ஒழியும் நெறியைப் பற்றார்; வாளா சமயத்தை மட்டும் பற்றிக்கொண்டு அதன் பயனைப் பெறாதொழிகின்றார்கள் மக்கள்.*

***குறிப்புரை :-*** *சமயத்தில் நிற்பார் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்களை எதிர்மறை முகத்தான் உணர்த்தி, அவற்றையுடையோரே சமயத்தின் பயனைப் பெறுவர் எனக் கூறியவாறு. 'உறுதலான்' என்பதன் திரிபாகிய 'உற்று' என்பது "கைகூடார்" என்பதன் முதனிலையோடு முடிந்தது.*

*இதனால், சமய ஒழுக்கம் இல்லாத சமயிகள் சமயத்தின் பயனை எய்தாமை கூறப்பட்டது.*

## 20. உட்சமயம்

*புறச்சமயங்களது இழிபினையும், அவற்றோடு ஒரு தன்மைத்தாகிய ஒழுக்கம் இன்மையின் இழிபினையும் உணர்த்திய நாயனார், இது முதல் பதினாறு மந்திரங்களால் உட்சமயங்கள் பற்றிக் கூறுகின்றார். 'உட்சமயம், அகச்சமயம்' என்பன ஒரு பொருட் சொற்கள். நாயனார் காலத்து அகச்சமயங்கள் இவை என்பது பற்றி மேலே (பா.1516) கூறப்பட்டது. சங்கற்ப நிராகரணத்துள் பாடாணவாத சைவம் முதலியனவாக எடுத்தோதி மறுக்கப்பட்ட சைவ பேதங்களே இன்று அகச்சமயங்களாகக் கொள்ளப்படுகின்றன. ஆதலால், மேற் காட்டியவை இன்று, 'அகப்புறச் சமயங்கள்' எனப்படுகின்றன.*

**1537.** இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதி புராணன்
சமையங்க ளாறுந்தன் தாளினை நாட
அமையங்கு உழல்கின்ற ஆதிப் பிரானே. 1

---

**1537.** *தெளிவுரை :- தேவர்களையும், மக்களாகிய எம்மையும் உய்தி பெறுதற்குப் பொருந்தும் வகையினராகப் படைத்த அனாதியான பழையோன், அகச் சமயங்கள் ஆறும் தன் திருவடியையே நாடி நிற்கும்படி அமைய, அவற்றைக் கடந்து நிற்கும் முதல்வனாகின்றான்.*

*குறிப்புரை :- எழுவகைப் பிறப்பினுள் தெய்வப் பிறப்பும், மக்கட் பிறப்பும் ஒழிந்தவை பெரும்பாலும் வீடு பெறுதற்கு வாயிலாதல் இல்லையாக, இவ்விரு பிறப்புக்களுமே அதற்கு வாயிலாதல் வெளிப்படை. 'அவை அங்ஙனமாதலும் இறைவனது திருக்குறிப்பின் வழியது' என்பதும், 'அவ் இருவகைப் பிறப்பின் உயிர்களும் உய்தி பெறுதல் அகச் சமயங்களின் வழியே' என்பதும், 'அங்ஙனமாயினும் இறைவனது உண்மை நிலை சமயங்களைக் கடந்தது' என்பதும் கூறியவாறு. "சமையம்" என்பதில் அகரத்திற்கு ஐகாரம் போலியாய் வந்தது. 'தன் தாளினை நாட அமைந்தன' என்பதனால், "சமயங்கள்" எனப்பட்டன உட்சமயங்களே ஆயின. 'அமையக் கழல்கின்ற' என்னும் ககர ஒற்று மெலிந்து நின்றது. இவ்வாறன்றி, அச்சமயங்களது (செவ் வழிகளை) நிலைகளைக் கடந்து நிற்கின்ற எனலுமாம்.*

**1538.** ஒன்றது பேரூர் வழிஆ றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை ஆளர்கள்
குன்று குரைத்தெழு நாயைஒத் தார்களே. **2**

---

*இதனால், வீடுபெறும் உயிர்கட்கு அதற்குரிய வழிகளாய் நிற்பன அகச் சமயங்களே என்பது கூறப்பட்டது.*

**1538. *தெளிவுரை :-*** *ஒன்றது பேரூர் வழியாறு அதற்குள் - ஒரே ஊருக்குச் செல்ல ஆறு வழிகள் உள்ளன, என்றது போல இரு முச்சமயமும் - அது போல ஆறு சமயங்களும் ஒரே பொருளை அடையவுள்ளன, நன்றிது தீதிது என்றுரையாளர்கள் - இது நன்று அது தீது என்ற சொல்பவர்கள், குன்று குரைத்தெழு நாயை ஒத்தார்கள் - மலையைப் பார்த்துக் குரைத்த நாயைப் போல ஒரு பயனையும் எய்தார்.*

*நாய் குரைப்பதால் மலையை அடைய முடியாதது போல, சமயக் காழ்ப்பினால் பரம்பொருளை அடைய முடியாது என்க. ஆறு சமயமும் இறைவனை அடைவதற்குரிய வழியாகும்.*

***குறிப்புரை :-*** *'மலையைப் பார்த்து நாய் குரைத்தல் போல' என்பது பழமொழி. "ஒத்தார்கள்" என்றது, அகச் சமயத்தவருள் ஒரு சமயத்துள் நின்று பிறசமயங்களை இகழ்பவரை. 'அங்ஙனம் இகழ்தல் அவையும் பிறவாற்றால் உண்மையை உணர்தற்கு வழியாதலை அறியாமையாலாம்' என்பது கருத்து. இறுதியிற் போந்த உவமை, அகச் சமயிகளிடைப் பூசல் விளைப்பார்க்கே ஆதல், வெளிப்படை. இதன் முதல் அடியோடு ஒப்ப,*

*"சுத்தவடி வியல்பாக உடைய சோதி*
*சொல்லியஆ கமங்களெலாம் சூழப் போயும்*
*ஒருபதிக்குப் பலநெறிகள் உளவா னாற்போல்"*

*எனச் சிவஞானசித்தியும் (பாயிரம், 9) கூறுதல் காண்க. 'ஒரு பதிபோல்வது' கருத்து என்பதும், 'பல நெறிகள் போல்வன சொற்கள்' என்பதும் சித்தியுள் தோன்றுதல் காண்க.*

*இதனால், அகச் சமயங்கள் சொல்வகையாலும், செயல்வகை*

**சிவநெறிச் சிறப்பு**

**1539.** சைவப் பெருமைத் தனிநா யகன்றன்னை
உய்ய உயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. 3

---

*யாலும் வேறுபடினும், கருத்து வகையால் ஒன்றாதலைக் கூறி, அஃது அறியாது அவற்றிடை நிற்போர் தம்மிடைக் கலாய்த்தலும், சைவரை இகழ்தலும் கூடாமை கூறப்பட்டது.*

*அகச் சமயங்கள் அறிந்தோ, அறியாமலோ கருத்து வகையால் சைவத்தோடு ஒன்றி நிற்றலை அவருள் அறியாதாரை நோக்கி அதனையே இதுமுதலாக அறிவுறுத்துகின்றார். இதனை, சைவ சமயச் சிறப்பு என்பதொரு தனி அதிகாரமாகக் கொள்ளினும் பொருந்தும்.*

**1539.** *தெளிவுரை :-* சைவ சமயத்தால் கொள்ளப்படும் ஒப்பற்ற தலைவனும், மக்கள் உயிர் நெடிது வாழ்ந்து உய்தி பெறுதற்பொருட்டு உயிர்ப்பாய் இயங்குகின்றவனும், சிறந்த ஞான வடிவானவனும், தன்னை உணரும் பெருமையுடையவரிடத்துத் தானும் அன்பு செய்கின்றவனும், அனைத்துயிர்க்கும் முடிவில் அவை விரும்பும் பேரின்பத்தைத் தருபவனும், இவ்வியல்புகளால் உண்மைத் தலைவன் தானே ஆகின்றவனும் ஆகிய சிவபெருமானை நீவிர் நீங்கி நிற்றலை விடுத்து, அணுக வந்து அடைந்து பிழையுங்கள்.

*குறிப்புரை :-* 'சைவ சமயமே தலையாய சமயம்' என்பது, மேல் பலவிடத்தும், பலவகையானும் விளக்கப்பட்டமையின், அச்சமயத்தாற் கடவுளாகக் கொள்ளப்படுதலும் பெருமையாயிற்று. இறைவன் உயிர்ப்பாய் இயங்குதல் மேலேயும் (பா. 1512) கூறப்பட்டது. எய் - எய்தல்; அறிதல்; முதனிலைத் தொழிற்பெயர். "எய்ய" என்பது இதனடியாகப் பிறந்த பெயரெச்சக்குறிப்பு. ''வையம்'' என்றது உயிர்களை, "வந்தடைந்து உய்மின்கள்" என்றது, அவர்மாட்டு எழுந்த கருணைபற்றி.

இதனால், சைவக் கடவுளாகிய சிவபிரானது பெருமையை வகுத்துணர்த்தி, அவனைச் சார, அழைத்தல் செய்யப்பட்டது, அகச்சமயிகளாதலின் அவர்தாம் உணர்த்தியவாறே உணர்ந்து ஒழுகுவார்கள் ஆதலின், இனி வருவனவும் இவைபற்றி என்க.

**1540.** சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியில்
பவனவன் வைத்த பழவழி நாடி
இவனவன் என்ப தறியவல் லார்கட்கு
அவனவ னங்குள தாங்கட னாமே. **4**

**1541.** ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை புண்ணிய மல்லதுஅங்கு
ஆமாம் வழிஆக்கும் அவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. **5**

---

**1540.** ***தெளிவுரை :-*** *தெய்வந் தெளிந்து அதன் இயல்பை ஆராயும் எல்லாச் சமயங்களையும் உலகில் ஆக்கிவைத்தவன் சிவபெருமானே எனினும் அவற்றுள் முற்பட்டதாகிய சமயம் சைவமே. அதனை அடைந்தோர் 'இச்சமயக் கடவுளாகிய சிவனே ஏனைச் சமயங்களினும் நின்று பயன் தருகின்றான்' என்பதை உணர்வர். அங்ஙனம் உணர்ந்தவர்க்கு அவன் அச்சமயங்களில் ஏற்ற பெற்றியால் நின்று அருள்புரிதலும் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *ஓர்தல் - ஆராய்தல், 'ஓர் நெறி' என இயையும். 'பவன்' என்பது சிவனது நாமங்களில் சிறந்ததொன்று. "பழவழி" என்றது, 'முன்னர்த் தோன்றியநெறி' என்றவாறு.*

*"முன்னெறியாகிய முதல்வன் முக்கணன் தன்னெறி" (தி.4 ப.11 பா.9) என அப்பரும் அருளிச்செய்தார். மூன்று, நான்காம் அடிகளில் வந்த "அவன்" என்பன பிற சமயக் கடவுளரைத் தனித்தனிச் சுட்டிற்று. ஈற்றடியில் நின்ற "அவன் அவன்" என்பது ஒரு சொல் அடுக்கு. 'அவன் அவனாய் உளது' என ஆக்கம் வருவிக்க. "உளது" என்பது அப்பண்பு குறித்துநின்றது. கடன் - முறைமை. 'உள்ள முறைமை' என்பதனை "உளதாங் கடன்" என்றார். இறுதிக்கண் "ஆம்" என்றது 'விளங்கும்' என்றவாறு.*

*இதனால், 'அகச் சமயத் தோர்களிடமாக நின்று அருள்பவனும் சிவனே' என்பது கூறப்பட்டது.*

> *"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே*
> *மாதொரு பாக னார்தாம் வருவர்"*

*என்ற சிவஞான சித்தியையும் (சூ. 2.25) காண்க.*

**1541.** ***தெளிவுரை :-*** *பொருந்தும் வழியையே கூறுகின்ற அகச் சமயங்கள் ஆறுக்கும் தலைவனாகிய சிவபெருமானை நேரே சென்று*

1542. அரனெறி யாவ தறிந்தேனும் நானும்
சிவநெறி தேடித் திரிந்தஅந் நாளும்
உரநெறி உள்ளக் கடல்கடந் தேறும்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. 6

---

*அடைதற்குப் புண்ணியம் தவிர வேறில்லை. சைவத்தில் நிற்பவர்க்கே யன்றி பிறசமயங்களில் நிற்கும் அனைத்துயிர்கட்கும் மேற்செல்லும் வழியாகிய அந்தச் சிவசத்தியாகிய முதல்வியே அவ்வுயிர்கட்கு அச்சமயங்களைப் பொருந்தும் வழியாகக் கூட்டுவிப்பாள்.*

***குறிப்புரை :-*** *"சமயாதி" நான்காவதன்தொகை 'ஆதிக்கு' என்னும் நான்காவதை ஏழாவதாகத் திரித்துக்கொள்க. 'ஆம் ஆம்' என்னும் அடுக்கு. 'அவ்வவற்றிற்குப் பொருந்துகின்ற, என்னும் பொருட்டு. வழி ஆக்கும் - வழியாகக் கூட்டுவிக்கும். "ஆமாம் வழி ஆக்கும்" என்பதனை இறுதியிற் கூட்டி உரைக்க. 'போமாறாகிய கொடி' என்க. ஆதாரம் - அனைத்திற்கும் நிலைக்களம். அங்ஙனம் ஆவது சிவசத்தியே யாதல் அறிக.*

*இதனால், 'அகச் சமயங்களும் சிவசத்தியின் செயலால் அமைந்தனவே' என்பது கூறப்பட்டது.*

**1542. *தெளிவுரை :-*** *அகமாகிய சிவநெறிகளைத் தேடித் திரிந்த அக்காலத்திலும் ஞான நெறியால், அளவற்ற எண்ணமாகிய கடலைக் கடந்து ஏறுதற்குரிய உயர்ந்த நெறியாய் உள்ள ஒப்பற்ற ஒளி நெறி யாவது சிவனது நெறியேயாதலை அறிந்தவனுமாயினேன் நானும்.*

***குறிப்புரை :-*** *ஆகவே, 'அகநெறியில் (உட்சமயங்களில்) நிற்போர் சிவநெறியை அடைந்து உய்யும் நிலையைப் பெறுவர்' என்றவாறு. உம்மைகள் இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்பும், ஏனைய இழிவு சிறப்புமாம். "அறிந்தேனும்" என்பதன்பின் 'ஆயினேன்' என்பது எஞ்சிநின்றது. முதலடியை இறுதியிற் கூட்டி உரைக்க. உரம் - ஞானம். "உள்ளம்" என்றது, அதன்கண் தோன்றும் எண்ணத்தை,*

*"கருதுப - கோடியும் அல்ல பல" - குறள். 337*

*என்ப ஆகலின், அவற்றைக் கடலாக உருவகித்தார். 'அவற்றைக் கடத்தல் ஞானம் துணையாய வழிக் கூடும்' என்பதையும், அத்துணையைத் தருவதே உயரிய நெறி என்பதையும், அதனால், அஃது 'ஒளிநெறி' எனப்படுகின்றது என்பதையும் எடுத்தோதி, 'அவ் ஒளிநெறி அரன் நெறியே' என்பது உணர்த்தினார். 'இதனை அடைதல்*

**1543.** தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி
பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி
ஆர்ந்தவர் அண்டத்துப் புக்க அருள்நெறி
போந்து புனைந்து புணர்நெறி ஆமே. 7

**1544.** ஈரும் மனத்தை இரண்டற வீசுமின்
ஊரும் சகாரத்தை ஓது மின் ஓதியே
வாரும் அரன்நெறி மன்னியே முன்னியத்
தூரும் சுடரொளி தோன்றலு மாமே. 8

---

*உட் சமயிகளுக்கல்லது இயலாது' என்றவாறு. இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், உட்சமயங்கள் சிவநெறிக்குத் தடையாகாது துணையாதல் கூறப்பட்டது.*

**1543.** *தெளிவுரை :- அறிவுடையோர் ஆராய்ந்து கண்டு பற்றிச் சிவனை அடைந்து உய்ந்த சைவநெறி, முன்னர் ஆராய்தல் இன்றி நீங்கினோர் பலர் பின்னர் ஆராய்ந்து மீண்டு வந்தடைந்த பெருமை யுடையதும், பொருந்தி நின்றோர் மேற்கதியைப் பெற்றதுமாகும். அதனால், அதுவே, யாவரும் புறநோக்கை விட்டுத் திரும்பிப் புகழ்ந்து அடைதற்குரிய நெறியாகும்.*

*குறிப்புரை :- "சிவன்" எனப் பின்னர் வருதலின்' முன்னர், "தன்னை" என்றார். பெயர்ந்து வந்தவர் அப்பரைப் போல்வார். பொருந்தினோர் மேற்கதியிற் சென்றமை கூறவே, பொருந்தாது இகழ்ந்து நீங்கினோர் தாழ்கதியிற் சென்றமை பெறப்பட்டது.*

*வெள்ளெ ருக்கர வம்விர வுஞ்சடைப்*
*புள்ளி ருக்குவே ளூர்அரன் பொற்கழல்*
*உள்ளி ருக்கும் உணர்ச்சி யிலாதவர்*
*நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. - தி.5 ப.79 பா.1*

*என அப்பரும் அருளிச் செய்தார். புகழை, 'புனைந்துரை' என்ப ஆகலின், புனைதல் புகழ்தலாயிற்று.*

*இதனால், அகச் சமயங்கள் மேற்கூறியவற்றால் தாழ்கதியிற் செலுத்தாதனவாதல் கூறப்பட்டது.*

**1544.** *தெளிவுரை :- இருதலைப்படுகின்ற மனத்தை அவ்வாறு இரண்டாதலினின்றும் நீங்க நீங்குங்கள்; நீக்கி, இகரம் ஊர்ந்த சகர*

**1545.** மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை ஆதிப் பிரான்தன்னை
நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தின்
நயக்குறி காணில் அரன்நெறி ஆமே. **9**

---

*எழுத்தை ஓதுங்கள். ஓதி, சிவனது நெறியில் எம்முடன் வாருங்கள்; வந்து அதில் நிலையாக நின்று அவனை நினைத்தால், உம்முள் மறைந்து நிற்கின்ற விளக்கொளி உங்கட்கு வெளிப்படுதல் கூடும்.*

*குறிப்புரை :-* இருதலைப்படுதல் - ஐயமாய் நிற்றல். 'இரண்டின் அற' என ஐந்தாவது விரிக்க. வீசுதல் - நீக்குதல். 'வீசுமின்' என்பது பாடமாகாமை. பின்னர், "வாரும்" என வருதலானும் அறியப்படும். இகரம் ஊர்ந்த சகரம், சி. திருவைந்தெழுத்தில் ஏனையவை இதன்கண் அடங்குதல் அறிந்துகொள்க. 'முன்னியத்' தென்பதும் பாடமன்று. முன்னுதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.

இதனால், சிவநெறி திருவைந்தெழுத்தால் பல்லாற்றானும் பயன் தருதல் கூறப்பட்டது.

**1545.** *தெளிவுரை :-* பெண்ணாகச் சொல்லப்படுகின்ற சத்தியாகிய நல்ல வடிவினையும், அந்தணர்கள் வேதத்தின்வழி வளர்க்கின்ற அக்கினியாகிய வடிவினையும், அன்பர்கள் நினையும் நினைவாகிய வடிவினையும் உடைய சிவபெருமானை ஞானத்தின் முடிநிலையாகிய அந்த வழியாற் காணுதல் உண்டாகுமாயின், அப்பொழுது சிவநெறி கைவந்ததாம்.

*குறிப்புரை :-* மினற் குறியாளன் என்பதற்கு யோகக் காட்சியினருக்கு மின்னல் போன்று ஒளியில் வெளிப்படுவன் என்றும் பொருள் கொள்ளலாம். பின்னர்க் கூறப்படும் வடிவங்கள் பலவற்றினும் சிறப்புடையது இதுவேயாதல் பற்றி இதனை, "நற்குறி" என்றார். 'சிவன்' என்னும் பொருட்டாய் நின்ற, "ஆதிப்பிரான்" என்பதை, 'நினைக் குறியாளனை' என்பதன் பின்னர்க் கூட்டுக. 'நினை' முதனிலைத் தொழிற்பெயர். 'அஃது' என்னும் பொருட்டாகிய 'அனைத்து' என்பது ஈறுகுறைந்துநின்றது. 'அயக்குறி, நயக்குறி' என்பன பாடமல்ல. ஆதல், இங்கு கைவருதல்.

இதனால், சிவநெறி முதல்வன் அவரவர் தகுதிக்கு ஏற்பப் பலவகையில் நின்று பயன்தருதல் கூறப்பட்டது.

**1546.** ஆய்ந்துண ரார்களின் ஆன்மாச் சதுர்பல
வாய்ந்துண ராவகை நின்ற அரன்நெறி
பாய்ந்துணர் வார் அரன் சேவடி கைதொழுது
ஏய்ந்துணர் செய்வதோர் இன்பமு மாமே. **10**

**1547.** சைவ சமயத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய
வையத் துள்ளார்க்கு வகுத்துவைத் தானே. **11**

---

**1546.** ***தெளிவுரை :-*** *உண்மை நூல்களை ஆராய்ந்து உணர மாட்டாதவர்களது, ஏனைய பல திறமைகளும் பொருந்தி உணராதபடி நிற்பது சிவநெறி. அஃது, உண்மை நூல்களில் நுழைந்து அவற்றின் பொருளை உணர்கின்றவர்கள், அவ்வுணர்வின் வழியே சிவனது திருவடியை முதற்கண் அவற்றின் வேறாய் நின்று வழிபட்டுப் பின்னர், அவற்றோடு ஒன்றாய் இயைந்து நுகர்கின்ற இன்பமாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *சதுராவது, உண்மையை உணரா வண்ணம் மறைப்பது. வாய்தல் - சேர்தல். ஏய்தல் - பொருந்துதல். நான்காம் அடியில், உரை என்பது பாடமன்று.*

*இதனால், சிவநெறி புறச்சமயிகட்கு உணர ஒண்ணாததாய்ச் சிவநெறியாளர்க்கு முன்னர்க் கரணத்தாற் பெறும் இன்பமாயும், பின்னர்க் கரணங் கடந்த இன்பமாயும் விளைதல் கூறப்பட்டது.*

**1547.** ***தெளிவுரை :-*** *'சைவ சமயத்தின் ஒப்பற்ற தலைவன்' எனப் பலராலும் அறியப்பட்ட சிவன் ஆன்மாக்கள் உய்தற்பொருட்டு அமைத்த ஞானநெறி ஒன்றே உள்ளது. அது, தெய்வத்தன்மை பொருந்திய சிவநெறியே. உலகத்தில் ஞானத்திற்குத் தகுதியுடையராய் உள்ளார், அதனை அடைந்து உய்தற்கு அந்த ஒன்றையே அவன் அமைத்திருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *''சைவ சமயத் தனி நாயகன்'' என்பது எழுவாயாயும், "நந்தி" என்பது பயனிலையாயும் நின்று ஒருபெயர்த் தன்மைப்பட்டது. "சன்மார்க்கம் சேர்ந்துய்ய" என்பது முதலாக மறித்தும் கூறியது, நன்கு வலியுறுத்தற்பொருட்டு.*

*இதனால், உண்மை உய்யும் நெறி சிவநெறியேயல்லது வேறின்மை வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

**1548.** இத்தவம் அத்தவம் என்றிரு பேர்இடும்
பித்தரைக் காணின் நகும்எங்கள் பேர்நந்தி
எத்தவ மாகில்என் எங்குப் பிறக்கில்என்
ஒத்துணர் வார்க்குஒல்லை ஊர்புக லாமே. **12**

---

**1548.** ***தெளிவுரை :-*** *'இத்தவம், அத்தவம்' என்று தவங்கள் பல இருப்பனபோலச் சுட்டிப் பேசும் பித்தர்களைக் காணும்போதெல்லாம் எங்கள் பெரும்பெருமானாகிய சிவன் நகைப்பான். ஏனெனில், எந்தச் செயலாய் இருந்தால் என்ன? எந்தச் சமயத்தில் பிறந்தால் என்ன? தவத்தையும், அதனால் அடையப்படும் இறைவனையும் சிவநெறியாள ரோடு ஒத்த உணர்வினராய் உணர்பவர்கட்கு விரைவில் வீடுபெறுதல் கூடுவதாகும்.*

*குறிப்புரை :-*

*"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்*
*மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்"*

*- தி.12 சாக்கிய நாயனார், 6.*

*என்னும் முடிபுரையையும், அதற்கு இலக்கியமான சாக்கிய நாயனாரது வரலாற்றையும் உணர்க. 'பெருநந்தி' என்பது செய்யுள் முடிபெய்தி நின்றது.*

*தவம் - தவச்செயல். "எங்கு" எனச் சமயத்தை இடமாக வைத்து ஓதினார். இனி "எந்நாட்டில்" எனப் பொருள்கொண்டு, 'நாடுகளது வேறுபாட்டால் இங்குப் பெறப்படுவது சமயவேறுபாடு' என்றலுமாம். ஒத்தற்கும், உணர்தற்கும் செயப்படுபொருள்கள் வருவிக்கப்பட்டன. வீடுபெறுதலை, "ஊர் புகல்" என்றது ஒப்புமை வழக்கு.*

*இதனால், பிறப்பின் சார்பால் அதன் சமயத் தொடக்கினின்றும் நீங்கமாட்டாதோரும் சிவநெறிப் பற்றுடையராயின் உய்தி பெறுதல் கூறப்பட்டது.*

**1549.** ***தெளிவுரை :-*** *சிவபெருமானுக்குத் தனது நிலைக்கு உரியனவான ஐந்து முகங்களோடு, கீழ்நிலையில் உள்ள உயிர்களுக்கு உரிய அதோமுகமும் உண்டு. இவ்வாறாக உள்ள ஆறுமுகங்கட்கும்,*

**1549.** ஆமே பிரான்முகம் ஐந்தொடும் ஆருயிர்க்
காமே பிரானுக் கதோமுகம் ஆறுள
தாமே பிரானுக்கும் தன்சிர மாலைக்கும்
நாமே பிரானுக்கு நாரியல் பாமே. **13**

**1550.** ஆதிப் பிரான் உலகேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களு மாய்நிற்கும்

---

*அவன் அணிந்திருக்கின்ற தலைமாலைக்கும் உயிர்கள் அச்சத்தைப் பொருந்துகின்ற அப்பெருமானுக்கு அருள் இயல்பாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *'பிரான் முகம் ஐந்தொடு ஆருயிர்க்கு ஆம் அதோ முகம் பிரானுக்கு ஆம்' எனக் கூட்டி உரைக்க. 'ஆறாய் உள்ள தாம்' என ஆக்கம் வருவிக்க. "அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்" அன்றி நான்காவதும் வரும் பிற்கால வழக்குப்பற்றி, ''பிரானுக்கும் மாலைக்கும்'' என்றார். நாம் - அச்சம். நார் - அருள். முன் இரண்டடிகள் சிவனது முழுமுதல் தன்மையையும், பின் இரண்டடிகள் அவனது வடிவை அஞ்சத்தக்கதாக எண்ணி மருள்வாரைத் தேற்றுதலையும் குறித்தன. யாவரும் அறியும் ஐம்முகம் அவன் தனது உலகத்தில் நின்று தானே ஐந்தொழில் செய்வதற்கும், ஞானியரே உணரத்தக்க அதோமுகம் அனந்த தேவர் சீகண்டர் வழி உருத்திர லோக தேவ மானுட லோகங்களில் ஐந்தொழில் நிகழ்வித்தற்கும் அமைந்தன என்பது, மேல் இரண்டாம் தந்திரத்து, அதோ முக தரிசன அதிகாரத்துட் கூறப்பட்டதனை இங்குச் சிறப்புணர்த்துதற் பயன் நோக்கிக் கூறினார். எனவே, "ஆருயிர்" என்றது 'நிறைந்த உயிர்' என்னும் பொருட்டாய்ப் பிரளயாகலர் சகலரைக் குறித்ததாயிற்று. இம்மந்திரத்துள் பிறவாறு ஓதுவன பாடம் அல்ல.*

*இதனால், சிவநெறியே மெய்ப்பொருளை முதலாக உடையது' என்பதும், 'அம் முதலது தன்மை யறியாது வெருளுதல் மயக்க உணர்வாம்' என்பதும் கூறப்பட்டன.*

**1550. *தெளிவுரை :-*** *முதற் கடவுளாகிய சிவபெருமான், நிலவுலகத்தில் உள்ள ஏழு பொழில்களையும் (தீவுகளையும்) சூழ்ந்த ஏழு கடலாயும், அப்பொழில்களில் வாழ்கின்ற அனைத்து உயிர்களாயும் நிற்பான். அவனின் வேறுபடாநிற்கின்ற சத்தி, ஆக்கல்*

பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கண் தெய்வமும் அந்தமும் ஆமே. 14

1551. ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்
ஆய்ந்தறி யாவண்ணம் நின்ற அரன்நெறி
ஆய்ந்தறிந் தேன்அவன் சேவடி கைதொழ
ஆய்ந்தறிந் தேன்இம்மை அம்மை கண்டேனே. 15

---

*அழித்தல்களைச் செய்யும் கடவுளரிடத்துப் பொருந்தி அவர்கள் வழியாக அத்தொழில்களை நிகழ்த்துவாள்.*

***குறிப்புரை :-*** *அளத்தல் - இங்கு உள்ளடக்கல். 'அளந்தவன்' என்பது பாடமாயின், அதன்பின், 'ஆதலான்' என்பது வருவிக்க. சிவனது பெருமையையும், ஏனையோரது சிறுமையையும் உணர்த்தற்குக் கடலும் உயிருமாய் நிற்றலைச் சிவன் மேல் வைத்தும், பிற கடவுளராய் நிற்றலைச் சத்திமேல் வைத்தும் கூறினார். "அந்தம்" என்பதும் ஆகுபெயராய் 'அந்தத்தின் கண் தெய்வம்' எனப் பொருள் தந்தது.*

*இதனால், சிவநெறி முதல்வராகிய சிவனும், சத்தியுமே அனைத்துச் சமய முதல்வராயும் நின்று அருள் செய்தல் கூறப்பட்டது.*

**1551. *தெளிவுரை :-*** *எல்லாவற்றையும் ஆய்ந்து அறிபவர்களாகிய தேவர்கள், வித்தியாதரர் முதலியோர் ஆய்ந்து அறிய இயலாதவாறு உள்ள சிவனது நெறியை, நான் ஆய்ந்தறிந்தேன். அதன்பின் அச்சிவனது திருவடிகளை வழிபடும் முறைமையையும் ஆய்ந்தறிந்தேன். அதனால், இம்மை அம்மை இரண்டின் இயல்புகளையும் நன்குணர்ந்தேன்.*

***குறிப்புரை :-*** *ஆய்ந்து அறிதலாவது ஆய்தலைச் செய்து, உண்மையை உணர்தல். பிற பொருள்களின் உண்மையை உணர்வோர்க்கும் முன்னைத் தவம் இல்வழி, 'சிவநெறியே நெறி' என்பது உணர்தல் கூடாமையை முதல் இரண்டடிகளிலும், முன்னைத் தவம் உடையார்க்கு அஃது எளிதில் கூடுதலை மூன்றாம் அடியில், உள்ள "ஆய்ந்தறிந்தேன்" என்பதிலும், 'சிவநெறியே நெறி' என உணர்ந்தார்க்கும் அதிற் சொல்லப்படும் சாதனமும், பயனும் வாய்த்தல் அரிதாதலை ஏனைப் பகுதியிலும் கூறினார்.*

**1552.** அறியவொண் ணாதஅவ் உடம்பின் பயனை
அறியவொண் ணாத அறுவகை ஆக்கி
அறியவொண் ணாத அறுவகைக் கோசத்
தறியவொண் ணாததோர் அண்டம் பதிந்ததே. **16**

---

*இதனால், சிவநெறியைச் சார்தல், சார்ந்து பயன்கொள்ளுதல் இவற்றது அருமை கூறப்பட்டது.*

1552. ***தெளிவுரை :-*** *அறிதற்கு அரிதாகிய மானுட உடம்பின் பயனை அறிதற்குத் தடையாக ஆறுசமயங்களைப் படைத்து, அறிதற்கு அரிய ஆறு ஆதாரங்களை உடைய உடம்பாகிய பிண்டத்தில், அறிதற்கு அரிதாகிய ஓர் அண்டம் பொருந்தியுள்ளது.*

***குறிப்புரை :-*** *'அதனை அறிந்தால் மானுட உடம்பின் பயனைப் பெற்றுவிடலாம்' என்பது குறிப்பெச்சம். "அறிய ஒண்ணாத" எனவந்த நான்கினுள் இரண்டாவ தொழித்து, ஏனையவற்றில் ஒண்ணாமை, அருமை குறித்து நின்றது. "அறிய ஒண்ணாததோர் அண்டம், ஆக்கிக் கோசத்துப் பதிந்தது" எனக் கூட்டி முடிக்க. "உடம்பு" என்றது சிறப்புப் பற்றி மக்கள் உடம்பைக் குறித்தது. அதன் பயன், வீடு பெறுதல். பொதுப்பட "அறுவகை" என்றதனால், பிறசமயங்கள் யாவற்றையும் கொள்க. அவைபடிகளே யாயினும் தாம் தாமே மெய்யெனக் காட்டி நிற்றல் பற்றி அவற்றைத் தடையாகக் கூறினார். 'அவற்றை ஆக்கியது படிகளாய் உதவுதற்பொருட்டு' என்பது மேல் பலவிடத்தும் கூறப்பட்டது. "ஓர் அண்டம்" என்றது, 'பரவெளி' என்றவாறு. அது 'சத்தி' என்பதையும் அதனையே தனக்குக் குணமாக உடையது சிவம் என்பதையும் நினைக்க. "அறு வகையை உடைய கோசத்துப் பதிந்தது" என்றதனால், அதனை யோக சாதனையால் அறிதல் கூடுவது பெறப்பட்டது.*

*இதனால், 'சிவநெறியை அடைந்து சிவயோக ஞானங்களால் சிவனைத் தலைப்படுதலே மக்கட் பிறப்பின் பயன்' என முடித்துக் கூறப்பட்டது.*

*முன்னைத் தந்திரத்தில் சமயங்கள் பலவற்றையும் ஒருங்கு வைத்து அவற்றது நிலைகளை உணர்த்துமுகத்தால் சிவநெறியது சிறப்பினை உணர்த்திய நாயனார், இதன்கண் அந்நெறியில் நிற்றற்குரியாரது நிலைகளை உணர்த்துகின்றார்.*

***ஐந்தாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.***

# ஆறாம் தந்திரம்

திருமூலதேவ நாயனார் ஐந்தாம் தந்திரத்துச் சுத்தசைவம் முதலாக நால்வகையான சைவமார்க்கங்களை உணர்த்திச் சைவஞ் சார்ந்தோர் நிற்கும் நிலைகள் சரியையாதி நான்கு எனவும், அவை சன்மார்க்கம் முதலான நான்கு பெயர்களை எய்தும் எனவும், அவற்றில் வழுவாதொழுகினார் எய்தும் பதமுத்திகளும் சாலோகமாதி நான்கு எனவும், சகலான்மாக்கள் எய்தும் திருவருட் பதிவு மந்ததரம் முதலாக நான்காம் எனவும் உணர்த்தி, இந்த நெறி நில்லாத புறச்சமயிகளை வெறுத்து ஒதுக்க வேண்டியதன் இன்றியமையாமையைத் தத்துவ வாயிலாகத் தெரிவித்து, நிராதாரமாய் இறைவன் உட்கலந்தொளிரும் இயல்புகளையும் அறிவித்து, உட்சமயத்துச் சைவ சமயத் தனிநாயகன் நந்தி உய்ய வகுத்த குருநெறி ஒன்று உண்டு எனத் தோற்றுவாய் செய்த வண்ணம் ஆறாந்தந்திரமாகிய இதில் சிவகுருதரிசனம் முதலாக பதினான்கு அதிகாரங்களான் சமய உண்மைகளையும் சாதனத்தையும் உணர்த்தத் தொடங்கிய திருமூலதேவ நாயனார் முதற்கண் சிவகுருதரிசனம் உணர்த்துகின்றார்கள்.

## 1. சிவ குரு தரிசனம்

சிவகுரு - சிவனே குரு. சிவகுரு தரிசனம் - சிவனே குருவாக மானிடச் சட்டை தாங்கி எழுந்தருளிவந்து, காட்சி தந்து, காட்டுவன காட்டி, ஊட்டுவன ஊட்டி, உண்மைகாணச் செய்தலாகிய உபகாரம். இதனைப் பதினேழு மந்திரங்களான் உணர்த்துகின்றார்கள்.

அவற்றுள் முதற்கண் சிவநெறிக்கண் ஆசிரியராவாரது சிறப்பினைப் பதினாறு மந்திரங்களால் கூறுகின்றார். சிவகுரு தரிசனம் - சிவகுருவினது இயல்பு விளக்கம்.

**1553.** பத்தி பணித்துப் பரவும் அடிநல்கிச்
சுத்த உரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்
சித்தம் இறையே சிவகுரு வாமே. 1

---

**1553.** *தெளிவுரை :-* மெய்யாயபொருளிடத்து அன்பை உண்டாக்கி யாவராலும் துதிக்கப்படுகின்ற திருவடியைப் பற்றிக் கொள்ளக் கொடுத்து, தூயசொல்லாலே ஐயமும், திரிபும் ஆய குற்றம் முழுதும் போக நீக்கி, 'சத்து, அசத்து, சதசத்து' என்னும் மூவகைப்

*பொருளின் இயல்பையும் நன்கு உணர உணர்த்தலால், அப்பயனைச் சிவநெறி ஆசிரியர்பால் பெற்ற மாணாக்கர் அனைவரது உள்ளமும் அவரை, 'சிவன்' எனவே தெளிவன ஆகின்றன.*

***குறிப்புரை :-*** *பத்தி - இறைவன்பால் செலுத்தப்படும் அன்பு. இது எண்ணெய் ஒழுக்குப்போல இடையறாது செலுத்தத்தக்க தொன்றாதலானும், அத்தகைய அன்பையும் இறைவனே உயிர்களுக்கு உண்டாக்கவேணும் என்று அருளினால் அல்லது உயிர் தாமே எய்தும் தரத்தின அன்றாகலானும் 'பத்திப் பணித்து' என்றார்.*

*துரிசு - குற்றம், ஆன்மாவினிடம் உள்ள ஆணவமலமும், அதன் காரியமாகிய அஞ்ஞானமும். அதன் விளைவாகிய ஏனைய குற்றங்களுமாம். ஆன்மாவுக்கு மலத்தினது இயல்பையும் அதன் உண்மையையும் உணர்த்தி அதன் வலிகுன்றச் செய்யும் கிரியை, ஞான தீட்சா முறையில் மலமாயா கன்ம சோதனை என வழங்கப்பெறுதலின் அப்பரிபாஷை தோன்றச் சோதித்து என்றார்.*

*சத் - பாசஞான பசுஞானங்களினாலே அறியப்படாது பதிஞானம் ஒன்றானே அறியப்படும் உண்மைப் பொருள்; அதுசிவன். இதனை "இருதிறன் அல்லது சிவசத்தாம் என" என்னும் சிவஞானபோத ஆறாம் சூத்திரப் பகுதியான் அறிக.*

*அசத்து - அறிவினால் அறியப்பட்ட சுட்டாகிய பாசப்பொருள். இது உலகமும், மாயையும், மலமும் ஆம். இதனை "உணருரு அசத்தெனின்" என்னும் சிவஞான போதப் பகுதியானும், "அறிவறிந்த எல்லாம் அசத்தாகும்" என்னும் மேற்கோளானும் அறிக.*

*சதசத்து - சத்தோடு கூடிச் சத்தாயும் அசத்தோடு கூடி அசத்தாயும் இருக்கும் உயிர். இம்மூன்றையும் உணரச் செய்பவன் குரு.*

*இம்மந்திரத்தில் 'பத்திப் பணித்து' என்பதால் சரியையும், 'பரவும் அடிநல்கி' என்பதால் கிரியையும் 'துரிசறச் சோதித்து' என்பதால் யோகமும், 'சத்தும், அசத்தும் சதசத்தும் காட்டலால்' என்பதால் ஞானமும் உபதேசிக்கப் பெற்றமை உணர்த்தப்பெற்றது.*

**1554.** ***தெளிவுரை :-*** *ஞானாகாயத்தைத் திருமேனியாக உடைய சற்குரு செய்யும் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.*

*அநாதியே ஆணவமலத்திற் கட்டுண்ட உயிரை*

**1554.** பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
நேசத்த காயம் விடுவித்து நேர்நேரே
கூசற்ற முத்தியிற் கூட்டலால் நாட்டகத்
தாசற்ற சற்குரு அம்பர மாமே. **2**

---

அக்கட்டினின்று பாசத்தைக் கூட்டிப்பறித்து, உடலே தானென்றிருந்த அபிமானத்தை விடச்செய்து, நேருக்கு நேராகக் கூசுதலில்லாத பரமுத்தியில் கூட்டுதற்கு உபகாரப்படும் திருவருள் நோக்கத்தை உடையது குற்றமற்ற சற்குருவாம்; அதுவே ஞானாகாயமும் ஆம் என்றவாறு.

உயிர்களை மலபந்தத்திலிருந்து நீக்குவதற்காக மாயை கன்மங்களாகிய பாசங்களோடு கூட்டி, போகங்களை ஊட்டி, தன்னோடு அபேதமாய் விசுவசிக்கப்பட்ட உடலை நீக்கி, நேருக்கு நேராக முத்தியில் சேர்ப்பவனே ஆசாரியன்; அவன் அம்பல உருவினன் என்பது கருத்து. நாட்டத்தது, ஆசற்ற சற்குரு. எனவே, முடிமுதல் இன்றியமையாதது ஆயினும் சற்குருவை அம்பலமாக உருவகித்தமையின் அதற்கேற்ப நாட்டத்தது என அஃறிணை முடிவை அருளினர்.

குறிப்புரை :- விடம் உண்டவனுக்கு அவ்விடத்தையோ அல்லது அவ்விடத்தோடு ஒத்த மற்றொன்றனையோ மருந்தாகக் கொடுத்து விடத்தை நீக்குவதுபோல, இறைவன் உயிரின் வியாபகத்தை மறைப்பதாகிய ஆணவமலமாகிய கட்டினை, பாசங்களைக் கூட்டிப் பழைய அழுக்கோடு புதிய அழுக்கையும் போக்குகின்ற வண்ணான்போலப் போக்குகின்றார் என்பது விளங்கப் 'பாசத்தைக் கூட்டியே கட்டுப் பறித்திட்டு' என்றார். 'கட்டிப்பறித்திட்டு' என்று பாடங்கொண்டு பாசங்களைச் சேர்த்து ஆன்மா செயற்படாதவாறு கட்டி மூல மலத்தையும் பறித்து எனக் கொள்வாரும் உளர்.

மனம் மொழி மெய்களான் குற்றமற்று விளங்குபவரே குரு என்பார், 'ஆசற்ற சற்குரு' என்றார். அம்பலம், 'அம்பரம்' என்பதன் திரிபு. ஈண்டு அது அம்பலவாணன் ஆகிய சிவத்தை உணர்த்திற்று. சற்குருவே அம்பலம் என உபதேசித்தவாறு.

**1555.** **சித்திகள் எட்டொடும் திண்சிவ மாக்கிய**
**சுத்தியும் எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்**
**சத்தியும் மந்திர சாதக போதமும்**
**பத்தியும் நாதன் அருளில் பயிலுமே.** **3**

---

**1555.** *தெளிவுரை :-* *இறை அன்பும், அதன்வழி ஓதப்படும் பலவகை மந்திரங்களின் சித்திகளும், யோகத்தில் நிலைபெற்று நிற்கும் உறுதிப்பாடும், அந்த யோகத்தால் அடையப்படும் அட்டமா சித்திகளும், வாமை முதல் எட்டாய் விரிந்து நிற்கின்ற திரோதான சத்தி அங்ஙனம் நில்லாது, அருட் சத்தியாகி அருளுகின்ற சிவஞானமும், அந்த ஞானத்தின்வழி விளங்கிய சிவம் ஆன்மாவைத் தானாகச் செய்யும் முத்தியும் குருவருளால் இனிது கிடைப்பனவாம்.*

*குறிப்புரை :-* *எண்சத்தித் தூய்மை - எண்ணப்படுகின்ற திரோதான சத்தியின் தூய்மையான நிலை. இதுவரை உயிர் பாசங்களோடு ஒன்றிப் பசுவாதற்கு உபயோகப்பட்ட திரோதான மாயை, ஆசாரியன் உபதேசத்தால், தன்னிலைதிரிந்து, அருட்சத்தியாய், உயிர், திருவருளைச் சார்தற்கு உபகாரப்படுதற்குரிய, தூய்மையான நிலையை உறுதலாம்.*

*யோகத்துச் சத்தியும் - யோகத்தால் விளையும் வன்மையும். யோகமாவது இயம நியமாதிகளால் உயிர் இறைவனோடு ஒன்றியிருக்கச் செய்யும் பயிற்சியாகும். இறைவனை அகத்தொழிலானும் புறத்தொழிலானும் வழிபட்டு வருவதாகிய கிரியை அடிப்பட்டு வர வர நிகழும் பக்குவ விசேடத்தான் அதிநுட்ப உணர்வுடையராய், "நிட்களமாகிய அதிசூக்கும வடிவமே பொருள்; சகளமும், நிட்களமும் அதனை வழிபடுதற்கு இடமாகிய திருமேனி'' என்று உணர்ந்து அகத்தொழில் மாத்திரையால் ஆறாதாரங்களிலும் இறைவனை விதித்தபடி கண்டு வழிபடுவது என்க. அதனால் விளையும் சத்தியாவது, உலகியலில் சித்தராக விளங்குதலும், கடந்த நிலையில் சிவயோகியாக உண்மை ஞானம் கைவரப்பெற்று அறிதன் மாத்திரையால் வழிபடும் ஆற்றலுமாம். சித்தராக விளங்கும்போது உலகினர் போற்றுதலால் ஏமாறவும் கூடுமாதலின்' அதனை விடுத்து உண்மைஞானம் பெறுதலே உயர்ந்தது என்க. இதனைத் தடுத்து உயர் நிலையிற் பழக்குபவன் குருவாதல் காண்க.*

*மந்திரம் - சப்தகோடி மகாமந்திரங்களும், சித்தத்தைத்*

**1556.** எல்லா உலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலால்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. 4

---

*தெய்வமாக்கும் கணபதி முதலிய தெய்வங்களைக் குறித்த மந்திரங்களும், மந்திர அரசாகிய சீபஞ்சாக்கரமுமாம். அவை நினைப்பவனைக் காக்கும் தன்மையன ஆதலின் இப்பெயர்பெற்றது. மந்திரங்கள் நெடுநாள் உருவேற்றுதலும், உருவை மனத்து எண்ணுதலும், உருவாகவே யமைதலுமான சாதகமுறையில் வளர்க்கத் தக்கன. அங்ஙனம் சாதித்தார் எய்தும் பயன் போதமாகிய ஞானம். இதனையே 'மந்திர சாதக போதமும்' என்றது.*

*இவையனைத்திற்கும் உள்ளொளிதருவது இறைவனிடம் என்றும் நீங்காத அன்பு. அதனையும் ஆசாரியனே அருளுதல் வேண்டும். மலருக்கு மணம் இயற்கையாயினும் பருவமும் பொழுதும் வர வண்டு ஊத, மலர் விண்டு மணத்தை வெளிப்படுத்துதல் போல. அன்பு என்னும் பொதுக்குணம் ஆன்மாவுக்கு இயற்கையாயினும் ஆசாரியன் சிவனைப் பற்றியிருப்பதுதான் பத்தியென்று உணர்த்த வேண்டுதலின் அதுவும் ஆசாரியன் உதவியதாம் என்றார்.*

*நாதன் - சித்து, அசித்தாகிய அனைத்திற்கும் தலைவனாவான்; அவன் சிவன்; சிவகுரு. அவனுடைய அருளால் ஆன்மாவிடம் முற்கூறிய குணங்கள் விளங்கித் தோன்றும் என்பதாம்.*

**1556. *தெளிவுரை :-* *சுத்தமும், அசுத்தமும், பிரகிருதியும் முதலான மாயைகளிலுள்ள உலகங்கள் எல்லாவற்றையும் கடந்து நிற்கின்ற சுத்த சிவன், தனது அருள் காரணமாக, மலம் நீங்கியோரது சுத்தான்ம சைதன்னியத்தில் தயிரில் நெய்போல இனிது விளங்கிநின்று, பக்குவிகளுக்கு உண்மை ஞானத்தை அருளுதலாலும், ஏனைய பலர்க்கும் அவரவர்க்கு ஏற்ற பெற்றியால் அருள்புரிந்து ஆட்கொண்டு இவ்விடத்தே நலம் செய்தலாலும் சொல்லுதல் நிறைந்த ஞானகுரு அந்தச் சுத்த சிவனேயாவன்.***

***குறிப்புரை :-* நல்லார் - பரிபாகிகளான ஞானிகள். அவர்கள் உள்ளம் இறைவனுக்கு உகந்த இடமாகலின், அதனை எப்பொழுதும் வீற்றிருக்கும் கோயிலாகக் கொண்டிருக்கிறான்; அருளை மிக வழங்குகிறான். சுத்தசிவன் தற்போதம் அற்று அருள்வழியே நிற்கும் அருளாளரது உள்ளத்திலே இனிது விளங்கி நிற்றலை,**

**1557.** தேவனும் சுத்த குருவும் உபாயத்துள்
யாவையும் மூன்றாய் உளக்கண் டுரையாலே
மூவாப் பசுபாசம் மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்கும் குருபரன் அன்புற்றே. **5**

---

*"அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே*
*ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார் உள்ளிருக்கும்*
*அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய்"*

*- தி.8 திருஅம்மானை, 11*

*என்னும் திருவாசகத்தால் அறியலாம். இறைவன் ஆன்மாக்களிடம் பட்சபாதம் இல்லாதவன். ஆகையால் ஒப்ப எல்லாரையும் உய்ய ஆட்கொண்டு அருள்செய்கின்றான். ஆயினும் ஆன்மாக்களுடைய பரிபாக நிலைக்கேற்ப அவரவர்களுக்குப் பயன் தருவதாகின்றது. மழை எங்கும் ஒப்பப் பெய்யினும் பள்ளம் படுகுழிகளில் நீர் தேங்கியும், மேடுகளில் மண்ணீரமாகக் கலந்தும், மலையில் உடனே உலர்ந்தும் போவது போல என்க.*

*சொல் - மாணவன் மல மாயைகளிலிருந்து நீங்கி உய்ய வேண்டும் என்ற உயர்நோக்கால் உபதேசிக்கின்ற சொற்கள்.*

*இதனால் இறைவனே எல்லாரையும் உய்யக்கொள்வதற்காக மானிடச்சட்டை சாத்திவந்து உபதேசித்தலால் அவனே குரு என்பதை அறிவித்தவாறு.*

**1557.** *தெளிவுரை :- சிவன் தான் நேரே அருளுதல், குருமூர்த்தியிடமாக நின்று அருளுதல் என்னும் இருவழிகளில் குருவாய் அருளுமிடத்து அக்குரு மாணாக்கன்பால் மிகவும் அன்பு கொண்டு உபதேச மொழியால் எல்லாப் பொருள்களையும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களில் அடக்கி உணரவைத்து, அவ்வுணர்வினால், அநாதியே பசுத்துவப்படுத்தி நின்ற பாசத்தை நீக்கி முத்திக் காலத்தில் உளவாகின்ற எல்லா நலங்களையும் அருளுவார்.*

*குறிப்புரை :- அஞ்ஞானம் அசுத்தமாதலின், சுத்தம் - ஞானம். 'சுத்த சைதன்னியம்' எனினும் ஆம். "குருவும்" என்பதன் பின், 'ஆம்' என்பது வருவிக்க. சிவன் உயிர்களுக்கு ஞானத்தை உணர்த்தும் வகை 'நிராதாரம், சாதாரம்' என இரண்டாம். முன்னையது தான் நேரே*

*அருளுதல். அது விஞ்ஞானகலர் பிரளயாகலர்கட்கு. குருமூர்த்தி யிடமாக நின்று அருளுதலே சாதாரம். அது சகலர்க்கு அவற்றுள் குருவிடமாக நின்று 'அருளும் முறை இஃது ஒன்றே அன்று' என்றற்கு ஏனையதையும் குறித்தார். காணுதல் - இங்குச் செய்தல். முத்திக் காலத்தில் உளவாகின்ற நலங்கள், "நாமார்க்கும் குடியல்லோம்" (தி.6 ப.98 பா.1) என்பது முதலாகவும், "எங்கெழில் என் ஞாயிறு" (தி.8 திருவெம்பாவை பா.19) என்பது போலவும் அருளிச்செய்யப்பட்டன.*

*தேவன் - ஒளியான திருமேனியைப் படைத்தவன். தேவன் என்னும் சொல் அடைமொழியின்றி உணர்த்துவது சிவபரம்பொருள் ஒன்றையேயாம். இந்திரன், மால், பிரமன் முதலான எழிலார் மிகு தேவரெல்லாம் திருமேனியில் ஒளியுடையராயினும் அவ்வொளி தண்மதி ஒளிபோலத் தவஞ்செய்து இறைவனிடமிருந்து பெற்ற ஏகதேச ஒளியேயாம். ஆதலால் அவர்களை இன்னார் என்று சிறப்புப் பெயரோடு கூட்டியே அழைத்தல் வேண்டும். இறைவன் ஒருவனே, 'தேவ என்னும் சொல்லுக்கு நேர் பொருளானவன்', 'தேவாய தேவாய' என்னும் மந்திரமும் இப்பொருளை வலியுறுத்துவதாம்.*

*குரு பாவங்களைப் புகுதாதவாறு சீடன் சிந்தையைத் தடுத்து நிறுத்துபவன் என்னும் பொருளது. குரு தான் சுத்தனாக இருந்தால் அல்லது அசுத்தராய மக்களைத் திருத்தவொண்ணாது ஆகலின், 'சுத்தகுரு' என இயற்கை அடைகொடுத்தோதினார். இதற்கு மல, மாயை, கன்மங்களிலிருந்து இயல்பாகவே நீங்கிய அடிமை, ஆருயிரும் சிவகுரு ஆம் என உரைப்பாரும் உளர். சிவத்துவ வியாபகத்துள் செறிந்து நிற்கும் சிவானுபவியாகிற சிவகுரு சிவனேயாதலின் அங்ஙனம் மலத்தின் நீங்கிய உயிரெனல் பொருந்துமோ என்பது ஊன்றி ஆய்தற்குரியது. சுத்த குரு - வெங்கதிர் என்பது போலத் தன்மை விளக்க வந்ததாகக் கொள்க. இனம் விலக்க வந்ததன்றென்க.*

*உபாயம் - பொருள்கள். அவை பதி பசு பாசம் என்று மூன்றாக உரைக்கப்படுதலின் இவற்றின் வேறாக எப்பொருளும் இன்மையின் 'யாவையும் உபாயத்துள் மூன்றாய் உனக்கண்டு' என்றார். உன - உன்ன.*

*குருபரன் அன்பற்று உரையாலே மாற்றி யாவையும் நல்கும் என முடிக்க, உரை - சீபஞ்சாக்கரமும் அதனை ஓதும்முறையும் நிற்கும்முறையும். ஆன்மாக்கள் நித்தியம் ஆதலின் அதற்கு மூப்பும்*

**1558.** சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்து
அத்தனை நல்கருள் காணா அதிமூடர்
பொய்த்தகு கண்ணால் நமர்என்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே. **6**

---

*இழப்பும் இல்லையாதலின் அவற்றை 'மூவாப்பசு' என விசேடித்தார். குருநாதன் தன்னுடைய உபதேச மொழியால் உயிர்களைப் பாசங்களிலிருந்து நீக்கிப் பேரின்பத்தை நல்குவன் என்றவாறு. முத்திப்பால் - முத்தியிடத்து.*

*குருபரன் அன்புற்று நல்குவது கைம்மாறு வேண்டாத கருணையாலாம் என்க.*

*இதனால், சிவகுருவினது ஆற்றல் கூறப்பட்டது.*

**1558. *தெளிவுரை :-* *உலகவர் குருவைச் சிவனென மதியாது நமர் என்றும், ஞானிகள் சிவன் என்றும் கொள்ளுவர் என்பதை உணர்த்துகின்றார். சுத்த சிவனே குருவாய் எழுந்தருளி வந்து மலங்களைப் போக்கித் தூய்மைப்படுத்தி, அங்ஙனம் தூய்மைப்படுத்தப் பட்ட உயிர் ஐம்புலன்களாகிய வேடர் கூட்டத்தினின்றும் நீங்கி (சிவஞானபோதம், சூ.8) அரசனாகிய தன் தந்தையை அடையச் செய்கின்ற அருட் சிறப்பைக் கூறும் ஞானக்கண் இல்லாத பெரும் பேதையர் தமது ஊனக் கண்ணால் மட்டும் கண்டு அக்குருவையும் நம்மில் ஒருவனாக எண்ணுவர். ஆயினும் ஞானக்கண்ணை அடைந்த புண்ணியர் அக்குருவை, 'இவன் சிவனே' என்று அறிந்து அவனது பாதங்களை வணங்கி நிற்பர்.***

***குறிப்புரை :-* "அத்தன்" என்றது முறை உணர்த்தி நிற்றலின், வேறொருவன்போலக் கூறினார். அத்தன் - சிவபெருமான். அடையப்படுபவனைக் கூறியதனாலே, நீக்கப்படுபவர் பெறப்பட்டனர். பொய்த்தகு - பொய்ம்மையாம் இயல்பைக் கொண்ட பொய்த்தகு கண்ணாரை இகழ்ந்தமையால் "புண்ணியர்" என்னும் புகழுரை. மெய்த்தகு கண்ணை உடைமை பற்றியதாயிற்று.**

***"பார்வைஎன மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்***
***போர்வைஎனக் காணா புவி"***

***என்றார் திருவருட்பயனிலும் (பா. 45).***

***இதனால், சிவகுருவின் பெருமை உணரமாட்டாதவரது இழிவு கூறப்பட்டது.***

**1559.** உண்மையிற் பொய்மை ஒழித்தலும் உண்மைப்பார்த்
திண்மையும் ஒண்மைச் சிவமாய அவ்வரன்
வண்மையும் எட்டெட்டுச் சித்தி மயக்கமும்
அண்ணல் அருளன்றி ஆரறி வாரே. 7

---

*1559.* ***தெளிவுரை :-*** *மெய்ப்பொருள் (தத்துவ) அறிவால் பொய்ப்பொருள்கள் மறைந்து நிற்கும் தன்மையையும், அப் பொய்ப் பொருள்களினின்றும் நீங்கி, மெய்ப் பொருள்களில் நிலைத்து நிற்கும் முறையையும் அறிவுப் பொருளாம் சிவமாகிய நல்ல மேன்மையை உடைய இறைவன் உயிர்கட்குப் பெத்தம், முத்தி என்னும் இருநிலையிலும் உடனாய் நின்று செய்து உதவி வருதலையும், பெத்த காலத்தில் புத்தியின் அலைவுகளாகிய அறுபத்து நான்கினையும் குருவருளால் அன்றி யார் அறிந்துகொள்ள இயலும்! பார் - பிரபஞ்சம். மாயா காரியமாய்த் தோன்றி நின்று அழிவதாய்ப் பொய்யாய் இருந்தும் சகலான்மாக்களுக்கு உண்மை போலத் தோன்றுதலின் "உண்மைப்பார்" என்றார்.*

***குறிப்புரை :-*** *புத்தி மயக்கம் அறுபத்து நான்காவன. புத்தி குண பாவகங்களாகிய தன்மம் முதலிய எட்டனுள் அஞ்ஞானத்தின் விரிவாகிய அவையாம். அவற்றைச் சிவஞான மாபாடியம் முதலிய விரிவுகளிற் கண்டுகொள்க. பாவகங்களுள் ஏனையவற்றைக் கூறாது அஞ்ஞானம் ஒன்றையே கூறியது, அதன் கொடுமை மிகுதி பற்றி. ஒண்மை - ஒளி. சிவம் ஒளியான திருமேனியுடையதாதலின் "ஒண்மை சிவமாய அவ்வரன்" என்றார். அரன் - பாவங்களைப் போக்குபவன் என்னும் காரணத்தால் வந்த பெயர். 'குருவருளால் அன்றி இவற்றை ஒருவராலும் அறிய இயலாது' என்பதை,*

> *"நானும் என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்*
> *தானும்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்"*
> *- தி.8 கோத்தும்பி, 15*

*எனவும்,*

> *"காண்பார் ஆர் கண்ணுதலாய் காட்டாக்காலே"*

*எனவும்*

> *"நானார்என் உள்ளம்ஆர் ஞானங்களார் என்னை*
> *யாரறிவார்*
> *வானோர் பிரான்என்னை ஆண்டிலனேல்"*
> *- தி.8 கோத்தும்பி, 2*

*எனவும்,*

**1560.** சிவனே சிவஞானி யாதலால் சுத்த
சிவனே எனஅடி சேரவல் லார்க்கு
நலமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. **8**

---

*ஆகமங்கள் எங்கே! அறுசமயந் தானெங்கே!*
*யோகங்கள் எங்கே! உணர்வெங்கே! - பாகத்*
*தருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்*
*பெருவடிவை யாரறிவார் பேசு.*

*- திருக்களிற்றுப்படி, 5*

*எனவும்,*

*ஆரறிவார் எல்லாம் அகன்ற நெறிஅருளும்*
*பேரறிவான் வாராத பின்.*

*- திருவருட்பயன், 49*

*எனவும் வருவனவற்றாலும், பிறவற்றாலும் அறிக. அவனது வண்மை உயிர்களின் பரிபாகம் அறிந்து ஊட்டுதலும், கூட்டுதலும் செய்து பேரின்பத்தில் இருத்துதல்.*

*இதனால், குருவருளாலன்றி ஒருவராலும் உண்மை உணரலாகாமை கூறப்பட்டது.*

**1560. *தெளிவுரை :-*** *சிவனே குரு எனச் சிந்தை செய்யின் விளையும் பயன்களை உணர்த்துதல் நுதலிற்று.*

*சிவனே சிவஞானி ஆதலால் குருவைச் சுத்த சிவனே என்று எண்ணித் திருவடியைத் தியானிக்க வல்லவர்கட்குப் புதிதான தத்துவங்களும், நல்ல முத்தியும் சேரும்; பிறப்பின்றிப் பரலோகம் சித்திக்கும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *குருவைச் சிவனே என உறுதியாக உளங்கொளின் பசுகரணங்கள் பதிகரணங்களாகிச் சீவன், முத்தியைச் சேரலாம்; பிறப்பு அற்றுப் பரலோகமும் கிடைக்கும் என்பது கருத்து.*

*சிவஞானி என்றது ஆசாரியனை, ஆசாரியனை நம்போல் மானிடன் என்று எண்ணாமல் சுத்தசிவமே என்று புத்திபண்ணின் விளைவன இவை என்பதாம். சேர்தல் - இடைவிடாது தியானித்தல்; அடைதலுமாம். சேர்தலின் அருமைதோன்றச் 'சேரவல்லார்' என்றார்.*

*நவமான தத்துவம் - புதிய அனுபவ உண்மை. கரணங்கள் பாசத்தோடு ஒன்றிப் பாசமான காலத்து நுகர்ந்த போகம்போல*

**1561.** குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவம்என் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே. **9**

---

*அற்பமாதலின்றி, அவை சிவகரணமான காலத்துச் சிந்தை நிறைந்த - நிலைத்த பெரும் போகமான இன்பநிலை அனுபவம் விளைதலை 'நவமான தத்துவம்' என்று அருளியது. அங்ஙனம் நவமான தத்துவம் விளைந்தபோது அவன் சீவன் முத்தனாகிறானாதலின் 'நன்முத்தி நண்ணும்' என்றது.*

*எடுத்த தேகம் வீழ்ந்த பின்பு தொடர்ந்து வரும் பிறப்பற்றுப் பரமுத்தி சித்திக்கும் என்பார் 'பரலோகமாமே' என்றார். இங்ஙனம் படிமுறையாக விளையும் பயன் உணர்த்தியவாறு.*

**1561.** *தெளிவுரை :-* *குருவே சிவமென்பதை வலியுறுத்துகிறார்.*

*குறிப்புரை :-* *"நந்தி கூறினன்" என்றது தாம் அறிந்தவாற்றைக் கூறியது. என்பது - என்று வேதாகமங்களிற் சொல்லப்படும் பொருள். குறித்தல் - உளங் கொள்ளுதல். "சிவனுமாய் நிற்கும்" என்றது, சிவனை வேறு வழிபட வேண்டாமை கூறியதாம். "கோனுமாய் நிற்கும்" என்றதும் இவனது ஆணையே சிவனது ஆணையாக அதன் வழி நிற்றலே அறமாதலை உணர்த்திற்று. ஈற்றடி, குரு உருவுடையனாயினும், உருவிலனாகிய சிவனே எனச் சிவனோடு இவனிடை வேற்றுமை இன்மையை வலியுறுத்தவாறு. குறித்தல் - உறுதியாக எண்ணுதல். ஓர்தல் - ஒரு மனப்பட்டு தியானித்தல். உரைஉணர்வு - வாக்கும் மனமும். உணர்வு என்ற காரியத்தின் பெயர் அதன் கருவியாகிய மனத்தை உணர்த்திற்று.*

*இதனால், சிவகுருவை அணுகி நிற்கும்முறை பலவும் தெரித்துக் கூறப்பட்டன.*

**1562.** *தெளிவுரை :-* *உயிரின் அறிவு அறிவன அனைத்தும் சிவன் தனது அருளால் அறிவிப்பனவேயாகும். அந்நிலையில் உயிரின் அறிவு அறிவன யாவையும் உறுதியான சிவனேயாய் முடிந்துவிட்டால், சிவனும் அவ்வறிவில் பிறவற்றைத் தோற்றுவியாது தன்னை மட்டுமே தோற்றுவித்து நிற்பான். சித்தம் சிவமானபோது அத்தன் இடைவிடாது அமர்வன்.*

**1562.** சித்த ம்யாவையும் சிந்தித் திருந்திடும்
அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே
சித்த மியாவையும் திண்சிவ மானக்கால்
அத்தனும் அவ்விடத் தேஅமர்ந் தானே. **10**

**1563.** தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி எந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி என்று மகிழும் ஒருவற்குத்
தானந்தி அங்கித் தனிச்சுட ராமே. **11**

---

***குறிப்புரை :-*** *''சித்தம்'' என்றது அறிவை. 'சித்தம் சிந்தித் திருந்திடும் யாவையும் அத்தன் அருளால் உணர்த்துவதாகும்' என மாற்றுக. முதலடியை மாற்றாது ஆற்றொழுக்காகவே உரைப்பின், அது சித்தத்தின் இயல்பு கூறியதாக்கி அதன் இறுதியில் 'அவை' என்பது வருவித்துக் கொள்க. 'உயிரின் அறிவு பக்குவம் எய்தாத பொழுது சிவன் அதன்கண் வினைக்கீடானவற்றை உணர்த்துவன். பக்குவம் எய்திய வழி அவற்றை ஒழித்துத் தன்னையே உணர்த்தி நிற்பான்' என்பது இதன் திரண்ட பொருள். 'ஞானாசிரியர் சிவன் தன்னையே உணர்த்தி நின்ற அறிவையுடையராதலின், அவர் அச்சிவனேயாவார்' என்பது இதனால், உணர்த்தப்படும் பொருள். எனவே, ''குருவே சிவம்'' என்பது முதலியன அமையுமாறு காட்டியதாயிற்று.*

*தேவதத்தன் கத்தியால் வெட்டினான் என்றவழி வெட்டுதல் கத்தியின் தொழிலும், சடமாகிய கத்தியைத் தொழிற்படுத்துதல் தேவதத்தன் செய்கையும் ஆனாற்போல, சிந்தித்தல் சித்தத்தின் செயலும் சிந்திக்கச்செய்தல் சிவன் உணர்த்தியதால் விளையும் பயனுமாதல் தெளிக. ஆகவே, அத்தன் - உணர்த்தும் வினைமுதல்; சித்தம் - உணர்தற்கருவி; ஆன்மா உணரும் வினைமுதல் எனப் பிரித்துணர்க. இதனால் ஆன்மாக்கள் சித்தத்தால் சிந்தித்து உணர்தல் சிவனருளாலன்றிப் பிறிதானன்று என்பது தெரிவித்தவாறு.*

*இதனால், சிவகுரு சிவமேயாதல் அதன் உண்மையுணர்த்தும் முகத்தால் தெளிவிக்கப்பட்டது. குருவருளால் சித்தத்தை சிவன்பாலே வைத்தால் சிவன் விளங்குவான்.*

**1563. *தெளிவுரை :-*** *'ஞானத்தைப் பெற்றவன் சிவனது இயல்பைத் தனது அறிவில் காணும்படி வைத்த ஆசிரியன் அந்தச்*

**1564.** திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளாது அருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் அருளாவிடில் ஓரவொண் ணாதே. 12

**1565.** பத்தியும் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாம் சிவோகமே சேர்தலால்
முத்தியின் ஞானம் முளைத்தலால் அம்முளை
சத்தி அருள்தரின் தான்எளி தாமே. 13

---

*சிவனே என்க' என்னும் சிவனது திருவுள்ளத்தை அறிபவர் உலகில் இல்லை. அதனை அறியவல்ல ஒருவனுக்கு அச்சிவன் மாலைக் காலத்தில் ஏற்றப்பட்ட புறவிளக்குப் போன்று ஒப்பற்ற அகவிளக்காய் நிற்பன்.*

*குறிப்புரை :- சீர்மையுள் சந்தித்த சீர்வைத்த கோன்தான் நந்தி எனக் கொண்டுகூட்டிப் பொருள் காண்க. மகனைப் பள்ளியில் சேர்த்த தந்தையின் கருத்து அறிவுத் துறையில் புகழோடு சிறப்பு எய்துதல் ஒன்றேயாதல் போல மலமாயை சிவஞானத்தோடு கூட்டிச் சிறப்புற வைத்தல் சிவகுருவின் கருத்து. குருவே சிவனெனக் கொண்டு எண்ணி எண்ணி மகிழ்தல் ஒன்றே என்பதும், அங்ஙனம் மகிழ்வான் மனத்தில் தான் மாலைக்காலத்துத் தீப ஒளிபோல விளங்குவன் என்பதும் உணர்த்தப் பெற்றன. இதனை "நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீலமணிமிடற்றன்" என்பதனாலும் அறிக.*

*வானந்தி - வான் நந்தி, பரமாசாரியன். இதனால், சிவகுருவைச் 'சிவன்' என உணர்தலே சிவனது திருவுளத்திற்கு உவப்பாவது என்பது கூறப்பட்டது.*

**1564.** *தெளிவுரை :- ஞானமாகிய பேறும், அதன் விளைவான முத்திப்பயனும், மெய்ம்மையை மறவாத அருள்நிலையும், மயக்கம் நீங்குதற்கு ஏதுவாகிய உண்மைப் பொருளையுடைய வேதத்தின் விளக்கமும் சிவனே குருவாய் வாராவிடில் ஒருவற்கும் அறிய இயலாது.*

*குறிப்புரை :- **திருவாய சித்தி :** திரு - ஞானம். சித்தி - பேறு. திருவாய சித்தி - ஞானப்பேறு. வேதாந்த போதம் - வேதத்தின் முடிவான உபநிடதங்களால் உணரப்படும் மெய்ஞ்ஞானம். அது என்றும் அழியாத நித்தியப்பொருளாதலின் "வாய்மைப்பொருள்" எனப்பட்டது.*

*இதனால், சிவன் உருவாய் வரவேண்டுதலின் இன்றியமையாமை கூறப்பட்டது. "உண்மையிற் பொய்மை" என்னும் மந்திரம் (பா.1559) குருவருளின் இன்றியமையாமை கூறியது.*

*இறைவன் ஆன்மாக்கள்மீது வைத்த கைம்மாறு வேண்டாத கருணையால், கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்து, மானைக் காட்டி மானைப் பிடிப்பார்போல மானிடவடிவு தாங்கி, குருவாக எழுந்தருளி உபதேசம் செய்யாவிடில் உயிர்களால் ஆராய முடியாது என்பதனை "நாதன் உருவாய் அருளாவிடில் ஒர ஒண்ணாதே" என்பதால் உணர்த்தினார்.*

*"ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவுகொண்டு*
*காரணன் அருளானாகில் கதிப்பவர் இல்லையாகும்*
*நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாம்*
*சீரணி குருசந்தானச் செய்தியும் சென்றிடாவே"*

*என்னும் சித்தித் திருவிருத்தத்தானும் தெளிக.*

**1565. *தெளிவுரை :-* *பத்தி இறைவன்மாட்டு எழுந்த முறுகிய அன்பு. அன்பு உயிர்க்குணமாய் உபகாரியைக் கண்டவுடன் உள்ளத்து எழும் நெகிழ்ச்சி. அது அவ்வுபகாரியை இடையீடின்றிக் காண்டலானும், தொழுதலானும், அவன்புகழைக் கேட்டலானும் வெளிப்படுவதாதலின் இறைவன் மாட்டு எழும் அன்பைப் 'பத்தி' என்றார்.***

***குறிப்புரை :-* *பத்தி - என்பது அன்பினால் விளைந்து தொண்டு நெறியில் கொண்டு சேர்க்கும். தியானமும் பூஜையுமாகிய சேவையால் விளைவது என்பது பகுதிப்பொருள். அது தலையன்பும் இடையன்பும் கடையன்பு மெனமுத்திறப்படும். தலையன்பு தைலதாரை போல எஞ்ஞான்றும் இறைவன் மாட்டு நிகழ்வது. இதனைச் "சிந்தை இடையறா அன்பும்" என்னும் சேக்கிழார் திருவாக்கான் உணர்க. இடையன்பு என்பது மனம் இறைவனோடு ஒன்றியபோது மட்டும் வெளிப்படுவது; சூரியனது சந்நிதியில் காந்தக்கல் கனலைக் கக்குவது போல கடையன்பு இறைவனது திருவுருவத்தைக் கண்டபோது மட்டும் வெளிப்படுவதாய் ஏனைக்காலத்து அத்தொடர்பே இல்லாது இறுகி இருப்பது; அற்று அற்று ஒழுகும் நீர்த்திவலை போல, அல்லது கனலைக் கண்டவுடன் இளகும் இழுது போல எனலும் ஆம். இது பரசித்திக்கு முதற்படியாதலை உணர்த்தியவாறு.***

**1566.** பின்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனே எம்மிறை
தன்னெய்தும் காலத்துத் தானே வெளிப்படும்
மன்னெய்த வைத்த மனமது தானே. **14**

---

*ஞானம் - முறுகிய அன்பால் எழும் இறையுணர்வு. இதனை "நாயகன் சேவடி தைவரும் சிந்தையும்" என்னும் சொற்றொடரைக் கொண்டு நன்குணரலாம். இரு மாயேயமான உலகியல் அறிவை உதறித்தள்ளி, திருவடியே சார்தலால் விளைவது ஆகலான் இதுவும் பரசித்திக்கு வித்தாயிற்று என்க.*

*வைராக்கியம் - வெறுப்புத்தன்மை. நம் அறிவால் காணப்படுவனவும் இந்திரியங்களானுகரப்படுவனவுமாகிய பொருள்கள் தோன்றி நின்று அழிவனவாய், சிற்றின்பத்தனவாய், பாலுண்டார்க்கு வாய் புளிக்குமாறு போல பிற்பயக்கும் பீழை பெரிதுமுடையனவாயிருத்தலின் அவற்றில் வெறுப்புத் தோன்ற என்றும் நிலையுதலுடைய சிவத்தைப் பற்றுதலும் அதனையே அறிதலும் அதுவே நான் என இருத்தலும் ஆகிய அனுபவங்கள் முறையான் விளையும்; ஆதலால் வைராக்கியமும் பரசித்திக்கு வித்தாயிற்று. விராகம் - ஆசையற்றது. அதன் தன்மை வைராக்கியம் ஆகவே பற்று அறுதியால் விளையும் தன்மையே வைராக்கியமாம்.*

***பரசித்தி :** சித்தி - பேறு; பரம் - பரம்பொருள். ஆகவே பரசித்தி சிவப்பேறாம் என்க. பத்தி ஞான வைராக்கியங்கள் உண்மை ஞானத்தை உதவ அதனால் பரசித்தி கிடைத்தலின் 'வித்தாகும்' என்றார்.*

*சிவோகம் - சிவமே நான் என்றிருக்கை; அஃதாவது தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வுக்கு விஷயமாகாத முதல்வனை ஆராய்ந்து அச்சிவஞானத்தானே ஆசாரியன் 'சிவோகம்' எனத் தன்னுள்ளே வைத்துப் பாவித்து, 'தத்துவமசி' என்று அறிவிக்க நாடோறும் அதனைப் பயின்று சிவோகம் எனப்பாவித்தல். இதனால் ஆன்மாக்களை அநாதியே பற்றியுள்ள மலமாயா கன்மங்கள் விட்டு நீங்கும்.*

**1566. தெளிவுரை :-** *மனம் இடைவிடாது பற்ற இறைவன் அம்மனத்துள் தானே வெளிப்படுவன் என்பதை உணர்த்துகிறார். ஓர் இன்பப் பிறப்பினை; அங்ஙனம் சிவஞானம் மேவரப்பெற்றுச்*

**1567.** சிவமான ஞானந் தெளியஒண் சித்தி
சிவமான ஞானந் தெளியஒண் முத்தி
சிவமான ஞானம் சிவபரத் தேயேகச்
சிவமான ஞானம் சிவானந்தம் நல்குமே. 15

---

*சிவச்சார்பே எய்தும் இன்பத்தைக் காட்டிலும் சிறந்தது ஒன்று இல்லையாதலின் அதற்கு ஏதுவாகிய இப்பிறப்பு ஒப்பற்றதும் இன்பப் பிறப்பும் ஆயிற்றென்க.*

***குறிப்புரை :-*** *பிறப்பும் அதில் நுகரப்படும் புவன போகங்களும் நம்முடைய பரிபாகப்பட்ட பிராரத்த கன்மத்தினுக்கு இயைய முற்பிறப்பின் இறுதியிலேயே இறைவனால் வகுக்கப்படுவன ஆதலின் 'முன் எய்த வைத்த முதல்வனை' என்றார். எய்தவைத்த எனும் பெயரெச்சத்தை எய்துதற்குக் காரணமாக வைத்த என ஏதுப்பொருள் தோன்ற உரைக்க.*

*முதல்வன், ஐ. இறை என எழுவாய்களை இயைத்து எண்ணுக. ஐ - தலைவன். நம் அனைவர்க்கும் மூத்தோனாதலின் முதல்வன் என்றும், இருந்து இயக்குதலின் ஐ என்றும், உயிரினிடமாக என்றும் தங்கியிருத்தலின் இறை என்றும் இறைவனுடைய முதன்மையும், தலைமையும், இறைமையும் தோன்றக் கூறினார். தன் எய்துங் காலத்து - ஆன்மா தன்னை அடையுங்காலத்து என எழுவாய் வருவித்துரைக்க. மலபரிபாக முற்றகாலத்து என்க.*

*தானே வெளிப்படும்; உணர்த்த உணரும் சித்தாகிய ஆன்மாக்கள் என்றும் சுதந்திரமற்றன ஆகலான் எளிவந்த கருணையால் இறைவனே வெளிப்படுவன் என்றதாம்.*

*இங்ஙனம் இறைவன் வெளிப்பட்ட உள்ளம் நிலை பேறு எய்துதற்குதவியது மனமாதலின் அதனை 'மன் எய்த வைத்த மனமதுதானே' என்பதால் உணர்த்தினார். இப்பொருளில் மன் - நிலைபேறாம். இங்ஙனமன்றி மன்னனாகிய சிவம் எய்தவைத்த மனம் அதுவே யாம் எனலும் ஆம். இப்பொருளில் மன், சிவத்தை உணர்த்தும். சிவன் வெளிப்பட்ட மனம் சிவமனம்.*

*'பின் எய்தவைத்தோர்' எனப் பாடங்கொண்டு பின்னே அடைவதற்குரிய இப்பிறப்பு எனப் பொருள் கூறுவாருமுளர்.*

**1567. *தெளிவுரை :-*** *சிவஞானத்தால் சித்தியும், முத்தியும், சிவானந்தமும் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

**1568.** அறிந்துணர்ந் தேன்இவ் வகலிடம் முற்றும்
செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்
மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை
பிறந்தொழிந் தேன்இப் பிறவியை நானே. **16**

தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாம் தலைவன்
இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார்
பிரிக்கின்ற இந்தப் பிணக்கறுத் தெல்லாம்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே

---

*சிவமேயான ஞானத்தால் பாசத்தின் நீங்கிப் பரத்தைத்தெளிய, ஒளி பொருந்திய சித்திகள் உளவாம்; அச்சிவஞானத்தால் சித்திகளைச் சதமென்று எண்ணாமல் தெளிய ஒள்ளிய முத்தியாம்; சிவஞானத்தால் சிவமாகிய பரத்தினிடத்தில் சேர அது சிவானந்தத்தை அருளும் என்றவாறு.*

*உடல் உயிர் தடை இவைகளைப்பற்றி அறிந்து தெளியச் சித்திகளும், அவை கானல்நீர் போன்றவை, பரஞானத்திற்குத் தடையானவை' என்றுணர முத்தியும், அம்முத்தியுலகில் சிவத்தைச் சாரச் சிவானந்தமும் சிவஞானத்தால் விளையும் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *சிவமான ஞானம் : உயிர் தன்னுடைய மறந்து அறிதலும், உணர்த்திய அளவினதாக உணர்தலும் ஆகிய தன்மைகள் கெட்டு மணியொளிபோல என்றும் விளக்கமுறும் சிவமேயான அறிவு. நான்கு அடிகளிலும் இப்பொருளே கொள்க.*

*சிவஞானத்தைத் துணையாகக்கொண்டு உலகு உயிர் தடைகளை உணர. அதனால் அட்டமா சித்திகளும் ஏவலர்போல இவன்வசமாகும். அவைகளும் பரமுத்திக்குத் தடையாய் இந்திரசாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தன்மையவாய். அகங்கார ஏதுவாதல் உடைமையின் அவற்றையும் உறுதி என்று உணராது உதற முத்தியும், முத்தியிச்சையால் இவை அனைத்தையும் விட்டுச் சிவபரம் பொருளினிடத்துச் சென்றுசேரச் சிவனாந்தமும் விளையும் என முறையே உணர்த்தப்பெற்றன.*

**1568. *தெளிவுரை :-*** *குருவின் அருளால் நான் இப்பெரிய பூமி முழுவதன் இயல்பையும் முன்னர்ப் பொதுவாகவும், பின்னர் உண்மை யாகவும் உணர்ந்தேன். அவ்வாறே அவரது அருளையடைந்து*

*சிவனது இயல்பையும் முன்னர்க் கேள்வியளவில் உணர்ந்து, பின்பு நூல்களை ஓதி உணர்ந்து, அவனது திருவருள் கிடைக்கப்பெற்றேன். அதனால், அறிவையிழந்துள்ள உலகவரது வாழ்க்கையில் பற்றுச் சிறிதும் இல்லாதவனானேன். அதனால், பிறவிகளை ஒழித்து இனிப் பிறவாத பெருவாழ்வைப் பெற்றேன்.*

***குறிப்புரை :-*** *திருமூலர்பெருமான் தன்மேலிட்டுப் பாசஞானம் அகலப் பதிஞானமும், சத்திநிபாதமும் தோன்ற அதனால் அடியரல்லாதாரை அகலலும் பிறவி நீக்கமும் பெறலாம் என்பதை விளக்குகின்றார்.*

*அறிதல் - தன்னறிவும் நூலறிவும் கருவியாகப் பொருள்களை அறிதல். உணர்தல் - அங்ஙனம் அறிந்தவைகள் அனுபவத்திற்கு வரப் பயிலுதல். இவ்வகலிடம் முற்றும் என்றது பிரகிருதிமாயாபுவனம் முதல் சுத்த மாயாபுவனம் வரையுள்ள உலகெங்களத்தனையும் அறிந்து இவை அனைத்தும் மாயேயம் என்றும் பிறவிக்கு ஏது என்றும் உணர்தல். இங்ஙனம் அகலிடமனைத்தையும் அறியுந்தன்மையது என்று உணரவே நிலைத்த சிவத்திடத்துச் செறிதலும் அதனையே உணர்தலும் அதனையே ஓதுதலும் ஆகிய அனுபவங்கள் முதிர்ந்தன; அதனால் திருவருள் கைகூடிற்று என்பார் இங்ஙனம் கூறினார்.*

*மதி மாண்டவர் - அறிவு கெட்டவர்கள். வாழ்க்கை நிலையாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை ஆதலின் அதனைக் கடையென்று ஒதுக்கியதோடன்றி, அதன் வாசனையுமின்றிக் கெடுத்தேன் என்பார் 'மறந்து ஒழிந்தேன்' என்றார். இங்ஙனம் சோபானத்தால் பெற்ற பயனுக்குப் பயனாவது பிறவியைப் பிறிந்தொழிந்தேன் என்பதே.*

*இம்மந்திரம் ஆசாரியனுடைய அருள்இருந்தால் பாசஞான பசுஞானத்தின் இயல்பும், பதிஞானத்தின் உயர்வும், அதனால் பிறவி எய்தலாகும் பெரும்பயனும் அறியலாம் என்பதனைத் திருமூலர் பெருமான் தன்மேல் வைத்துக் காட்டுதலின் இதுவும் சிவகுரு தரிசனத்திற்கு இயைபுடைத்தாயிற்று.*

## 2. திருவடிப்பேறு

*சிவன் குருவாகி வந்து அருள்செய்யும் செயலே "தீக்கை" எனப்படுகின்றது. அது, 'நோக்கு, பரிசம், மொழி, நினைவு, நூல், யோகம், ஔத்திரி' என ஏழாகச் சொல்லப்படும். இவை அனைத்தினும் மேலானது திருவடி சூட்டடல். இதனால், மாணாக்கன் அஞ்ஞானம் நீங்கி மெய்ஞ்ஞானத்தைப் பெறுதலேயன்றிச் சிவானந்தத்தையும் எய்துபவனாவன். சிவகுருநாதனுடைய இன்றியமையாமையை உணர்ந்து, அவர் உணர்த்திய நெறியில் நின்று தெளிந்த மாணவன் திருவருள் வடிவாகிய திருவடியைப் பெற்று உயர்ந்து உய்ந்ததை உணர்த்துவது திருவடிப்பேறு. திருவடி - திருவருள். ஆன்மா தன்முனைப்பு அடங்கிச் சிவகுருவின் திருவடியே பெறுதற்கு அரிய பேறாம் என எண்ணிச் சென்னியிற் சூடுதல் பரிபாகம் முற்றிய காலத்து நிகழ்வதாகலின் இது சிவகுருதரிசனத்தின் பின் வைக்கப்பெற்றது.*

**1569.** இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே
பசைந்தெழு நீசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்தே. 1

---

**1569.** *தெளிவுரை :- வினையின்வழி மனம் சென்றவாறே செல்லுதலால், உலகவர்மேற் செல்கின்ற அன்பின்வழியே மனம் நெகிழ்ந்து செல்லுகின்ற கீழோரைப் பாசத்தினின்றும் விடுபடச் செய்தற்கு ஞானகுரு வந்து அவர்களது தலையின்மேல் தனது கையை வைத்தவுடன் அவர்களது உள்ளமாகிய பொய்கையில் அவனது திருவடிகளாகிய தாமரை மலர்கள் மலர்ந்து பொருந்தி மலர்வனவாம்.*

*குறிப்புரை :- குருவந்து என்பதற்குக் குருவந்து நோக்க எனப் பொருள் கொள்க. நோக்குதலாவது சட்சு தீட்சை.*

*சென்னி கைவைக்க; கை சென்னிமீது வைக்க. ஞானாசாரியன் சிவோகம் பாவனையிலிருந்து தனது கையைச் சிவன்கையாக (சிவஹஸ்தமாக) எண்ணிச் சீடனுடைய உச்சந்தலையில் வைத்து 'இவனுடைய மலகன்மங்கள் ஒழிவனவாக' என்று எண்ண என்பதாம். இது ஹஸ்த மஸ்தக சம்யோகமாகிற ஸ்பரிசதீட்சை.*

*இங்ஙனம் குருநாதன் தீண்டியவுடன் தீத்தீண்டிய பொருள் தூய்மையுறுதலைப் போலச் சீடன் உயிர் தூய்மையுறும்; சீடன்,*

**1570.** தாள்தந்த போதே தலைதந்த எம்மிறை
வாள்தந்த ஞான வலியையும் தந்திட்டு
வீடந்த மின்றியே ஆள்கென விட்டருள்
பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. **2**

---

*குருவன்றித்துணையில்லை என்று உறுதி பூணுவன்; அதனால் கருணை வடிவான அவன் திருவடி, குளத்துத் தாமரை பூத்ததுபோலச் சீடன் உள்ளத்துத் தோன்றும்.*

**1570.** *தெளிவுரை :- தனது சத்தியை உலகுக்கு உதவ வைத்த பொழுதே, அவ்வுதவியைப்பெறும் உயிரை அந்நிலையில் வைத்த எங்கள் சிவபிரான், பின்பு இப்பூமியில் குருவாகி வந்து பலருக்கு அருள் புரிந்தது, அஞ்ஞானமாகிய மரத்தை வெட்டி வீழ்த்தும் வாள் போல்வதாகிய ஞானத்தின் உறுதிப்பாட்டைத் தந்து, 'வீட்டுலகத்தை எல்லையில் காலம் ஆள்க' என அளித்தற் பொருட்டு, மும்மலக் கட்டினின்றும் வெளிப்படுத்தி அருள் தோற்றமாகிய தனது திருவடிகளை அவரது இனிய தலையிற் சூட்டியேயாம்.*

*குறிப்புரை :- சத்தியை, 'தாள்' எனவும், உயிரை, 'தலை' எனவும் உருவகித்துக் கூறுதல் மரபு. 'சத்தி, திரோதான சத்தி' என்பதும், 'உயிர்கள், சகல நிலையில் உள்ள உயிர்கள்' என்பதும், 'தந்த' என்பதனால் பெறப்பட்டன. "வாள் தந்த" என்பதில், "தந்த" உவம உருபு. "தந்திட்டு" என்னும் செய்தென எச்சம், எதிர்காலத்ததாய் நின்ற "என" என்னும் செயவெனச்சத்தோடு முடிந்து, எதிர்காலத்தில் இறந்த காலமாய் நின்றது. என்னை?*

*செய்தெ னெச்சத் திறந்த காலம்*
*எய்திட னுடைத்தே வாராக் காலம்.*

*- தொல், சொல், வினையியல், 42*

*என்பது கட்டளையாகலின். விடுதல் - கட்டறுத்து இனிதியங்கச் செய்தல். பாடு - தோற்றம். அஃது அதற்கு இடமாகிய திருவடியைக் குறித்தது. "தந்தது" எனத் தொழிற்பெயர் எழுவாயாய் நின்றமையின், "வைத்து" என்னும் வினையெச்சம் பயனிலையாதல் பொருந்திற்று. 'எம் இறை பார் வந்து தந்தது, விட்டு, வைத்து' என வினை முடிபு கொள்க. அவ்விடத்து, 'தந்திட்டு ஆள்கெனற்கு' என்னும் தொடர் பயனிலையைச் சிறப்பித்து நின்றது.*

*இதனால், சிவகுருவினது திருவடியே பிறவிக்கு ஏதுவாகிய பாசத்தை அறுத்து, வீட்டிற்கு ஏதுவாகிய ஞானத்தைத் தருதல் கூறப்பட்டது.*

**1571.** தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு
ஆன சொரூபங்கள் நான்கும் அகற்றின்
ஏனைய முத்திரை ஈந்தாண்ட நன்னந்தி
தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே. **3**

---

**1571. தெளிவுரை :-** *ஆன்மா சிவனாகி, அச்சிவனது உண்மை இயல்பில் தனது உண்மை இயல்பு பொருந்துதலால் இன்புற்று, முன்னே செயற்கையாய் வந்து பற்றிய 'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம்' என்னும் நான்கின் இயல்புகளையும் நீக்கிநின்ற சின்முத்திரை நிலையைத் தந்து ஆட்கொண்ட சிவன், அங்ஙனம் ஆட்கொள்வதற்கு முன் தான் குருவாகிவந்து தனது திருவடியைச் சூட்டி, அங்ஙனம் சூட்டப்பட்டவனது உள்ளத்திலே நிலைபெறச் செய்தது உண்மை.*

**குறிப்புரை :-** *சொரூபங்கள் நான்கும் அகற்றின் ஏனைய முத்திரை. ஞானமேயான முத்திரை எனப் பிரித்துக் கூட்டுக. சுட்டுவிரலைப் பெருவிரல் அடியில் பொருந்த மடக்கி, ஏனைய மூன்று விரல்களையும் தனியே பிரித்து நிறுத்துதலாகிய ஞானமுத்திரை. இந்த ஞானமுத்திரையில் சிறுவிரல் முதல் நடுவிரல் ஈறான மூன்றும் முறையே மாயாமலம், கன்மமலம், ஆணவமலம் இவற்றைக் குறிப்பனவாம். சுட்டுவிரல், இந்த மூன்றோடும் கூடியிருந்து, பின்பு பிரிந்து கட்டை விரலாகிய சிவத்தோடு தன்முனைப்பற்றுத் தானற்று அடங்குதலாகிய ஆன்மசொரூபத்தைக் குறிப்பதாம்.*

*கட்டைவிரல் சிவமாகவே, சொரூபங்கள் நான்கும் அகற்றின முத்திரை என்றது, மும்மல சொரூபங்களையும் ஆன்மசொரூபத்தையும் அகற்றின தாடலைபோல், சிவனடிக்கீழ் அடங்கியிருத்தலாகிய சிவமுத்திரையாம். இதனை ஈந்து, இதன் தத்துவத்தை உணர்ந்துய்யும் அறிவையும் உதவினன் என்பார் "ஈந்து ஆண்டனன்" என்றார்.*

*இதனால், குருவின் திருவடியைப் பெறுதல் ஞானத்திற்கும், வீடுபேற்றிற்கும் வழியாதல் கூறப்பட்டது.*

**1572. தெளிவுரை :-** *'இஃது இவ்வாறிருந்தது' எனச் சொல்லும் சொல்லும், 'இவ்வாறிருக்கின்றது' என உணரும் உணர்வும் அற்றமையால் உயிர் தன் பசுத்துவம் முற்றும் நீங்கி, அலையில்லாத*

**1572.** உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. **4**

---

*நிலைநீர் போல அசைவற நிற்கும் சிவமாம் தன்மையை எம் குருநாதன் எமக்கு முற்றத்தந்து, நாத காரியமாகிய நால்வகை வாக்குக்களையும் கடந்த இயற்கை நிலையில் எம்மை இருக்கச் செய்தான்; அதனால் யாம் பேச்சற்று நிற்கின்றோம்.*

***குறிப்புரை :-*** *உரை - மனக்கருத்தை வெளிப்படுப்பனவாகிய சொற்கூட்டம். உணர்வு - அந்தச் சொற்கூட்டத்தைத் தோற்றுவித்தற்கு முதற்காரணமாகிய அறிவு. இவை இரண்டும் சீவபோதத்தின் விளைவும் செயலுமாகலின் உயிருக்குப் பாரமாயின. இவ்வுணர்வும் உரையும் ஆணவமலத்தின் காரியமாகிய அகங்காரத்தால் நிகழ்வன ஆதலால், உயிர் பரம் என்றது இவை இரண்டினையும் ஏற்றி வைக்கின்ற அகங்கார காரணமாகிய ஆணவமலத்தை என்க.*

*இம்மூன்றும் அற்றபோது உயிர் அலையற்ற கடல் போல அமைதியைப் பெறுகிறது; சிவமாகிறது. அங்ஙனம் சிவமானபோது நுகர்வானும் நுகர்ச்சியுமின்றி, நுகரப்படுபொருளே ஆதலின் அனுபவம் இன்றாகிறது. ஆதலால், ஆசாரியன் ஆன்மா அந்நிலையை எய்தாதவாறு தீர்த்து, தலைவனோடு தலைவியைச் சேர்ப்பிக்கும் தோழிபோல, துரியாதீத சிவத்தோடு ஆன்மாவைக் கூட்டி ஆனந்தானுபவி ஆக்கினான் என்பது 'சிவமாதல் தீர்த்து..... சத்தாதி நான்கும் கடந்த கரையற்ற சொரூபத்தினன்' என்ற பகுதியால் உணர்த்தப்பெற்றது. அதன் விளைவு, நுகர்ச்சியை இன்னவாறு இருந்ததெனச் சொல்லால் வரையறுத்துச் சொல்ல ஒண்ணாமை யேயாம்.*

*சத்தாதி நான்கு; சத்தம் - சூக்குமை, மத்திமை. பைசந்தி, வைகரியாகிய நால்வகை வாக்குகள். ஆதி - அவைகட்கு முதலான நாதம். அதனைக் கடந்த எல்லையற்ற சொரூபம் பரசிவம். அது துரியாதீத சிவம் எனவும் கூறப்படும். அதனோடு கூட்டப் பேரின்ப நுகர்ச்சி விளையும் என்பதாம். இருவர் கூட்டத்துப் பிறந்த சிற்றின்பத்தை உணர்ந்தாரும் உரைக்க முடியாதவாறு போல. இதனை நுகர்ந்தாருக்கும் சொல்லொணாநிலை பிறந்தது என்றார்.*

**1573.** குரவன் உயிர்முச் சொரூபமும் கைக்கொண்டு
அரிய பொருள்முத் திரையாகக் கொண்டு
பெரிய பிரானடி பேர்நந்தி பேச்சற்று
உருகிட என்னைஅங் குய்யக்கொண் டானே. 5

---

*இம்மந்திரத்திற்குத் திருவடிப்பேறு கிட்டியதும் பிறப்புக்கு ஏதுவாகிய உரையும் உணர்வும் அற்றன; உயிர், சிவம் என்ற வேறுபாடு அற்றன. கடல் தெளியாத நிலையில் திரையும் கடலுமென வழங்கிய நாம் தெளிந்த நிலையில் இரண்டும் ஒன்றையே குறிக்கும் என்று எண்ணுதல் போலச் சீவனும் சிவனும் வேறு எனப் பேசும் பேச்சு அற்று, பூவும் பூவின் மணமும் போல உயிரும் சிவமும் இயைந்தன. அதனால் புணர்ப்பு என்றும் பெயர்பெற்றது. நால்வகை ஓசைகளும் அதன் ஆதியாகிய நாதமும் கடந்த சிவத்தினிடம் உயிரை நுகர்வித்தான் என்று உரைப்பாருமுளர். இதற்கு ஏற்ற சொற்கிடக்கை உளதேல் இதுவும் பொருளெனக் கொள்க.*

*இது திருவடிப்பேற்றால் விளைந்த பயன் உணர்த்துதலின் இவ்வதிகாரத்ததாயிற்று.*

*"உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே"*
*- தி.8 கோவையார், 9*

*எனவும்,*

*"உணர்ந்தார்க் குணர்வரியோன்" - தி.8 கோவையார், 9*

*எனவும்,*

*"இங்ஙு னிருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்*
*அங்ஙு னிருந்ததென் றுந்தீ பற;*
*அறியும் அறிவதன் றுந்தீ பற" - திருவுந்தியார், 4*

*எனவும், மற்றும் இவ்வாறும் போந்தவற்றால் அறிக.*

*சொரூபம் - இயற்கைநிலை, இந்நிலை ஆணவ மலமாகிய செயற்கையால் மாறுவதாயிற்று என்க.*

*இதனால், திருவடிப்பேறு பரமுத்தியாகிய முடிந்த பயனைத் தருதல் கூறப்பட்டது.*

**1573.** *தெளிவுரை :- திருவடிசூட்டி உய்யக்கொண்டமை உணர்த்துதல் நுதலிற்று. சிவகுருநாதன் உயிரினுடைய மூன்று வடிவங்களையும் தாம் கைப்பற்றி, உயிரைச் சங்கார முத்திரையினால் கையின்கண் அடக்கித் தன் இதயத்துள்ள பெரிய பெருமானாகிய*

**1574.** பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதிக் கடன்மூன்றும் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே. **6**

---

*நந்தியினது திருவடியின் கண் பேச்சற்றுக் கரைந்துபோக என்னை உய்யக் கொண்டான் என்றவாறு.*

*ஆசாரியன் உயிரின் மூன்று சரீரத்தையும் அகற்றி அரிய பொருளாகிய உயிரைச் சங்காரமுத்திரையால் கைக்கொண்டு, சிவனடியில்சேர்த்து, பேச்சற்று உருக என்னை ஆட்கொண்டான் என்பது கருத்து.*

*குறிப்புரை :- குரவன் - ஞானாசிரியன். உயிரின் முச்சொரூபங்களாவன தூல, சூக்கும, காரண சரீரங்கள். ஆசாரியன் அவற்றைக் கைக்கொள்ள லாவது வினைப்போகம் காரணமாக உயிருக்கு உடல்களோடுள்ள உறவுகளை நீக்குதல். மூன்று உடல்களும் வினையின் வந்து வினைக்கு விளைவாவன ஆதலின் ஆசாரியன் சிவநோக்கால் அவை அற்று ஒழிக என நோக்க அவை அகலும்.*

*மூன்று சொரூபமும் அற்ற உயிர் மல, மாயை கன்மங்களினின்று நீங்கியமையால் அதனை ‘அரிய பொருள்’ என்றார்.*

*முத்திரையாகக் கொண்டு - சங்கார முத்திரையால் வாங்கி. என்னை பெரிய பிரான் நந்தி அடி உருகிட - அடியேனைப் பெரிய பெருமானாகிய சிவபெருமானது திருவடிக்கண் உருகச் சேர்த்து என்க. சீடனுடைய உயிரைச் சங்காரமுத்திரையால் வணங்கித் தன் இதயத் தாமரையில் விளங்கும் சிவத்தோடு சேர்த்து, சிவமாக்கி அதனை மீண்டும் சீடன் உடலிற்புகுவித்து, சிவமணம் நீங்காது கமழச்செய்து உய்யக்கொள்ளுதல் நிர்வாண தீட்சைமுறை. இதனை சிவ ஆத்ம சமயோசனம் என்னும் சிவாகமங்கள்.*

**1574. தெளிவுரை :-** *ஆட்கொண்ட ஆசாரியன் தற்போதம் அழித்து, சிவபோதம் மிகுவித்துச் சிவமாக ஆக்கினமை உணர்த்துதல் நுதலிற்று. உரை மனம் கடந்துநின்ற பேரின்பத்தால் விளைந்த பேரானந்தத்திலே அடியேனை மாயச் செய்து சிவமாக்கி, தற்போதங் கெடுத்து, வெப்பமற்ற ஒளிப்பொருளாகிய இறைவன் முக்கரணங் களாலும் செய்யப்படும் மூன்று கடன்களை ஏற்று, எனக்குப் புகழும்*

**1575.** இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும்மெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பஒண் ணாதே. 7

---

*மாளச்செய்து, தன் திருவடியைத் தந்து என் உள்ளத்து என்றும் நிலவும் என்றவாறு.*

*சிவானந்தத்தில் அடியேனைத் திளைக்கச் செய்து சிவமேயாக்கி, சீவத்துவம் போக்கி, திரிகரணங்களையும் தமதாகக் கொண்டு திருவடியைத் தந்து என் உயிர்க்கு உயிராய் நிலைபெறுவன சிவன் என்பது கருத்து.*

*நுகர்ச்சிக்காலத்து இவ்வாறு இருந்தது என்று சொல்லுதற்கு அரியதாகலின் அதனைப் 'பேச்சற்ற இன்பம்' என்றார். அதனால் விளைகின்ற ஆனந்தம் பேரானந்தம் எனப்பட்டது.*

*என்னை மாச்சு அற்ற, என்னைச் சிவமாக்கி என, 'என்னை' என்பதை ஈரிடத்தும் கூட்டுக. மாய்த்து எனற்பாலது எதுகை நோக்கி மாச்சு என்றாயிற்று. மாய்த்தலாவது தற்போதம் இழத்தலையும் தான் அறுதலையும். மீண்டும் மாள்வித்து என்றது தன்னை இழப்பித்தமை கூறியது. ஆணவமல வலிகுன்றிய உயிர் அஞ்ஞான அகங்கராதிகளை இழத்தலின் தன் முனைப்பு அடங்கிச் சிவமேயாம் செந்நிலை பெறுகின்றதாதலின் இங்ஙனம் கூறினார்.*

*காச்சு - காய்ச்சல்; அதாவது வெப்பம். ஒளியுள்ள இடத்து அதன் குணமாகிய வெப்பமும் உடனிருக்குமாயினும் திருவருட்சோதிக்கு அஃது இல்லை என்பார் 'காச்சற்ற சோதி' என்றார்.*

*கடன் மூன்று - மனம் வாக்குக் காயமாகிய இம்முக்கரணங்களாலும் இயற்றப்படும் முறைமையாகிற நினைத்தலும் சொல்லுதலும் செய்தலும் ஆம். அவற்றைக் கைக்கொள்ளுதலாவது பசு பாச வினைகளில் அவற்றை இயக்காது சிவகரணமாகச் செய்தல்.*

**1575.** தெளிவுரை :- *சிவன் குருவாகி வந்து, தனது திருவடிகளை எனது இதயத்திலும், கண்ணிலும், மனத்திலும் நீங்காது பொருந்தியிருக்கச் செய்து, அதனானே ஞானத்தை உணர்த்திய வகையும், அந்த ஞானத்தினால் மெய்ப்பொருளைத் தலைப்படுவித்த வகையையும், பின் அம்மெய்ப்பொருளை நீங்காதிருத்தற்குரிய*

**1576.** திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனைஎங் கோவைக்
கருவடி யாற்றிடக் கண்டுகொண் டேனே. 8

---

முறைகளை உணர்த்திய வகையும் யான் சொல்லும் தரத்தன அல்ல.

குறிப்புரை :- "பதி வித்த பாத நந்தி" என உடம்போடு புணர்த்தமை பற்றி இவ்வாறு உரைக்கப்பட்டது முதலடியோடு.

"மனத்தான் கண்ணி னகத்தான் மறு மாற்றத்திடையானே"
- தி.8 உயிருண்ணி. 5

"சிந்தையி னுள்ளுமென் சென்னியி னும்சேர
வந்தவர் வாழ்களன் றுந்தீ பற" - தி.8 திருவுந்தியார், 44

என்பன முதலியவற்றை வைத்துக் காண்க. "கதி என்பது ஞானத்தை உணர்தல் வடமொழி மதம்" (சிவஞான சித்தி. சூ.2.51 உரை) என்பர் சிவஞான யோகிகள். 'ஒண்ணாது' என்பது பன்மை யொருமை மயக்கம். 'ஒண்ணாவே' எனப் பாடம் ஓதினுமாம். நினைக்கப்படுவதும், காணப்படுவதும், சூடப்படுவதும் அவனது திருவடியே. திருவடி அன்றி வேறு எந்தப் பொருளும் புலனாகாமல் செய்தான் குருநாதன் என்பார் "பதிவித்த பாதப் பராபரன்" என்றார்.

இதனால், திருவடி சூட்டி அருள் செய்யும் முறைமையது பெருமை அளவிறந்ததாதல் கூறப்பட்டது.

**1576. தெளிவுரை :-** எனது சென்னிமேல் தனது திருவடிகளைச் சூட்டி, அருளே எனக்கு வடிவாம்படிப் பார்த்து, அதனால், பின்பு பரம்பொருளே யான் பெறும்படி தந்தவரும், குருவடிவில் பலராலும் காணப்பட்ட ஞானத்தலைவரும், எங்கள் தலைவரும் ஆகிய நந்தி பெருமானை நான் எனது பிறவியின் வேர் அற்றொழியுமாறு அடைந்தேன்.

**குறிப்புரை :-** 'அருள் ஆக நோக்கி' என ஆக்கம் வருவிக்க. "பெரு வடிவு" என்பதில் வடிவு - பொருள்;

"அந்தப் - பெருவடிவை யாரறிவார் பேசு"
- திருக்களிற்றுப்படி, 5

1577. திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. 9

---

என்றதும் காண்க. "பேர் நந்தி" என்னும் இரு பெயரொட்டு அதனை உடையானைக் குறித்தது. "கண்ட" என்றது "காணப்பட்ட" என்றவாறு. "எம்" என்றது, "நந்திகள் நால்வர்" முதலியோரை உளப்படுத்து. "அற்றிட" என்பது காரியப் பொருளில் வந்தது. கண்டுகொள்ளுதல், உணர்ந்து கொள்ளல் அஃது அடைக்கலமாக அடைதலாகிய தன் காரியம் தோன்ற நின்றது. திருவடி சூட்டிய சிவத்தைக் குருவாகக் கண்டேன்; என் பிறவிமூலம் அற்றது என்பது கருத்து.

என் சிரத்துத் திருவடிவைத்து என்பது திருவடி தீட்சையையும், அருள்நோக்கி என்பது நயனதீட்சையையும், பெருவடிவைத் தந்த என்பது பஞ்சாக்கர சித்தியையும் உணர்த்தின. கருவழி - பிறவிக்கு வாயிலான வினைகள். அவை வற்றிட என்க. இது திருவடிப்பேற்றால் பிறவியற்றமை கூறியது.

1577. **தெளிவுரை :-** திருவடிஞானம் சிவமாக்கி, சிவலோகம் சேர்த்து, மலமகற்றி, சித்தி முத்திகளை அருளும் என்பதாம்.

திருவடி ஞானமாவது திருவருள் வயப்பட்டுத் தன் முனைப்பின்றி இருத்தலாம். அதாவது, திருவருளின் வியாபகத்தில் தான் வியாப்பியமாய்த் தனக்கு ஒரு செயலும் இன்றி இறைவன் செயலே செயலாக அருட் கண்ணால் கண்டிருத்தல்.

சிவமாக்குவிக்கும் - சீவச்செயலும் சீவபோதமும் அகற்றிச் சிவபோதமும் சிவச்செயலுமேயாகச் செய்யும் என்பதாம். சிவலோகம் - வீட்டுலகம். சிறை மலம் - ஆன்ம வியாபகத்தைச் சிறைப்படுத்தி விளங்க விடாமல் செய்கின்ற பாசம். இது நீங்கத் திருவடிப்பேறு கிட்டும் என்பதனை,

"சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து - சிறைவிட்(டு)
அலைகடலில் சென்றடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவில் அரன் பாதத்தை உற்று."

என்னும் சிவஞானபோத வெண்பாவான் உணர்க. இது திருவடிஞானத்தால் பெறும் பயனை உணர்த்தியதாகலின் அதிகார இயைபு விளங்குதல் காண்க.

**1578.** மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்
தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. **10**

---

*குறிப்புரை :-* "திருவடி ஞானம்" நான்கையும் இரட்டுற மொழிந்து, 'திருவடியால் விளைந்த ஞானம், திருவடியால் விளங்கிய ஞானம்' என உரைத்துக் கொள்க. முதற் பொருளில் திருவடியும், இரண்டாவது பொருளில் திருவடி திருவருளும் ஆம். மூன்றாம் அடியில், 'மீட்கும்' என்பது பாடமாயின், 'மலமாகிய சிறையினின்றும் மீட்கும்' என உரைக்க. இப்பொருட்கு, 'மலச் சிறை' என்பது பின் முன்னாய் நின்றது என்க. திண் சித்தி - அழியாப் பேறு. முத்தி தருவதனை "முத்தி" எனப் பாற்பகுத்து ஓதினார்.

இதனால், திருவடி ஞானத்தது சிறப்புக் கூறப்பட்டது.

**1578. தெளிவுரை :-** எம் குரவர் எம் தலைமேல் தம் திருவடியைச் சூட்டிய அந்த முறைமையைச் செய்யாவிடில் அவர் அருள்செய்த பின்பும் வினைகள் தோன்றி, முன்பு மயங்கியிருந்த உள்ளத்தை மீளவும் அப்பழக்கம் பற்றி மயக்கம் உறச்செய்யும். அதனால், பிறை முடித்த, பேரொளி வடிவினனாகிய சிவபெருமான், குருவாகி வந்து தனது திருவடியைச் சென்னி மேல் வைத்ததுபோலச் சிந்தையிலும் நீங்காது தங்குவித்தான். உயிர்கள் மீண்டும் மாயையுட்பட்டு மயங்காதவாறு திருவடியைத் தந்ததோடமையாது என்றும் நீங்காத வண்ணமும் செய்தான் குருநாதன் என்பது கருத்து.

மேல்வைத்தவாறு என்றது, முன் மந்திரங்களில் கூறியவண்ணம் இதயத்தும் நாட்டத்தும் சிரத்தும் திருவடிசூட்டியதும், கதி உண்மை விதிகளை உணர்த்தியதும், அருட்கண்ணோக்கம் செய்ததும் முதலான நிகழ்ச்சிகள். அங்ஙனம் செய்யாவிடின், ஒளி நீங்க இருள்புகுந்தாற் போல என்னை வினைவந்து மூடிவிடும் ஆதலின் 'மேல்வினை மால்வைத்த சிந்தையை மாயமதாக்கிடும்' என்றார். மேல் வினை - ஆகாமிய வினை. மால் வைத்த சிந்தை - மலத்தால் மயங்கிய மனம்.

பால்: உவம ஆகுபெயர்: பால்போலும் பிறையை உணர்த்திற்று. தாள் வைத்தவாறு தரிப்பித்தவாறே - தாள் சூட்டியபடியே தரிக்கவும் செய்தான். அதனால் வினைகள் பற்றவில்லை. பிறவியற்றது என்றதாம்.

**1579.** **கழலார் கமலத் திருவடி யென்னும்**
**நிழல்சேரப் பெற்றேன் நெடுமால் அறியா**
**அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானும்**
**குழல்சேரும் என்னுயிர்க் கூடும் குலைத்ததே.** **11**

---

***குறிப்புரை :-*** *'சஞ்சிதம் தீக்கையாலும், பிராரத்தம் நுகர்ச்சியாலும் கெட, ஆகாமியம் நிகழாது இருக்கவும் வேண்டுதலின், இவ்வாறு செய்தான்' என அருளிச் செய்தவாறு.*

*ஏன்ற வினைஉடலோ டேகும்; இடை ஏறுவினை*
*தோன்றில் அருளே சுடும்.* *- திருவருட்பயன், 98*

*என்றது காண்க. இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், திருவடி சூட்டல் தரிப்பித்தல்களின் இன்றியமையாமை கூறப்பட்டது.*

**1579. தெளிவுரை :-** *வெற்றியை யுடையனவும், தாமரை மலர் போல்வனவும் ஆகிய குருவின் திருவடி என்னும் நிழலை யான் அடையப் பெற்றேன். அதனால், நெடியோனாகிய மாயோனாலும் அறியப்படாதவனும், ஓங்கி வளர்கின்ற வேள்வித் தீயில் விளங்குபவனுமாகிய சிவபிரான், எனது உயிர்க் கூடாகிய உடம்பின் தன்மையையும் மாற்றி, எனது இதயத் தாமரையில் எழுந்தருளி விளங்குகின்றான்.*

***குறிப்புரை :-*** *திருவடி நீழலைச் சேரப்பெற்றமையினாலே பரசிவம் அங்கியுட்சூடுபோல என்னுள் சேர்ந்தது; அதனால் பொள்ளல்கூடு போயிற்று என்பது கருத்து.*

*கழல் - ஆடவர்கள் அணியும், வீரத்திற்கு உரிய அடையாள அணி. திருவடி செந்தாமரை மலர்போல நிறமும் மணமும் அழகும் உடையதாய் இன்பத்தேன் ஊறுவது ஆதலின் 'கமலத்திருவடி' என உவமிக்கப்பெற்றது. வேறு எவராலும் எதனாலும் நீக்க முடியாத ஆணவமலத்தின் காரியமாகிய அறியாமையைவென்று உயிருக்கு ஒளிதரும் வள்ளன்மையால் 'கழலார் திருவடி' என்றார். சுடுவெயிலில் கடுகி வழிநடந்தார்க்கு இன்பம் செய்யும் நிழல் போல, பிறவிப் பாதையில் வினைவெயில் தாக்க, அறியாமை மோகம் மாற்சரியம் முதலான பரல் குத்த, அவதிப்படுகின்ற உயிர்களுக்கு ஆறுதலளிக்கும்*

**1580.** முடிமன்ன ராய்மூ வுலகம தாள்வர்
அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற மூவர்கள் ஈசன்
குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. 12

---

*இடமாதலின், திருவடியை நிழலாக உருவகித்தார். இங்ஙனம் விரித்துக் கொள்க.*

*சேரப்பெற்றேன் என்றது திருவடி எய்தப்பெற்றேன், 'யான் பெற்றது யார் பெறுகிற்பார்' என்பது போலச் சேர்தற்கு அருமையும் பெரிது முயன்று சேர்ந்ததால் விளைந்த செம்மாப்பும் தோன்ற நின்றன.*

*எல்லாவற்றிற்கும் முதற்காரணமாகிய மாயையைக் காரியப்படுத்தும் முதற்கர்த்தா ஆகலின் இறைவனை 'ஆதிப்பிரான்' என்றார்.*

*இருந்தநிலையிலேயே எல்லாவற்றையும் எட்டிப் பார்த்து அறியும் பெருமையன் என்பார் திருமாலை 'நெடுமால்' என்றார். அங்ஙனம் அறியும் திருமாலும் அங்கியாய்த் தோன்றிய சிவனை அறியாது மயங்கினான் என்பார் 'நெடுமால் அறியா அங்கி' என்றார்.*

*அங்கி - தீ; அழல் - வெப்பம். தீயுள் வெப்பம் போல இறைவன் குண குணி சம்பந்தமாய் வெளிப்பட்டு உயிர்க்குஉயிராக 'இருத்தலை உணர்த்த' ஆதிப்பிரானும் நெடுமால் அறியா அங்கியுள் அழல்சேரும், என்றார். அழல்போற்சேரும் எனப்பொருள் விரிக்க.*

**1580. *தெளிவுரை :-* *ஆராயுமிடத்து, சிவனது திருவடியில் அறிவால் நிலைத்திருப்பவர் இந்நிலவுலகத்தில் மூவுலகையும் ஆளும் மன்னராய் இருந்து யாவர்க்கும் பெருந்தலைவராய் உள்ள மும்மூர்த்திகள் தாமும் சிவனது ஏவலைச் செய்யும் சிற்றரசராய் நின்றே குற்றம் அற்று விளங்குகின்றனர். அதனால், சிவனடியைச் சேர்ந்தவர் அடையும் இன்பத்திற்கு அளவில்லை.***

***குறிப்புரை :-* இது முடிமன்னராய் மூவுலகம் ஆள்வர் எய்தும் இன்பத்தைக் காட்டிலும் அடிமன்னராயிருந்து எய்தும் இன்பத்திற்கு அளவில்லை என்பது உணர்த்தியவாறு.**

***நிலவுலகத்து முடிசூடும் மன்னர்களாகின் மூவுலகங்கள்***

1581. வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே எரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேன் அவ்வேதத்தின் அந்தமே. 13

1582. அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த இன்பப் பழவடி வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. 14

---

*மட்டும் ஆள்வர். இறைவனுடைய திருவடியில் நிலைபெற்ற உள்ளத்தாராகிய அடியார்கள் எய்தும் இன்பத்திற்கு ஓர் அளவே இல்லையாம். ஆராயின், முடிமன்னராய் நின்ற தேவர்களும் ஈசனுக்குக்குடிகள் ஆவர். அன்றியும், ஈசனுக்கு ஏவல் புரிபவர்களாய் குற்றமற்றுத் தத்தம் பதவிகளில் நிலைபெற்றோராவர் என்பதாம்.*

*மூவுலகம் என்பது இத்துணையது என்று வரையறுத்து உணரப்படுவதாகிய பிரபஞ்சம். தனி முடி கவித்து ஆளும் அரசு இன்பம் கருதுவதாயினும் கால வரையறையும் வினைப்பெருக்கமும் உடையன ஆகலின் அவற்றால் சிறிதும் இன்பம் இல்லை. காளிதாசனும் ஆளும் இன்பம் என்பது குடையைத் தானே தூக்கிக் கொண்டு, அதன் நிழலில் செல்வது போலும் எனல் காண்க.*

*அடியார்கள் வீடும் வேண்டா விறலினர் ஆகலின் அவர்களை "மன்னர்" என்றார். அடிமன்னர் என்பது திருவடியை மனத்துள் நிலைபெறச் செய்தவர் என்ற காரணம்பற்றி வந்தபெயர். மன்றுளார் அடியார்க்கு என்றும் இன்பம் பெருகுமாதலின் அவர்கள் அடையும் இன்பத்திற்கு அளவில்லை எனப்பட்டது.*

**1581. *தெளிவுரை :-* *என்னை, மயக்குவனவாயும் கொடியனவாயும் உள்ள ஐம்பொறிகளின் வழிப்போகாமல், என் மனத்துள்ளே சிவனது திருவடிகளை வைத்தேன். அதனால், இணைத்து உழலுதற்கு ஏதுவாகிய இரு வினைகள் என்னும் புதரை அழித்து வேதமாகிய மரத்தின் உச்சிக் கொம்பில் உள்ள மெய்ப் பொருளாகிய தேனை அறிவினால் அடைந்து இன்புறுகின்றேன்.***

**1583.** மந்திர மாவதும் மாமருந் தாவதும்
தந்திர மாவதும் தானங்க ளாவதும்
சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்றன் இணையடி தானே. 15

---

*குறிப்புரை :-* இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. "புலன்" என்றது பொறிகளை "எய்த்தேன்" என்பது முற்றெச்சம். "மாற்றிட்டு" என்பதில் இடு, துணைவினை. "மெய்த்தேன்" என்பது ஏகதேச உருவகம், ஈற்றடி இறுதியில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது.

**1582.** *தெளிவுரை :-* முற்காலத்தில் ஞானிகள் பலரும் இறைவன் திருவடியை அடையவேண்டியே குருவின் திருவடியைத் தம் தலையில் வைத்து அங்ஙனம் நலம் பெற்றனர். அதனால், உலக இன்பத்தையே தருவதாகிய இந்தப் பழைய பௌதிக உடம்பை இகழ்ந்து ஒதுக்கும் அந்த உயர்ந்தோர் கூட்டத்தையடைதற்குரிய நெறியைப் பற்றினவர்களது கொள்கையும் இதுவே.

*குறிப்புரை :-* முனிவர்கள் திருவடியைச் சாரவேண்டும் என்ற பற்றுள்ளத்துடன் பாதமிரண்டையும் தலையில் சூடினர்; இதுதான் அடியார் நெறியை அணைந்து நிற்பவர் கொள்கை என்பது கருத்து.

வெள்ளம் - மிகுதி. குடிசார் நெறியாவது அடியார்க்கு அடியனாகும் சன்மார்க்கநெறி. அதனைக் கூடி நிற்பவர் கொள்கை அண்ணல்பாதம் இரண்டும் முடி சாரவைத்தல் ஆகும் என முற்பகுதியின் கருத்தைத் தந்து நயங்கண்டு மகிழ்க.

அடியார் கொள்கை, திருவடிகள் இரண்டையும் சிரத்தின்மீது அணிதலாம் என்றலின் இம்மந்திரம் திருவடிப்பேறதாயிற்று.

**1583.** *தெளிவுரை :-* மந்திரம் முதலிய அனைத்துமாய் விளங்குவது சிவன் திருவடியே என்பது உணர்த்துதல் நுதலிற்று. மந்திரம், மருந்து, தந்திரம், தானம், சுந்தரம், தூய்நெறி இவையனைத்துமாவன, எம் தந்தையாகிய சிவபெருமானுடைய திருவடித் துணைகளே என்றவாறு.

*மந்திரம் முதலிய அனைத்துமாவன திருவடியிணைகளே என்பது கருத்து.*

*மந்திரம் - நினைப்பவரைக் காப்பது, திருவடிகளும் என்றும் இடையறாது நினைப்பவர்களைக் காத்தலின் 'மந்திரமாவது இணையடி தானே' என்றார்.*

*மருந்து : பிணி தடுத்து ஊக்கமும் உறுதியும் உதவுவது. திருவடியும் பிறவிப் பிணியைத் தீர்த்து அறியாமையாகிய மயக்கத்தை அகற்றி ஆனந்தமாகிய உறுதியை உதவலின் 'மாமருந்தாவதும் இணையடி தானே' என்றார்.*

*தந்திரம் என்றது விரிந்துநின்று, காப்பது எனும் பொருளது. இது இறைவன் வாக்காய், விதிமுறைகளை விளக்குவதாய் திருவடிக்குச் செல்லும் உபாயங்களை உணர்த்துவதாய் நிற்றலின் 'தந்திரமாவதும் இணையடி தானே' என்றார்.*

*தானமாவது அறவழி ஈட்டிய பொருளைச் சற்பாத்திரமாய் உள்ளவர்க்குத் தகுதி அறிந்து மனமகிழக் கொடுப்பது. அதனால் விளையும் பயன் சிவஞானப் பேறு. எந்தை; என் தந்தை என்பதன் மரூஉ. பிரான் - வள்ளன்மை உடையவன். இணையடி - இரண்டான திருவடிகள்.*

***குறிப்புரை :-** தந்திரம் - நூல். "தானம்" என்றது அறத்தை. சுந்தரம் - அழகு. உடல் அழகும் ஒருபேறே என்பதை அது பேறுகள் பதினாறனுள் ஒன்றாகக் கூறப்படுதலோடு, "திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும்" (தி.11 மூத்தநாயனார் திருஇரட்டை மணிமாலை, 1) என்பதனுள், "உருவாக்கும்" என்பதும் கூறப்பட்டமையான் அறிக. "ஆவது" என்பன பலவும் ஒற்றுமை பற்றி வந்த ஒருமை.*

***இறுதி நான்கு மந்திரங்களாலும், இவ்வதிகாரத்தில் 'திருவடி' எனப்பட்ட பொதுமையால் சிவனது திருவடிப் பேற்றினது சிறப்புக் கூறி முடிக்கப்பட்டது.***

## 3. ஞாதுரு ஞான ஞேயம்

*சிவகுருவின் பெருமையையும், அவர் திருவடிசூட்டி அருள் தரும் முறைமையையும் உணர்த்திய நாயனார், பின்னர் முறையானே அவ் அருட்பேறு ஞாதுரு ஞான ஞேயங்களாய் நிகழுமாற்றை இங்கு ஒன்பது மந்திரங்களால் உணர்த்துகின்றார். ஞாதுரு - அறிபவன். ஞானம் - அறிவு. ஞேயம் - அறியப்படுபொருள். இவை 'திரிபுடி' எனப்படும். இவை தமிழில் முறையே 'காண்பான், காட்சி, காட்சிப் பொருள்' எனப்படும். 'ஞாதுரு, ஞாதிரு, ஞாதா' என்பன ஒரு சொல்லின் திரிபுகள்.*

| ஞாதுரு | அறிபவன் - உயிராகிய நாமெல்லாம் |
|---|---|
| ஞானம் | அறிவு - சிவஞானம் |
| ஞேயம் | அறியப்படுகின்றபொருள் - சிவம் |

**1584.** **நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்**
**பாங்கான பாசம் படரா படரினும்**
**ஆங்காரம் நீங்கி அதனிலை நிற்கவே**
**நீங்கா அமுத நிலைபெற லாமே. 1**

---

**1584.** *தெளிவுரை :- ஞானம் கைவரப் பெற்றவன் அந்த ஞானத்தால் அறியும் பொருள் சிவமேயாகையால், அஃது ஒன்றே அவனுக்கு ஞேயப் பொருளாம். அந்தப் பொருள் ஆனந்தமே வடிவினது ஆகையால், என்றும் நீங்குதல் இல்லாத சிவானந்தத்தை யுடைய அந்த ஞேயப்பொருளிலே ஞானி ஒருபொழுதும் நீங்காதே நிற்பானாயின், அநாதி தொட்டு அவனைவிடாது சூழ்ந்து வந்த பாசங்கள் நிற்கமாட்டாவாய் அகன்றொழியும். அவை முற்ற அகன்றொழியாது ஓரோவொருகால் சிறியவாய் வந்து சூழுமாயினும் அச்சூழல், அவனை முன்போல அஞ்ஞேயப் பொருளை மறந்தொழியும் நிலையை எய்துவிக்கமாட்டா. (ஏனெனில், சிவகுருவின் அருளைப் பெற்ற சிவஞானியின் ஞானத்தை அப்பாசங்கள் முன்போலத் திரிவுபடுத்தி, 'யான்' என்றும், 'எனது' என்றும் செருக்கு விக்கமாட்டா ஆகலான்.) அவ்வாற்றால் பழக்கம்பற்றிச் சிறிதே தலைப்படுகின்ற அந்தச் செருக்கு ஞானத்தால் முற்றாது கழிய, ஞேயத்தில் நிலைத்து நிற்றல் உண்டாகும். அதனால் அத்தகைய சிவஞானிக்கு, அளவிற்பட்டு நீங்குதல் இல்லாது என்றும் உளதாகிய சிவானந்தம் நிலைபெற்றிருத்தல் கூடுவதாம்.*

*குறிப்புரை :- "நீங்காச் சிவானந்த ஞேயம்" என்பது உடம்பொடு புணர்த்தது ஆகலான், அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. "நிற்க" என்னும் எச்சம், விதித்தற் கருத்தன்று இயல்பு கூறியதே. 'ஆங்காரம் நீக்கி' எனப் பிறவினையாகக் கூறாது. "நீங்கி" எனத் தன்வினையாகக் கூறியது அது பற்றியே. 'நீங்கி' என்பதை 'நீங்க' எனத் திரிக்க. 'அதன்கண் நிலை நிற்க' என உருபு விரித்துக் கொள்க. "நீங்கா அமுதம்" வெளிப்படை.*

*"சிவானந்த ஞேயம்" என்றதனால், "ஞேயமாவது சிவம்" என்பது போந்தது. போதரவே, "நின்றிட, நிற்க" என்பவற்றால், 'நிற்றல் சிவஞானத்தால்' என ஞானமும், 'நிற்பவன் அந்த ஞானத்தை யுடையவன்' என ஞாதுருவும் பெறப்பட்டு, 'ஞாதுருதன்னையும், தனது ஞானத்தையும் சிறிதும் எண்ணாது' ஞேயம் ஒன்றையே அறிந்து அதனால் 'அதனை அறிகின்றோம்' என்ற அறிவும் நீங்கிய நிலையே ஆனந்த நிலையாம் என்பது விளங்கிற்று. இதனையே, 'அதீத நிலை' என்றும், 'ஆனந்தாதீதம்' என்றும் கூறுவர். இந்நிலையில் ஞாதுரு ஞானஞேயங்கள் இருந்தும் அவை அவற்றை அறிபவனுக்குப் புலனாகாமையால், இந்நிலையை, 'திரிபுடி நீங்கிய நிலை' என்பர். அஃது அறியாது, 'ஞாதுரு ஞானங்களை ஞேயத்தின் வேறுபட்ட பொருளாக உணர்தலே மயக்க உணர்வாகிய அஞ்ஞானம்' என்றும், 'அங்ஙனம் உணராது அவை அவிச்சையால் ஞேயத்தின் வேறுபட்ட பொருள்போலத் தோன்றுகின்றன. அவை உண்மையில் ஞேயமாகிய அதுவேயாம் என்று உணரப்பெறுதலே மெய்ஞ்ஞானம்' என்றும் கூறித் தமது அறிவின் நிலையைப் புலப்படுத்திக்கொள்வர் மாயாவாதிகள், அவர் தமது கூற்றால், பெறுவானையும், பேற்றையும் இழத்தல் தெளிவு. இனி, 'ஞாதுரு ஞானங்களைப் பெத்தத்திற்போலவே முத்தியிலும் உணர்ந்து நிற்றலே ஆனந்தானுபவம்' என்போரும் இடையீடில்லாத முத்தியின்பத்தினராகாது, இடையிடையே பெத்தத் துன்பத்தை உடையவராவர். இவற்றையே உமாபதி தேவர் தமது வினா வெண்பாவில்,*

> *காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை*
> *காண்பார்கள் நன்முத்தி காணார்கள் - காண்பானும்*
> *காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்*
> *வாட்டுநெறி வாரா தவர்.*

- வினாவெண்பா, 11

*என அருளிச் செய்தார். இதனுள் காட்டுவது, ஞானம். காண்பது - காணப்படுவது.*

**1585.** ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நீங்கிடும்
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகும்
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவர்
ஆயத்தில் நின்ற அறிவறி யாரே. **2**

---

*ஆங்காரம் : புத்தி தத்துவத்தால் விடயத்தை இஃது இன்னது என நிச்சயிப்பேன் என்று ஒருப்பட்டு எழுதற்குக் கருவியாய், இராசத குணம் மிக்கு ஏனைய இரண்டு குணங்களும் குறைந்து தோன்றுவது. அது சாத்வீகம் மிகுந்து ஏனை இரண்டும் குறைந்த தைசத ஆங்காரமும், இராசதம்மிக்கு ஏனையிரண்டும் குறைந்த வைகாரி காகங்காரமும், தாமதம்மிக்கு ஏனை இரண்டும் குறைந்த பூதாதிகாகங்காரமும் என மூவகையாம். இம்மூன்றுமே ஞேயத்து அழுந்தியவழி நீங்குமாதலின் 'ஆங்காரம் நீங்கி' என்றார்.*

*இதனால், அதீத நிலையாகிய முடிந்தநிலையில் உளவாகும் ஞாதுரு முதலிய மூன்றன் இயல்புகளும் கூறப்பட்டன.*

**1585.** *தெளிவுரை :- சிவஞானத்தால் சிவமாகிய ஞேயப் பொருளிலே அன்பையும், பின் அந்த ஞேயப்பொருளையும் அடைந்தோர் தம்மையும், தமது அறிவையும் ஆராய்கின்ற அச்செயலில் நிற்கும் அறிவை உடையவராகார். அதனால், அவர் ஞேயத்தை அடைந்து நிற்கும் நிலையில் ஞானம், ஞாதுரு, ஞேயம் என்னும் முப்பகுப்பு அவர்க்கு நீங்குவதாம். அது நீங்கவே, ஞேயம் ஒன்றிலே நிற்கும் ஞாதுருவுக்கு அந்த ஞேயப் பொருளிலே வீட்டின்பம் எய்துவதாம்.*

*குறிப்புரை :- ஞானாதி : ஞானத்தில் ஞானமும், ஞானத்தில் யோகமும், ஞானத்தில் கிரியையும், ஞானத்தில் சரியையுமாகிய இவைகளாம். ஞானாதி - ஞானத்தை ஆதியாக உடைய இவைகள் என்க. இந்நான்கும் நிலைபெறின் எல்லாம் சிவச்செயலாவதன்றிச் சீவச் செயலாகாமை தெளிக.*

*ஞேயத்தின் ஞாதுரு - முற்கூறியவண்ணம் ஞேயத்தில் நிலைபெற்ற அறிபவனாகிய ஆன்மா. ஞேயத்தில் வீடாகும் - ஞேயத்தில் அழுந்தி அனுபவித்தலன்றி வேறொன்றும் அறியாது கிடத்தலாகிய வீட்டின்பை எய்தும் என்பது. வீடு என்பது பற்றறுதியால் உண்மைஞானத்தைப் பெற்று அதுவதுவாயழுந்தி நிற்பதாதலின் அதனை 'வீடு' என்றார்.*

**1586.** தானென் றவனென் றிரண்டாகும் தத்துவம்
தானென் றவனென் றிரண்டும் தனில்கண்டு
தானென்ற பூவை அவனடிச் சாத்தினால்
நானென் றவனென்கை நல்லதொன் றன்றே. **3**

---

*ஞேயத்தின் ஞேயத்தை - அறியப்படுபொருளாகிய சிவத்திற்கு நேசத்ததாகிய சத்தியை. ஞேயம் - நேயம் - நேசம் - அன்பு. இவ்வாறு இந்தச் சொல் போலி எழுத்தினைப் பெற்று, நீங்காத அன்பை உணர்த்தி நின்றது. சிவத்தால் நேசிக்கப்படும் பொருள் அங்கியில் சூடு போல்வதாகிய சிவசத்தியன்றி வேறொன்று இன்மையின் அதனை 'ஞேயத்தின் ஞேயம்' என்றார். ஞேயமாகிய சிவத்தால் அறியப்படும் பொருளை எனலுமாம். அதனிடம், ஞேயத்தை உற்றவர் - அன்புபூண்டவர்கள் என்க.*

*சிவஞானமாவது, 'சிவம் ஒன்றே மெய்ப்பொருள்' என உணரும் ஞானம். அதனானே சிவம் அறியப்பட, அவ் அறிவின் வழி அச்சிவத்தின் மாட்டு அவ்வறிவனுக்கு அன்பு மீதூரும். அது மீதூர்ந்தவழி அச் சிவத்தையன்றி அவன் வேறொன்றையும் அறியானாவன். அங்ஙனம் ஆய வழி அச் சிவத்தினது ஆனந்தம் இடையீடின்றி எல்லையில்லாமல் பெருகிநிற்கும் என்பதனை இம்மந்திரத்தில் வகுத்துக் கூறியவாறு. ஞேயத்தின் ஞேயம் - சிவத்தைப் பிரியாத சத்தி.*

*"அயரா அன்பின் அரன்கழல் செலுமே" (சிவஞான போதம், சூ.11) என்றார் மெய் கண்டதேவரும். 'ஆய் அதனில்' என்பதில் 'அதனில்' என்பது "அத்தில்" என மருவிநின்றது. 'அறிவறிவாரே' என்பது பாடமன்று.*

*இதனால், மேற்கூறிய, "நீங்கா அமுதம் நிலைபெறும்" நிலை கைவரும்முறை வகுத்துக் கூறப்பட்டது.*

**1586.** *தெளிவுரை :- 'ஆன்மாவும், சிவமும்' எனப்பொருள் இரண்டாம். அவ்விரண்டையும் ஆன்மாவாகிய ஞாதா தனது ஞானத்தின்கண் வைத்து நன்கு காணுதல் வேண்டும். பின் அங்ஙனம் கண்டதன் பயனாக ஞாதா தானாகிய மலரைச் சிவனுக்கு அவனது அருளாகிய திருவடியிலே சாத்திவிடுவானாயின், முதலில், 'ஆன்மா, சிவம் எனப் பொருள் இரண்டுள்ளன' என உணர்ந்த உணர்வு நல்லதோர் உணர்வாய்ப் பயன் தரும்.*

*தத்துவம் - உண்மைப் பொருள். தான் - உயிர். அவன் - சிவன்.*

**1587.** வைச்சன ஆறாறு மாற்றி எனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவம் மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்
அச்சங் கெடுத்தென்னை ஆண்டனன் நந்தியே. **4**

---

***குறிப்புரை :-*** *'பரமான்மாவை யன்றிச் சீவான்மா என்பதொன்று வேறில்லை' என்பாரை மறுத்தற்கும், 'முத்தி நிலையில் பாசம் செயலற்று இருந்தும் இல்லாதனவாம்' என்பது உணர்த்தற்கும், ''தானென் றவனென நிரண்டாகும் தத்துவம்'' என்றாராகலின், இது, மேல்;*

*பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போற்பசு பாசம் அனாதி" - தி.10 பா.114*

*என்றதனோடு மாறுகொள்ளாமை அறிக. ஞாதா தன்னையும், சிவத்தையும் தன் அறிவில் வைத்துக் காணுதலாவது, சிவம் தானே விளங்கும் அறிவினதாய் அறிந்தும், தனது அறிவினுள் நின்று அறிவித்தும் நிற்றலையும், தான் அச்சிவம் அறிவித்தாலன்றி அறிய மாட்டாமையையும் உணர்ந்து, அதனானே, தான் அடிமையும், சிவம் தன்னை உடைப்பொருளாதலையும் தெளிதல். அத் தெளிவு உளதாகவே, ஞாதா தனக்கெனச் செயல் இன்மையை உணர்ந்து, தான் சிவனது உடைமையாயே நிற்பனாகலின், அதனை உருவக வகையால், "தானென்ற பூவை அவனடி சாத்துதல்" என்றார். இதனை, "கூட்டில் வாள் சாத்தி நிற்றல்" (திருவுந்தியார், 30) என வேறோர் உருவகத்தால் உணர்த்தினார் திருவுந்தியார் ஆசிரியர். ''என்று, என்கை" என்பன எண்ணிச் சொல்லுதலைக் குறித்தன. "அன்றே" என்பது தேற்றத்தின் கண் வந்தது. இங்ஙனமன்றி, ஏகாரத்தை ஈற்றசையாக்கி, 'திரிபுடி ஞானம் நில்லாது போவதாம்' எனவும் உரைப்பர். அகங்கார சமர்ப்பணம் உணர்த்தப்பட்டது.*

*இதனால், ஞாதாவும் ஞேயம்போல என்றும் உள்பொருளே யாயினும், அவன் ஞேயத்தில் அடங்கியவழியே இன்பம் பெறுதல் கூறப்பட்டது.*

**1587. தெளிவுரை :-** *எம் குரவராகிய நந்திபெருமான் என் மேல் வைத்த தமது அருளினால், முன்னே என்னைக் கட்டுட்படுத்து வைத்த முப்பத்தாறு தத்துவங்களையும் நீக்கி என்னை அவற்றினின்று வேறாக்கி வைத்து, என்னை யாவரும் 'பெரியோன்' என்று*

**1588.** முன்னை யறிவறி யாதஅம் மூடர்போல்
பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்
தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தனன் நந்தியே. **5**

---

*புகழும்படிச் சிவ வியாபகத்தை என்பால் மேலிடுவித்துப் பின் உறுதியாக என்னைச் சிவமேயாகச் செய்து, பிறவிக்கு அஞ்சும் எனது அச்சத்தை ஒழித்து என்னை ஆட்கொண்டருளினார்.*

***குறிப்புரை :-*** *'அதனால், யான் இதுபொழுது ஞேயமேயாய் நிற்கின்றேன்' என்பது குறிப்பெச்சம். ஞேயமேயானபின் சொல்நிகழ வழியில்லையாதலின், இங்ஙனம் சொல் நிகழ்ந்தவாறு என்னை யெனின், அதுவும் அந்த ஞேயத்தது இயல்பாகிய அருளால், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" (தி.10 பாயிரம், திருமூலர் வரலாறு, 13) என்று எழுந்த உணர்வினாலேயாம் என்க. 'வியாபகத்துவம்' என்பது ''வியாத்துவம்'' என மருவிற்று. 'மேலிடுவித்து' என்பது தொகுத்தல் பெற்றது.*

*இதனால், ஞாதா ஞானத்தைப் பெற்று ஞேயத்து அழுந்தும் முறைமை கூறப்பட்டது.*

**1588.** ***தெளிவுரை :-*** *யான் நந்தி பெருமானைக் குருவாக அடைதற்கு முன், அறியத்தக்க பொருளை அறியாது கிடக்கின்ற அறிவிலிகளோடு ஒருங்கொத்திருந்தேனாக, அவரை அடைந்த பின் அவ் அறியாமையை நீக்கிச் சிவத்தை உணருமாறு என்னைக் கருவிக் கூட்டத்திற்கு அயலானாக ஆக்கி, அவ் ஆக்கப்பாட்டால் யான் சொரூப சிவத்தில் தோய்ந்தபின்பு மீளக் கருவிக் கூட்டத்திற் செல்லாதவாறு உணர்வைத் தந்து கொண்டிருக்கின்றார்.*

***குறிப்புரை :-*** *பாச பந்தங்களில் கட்டுண்டு உண்மை ஞானத்தான் பதியை உணராது மூடர்போல் கிடந்த என்னை, உபதேசந் தந்த பின்பு, தானேயாகச் செய்தமையின், அறிவு அறியாமையாகிய இரண்டையுமே என்னினின்று பிரித்தான். ஆன்மாவாகிய தன்னை உணரப் பரசிவமாக்கி, அச்சிவத்தினிடமாக என்னை அறியும்படி விளக்கி, என்னுள் எழுந்தருளியிருந்தான் என் குருநாதன் என்றவாறு.*

*பாசத்தோடுகூடிப் பாசமாய்த் தன்னையும் தடையையும் அறியாமல் கிடந்த ஆன்மாவை, உபதேசத்தானும் திருவருளானும்*

**1589.** காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்
கோணாத போகமும் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமும்
காணா யெனவந்து காட்டினன் நந்தியே. **6**

---

*உய்வித்துப் பரஞானம் பொருந்தச்செய்த பின்னர் அந்த ஆன்மா தன்னையும் உணரும்; தலைவனையும் உணரும்; தடையையும் உணருமாதலின் "தன்னை அறியப் பரனாக்கி, தற்சிவத்து என்னை அறிவித்து (என்னுடன்) இருந்தனன் நந்தி" என்றார். பரனாக்கி - பாசஞானத்தினீக்கிப் பரஞானமுடையனாக்கி.*

*இதனால், 'குருவருளில் உறைத்து நிற்றலாலே ஞேயத்தழுந்துதல் உண்டாம்' என்பது கூறப்பட்டது.*

**1589.** *தெளிவுரை :- "எங்கள் குரவராகிய நந்தி பெருமான், கண் இன்றியே காண்கின்ற காட்சியையும், காது இன்றியே கேட்கின்ற கேள்வியையும், சித்தம் திரியாதே நுகர்கின்ற நுகர்ச்சியையும், கூடாமலே கூடி நிற்கின்ற கூட்டத்தையும், நாணாமலே நாணுகின்ற நாணத்தையும், நாதம் இன்றியே உணரும் உணர்வையும் காண்பாயாக" என அணுகி வந்து காட்டியருளினார்.*

*குறிப்புரை :- கண் முதலிய கருவிகளின் துணையின்றியே காட்சி முதலிய புலனுணர்வுகளையும் நாதத்தின் துணையின்றியே சவிகற்ப உணர்வையும், முன்பு வேறாய் நின்று பின்பு கூடாது இயல்பிலே இரண்டற நிற்கும் நிலை விளங்கப் பெறுதலாகிய புணர்ச்சியையும், முக்குணங்களும் மாறி மாறி வருதலால் சித்தம் திரிபெய்துதல் இன்றி என்றும் ஒருபடித்தாய் நின்று நுகரும் சிவானுபவத்தையும், பிறர்முன் இளிவந்து நின்று நாணுதலாகிய நாணமின்றி, முன்னை அறியாமையை நினைந்து வெள்கி விலாஇறச் சிரித்தலாகிய (தி.4 ப.75 பா.3) நாணத்தையும் பெறுதல் சிவஞானம் பற்றுக்கோடாயவழிக் கிடைப்பதாகலின், 'அதனை அவ்வாற்றால் தந்தருளினார்' என்றவாறு. "கேளாதே எல்லாம் கேட்டான்" (தி.8 திருச்சதகம், 28) என்னும் சிவனது இயல்பு அவனைச் சார்ந்தார்க்கும் உளதாதல் அறிக. உலகப் பொருள்களை அறியாத கண்ணும், கேட்காத காதும், மாறுபடாத போகமும், கூடாத - என்றும் பிணைந்தேயிருப்பதான புணர்வும், நாணப்படாத நாணாகிய பற்றும், நாத தத்துவத்தையுங் கடந்து விளங்குவதான அறிவும் காண்பாயாக என என்முன் எழுந்தருளிவந்து காட்டினான் குருநாதன் என்றவாறு.*

**1590.** மோனங்கை வந்தோர்க்கு முத்தியும் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாம்மொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே. 7

---

*தத்தம் புலன்களைப் பற்றாது தனித்து நிற்கும் பொறிகளையும், நிலைத்த போகத்தையும், இடைவிடாத புணர்ச்சியையும், பற்றையும், சிவமேயான அறிவையும் குருநாதன் எனக்குக் காட்டினான் என்பது கருத்து.*

*இதனால், சிவகுருவால் சிவஞானத்தைப் பெற்ற ஞாதுரு அந்த ஞானத்தால் ஞேயத்தை உணரும் முறை கூறப்பட்டது. இது துரிய நிலை.*

**1590.** *தெளிவுரை :-* மௌன நிலை கைவரப் பெற்றோர்க்குப் பரமுத்தி உண்டாகும். அதற்கு முன்னே பரசித்திகள் உளவாம். நாதத்தின் பிணிப்பும் விட்டொழியும். இறைவனது ஐந்தொழில்களில் இறுதியதாகிய அருளல் தொழிலும் நிகழ்ந்து, அவை அனைத்தும் இயற்றப்பட்டு முடியும்.

*குறிப்புரை :-* மோனம் - வாய் பேசாதிருத்தல். மௌன நிலையாவது தற்போதம் சிறிதும் எழாத அதீத நிலையாம். திரிபுடி அற்ற நிலையும் இதுவேயாதல் அறிக.

ஊமை மொழி. பேசா எழுத்தாகிய அசபை. அது மூச்சுக்காற்றை உள்ளுக்குள் இழுக்கும்போது 'ஸோ' என இழுத்து 'ஹம்' எனக் கும்பிக்கும் தியானமாம். இது அவன் நான் என்ற எண்ணத்தைப் பதிவித்துச் சீவனைச் சிவமயமாக்குகிறது. திருமால் இந்தப் பாவனையால் தியாகேசப் பெருமானைச் சித்தத்தில் வைத்தாட்டினார். அதனால் தியாகப்பெருமான் அஜபா நடேசப் பெருமான் ஆனார் என்பது வரலாறு. பின்னரும்,

> 'ஊமை எழுத்துடன் பேசும் எழுத்துறில்
> ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்'

எனல் காண்க.

ஊமையாம் மொழி முற்றுதலாவது சோகம் பாவனை சித்தித்தல். சீவனும் சிவனைப்போலச் பஞ்ச கிருத்தியம் பண்ண எண்ணும் என்பதால். ஐந்தொழிலையும் ஒருசேர இயற்றுதல், அரன்

**1591.** **முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றன்பால்**
**வைத்த கலைகால் நான்மடங் கால்மாற்றி**
**உய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே**
**பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே.** **8**

---

ஒருவர்க்கே உரிமை; ஏனையோர் ஒவ்வொன்றில் அவனருளால் இருந்தியற்றற்கு உரியாராக, ஏனையவற்றை இயற்றும் ஆற்றலிலராவர். இவன் ஐந்தொழிலையும் ஒன்றைவிட்டு ஒன்றை முன்பின்னாக இயற்றும் வல்லமையுடையவன் என்பதாம். இதனால் சிவசமவாத மாகாமை காண்க.

**1591.** *தெளிவுரை :-* சிவ குருவின் திருவடிப் பேற்றால் எல்லாப் பொருள்களும் அற்றுச் 'சிவாஞாதா, சிவஞானம், சிவஞேயம்' என்னும் மூன்று பொருளிலே வந்து முடிந்த தன்மையை, 'சந்திர கலை, சூரிய கலை, அக்கினி கலை' என்னும் மூன்று வகையில் இயங்கும் பிராண வாயுவை முறைப்படி அடக்குமாற்றால் ஞேயமாகிய ஒன்றில் அடங்கச் செய்தலால், விளைந்த ஆனந்தத்தால், திரிபுடியாகிய கட்டினை அறுத்தோர் அதன்பின் பிறந்தும், இறந்தும் வருதலைச் செய்யார் முத்தி பெறுவர் என்றதாம்.

*குறிப்புரை :-* பிராணாயாமத்தால் ஞேயத்தழுந்தியிருப்போர் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று. காண்பானும், காட்சியும், பொருளும் ஆகிய திரிபுடி முத்திரையில், முடிந்ததாகிய ஞேயத்திடத்துச் செலுத்திய தவத்தான்விளைந்த ஆனந்தத்தையுடைய ஒளிபொருந்திய குருநாதனின் திருவடியில் ஒன்றி, உயிரியக்கத்திற்காக வைக்கப்பெற்ற இடைகலையும் பிங்கலையும் சுழுமுனையுமாகிய கலைகளினியங்கும் பிராணவாயுவை நாலுவிரற்கடையளவு வீணே கழிதலையும் நிறுத்துதலாகிய கும்பகத்தைச் செய்து பந்தங்களை அறுத்தவர்கள் மீளவும் பிறந்திறக்கும் நிலையைப் பொருந்தார்கள் என்றவாறு.

பூரணகும்பகப் பிராணாயாமத்துடன் ஞேயத்தழுந்திய பேர்களுக்குப் பிறப்பிறப்பில்லை என்பது கருத்து.

முத்திரை மூன்றின் - திரிபுடி முத்திரையில், திரிபுடி முத்திரை யென்பதை முத்திரை மூன்று எனத் தமிழ் செய்தவாறாம். இதற்குச் சாம்பவி முதலிய முத்திரைகளால் என்றும், தீட்சைக்காலங்களில் இயற்றப்படும் பொறியாகிய மூன்றினாலும் என்றும் உரை காண்பர்

**1592.** மேலைச் சொரூபங்கள் மூன்றும் மிகுசத்தி
பாலித்த முத்திரை பற்றும் பரஞானம்
ஆலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற
மூலச் சொரூபன் மொழிஞா துருவனே. **9**

---

*சிலர். இவ்வதிகாரம் ஞாதுருஞான ஞேயமாதலானும், சாம்பவி முதலியன தீக்கை வகைகளேயன்றி முத்திரை ஆகாமையானும், தீக்கைகளில் காட்டப்பெறும் முத்திரைகள் கிரியைகளாய் அதற்குரிய அங்கமாமேயன்றி அதனால் கலை கால்மாற்றுதலும் குரு திருப்பாதத்தில் ஒன்றுதலும் நிகழாமையானும் அவ்வுரைகள் ஈண்டு ஏற்புடையனவல்ல என்க.*

**1592. *தெளிவுரை :-*** *மேலே கூறிவந்த ஞாதுரு முதலிய மூன்றன் இயல்புகளையும் சிவசத்தி இனிது விளங்கக் காட்ட அங்ஙனம் கண்ட உணர்வே ஞேயத்தைப் பற்றுதற்குரிய மேலானஞானம். அந்த ஞானத்தில் ஆரவாரித்து திருநடனத்தையுடைய சிவனே ஞேயம். அந்த ஞேயத்தில் அழுந்தித்தானும், தனது ஞானமும் தோன்றாது. முதற்பொருளின் இயல்பு முற்றும் தனது இயல்பாக விளங்கப்பெற்ற ஆன்மாவே ஞாதுரு.*

***குறிப்புரை :-*** *ஆலித்தல் - மகிழ்தல். ஆலித்த நட்டம் - ஆனந்த தாண்டவம். இங்ஙனம் முத்தி நிலையிலும் இம்மூன்றும் உண்மையால், முத்தி என்பது பெறுவானும், பேறும் இல்லாத ஒன்றாகப் பிறர் கூறும் நிலைகள் அல்ல' என்றவாறு. எனவே திரிபுடி அற்ற நிலை என்பது, 'அவை அறியப்படாதநிலை' எனப் பொருள்படுதலன்றி, 'அவை இல்லாதொழியும் நிலை' என்றதாயிற்று. இஃது இவ்வதிகாரத்து முதற்கண் காட்டிய வினா வெண்பாவானும் நன்கறியப்படும். சொரூபம் - இயல்பு. சிவசத்தியை, ''மிகுசத்தி'' என்றார். 'மூன்றையும் மிகுசத்தி பாலித்த' என்க. "பாலித்த" என்னும் பெயரெச்சம், ''முத்திரை'' என்னும் செயப்படு பொருட்பெயர் கொண்டது. முத்திரை - குறி உணர்வு. 'முத்திரையே பரஞானம்' என ஏகாரம் விரித்துமுடிக்க. 'நட்டம்' என்றது அதனை உடைய பொருளை. 'சொரூபனே ஞாதுருவன்' என ஏகாரத்தை மாற்றிக் கூட்டியுரைக்க. 'ஞாதுரு' என்னும் வடசொல்லை. 'ஞாதுரு வாம் தன்மையுடையவன்' எனத் தமிழ் முறைப்பட ஓதினார்.*

*இதனால், ஞாதுரு ஞான ஞேயங்களது இயல்புகளும், அம் மூன்றும் என்றும் உள்ள பொருள்களாதலும் கூறப்பட்டன.*

## 4. துறவு

*சிவகுருவின் இயல்பும், அக்குருவினது திருவடியைப் பெறுதலினது சிறப்பும், அதன்பயனாக விளங்கப்பெறும் ஞாதுரு ஞான ஞேயங்களது இயல்பும் கூறிய நாயனார், இனி அச்சிவகுருவைத் தலைப்படுதற்கு ஏதுவாய் உள்ளனவற்றைக் கூறுவான் தொடங்கி, முதற்கண் துறவினைப் பத்து மந்திரங்களாற் கூறுகின்றார். அஃதாவது வினை காரணமாக உளவாய் உடம்பும், உலகமுமாய அவற்றின்மேல் உளதாய பற்றினை விடுதல்.*

**1593.** **இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்
துறக்கும் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்கு
அறப்பதி காட்டும் அமரர் பிரானே. 1**

---

**1593.** தெளிவுரை :- *இறப்பும், பிறப்பும் ஆகிய இரண்டினின்றும் இயல்பாகவே நீங்கி, உயிர்களும் அவற்றினின்றும் நீங்குதற்குத் துறத்தலாகிய தவநெறியின் முறைமையைச் சொல்லியருளிய சுயஞ்சோதியாகிய சிவனை ஒருஞான்றும் மறத்தல் இல்லாதவராய், வாயாலும் வாழ்த்தி நிற்பவர்கட்கு அவன் இன்ப உலகமாகிய தனது உலகத்தை வாழும் இடமாகக் காட்டியருளுவான்.*

குறிப்புரை :- *சிவன் பிறவாமை உரையாலும் கருதலாலும் அறியப்படுதலின் அதனையே முன்னர்க் கூறினார். செவ்வெண்ணே யன்றி உம்மை யெண்ணும் தொகை பெறுமாதலின், இனிது விளங்க, "இருமையும் நீங்கி" எனத் தொகைகொடுத்து ஓதினார். எனவே, "இருமை" என்பது எண்ணின்கண் வந்தது. "இருமையினும்" என ஐந்தாவது விரிக்க. சிவன் இருமையினும் நீங்கினமையை எடுத்தோதி யதனால், 'உயிர்களும் அவற்றின் நீங்குதற்கு' என்பது பெறப்பட்டது. தவம் - தவமாகிய நெறி. உயிர்கள் வினைவழியே இயங்குவது அவநெறியும், வினை நீங்குதற்குரிய வகையில் இயங்குவது தவநெறியு மாதலின், அவற்றுள் துறவு தவநெறியாதல் உணர்த்துவார். 'துறக்கும் தவம்' என்றார். எனவே, துறத்தலையே 'தவம்' என்றமையால், பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம். "கண்ட" என்றது 'தானே கண்ட' என்னும் பொருட்டாய், 'பிறர்க்குச் சொன்ன' எனத்தன் காரியம் தோன்ற நின்றது. சொல்லியது வேதாகமங்கள் வாயிலாக என்க. 'சோதிப் பிரான்' என்றதும் அவ்விரண்டும் பற்றி. எனவே,*

**1594.** பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே
மறந்த மலஇருள் நீங்க மறைந்து
சிறந்த சிவன்அருள் சேர்பரு வத்துத்
துறந்த உயிர்க்குச் சுடரொளி யாமே. **2**

---

*அவனல் லது பிறர் அதனை அறிவாரும், அறிவிப்பாரும் இல்லை என்க. மறப் பின்மை பிறபொருளை நினையாமை யாதலின், அது பற்றறுத்தலைக் குறித்தல் அறிக. வாய்மொழிதல் நினைவின் வழித்தாதல் வெளிப்படை. அறப் பதிபுண்ணியலோகம்; என்றது, சிவபுண்ணிய லோகத்தை என்னை?*

> *யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
> குயர்ந்த உலகம் புகும். - திருக்குறள், 346*

*என்றமையால், துறந்தார் அடைவது பசு புண்ணியம் செய்வார். அடைதற்குரிய துறக்க லோகம் ஆகாமையின், "அமரர் பிரான்" என்றது சுட்டுப் பெயரளவாய் நின்றது. இதன்கண் "பிரான்" என்பது, "அமரர்" என்பார் முகமனாக அங்ஙனம் கூறப்பட, உண்மை அமரன் சிவனேயாதல் விளக்கிநின்றது.*

> *அச்சுதன் அயன் அமரர் ஆகிய பெயர் அவர்க்கு
> நிச்சயம்படு முகமனே. - சூரன் அமைச்சியற் படலம், 140*

*என்ற கந்தபுராணத்தை நோக்குக.*

*சோதிப்பிரான் - ஒளியான திருமேனியுடைய இறைவன், இதனை அனுபூதிமான்கள் ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி. சோதியே சுடரே, நல்லக விளக்கு, தூண்டா மணியனைய சோதி கண்டாய் எனப்பலவாறாக அருளியிருத்தல் காண்க. சோதி விளக்கொளி விண்ணொளி அறிவொளி என முத்திறப்படும். இவற்றுள், அறிவொளியே தலைசிறந்தது. அறிவொளி, கற்ற நூற்கல்வி அறிவும், உயிரின் இயற்கையான அறிவும், ஆசான் அருளுதவிகொண்டு மலநீக்க விளக்கம்பெற்ற உண்மை அறிவும் என முத்திறப்படும். அவற்றுள் இறைவன் உண்மை அறிவொளி ஆவர் என்க. அதுவே சுட்டி அறியப்படாததாய், தூய்மையாய், எல்லையற்ற இன்பம் பயப்பதாய், யாவற்றையும் இருந்தநிலையே முற்றுமுணர்வதாய் அமைவதாதலின், பிரான் வள்ளமையுடையவன்.*

*இதனால், பிறவி நீங்கும் நெறி துறவேயாதலும், அதுவும் சிவநெறியின் பொதுவும், சிறப்பும் ஆகிய நூல்களிற் சொல்லப்பட்டதே யாதலும் கூறப்பட்டன.*

**1595.** அறவன் பிறப்பிலி யாரு மிலாதான்
உறைவது காட்டகம் உண்பது பிச்சை
துறவனும் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. **3**

---

**1594.** *தெளிவுரை :-* *ஆணவ மலம் பரிபாகம் எய்தாத பொழுது சத்திநிபாதமும் வாராமையால் அம்மலம் பலமாயப் பொருள்களின் வழிப் பலவகை மயக்கத்தைச் செய்தலால் பிறந்தும், இறந்தும் உயிர்கள் தன்னை மறந்து நின்றபொழுது அவற்றது அறிவினுள்ளே மறைந்து நின்றும், பின் அம்மலம் பரிபாகம் எய்தியபொழுது சத்திநிபாதம் வருதலால் உயிர்கள் தன்னை நினைந்தவழி அச்சத்திநிபாத நிலைகட்கு ஏற்ப வெளியிடத்தும், உள்ளே இதயத்தும் உருவம், அருவுருவம், அருவம் என்னும் தடத்தநிலைகளிலும், அறிவின்கண் சொரூப நிலையிலும் முறையானே விளங்கிநிற்கின்ற சிவன் அச் சத்திநிபாத நிலைகட்கு ஏற்பத் தோன்றும் துறவுணர்வின் அளவாக, முன்னர்ச் சிறிதாய்த் தோன்றிப் பின் பெரிதாய்ச் சுடர்விட்டு ஒளிர்கின்ற பேரொளி போல விளங்கிநிற்பன்.*

*குறிப்புரை :-* *பேதைமை, இங்கு மயக்க உணர்வு. இதனைத் தரும் ஆணவ சத்தி, 'அதோநியாமிகாசத்தி' எனப்படும். இஃது உயிர் தோறும் ஒவ்வொன்றேயாயினும் அதற்கு வாயிலாய் உள்ள பொருள்களது பன்மை பற்றிப் பலவாயிற்று. "பல்பேதைமையாலே" என்பதை முதற் கண்வைத்து உரைக்க. "மறந்த" என்னும் பெயரெச்சம், "இருள்" என்னும் ஏதுப்பெயர் கொண்டது. 'நீங்கச் சிறந்த' என்க. "மறைந்து சிறந்த" என்பதற்கு, 'முன்னர் மறைந்து பின்னர்ச் சிறந்த' என உரைக்க. முன்னைநிலை மறத்தலாகவே, பின்னைநிலை நினைத்தலாயிற்று. "சிறந்த" என்றது, 'படிமுறையான் ஓங்கி நின்ற' என்றவாறு. அருள் - அருட்சத்தி. "அருள்சேர் பருவத்து" என்பதை "மறைந்து" என்றதன் பின்னர்க் கூட்டுக. இதனானே, 'முன்னைநிலை அருள்சேராப்பருவம்' என்பது போந்தது. 'பருவத்து ஆம்' என இயையும். 'ஆதல் துறந்த உயிர்க்கு' என்றதனால், அவ்விடத்துத் துறவுதானே உண்டாதல் பெறப்பட்டது. சிவன் மறைந்து நின்ற காலத்துப் பிறப்பிறப்பாய பெருந் துன்பம் உளதாதல் கூறவே, அவன் விளங்கிநின்ற காலத்துப் பேரின்பம் உளதாதல் விளங்கிற்று. 'அது துறவால் வருவது' என்பதே இங்குக் கருதப்பட்ட பொருள்.*

*"ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்;*

*ஆசை விடவிட ஆனந்த மாமே" - தி.10, 8, அவா அறுத்தல், 3*

*என நாயனார் முதற்கண் அருளிச்செய்தமை காண்க.*

*சிவன் உயிரின்கண் விறகிற்றீயும், பாலில் நெய்யும் போல மறைந்து நிற்பன்; பரிபாகம் எய்தியவழித் தயிரின் நெய்போலச் சிறந்து விளங்குவன் என்பார் மறைந்து சிறந்த சிவன் என்றார்.*

*திருமூலர் கூறும் துறவுள்ளம் இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் எய்தியவழியே விளைவதாகலின் இத்துணையுங்கூறிப் பின்னர் வாசனையாக உயிரைச் சார்ந்துள்ளதான பற்றும் துறந்தஉயிர்க்கு என்றார்.*

*அங்ஙனம் பரிபாகமுற்ற உயிர்கட்கு இறைவன் தோற்றச் சுடரொளியாய் விளங்குவன் என்பதைச் 'சுடரொளியாமே' என்பதால் புலப்படுத்தார்.*

*இவ்வண்ணம் இம்மந்திரம் துறந்தார்க்குச் சிவன் வெளிப்படுதலை உணர்த்திற்றாதலின் துறவதிகாரத்தில் இடம்பெற்றது.*

***1595. தெளிவுரை :- "அறவாழி யந்தணன்" (தி.10, 7, அருளொளி, 12) என்றற் றொடக்கத் தனவாக நூல்களில், 'பலவகை அறங்களையும் தனக்கு வடிவாக உடையன்' எனக் கூறப்படுகின்ற கடவுள், பிறப்பு இல்லாதவனும், அதனால், பற்றுச் செய்தற்குக் கிளைஞர் ஒருவரும் இல்லாதவனும், வாழும் இடம் காடாகவும், உண்ணும் ஊண் பிச்சையாகவும் உடையவனுமாதலால் சிறந்த துறவியாய் உள்ள சிவனேயாவன். அதனால், அவன் துறவு பூண்டவர்களையே பிறவியைக் கடப்பித்து உய்விக்கின்ற பேரருளாளனுமாய் உள்ளான். இவற்றை அறிமின்கள்.***

***குறிப்புரை :- 'அறவடிவானவன்' என்னும் பொருட்டாய்க் கடவுட்கு யாவரும் உடன்பட்டுக்கூறும் பொதுக் காரணப்பெயராய் "அறவன்" என்பது எழுவாயாய் நின்ற சிவனைக் குறித்த "துறவன்" என்னும் சிறப்புக் காரணப்பெயராய் பயனிலையைக் கொண்டது. பிறப்பிலி முதலிய நான்கும் சிவன் சிறந்த துறவியாமாற்றை விளக்கி நின்றன. 'சிவன் சிறந்த துறவியாதலின், சிறந்த துறவியரிடத்தே அருள் மிக உடையனாய் அவர்களை உய்விக்கின்றான்' என்றவாறு. இல்லறத் தவரும் அன்பு, பொறை, ஒப்புரவு, ஈகை முதலியவற்றை உடையா ராயினும் பற்றறாமையின், எல்லா உயிர்கள்மேலும் அருளுடையராய்த் 'தன்னுயிர் நீப்பினும்தான் பிறிது இன்னுயிர்***

**1596.** நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியின் வழுவின் நெருஞ்சில்முட் பாயும்
நெறியின் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகில் லாவே. **4**

**1597.** கேடும் கடமையும் கேட்டுவந் தைவரும்
நாடி வளைந்தது நான்கட வேனலேன்
ஆடல் விடையுடை யண்ணல் திருவடி
கூடும் தவம்செய்த கொள்கையன் றானே. **5**

---

*நீக்காது' (திருக்குறள், கொல்லாமை, 7) ஒழுகுதல் முதலியவற்றை உடையராக மாட்டாமையின், 'அறவோர்' எனப் பெயர் பெறமாட்டார்கள். துறவியரே அந்நிலைக்கண் நிற்கவல்லராய் ''அறவோர்'' எனப் பெயர் பெற்று நிற்றலின், அவரே அறவாழியந்தணனாகிய இறைவனது அருட்குப் பெரிதும் உரியராகின்றனர் என்பது தோன்ற, இறைவனை, "அறவன்" எனப் பொதுவகையானும், "துறவன்" எனச் சிறப்பு வகையானும் கூறினார். "உறைவது காட்டகம், உண்பது பிச்சை" என்றவை, 'உடுப்பது தோல், முடிப்பது சடை, பூசுவது சாம்பல்' முதலியவற்றிற்குத் தோற்றுவாயாய் நின்றன. நிற்கவே, இவை பற்றிச் சிவனை இகழ்வோர் துறவரது பெருமையை அறியும் அறிவிலார் என்பது அறியப்படும். அறிவுடையார் இன்னோரன்னவற்றைப் புகழ்ந்து போற்றுதல் அறியத்தக்கது. ''துறவனும்'' என்னும் உம்மையை, ''பித்தன்'' என்பதனோடு கூட்டுக. "பிறவி யறுத்திடும்" என்னும் தொகைச்சொல் 'உய்விக்கும்' என்னும் ஒருசொற் பொருட்டாய், "துறந்தவர்தம்மை" என்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. பித்துப் போறலின் பேரருள், "பித்து" எனப்பட்டது. உய்வித்தற்குக் காரணத்தைக் குறித்து நிற்றலின், இது துறந்தார் மேலதாதல் அறியப்படும்.*

*இதனால், துறந்தோரே சிவனருட்கு உரியராதல் கூறப்பட்டது. இத்துறவு, ''தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணரும்'' (சிவஞானபோதம், அவையடக்கம்) உணர்வால் வரும் அகத்துறவாதல் அன்றி, வாளா, மனை துறந்து. (தி.4 ப.10 பா.6).*

*"நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்*
*நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்"*
*- சிவஞானசித்தி, சூ. 8.5*

*வருந்துதலாகிய புறத்துறவாகாமை அறிக.*

**1598.** **உழவன் உழவுழ வானம் வழங்க**
**உழவன் உழவினில் பூத்த குவளை**
**உழவன் உழத்தியர் கண்ணொக்கு மென்றிட்டு**
**உழவன் அதனை உழவொழிந் தானே. 6**

---

**1596.** *தெளிவுரை :- விதியைப் படைத்து அதன் வழியே ஒழுகுகின்றவர்கள் எய்தும் பயனையும் படைத்தவன் இறைவன் என்று உபதேசிக்கிறார்.*

*இதன் குறிப்புப்பொருள் : அறநெறியை வகுத்துணர்த்திய இறைவனே மறநெறியையும் வகுத்துணர்த்தினான். அதனால், அறநெறியின் வழுவியவழி மறநெறி உளதாய்த் துன்பம் விளைக்கும். ஆகவே, அறநெறியின் வழுவாது ஒழுக வல்லவர்கட்கு அந்நிலையில் மறநெறி தோன்றித் துன்பம் விளைக்க மாட்டாது.*

*குறிப்புரை :- வழியைப்படைத்தான்; அதில் நெருஞ்சில் முள்ளையும் படைத்தான்; நெறியினின்று தவறி நடப்பின் நெருஞ்சில் முள் குத்தும். ஆதலால், நெறியினின்று தவறாது நடக்க வல்லார்க்கு வழியிலுள்ள நெருஞ்சில் முள் பாயமாட்டா என்றவாறு.*

*வழியையும் அதில் முள்ளையும் படைத்து, நெறி தவறாது நடக்கின், முள் தையாது என்ற உணர்வையும் தந்தவன் இறைவன் என்பது கருத்து.*

*இம்மந்திரம் துறவதிகாரத்தது, பிறிதுமொழிதல் என்னும் அணிபட நின்றது.*

*நெறி - துறவி அகக்கரணமும் புறக்கரணமும் அடங்கி அருளுடையனாய் யாவர்க்கும் இனிய கூறித் தவத்தனாதல் வேண்டும் என்னும் நெறி.*

*நெருஞ்சில் - பழியும், பாவமும், இழிவும், நரகமுமாய் ஊறு செய்வனவாய் முள்போன்ற துன்பங்கள்.*

*துறவறநெறிக்கண் நின்றார் இம்மியளவும் வழுவா தொழுகுதல் வேண்டும் என வற்புறுத்துதலின் இம்மந்திரம் துறவின் கண்ணதாயிற்று.*

**1597.** *தெளிவுரை :- 'தீயன ஆவனவும், நல்லன ஆவனவும் இவை இவை' எனக் குருவினிடத்துக் கேட்டுணர்ந்து' தீயவற்றினின்றும் விலகி வந்து, சிவனது திருவடியைச் சேர்தற்குரிய தவத்தைச் செய்த நல்ல கோட்பாட்டையுடையேன். அதனால் நான் ஐம்புல வேடர்களை நினைத்து வந்து என்னைச் சூழ்ந்து நின்ற செயலுக்கு*

**1599.** மேற்றுறந்து அண்ணல் விளங்கொளி கூற்றுவன்
நாட்டுறந் தார்க்கவன் நண்பன் அவாவிலி
கார்த்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்த்துறந் தார்க்கே பதஞ்செய லாமே. 7

---

*யாதும் கடவே னல்லேன். உறுதியாகக் கடந்து விடுவேன் என்றது.*

***குறிப்புரை :-*** *முதலடியை ''ஐவரும்'' என்பதொழித்து மூன்றாமடிக்கு முன்னர்க் கூட்டியுரைக்க. 'குருவின்பால்' என்பது ஆற்றலால் வந்தது. ஐவர், குறிப்புருவகம், "வளைந்தது" என்பது, அச்செயற்கு நிமித்த மாயதன்மேல் நின்றது. அதுதான் துறவு வாராது பற்றினை மிகுவித்தல். "அதற்கு யாதும் கடவேனலேன்" என்றதனால், 'அவரை வென்றொழிப்பேன்' என்றதாயிற்று. ''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" (தி.5 திருச்சதகம், 12) என்றார் ஆளுடைய அடிகளும், கூடும் தவம் - கூடுதற்கு ஏதுவாகிய தவம். ஈற்றடியின் இறுதியில், 'ஆகலான்' என்பது எஞ்சி நின்றது. 'குருவின் பால் கேட்டு வந்து தவம் செய்த கொள்கையேன் ஆகலான் நான் கடவேனலேன்' என்றதனால், நிரம்பிய துறவுக்குத் தவமும், அத்தவத்திற்குக் குருவருளும் காரணமாதல் பெறப்பட்டது. இக்குரு கிரியாகுரு என்க.*

*இதனால், துறவு வருமாறு கூறப்பட்டது.*

**1598.** ***தெளிவுரை :-*** *உழவன் உழவைச் செய்தல் பொருட்டு மழை பெய்ய, அதன்பின் அவன் செய்த உழவினால் தோன்றி வளர்ந்து பூத்த குவளை மலரை அது களையாதலின் களைய வேண்டுவதாய் இருக்க, உழவன் தன் மனைவி முதலிய பெண்டிரது கண்போல உள்ளது என்று அதன்மேல் அன்புகொண்டு களையாமலே விடுகின்றான். விசுவாமித்திரர் தவம் சீர்குலைந்ததும், காசிபர் தவங்கெட்டதும் இதனால்தான் என்பதை அப்புராணங்களில் தெளியலாம்.*

***குறிப்புரை :-*** *'உலகப் பற்று அத்துணை வலிதாகின்றது' என்பது கருத்து. இங்ஙனங் கூறுதல் இலக்கிய வழக்காதலால், 'உலகப் பற்றின் வலிமையை இலக்கியங்களும் இன்னோரன்னவாற்றால் விளக்கி, அதனை விடுமாறு உணர்த்துகின்றன' என்பதும் குறிப்பாயின. "உழவு உழ" என்பது 'உழுதலைச் செய்ய' என்றவாறு. 'உழவன் உழவு' என்பது காரகப் பொருட்டாய் ஆறாவதன் தொகை. ''உழவினில்'' என ஐந்தனுருபாகிய இன் இல்லெனத் திரிந்தமை பிற்கால வழக்கு. "உழவொழிந்தான்" என்பதில், உழவு - களைதல்.*

**1600.** நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது
போகம்முட் புற்றில் பொருந்தி நிறைந்தது
ஆகம் இரண்டும் படம்விரித் தாட்டொழிந்து
ஏகப் படஞ்செய் துடம்பிட மாமே. **8**

---

*இதனால், 'கற்றோராயின் உலகப் பற்றினை விடுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது. இம்மந்திரத்தினையும் பிறிது மொழிதலாகக் கொண்டு இடர்ப்பட்டுரைப்பர்.*

**1599.** *தெளிவுரை :-* அநாதியே துறவனாய் நிற்கும் இறைவன் அத்தன்மையாலே ஒருவர் விளக்க வேண்டாது தானே விளங்கும் ஒளியாய் உள்ளான். உலகருள் கூற்றுவன் வரும் நாளையிலாராயி னார்க்கு அவன் தோழனாய் விளங்குகின்றான். ஒரு பொருளிலும் பற்று இல்லாதவனாகிய அவன் 'அஞ்ஞானம்' என்னும் இருளின் நீங்கி னவர்க்கு அவன் சிவனாய் வெளிநிற்கின்றான். அதனால், உலகப் பற்றின் நீங்கினவர்க்கே தம்மை அவனது நிலையைப் பெறுதற்குத் தக்கவராய்ச் செய்துகொள்ளுதல் கூடும்.

*குறிப்புரை :-* அவா - பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம். "மேலைத்தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்" (மூதுரை) என்பதிற்போல, "மேல்" என்பது, 'முற்காலத்தில் என்னும் பொருட்டாய், அநாதி நிலையை உணர்த்திற்று. 'துறந்த அண்ணல்' என்பதில் பெயரெச்சத்து அகரம் தொகுத்தல் பெற்றது. 'மேல் துறந்த' என உடம்பொடு புணர்த்ததனால், அதற்கு இவ்வாறு உரை கூறப்பட்டது. 'கூற்றுவன் வரும் நாள்' என்றது. 'இறப்பு' என்றவாறு, 'தவத்தால் கூற்றங் குதித்தலும் கைகூடும்' (திருக்குறள், 269) ஆதலின், கூற்றுவன் நாள் துறந்தார் தவத்தவராயினர். இத்தவம் யோகம். இது "கூற்றை யுதைக்கும் குறிப்பாதலும்", இதனை யுடையார்க்குச் சிவன் தோழனாதலும் நினைக. 'கருமை' என்பதன் திரிபாகிய 'கார்' என்பது இருளைக் குறித்தது. யோகிகட்குத் தோழனாகின்ற சிவன் ஞானிகட்கு உண்மைச் சிவனாதல் அறிக. பார் - பூமி; உலகம் இஃது இதன்மேற் செய்யப்படும் பற்றின்மேல் நின்றது. கார்த்துறந்தார், பார்த்துறந்தார் என்பன ஐந்தாவதன் தொகை. பதம் - பக்குவம். இது, கூற்றுவன் நாள் துறத்தற்கும், சிவனை நண்பனாகவும், சிவனாகவும் பெறுதற்கும் ஏற்கு மாற்றால் பல திறத்ததாம். 'இவை அனைத்திற்கும் துறவே காரணம்' என்றவாறு. இதனுள் இன எதுகை, மூன்றாமெழுத்தெதுகை வந்தன.

*இதனால், துறவே வீட்டு நெறியின் பல நிலைகட்கும் முதலாதல் கூறப்பட்டது.*

**1600. தெளிவுரை :-** *(இது பிசிச்செய்யுள்) நாகம் - உயிர். ஐந்து படம் - ஐம்பொறிகள். போகம் - உணவு, நான்கு உணவு. அந்தக் கரணம் நான்கினும் நால்வகையாய்ப் புலப்படும் பொருள். முட்புற்று, துன்பம் நிறைந்த உடல் நிறைந்தது, மனநிறைவு பெற்றிருந்தது. ஆகம் - உடம்பு. பாம்பு தோலுரிப்பது ஆதலால், இரண்டுடம்பு உடையதாம். அவை இங்குத் தூலமும், சூக்குமமாகிய இரண்டுடம்புகளைக் குறித்தன. அவை படம் விரித்து ஆடல், ஐம்பொறிகளின்வழி ஐம்புலன்களையும் பொதுப்படக் கவர்தலும், பின் சிறப்பு வகையில் உணர்ந்து திரிபு எய்தலுமாம். அவ் ஆடலை ஒழிதல் ஐம்புல அவாவை அறுத்தலாம். ஐந்து படங்கள் இன்றி ஒருபடத்தையே எடுத்தலாவது, மெய்ப்பொருள் ஒன்றையே நோக்குதல். உடம்பே இடமாதல் - புற்றைவிட்டு நீங்கி அருள் தாரகமாக நிற்றல். உயிர் தன் சேட்டையொழித்து அடங்கியிருத்தலே துறவு.*

**குறிப்புரை :-** *'நாகம் ஒன்று; அதற்குப் படம் ஐந்து; உணவு நான்காய் உள்ளது; முட்புற்றிலே பொருந்தி நிறைவு பெற்றிருந்தது. ஆயினும், பின்பு அது தனக்கு இயல்பாய் உள்ள இரண்டு உடம்புகளோடும் முன் சொன்ன ஐந்து படங்களையும் விரித்து ஆடுதலை ஒழிந்து ஒரு படத்தை எடுத்து வேறோர் உடம்பிடமாக நின்றது' எனப் பிசி வகைக்கு வினைமுடிவு காண்க.*

*'பசுத்துவம் உடைய உயிர் ஐம்பொறிகளின்வழி அமைந்து துன்பம் நிறைந்த உடம்பினுள் தங்கி வினைப்பயன்களை நுகர்ந்து களித்திருந்தது; ஆயினும், அஃது ஐம்புல அவாவை நீத்த பொழுது திருவருள் நாட்டம் ஒன்றே உடையதாய் அத்திருவருளே தாரகமாக நின்று இன்புற்றது' என்பது இதனுட் கூறப்பட்ட பொருள்.*

*விடயசுகங்களில் செல்லுகின்ற மனத்தை ஒருவழிப்படுத்திச் சிவத்திடம் செலுத்துவதே துறவு என்பதாம்.*

*நாகம் என்ற உயிரை, படம் என்றது கண், காது முதலிய பொறிகள் ஐந்தையும். பொறிகளைக் கருவியாகக் கொண்டு விஷயங்களைக் கண்டுங்கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியும் அகக்கருவிகள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆதலின், பொருள்களைச் சென்று பற்றுதலானும் புத்தி பண்ணுதலானும் சிந்தித்தலானும் அடைவேன் என அகங்கரித்து எழுதலானும் விளையும் நுகர்ச்சி நான்காயின. போகம் நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு என்பாரும் உளர். அறம் செயலும், பொருள்*

**1601.** அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்
இவன்றான் எனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனு மாகும்
நயன்றான் வரும்வழி நாமறி யோமே. **9**

---

*போகவாயிலுமாய், நேரே போக மாகாமையானும், வீடு கருவி கரணங்களால் அனுபவிக்க முடியாததாகலானும் அங்ஙனம் கூறுதல் ஏலாமை காண்க.*

*உட்புற்றில் என்பதைப் புற்றினுள் என மாறுக. உயிர் தன் இடம் முழுதும் மணியின்கண் ஒளியும் பாலின்கட்சுவையும் போல எங்குமாய் நிற்குமாதலின் "பொருந்தி நிறைந்தது" என்றார்.*

*ஆகம் இரண்டும் - தூல உடம்பும், சூக்கும உடம்புமாகிய இரண்டிலும் என ஏழாவது விரிக்க.*

*படம்விரித்து - ஆன்மா தன் சேட்டைகளைப் பரப்பி; என்றது அறிந்தும் நுகர்ந்தும் வியாபரித்தலை.*

*ஏகப்படம் செய்து - பலபொருள்களைச் சென்று பற்றி அலைந்த நிலைமாறி, ஒன்றாகச் சூக்குமதேகத்துள் உயிருக்கு உயிராக இருக்கும் சிவத்தை நாடுதலாகிய ஒரு படத்தை மட்டும் பெற்று என்க. சூக்குமதேகத்தும் தனித்து நில்லாது, இப்பருவுடம்பினுட்பட்டுக் கிடக்கும் ஆதலின், உடம்பு இடமாமே என்றார் என்க.*

***1601. தெளிவுரை :-** துறந்தவரது குடிக்குத் தானே முதல் என நிற்கின்ற சிவபெருமான், 'இன்ன வகையினன்' என ஒருவராலும் இனங் கண்டு கூறற்கு எளியனாய் நிற்பானல்லன். அதனால், அவன் அளவற்ற உயிர்களில் நிறைந்து அவையேயாயும் நிற்பன்; அவனது அருள் எவ்வாற்றால்வரும் என்பதையும் நாம் அறியமாட்டோம்.*

***குறிப்புரை :-** குடிக்கு முதலாதலாவது, "குடிமுழுதாண்டு, வாழ்வற வாழ்வித்து" (தி.8 பிடித்த பத்து, 1) அதனை 'சிவக்குடி' என யாவரும் கூற வைத்தல். 'சிவன் யாதொரு கூற்றினும் படாதவன்' என்பதை, "எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ" (தி.3 ப.54 பா.3) என்பது முதலியவற்றான் அறிக. "சிவன்தான்" என்பதில் "தான்" என்பது தேற்றப்பொருட்டாய், அனுவதித்தலை உணர்த்திற்று. 'உயிர்கள் அளவற்றன ஆதலின், அவற்றிற்கு அவன் அருளும் முறைமைகளும் அளவில்லனவாய், நம்மால் அறியவாரா' என்பார்.*

**1602.** தூம்பு திறந்தன்ன ஒன்பது வாய்தலும்
ஆம்பற் குழலியி னகஞ்சுளிப் பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலில் பூக்கின்ற வாறே. **10**

---

*அவன் அளவற்ற உயிர்களில் அவையேயாய்க் கலந்துநிற்றலை எடுத்தோதினார். இவ்விடத்து, 'சிவன் தாள்' எனச் சத்திமேல் வைத்து ஓதுதற்கு இயைபின்மையின், அது பாடமாகாமை அறிக. நயம், 'நயன்' எனப் போலியாயிற்று. 'அருள்' என்பது இதன் பொருள். 'சிவனது அருள் உயிர்கட்கு வருமாறு இவையே' என வரையறுக்க ஒண்ணாமையை,*

> *"ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்*
> *கேட்பான் புகல்அள வில்லை கிளக்க வேண்டா"*
>
> *- தி.3, ப.54 பா.4*

*எனத் திருஞானசம்பந்தரும் அருளிச்செய்தார். இங்ஙனம் கூறவே, 'இல்லம் துறந்து, வேடம்பூண்டு ஓரிடத்தில் நில்லாது செல்வோரே துறந்தாராவர்' எனக்கொண்டு, 'அவ்வாறில்லாத சிலரும் சிவனது அருள்பெற்றமை கேட்கப்படுதல் என்னை' என ஐயுற்றவர்க்கு, 'புறத்துறவு இல்லாது அகத்துறவே உளராய்ப் பல்வேறு நிலையில் நிற்பார்க்கும் சிவன் பல்வேறு வகையாய் அருள்புரிதல் உண்டு; ஆயினும் அதுபற்றறுதல் இன்றியாகாது' என ஐயம் அறுத்தவாறாயிற்று. 'பற்றறாதவழிச் சிவனருள் கூடாது' என்றற்கே முதற்கண், ''அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரான்'' என அருளிச்செய்தார்.*

> *.................. அகன்ஞாலத் தகத்துள் தோன்றி*
> *வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு*
> *வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்*
> *பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றி*
>
> *- தி.6, ப.1 பா.5*

*என்றது, நிறைவான துறவுநிலையை உணர்த்தியருளியவாறு. இதனுள் உயிரெதுகை வந்தது.*

*இதனால், திருவருளுக்குரிய துறவுநிலை தோற்றத்தால் பல வகையினதாதல் கூறப்பட்டது.*

**1602. தெளிவுரை :-** *ஓர் ஆம்பற் குழலினுள்ளே, அங்கணத்தை (சலதாரையைத்) திறந்தாற்போலக் காணப்படும் ஒன்பது புழைகளும் அடங்கி அடைபட்டன. அதனால், மாலுமி வெளியே பார்ப்பதற்கு வேறு வழியில்லாமல், வேம்பினால் ஆகிய தன் மரக்கலத்தின்மேலே ஏறியபொழுது பாய்மரத்தைச் சுற்றிய தாமரைக்கொடி ஒன்று அம்மரக்கலத்தின் கூரையில் பூத்தலைக் கண்டான்.*

**குறிப்புரை :-** *தூம்பு - குழாய். "ஆம்பற் குழல்" என்பதும், "கூம்பு" என்பதும் முதுகந்தண்டினையும், 'ஒன்பது புழைகள்' என்பது உடம்பின் நவத் துவாரங்களையும், "மீகாமன்" என்பது உடம்பை நடத்தும் உயிரையும், 'தாமரைக்கொடி' என்பது முதுகந்தண்டைச் சூழ்ந்துசெல்லும் சுழுமுனா நாடியையும், 'அதன்மலர்' என்பது ஆயிரஇதழ் மலரையும் கொள்ள நிற்றலின், இதுவும் பிசிச்செய்யுளாம். 'பிராணாயாமத்தால் பிராணன் சுழுமுனையடியில் கும்பிக்கப்பட்ட பின் உடம்பின் நவத் துவாரங்களாலும் காற்றும், அதன்வழி மன உணர்வும் புறப்படா தொழிய அவ்வுணர்வு ஆறு ஆதாரங்களையும் கடந்து சென்று, ஆயிர இதழில் சத்தியைக் கண்டது' என்பது இம்மந்திரத்தாற் குறிக்கப்பட்ட பொருள். இந்நிலை துறவர்க்கல்லது ஆகாது' என்பது உணர்த்தற் பொருட்டு இஃது இவ்வதிகாரத்துட் கூறப்பட்டது.*

*"பட்டது" என்பது பன்மை ஒருமை மயக்கம். "வேம்பு" என்பது கருவியாகுபெயராய், 'அம்மரத்தாற் செய்யப்பட்ட மரக்கலம்' எனப் பொருள்தந்தது. 'உடல் வெறுக்கத்தக்கது' என்பதை உணர்த்த, சந்தனத்தாலாகிய மரக்கலம்' என்னாமல், 'வேம்பினால் ஆகிய மரக்கலம்' என்றார்.*

*இதனால், துறவறம் யோகத்தைப் பயந்து, அது வழியாக ஞானத்தையும், பின் வீட்டையும் தருதல் கூறப்பட்டது.*

## 5. தவம்

*தவமாவது, மனம் பொறிவழிப் போகாமைப் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்குதலும், வெயினிலை நிற்றலும், நீர்நிலை நிற்றலும் முதலாயின. இதனை 'நீர்பலகால் மூழ்கி, நிலத்தசைஇத் தோலுடீஇச், சோர்சடை தாழச் சுடர் ஓம்பி - ஊரடையார், கானகத்து கொண்டு கடவுள் விருந்தோம்பல், வானகத்து உய்க்கும் வழி' என்னும் வெண்பாவானும் உணர்க. இவை ஏனையோர் கூறும் தவமென ஒழிக.*

*ஈண்டுத் தவம் என்றது சிவபுண்ணியங்களாகிற சரியை கிரியா யோகங்களை. இவையே ஞானவாயிலாக மோட்சத்தைக் கொடுப்பன. திருமூலதேவநாயனாரும் மன ஒடுக்கமே தவமென்றும், தவமும் திருவருட் சார்புடையார்க்கே பயன்தரும் என்றும், உண்மைத் தவமுடையாரை ஒருவராலும் பேதிக்க ஒண்ணாது என்றும், சிவனை எளிதின் எய்தும் உபாயமாம் என்றும் உரைப்பர்.*

**1603.** **ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்**
**நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை**
**இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை**
**படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே. 1**

---

**1603.** *தெளிவுரை :- உலகப் பொருள்கள் மேற்பரந்து செல்லுதலையொழிந்து இறைவனது திருவடிக்கீழே சென்று ஒடுங்கி நிலைபெற்ற உயர்ந்தோரது உள்ளங்கள் யாதொன்றற்கும் அஞ்சுதல் இல்லை; அவர்கள்பால் கூற்றுவன் செல்லுதலும் இல்லை; எல்லாப் பற்றுக்களையும் முற்றும் விடுத்த அவர்கட்கு வரக்கடவதொரு துன்பமும் இல்லை; இரவு பகல் முதலிய கால வேறுபாடுகள் இல்லை; உலகத்தில் விளைவதொரு பயனும் இல்லை.*

*குறிப்புரை :- 'உலகப் பற்றினின்றும் மீட்ட உள்ளத்தைப் பின் இறைவன் திருவடிக்கீழே ஒடுங்கி நிலைநிற்கச் செய்யும் முயற்சியே தவம்' என்பதனை, "பற்றுவிட்டார்க்கு" எனவும், "ஒடுங்கி நிலை பெற்ற உள்ளம்" எனவும் உடம்பொடு புணர்த்து, உணர்த்தினார். இதனானே மேலையதிகாரத்தோடு இதற்கு உளதாய இயைபு இனிது விளங்கும். உள்ளத்தைப் பற்றுக்களினின்றும் மீட்டு இறைவன் திருவடிக்கீழே ஒடுங்கி நிற்கச்செய்யும் முயற்சி, தோன்றி நிகழும் காலத்தே 'தவம்' எனவும், இனிது முற்றிய காலத்தே 'ஞானம்' எனவும் நிற்கும். தவநிலையையே சிவநூல்கள், 'சரியை, கிரியை, யோகம்'*

என மூன்றாகவும், 'சிவ தன்மம், சிவ யோகம்' என வொராற்றால் இரண்டாகவும் பகுத்துக்கூறுதல் வெளிப்படை. அவற்றின் இயல்பை யெல்லாம் நாயனார் முன்னைத் தந்திரத்தில் இனிது விளங்க அருளிச் செய்தார். இங்கு அவை சிவகுருவைத் தலைப்பட வேண்டினார்க்கு இன்றியமையாச் சிறப்பின ஆதலையே குறிக்கின்றார்.

"நடுங்குவது" என்பது தொழிற்பெயராய் நின்றது. "இராப்பகல்" என்றது உபலக்கணம். 'நடுக்கமும், நமனும் இல்லாமை ஒடுங்கி நிலை பெற்றமையால்' என்பதும், 'இடும்பை முதலியன இல்லாமை பற்று விட்டமையால்' என்பதும் குறிப்பால் தோன்றவைத்தவாறு உணர்க.

இவற்றை,

சுண்ணவெண் சந்தனச் சாந்தும்....
............. உடையார் ஒருவர் தமர்நாம்;
அஞ்சுவ தியாதொன்று மில்லை;
அஞ்ச வருவதும் இல்லை - தி.4, ப.2 பா.1-10

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் இருசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டுனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே. - தி.4, ப.112 பா.8

"நாமார்க்குங் குடியல்லோம்; நமனை யஞ்சோம்" (தி.6 ப.93 பா.1) என்றாற் போலும் அநுபவமொழிகளான் அறிக. இம்மந்திரத்தின் ஈற்றடி;

'படும்பழி பாவம் பயமில்லை தானே' எனவும், 'கடும்பசியில்லை கற்றுணர்ந்தார்க்கே' எனவும் பாடம் வேறு வேறாகவும் ஓதப் படுகின்றது.

இதனால், 'தவமாவது இது' என்பதும் அதன் பயனும் கூறப்பட்டன.

**1604. தெளிவுரை :– நமது அரிய உயிருணர்வும், அவ்வுணர்விற்கு இன்றியமையாததாய் உள்ள உலகம் உண்டாகி நிற்பதும், அங்ஙனம்**

**1604.** எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமும்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருள் பெற்றவர்க் கல்லாது
இம்மா தவத்தின் இயல்பறி யாரே. **2**

**1605.** பிறப்பறி யார்பல் பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பில ராகிய மாதவம் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. **3**

---

*நிற்குங்கால் அதன்கண் நிகழற்பாலதாய செவ்விய பெரிய தவச் செயலின் சிறப்பும் ஆகிய யாவும் இறைவன் திருவருளை அடிநிலையாகக் கொண்டனவேயாம். அதனால், 'இத்தவத்தின் இயல்புஇது' என்பதையும் அவ்வருளைப் பெற்றவரல்லது பிறர் அறிய மாட்டார்.*

***குறிப்புரை :-*** *அம்மான் - தலைவன். "உயிர்" என்றது அதன் உணர்வையேயாதல் அறிக. "தோற்றம்" என்றது, அதன்பின்னதாகிய நிலையையும் உணர நின்றது. செவ்விய பெரிய தவமாவது வீடுபயக்கும் தவம். அஃது இறைவனை வழிபடுதலேயாம். 'உண்மைத் தவமாவது இறை வழிபாடே என்பதை உணர்தலும் திருவருளின்றியாகாது' என்பது உணர்த்துகின்றவர், அதற்கு ஏதுவாக அனைத்தும் திருவருளை முதலாகக் கொண்டவற்றை முன்னர் உணர்த்தினார். திருவருளை முதலாகக் கொண்டவற்றை ஒற்றுமை பற்றி, "திருவருள்" என்றே கூறினார். 'அது பெற்றவர்க் கல்லாது' என வேறு தொடராக்கி யுரைக்க. திருவருள் பெறாதவர் பிறவற்றையே 'தவம்' என மயங்கி அல்லலுறுதலை நினைக.*

*இதனால், உண்மைத் தவம் உணர்தற்கரிதாதல் கூறப்பட்டது.*

**1605.** ***தெளிவுரை :-*** *உலகப் பித்துப் பலவற்றையும் கொண்டு உழலுகின்ற மக்கள் பிறவித் துன்பத்தைச் சிறிதும் எண்ணுதல் இல்லை. (அதனால் அவர் அதனை நீக்கிக்கொள்ள முயல்வதும் இல்லை) வீடு பேற்றோடு தாம் விரும்பும் இம்மை மறுமைச் செல்வங்களையும் பெறுவார். இறைவனை ஒருஞான்றும் மறவாது பெரிய தவச்செயலைச் செய்பவரே யாதலின், அவரே பிறவித் துன்பத்தை நீக்கிக்கொள்ளும் பெருமையைப் பெற்றாருமாவர்.*

***குறிப்புரை :-*** *இரண்டிடத்தும், "பிறப்பு" என்பது அதனால், விளையும் துன்பத்தைக் குறித்தது. 'பித்து' என்பது 'பிச்சு' எனப் போலி*

**1606.** இருந்து வருந்தி எழிற்றவம் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
இருந்திந் திரனே எவரே வரினும்
திருந்தும்தம் சிந்தை சிவனவன் பாலே. 4

---

*யாயிற்று. சிறப்பு - வீடு. மறத்தற்குச் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. 'மாதவமாவது இது' என்பது மேலே சொல்லப்பட்டது.*

*இதனால், 'தவம் எல்லாப் பயனையும் தரும்' என்பதும், அதனை யொழிதல் மயக்கத்தினால் என்பதும் கூறப்பட்டன.*

**1606.** *தெளிவுரை :- பொறி புலன்களை அடக்கியிருந்து, உண்டி சுருக்கல் முதலியவற்றால் மெய்வருந்தி உயர்ந்த தவத்தைச் செய்து நிற்கும் பெரியோரை, மனம் கலங்கச் செய்வதற்கென்றே தமது இருப்பை வைத்து, இந்திரனேயாக, ஏனை எத்தேவரேயாக எதிர் வரினும் அப் பெரியோர்க்கு அவர்தம் உள்ளம் சிவனிடத்தே அசையாது அழுந்தி நிற்கும்.*

*குறிப்புரை :- 'அத்தகையோர்க்கே தவம் முற்றுவது' என்றவாறு.*

*தவமும் தவமுடையார்க் காகும்; அவம்அதனை*
*அஃதிலார் மேற்கொள் வது. - திருக்குறள், 262*

*எனத் திருவள்ளுவரும் கூறினாராகலின், இப்பெருந்தன்மையாளர், முற்பிறப்பில் தவம்செய்து பயின்றவர் என்க. தவத்தில் நின்றோர் பலரை இந்திரன், மாயோன் முதலியோர் மயக்கத்துட்படுத்து அவரது தவங்களை நிலைகுலையச் செய்தமை புராண இதிகாசங்களுட் கேட்கப்படுதலை உட்கொண்டு இவ்வாறு கூறினாராயினும், 'தவத்தை இடையூறுவிப்பது உண்மையில் அவரது முன்னை வினையே' என்பதும், 'அத்தன்மையவானவினை, பல பிறப்புக்களில் முதிர்ந்து வரும் தவத்தின்முன் தன் வலிமைகெட்டொழியும்' என்பதுமே கருத்தென்க.*

*பேதிக்க - மனமாறுபடுத்த. சிவபூசைசெய்த திரிபுராரிகள் மனத்தைத் திருமால் புத்தாவதாரம் கொண்டு சென்று பேதித்ததுபோலத் தவத்தைக்கெடுக்க என்க.*

*பௌத்த சமண மதங்களிலும் உலகில் யாரேனும் செயற்கரிய தவம் செய்யின் இந்திரன், அவர்கள் தவத்தைக் கெடுப்பன் என்ற வரலாறு உண்மை காண்க. நகுடன் தவமும், விசுவாமித்திரன் தவமும்*

**1607.** கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் னிறத்தன்
அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. 5

---

*கெட்டது இந்திரனால் என்க. அங்ஙனம் சிவபுண்ணிய சீலர்களாகிய தவத்தோரைப் பேதிக்க அவனாலும் முடியாது; வேறு எவராலும் முடியாது என்பதாம்.*

*அணையிடப் பெருகும் ஆறுபோல, இடையூறு மிக அவர்கள் சிந்தை சிவன்பால் திருந்தும்; சிக்கெனப் பற்றி நிற்கும் என்பதாம்.*

*இந்திரன் முதலிய எவராலும் தவத்தோன் தவத்தைக் கெடுத்தலியலாது என்றலின் அதிகார இயைபு காண்க.*

*இதனால், தவம் பல பிறவிகளில் தொடர்ந்து நிகழ்ந்தே முற்றுதல் கூறப்பட்டது.*

1607. ***தெளிவுரை :-*** *அறிவரால் சிறிதும் தாழ்த்தலின்றி மிகவிரைந்து சார்ந்து தொழப்படுவோனாகிய சிவன், கண்ணுக்கும் புலனாகாது மறைந்திருப்போனாயினும் சிலருக்கு வெளிநிற்பவனா கின்றான். அச்சிலராவார் அரிய தவத்தவரே யாகலான், அவருக்கல்லது அவன் அணுகலாகாதவனாம்.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, அத்தவத்தையே ஒருதலையாகச் செய்க' என்பது குறிப்பெச்சம். இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி, அதன் பின் ஈற்றடியைக் கூட்டி, அதன்பின் முதலடியை, "கண்ணுக்கும்" என்னும் உம்மை சிறப்பு பலனைச் சென்று பற்றுதல் கண்ணுக்குள்ள சிறப்பாம்.*

*எல்லாவுயிர்களிடத்தும் ஒன்றாயிருந்து அவற்றை இயக்கியும் அவற்றால் அறியப்படானாதலின் "கரந்தும்" என்றும், பரிபாகமுற்ற ஆன்மாக்களிடம் மணியின் ஒளியும், விளக்கின் ஒளியும் போல வெளிப்பட்டுத் தோன்றுவன் ஆதலின் "கரந்திலன்" என்றும் கூறினர்.*

*கண், மாயேயமான பொருள்களையே காணுகின்ற இயல்புடையது. இயல்பாக அறியும் அறிவற்ற கருவி. உயிர் மனத்தின் வழியாகக் கண்ணைக் காரியப்படுத்த பொருள்களைச் சென்று பற்றி அறியும் தன்மையது ஆதலின் ஞானசொரூபியாகிய சிவன் அறியப்படான் என்பது.*

*பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனியாதலின் "பசும்பொன்னிறத்தன்" என்றார். பசும்பொன் - மாற்றுயர்ந்த*

**1608.** அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்
பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே
அமைத்ததோர் ஞானமும் ஆத்தமும் நோக்கி
இமைத்தழி யாதிருப் பார்தவத் தோரே. **6**

---

*பசுமையான பொன்.*

*எளிதில் இயற்றுதற்கரிய தவம் என்பார் "அருந்தவம்" என்றார். அணுகலும் ஆகான் என்றது அணுக முடியாதபோது அடைவது ஒருக்காலும் முடியாது என்ற அருமை தோன்ற நின்றது.*

*இதனால், தவமே இறைவனைக் காட்டுவதாதல் கூறப்பட்டது.*

*இதன்பின் பதிப்புக்களில் உள்ள, "பின்னெய்த வைத்ததோர்" என்னும் மந்திரம் மேல், சிவகுரு தரிசன அதிகாரத்தில் பாடல் எண் 1566 ஆக வந்தது.*

***1608. தெளிவுரை :-** உலகில் நுண்ணறிவுமிக்க அமைச்சராய் விளங்கினோரும், போரில் வலிமிக்கு விளங்கிய யானைகளது கூட்டமும், ஆணையால் உயர்ந்து அரசராய்ப் பொலிந்தோரும் பிறர்மேல் பகைத்துச் சென்ற போரில் இறந்தாராய் ஒழிய, அவர்கள் நடுவிலே, தவத்தவராயினார், சிவன் உயிர்கட்குப் பொருந்த வைத்துச் சொல்லிய ஒப்பற்ற உண்மை ஞானத்தையும், அதனால் அடையப்படும் வீடுபேறாகிய உறுதிப்பொருளையுமே பொருளாக நோக்கி, கண் இமைத்தலும், அழிதலும், இல்லாத அமரராய் விளங்கினார்.*

***குறிப்புரை :-** உலகறிய வாழ்ந்த அரசும் அழிய, தவமுடையார் விழிப்பாய் அறிவையும் ஆப்தத்தையும் நோக்கியழியாதிருந்தார் என்பது கருத்து.*

*நடுவே அமைத்ததோர் ஞானம் - நடுநாடியாகிய சுழுமுனையில் நிறுத்தப்பெற்றதாகிய தியானத்தால் விளைந்த சிவஞானம். ஆத்தம் - அதனால் பிறந்த, இதுதான் அடையத்தக்கது விருப்பமானது என்ற எண்ணம்.*

*இமைத்து - கண்கொட்டி, சிமிழ்த்து, கண்கள் இமைத்தலும் உறக்கமும் தவமிலார்செயல். இமையாமலும் உறங்காமலும் விழித்தகண் குருடாய் விளங்குதல் தவத்தோர் இயல்பு.*

*இங்ஙனம் தவத்தாரியல்பு உணர்த்துதலின் இம்மந்திரம்*

**1609.** சாத்திரம் ஓதும் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தஅப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே. 7

---

*இவ்வதிகாரத்திற்கு ஏற்றதாதல் காண்க.*

**1609. *தெளிவுரை :–*** *'நூல்களை ஓதுவதே பெருமை' எனக் கருதும் கருத்தை விடுத்து, நீவிர் ஒரு மாத்திரைக் காலமாயினும் அறிவை அகமுகப்படுத்தி அறிவினுள் நிற்கும் அறிவை நோக்குங்கள்; அந்நோக்கம் பச்சை மரத்தில் அறையப்பட்ட ஆணி அதனுள் நன்கு பதிந்தாற்போல நும் அறிவினுள்ளே நன்கு பதிய தொன்றுதொட்டு உடம்பைப் பிணித்து வருகின்ற பிறப்புச் சேயதாக உம்மை விட்டு ஓடிவிடும். சாத்திரம் - செயல்முறையாகிய கிரியைகளையும், வாதப்பிரதிவாதமாகிய அகங்காரத்தையும் விளைக்கும் பாசஞானமாதலின் அவற்றைப் படிப்பதால் மனம் அடங்குவதில்லை.*

***குறிப்புரை :–*** *"சதுர்" என்றது, ஓதுவாரது கருத்தினைக் கொண்டு கூறியது. கல்விக்குப் பயன் ஒழுக்கமேயாதலின், அஃது இல்லாத கல்வியை விடுக என்றார். மறித்தல் - வெளிச்செல்லுதலைத் தடுத்தல். உள் - அறிவினுள். நோக்குதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. 'போல்வதாக' எனப்பொருள் தரும் 'போல' என்னும் செயவெனெச்சத்து அகரம் தொகுத்தல் பெற்றது. இவ்வாறு உரையாது, 'அகலவிட்டோட்டுமே' எனப்பாடம் ஓதிக்கொள்ளலுமாம். 'தொன்று தொட்டு விடாது வரும் பிறவிக்குக் காரணம் அறிவைப் பண்டே பற்றியுள்ள இருள்மலமாகலின், அஃது அப்பார்வையால் அகலப் பிறவியும் அகலும்' என்றவாறு.*

*இதனால், தவம் மலத்தை நீக்குதல் வாயிலாகப் பிறவியை அறுத்தல் கூறப்பட்டது.*

## 6. தவ தூடணம்

***(தவத்தை நிந்தித்தல்)***

*சிவகுருவின் அருளுக்குத் தவம் இன்றியமையாததாதலைக் கூறிய நாயனார், 'தவத்தையே பயன் எனக்கொள்ளாது சிவகுருவின் அருளையே பயனாகக் கொள்ளுதலும், அவ்வருள் கிடைத்தபின் அதனையே கடைபிடியாகக் கொள்ளுதலும் வேண்டும்' எனவும், உயர்தவமல்லாத தவமும், உணர்வொடு கூடாது வேடமாத்திரமாம் போலித்தவமும் தவமாகா' எனவும் மந்திரங்களாற் கூறுகின்றார். அதனால் இவ்வதிகாரம் 'தவதூடணம்' என்பதாயிற்று. 'தவ நிந்தை' என்பதும் பாடம். ஞானம் பெற, தவம் வேண்டும். அதுபெற்றபின், வேறெதுவும் வேண்டாம். ஆற்றைக் கடந்தபின் கலம் தேவையில்லாதது போல உயிருக்கு உயிராய் சிவம் விளங்குதலை அறியின் தவம் வேண்டாம்.*

**1610.** **தவம்வேண்டும் ஞானந் தலைப்பட வேண்டில்**
**தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்**
**தவம்வேண்டாம் அச்சக சன்மார்க்கத் தோர்க்குத்**
**தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே.** **1**

---

**1610.** *தெளிவுரை :-* ஞானத்தைப் பெறுதற்பொருட்டே தவம் வேண்டப்படுகின்றதாதலின், அந்த ஞானப்பேறு கிடைத்துவிடின், அதன்பின் தவம் வேண்டாததாகும். ஆகவே, சிவயோக சிவபோக நிலையை எய்தினார்க்குத் தவம் கடப்பாடன்றாம். அதனால் சிலவிடத்து, 'தவம் வேண்டா' எனச் சொல்லப்படும் சொல்லினது பொருளைப் பலர் அறியமாட்டார்.

*குறிப்புரை :-* "சமாதி" என்றது பேற்றை. "அச் சகமார்க்கம்" எனச் சிறப்பித்துக் கூறினமையின், அது ஞானகுருவின் அருள்பெற்றபின் நிற்கும் சிவயோகமேயாயிற்று. இதற்குமுன் "வேண்டா" என்றது, "நியதமன்று" என்றவாறு. அஃதாவது சிவயோக சிவபோக நிலையிற் சென்றார்க்கு உலகியல் உணர்வு தோன்றாது மறைதலின், அவரது தவச் செயல்களும் ''உறங்கினோன்கை வெறும்பாக்கெனத் (சங்கற்ப நிராகரணம், மாயாவாத நிராகரணம்) தாமே தவிரு மாயின், அஃது அவர்க்குக் குற்றாமாகாது என்பதாம். அங்ஙனமாகவே, 'அத்தகையோர் அந்நிலைகளில் நீங்காது நிற்கவே முயலல் வேண்டுமன்றி, மீளத் தவநிலையில் நிற்க முயலுதல் கூடாது'

**1611.** ஓதலும் வேண்டா உயிர்க்குயி ருள்ளுற்றால்
காதலும் வேண்டாமெய்க் காயம் இடங்கண்டால்
சாதலும் வேண்டா சமாதிகை கூடினால்
போதலும் வேண்டா புலன்வழி போகார்க்கே. **2**

---

*என்பதும், 'மீட்சி தானே உளதாய பொழுதே மீள முன்போல உலகியல் வந்து சூழாதவாறு தவ நிலையில் நிற்றல் வேண்டும்' என்பதும் பெறப்பட்டன. இவையெல்லாம் குருவருள் பெற்றார்க்கன்றி அறியலாகாமையின், "தவம் வேண்டா மாற்றந் தனையறியாரே" எனக்கூறி, 'அதனைக் குருமுகமாக அறிந்துகொள்க' எனக் குறிப்பால் முடித்தார். இறுதியிலுள்ள "தவம் வேண்டா" என்னும் தொடர் தன்னையே குறித்து நின்றது.*

*இதனால், தவம் ஞானத்திற்குச் சாதனமாவதன்றிச் சாத்திய மாகாமை கூறி, அதனது நிலை இனிது விளக்கப்பட்டது.*

**1611.** *தெளிவுரை :-* அறிவுக்கு அறிவாய் உள்ள பேரறிவாகிய சிவத்தைத் தன் அறிவினுள்ளே ஒருவன் தலைப்பட்டு விடுவானாயின் அதன்பின் அவன் ஞானநூல்களை ஓதவேண்டுவதில்லை. 'பர காயம்' எனப்படும் திருவருளையே ஒருவன் தனக்கு நிலைக்களமாகக் கண்டுவிட்டால், பின்பு அவன் தான் அதனின், வேறாய் நின்று அதனைப் பெற அவாவ வேண்டுவதில்லை. திருவருள் கண்ணாகச் சிவத்தை அறிந்து அதிலே அழுந்தி நிற்கும் நிலை ஒருவனுக்கு இப்பொழுது கூடுமாயின், அவன் இவ்வுடல் வீழ்ந்தொழிய வேண்டும் என இதனை வெறுக்க வேண்டுவதில்லை. சிவயோக நிலையினின்று மீளுதல் இல்லாதார்க்குப் புலன்கள் வந்து பற்றும் வழிகளாகிய பொறிகள் செயற்படாது கெட வேண்டுவதில்லை.

*குறிப்புரை :-* உயிர்க்குயிர் - உணருந்தன்மைத்தாகிய உயிர்க்கு உணர்வை விளக்கம் செய்ய இறைவன் உயிரையும் இயக்கும் உயிராக விளங்குவன். அத்தகைய விளக்கத்தைப்பெறின் என்பார் உயிர்க்குயிர் உள்ளுற்றால் என்றருளினர்.

காதல் - இதனைப் பெற்றாலன்றிப் பொருந்தினாலன்றி உயிர் வாழமுடியாது என்னும் இன்றியமையாத ஆசை, "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை" என்னும் தமிழ்மறையும் ஈண்டு இணைத்து எண்ணுதற்கு உரியது.

மெய்க்காயம் - மெய் என்னும் பெயருடைய உடல். 'ஊனுடம்பு

ஆலயம்' என்பார் ஆகலின், உடலை இடமாக இறைவன் கொள்ளின் அன்புசெய்ய வேண்டாம் என்றதாம். அன்பு செய்தலின் பயன் 'உள்ளம் உமக்கே இடமாக வைத்தேன்' என்பது போலச் சிவன் எழுந்தருளியிருக்கும் கோயிலாக உடலை ஆக்குதல். ஐயன் எய்தப்பெறின் அதற்குச் சாதனமான அன்பு செய்தல் வேண்டுவதில்லை என்றதாம். சாத்தியத்தின் பின் சாதனம் எதற்கு என்பது. இடம் கண்டால் - இடமாகச் செய்யின் என ஆன்மாவின் வினையாக்கலுமாம் அங்ஙனம் செய்தற்கும் ஆன்மாவுக்குச் சுதந்திரம் இன்றாதலின் இறைவன் இடமாகச்செய்யின் என இறைவன் வினையாக்கிப் பொருள் கூறப்பட்டது.

சமாதி - மூலாதாரத்துள்ள குண்டலினியோடு பிராணனும் மேலே சென்று புருவமத்தியில் ஒளி விட்டு எரியும் சோதியுடன் கலந்து அதுவே தானாய் இருக்கும் அசைவற்ற நிலை.

'கற்பனை யற்றுக் கனல்வழியே சென்று
சிற்பனை யெல்லாம் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்திண் சமாதியே'

'.......... அருத்தி யொடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே'

என்பன போன்ற திருமந்திரங்களால் முன் விளக்கப்பட்டமை காண்க.

கைகூடுதல் - சித்தியாதல். சமாதி சிவத்தோடு அழுந்திருக்கும் நிலையாதலின், அந்நிலை ஒருநாள் இருநாள் பயிற்சியின் வராது. பலநாள் நழுவி நழுவி ஏறி ஏறிச் சென்று நிலைபெறுத்தி எய்த வேண்டியது ஒன்றாகலின் 'கைகூடினால்' எனச் செயின் என்னும் வாய்ப்பாட்டால் கூறினார். சாதல் - தன்னறிவு அழிதல்.

புலன் - கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் பொருள்களைப் பற்றுவதால் விளையும் இன்பம். மனத்தைப் புலன்வழியே போகச் செய்யாதவர் சிவத்தையே பற்றியிருக்கச் செய்யும் சிவயோகிகளாதலின் அவர்களைப் புலன்கள் மயக்கா. ஆகவே, அவர்கள் புலனடக்கம் பழகுதற்காகக் குகைக்கோ காட்டிற்கோ தனி இடம் நாடிச் செல்லவேண்டா என்பது.

இங்ஙனம் இம்மந்திரம் தவத்தால் சாதிக்கக்கூடிய புலனடக்கமும், சமாதியும் 'உள்ளம் உமக்கே இடமாக வைத்தேன்'

**1612.** **கத்தவும் வேண்டா கருத்தறிந் தாறினால்**
**சத்தமும் வேண்டா சமாதிகை கூடினால்**
**சுத்தமும் வேண்டாம் துடக்கற்று நிற்றலால்**
**சித்தமும் வேண்டாம் செயலற் றிருக்கிலே. 3**

---

என்றாற்போல, தேகத்தைச் சிவமயமாக்கலும். இறைவன் உயிருக்கு உயிராக விளங்குதலை அறிதலும் ஆகிய பயன்களைப் பெற்ற பிறகு போதலும், சாதலும், காதலும், ஓதலும் ஆகிய சாதனங்களாகிய தவம் வேண்டியதில்லை என நிந்தனை செய்தலின் இவ்வதிகார இயைபு விளக்கி நிற்கின்றது.

'சாத்தியம் கைவந்தபின் சாதனம் வேண்டா' என்பதனைப் பல்லாற்றானும் வகுத்துக் கூறியவாறு.

**1612.** *தெளிவுரை :-* *உண்மை நூல்களின் கருத்தையறிந்து அதன்வழியே அடங்கி விட்டால் பின்பு அந்நூல்களைக் குரல் கம்ம ஓதவேண்டுவதில்லை. சமாதி நிலை கைகூடிவிட்டால், துதித்தல் வேண்டுவதில்லை. அகத்தூய்மையாகிய பற்றறுதி உண்டாகி விட்டால், நீராடிப் பலகால் மூழ்கல் (பு. பொ. வெண்பா மாலை, வாகை. 13) முதலிய புறத்தூய்மைக்குப் பெரிதும் முயலவேண்டுவதில்லை. தன்முனைப்பு அற்று, எல்லாம் சிவச்செயலாக இருந்து விட்டால், ஒரு குறியைத் தியானிக்கும் தியானம் வேண்டுவதில்லை.*

*குறிப்புரை :- சத்தம் - இசை; பாட்டு; துதி. உண்மையையுணர்ந்து அடங்கற்குக் கத்துதலும், சமாதி நிலைக்கச் சத்தமும், தொடர்பறுக்க அவ்வப்போது தூய்மையும், செயலற்றிருக்கச் சிந்தனையும் சாதனம் ஆவன. சாத்தியங்கள் நிறைவேறியபின் சாதனங்களாகிய தவம் வேண்டாம் என்பது கருத்து. இதனாலே அதிகார இயைபும் அறிய நிற்றல் காண்க.*

*கருத்து அறிந்தாறுதல் - இறைவன் நூல்களாகிய வேதாகமங்களை உணர்ந்து முனைப்பற்று அடங்குதல். கற்றோம் அறிந்தோம் என்று முனைப்பு நிகழுமாயின் அதுவும் அறியாமையாய் ஆணவத்தின் செயலாம் ஆதலின் இன்றியமையாததாயிற்று. 'செறிவு அறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து, ஆற்றின் அடங்கப் பெறின்' என்ற வள்ளுவர் வாய்மொழியும் காண்க. கத்தவும் வேண்டாம் என்றது வேதாகமங்களைப் பிறர் கேட்க ஓதுதலாகிய வீண்குரலால் பயனில்லை என்றது.*

**1613.** விளைவறி வார்பண்டை மெய்த்தவம் செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்உரை செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யறம் செய்வார்
விளைவறி வார்விண்ணின் மண்ணின் மிக் காரே. **4**

---

*துடக்கு - மலமாயா கன்மங்களோடும் அவற்றின் காரியமாகிய அறியாமை மோகம் தனு கரண புவன போகங்கள் சுகதுக்கம் ஆகிய இவற்றோடும் உளவாய சம்பந்தம், இவை ஆன்மாவைச் சார்ந்து அசுத்தப்படுத்துவன ஆதலான் சார்பறின் தூய்மை தானே அமையும் என்பதாம்.*

*சிந்தனையின் விளைவு செயல். செயலறவே சிந்தனை வேண்டாம் என்றதாம்.*

*இவ் இரு மந்திரங்களாலும் சாதனம் வேண்டாமை கூறப்பட்டது.*

**1613. *தெளிவுரை :-*** ***தொன்று தொட்டு அடிபட்டு வரும் தவம் வாய்மை, அறம் என்பவற்றைச் செய்வார் யாவரும், 'அவற்றால் விளையும் பயன் இவை' என உணர்ந்தே செய்வர். அங்ஙனம் அறிந்து அவற்றைக் கடைபோகச் செய்து அப்பயனைப் பெற்றவர்கள் விண், மண் என்னும் இரண்டுலகத்து உள்ளாரினும் மேம்பட்டவராவர்.***

***குறிப்புரை :-*** ***மெய்த்தவம் - நிட்காமியத்தவம் எனவும், மெய்யறம் - புகழ், கைம்மாறு முதலியவற்றை நோக்காது அன்பும், அருளும் பற்றியே செய்யப்படுவது எனவும் அறிக. 'விளைவறிந்தே செய்வார், விளைவுபெற்று உய்வார்' என்றதனால்' அவ்விளைவை அறிந்து செய்து பெறமாட்டாதாரது சாதனங்கள் தவம் முதலியன ஆகாவாயின.***

***இதனால், சாத்தியத்தைத் தருவனவே சாதனங்களாதல் கூறப்பட்டது.***

**1614. *தெளிவுரை :-*** ***சிவனடியார்களோடு கூடி, அவர்கள் செய்யும் தவத்தையே நானும் செய்து, அதன் பயனாகச் சிவனது திருவடியைத் தரிசித்தேன்; பின் அத்திருவடியின்கீழ் இருத்தலாகிய வீடுபேற்றை அடைய விரும்பியே பின்னும் தவத்தைச் செய்து அதனை அடைந்தேன். இவ்விருதன்மைகளையும் நீக்கி வாளா மெய்வருந்தச் செய்யும் தவம் தவமாகாது. அவமாம். ஆகவே,***

**1614.** கூடித் தவம்செய்து கண்டேன் குரைகழல்
தேடித் தவம்செய்து கண்டேன் சிவகதி
வாடித் தவம்செய்வ தேதவம் இவைகளைந்து
ஊடிற் பலஉல கோர்எத் தவரே. **5**

**1615.** மனத்துறை மாகடல் ஏழுங்கை நீந்தித்
தவத்திடை யாளர்தம் சார்வத்து வந்தார்
பவத்திடை யாளர் அவர்பணி கேட்கின்
முகத்திடை நந்தியை முந்தலு மாமே. **6**

---

*உலகோர் பலர் இவ்விரண்டையும் விரும்பாது பிணங்குவாராயின், அவரை எத்தவத்தோர் என்பது! சிவதரிசனம் பெறுதலே தவத்தின் பயன்.*

*குறிப்புரை :-* "சிவகதி கண்டேன்" என்றதனால் குரை கழலும் அவனுடையதாயிற்று. அவ்விரண்டாலும் கூடுதற்கும், தேடுதற்கும் செயப்படுபொருள் இவையென்பது விளங்கிற்று. 'இவை களைந்து செய்வது ஏதம்' என மாற்றுக. பிணங்குதல், இந்நெறியொடு மாறுபட்டுப் பிறவாது செய்தல். "எத் தவத்தோர்" என்பது, 'யாதொரு தவத்தையும் உடையரல்லர்' என்பது குறித்து நின்றது.

இதனால், 'சிவநெறி வழிப்படாது செய்வன தவமாகா' என அவைகளது இகழ்ச்சி கூறப்பட்டது. "சிவத்தைப் பேணின் தவத்திற்கழகு" (கொன்றை வேந்தன்) என்றார் ஔவையாரும்.

**1615.** *தெளிவுரை :-* மனத்தின்கண் நிறைந்து நிற்கின்ற ஆசையாகிய பெரிய எழுகடல்களைக் கையாலே நீந்திக் கடந்து தவத்தில் நிற்பவரே தமக்கு என்றும் சார்பாகும் மெய்ப்பொருளை அடைவர். அது மாட்டாதே தவம்செய்து பிறவியில் அழுந்துவோர் மேற்கூறிய அத்தவத்தோரை வழிபடுவாராயின், அவர் சிவனைத் தம் கண்முன்னாகவே காணுதலும் கூடும்.

*குறிப்புரை :-* மனம் - அணு வடிவினதாய், காணப்பட்ட பிரபஞ்சமனைத்தையும் கருத்து வகையான் அடக்கி நிற்கும் அகக்கருவி. அதுவே எல்லா வகையான ஆசைகட்கும் உறைவிடம். ஆசை ஏழுவகையான பிறவிகளுக்கும் வித்து. ஆசையை வெல்லுதல் ஏழுபிறப்பாகிய கடலைக் கடத்தலாம். "மனத்துறை மாகடல் ஏழ்" என்பது அற்புத உருவகமாய் பெரிய கடல் போன்ற ஆசையைக்

**1616.** மனத்திடை நின்ற மதிவாள் உருவி
இனத்திடை நீக்கி இரண்டற வீர்த்துப்
புனத்திடை அஞ்சும்போ காமல் மறித்தால்
தவத்திடை ஆறொளி தன்னொளி யாமே. 7

---

*குறித்தது. அதனை முற்றும் விடுத்த அருமை தோன்ற, "கை நீந்தி" என்றார். தவம் இன்னதென்பது மேற்கூறப்பட்டமையின், வாளா, ''தவத்திடையாளர்'' எனவும் அஃதல்லாத பிற செயலாளரை ''பவத்திடையாளர்'' எனவும் கூறினார். ''அவர் பணி கேட்கின் முந்தலும் ஆம்'' என்றது, 'கேளாதவழி முந்துதல் கூடாது' என வலியுறுத்தவாறு. இதனானும், முன்னை மந்திரத்தில் "கூடி" என்றது, ''சிவனடியாரோடு கூடி'' என்றதே எனல் விளங்கும். இதனுள் உயிரெதுகை வந்தது.*

*பவத்திடையாளர் - பிறவிக்கண் அகப்பட்டோர். அவர் எஞ்ஞான்றும் அடியாரும் ஆகார். ஆசானும் ஆகார். அவர் பணியைக் கேட்டலாகாது. அங்ஙனம் கேட்கின் சிவபெருமான் முகத்திலும் விழிக்க இயலாது என்பதாம்.*

*நந்தியை முகத்திடை முந்தலும் ஆமே எனக் கூட்டிச் சிவபெருமானை அவர் முகத்தில் எதிர்படுதலும் ஆமே; ஆகாது எனச்சொற்பொருள் கொள்க. இது முகத்தில் விழிக்க முடியுமா என்ற வழக்கை அடியொற்றி எழுந்தது. புத்தி தத்துவத்தின்கண் தங்கிக் கிடக்கின்ற கடல் போலும் எல்லையில்லாத எழுவகைக் பிறப்பிற்கும் காரணமான எஞ்சு வினைகளைச் சிவகுருவின் வழித் திருவைந்தெழுத்தைக் கணிக்குமுறையில் நீந்தி நற்றவம் செய்யும் நல்லாருடன் இணங்கி, அவர் வழி நிற்பார்க்கு பிறப்பில்லை. அதனால் அவர் பிறப்பினை எய்தார்.*

**1616. *தெளிவுரை :-* *உள்ளமாகிய உறையிலே உள்ள ஞானமாகிய வாளை உருவி ஐம்பொறிகளாகிய பசுக்களைப் பிணித்துள்ள ஆசை யாகிய கயிற்றை இரண்டு துண்டாய் அறும்படி அறுத்து அவைகளை ஏனைப் பசுக் கூட்டத்தினின்றும் நீக்கி, அப்பசுக்களோடு தாமும் கொல்லையிற் சென்று மேயாதபடி அவற்றை மடக்கி வைத்தல் ஒருவனுக்குக் கூடுமாயின், தவத்தில் தோன்றுவனவாகிய ஆறு ஒளிகளும் அவனுக்கு உரிய ஒளிகளாகிப் பயன் தரும்.***

***குறிப்புரை :-*** ***'அது கூடாதபொழுது அவனது தவம் ஒளியில்லாது, இருளேயாம்' என்றபடி. "மதிவாள்", ஏகதேச உருவகம்.***

**1617.** ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது
பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுக்கும் முனிவ னெனும்பதம்
சத்தான செய்வதும் தான்தவந் தானே. **8**

---

*"புனத்திடைப் போகாமல்" என்றதனால், "அஞ்சு" எனப்பட்டவை 'பசு' என்பது விளங்கிற்று.*

*'பார்ப்பா னகத்திலே பாற்பசு ஐந்துண்டு' (தி.10, 9 சூன்யசம்பாஷனை, 18) என ஐம்பொறிகளைப் பசுக்களாகப் பின்னும் கூறுதல் காண்க. ஆறு ஒளி - ஆறு ஆதாரங்களில் தோன்றும் இறையொளி. 'ஐம்புல ஆசையை - அறுத்தவர்க்கே யோகமும் தவமாய்ப் பயன்படும்' என்பது உணர்த்தி, 'அது செய்யாதாரது யோகம் தவமன்றாம்' என இகழ்ந்தவாறு.*

*இதனால், 'மேற்கூறிய எழுகடல் போலும் ஆசை ஐம்பொறிகளின்வழிப் பெருகித் துன்புறுத்துமாகலின், அவற்றை அடக்காதாரது தவம் தவமன்றாம்' என அதன் இகழ்ச்சி கூறப்பட்டது. இதன் பின்னிரண்டடிகள்,*

*"நினைத்த இடத்தே நிலைபெறுமாகில்*
*அனைத்துயிர்க் கெல்லாம் அதிபதி யாமே"*

*என்பது பாடமாகவும் காணப்படுகின்றது. ஈர்த்தல் - அறுத்தல். உலகில் அறுத்தால் எப்பொருளும் இரண்டாதல் உலக இயல்பு. ஞான வாளால் ஈர்க்க இரண்டற்று ஒன்றாகும் என்ற உண்மை உணர்த்தப்பட்டது.*

**1617.** *தெளிவுரை :- அவரவரது பரிபாக நிலைக்கு ஏற்ப அவரோடு இயைந்து நீங்காது நின்று அருளுபவனாகிய இறைவனை அவனுக்கு அடியராய் நின்று வாயார வாழ்த்துதல் அவன்பால் பக்தியை மிகுவிக்கும். ஐம்பொறியடக்கல் முதலிய நோன்புச் செயல்கள் அவர் முனிவராம் நிலையை நிலைபெறுவிக்கும். இறைவனை அடிப்பணிந்து தொண்டுகள் பலவும் செய்து நிற்றல் முத்தியைத் தரும்.*

*குறிப்புரை :- முனிவன் - மனனசீலன், வெறுத்தவன். தவம் பத்தியையும் முத்தியையும் கொடுக்கும் என்பது கருத்து.*

1618. இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி
மலர்தொட்டுக் கொண்டேன் வரும்பலன் காணேன்
தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்ததென் உள்ளம்
தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே. 9

1619. படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்
கிடரடை யாவண்ணம் ஈசன் அருளும்
இடரடை செய்தவர் மெய்த்தவம் நோக்கில்
உடரடை செய்வதொ ருன்மத்த மாமே. 10

---

*பதம் சத்தான செய்வதாகிய தவந்தானே மிகவும் ஒத்து நின்றானை யுரைப்பதாகிய பத்தியைக் கொடுக்கும்; அடியார் பணிந்து தொழ முத்தியைக் கொடுக்கும் எனக் கூட்டிப் பொருள் காண்க.*

*தவத்தில் முதிர்ந்தோர்க்கே முனிவன் என்னும் பதம் நிலைபெறுமாதலின் ''அது முனிவன் என்னும் பதம் சத்தானசெய்வது தவந்தானே" என விசேடிக்கப்பட்டது. சத்தான செய்தல் - நிலைபெறச் செய்தல், பொருளுடையதாகச் செய்தலுமாம். முனிவன். மனன சீலன். வெறுத்தவன் எனலுமாம். பெயர் மாத்திரையாய் முனிவனாகாது உண்மையில் முனிவன் என்னும் பெயருக்கு ஏற்ப நிலைபெற்ற தன்மையுடையவர்களின் தவம் என்க.*

***1618. தெளிவுரை :-*** *தலையாய நூல்களை அறியும் முன், நான் சிவனுக்கென்று கருதியே பச்சிலையைக் கிள்ளியும், பூவைப் பறித்தும், சில மலர்களைத் தொடுத்தும் பணிபுரிந்தேன். ஆயினும் அவற்றால் யாதொரு பயனும் விளையக் காணவில்லை. அந்நூல்களை அறிந்த பின் சிவனிடத்தே என் உள்ளம் குழைந்து நின்றது. அதனால், சிவத்தைத் தலைப்பட்ட அனுபவத்தை அடைந்தேன். ஆகவே, நான் தவத்தை உணர்ந்தவாறு அதுவேயாயிற்று. புறப்பூசை மாத்திரத்தால் மனஈடுபாடு ஏற்படவில்லை. உண்மை நூலறிவால் உள்ளப்பதிவு நிகழ்ந்தது. அதனால் திருவடி சம்பந்தம் பெற்றேன் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *'பச்சிலையும், பூவும் முதலியன கொண்டு வழிபடுதலும் அறிவின் வழிப்பட்டபொழுதே உண்மைத் தவமாம்' என்பது இதனுட் கூறப்பட்டது.*

*"கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்*

**1620.** ஆற்றில் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. **11**

---

*கொள்ளார் அறிவுடை யார்" - திருக்குறள், 404*

*எனவும்,*

*"பன்னும் பனுவற் பயன்தேர் அறிவிலார்*
*மன்னும் அறங்கள் வலியிலவே" - நன்னெறி, 32*

*எனவும் வந்தனபோல்வன காண்க. இரண்டாம் அடியில், 'தொடுத்து' என்பது, ''தொட்டு'' என மருவிநின்றது. 'வளைத்துக்கட்டி' எனினுமாம். கொள்ளுதல் மேற்கொள்ளுதல். அதற்கு, 'பணி' என்னும் செயப்படு பொருள் வருவிக்க. பலன், உலகியலின் வேறானதோர் அனுபவம். அஃது அறிவில்வழி உளதாகாது என்பதாம். தலைதொட்ட - தலையாய இடத்தில் பொருந்திய. ஈற்றில் நின்ற தலை, சிவம். 'அதுவே தவங்கண்டவாறு' என எழுவாய் வருவித்து முடிக்க.*

*இதனால், 'மேற்குறித்த தவந்தானும் அறிவோடு கூடாதவழித் தவமாகாது' என அதன் இகழ்ச்சி கூறப்பட்டது.*

***1619. தெளிவுரை :-** விரிந்த சடைமுடியோடு பெரிய தவத்தை மேற்கொண்ட அடியவர்க்கு யாதொரு துன்பமும் வாராதவாறு இறைவன் தனது அருளை வழங்குவன். அவ்வருளைத் தெளியாது தமக்குத் துன்பம் வராமல் மணி மந்திர ஔடதங்களால் காப்புச் செய்துகொள்வதில் காலம் போக்குவாரது தவ நிலையை நோக்கின் அது, துன்பம் வந்து அடையும் வழியைத் தாமே ஆக்கிக் கொள்வதோர் பித்தச் செயலாகவே முடியும்.*

***குறிப்புரை :-** தவ ஒழுக்கத்தோடு தவவேடமும் பூண்டாரது நிலை சிறப்புடையதாகலின், அந்நிலையுடையாரை, "மாதவம் பற்றிய பத்தர்" என்றார். இதனானே, "சடை" என்பதில் தொக்குநின்ற ஒடு உருபு, 'அன்போடு வரவேற்றான்' என்பதுபோலத் தவம் மேற் கொள்ளுதலைச் சிறப்பித்து நின்றமை விளங்கும். <u>மாதவம் பற்றிய பத்தர்க்கு இடர் அடையா வண்ணம் ஈசன் அருளுதலை, அருச்சுனற்குப் பன்றியால் இடர் வாராவண்ணம் காக்கச் சென்றமை முதலிய வரலாறுகளும், நாவுக்கரசருக்குச் சமணர்கள் விளைத்த</u>*

**1621.** பழுக்கின்ற வாறும் பழம்உண்ணு மாறும்
குழக்கன்று துள்ளிஅக் கோணியில் புல்காக்
குழக்கன்று கொட்டிலில் கட்டவல் லார்க்குள்
இழுக்காது நெஞ்சத் திடஒன்று மாமே. **12**

---

*இடர்கள் அவரை யாதும் செய்யாதொழிந்தமை முதலிய அனுபவங்களும் இனிது விளக்கும். விடர் - பிறப்பு; அது தவத்தின் வேறாய செயல்களைக் குறித்தது.*

*உண்மைத் தவமுடையார்க்கு என்றும் இடரடையாது; வினைச் சேடத்தால் அடையுமாயின் அதனை இன்பமாகக் கொள்ளும் பெருமை பெற்றவர்கள் உண்மைத்தவம் ஒருமனப்பட்டிருப்பதால் பிறவி வாராமல் தடுக்கும் என்பது கருத்து.*

*மாதவம் - பொறியடக்கம் முதலியன. படர் சடை - அவர்கள் நெடுநாள் இடம் பெயராமல் செய்யும் தவத்தால் தானே வளர்வதான பரந்த சடை என்க. இவை இரண்டும் மெய்த்தவர் இலக்கணம். முன்னது அகத்தவம். பின்னது புறத்தடையாளம் என்க. தவ ஒழுக்கத்தோடு இறைவனிடம் என்றும் நீங்காத அன்பும் வேண்டும் என்பார் "படர்சடை மாதவம்பற்றி பத்தர்" என்றார்.*

*இடர் - வினைவயத்தான் வரும் மூவகைத் துன்பங்களும், இவர்கள் செய்யும் தவச்சிறப்பான வினை இவர்களை வந்து சாரா வண்ணம் ஈசன் தன் பெருங்கருணையால் காப்பன் என்பார் "ஈசன் அருளும்" என்றார்.*

*இடர் - துன்பத்தை. அடைசெய்தவர் - (இன்பமாக) அடையச் செய்த தவத்தர் என்க. துன்பத்தையும் இன்பமாகக் கொள்ளும் நிலை இறைவன்பால் ஒன்றிய ஒருமனப்பட்ட தன்மையால் விளைவது. அங்ஙனம் பிரியாதே நிற்பார்க்குப் பிறவியே இல்லை என்பதாம். துன்பத்தை இன்பமாகக் கோடலும் திருவடிக்கண் பற்றும் "மாசில் வீணையும்" என்ற அப்பர் சுவாமிகளின் நீற்றறை அனுபவத்தால் அறியலாம்.*

**1620.** *தெளிவுரை :- நூல்முறைமையை அறியாதவர் பசி, வெயில், மழை முதலியவற்றால் வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு தவத்தைச் செய்யமாட்டாராய், இல்லறத்தார் இடும் சோறு முதலிய வற்றைப் பெற்றுப் பிழைத்தற்பொருட்டுத் துறவு நிலையிற்புகுந்து தவத்தவர்போல வேடம் பூண்டு திரிதல், ஆற்றில்*

**1622.** சித்தம் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோர் உறவுண்டால்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்திஆம்
சித்தம் சிவமாதல் செய்தவப் பேறே. **13**

---

*ஒருதுறைக்கண் முதலை இருத்தலைக் கண்டு அஞ்சி அதனைவிட்டு நீங்கி, மற்றொரு துறைக்கண் குட்டிகளை ஈன்ற கரடி அக்குட்டிகளோடு குளித்துக் கொண்டிருத்தலை அறியாது அதன்கண் இறங்கி அக்கரடியிடம் அகப்பட்டாற் போல்வதாம்.*

***குறிப்புரை :-*** *ஆறு வாழ்க்கைக்கும் முதலை உள்ள துறை தொழில் முயற்சியோடு கூடிய இல்லறத்திற்கும், ஈற்றுக் கரடியுள்ள துறை நோன்றலோடு கூடிய துறவு நிலைக்கும் உவமையாயினவாறு அறிக. நோற்றல் - நோன்றல்; பொறுத்தல்.*

*இதனால், 'உள்ளத்தால் தவத்தவராகாது, புறத்தே வேட மாத்திரையால் தவத்தவர்போல நிற்பாரது போலித்தவம் முடிவில் துன்பமே பயத்தலல்லது, சிறிதும் இன்பம் பயவாது' என அதனது இகழ்ச்சி கூறப்பட்டது.*

**1621.** ***தெளிவுரை :-*** *தவ உணர்வாகிய பழம் பழுத்தற்பொருட்டும், பின் அத்தவத்தால் அனுபவம் பெறுதலாம் அப்பழத்தை உண்ணுதலைச் செய்தற் பொருட்டும், பிராணவாயுவாகிய இளங்கன்று துள்ளிச் சென்று அப்பழம் வைக்கப்பட்டுள்ள மனமாகிய அந்தக் கோணியில் புகுந்து அப்பழத்தைத் தின்றுவிடாதபடி - அஃதாவது தவ உணர்வைப் போக்கிவிடாதபடி - அதனைப் புருவ நடுவாகிய கொட்டிலில் கட்டிவைக்க வல்லவர்க்கு யாதொரு மனக் குற்றமும் உண்டாகாது; உள்ளமாகிய வயலில் ஊன்றுதற்கு ஞானமாகிய ஒப்பற்ற வித்தும் கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *'பழம் பழுக்கின்றவாறும்' என மாற்றி உரைக்க. "ஆறு" இரண்டிலும், 'ஆற்றுவிக்கும்' என நான்காவது விரிக்க. 'புல்காது' என்னும் எதிர்மறைவினையெச்சம் ஈறுகெட்டு நின்றது. "இட" என்றதனால், "நெஞ்சம்" என்பது நெஞ்சமாகிய வயல்' எனக் குறிப்புருவகம் ஆயிற்று. ஆகவே, "ஒன்று" என்றது விதையாயிற்று. 'விதையாவது ஞானமே' என்பது ஆற்றலால் பெறப்பட்டது. "ஒன்றும்" என்னும் உம்மை சிறப்பும்மை. வீடுபெற உணரும் உணர்வு ஒன்றே*

*சாதன நிலையில் 'தவம்' எனவும், சாத்திய நிலையில் 'ஞானம்' எனவும் நிற்கும் என்பது மேலும் குறிக்கப்பட்டது. அதனால் தவம் பழமாகவும், ஞானம் அதனாற் கிடைக்கும் வித்தாகவும் உருவகிக்கப்பட்டன.*

*இதனால், பிராண வாயுவை அடக்கிப் புருவ நடுவில் நிறுத்தி மனோலயம் பெறமாட்டாது அவ்வாயுவும், மனமும் சென்றவாறே செலவிடுவாரது தவம் நிலையாது' என அதனது இகழ்ச்சி அதன் எதிர்மறைக்கண் வைத்துக் கூறப்பட்டது.*

**1622. *தெளிவுரை :-*** ***ஒருவர்க்கு அவரது உள்ளம் சிவமேயான பொழுது அவருக்குச் செய்யக்கடவ தவம் யாதும் இல்லையாம். அவரைப் போல உள்ளம் சிவமாய்ச் சிவானந்தத்திலே திளைத்திருக்கப் பெற்றோரது உறவே அவருக்கு உண்டாகும்; பிறரது உறவுகள் யாவும் அற்றொழியும். சித்தியும், வீடுபேறும் அவர்க்கு எளிதின் உளவாம். ஆகையால், உள்ளம் சிவமாதல் ஒன்றே உண்மைத் தவத்தால் பெறும் பயனாகும்.***

***குறிப்புரை :-*** *"ஆக" என்னும் செயவெனெச்சம், 'உண்ணப் பசி தீரும்' என்பதுபோலக் காரணப் பொருளில் வந்தது. எனவே, அஃது எதிர்காலத்தில் இறந்த காலமாம். 'அவர்க்கு உண்டாம்' எனக் கோடற் பொருள் வருவிக்க. ''உறவாவார் உருத்திரபல் கணத்தினோர்கள்" (தி.6 ப.98 பா.4) என்று அருளிச் செய்ததும் காண்க. "சித்தி முத்தி", உம்மைத்தொகை. மூன்றாம் அடியின் இறுதியில், 'ஆகலான்' என்பது எஞ்சி நின்றது. ஈற்றில் நின்ற பிரிநிலை ஏகாரத்தை "சிவமாதல்" என்பதனோடு கூட்டியுரைக்க. அங்ஙனம் உரைக்கவே 'அப்பயனைத் தாராத பிற தவங்கள் தவமல்ல' என்பது போந்து, அதிகாரப் பொருளை உணர்த்துவதாம்.*

*இதனால், 'சித்தத்தைச் சிவமாகச் செய்யும் பெருந்தவம் அல்லாத சிறுதவங்கள் தவமாகா' என அவற்றது இகழ்ச்சி கூறப்பட்டது. இதனானே சித்தத்தைச் சிவமாகச் செய்வனயாவும் தவமாம் என்பதும் பெறப்படும்.*

## 7. அருளுடைமையின் ஞானம் வருதல்

*'ஞானத்தைத் தரும் சிவகுருவின் அருளுக்கு, உரிய தவம் காரணம்' என்பதைப் பல்லாற்றானும் விளக்கிய நாயனார், 'தவம் காரணமாகச் சிவனே குருவாய் வருவான் ஆதலின், ஞானம் அவன் அருள் பண்ணித் தரவே பெறப்படுமல்லது, பெறுவோன் தான் தனது வலிமையாற் பெறுதல் இயலாது, என்பதைப் பத்து மந்திரங்களான் கூறுகின்றார். எனவே, 'அருள் உடைமையின் ஞானம் வருதல்' என்றது, 'சிவன் சீவனிடத்து அருளுடையனாக, அதனால் சீவனுக்கு ஞானம் வருதல்' என்றவாறாம்.*

*தாமே தரும்அவரைத் தம்வலியி னாற்கருத*
*லாமே இவன்ஆர் அதற்கு.* - *திருவருட்பயன், 70*

*என்றது காண்க.*

**1623.** பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்
பிரானரு ளில்பெருந் தன்மையும் உண்டு
பிரானரு ளில்பெருந் தெய்வமு மாமே. 1

---

**1623.** *தெளிவுரை :- எனின், சிவனருள் கிடைத்தால், எல்லாம் கிடைக்கும் எனல் நுதலிற்று. சிவபெருமான் திருவருள் உண்டாயின் நல்ல செல்வம் உண்டாம்; நல்ல குணம் உண்டாம்; பெருந்தன்மையும் உண்டாம்; பெரிய தெய்வமுமாவர் என்றவாறு.*

*சிவபெருமான் அருளுண்டாயின் நற்செல்வமும், நன்ஞானமும், பெருந்தன்மையும், தெய்வத்தன்மையும் உண்டாம் என்பது கருத்து.*

*நற்செல்வம் - ஆக்கமும் கேடும் அற்ற நிலையான செல்வம். நல் ஞானம் - சிவஞானம்; எஞ்ஞான்றும் விளங்கும் நிலையான அறிவு. பெருந்தன்மை - உள்ளபடி உணரும் பேரறிவும், என்றும் மாறாத இன்பமும் முதலாய குணங்கள். பெருந்தெய்வம் - சிவம். சிவமாம் பெருவாழ்வும் பெறுவர் என்பதாம்.*

*குறிப்புரை :- பிரான் - சிவபிரான். நற்செல்வம் - அறத்தாற்றின் வரும் செல்வம். நன்ஞானம் - ஐயமும், திரிபும் இல்லாத மெய்ஞ் ஞானம். பெருந்தன்மை - வியாபக நிலை 'தெய்வம்' என்றது, தெய்வ நிலையை.*

**1624.** தமிழ்மண் டலம்ஐந்தும் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகர் திரிவார்
அவிழும் மனமும்எம் ஆதி யறிவும்
தமிழ்மண் டலம்ஐந்தும் தத்துவ மாமே. **2**

---

*"அருளின்" இரண்டும், 'அருள் பண்ணினால்' என்றவாறு. "அருள் உண்டெனில் உண்டு" எனவும், "அருள் பண்ணினால் உண்டு" எனவும் கூறியதனால், 'அவை இல்லையானின் யாதும் இல்லையாம்' என்பது போந்தது,*

*அருளே உலகெலாம் ஆள்விப்ப தீசன்*
*அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே*
*மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்*
*எப்பொருளு மாவ தெனக்கு. - தி.11 அற்புதத் திருவந்தாதி, 9*

*என்ற அம்மை திருமொழியும் காண்க.*

*இதனால், சிவன் அருள் செய்தவழியல்லது யாதும் உளதாகாமை கூறப்பட்டது.*

**1624. *தெளிவுரை :-*** *'சேர மண்டலம், சோழமண்டலம், பாண்டி மண்டலம், கொங்கு மண்டலம், தொண்டை மண்டலம் என்னும் தமிழ்வழங்கும் மண்டலம் ஐந்திலும், மிகப் பரந்த ஞானத்தை உணர்த்துவார்போலப் பிற நாட்டவர் புகுந்து திரிவார்கள். ஆயினும், அம்மண்டலம் ஐந்திலும், 'உயிர்களின் அன்பு, இறைவனது அருள்' என்னும் அவ்இரண்டுமே பொருளாக விளங்குகின்றன.*

***குறிப்புரை :-*** *'ஆதலின், அவற்றை அறியாத பிறர் தமிழ் மண்டலத்தில் உள்ளார்க்கு உணர்த்தும் சீரிய ஞானம் யாது மில்லை' என்றபடி, பிறநாட்டில் காசுமீரம் போன்ற சிறிதிடத்தில் சைவ சித்தாந்தம் ஓரளவு வழங்கப்படுகின்றதாயினும், அது தொன்று தொட்டு இன்றும் இனிதே விளக்கமுற்று நிற்பது தமிழ்நாட்டிலேயாகலானும், சைவ சித்தாந்தம், உயிர்கள் தம் பரிபாகத்திற்கு ஏற்பச் செய்யும் அன்பிற்குத் தகச் சிவன் அவைகள் மாட்டு அருளுடையனாய் ஞானத்தை வழங்குவன்' என்பதை முடிநிலைப் பொருளாகக் கூறுத லானும், 'அதனை யறியாத பிறநாட்டவர் தமிழ் நாட்டவர்க்கு உணர்த்த இருக்கும் தத்துவம் யாதுளது? என்றார். "வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு"*

**1625.** புண்ணியம் பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சில ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேறுத் தப்புறத்து
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வீரே. **3**

---

*(தொல். பொருள். செய்யுளியல், 79) என்பது முதலிய பண்டை நிலைக்குப் பின் நாயனார் காலத்தில் தமிழ் மண்டலம் ஐந்தாயிற்று என்க.*

*இரண்டிடத்தும் "ஐந்தும்" என்பதில் ஐந்தன்கண்ணும் என உருபு விரித்து, "திரிவார்" என்பதனோடும் "ஆம்" என்பதனோடும் முடிக்க. அறிவு - ஞானம்; அஃது அருளேயாதல் அறிக. 'ஆதி அருளும்' என்றே பாடம் ஓதுதலுமாம் ஈற்றடியையும், 'தமிழ்மண்டலம் ஐந்தின் தத்துவ மாமே' ஓதுதல் சிறக்கும்.*

*இதனால், 'இவ் அதிகாரப் பொருள் தமிழ் நாட்டிலே உள்ள இணையிலா உயர்பொருள்' என்பது கூறப்பட்டது.*

***1625. தெளிவுரை :-** உலக வாழ்க்கையில் 'நல்வினை, தீவினை' என்று இருவினைகளின் தோற்றமும், பயனுமே உள்ளன. அத்தோற்றம் பயன் என்பவற்றை அவை நிகழுங்காலத்தே தெளிய அறிபவர் சில ஞானியரே, அதனால், நீவிர் அந்த ஞானியர் வழிநின்று அவற்றைக் கருதியுணர்ந்து, அவ்வினைகளையும் அடியோடு போக்கி, அவற்றிற்கு அப்பால் இறைவன் இருக்கின்ற இடத்தை ஆராய்ந்தறியுங்கள்.*

*இருவினை ஒப்பும் மலபரிபாகமும் உற்றார்க்கே சிவகதி தெரியும் என்பது கருத்து.*

*பூமி - கன்மங்கள் நுகர்தற்கும், மேல் வினைகளை ஆக்குதற்கும் இடமாதலின் புண்ணிய பாவங்கள் பூமியின்கண் உள்ளன என்றார்.*

*சிவஞானிகள் : விலங்குகள்போலக் கிடைத்தன உண்டும், கிடைக்காதபோது வருந்தாதும் உணர்வின்றியும் பகுத்தறிவின்றியும் திரியாது, துன்ப இன்பங்கள் வந்தடைந்தபோது இவை புண்ணியப் பயன், இவை பாவப்பயன் எனப் பகுத்தறிவராதலின் 'நண்ணும்பொழுது அறிவார் சில ஞானிகள்' என்று அருளினர்.*

*வினை இயல்பையும், அது பயன்தரு மாற்றையும் ஆராய்ந்து, வினைவிளை மூலமாகிய கன்ம மூலத்தை வேரோடறுத்தால் சிவன் இருக்குமிடமாகிய வெண்கயிலை தோன்றும். இதனை ஆராய்ந்து அனுபவத்தால் அறியுங்கள் எனப் பரிபாகிகட்கு உணர்த்தியவாறு.*

*அண்ணல் இருப்பிடத்தை அறிதலை அருள்வழி ஞானம் பெறுதலாம் என்கின்றமையின் அதிகாரப் பொருளமைதி இம்மந்திரத்தான் அறிக.*

***குறிப்புரை :-*** *'அப்பொழுது ஞானம் வரும்' என்பது குறிப்பெச்சம். ("புண்ணிய பாவம்" எனத் தொகையாக ஓதுதல் பாடமாகாமை அறிக). 'வினை உளதாய்ப் பயன் தருதலை உலகர் உணரார்; ஆதலின், நீவிர் உலகர் வழியிற் செல்லாது, அறிவர் வழியிற் செல்க' என்பார், "நண்ணும் பொழுதறிவார் சில ஞானிகள்" என்றார். "பொழுதறிவார்" என்றது, 'பொழுதிடத்தே நேர்பட அறிவார்' என்றவாறு.*

> *"நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்*
> *முறைவழிப் படூஉம்" - புறம், 192*

*என்றவாறு, உலகியல் வினைவழிப்பட்டதேயாக, மெய்ந்நெறி அவ்வினை வழிக்கு அப்பாற்பட்டதாகலின் அதனை, "அப்புறத்து அண்ணல் இருந்திடம்" எனவும் "அவ்விடமாவது அருளேயாகலின், அதனை ஆய்ந்துணர்ந்து அடைய ஞானம் வரும் என்பார், ஆய்ந்து கொளீரே" எனவும் கூறினார். 'இருந்த' என்பதன் ஈற்றகரம் தொகுத்தல் பெற்றது. 'இருப்பிடம்' என்பதும் பாடம். வினையை அடியோடு அறுத்தலாவது, அதற்கு முதலாகிய விருப்பு வெறுப்புக்களை விடுதல். விருப்பு நல்வினைக்கண்ணும், வெறுப்பு தீவினைக்கண்ணும் நிகழ்வன. அவ்விரண்டையும் விடுத்து இரண்டன் கண்ணும் ஒப்ப நிற்றலையே 'இருவினை ஒப்பு' என்பர். இதனை;*

*''ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்'' (தி.12 திருக்கூட்டச் சிறப்பு, 8) என்றாற் போலும் இயல்புகளால் விளக்குவர். இருவினை யொப்பின்றி இறைவனது அருளைப் பெறுதல் கூடாமையின், "இரண்டையும் வேரறுத்து - அண்ணல் இருந்திடம் ஆய்ந்து கொளீரே" என்றார்.*

*இதனால், அருளுடைமை வருமாறு கூறப்பட்டது.*

**1626. *தெளிவுரை :-*** *அடியேனுக்கு என் கண்முன் நின்று*

**1626.** முன்னின் றருளும் முடிகின்ற காலத்து
நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே. **4**

---

*முத்தியை அளித்தருளிய சிவன், இருவினை நீங்கிய காலத்து அங்ஙனம் நீங்கப் பெற்றார்க்கு யாதானுமோராற்றால் கண்முன் நின்றே அருளை வழங்குவன். வினையில்லாத நன்மை பொருந்திய குழாத்தினர்க்கு உயிர்க்குயிராய் இருந்தே அருளை வழங்குவன். யாவர்க்கும் அருள் வழங்கிய பின்னும் அவ்அருள் நிலையினின்றும் வழுவாதவாறு பாதுகாப்பன்; அப்பாதுகாப்பின் பயனாக முடிவில் பிறவியை நீக்கிவிடுவான்.*

***குறிப்புரை :-*** *நாற்றோள் முதலிய தனது இயற்கை வடிவோடு வெளி நிற்றல், குருவாய் வந்து, நோக்கல், தீண்டல், உரைத்தல் முதலியவைகளைச் செய்தல் இரண்டையும், 'முன்னின்று அருளுதல்' என ஒன்றாக அடக்கினார். இவை இரண்டும் முறையே 'பிரளயாகலர், சகலர்' என்பவர்க்கு அருளும் முறையாக ஆகமங்கள் வரையறுக்கும். முடிதலுக்கு, 'இருவினை' என்னும் எழுவாய் முன்னை மந்திரத் தினின்றும் வந்து இயைந்தது. 'நன்மை' என்னும் பண்புப் பெயர் ஈறு குறைந்து நின்றது. மேல்வினை முடிகின்ற காலத்து என, அருளுக்கு வினை தடையாய் நிற்றலைக் கூறினமையின், நன்மை, அத்தடையில்லாமையாயிற்று. 'நன்னின்ற' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. உலகு - உயிர்த்தொகுதி. 'வினையில்லாத உயிரினத்தார் விஞ்ஞான கலர்' என்பது வெளிப்படை. நடுவுயிர் - உள்ளுயிர். 'மூவகை உயிர்கட்கும் மூவகையாக அருளுதலை நியதமாக ஆகமங்கள் கூறுதல் பெரும்பான்மை பற்றி' என்பதையும் 'சிறுபான்மை' கீழுள்ளார்க்கும் மேலுள்ளார்க்கும் அருளுதல்போலவே அருளுதல் பரிபாக முதிர்ச்சியான் உண்டு' என்பதையும்,*

> *"பண்டைநல் தவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்*
> *தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன்"*
>
> *- சிவஞானசித்தி சுபக்கம், பாயிரம்*

*என்னும் சிவஞான சித்தியாலும், அதற்குச் சிவாக்கிர யோகிகள், சிவஞான யோகிகள் இருவரும் உரைத்த உரைகளாலும் உணர்க.*

**1627.** சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாமை
சிவனருள் கூடினச் சிவலோக மாமே. **5**

---

*"ஈன்றுபுறந் தருதல் என்றலைக் கடனே*
*சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே"*

*- புறநானூறு, 312*

*எனச் சிறப்புப் பற்றிக் கூறப்பட்டதாயினும், உடலைப்புறந்தந்து காத்தல், உறுதி கூறி நிற்றல் என்னும் இரண்டும் முறையே தாயர்க்கும், தந்தையர்க்கும் எஞ்ஞான்றும் கடனாயிருத்தல் கண்கூடு. ஆயினும், 'உடல் தாய் தந்தையர்க்கு அவற்றைக் கடைபோகச் செய்தல் கூடாதாயினும், உயிர்த்தாய் தந்தையாகிய இறைவன் தான் ஆட்கொண்ட உயிரைக் காத்தலை எஞ்ஞான்றும் கடனாகக் கொண்டிருக்கின்றான்' என்பார், "பின்னின்று அருளும்" என்றார். 'பின்னும்', என்னும் எச்ச உம்மை தொகுத்தலாயிற்று.*

*அனாதி சிவனுடைமை யால்எவையும் ஆங்கே*
*அனாதிஎனப் பெற்ற அணுவை - அனாதியே*
*ஆர்த்த துயரகல அம்பிகையோ டெவ்விடத்தும்*
*காத்தல் அவன்கடனே காண். - திருக்களிற்றுப்படியார், 43*

*எனவும்,*

*உடனா யிருக்கும் உருவுடைமை என்றும்*
*கடனா யிருக்கின்றான் காண். - திருக்களிற்றுப்படியார், 86*

*எனவும் அருளிச்செய்தன காண்க. 'முடிவில் பிறவியை நீக்கும்' என ஒருசொல் வருவித்து முடிக்க.*

*இதனால், சிவன் உயிர்கட்கு அருள் செய்யுமாறெல்லாம் கூறப்பட்டன.*

**1627.** தெளிவுரை :- *சிவனது அருளாலே சிலர், தேவர் பதவியை வேண்டின் அவற்றையும் பெறுவர். சிலர் அதனால் மக்களுடம்பில் நின்றே தெய்வங்களோடு ஒத்த ஆற்றல் பெற்று விளங்குவர். எனினும், சிவனது அருளால் சிறப்பாக வினை நீக்கம் உண்டாதலால், சிவனது அருள் ஒருவர்க்கு உண்மையாகக் கூடிற்று என்றால், அதன் பயனாக*

**1628.** **புண்ணியன் எந்தை புனிதன் இணையடி**
**நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது**
**மண்ணவ ராவதும் வானவ ராவதும்**
**அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே.** **6**

**1629.** **காயத்தேர் ஏறி மனப்பாகன் கைகூட்ட**
**மாயத்தேர் ஏறி மயங்கும் அவைஉணர்**
**நேயத்தேர் ஏறி நிமலன் அருள்பெற்றால்**
**ஆயத்தேர் ஏறி அவன்இவன் ஆகுமே.** **7**

---

*அவர்க்குச் சிவலோகமே கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *உம்மை சிறப்பும்மை. 'சேரகிலாமையால்' என உருபு விரிக்க. 'சிவனருள் கூரின்' என்பதும் பாடமாகலாம். "கூறின்" என்பது பாடமன்று.*

*இதனால், சிவனருளின் பெருமை கூறப்பட்டது.*

**1628.** ***தெளிவுரை :-*** *அற வடிவினனும், எம் தந்தையுமாகிய சிவபிரானது இரு திருவடிகளை அடைந்ததனாலே, இருளை நீக்கி ஒளிரும் விளக்குப்போல்வதாகிய ஞானம்எனக்கு உண்டாயிற்று. இல்லையேல் உண்டாக மாட்டாது. யாவராயினும் மக்களாய்ப் பிறப்பதோ அல்லது தேவராய்ப் பிறப்பதோ சிவனருள் வாய்க்கப் பெற்றபோதேயாம்.*

***குறிப்புரை :-*** *'அவ்வாறான பொழுது ஞானியராதல் அவனது அருளின்றி எங்ஙனம் ஆகும்' என்பது கருத்து. 'சிவன்' என்னும் சொல்தரும் பொருள்களுள், 'தூயதன்மையன்' (சிவஞானபோதம், சூ.5 அதி.2 உரை) என்பதும் ஒன்றாகலால், "புனிதன்" என்றது 'சிவன்' என்றவாறு. "நண்ணி" என்னும் செய்தெனெச்சத்தை, 'நண்ண' எனச் செயவெனெச்சமாகத் திரித்துக் கொள்க. விளக்கு, பயன் பற்றிவந்த உவமை. பிறப்புக்களில் மக்கட் பிறப்பும், தெய்வப் பிறப்பும் சிறந்தன வாகலின் அவற்றை அடைதலையே எடுத்துக் கூறினார்.*

*இதனால், 'உயர்வு யாதும் சிவனருள் இன்றி ஆகாது' என்பது கூறும் முகத்தால் ஞானம் அவனருள் இன்றி வாராமை வலியுறுத்தப் பட்டது.*

**1630.** **அவ்வுல கத்தே பிறக்கில் உடலொடும்**
**அவ்வுல கத்தே அருந்தவம் நாடுவர்**
**அவ்வுல கத்தே அரனடி கூடுவர்**
**அவ்வுல கத்தே அருள்பெறு வாரே. 8**

---

**1629.** ***தெளிவுரை :-*** *'உடம்பு' என்னும் நிலையில்லாத தேரின்மேல் ஏறி, மனமாகிய பாகன் தன் கைவன்மையைப் பொருத்தி, கண்ட இடங்களில் செல்லச் செலுத்துதலினால் வழியறியாது மயங்குகின்ற உயிர்கள் சிறிதே உணர்வு பெற்றுச் சிவன்மேற் செல்லும் அன்பாகிய தேரில் ஏறிச்சென்று அவனது அருளைப்பெற்றால், அங்ஙனம் அதனைப் பெற்றவரது குழாமாகிய தேரின்மேல் ஏறிச் சீவன் சிவனை அடைந்து அவனாய் விடும்.*

***குறிப்புரை :-*** *நிமலன் - அநாதியே மலமற்ற பரசிவன். ஆயம் - கூட்டம். காயம் - உடல். காயத்தைத் தேராக உருவகிக்கின்றவர் அதன் இயல்பை உணர்த்தவேண்டி அதனை "மாயத் தேர்" என்றும் கூறினார். கை, ஆகுபெயர். அன்றி, 'கைகூட்டல்' என்பது, கையைப் பொருத்தி ஒட்டுதலாகிய காரியத்தைக் குறித்தது என்றலுமாம். 'உணர்' என்னும் முதனிலைத் தொழிற் பெயரில் 'உணர்வால்' என உருபுவிரிக்க. 'உணர்ந்த பொருளிலன்றி அன்பு நிகழாது' என்பதனை உணர்த்த, 'உணர்வால் நேயத்தேர் ஏறி' என்றார். உணர்வு சிவனை உணர்தற்கு இருவினை யொப்பில் நிகழும் சத்திநிபாதம் காரணமாம். "நல்லினத்தினூஉங்கும் துணையில்லை" (திருக்குறள், 460) என இன்பத்தை எய்துதற்கு நல்லினம் சாதனமாக் கூறலின், அதனையும் தேராக உருவகித்தார். "அவன் இவன் ஆமே" என்றதனை, 'இவன் அவன் ஆமே' என மாற்றியுரைக்க. இது நிமலன் அருள் பெற்றதன் பயனை விளக்குவதாய் வேறு முடிபாகலின், திணை வழுவும், பால் வழுவும் ஆகாமையறிக.*

*இதனால், 'சிவனருளைப் பெற்றுச் சிவமாவதற்கு முதற்கண் அன்பு வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**1630.** ***தெளிவுரை :-*** *'சரியை, கிரியை, யோகம்' என்னும் இவற்றின் பயனாகச் சிவலோகவாசிகளாய் அங்குத் தோன்றினும் அங்ஙனம் தோன்றினோர் ஞானத்தைப் பெறுதற்கு அவ்வுடம்பொடு நின்று அங்கே அரிய தவத்தைச் செய்ய விரும்புவர். அத்தவத்தின் பயனாக ஞானத்தைப் பெற்றுச் சிவனடியையும் சேர்வர். அதற்குச் சிவனது அருளை அவர் முன்னர்ப் பெறுதலுடையவரேயாவர்.*

**1631.** கதிர்கண்ட காந்தம் கனலின் வடிவாம்
மதிகண்ட காந்தம் மணிநீர் வடிவாம்
சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவாம்
எதிர்கொண்ட ஈசன் எழில்வடி வாமே. **9**

---

***குறிப்புரை :-***

*ஈசனியோ கக்கிரியா சரியையினில் நின்றோர்*
*ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்*
*ஒடுங்கும்போ தாரன்முனிலா தொழியினுற்பவித்து*
*ஞானநெறியடைந்தடைவர் சிவனை.*

*எனவும்,*

*"அங்கு நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற்றாளே"*
*- சிவஞானசித்தி, சூ. 8.25*

*எனவும் உணர்த்தினமை காண்க.*

*இதனால், 'எத்தகையோரும் தவத்தால் சிவனருளைப் பெற்றே ஞானத்தைப் பெறுவர்' என்பது கூறப்பட்டது.*

**1631. *தெளிவுரை :-*** *எனின், ஈசன்வடிவு அழகின் பிழம்பு என அறிவித்தல் நுதலிற்று. சூரியனைக் கண்ட சூரியகாந்தக்கல் நெருப்பின் வடிவாம்; சந்திரனைக்கண்ட சந்திரகாந்தக்கல் முத்துப்போலும் வெள்ளிய நீரின்வடிவாம்; அதனோடு மோதும் கருவியாகிய முக்கியைக் கொண்ட சக்கி என்னும் தீத்தருகல் எரியின் வடிவாம்; அனல்வடிவான சிவன் மேகத்தின் வடிவமாம் என்றவாறு.*

*கற்கள் சார்ந்ததன் வண்ணமாக அவற்றையே தர. இறைவன் உரு தீவண்ணனாகியும் பொறி புலன்களைப் பிரியாதே கவரும் எழிலியின் வடிவம் என்பது உணர்த்தியவாறு.*

*கதிர் - வெங்கதிராய சூரியன். காந்தம் - சூரியகாந்தம். சூரியனைக் கண்ட சூரியகாந்தக்கல் தானும் தியாகித் தீயையுமிழுவதாம் என்பது.*

*மதி - நிறைமதியாகிய சந்திரன். மதிகண்ட காந்தமாவது சந்திரகாந்தக்கல்.*

**1632.** நாடும் உறவும் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மான்என்று
கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல்ல
வீடு மளவும் விடுகின் றிலேனே. 10

---

*மணிநீர் - தெளிவால் முத்துப்போலும் வெள்ளிய நீர். முத்தைக் கரைத்துத் தெளியவைத்தாற் போலும் நீர் எனலுமாம்.*

*சதி - மோதுதல், சதிகொண்டசாக்கி - சிக்கியால் மோதுதல் கொண்ட சக்கியென்னுங் கல் என்க. உலக வழக்கில் சிகிமுகி என்னுங் கல் சக்கிமுக்கியென வழங்கலின் அதனையொட்டி அதனை முதனீட்டிச் சாக்கியென்றார். சிகி முகி - தீயை முகத்தில் உடையது. சிகி முகிக்கல் ஒன்றோடொன்று மோதின் எரிதோன்றுமாதலின் எரியின் வடிவாம் என்றார்.*

*எரிகொண்ட ஈசன் - தீயைத் திருமேனியாகக் கொண்ட இறைவன். காந்தக்கற்கள் போலாது தான் எரிமேனியனாக இருந்தும், கண்ணையும் கருத்தையும் கவருதலின் மேகத்தின் வடிவானவன் என்றார். எழிலி - மேகம். எழில் வடிவாம் எனப் பாடங்கொண்டு அழகே வடிவாம் எனலுமாம்.*

*மேகம் வரையாது வழங்கும் அருளைக் குறிப்பித்தது. இதனால் இம்மந்திரம் அதிகாரத் தொடர்பினைக் குறித்தல் காண்க.*

**1632. தெளிவுரை :-** ***நாட்டில் உள்ளார் பலரோடும், மற்றும் எனக்கு உற்றாராய அவரோடும் அளவளாவி, 'எங்கள் சிவபெருமான் யாண்டுளன்' என்று தேடுவேன்; அத்தேடுதலுக்கு அவன் அகப்படா தொழியான் ஆதலின், அவன் அகப்பட்ட இடத்தில் 'சிவபெருமான் கிடைத்தான்' என்று மகிழ்ந்து அவனோடு சேர்வேன். சேர்ந்தபின் என் உயிர் பிறவிடத்தன்றி அவனது திருவடியிலே சென்று சேர்தற் பொருட்டு இந்த உடம்பு அழியும் வரையில் அவனை விடாதே பற்றிக் கிடப்பேன்.***

***குறிப்புரை :-*** ***'நீவிரும் அவ்வாறு செய்ம்மின்' என்பது குறிப்பெச்சம். "நாடு" என்றது அதில் உள்ளாரையும், "உறவு" என்றது அதனை உடையாரையும் குறித்தன. 'நாட்டோடும், உறவோடும்' என உருபு விரிக்க. அளவளாவுதல் சிவன் இருக்குமிடத்தை அறிதற்கு.***

'தேடுகின்றிலை தெருவுதோ றலறிலை' - தி.8 திருச்சதகம், 31

எனவும்,

"வியந்தாங்கலறித் - தேடிற்றிலேன்
சிவன் எவ்விடத்தான் எவர்கண்டனர் என்று"

- தி.8 நீத்தல் விண்ணப்பம், 45

எனவும் ஆளுடைய அடிகள் அருளிச் செய்தமையும் காண்க. "சிவபெருமான்" என்பதற்கு முன்னும், பின்னும் 'கிடைப்பின், கிடைத்தான்' என்னும் சொற்கள் எஞ்சி நின்றன. வீடுதற்கு வினைமுதல் உடலாதல் வெளிப்படை. உடம்பு உள்ள காலத்து அதன் வழிப்பட்டு வேறொன்றைப் பற்றியிருப்பின் அது நீங்குங்காலத்து உயிர்முன் பற்றியிருந்த பொருளையே அடையுமாகலானும், அவ்வாறன்றி அக்காலத்தில் இறைவனையே பற்றியிருப்பின் அது நீங்கியபொழுது உயிர் அவனையே அடைந்து விடும் ஆகலானும், "வீடு மளவும் விடுகின்றி லேனே" என்றார். நாயனார் சிவனை விடாது பற்றி நின்றவரேயாதலின், "தேடுவன்" என்றும், "தேடிக்கூடுவன்" என்றும் கூறியது, 'விட்டொழிவேமோ' என்னும் அச்சத்தால், 'ஒருகால் விடநேரினும் மீளவும் விரையப் பற்றுவேன்' என்றதாக உரைக்க. என்னை?

பெறாஅமை அஞ்சும்; பெறிற்பிரி வஞ்சும்;
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு.

- திருக்குறள், 1295

என்பது காதலர் இயல்பாதலின்.

இதனால், 'சிவபிரானது திருவருளை வேண்டுவார் அஃது ஒன்றையே நாடி முயலுதலும், முயன்று பெறின் பின்னர் விடாமையும் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

## 8. அவ வேடம்

*சிவகுருவின் அருள் பெறுதற்கு வேண்டும் துறவு, தவம் இவற்றையும், இவற்றால் பெறற்பாலதாகிய சிவனது அருளின் இன்றி யமையாமையும் கூறிய நாயனார், 'அகத்தே தவ உணர்வோடு, புறத்தே தவவேடமும் வேண்டற்பாலதே' என்பது உணர்த்துபவர், முதற்கண் அகத்தே தவ உணர்வு இன்றிப் புறத்தே கொள்ளும் வேடம் பயனில தாதலை ஆறு மந்திரங்களால் கூறுகின்றார். அதாவது பயன்படாத வேடம் என்பதாம். அருளைப் பெற்று ஞானம் வரப்பெறாதார் வேடம் அவவேடமாகும்.*

**1633.** ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்
ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும்
தேடியும் காணீர் சிவனவன் தாள்களே. 1

---

**1633.** *தெளிவுரை :- முயலாது வைத்து வயிறு வளர்த்தலையே பயனாகக் கருதித் தவத்தவரது பலவகைப்பட்ட வேடங்களைப் புனைந்து, அவற்றாலே பகட்டையும் மிகக் காட்டி உலகத்தாரை அஞ்சுவித்துத் திரிகின்ற அறிவிலிகாள், உலகத்தாரின் வேறுபட்ட வேடத்தைக் கொண்ட நீவிர் அதற்கியைய உண்மை அன்பால் ஆடியும், துதிப்பாடல்கள் பலவற்றைப் பாடியும், அழுதும், 'சிவன் எங்கேனும் காணப்படுவானோ' என்று தேடியும் நிற்குமாற்றால் சிவனது திருவடிகளைக் காணும் பேற்றைப் பெறுங்கள்; அது பயனுடைத்தாம்.*

*குறிப்புரை :- அடிசில் - சோறு. "ஆடம்பரங் கொண்டு" என்பதை, "வேடங்கள் கொண்டு" என்பதன் பின்னர்க் கூட்டி உரைக்க. 'உண்பான்' என்பது தொழிற் பெயராய் நின்றது. 'உண்பான் ஏன்' என்பது முதலியவற்றிற் போல, 'பயனாக' என்னும் ஆக்கச் சொல் எஞ்சி நின்றது. 'பாடியும்' என உம்மையைத் தொகாது ஓதுதல் கூடாமை அறிக.*

*இதனால், அகத்துணர்வோடு கூடாத வேடத்திற்குப் பயன் புறத்தாரை வெருட்டுதலல்லது பிறிதில்லை என்பதும், அதனால், அத்தன்மையான வேடத்தைக் கொள்ளுதல் அறியாமையாம் என்பதும் கூறப்பட்டன.*

**1634.** ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்
மான நலங்கெடும் அப்புவி ஆதலால்
ஈனவர் வேடம் கழிப்பித்தல் இன்பமே. 2

**1635.** இன்பமும் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செய லால்அந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாடொறும் நாட்டினில்
மன்பதை செப்பம் செயின்வையம் வாழுமே. 3

---

**1634. *தெளிவுரை :-*** *போலித் தவத்தோரின் அவ வேடத்தை அகற்றல் இன்றியமையாததென உணர்த்தல் நுதலிற்று. சிவஞானம் பெறாதார் தவவேடத்தை மட்டும் பூண்டு இந்நாட்டில் இழிவான காரியங்களைச் செய்து, பிச்சையெடுத்து உண்டு உயிரோடு இருப்பினும் அந்தப்பூமி பெரிய நன்மைகள் அழியும் ஆதலால் இழிசனர்களாகிய அவர்கள் வேடத்தை அகற்றுதல் இன்பமாம் என்றவாறு.*

*அவவேடத்தார் வாழும் பூமி வளங்குன்றும் ஆதலால் அவர்களை அகற்றுதல் இன்றியமையாததாகும் என்பது கருத்து.*

*ஈனம் - கூடாவொழுக்கமும் கொலையும்களவும் முதலான இழிசெயல்கள். அப்புவி மான நலங்கெடும் என்க. அவர்கள் வேடத்தைக் கழித்து உலகவரில் ஒருவராக்கினால் அவர்களால் வரும் தீங்கு குறையும் என்க.*

*இதனால், <u>போலி வேடத்தாரை அறிந்து அகற்றுதல் அறிவுடையார்க்குக் கடனாதல் கூறப்பட்டது.</u>*

**1635. *தெளிவுரை :-*** *'ஒரு நாட்டில் வாழும் மக்களிடத்துள்ள நற்செயல் தீச்செயல்களாற்றானே அந்த நாட்டிற்கு இன்பமும், துன்பமும் உளவாவன' என்று அறிந்தோர் கூறுவர். ஆதலால், அரசனாவான் தனது நாட்டில் நிகழும் நற்செயல் தீச்செயல்களை நாள்தோறும் சோர்வின்றி ஆராய்ந்து தீச்செயல் செய்யாதவாறு மக்களைத் திருத்துவானாயின், அவனது நாடு துன்பமின்றி, இன்புற்று வாழும்.*

***குறிப்புரை :-*** *'ஆதலால் அரசன் அதனை ஒருதலையாகச் செய்க' என்பது குறிப்பெச்சம். போலி வேடத்தாரை அகற்றுதல்*

**1636.** இழிகுலத் தோர்வேடம் பூண்பர்மேல் எய்த
வழிகுலத் தோர்வேடம் பூண்பர்தே வாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ரானார்
கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே. **4**

---

*சிறப்பாக அரசற்குக் கடமை என வலியுறுத்துவார். அரசு முறைமையைப் பொதுப்பட எடுத்தோதினார். முதல் தந்திரத்துள் இதனையே அரசு முறை பற்றிக் கூறுதற்கண் பல மந்திரங்களால் நாயனார் விரித்துரைத்தமை காண்க.*

*'நாடு நன்றாவதும், தீதாவதும் அதன்கண் வாழும் மக்களது இயல்பானே' என்பதை,*

*நாடா கொன்றோ, காடா கொன்றோ*
*அவலா கொன்றோ, மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே. - புறம். 187*

*எனச் சங்கத்துச் சான்றோராய ஔவையாரும் கூறினார்.*

*இதனால், 'போலி வேடம் தலைகாட்டாதபடி செய்தல் சிறப்பாக அரசற்குக் கடன்' என்பது கூறப்பட்டது.*

**1636. *தெளிவுரை :-* *தாழ்ந்த குலத்திற் பிறந்தவர்கள் சிலர், ஒழுக்கத்தால் உயர்வெய்த நினையாமல், எளிதில் மேன்மையைப் பெறுதற் பொருட்டுத் தவவேடத்தைப் புனைந்து கொள்வர். உயர்ந்த குலத்திற் பிறந்தவர்கள் சிலரும் அக்குலத்திற்கு ஏற்ற ஒழுக்கமுடையராய் நிற்கமாட்டாமையின் அக்குலத்தன்மை அழியப்பெற்று அந்நிலை நீங்கிக் கடவுளராக வைத்துப் போற்றப்படும் மிக உயர்ந்த நிலையைப் பெறுதற் பொருட்டுத் தவ வேடத்தைப் புனைந்து கொள்வர். இவ் இருசாராரும், தொன்று தொட்டே பழிபாவங்களைச் செய்து பாழ்பட்டுவரும் கொடியராயினார். நாட்டுவாழ் குலத்தோரி னின்றும் நீக்கப்பட்ட குலத்தராயினாற் போலவே அரசு முறைமையுள் நாட்டு வாழ்க்கையினின்றும் நீக்கப்பட்டனர்.***

***குறிப்புரை :-* 'வழிகுலத்தோர்' எனின் மோனை சிதைதலானும், பொருள் படாமையானும் அது பாடமாகாமை அறிக. "தேவாக" என்றதனால், இது 'பூசுரர்' எனப்படுவாரை உட்கொண்டு கூறிய**

*தாயிற்று. பழிகுலம் - பழிக்கப்பட்டு வரும் குலம். இப்பழி, அருள் வடிவினவாகிய ஆக்களை அஞ்சாது கொல்லும் தொழிலுடைமை பற்றிப் பழிக்கப்படும் பழியாம். இக்குலத்தவரை, 'சண்டாளர்' என்றலும் இதுபற்றி, 'இவர் நாட்டில் ஏனையோரோடு கூடிவாழ்தற்கு உரியரல்லர்' என்பது பண்டை அரசுமுறை. அதனால், 'அம்முறையே போலி வேடத்தார்க்கும் உரித்தாகற்பாலது' எனக் கூறுமுகத்தால், போலி வேடம் பூண்பாரது கொடுமையை விளக்கினார்.*

> *நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து*
> *வாழ்வாரின் வன்கணார் இல். - குறள், 276*

*என்றார் திருவள்ளுவ நாயனாரும், 'கழிகுலத்தோர்கள் போல' என உவமஉருபு விரிக்க. போலி வேடத்தால் உளவாகும் தீமைகள் பல அவற்றுள் உண்மை வேடத்தாரையும் உலகம் ஐயுறச் செய்தலும் அது காரணமாக உண்மை வேடம் தோன்றாது போதலும் தலையாய தீமைகள், 'அதனால் அது குறிக்கொண்டு களையற்பாலது' என நாயனார் பல்லாற்றானும் வலியுறுத்துகின்றார்.*

> *"இவ்வேடர் - கொத்துக் கெலாமோர்*
> *கொடும்பழியைச் செய்தீரே"*

*என்னும் கந்தபுராண (வள்ளியம்மை, திருமண - 108)ச் செய்யுளில், "இவ்வேடர் கொத்து" என்றதற்கு, 'இத் தவவேடம் உடையாரது கூட்டம்' என்பதே உட்பொருளாக உரைப்பர். அதனானும் போலி வேடத்தது கொடுமையை உணர்ந்து கொள்க.*

*மூன்றாம் அடியை, 'பாசண்டரானார்' எனப்பாடம் ஓதி, 'சமயத் தலைவர்போல வேடம் பூண்டும் அத்தலைமைக் குணம் இலராய்ப் பழிக்கப்படும் கூட்டத்தினர் மக்களால் விலக்கப்பட்ட கூட்டத் தினராய், அரசனாலும் களையப்பட்டார்' என்று உரைத்தலும் ஆம்.*

*இதனால், 'அரசன் தன் குடிகளில் உள்ளாரை இங்ஙனம் கழித்தல் கூடுமோ' என்னும் ஐயத்தையகற்றி, அது முறையாமாறு கூறப்பட்டது. வேடம் பூணத்தகார் பூணலாகாது.*

**1637. தெளிவுரை :- அகத்தே தவ உணர்வின்றிப் புறத்தே பொய்யாகத் தவவேடத்தை மட்டும் கொண்டு நடித்தவர் புண்ணியராகாது பாவிகளேயாவர் என்பது உண்மையாயின், அச் செயலுடையார் மறுமையில் நரகம் புகுதலும் உண்மை. இனி அவரது நடிப்பிற்குப் பயன் மெய்த்தவம் இல்லாதொழிய பொய்த்தவத்தால்**

**1637.** பொய்த்தவம் செய்வார் புகுவர் நரகத்துப்
பொய்த்தவம் செய்தவர் புண்ணிய ராகாரேல்
பொய்த்தவம் மெய்த்தவம் போகத்துள் போக்கியம்
சத்திய ஞானத்தால் தங்கும் தவங்களே. **5**

**1638.** பொய்வேடம் பூண்பர் பொசித்தல் பயனாக
மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர்
பொய்வேடம் மெய்வேடம் போலவே பூணினும்
உய்வேட மாகும் உணர்ந்தறிந் தோர்க்கே. **6**

---

*இம்மையிற் சிறிது இன்பத்தை நுகர்தலும், மறுமையில் பெரிய நரகத் துன்பத்தை அடைதலுமேயாம். ஆகையால், உண்மையான அகத்துணர்வாலே தவம் உளதாகும்; பொய் வேடத்தால் உளதாகாது.*

*குறிப்புரை :-* இரண்டாம் அடியை முதற்கண் வைத்து உரைக்க. மூன்றாம் அடியை, 'போகத்துட் போக்கியம்' என ஓதுதல் பாடமன்று. ஈற்றில் நின்ற பிரிநிலை ஏகாரத்தை, "ஞானத்தால்" என்பதனோடு கூட்டுக. "ஞானம்" என்றது இங்குத் தவ உணர்வை.

இதனால், போலி வேடம் மறுமையில் நரகம் பயத்தல் கூறப்பட்டது.

*தவம்மறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து*
*வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. - திருக்குறள், 274*

என்றதனால், 'போலி வேடம் புனைதல் உயிர்க்கொலை செய்தலோ டொத்த தீவினைச் செயல்' எனத் திருவள்ளுவரும் குறிப்பால் உணர்த்தினார். அதனால், 'அவர் நரகம் புகுதல் அவர்க்கும் உடன்பாடு' என்பது பெற்றாம்.

**1638. தெளிவுரை :-** சிலர் தொழில் செய்யாது மடிந்திருந்து வயிறு வளர்க்கக் கருதியே பொய்யாகத் தவ வேடத்தைப் புனைந்து கொள்வர். ('அவர் இல்வாழ்வாரை மருட்டியும், வெருட்டியும், வைதும், அவனால் வெறுத்துப் போடப்படும் இழிந்த பிச்சையை நீக்காது ஏற்று உண்டு வாழ்வர்'). மெய்யாகவே தவ வேடத்தைப் பூண்பவர் இல்வாழ்வார் அன்போடு அழைத்து இடும் உயரிய பிச்சையையே ஏற்பர். (இவையும் அவ்இருசாராரையும் அறிதற்குக் குறியாம்). தோற்றத்தால் பொய்வேடமும் மெய்வேடம் போலவே

*பூணப் பட்டாலும், உணர்வோடு கூடாத பொய் வேடம் அவர்க்கு உய்தற்கு ஏதுவாய வேடமாகாது கெடுதற்கு ஏதுவாய வேடமாக, தவத்தினது பெருமையை உணர்ந்து அதனைப் பூண்டு நிற்போர்க்கே அஃது அவர் உய்தற்கு ஏதுவான வேடமாகும்.*

***குறிப்புரை :-*** *மிகு பிச்சை - உயர்வுடையதாய பிச்சை. உயர்வு அன்பொடு கூடிநிற்றல். 'மெய்வேடம் பூண்பார் கொள்ளும் பிச்சை உயர் பிச்சை' எனவே, 'பொய் வேடம் பூண்பார் கொள்ளும் பிச்சை இழி பிச்சை' என்பது போந்தது. 'மெய் வேடம் பூண்டார் இல்வாழ்வார் வருந்தாது மகிழ்ந்து இடக் கொள்ளும் பிச்சை; வண்டு, மலர் வருந்தாது அதனிடத்துள்ள தேனை உண்டல் போல்வது' என்றற்கு அதனை, 'மாதுகரி பிச்சை' என்பர் வடநூலார். ''பூணினும்'' என்பது 'பூணப்பட்டாலும்' எனச் செயப்பாட்டு வினைப்பொருள் தந்தது. இனி, 'பொய்வேடத்தை' என இரண்டாவது விரிப்பினுமாம். 'அறிந்தோர்க்கே உய்வேடமாம்' என்றதனால், 'அறியாத பொய் வேடத்தார்க்கு அஃது உய்வேடமாகாது, கெடுவேடமாம்' என்பது விளங்கிற்று. "உய்வேடம்" என்பதற்கு, 'அப்பொய்வேடம் ஒழிதற்குரிய வேடமாம்' என்றுரைப்பினுமாம். ''உணர்ந்தறிந்தோர்'' என்ற ஒருபொருட் பன்மொழிகள் அவற்றதுகாரியமாகிய மெய்வேடத்தினையும், அதற்கேற்ற ஒழுக்கத்தையும் குறித்தன.*

*இதனால், 'போலிவேடமும் உண்மை வேடத்தோடு ஒத்துத் தோன்றினும், செயலாலும், பயனாலும் அவை தம்மில் பெரிதும் வேறுபட்டனவாம்' என்பது கூறுமுகத்தால், போலிவேடம் தவ வேடமாகாது அவவேடமாதல் உணர்த்தப்பட்டது. தவத்தின் பயன் ஞானம் என்பதை உணர்ந்து திருவடிஞானம் பெறுவதற்கு என்ற எண்ணத்துடன் பூணின் பொய் வேடமும் மெய் வேடமாகும் என்பது கருத்து.*

## 9. தவ வேடம்

### *(தவத்தோருக்குரிய தவவேடங்கள்)*

***இனி முறையானே நாயனார் அகத்துத் தவ உணர்வுடை யார்க்குப் புறத்துத் தவவேடம் சிறப்புத்தருவதாதலை நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார். இச்சிறப்பு முன்னரே வாய்க்கப் பெறாமைக்குத் திருநாவுக்கரசர், "கோலமாய நலம் பொல்லேன்" (தி.6 ப.95 பா.9) என இரங்கி மொழிந்தமை காண்க.***

**1639.** **தவம்மிக் கவரே தலையான வேடர்**
**அவம்மிக் கவரே அதிகொலை வேடர்**
**அவம்மிக் கவர்வேடத் தாகார் அவ்வேடம்**
**தவம்மிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே.** **1**

---

**1639.** தெளிவுரை :- *அகத்துத் தவ உணர்வு மிகுந்தவரே புற வேடத்தால் உயர்த்துக் கூறப்படுவர். அகத்து அவ்வுணர்வில்லாது உலகியல் உணர்வு மிகுந்தோர் தவவேடம் புனையின் 'உயிர்க் கொலையை மிகச் செய்யும் வேடர்' எனப்பொருள் படுமாறு இருபொருட் சொல்லாக 'வேடர்' எனச் சொல்லப்படுவர். அவர் வேட மாத்திரையால் தவத்தோர் ஆகார் ஆதலின், தவ உணர்வு மிகுந்தவர்க் கல்லது, தவவேடத்தைத் தாங்கிநிற்றல் பொருந்தாது.*

*குறிப்புரை :- "தலையான வேடர்" என்றாராயினும், 'வேடத்தால் தலையானவர்' என்றலே கருத்தாதல் அறிக. 'தவ உணர்வு இல்லாதார் தவ வேடம் புனையின் இகழப்படுவர்' என்பது இரண்டாம் அடியில் கூறப்பட்டது, மூன்றாம் அடியில், 'வேடத்தால்' என உருபு விரிக்க. "ஆகார்" என்பதற்குமுன் 'தவத்தோர்' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், 'தவவேடம் தவ உணர்வு உடையோர்க்கே உரியது' என்பதும், 'அதனைத் தாங்குதல் அவர்க்கு மிக்க சிறப்பைத்தரும்' என்பதும் கூறப்பட்டன. இதனுள் ஈரிடத்தும் 'தவத்தோர்' என்னாது, "தவம்மிக்கவர்" என்றே அருளிச் செய்த குறிப்பு நோக்கற்பாலது.*

1640. தெளிவுரை :- *தவவேட்கையோர் யாவர்க்கும் முதற்சாதன மாவது திருநீறணிதல். சிவநூல் கற்பிக்கும் ஆசிரியர்க்கு அதனோடு காதில் அணியப்படுகின்ற செப்புக் குழையும், செம்பை*

**1640.** பூதி அணிவது சாதனம் ஆதியில்
காதணி தாம்பிர குண்டலம் கண்டிகை
ஓதி யவர்க்கும் உருத்திர சாதனம்
தீதில் சிவயோகி சாதனம் தேரிலே. 2

**1641.** யோகிக் கிடுமது உட்கட்டுக் கஞ்சுளி
தோகைக்குப் பாசத்துச் சுற்றும் சடையதொன்
றாகத்து நீறணி அங்கம் கபாலம்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. 3

---

*இடையிட்டுக் கோத்த உருத்திராக்க மாலையும் வேடங்களாம். சிவயோகிக்குரிய வேடத்தை ஆராயுமிடத்துச் சிவனிடத்துக் காணப்படும் கோலங்கள் பலவுமாம்.*

***குறிப்புரை :-*** *அவை வருகின்ற மந்திரத்தில் கூறப்படும். 'ஆதியில் சாதனம் பூதி அணிவது' என மாற்றியுரைக்க. 'ஓதியவர்' என்பது, 'பிறரை ஓதுவிக்கும் ஆற்றலுடையார்' என்பது உணர்த்தி நின்றது, "சிவயோகி சாதனம் தேரில் உருத்திர சாதனம்" என்க.*

*இதனால், 'பொதுத் தவவேடமும், ஒருசார்ச் சிறப்புத் தவ வேடமும் இவை' என்பது கூறப்பட்டது.*

**1641.** ***தெளிவுரை :-*** *சிவயோகிக்கு அணியப்படும் பொருள்களாவன, அரையிற் கட்டும் கீளோடு கூடிய கோவணம், சட்டை, உமைக்குப் பாகம் இல்லாமல் ஒரு சடையால் சுற்றிக் கட்டப்படும் சடைமுடி, உடம்பு முழுவதும் முற்றப் பூசிய திருநீறு, வேண்டும் பொழுது எடுத்துத் தன் உடம்பில் பூசிக் கொள்ளுதற்கும், தன்னை வணங்கினார்க்குக் கொடுத்தற்கும் திருநீறு வைக்கப்பட்ட பொக்கணம் அல்லது பை, பிரம கபாலத்தை நினைப்பிக்கும் பிச்சைப் பாத்திரம், திருக்கையில் பிடிக்கும் மாத்திரைக் கோல் அல்லது பிரம்பு என்னும் இவைகளாம்.*

***குறிப்புரை :-*** *அது - அவ்வேடம். பின்வரும் பொருள்கள் பலவும் 'வேடம்' என ஒன்றாக வைத்துச் சுட்டப்பட்டன. 'பாகம் அற்று' என்பது, 'பாகற்று' எனக் குறைந்து நின்றது, மேல், "உருத்திர சாதனம்" என்றது பற்றிச் சிவன், ''மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர் குழல் பாகம்'' ஆதல் (தி.4 ப.8 பா.10) கொள்ளப்படாது, சடை ஒன்றுமே கொள்ளப்படும் என்றற்கு,*

**1642.** காதணி குண்டலம் கண்டிகை நாதமும்
ஊதுநற் சங்கும் உயர்கட்டி கப்பரை
ஏதுமில் பாதுகம் யோகாந்தம் ஆதனம்
ஏதுமில் யோகபட் டம்தண்டம் ஈரைந்தே. **4**

---

*'தோகைக்குப் பாசத்துச் சுற்றும் சடை ஒன்று' என்றார். இதனானே, சிவயோகி ஏனை உலக யோகிபோலத் துணைவியோடிருத்தல் கூடாமை குறிக்கப்பட்டது. ''ஆகத்து நீறு'' என முன்னர்ப் போந்ததனைப் பெயர்த்தும் கூறினமையின் உடம்பு முழுதும் பூசிய நீறு என்பது போந்தது. "அணி" என்பது, 'அணிகின்ற, அணிவிக்கின்ற' என, "இருவயினிலையும் பொருட்டாய்" (தொல். எழுத்து. மொழிமரபு) நின்றது, 'அதனை அணி அங்கம்' என்க. சாங்கமாகிய பொக்கணம், திருநீற்றுப்பை இவற்றை ''அங்கம்'' என்றது பான்மை வழக்கு. 'ஶ்ரீஹஸ்தம்' என்னும் ஆரியச்சொல், 'சீகந்தம்' எனத் தற்பவமாயிற்று.*

*இதனால், 'சிவயோகிக்குரிய தவ வேடம் இவை' என்பது கூறப்பட்டது. இதனை;*

*"சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்சூழ்*
*சடைவெண்*
*பொத்திய கோலத்தினீர். - தி.8 கோவையார், 242*

*என்பதனோடு வைத்துக் காண்க.*

**1642. *தெளிவுரை :-* காதில் அணியப்படும் குண்டலம், உருத்திராக்க மாலை, நல்ல ஒலி உண்டாக வாய்வைத்து ஊதுகின்ற திருச்சங்கு, குண்டலத்தினும் உயர்ந்ததாகிய ஆறு கட்டி, திருவோடு, சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற தவச் சாலை, பாதுகை, யோகம் முடிதற்குரிய இருக்கை, குற்றமற்ற யோக பட்டம், யோக தண்டம் என்னும் பத்தும் தவத்தோர்க்குரிய வேடங்களாம்.**

***குறிப்புரை :-* பொதுப்படக் கூறியதனால், 'இவைகளை அவரவர் ஏற்ற பெற்றியாற் கொள்வர்' என்பது கருத்து. தவச்சாலையும் உபாங்கமாய்த் தவவேடமாதல் குறிக்கப்பட்டது.**

***இதனால், தவவேடமாவன பலவும் தொகுத்துக் கூறப்பட்டன.***

## 10. திருநீறு

*மேற்கூறிய தவ வேடங்களில் முதல் வேடமாகச் சொல்லப்பட்ட திருநீற்றின் பெருமை அதனோடு அடங்காமையின், அதன் பெருமையைத் தனி அதிகாரமாக வேறெடுத்து மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1643.** கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. 1

---

**1643.** *தெளிவுரை :- யாவரேனும் எலும்புக் கூட்டைத் தோளிலே கொள்ளும் சிவபெருமான் பூசுவதும், அணிந்தோர் யாவர்க்கும் கவசமாய் நிற்பதும் ஆகிய திருநீற்றை அதன் வெள்ளொளி மிக விளங்குமாறு பூசி மகிழ்ச்சியுறுவராயின், அவரிடத்து வினைகள் தங்கியிரா. சிவகதி கூடும். சிவனது அழகிய திருவடிகளையும் அவர் அடைவர்.*

*குறிப்புரை :- "கங்காளன் பூசும்" என்றது, 'எல்லாவற்றையும் ஒடுக்கியபின் அவை ஒடுங்கிய சாம்பலைப் பூசுகின்ற' என்னும் குறிப்பினது. சிவநெறியாளர்க்குத் திருநீறே கவசமும், திருவைந் தெழுத்தே அத்திரமுமாதலை,*

*"வித்தக நீறணி வார்வி னைப்பகைக்கு*
*அத்திர மாவன அஞ்செ ழுத்துமே". - தி.3 ப.22 பா.10*

*என ஞானசம்பந்தரும் குறிப்பால் அருளிச் செய்தமை காண்க. இக் கவசமும், அத்திரமும் வினையாகிய பகை வந்து தாக்காமற் காப்பதும், அப்பகையை அழிப்பதும் ஆதலை இம்மந்திரத்தாலும் இங்குக் காட்டிய தேவாரத்தாலும் அறிக. அவை பிற கவசங்களாலும், அத்திரங்களாலும் இயலாமையும் உணர்க. "சிவகதி" என்றது பத முத்தி அபர முத்திகளையும், 'திருவடி சேர்தல்' என்பது பர முத்தியையும் குறித்தனவாம். 'மகிழ்வீரேயாமாகில் சேர்வீரே' என்பதும் பாடம். கங்காளன் - முழு எலும்பைக் கையில் தண்டமாகவும், எலும்புகளை மாலையாகவும் அணிந்த சிவபெருமான். திருநீறு - வினைகள் வந்து பற்றாத வண்ணம் காக்கும் கவசம். திருவைந்தெழுத்து - அத்திரம்.*

1644. நூலும் சிகையும் உணரார்நின் மூடர்கள்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
பாலொன்றும் அந்தணர் பார்ப்பார் பரம்உயிர்
ஒரொன் றிரண்டினில் ஓங்காரம் ஓதிலே. 2

---

1644. ***தெளிவுரை :-*** *நூல் - பூணுநூல். அதனை அணிவதன் அடிப்படைக் கருத்து வேதாந்தத்தை உணர்ந்தவன் என்பதாம். குடுமி தரிப்பது வேதாந்தத்தால் விளையும் நுண்ணிய ஞானத்தை உணர்த்துவதாம். இவற்றையுடைய அந்தணர் உயிராகிய தன்னையும், தலைவனையும் காண்பராதலின் ஓங்காரம் ஓதுவர் என்பது கருத்து. அந்தண வேடத்துள் முதன்மை பெற்று விளங்கும் முப்புரிநூல், சிகை என்பவற்றது உண்மை இன்ன என்பதை முழு மூடராயுள்ளோர் சிறிதும் அறியமாட்டார். அவற்றின் உண்மையாவன யாவை எனின், 'முப்புரிநூல்' என்பது வேதத்தின் முடிநிலைப் பகுதியாகிய உபநிடதங்களும், 'சிகை' என்பது அவற்றின் பொருளுணர்வுமாம். நூலும், சிகையும் தம்பால் பொருந்தப் பெற்ற அந்தணர்கள், 'பரமான்மா, சீவான்மா' என்னும் இரண்டையும் தனித்தனி நன்குணர்வர் எனில், அது வேதத்தை நன்கு ஓதி, வேதாந்தத்தை நன்கு உணரும் பொழுதேயாம். வாளாநூலையும், சிகையையும் பொருந்தவைத்துக் கொள்வதனால் மட்டுமன்று.*

***குறிப்புரை :-*** *நூலாவது வேதாந்தம். நுண்ணிய சிகையாவது ஞானம். இதனை இங்குக் கூறவே, 'வேத வேதாந்தங்களை நன்கு ஓதி உணர்ந்தவர் திருநீற்றின் பெருமையை உணர்வாராகலான், அதனை அணிதலை ஒழியார்' என்பது குறிப்பாயிற்று. "வேதத்தில் உள்ளது நீறு" (தி.2 ப.66 ப.8) என ஞானசம்பந்தர் பாண்டிய மன்னன் முன் பலரும் அறிய அருளிச் செய்தமை இங்கு ஒரு தலையாக உணரற்பாற்று. 'சாபாலம்' என்னும் உபநிடதம் சிறப்பாகத் திருநீற்றின் பெருமை உணர்த்துவதாயுள்ளது. இவற்றால் 'திருநீறு அல்லது விபூதி' என நீவிர் புகழ்ந்துரைக்கும் பொருள் நறுமணம் முதலிய நலம் யாதுமில்லாத வெறும் சாம்பல்தானே என இகழ்தல் பேதமைப்பாலது என்பது போந்தது. அதனால், "நூலும், சிகையும் அறியார் நின்மூடர்கள்" என்றது போலவே, 'நீற்றது உண்மையும் அறியார் நின்மூடர்கள்' என ஓதுதலும் கருத்தால் பெறப்படும். நீற்றது உண்மையை இவர் "கவசத் திருநீறு" என்பதனால் மேலும் குறித்தார். திருஞானசம்பந்தர் "பராவண மாவது நீறு" (தி.2 ப.66 பா.8) என இனிது விளங்க அருளிச் செய்தார். இருவரும் முறையே, "பூசி*

*மகிழ்வரே யாமாயின் தங்கா வினைகளும்'' எனவும் ''பாவம் அறுப்பது நீறு'' (தி.2 ப.66 பா.8) எனவும் ஓதியருளினார். இவ்விடங்களில், 'திருநீறாவது இறைவனது திருவருளே' என்பது தெற்றென விளங்கி நிற்கின்றது' இங்ஙனம்;*

> *"தலைகல னாகஉண்டு தனியே திரிந்து*
> *தவவாண ராகி முயல்வர்;*
> *விலையிலி சாந்த மென்று வெறிநீறு பூசி*
> *விளையாடும் வேட விகிர்தர்"    - தி.4 ப.8 பா.9*

*என்றாற்போலவரும் சுருதிகளை உணராமையால்,*

> *"பூசுவதும் வெண்ணீறு; பூண்பதுவும் பொங்கரவம்"*
> *- தி.8 திருச்சாழல், 1*

> *"கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை"*
> *- தி.8 திருச்சாழல், 3*

*என்று புறச்சமயத்தார் இகழ்தலேயன்றி, 'வேதத்தை ஓதுதலால் வேதியர் எனப்படுகின்றேம்' எனக் கூறிக்கொள்வாருள்ளும் சிலர் திருநீற்றை 'சாம்பல்' என்று இகழ்ந்தொதுக்குதல் அவருக்குண்டான சாபக்கேடே என்பது,*

> *பேசரிய மறைகளெலாம் பராபரன்நீ எனவணங்கிப்*
> *பெரிது போற்றும்*
> *ஈசனையும் அன்பரையும் நீற்றொடுகண் டிகையினையும்*
> *இகழ்ந்து நீவிர்*
> *காசினியின் மறையவராய் எந்நாளும் பிறந்திறந்து*
> *கதியு றாது*
> *பாசமதி னிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற்*
> *படுதி ரென்றான்.*

*என்னும் கந்தபுராணத்தால் (அனந்தன் சாபம்நீங்கு படலம், 37) அறியப்படும். படவே, 'அந்தணர்' என்பாருள்ளும் சிலர் இத்தன்மை யராய் இருத்தலைத் திருவுளத்துட் கொண்டு அவரது இயல்பினை*

**1645.** அரசுடன் ஆல்அத்தி ஆகும்அக் காரம்
விரவு கனலில் வியன்உரு மாறி
நிரவியன் நின்மலன் தான்பெற்ற நீதர்
உருவம் பிரம உயர்குல மாமே. **3**

---

*விளக்குதற்கே இம்மந்திரத்தை இவ்வதிகாரத்தில் நாயனார் அருளிச் செய்தார் என்பது விளங்கும். சிவபிரானது விகிர்த வேடத்தின் பெருமைகள் பலவும் அறிதற்கு மிக அரியன என்பதை உணர்த்தவே,*

> *"சடையும் பிறையும் சாம்பற் பூச்சும் கீள்*
> *உடையுங் கொண்ட உருவம் என்கொலோ"*
>
> *-தி.5 ப.23 பா.1*

*என்றாற்போலப் பலவிடத்தும் அருளிச் செய்தார். இன்னோரன்ன திரு வருண்மொழிகட்குப் பின்னும் திருநீற்றிற்கு வேறாகச் சிலர் சில சமயக் குறிகளைப் படைத்துக் கொண்டது, மேற்காட்டிய சாபத்தின் வலியெனவே வேண்டும் என்க.*

*அந்தணர் பரம், உயிர் இரண்டும் ஓர் ஒன்றாகப் பார்ப்பார் எனில், அஃது 'ஓங்காரம் ஓதிலேயாம்' என உம்மையும் ஆக்கமும் விரித்து மாற்றிமுடிக்க. பார்த்தல் - ஆராய்ந்துணர்தல். "ஓர் ஒன்றாக" என்றது 'நுனித்து' என்றவாறு "ஓங்காரம்" என்றது, வேதத்தில் அது முதலாகத் தொடங்கிச் செல்லும் மந்திரங்கள் அமைந்த பாகத்தைக் குறித்தது. மந்திர பாகத்தின் உண்மையை உணர்த்துவனவே உபநிடதங் களாதலின், அம்மந்திர பாகத்தை முன்னர் நன்கு ஓதிப் பின்னர் அவற்றின் உண்மைகளை உபநிடதங்களில் உணர்தல் வேண்டும் என்றற்கு, "ஓங்காரம் ஓதிலே" என்றார். எனவே, "ஓதி அவற்றை உப நிடதங்களில் உணரிலே'' எனக் கூறுதலும் கருத்தாயிற்று. "நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்" என மேல் அந்தணர் ஒழுக்கத்தில் (பா.229) கூறிய நாயனார் அதனை இங்கும் மறித்தும் கூறியது பெரிதும் வலியுறுத்தற் பொருட்டாயிற்று. இதனுள் இன எதுகை வந்தது.*

*இதனால், 'பிறப்பால் உயர்ந்தோர்' எனப்படுகின்ற அந்தண ராயினும் அவர் உயர்வெய்துதல் திருநீற்றாலே என்பது கூறப்பட்டது.*

**1645.** ***தெளிவுரை :-*** *பசுவின் சாணம் அரசு முதலிய சமித்துக்கள் பொருந்தப்பட்ட சிவாக்கினியில் வெந்து தனது முன்னைப் பருவுரு மாறி அமைந்த அந்தத் திருநீற்றை உடல் முழுவதும் பூசித் தூய்மையை அடைந்த நல்லோரது உடம்பே பிரம ஞானத்தை அடையும் உயர்ந்த குலத்து உடம்பாம்.*

***குறிப்புரை :-*** *ஆலத்தி - ஆப்பி.*

*"மறைக்குங் காலை மரீஇய தொரால்"*
*- தொல். சொல். எச்சவியல், 47*

*என்பதனான் இஃது அவையல்கிளவி யாகாதாயிற்று. அன்றியும் ஒலி வகையால் 'ஆல் அத்தி' என்பது போலத் தோன்ற வைத்தமையாலும் அன்னதாகாதாயிற்று. 'ஆல் அத்தி' என்றே பொருள் உரைப்பின் திருநீற்றுக்கு முதலாகிய பசுச்சாணம் பெறப்பட்டமை அறிக. "அரசு" என்றது பிற சமித்துக்களுக்கு உபலக்கணம். 'ஆலத்தி அரசுடன் விரிவு கனலில் வியன் உருமாறி ஆகும் அக் காரம்' எனக் கூட்டுக. திருநீற்றின் வேறு பெயர்களுள் ஒன்றாகிய 'க்ஷாரம்' என்னும் ஆரியச் சொல், "காரம்" எனத் தற்பவமாய் அகரச் சுட்டேற்று, "அக்காரம்" என வந்தது. "அக்காரம் நிரவிய" எனச் சுட்டிக் கூறவே, திருநீற்றை, "சாம்பல், சுடலைப் பொடி" முதலாகப் பொதுவில் பலவகையாகக் கூறினும் 'தக்க பசுவின் சாணத்தைத் தக்க வகையில் பெற்று மந்திரத்தால் கோசலங் கொண்டு பிசைந்து உலர்த்திச் சிவவேள்வியில் இட்டுப் பெற்றதே உண்மைத் திருநீறாம்' என்பதனை முதல் இரண்டடிகளாற் கூறினார். நிரவுதல் - நிரம்பப்பூசுதல். 'பிறப்பால் அந்தணராதலே பிரம குலமாகாது; திருநீற்றை நிரம்ப அணிந்தவழியே ஆகும்" என்றற்கு 'சிவனுருவாம்' என்னாது "பிரம உயர்குலமாம்" என்றார்.*

*இதனால், 'திருநீற்றை இடாதவர் கடவுளை உணரமாட்டார்' என்பது கூறப்பட்டது*

***குறிப்புரை :-*** *அரசு, அத்தி, ஆல் என்பன சிவவேள்விக்குரிய சுள்ளிகள் (சமித்துகள்). அகாரம் - அந்த க்ஷாரம் என்னும் திருநீறு. நிரவியன் - உறுப்பிலி.*

## 11. ஞான வேடம்

*'தவத்தவர்க்கு வேடம் சிறப்புத்தருவது என்பதைக் கூறிய பின், தவத்தால் ஞானம் கிடைக்கப் பெற்றபின் வேடம் வேண்டுமோ வேண்டாவோ' என்பார்க்கு. 'அஃது அந்நிலையில் அவரது உணர்வின் படியாகும்' என்பதனை எட்டு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1646.** ஞான மிலார் வேடம் பூண்டும் நரகத்தர்
ஞானமுள் ளார்வேடம் இன்றெனில் நன்முத்தர்
ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்போல்
ஞான முளவேடம் நண்ணிநிற் பாரே. 1

---

**1646.** *தெளிவுரை :-* ஞானம் இல்லாதவர் ஞானிகட்குரிய வேடத்தைப் பூண்டிருப்பினும் நரகத்திற்கு உரியவரேயாவர். ஞானம் உள்ளவர்கள் தம்மிடத்தில் ஞானிகட்குரிய வேடம் இல்லா தொழியினும் பரமுத்திக்கு உரியவரே. அதனால், ஞானம் உண்டான பின்னர் அதற்குரிய வேடத்தை விரும்புவோர் சிவபிரானைப் போலவே அந்த வேடத்தைப் பூண்டிருப்பர்.

*குறிப்புரை :-* இன்றெனினும் என உம்மை விரிக்க; வேடம் பூணின் அது என்றும் இறைவனையே நினைப்பிக்குமாதலின் வேடம்பூணல் இன்றியமையாததாகும். வேடம் பூணல் இன்னதற்கென்ற ஞானமில்லாதார் குழந்தை அரசவேடம் பூண்டாற்போன்றும், பித்தன் அமைச்ச வேடம் பூண்டாற்போன்றும், பூணின் இவரும் பயனெய்தார் என்றவாறு. வாரவேடம் நினைப்பித்தீர், என்ற சேரமன்னன் கூற்றாகவரும் சேக்கிழார் திருவாக்கும் இக்கருத்தை நன்கு விளக்குதல் காண்க. திருமூலரும் 'வேடநெறி நில்லார் வேடம்பூண்டு என்பயன்' என்பர்.

ஞானத்தார் ஞானத்தால் சிவனையே நாடுவராதலின் அவர்கட்கு அவனை நினைப்பிக்கும் வேடங்களைப் பூணல் வேண்டுவதின்றாம். ஆதலின் "வேடம் இன்றெனின் நன்முத்தர்" என்றார்.

நக்கன் - சிவன், நக்னன் - நிருவாணி; இதன் தமிழாக்கம் நக்கன். வேடம் நண்ணி நக்கன்பால் நிற்பார் எனக் கூட்டுக. இம்மந்திரம் ஞானவேடத்தின் பயனும், ஞானவேடம் பூண்பார்

ஞானம் எய்துதற்குரிய உபாயமும் உணர்த்துதலின் இவ்வதிகாரத்தில் இணைக்கப்பட்டது.

'இன்றெனிலும்' என்னும் எச்ச உம்மை தொகுத்தல் பெற்றது. "உளதாக" என்னும் செயவெனெச்சம். "கைப்பொருள் ஒன்றுண்டாகச் செய்வான் வினை" (பழமொழி நானூறு, 5) என்பதிற் போல இறந்த காலத்தின்கண் வந்தது. இவ்வாறன்றி, எதிர்காலத்ததாகக் கொண்டுரைப்பின், அது முன்னை அதிகாரத்துத் தவவேடமாயே முடிதல் அறிக. "வேடம் நண்ணி நிற்பார்" எனப் பின்னர்க் கூறுதலின், வேண்டுதல் வேடத்தையே ஆயிற்று. 'ஞானிகட்குரிய வேடமாவது இது' என்பது உணர்த்துதற்கு "நக்கன்போல்" எனவும், 'அவ்வேடம் காண்பார்க்கும் ஞானத்தை உண்டாக்கும்' என்றற்கு "ஞானம் உள வேடம்" எனவும் கூறினார். 'நக்கன்பால்' என்பது பாடமன்று. நக்கன் - உடையில்லாதவன். 'அணியெல்லாம் ஆடையின்பின், என்பதை விடுத்தலின், 'நகப்படுவன்' என்பது இதன் பொருளாம். சிவபிரானை இப்பெயராற் கூறுதல் பட்டும், துகிலும் உடாது, தோலையே ஆடையாக உடுத்தல் பற்றியாம். இனிக் 'கீள், கோவணம்' என்னும் இவற்றளவே கொண்டு நிற்றலும் உடையின்மையாகவே கூறப்படும். இவ்வாறன்றி, 'திகம்பரன்' என்பதே வெற்றரையாய் நிற்றலைக் குறிக்கும். எனவே, 'தக்கன்' என்பதை 'நக்நன்' என்னும் ஆரியச் சொல்லின் திரிபாகக் கொள்ளின் அது 'திகம்பரன்'. எனவே பொருள்படும். சிவபிரானை, 'திகம்பரன்' என்றல் அவனது வியாபக நிலையைக் குறிக்குமல்லது வேடத்தைக் குறியாது. 'சிவபிரான் பிச்சைக் கோலம் கொண்டு சென்ற பொழுது வெற்றரையாகச் சென்றனன்' என்பது உளதாயினும், கீள் கோவணத்தோடு சென்றனன் என்ற கருத்தும் உண்டு.

> "உறைவது காடுபோலும்; உரிதோல் உடுப்பர்;
> விடைஊர்வது ஓடு கலனா" - தி.4 ப.8 பா.5

என்றற்றொடக்கத்தனவாய் வரும் திருமொழிகள் சிவபிரானது வேடங்கள் உலகரால் நகப்படுவனவாயிருத்தலையே உணர்த்தும். அவ்வாறிருப்பினும்;

> "இறைஇவர் வாழும் வண்ணம் இதுபோலும்
> .......................................................
> அறைகழல் வண்டுபாடும் அடிநீழல் ஆணை
> கடவா தமர ருலகே" - தி.4 ப.8 பா.5

என்றற்றொடக்கத்தனவாய் வரும். திருமொழிகள் அவ்வேடங்கள்

**1647.** புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை
நன்ஞானத் தோர்வேடம் பூணார் அருள்நண்ணித்
துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்
பின்ஞானத் தோர்ஒன்றும் பேசகில் லாரே. **2**

---

*சிறிதும் பற்றுட்படாத தூய உணர்வைத் தெரிவிப்பனவாய்ப் பற்றுட் பட்டு மயங்கும் மயக்க உணர்வுடைய தேவர் முதலிய பலரையும் ஆளும் தலைமைக் கோலங்களாய் இருத்தலை விளக்குமாகலின், அவை ஞானவேடங்களாதல் நன்கறியப்படும். அவ்வேடங்கள் காண்பார்க்கும் ஞானத்தைத் தோற்றுவித்தலை;*

*"ஓதிஓர்க் கப்படாப் பொருளை ஓர்விப்பன*

*..........................................................*

*ஆதிஅந் தம்இலா அடிகள் வேடங்களே" - தி.3 ப.25 பா.2*

*என்றற்றொடக்கத்தனவற்றால் அறிக.*

*இதனால், 'ஞானிகட்குரிய வேடத்தை ஞானம் இல்லாதார் புனைந்து வஞ்சிப்பின் நகரம் புகுவர்' என்பதும், 'ஞானிகட்குரிய வேடம் இது; இதனை ஞானியர் விரும்பிற் பூண்பார்; பூணாது விடினும் அவர்க்குத் தாழ்வில்லை' என்பதும் கூறப்பட்டன.*

**1647. *தெளிவுரை :-* *இழிந்த ஞானத்தை உடையவர்கள் உயர்ந்த ஞானத்தை உடையவரது வேடத்தைப் பூண்பாராயினும், அதனால் அவர்க்கு வருவதொரு நன்மை இல்லை. உயர்ந்த ஞானத்தை உடையவர் இறைவனது அருளாகிய பயனைப் பெற்றுவிட்டமையால், 'குறித்ததொரு வேடத்தைப் பூணவேண்டும்' என்னும் விருப்பமும் இலராவர். தமது ஞானத்தையே பெரிதாக மதிக்கும் குற்றத்தை உடையவர் "தத்தம் மதங்களே அமைவதாக அரற்றிமலையும்" (தி.8 போற்றித். 52, 53) சமயப் பூசலை உடையராவர். மற்று, உண்மை ஞானம் உடையோர் அதற்குத் தகுதியில்லாதாரைக்காணின் ஒன்றும் பேசாது வாளாதே போவர்.***

***இழிந்த ஞானமுடையோர் - ஞானிகள் வேடத்தைத் தாங்கியும் அதனால் ஆவதொரு பயனும் இல்லையாம். நல்ல ஞானமுடையார் திருவருள் பெற்று அதனால் வேடம் பூணமாட்டார்கள். திரிபு உணர்ச்சியுடையோர் சமயக்குற்றமுடையோர் ஆவர். ஞானி பின்பு அவர்களோடு ஒன்றும் பேசார்கள் என்றவாறு.***

*துன் ஞானிகள் சமயக்காழ்ப்புடையோர் ஆதலின் அவர்களுக்கு ஞானிகள் ஒன்றும் உரையார்; ஆதலால் புன்ஞானியர் நன்ஞானியர்வேடம் பூண்டும் பயன் இல்லை; நன்ஞானியர் வேடம் தாங்கவேண்டிய இன்றியமையாமையும் இல்லை என்பது கருத்து.*

*புன்ஞானம் - புன்னெறியதனிற்செல்லும் அறிவு; உலகு உடல் இவற்றைப்பற்றி விளைவதும் அழியுந் தன்மையதுமான அறிவு. இதனைச் சிற்றறிவு என்பாருமுளர். சிற்றறிவு உணர்த்த உணருவதான அறிவு, அது ஆன்மாவிற்கு இயற்கையாதலின், அது எந்நிலையிலும் புன்ஞானமாவான் செல்லும். ஆகவே, பொது வகையால் அங்ஙனம் கொள்ளாது கருவிகரணங்களைப் பற்றி விளைவதான இழிந்தஞானம் என்க.*

*கண்டதே காட்சி கொண்டதே கோலமாய் எல்லாம் கண் இன்ப நுகர்ச்சிக்கே என்று உணரும் இழிதகையறிவுடையார், சிவவேடம் தாங்குதலின் லட்சியத்தை உணரார். ஆகலின் அவர்கட்கு வேடம் தருவதொரு பயனுமில்லை என்பார் "புன்ஞானத்தார் வேடம் பூண்டும் பயன் இல்லை" என்றார்.*

*நன்ஞானம் - திருவடியைப் பற்றியே நிகழ்வதான திருப்பெருகு சிவஞானம். அதனை உடையார் நன் ஞானத்தார். அவர்கள் என்றும், சிந்தை இடையறா அன்பும் நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் உடையராதலின் அவர்கட்கு வேடம்பூண வேண்டுவதின்றாம். வேடம் பூணுதலின் பயனாகிய திருவருட்பேற்றைப் பெற்றமையால் என்பது.*

*துன்ஞானம் : நம்பனருளாமையால் நெறியல்லா நெறிக்கண் சென்றும், மாறி உணர்ந்தும் மயங்குவதான அறிவு. அதனை உடையோர் துன்ஞானத்தோர். அவர்கள் பரிபாகமின்மையால் ஒன்றை ஒன்றாகவும், தேர்ந்து தெரியாது பற்றியதையே பற்றிநின்றும் உணர்பவர்கள் ஆதலின் அவர்களுக்கு உண்மை ஞானத்தை உணர்த்தின் அது செவிடன் காதில் ஊதிய சங்குபோலப் பயன்படாமை மட்டுமன்றிக் ''காணாதாற் காட்டுவான் தான்காணான்" என்ற குறளுக்கு இலக்கியமாய் இழிவும் விளைக்கும் ஆதலின் ஞானத்தோர் துன்ஞானத்தோர்க்குப்பின் ஒன்றும் பேசகில்லார் என்றருளினார்.*

***குறிப்புரை :-** இழிவு, உலகியலுள் அழுந்தலும், உயர்வு அதனின் நீங்கி மேற்போதலுமாம். "பூணார்" என்பது 'பூணுதலில்*

**1648.** சிவஞானி கட்கும் சிவயோகி கட்கும்
அவமான சாதனம் ஆகாது தேரில்
அவமாம் அவர்க்கது சாதனம் நான்கும்
உவமான மில்பொருள் உள்ளுற லாமே. **3**

---

*கருத்தூன்றார்' என்றதாம். "வேண்டுமாறு விருப்புறு வேடத்தர்" (தி.12 திருக்கூட்ட. 10) எனச் சேக்கிழாரும் கூறினார். "சமயம்" சமயவாதத்தைக் குறித்தலின் ஆகுபெயர். "பின்" என்பது, வினைமாற்றாய 'மற்று' என்னும் பொருளில் வந்தது. "ஒன்றும் பேசகில்லார்" என்பது, 'தமது நிலையைப் பிறர்க்கு வெளிப்படுத்திப் புகழ்பெற விரும்புதல் இலர்' என்பது உணர்த்தி, 'அத்தகையோர் ஞானவேடத்தைப் புனைந்து கொள்ளுதலையும் ஒருதலையாக விரும்புதல் இல்லை' என்பதை வலியுறுத்தி நின்றது. இதனுள் "பூணார்" என்பதை, 'பூண்பர்' எனவும், முன்னை மந்திரத்தில், "இன்றெனில்" என்பதை 'உண்டெனில்' எனவும் ஓதுவன திரிக்கப்பட்ட பாடங்களாதல் விளங்கும்.*

*இதனால், உண்மை ஞானியர் சாத்தியமாகிய திருவருளையன்றிச் சாதனமாகிய வேடத்தைப் பெரிதாகக் கொள்ளாமை கூறப்பட்டது.*

**1648.** *தெளிவுரை :- பயனில்லாத வேடம் சிவஞானிகட்கும், சிவ யோகிகட்கும், ஆகாது. ஆராயுமிடத்து அது வேதாகமங்களாகிய தொன்னெறியல்லாத புதுநெறியில் நிற்போர்க்கு ஆவதாம். அது நிற்க, சரியை முதலிய நான்கு நெறிகட்குரிய வேடங்களே ஒருதனிச் செம்பொருளாகிய சிவம் உள்நிற்கும் வேடங்களாம்.*

*சிவஞானியரும் யோகியரும் பயனுற்ற பெரியோர்கள் ஆதலின், அவர்கட்குச் சாதனங்களால் பயனில்லை. சாதகர்கள் படிமுறையே பழகுதலால் அவர்கள் முடிவாகச் சிவஞானம் பெற்று, சிவத்துவ விளக்கம் பெற அவை நான்கும் இன்றியமையாதனவாம் என்பது கருத்து.*

*சிவஞானியரும் சிவயோகியரும் முடிந்த பயனாகிய திருவடிப்பேறு ஒன்றுக்கே உரியவர்கள் ஆதலின் அவர்கட்குச் சரியையாதி சாதனங்கள் உண்மைநிலையினும் உபாயநிலையினும் வேண்டப்படுவது இன்றாம் என்பார் 'சிவஞானிகட்கும் சிவயோகிகட்கும் அவமான சாதனம் ஆகாது' என்றார்.*

*நவமாம் அவர் - புதியவர், அவரவர் நால்வகை*

நெறிக்கண்ணும் நின்று சாதிப்போர். வழிச்செல்வோர்க்கே சாதனங்கள் இன்றியமையாதன என்பார் "நவமாம் அவர்க்கு அது சாதனம் நான்கும் உவமான மில் பொருள் உள்ளுறல் ஆமே" என்றார்.

உவமானம் இல்பொருள் - பரசிவம். தன்னேரில்லான்; தனக்கொப்பார் யாரும் இல்லாதான் என்றவாறு, நான்கினாலும் பொருளை உள்ளுதல் ஆம் என உருபுகள் விரித்துரைக்க.

நால்வகைச் சாதனங்களும் சாத்தியமாகிய யோக ஞானங்களைப் பெற்றோர்க்கு வீண் என்றும், சாதகர்க்கு இறையுணர்ச்சியைப் பயக்கும் என்றும் கூறுவதால் இம்மந்திரம் அதிகார இயைபு விளங்க நிற்றல் காண்க.

**குறிப்புரை :-** ஆகவே, 'அவையே சிவஞானிகட்கும், சிவயோகிகட்கும் உரியன' என்பதாம். பயனில்லாத வேடங்கள் பாயுடுத்தல், தலைமயிரைப் பறித்துக்கொள்ளல், மயிற்பீலி பிடித்தல், துவராடை அணிதல், வெற்றரையாய் இருத்தல் முதலியனவாம். இவை பரம்பொருள் வடிவாகாது. வாளா உடம்பை வருத்துதலாய் முடிதலின், பயனிலவாயின. இவை முதனூல்களாகிய வேதாகமங்களை இகழ்ந்து, புதியனவாய்ப் படைக்கப்பட்ட எதிர்நூல்களின் வழிநிற்பார் கொள்வனவாதல் வெளிப்படையாதலின், "நவமாம் அவர்க்கு" என்றார். வேடம் வகையானும், விரியானும் பலவாயினும், தொகையால் ஒன்றேயாகலின், "ஆகாது" எனவும், "அது" எனவும் ஒருமையாற் கூறினார். "நான்கு" என்றது ஆகமங்களின் வழியவாதலின், 'சரியை முதலிய நான்கு' என்பது விளங்கிற்று. சரியை முதலிய நான்கில் நிற்போர் தாம் தாம் செய்யும் பணிகட்கு ஏற்ற வேடங்களை யுடையராய் இருத்தல் பற்றி, அவைகளை வகுத்தோதினார். இங்கு எடுத்துக் கொண்டது ஞானவேடமேயாயினும், சரியை முதலிய மூன்றும் "அரும்பு, மலர், காய்" (தாயுமானவர், பராபரக். 157) என்பன போல ஞானத்தின் படிகளேயாதல் பற்றி, அவற்றது வேடங்களையும் உடன் ஓதினார். 'சாதனமாவது இங்குவேடமே' என்பது அதிகாரத்தால் விளங்கும். உவமானம் இல்பொருள், இரண்டாவதில்லாத தனிப் பொருள். இதனை "ஏகம்" என்றல் உபநிடத வழக்கு. "ஒன்றவன்றானே" என நாயனாரும் தொடக்கத்தே உணர்த்திப் போந்தார்.

இதனால், பிறவேடங்கள் கடுந்துறவை விளக்குவனபோல

**1649.** கத்தித் திரிவர் கழுவடி நாய்போல்
கொத்தித் திரிவர் குரல்களி ஞானிகள்
ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே. 4

---

*உலகரை மருட்டுவவாயினும், அவை சிவநெறியாளர்க்கு ஆகாமை கூறப்பட்டது. ஆகாதவற்றை. 'ஆகா' எனக் கண்ணோட்டமின்றி அறுதி யாக விலக்கி ஒழித்தலும் உண்மை நூல்கட்கு இயல்பு என்பதை ஊன்றி யுணர்க.*

**1649. *தெளிவுரை :-*** *அனுபவத்தால் இன்பம் உறாது, பேச்சினாலே இன்பமடையும் நூலறிவுடைய சிலர், கழுமரத்தடியில் நின்று அதன் உச்சியில் உள்ள உடல் எட்டாதபொழுது குரைத் தலையும், சிறிது எட்டிய பொழுது அதனைக் கடித்தலையும் செய்கின்ற நாய்களைப் போலத் தாம் அறிந்தவற்றைக் காலம், இடம், தகுதி முதலியவற்றை நோக்காமலே உரக்க எடுத்துப் பேசுதலும், காலம் முதலியன சிறிது வாய்த்தவழிக் கேட்பாரது உள்ளத்தை அலைத்தலும் செய்து திரிவார்கள். சிவஞானத்தை அனுபவமாக அடைந்தோர் வாக்கும், காயமும் வன்மைபெற்றிருப்பினும் செத்தவரைப் போல யாதும் உரையாதே, எவ்விடமும் இடமாக உலாவிவருவர்.*

***குறிப்புரை :-*** *போலி ஞானியர் வீண் ஆரவாரமும், பிடுங்கலும் உடையர். சிவஞானியர் தனு கரணங்களைத் தன்வயப்படுத்தியவர் களாதலின், அவற்றால் போகம் நுகர்ந்து பாழ்போகாது செத்தார் போலச் செயலற்றுத் திரிவர் என்பது கருத்து.*

*குரக்களி ஞானிகள் - வேடஞானிகள். உண்மை வேடம் பூணாது போலிவேடந்தாங்கி வயிறு வளர்ப்போர். மாந்திரீகர், கூத்தர், வேழம்பர், கருமாயக்காரர் இவர்களைக் குரக்களி வித்தைக்காரர் எனல் உலக வழக்கு. இது குறைக்கொள்ளியாகிய இடுகாட்டுச் சுடு விறகைக் கொண்டும், வேகாத பிணத்தின் நிணத்தைக் கொண்டும் செய்கின்ற மையைக்கொண்டு மயக்கும் வித்தை என்பாரும் உளர். குறைக்கொள்ளி குரக்களி என மரீஇற்று. உலகோடு ஒத்து உள்ளத்தை உபதேச மொழியான் உயர்த்தும் திருமூலதேவர் போலி ஞானியரைக் குரக்களி ஞானியர் என இழிவு தோன்றக் கூறினார்.*

**1650.** அடியா ரவரே அடியா ரலாதார்
அடியாரு மாகாரவ் வேடமு மாகார்
அடியார் சிவஞான மானது பெற்றோர்
அடியா ரலாதார் அடியார்கள் அன்றே. **5**

**1651.** ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாம்
தானுற்ற வேடமும் தற்சிவ யோகமே
ஆனஅவ் வேடம் அருள்ஞான சாதனம்
ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே. **6**

---

*கழு - குற்றஞ்செய்தாரை ஏற்றும் கூர்முள் மரம், கழுவடி நாய் - கழுவில் மனித உடல் போடப்பட்டுள்ளபோது அது தனக்கு எட்டாத உயரத்திலிருப்பதால் கழுமரத்தடியைச் சுற்றிச்சுற்றிவந்து எட்டாமையானும் பிரியமாட்டாமையானும். ஊனில் நசையுற்றுக் குரைக்கும் நாய், அதுவிடாமற் கத்துமாதலின் "கழுவடி நாய் போற் கத்தித் திரிவர்" என்றார். கொத்தி என்ற வினைக்கேற்பக் கழுகுபோல் என உவமை வருவித்துரைக்கப்பட்டது. ஆரவாரம் செய்தும், பிடுங்கித் தின்றும் ஊரைச்சுற்றி வந்து வயிறுவளர்ப்பர் என்பதாம்.*

*பொறிகள் பழுதாகாமலிருந்தும், உடல் வலிமையுடன் பொறிகளோடு ஒத்திருந்தும், போகப்பொருள்கள் எளிதிற் கிட்டுவனவாக இருக்கும் பொறிவாயிலைந்தையும் அவித்து அவை காரியப்படாமல் வென்று, செத்தார்போலக் காணாக்கண், கேளாச் செவி, முகரா மூக்கு, சுவையா நா, உறா மெய்யாகத் திரிவார்கள் சிவஞானியர் என்றவாறாம். இவற்றால் இம்மந்திரத்திற்கும் அதிகாரத்திற்குமுள்ள இயைபு உணர்க.*

***1650. தெளிவுரை :-** குணத்தால் அடியவரல்லாதவர் பிறவாற்றால் அடியவராவரோ? ஆகார். அடியார் ஆகாதபொழுது அவர்கட்கு அந்நிலைக்குரிய வேடங்களும் கூடா. அடியராவார் சிவஞானத்தை அடைந்தோர். ஆதலால், அத்தன்மையில்லாதவர் ஒருவாற்றானும் அடியரல்லர்.*

***குறிப்புரை :-** "அடியாரவரே" என்னும் ஏகாரம் வினாப் பொருட்டாய், அடியவராகாமையைக் குறித்தது. 'ஆகாதவழி' என்பது "ஆகாது" எனத் திரிந்து நின்றது. மூன்றாம் அடி, அடியாராகும் முறைமையைக் குறித்தது.*

*இதனால், ஞானவேடம் மட்டுமே ஞானியராகச் செய்யாமை கூறப்பட்டது.*

**1652.** ஞானத்தி னாற்பதம் நண்ணும் சிவஞானி
தானத்தில் வைத்த தனியால யத்தனாம்
மோனத்தின் ஆதலின் முத்தனாம் சித்தனாம்
ஏனைத் தவசி இவனென லாகுமே. 7

---

**1651. *தெளிவுரை :-*** *ஞானத்தைப் பெற்றவனுக்கு உலகர் கொள்ளும் அழகிய வேடமும், ஞானவேடமேயாய்ச் சிறந்து நிற்கும். அதனால், அவன் எந்த வேடத்தோடு இருப்பினும் அது பரம சிவனோடு ஒன்றியிருத்தற்குரிய வேடமாயே அமையும். இனி, ஞான வேடமாகச் சொல்லப்பட்ட அவ்வேடம் ஞானம் சிறிதும் இல்லாதவனுக்கு ஏற்புடையதாதலும் உலகியலாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *சுந்தர வேடமாவது உலகத்தார் விரும்பி யணியும் வேடமாதலை;*

> *"சுந்தர வேடங்களால் துரிசே செயும் தொண்டன் எனை"*
>
> *- தி.7 ப.100 பா.3*

*என அருளிச் செய்தவாற்றால் அறிக. நன்மை - ஞானம். நல்ல - ஞானத்தையுடையன. சரியை முதலிய மூன்றில் நிற்போர் தடத்த சிவத்தையே சார்ந்து நிற்க, ஞானி சொரூப சிவத்தைச் சார்ந்திருப்பன் ஆதலின், ''தற்சிவ யோகம்'' என்றார். யோகம் - ஒன்றுதல். ஒன்றுதலைத் தருவதனை 'ஒன்றுதல்' என்றே கூறினார். 'அருள்ஞான சாதனம் அவ்வேடம்' என மாற்றிக்கொள்க. ஒன்றும் - சிறிதும், ஆகாதவன் இதற்கு 'ஞானம்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. 'உலகியல் அவ்வாறிருப்பினும், அதனால் பயன் என்னை' என்பது கருத்து.*

*இதனால், ஞானம் இல்லாதார் ஞான வேடம் புனையினும் பயன்பெறுதல் இல்லை; ஞானம் உடையவர் ஞானவேடம் புனையா தொழியினும் பயன் இழத்தல் இல்லை என்பது கூறப்பட்டது.*

**1652. *தெளிவுரை :-*** *சிவஞானத்தை அடைந்தவன் அந்த ஞானத்தால் முடிவில் சிவனது திருவடியை அடைவான். அதற்கு முன்னேயும் தன்னைத் தான் சிவனது திருவடியிலே இருக்க வைத்த ஒப்பற்ற இருப்பிடத்தை உடையனாய் இருப்பன். சொல்லேயன்றி*

**1653.** தானற்ற தன்மையும் தான் அவ னாதலும்
ஏனைய அச்சிவ மான இயற்கையும்
தானுறு சாதக முத்திரை சாத்தலும்
ஏனவும் நந்தி பதம்முத்தி பெற்றவே. **8**

---

*மனமும் அடங்கிவிட்ட நிலையை உடையனாதலின் அவன் இவ்வுலகில் இருப்பினும் முத்தி பெற்றவனே யாவன். அதனால் அவன்தான் பெறவேண்டிய பேற்றை முற்றப் பெற்றவனாம். சிவஞானத்தைப் பெறாது சிவஞான வேடத்தை மட்டும் புனைந்த மற்றையோனை இச்சிவஞானிபோல முத்தனும், சித்தனும் ஆவன் என்று சொல்லுதல் கூடுமோ! கூடாது.*

***குறிப்புரை :-*** *தவசி - தவத்தை உடையவன். 'ஏனைத் தவசி சிவஞானியாகான்' எனவே, இத்தவசி (சிவஞானம் பெற்றவன்) வேடம் இன்றியும் சிவ ஞானியே என்பது பெறப்பட்டது. 'அதனில்' என்பது 'அத்தில்' என மருவிற்று. "அது" என்றது சிவன் பாதத்தை. 'இருப்பிடம்' சிவனுக்கு என்க. அஃது உயிரேயாம். மோனம் - மௌனம். அஃது இங்கு வாய் வாளாமையோடு மனம் அடங்கியதையும் குறித்தது. 'தவசியை' என்னும் இரண்டாவது தொகுத்தல் பெற்றது.*

*இதனால், அகத்தில் ஞானம் உடையவன் புறத்தில் வேடம் இலனாயினும் சீவன்முத்தனாய் விளங்குவன்; ஞானம் இன்றி வேட மாத்திரம் உடையவன் அத்தன்மையன் ஆகான் என்பது கூறப்பட்டது.*

**1653. *தெளிவுரை :-*** *தற்போதம் அற்றிருத்தல், தான் சிவமேயாய் நிற்றல், சிவனல்லாத ஏனை எல்லாப் பொருள்களிலும் சிவம் நிறைந்து நிற்றலை உணர்ந்து, அவற்றைச் சிவமாகவே காணுதல், ஞானத்தை நழுவாது நிலை நிறுத்தற்குத் துணையாய் உள்ள வேடங்களைப் பூணுதல், வாய்வாளாமை ஆகிய இவை யாவும் சிவனது திருவடிப் பேறாகிய முத்தியைப் பெற்ற நிலையின் இயல்புகளாம்.*

*கையில் சிறுவிரல் அணிவிரல் நடுவிரல் ஆகிய மூன்றையும் பிரித்து நிமிர்த்திச் சுட்டுவிரலை மட்டும் வளைத்து, பெருவிரல் அடியில் சேர்ப்பது சாதக முத்திரையாகிய சின்முத்திரை, அங்ஙனமே*

சுட்டு விரலைப் பெருவிரல் நுனியோடு சேர்ப்பது போதக முத்திரையாகிய சின்முத்திரை ஆதலின், ஈண்டுத் தாடலைபோல் சிவனடியில் படிந்திருப்பதாகிய சாதக முத்திரை கூறினார்.

**குறிப்புரை :-** ஏனைய - மற்றையவை. எல்லாவற்றையும் சிவமாகக் காணுதலை;

"மரத்தை மறைத்தது மாமத யானை" - தி.10 ப.2256

என்னும் மந்திரத்துள் நாயனார் பின்னர் இனிது விளங்க அருளிச் செய்வார்

"காதல் மடப்பிடி யோடும் களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம்" - தி.4 ப.3 பா.1

என்பது முதலாக நாவுக்கரசரும் பலபட அருளிச் செய்தமை காண்க.

"பரஞானத் தாற்பரனைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்"

- சிவஞானசித்தி, சூ. 11.2

என்பதும் காண்க. பெற்றதன்கண் உள்ளவற்றைப் 'பெற்றது' என்றது கால ஆகுபெயர்.

எட்டு மந்திரங்களானும் முறையே ஞானம் எய்தாதார் வேடம் பூண்டு பயனில்லை என்றும், ஞானம் பெற வேண்டுவோர் சிவன்பால் அன்பு செய்க என்றும், துன்ஞானத்தோர்களுக்கு நன்ஞானத்தோர் ஒன்றும் உரையார் என்றும், சிவஞானிகட்குச் சாதனங்களும் மிகையாம் என்றும், அவஞானியர் ஆரவாரம் செய்வர். சிவஞானியர் சிந்தை ஓய்ந்து செத்தவர்போலாவர் என்றும், சிவஞானம் பெற்றாரே சிவனடியார்; ஏனையோர் வேடதாரிகளான போலிகள் என்றும், ஞானிகட்குச் சுந்தரவேடம் முதலியனவும் வேண்டுவனவாம்; சிவ சிந்தனையாகிய சிவயோகத்தைப் பயப்பதால் என்றும், ஞானி முத்தனாம் சித்தனாம் தவசியாம் என்றும், தற்போதம் கழன்று, சிவனடி சேர்ந்து, சிவனே ஆகிக் காண்பன அனைத்தையும் சிவமாகவே கண்டு, சின்முத்திரையத்தனாய் விளங்குதலே, சீவன் முத்திபெற்றதா மென்றும் உணர்த்தி, மேல் சிவவேடம் உணர்த்த விரைகின்றார்..

## 12. சிவ வேடம்

*'தவவேடம், ஞானவேடம்' என வேடங்களைப் பகுத்துணர்த்திய நாயனார், அவை இரண்டும் சிவவேடம் ஆதலை நான்கு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**1654.** அருளால் அரனுக் கடிமைய தாகிப்
பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி
இருளான தின்றி இருஞ்செயல் அற்றோர்
தெருளாம் அடிமைச் சிவவேடத் தாரே. 1

**1655.** உடலில் துவக்கியவே டம்முயிர்க் காகா
உடல்கழன்றால் வேடம் உடனே கழலும்
உடலுயிர் உண்மை என்றோர்ந்துகொள் ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே. 2

---

**1654.** *தெளிவுரை :- சிவனது சத்திபதிவால் தாம் அவனுக்கு அடிமையாதலை உணர்ந்து அதற்கேற்ப ஒழுகும் ஒழுக்கம் உடையவராய்த் தமது உடம்பும் ஏனைய பொருள்கள்போலச் சிவனது உடைமையாம் சிறப்பை உணர்ந்து, அவ் இரண்டுணர்வும் தடுத்து நிற்கும் இருள் நீங்கப்பெற்றுத் தம்செயல் அற்றிருப்போர் வேடமே, 'சிவவேடம்' எனக்கொள்ளப்படும் சிறப்புடைய வேடமாம்.*

*குறிப்புரை :- 'யாரிடத்துக் காணப்படுவது சிவ வேடமேயாயினும், இத்தன்மை யாரிடத்துக் காணப்படும் சிவவேடமே உண்மைச் சிவவேடமாம் சிறப்புடையது' என்றவாறு. இதனானே இவர் சிவவேடத்தை மிகப்பூணாது சிறிதே பூண்டிருப்பினும் அது சிறந்த வேடமேயாதலும் பெறப்படும். 'அடிமையாதல் செயலா னன்றித் தெருட்சியாலே' என்றற்கு, "தெருளாம் அடிமை" என்றார். 'அடிமை வேடத்தார்' என இயையும். அடிமை சிவனுக்கு ஆதல் "சிவ வேடம்" என்றதனாற் பெறப்பட்டது. "அற்றோர் வேடத்தார்" என்றா ராயினும் இவ்வாறு உரைத்தலே கருத்து என்க. 'பொற்பதி' என்பது பாடமன்று.*

*இதனால், 'உண்மைச்சிவவேடம் இது' என்பது கூறப்பட்டது.*

**1655.** *தெளிவுரை :- உடம்பில் பொருத்தப்பட்ட வேடங்கள் உயிர்க்கு உரியன ஆகமாட்டா. அதனால், உடம்பு நீங்கினால் வேடமும் அதனோடே நீங்கிப் போதலன்றி உயிரோடு உடன் செல்லுதல் இல்லை. 'உடம்பு, உயிர் சிறிது காலம் தங்கியிருக்கும் ஓர் இடமே' என்னும் உண்மையை ஆராய்ந்து உணர்ந்து*

**1656.** மயலற் றிருளற்று மாமனம் அற்றுக்
கயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமேதா மாகிச்
செயலற் றிருப்பர் சிவவேடத் தாரே. **3**

---

*கொள்ளாதவர் கடலில் அகப்பட்ட மரத்துண்டு அதன் அலைகள் பலவற்றாலும் அலைக்கப்படுதல் போலப் பிறவியில் பட்டு பல்வேறு உடம்புகளால் அலைக்கப்படுவர்.*

***குறிப்புரை :-*** *"உண்மை", 'உளதாதல்' எனத் தொழிலாய் நின்று அதற்குரிய இடத்தைக் குறித்தது. "உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு" (திருக்குறள், 340) என்றவாறு, சிறிது காலம் இருத்தலையே இங்கு, "உண்மை" என்றார். "கடலில் அகப்பட்ட கட்டை" என்பது சுட்டிக் கூறா உவமம் ஆதலின், அஃது இங்ஙனம் விரிக்கப்பட்டது. இது, 'வேடம் மாத்திரமே உயிர் உய்தற்கு வழியாம்' என மயங்கி, ஞானத்தைப் பெறும் வேட்கை இன்றி இருப்போரை நோக்கிக் கூறியது. எனவே, மேற்கூறியவாறு அரனுக்கு அடிமையாதல் முதலியன உளவாய வழியே வேடம் சிவவேடமாதலைத் தெளிவித்தவாறாயிற்று.*

*இதனால், உடல் உயிர்த் தன்மைகளை இனிதுணர்த்துமாற்றால், மேலது வலியுறுத்தப்பட்டது.*

**1656.** ***தெளிவுரை :-*** *யாதும் அறியாமையும், மயங்கியறிதலும் ஆகிய இரண்டும் நீங்கி, அதனானே புலன்மேற் செல்லும் மனம் அடங்கி, அவ் அடக்கத்தானே மகளிர் ஆசை முதலிய ஆசைகளும் அற்று, தமக்கு முன்னே அங்ஙனம் அற்று நின்றாரை அடைந்து 'அவர், தாம்' என்னும் வேற்றுமையின்றி அவரே தாமாய் ஒன்றியியங்கித் தம் செயல் அற்றிருப்பர் உண்மைச் சிவவேடத்தார்.*

***குறிப்புரை :-*** *முன்னிற்கற்பாலதாகிய "இருள்", செய்யுள் நோக்கிப் பின்னின்றது. 'கண்ணியரோடு' என உருபு விரிக்க. கை, இடைச்சொல். இணக்கு - இணங்குதல்; முதனிலை திரிந்த தொழிற் பெயர். தையல், 'தயல்' எனப் போலியாயிற்று. 'தையலற்றவர்' என்றது, 'மேற்கூறிய நிலையை யெல்லாம் அடைந்தவர்' என்றவாறு. "தாம்" இரண்டில் முன்னது, 'அவர்' என்னும் பொருட்டாய் நின்றது.*

*இதனால், அரனுக் கடிமையாதல் முதலியவற்றால் உண்மைச் சிவவேடத்தராயினாரது இயல்பு கூறும் முகத்தால், அவ்வேடத்தின் பயன் கூறப்பட்டது.*

**1657.** ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்
வேடங்கொண் டென்செய்வீர் **?** வேண்டா மனிதரே
நாடுமின் நந்தியை நம்பெரு மான்தன்னைத்
தேடுமின் பப்பொருள் சென்றெய்த லாமே. **4**

---

**1657. *தெளிவுரை :-*** *மனிதர்காள், வேடமாத்திரத்தைக் கொண்டு என்ன செய்யப்போகிறீர்! அந்த நிலை வேண்டுவதில்லை. ஓடுகின்ற குதிரை போல உள்ள பிராணவாயுவை அதன் கடிவாளத்தை இறுகப் பிடித்து ஓட்டுதல் போல இரேசக பூரக கும்பக முறைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்தலால் அடக்குங்கள். அதனால், மனம் உம்வசப்பட, அது கொண்டு நம் பெருமானாகிய சிவபெருமானை அடைய விரும்புங்கள். அவ்விருப்பம் நிறைவுறுதற்குரிய வழியில் செல்லுங்கள். பின்பு பேரின்பப் பொருளாகிய முதற்பொருளைச் சென்று அடையலாம்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. "குதிரை, குசை" என்பன யோகநூற் குறிச்சொற்கள். 'திண்ணமாக' என ஆக்கம் வருவிக்க.*

*முறையே பிராணாயாமமும் அன்பும் செய்யின் இன்பப் பொருளாகிய இறைவனை எய்தலாம் என்பது கருத்து. ஓடுங்குதிரை - வாசி; அதாவது பிராணவாயு. குசை - அதனை அடக்கி ஆளக்கூடிய சவுக்கு; என்றது ஆயாமத்தை. ஆயாமமாவது.*

*'ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்*
*ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்*
*ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்*
*மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே'*

*என்ற (556) அளவின்படி இரண்டு குதிரைகளையும் வீசிப் பிடிக்கும் விரகறிந்து பயிலுதலாம்.*

*இங்ஙனம் பயிலும்போது, சோம்பர் இடைவிடாது பயிலுதலை விடுவர்; மூடர் மாறிக் கும்பகஞ்செய்து மாலுறுவர். அதனால் பிராணாயாமமுறை வழுவக்கூடும். அங்ஙனம் வழுவாது பயிலுக என்பார் "திண்ணம் பற்றுமின்" என்றார்.*

*வேடம் - சிவவேடமாகி பூதி கண்டிகை சடைமுடி கபாலம் முதலிய சாதனங்களைத் தாங்கும் வேடம்.*

*பிராணாயாமமும், வேடமும் ஆகிய செயல் மாத்திரத்தால் பயனின்று; சிவசிந்தனை இருந்தால்தான் பேரின்பப் பொருளைப் பெறமுடியும்.*

*இதனால், யோக நெறியில் இறையன்புடன் நிற்பின் மனம் அடங்கச் சிவபத்தியும், சிவப்பணியும் வாய்க்க, வேடமும் உண்மைச் சிவவேடமாய்ப் பயன் தரும்' என்பது கூறப்பட்டது.*

## 13. அபக்குவன்

'தவம், ஞானம்' என்னும் இருவகை நிலைகளிலும் உள்ள போலி வேடம், உண்மை வேடம் என்னும் இவற்றை உணர்த்திய நாயனார் அவை முறையே பக்குவம் இன்மை உண்மைகளால் உளவாதலை இறுதி இரண்டதிகாரங்களால் உணர்த்துவாராய், முதற்கண் பக்குவம் இன்மை பற்றியவற்றை ஒன்பது மந்திரங்களாற் கூறுகின்றார். 'பக்குவம்' என்னும் இயைபே பற்றி, 'சற்சீடனும், சற்குருவும் ஆவார் இவர்' என்பதனை இவ்விரண்டதிகாரங்களினும் நாயனார் குறித்தலால் இவற்றிற்கு முறையே 'அசற்சீடனும், அசற்குருவும்' எனவும் 'சற்சீடனும், சற்குருவும்' எனவும் பெயர்கூறினும் இழுக்காகாது.

பக்குவம் - பரிபாகம். அதாவது அறிவின் முதிர்ச்சி. அபக்குவம் - அஃதின்மை இறைவன் திருவருளால் மல மாயைகள் நீங்கப்பெற்று இறையருளை அறிந்து அனுபவிக்கக்கூடிய தகுதியின்றி மாயையில் மயங்கிச் செய்வன தவிர்வன அறியாது தவிப்பவன் அபக்குவன். அவனியல்பு கூறுதலின் இவ்வதிகாரம் இப்பெயர்த்தாயிற்று. முன்னர்ச் சிவவேடம் உணர்த்த, அவ்வேடம் அபக்குவர்க்குப் பயன்படாது என்று உணர்த்துதலின் அதிகார முறைமை இனிது விளங்கும்.

**1658.** குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடும் குழிவிழு மாறே. 1

---

**1658.** தெளிவுரை :- குருடாய இரண்டு குழந்தைகள் தம்மிற் கூடிக் கண்ணைமூடி ஆடும் ஒருவகை விளையாட்டை விளையாடி, அதனால் இரண்டும் பாழுங் குழியில் விழுந்து அழுந்தினாற்போலப் பக்குவம் இல்லாத சிலர் தமது அறியாமையைப் போக்கும் ஆற்றலுடைய நல்ல குருவைக் கொள்ளாமல், அவ் ஆற்றல் இல்லாத போலிக் குருவைக் குருவாகக் கொண்டு, அவர் அருள் வழங்கப் பெறுதலைச் செய்யின், இருவரும் பிறவித் துன்பத்தில் வீழ்ந்து அழுந்துவார்கள்.

குறிப்புரை :- குருடு - அறியாமை. குழி - பிறவிக்கேதுவான வினைகள். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. முதற்கண் நின்ற 'குருடு' இரண்டும் சிறப்புருவகமாய், மல மறைப்பால் உண்டான அறியாமையைக் குறித்தன. இதனானே, நல்லாசிரியர்

**1659.** மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி
நினைப்பின் அதனில் நிழலையும் காணார்
வினைப்பயன் போக விளக்கியும் கொள்ளார்
புறக்கடை இச்சித்துப் போகின்ற வாறே. **2**

---

*குருட்டினை நீக்கும் மருத்துவம் வல்ல மருத்துவராதலும், போலி ஆசிரியர் அம்மருத்துவம் உணராத போலி மருத்துவராதலும் பெறப்பட்டன. கண்ணுள்ள குழந்தைகள் கண்ணை மூடி ஆடினாலும் முன்னைப் பழக்கத்தால் தீங்கின்றி ஆடி மகிழ்வடையும். கண்ணில்லாத குழந்தைகள் பிற விளையாட்டு விளையாடினாலும் தீங்கடையா. குருட்டாட்டம் ஆடின் வழியறியாது குழியில் வீழ்ந்தொழியும். அதுபோல நல்லாசிரியர் மாணவரது பக்குவத்திற்கு ஏற்ப எவ்வாறு அருளினும் பயன் உண்டாம். ஆசிரியல்லாதார் கிரியா மார்க்கத்தை உணர்த்தினும், அவர்பால் அதனைச் சிலர் பெறினும் பயன் ஓரளவே உளதாகும். அவர் ஞானத்தை உணர்த்தினும், அதனைச் சிலர் பெறினும், 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது' என்னும் பழமொழியோடொப்ப இருவரும் முன்னையினும் பார்க்கப் பெரியதோர் அறியாமையில் வீழ்ந்து அழுந்துவர் என்பது உவமையால் பெறப்பட்டது. 'கண் குருடுபோல அறியாமையும் அகக்கண் இன்மையாகிய ஒருவகைக் குருடே' என்பது தோன்ற, மல மறைப்பினையும் இங்குக் குருடாகவே உருவகித்து ஓதினார்.*

*இதனால், பக்குவம் இல்லாதார்க்கு ஞானத்தைப் பெறும் வாயில் உண்டாகாமை கூறப்பட்டது.*

**1659. *தெளிவுரை :-* *உயிர்கட்கு முதற்றொட்டு அவற்றின் அறிவாகிய கண்ணிற்கு அமைந்த மாயையாகிய கண்ணாடி ஆணவமாகிய குற்றங் காரணமாகப் பொருளியல்பைத் திரித்துக் காட்டும் வஞ்சனைக் கண்ணாடியாய் உள்ளது. கல்வி கேள்விகளால் பெற்ற அறிவுகொண்டு இதன் இயல்பை உணர்ந்துகொள்ளும் பக்குவம் இல்லாதவர் நல்லாசிரியர். அவர்களது வினை நீங்கும் வழியை விளக்கிக் கூறினாலும் விளங்கிக்கொள்ள மாட்டார். அவர் இயல்பு தலைவாயில் வழியைக் காட்டினாலும் புறக்கடை வாயிலை விரும்பி அதன்வழி நுழையும் இயல்பு போல்வதாம்.***

***குறிப்புரை :-*** *அறிவை 'மனம்' என்றலும் வழக்கு. "எழுந்தது"*

**1660.** ஏயெனில் ஏன்என மாட்டார் பிரசைகள்
வாய்முலை பெய்ய மதுரம்நின் றூறிடும்
தாய்முலை யாவ தறியார் தமருளோர்
ஊனிலை செய்யும் உருவிலி தானே. 3

---

*என்னும் வினைப்பெயர், 'தோன்றியதாகிய கண்ணாடி' என்பதைக் குறித்து எழுவாயாய் நின்று, "மாயக்கண்ணாடி" என்னும் பெயர்ப் பயனிலை கொண்டது. மாயம் - பொய்; திரிபு. இங்ஙனம் கூறவே, 'அக்கண்ணாடியாவது மாயையே' என்பது விளங்கிற்று. "நினைப்பு" என்றது சிந்தனை அறிவை. 'அதனில் அதன் நிழலையும் காணார்' என்க. "நிழலையும் காணார்" என்றது, 'அதன் இயல்பைச் சிறிதும் அறியார்' என்றவாறு. "காணார்" என்பதும் எதிர்மறை வினைப்பெயர். காணாமை பக்குவம் இன்மையினாலாம். 'விளக்கவும்' என்பது திரிந்து நின்றது. 'விளக்கினும்' எனப் பாடம் ஓதலுமாம். 'விளக்குவார் நல்லாசிரியர்' என்பது ஆற்றலால் பெறப்பட்டது. ஓர் இல்லத்தில் தலைவாயிலால் நுழையாது புறக்கடை வாயிலால் நுழைவார் இன்னல் பலவும் உறுதல் வெளிப்படை. இதனுள் ஒருவாற்றான் மூன்றாம் எழுத்தெதுகை வந்தது.*

*இதனால், பக்குவம் இல்லாதார்க்கு ஞானத்தைப் பெறும் வாயில் உளதாயினும் அது பயன்படாமை கூறப்பட்டது.*

**1660.** *தெளிவுரை :- உலக மக்கள், அறிவுடையோர் 'ஏ' என அழைத்தால் அவர்க்கு, 'ஏன்' என மறுகுரல் கொடுக்கும் அத்துணைப் பக்குவமும் இலர். தாயின் முலை அவர் பெற்ற குழவி தன்வாயில் வைத்த பொழுதே பால் சுரத்தலல்லது, எப்பொழுதும் பால் சுரவாத தன்மையை உணர்தல் இயலாததே. அவ்வியல்புடைய இனத்தவரது உள்ளத்திலும் உருவமற்றவனாகிய சிவபெருமான் அங்ஙனம் உருவ மற்றவனாகவே நிலை பெற்றிருக்கின்றான்.*

*குறிப்புரை :- பிரசைகள் - உயிர்கள். "ஏய் என்றால் என்ன என்றான்" என்பது ஒரு பழமொழி. 'ஏ' என்பது வடமொழியில் திரிபு. வரையறை யின்மையின் இதன்கண் யகர உடம்படுமெய் தோன்றிற்று. முதன்கண் நின்ற "முலை" என்பது பின்னர் வரும் அதனைச் சுட்டும் சுட்டளவாய் நின்றது. பெய்தலுக்கு வினைமுதலாகிய 'குழவி' என்பது வருவிக்க. மதுரம் - இனிமை. அஃது ஆகுபெயராய்ப் பாலையுணர்த்திற்று. 'குழவி வாய்வைத்த பொழுதே தாயின் முலை*

**1661.** வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து
நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் தெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. **4**

---

பால்சுரக்கும் இயல்பினை அறியார்' என்றது, 'இறைவனது அருள் அவனை உணர்ந்து போற்றுவார்க்கே விளங்கி நின்று நலம் செய்யும் என்பதனை அறிந்து அவனை உணர முயலார்' என்றதாம். 'அதற்குக் காரணம் பக்குவம் இன்மையே' என்பது கருத்து. 'அன்னோர்க்குத் தமராய் உள்ளோரது ஊனின்கண்ணும் உருவிலி நிலை செய்யும்' என்க. தமர் - சுற்றத்தார். இஃது இங்குப் பிறப்புப் பற்றியதாகாது இயல்பு பற்றியதாய் நின்றது. இதன் ஈற்றடி இரண்டாம் அசை எதுகையாய் நின்றது.

இதனால், பக்குவம் இல்லாதார் இறைவனை உணர்ந்து அவனது அருளால் நலம்பெறுந்தன்மை இலராதல் கூறப்பட்டது.

**1661.** *தெளிவுரை :-* பெருந்தகுதியாகிய பக்குவத்தை எய்திய மாணவனே, நீ யாதொரு செயலிலும் 'மனம், மொழி, மெய்' என்னும் மூன்றும் ஒருவழிப்பட நிற்றல் வேண்டுமன்றி, அவை தனித்தனி வேறு வேறு வழிப்பட நிற்றல் கூடாது. அங்ஙனம் அவை ஒருவழிப்பட நிற்றலே உனக்கு நன்மையைப் பயப்பதாகும். அவை வேறு வேறு வழிப்படல் இழிந்தோரது இயல்பாதலின், நீ அவை அவ்வாறுபட நிற்பின், உன்னை யான், 'பக்குவம் வாயாத இழிமகன்' என்று உறுதியாகக் கொண்டு விலக்குவேன். ஆனால், உணர்விலராய உலகர் அது பற்றி என்னைப் பின் வெகுளி மிகுதியால் பேய்த்தன்மை எய்தியவன் என இகழ்வர்.

*குறிப்புரை :-* 'அதுபற்றி எனக்கு வருவதோர் இழுக்கில்லை' என்பதாம். 'அங்ஙனம் செய்யாமையாகிய அதுவே உறுதி' என்க. அங்ஙனம் செய்யாமை, அவை ஒருவழிப்பட்டு நிற்கச் செய்தலை உணர்த்திற்று. 'தீயை' என்பதன் இறுதிநிலை தொகுத்தலாயிற்று. தீமை, இங்கு இழிவு. இதன் ஈற்றடிக்கு இவ்வாறன்றி "என்று" என்பது "தெளியார்" என்பதன் முதனிலையோடு முடிந்ததாக வைத்து, 'அது பற்றி என்னைப் பிறர் பழியார்' என்று உணர்த்தலுமாம். இங்கும் 'உன்னை' என்றே பாடம் ஓதி அதற்கு இயைய உரைப்பாரும் உளர்.

இதனால், பக்குவம் எய்திய மாணாக்கற்கு அபக்குவ நெறியிற்

**1662.** பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மை
அஞ்சச் சமயத்தோர் வேந்தன் அருந்தண்டம்
விஞ்சச்செய் திப்புவி வேறேசெய் யாவிடின்
பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே. **5**

---

*செல்லாதவாறு விழிப்பூட்டு முகத்தால் அபக்குவிகளது போலி ஒழுக்கத்தின் இயல்பும், அவர்க்கு நல்லாசிரியரது அருள் கூடாமையும் கூறப்பட்டன.*

**1662.** *தெளிவுரை :- பஞ்சமா பாதகத்தோடு ஒத்த, வாயொன்று சொல்ல, மனம் ஒன்று சிந்திக்க, மெய்யொன்று செய்தலாகிய இப் பாதகத்தைச் செய்வோரையும் அரசன் அவ்வமையம் பார்த்து யாவரும் அஞ்சும்படி பொறுத்தற்கரிய தண்டனையை மிகச் செய்து திருத்தா விடின், அவனது நாடு பஞ்சத்துட்பட்டு வருந்திப் பின் உருவும் அழிந்துவிடும். அபக்குவரை அரசன் நாடு கடத்தாவிடில் நாட்டில் பஞ்சம் நிலவுமாம்.*

*குறிப்புரை :- பாதகத்தை இங்கு, 'துரோகம்' என்றார். 'மாபாதகம் ஐந்து இவை' என்பது மேற் கூறப்பட்டது. (தி.10 பா.207) "துரோகத்து" என்னும் உவமம் "பாதகர்" என்பதன் முதனிலையோடு முடிந்தது. 'துரோகத்திப் பாதகர் தம்மை' என்றாராயினும், 'துரோகத்துப் பாதகர் இவர்தம்மை' என்றலே கருத்தென்க. உம்மை, மேல் முதல் தந்திரத்தில் 'அரசாட்சி முறை' அதிகாரத்தில் அரசனால் தண்டிக்கப்படத் தக்கவராகக் கூறப்பட்டவரைத் தழுவி நின்றது. ''விஞ்ச'' என்றது, செயலால் நல்லராய்த் தோன்றுதல் பற்றிக் கண்ணோடி அளவிற் குறையச் செய்யாது என்றதாம் மிகச்செய்து. வேறுசெய்தல் - திருத்துதல்.*

*பஞ்சமா பாதகம் - கொலை, களவு, கள், காமம், பொய்.*

*இதனால், அபக்குவராயுள்ளார் பக்குவர்போல ஒழுகுதல் பல தீமைக்கு ஏதுவாதல் நோக்கிக் கடியப்பட்டது.*

**1663.** *தெளிவுரை :- தவத்தில் நிற்கும் பக்குவிகளுக்கு நுகர்ச்சியாய் நிற்கின்ற கன்மங்கள் அனைத்தும் அவற்றை ஊட்டுவிக்கின்ற முதல்வனுடையனவேயாய், அவர்க்கு நுகர்ச்சியாகாமையைத் தேவரும் அறியமாட்டார். அதனால், கன்மங்கள், எடுத்த பிறப்பில் நுகர்ச்சி யாதல், பக்குவம் இன்மையால் தவத்தில் நிற்குமாற்றை உணராதவர் கட்கேயாம்.*

**1663.** **தவத்திடை நின்றவர் தாமுண்ணும் கன்மம்**
**சிவத்திடை நின்றது தேவர் அறியார்**
**தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்**
**பவத்திடை நின்றதோர் பாடது வாமே. 6**

**கன்றலும் கருதலும் கருமம் செய்தலும்**
**தின்றலும் சுவைத்தலும் தீமை செய்தலும்**
**பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்**
**என்றிவை இறைவன்பால் இயற்கை யல்லவே.**

---

*குறிப்புரை :-* *"தவம்" என்றது இங்கு "அவன் அருளாலல்லது ஒன்றும் செய்யாமை" (சிவஞான போதம், சூ.10. அதி. 2) ஆகிய இறைப் பணியை, இதன் கண் நின்றார்க்குப் பிராரத்தம் நுகர்ச்சியாகாமையை,*

*நாமல்ல இந்திரியம்; நம்வழியின் அல்ல; வழி*
*நாமல்ல; நாமும் அரனுடைமை - யாம்என்னில்*
*எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை;*
*முற்செய்வினை யும்தருவான் முன்.*

*- சிவஞானபோதம், சூ.10 அதி.2*

*என்பதனானும் அறிக. 'தேவரும்' என்னும் சிறப்பும்மை தொகுத்த லாயிற்று. பவம் - பிறப்பு. பாடு - நிகழ்ச்சி, நுகர்வு. கன்மங்கள் வகையானும், விரியானும் பலவாயினும் தொகையான் ஒன்றே யாதல் பற்றி 'அது' என ஒருமையாற் கூறினார்.*

*இதனால், பக்குவம் இல்லாதார்க்கு வினை நீங்காமை கூறப்பட்டது. தவத்தோர் நுகரும் கன்மங்கள் அனைத்தும் சிவமே நுகர்வதாம்.*

*பிறரைக் கோபித்தலும், எதையாவது எண்ணுதலும், வினைகளைச் செய்தலும், தின்னுதலும், சுவைத்தலும், பிறருக்கு தீமைகள் செய்தலும், குறைவுபடுதலும், விளங்குதலும், தன்பெருமை தான் கூறுதலும் ஆகிய இக்குணங்கள் இறைவன்பால் பதிந்த பக்குவர்க்கு இயல்பல்லாதன என்றவாறு.*

*சினத்தல் முதலிய ஒன்பது குணங்களும் பசுபோதத்தால் விழையும் செருக்காதலின் அவை பக்குவர்க்கு ஆகா என்பது கருத்து.*

**1664.** விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
விடியில் வெளியில் விழிக்கவும் மாட்டார்
கடியதோர் ஊன்இமை கட்டுமின் காண்மின்
விடியாமை தாக்கும் விளக்கது வாமே. 7

---

*கன்றல்-விரும்பிய பொருளைப் பெறாத வழியும், வேறொருவர் கைக்கொண்டார் என்றவழியும், அவை தம் விருப்பிற்கு மாறாய் நடந்தவழியும் விளைவதாகிய சினம். அதனால் பகை விளைந்து இறையுணர்வைத் தடுத்தலின் விலக்கப்பட்டது.*

*கருதல் - சிவத்தையே கருதவேண்டிய பக்குவன் அதனைவிட்டு, மாலை மாதர் முதலானவற்றை எண்ணுதல், இதுவும் இறையருள் தியானத்திற்கு இடையீடாதல் காண்க.*

*கருமஞ்செய்தல் - அங்ஙனம் எண்ணி, எண்ணிய பொருள்களை எய்துதற்காக இயற்றப்படும் முயற்சிகள். இவைகளால் ஆகாமியவினை மிகுதலின் விலக்கத்தக்கனவாயின.*

*தின்றல் - பசிக்கு ஆளாகி, உயிர் உடலிற்றங்குவதற்கான உணவுகளை அளவறிந்துண்ணாமல் கொழுத்துப் படுத்து அறிவு திரிந்து கூடாவொழுக்கம் மேற்கொள்ளும்வரை உண்ணுதல். இதனாலும் அறிவு மாறுபடுதல் காண்க.*

*சுவைத்தல் - நாவின் சுவைக்கும் அடிமையாகிக் கண்டகண்ட பொருள்களைச் சுவைத்தலும், ஏனைய பொறிகட்கு அடிமைப்பட்டு இதனின் அது நல்லது, அதனின் இது நல்லது எனப் பல பொருள்களைச் சுவைத்தலும், இதனால் மன அமைதி கெடுதலின் விலக்கப்பட்டது.*

*தீமை செய்தல் - தன்கருத்துக்கு ஒவ்வாதவற்றோடு பகைத்து அழிக்கவும் வருத்தவும் முயறல். இதுவும் கூடாது என்க.*

*பின்றல் - குறைபடுதல். நிறைந்த பொருளாகிய சிவத்தோடு இடைவிடாது ஒன்றி நிறைவாகவே இருக்கவேண்டிய உயிர் பழி பாவங்களைத் தேடிக் கொண்டு குறைபட வாழ்தல்.*

*பிறங்கல் - உலகோர் மெச்ச உலகறியற்பணிகளைச் செய்து வாழ்தல். இது ஆணவத்திற்கு எருவிட்டது போல இன்னாசெய்யும் ஆதலின விலக்கத்தக்கதாம். புகழும் ஞானத்திற்குத் தடையாதலை நன்குணர்க.*

*பெருமை கூறல் - தன்பெருமையைத் தானே கூறுதல். இறைபால் - இறைவனிடம் ஒன்றிய மனமுடைய பக்குவர்க்கு என்க.*

*இங்ஙனம் அபக்குவர் நிலையுணர்த்துதலின் அதிகார இயைபு விளங்க நின்றமை காண்க.*

**1665.** வைத்த பசுபாசம் மாற்றும் நெறிவைகிப்
பெத்தம் அறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்
தத்துவம் முன்னித் தலைப்படாது அவ்வாறு
பித்தான சீடனுக் கீயப் பெறாதானே. **8**

---

**1664. தெளிவுரை :-** *ஒளியைக் காணும் கண் இல்லாதவர் இருள் புலர்ந்தாலும் புலர்ந்ததனை அறியமாட்டார். அதனால், விடிந்தபின் ஒளியில் பொருள்களை நன்கு கண்டு பயன்கொள்ளவும் மாட்டார். அதுபோலத் திருவருளை உணரும் பக்குவம் இல்லாதவர், தமக்குத் திருவருள் முன்னின்று அருளுதலை உணரமாட்டார். அருளிய பின்னும் அந்த அருள் நலத்தை நுகரமாட்டார். அதனால் நீவிர் அவ்வாறின்றிப் பரியதாகிய ஊனக் கண்ணை மூடி, நுண்ணிதாகிய ஞானக் கண்ணைத் திறந்து திருவருளைக் காணுங்கள்; அத்திருவருளே அறியாமையாகிய இருள் வாராதபடிக் காக்கின்ற ஒளியாகும்.*

**குறிப்புரை :-** *முதலிரண்டடிகள் ஒட்டணி. 'விடியிலும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. கடுமை பருமையை உணர்த்திற்று. "இமை" என்றது ஆகுபெயர். கட்டுதல் - தடுத்தல். காணுதற்குச் செயப்படு பொருள், முதற்கட் கூறியவாற்றால் 'திருவருள்' என்பது பெறப்பட்டது. "விடியாமை" என்பது 'இரவு' என்னும் பொருட்டாய் இருளைக் குறித்தது. "காக்கும்" என்பது, "குற்றமே காக்க பொருளா" (திருக்குறள், 434) என்பதிற் போல நின்றது. 'திருவருள் விளக்கு' என்றதனால் 'நீவிர் அவ்விளக்கையே நுமக்குக் காட்டாகக் கொள்ளுதல் வேண்டும்' என்பதும் கூறினாராயிற்று.*

*இதனால், 'இருளில் அழுத்துவதாகிய அபக்குவம் நீங்குமாறு முயலல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**1665. தெளிவுரை :-** *'உயிர்களையே பற்றுதற்கு உரியன' என நூல்களில் சொல்லிவைக்கப்பட்ட, பசுத்துவத்தைத் தரும் பாசத்தை அகற்றுவதாகிய தவநெறியில்நின்று, அதனால் அப்பாசங்களின் கட்டு நெகிழ, வீடு பெறும் பக்குவத்தை எய்தி, முன் சென்ற உலகியலின்றும் மாறி மெய்ந்நெறியைப் பற்றி, மெய்ப் பொருளையே அடைய விரும்பி அதற்கேற்ற முயற்சியால் அதனை அடையாது, மேற்கூறியவாறு விடிவதறியாப் பேதைமை மிக்கார்க்கு மேற்கூறிய*

**1666.** மன்னும் மலம்ஐந்தும் மாற்றும் வகைஓரான்
துன்னிய காமாதி தோயும் தொழில் நீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்
அன்னிய னாவன் அசற்சீட னாமே. 9

---

*விளக்கு நல்லாசிரியரால் ஈயப்படா. அபக்குவனுக்கு உபதேசிக்கக்கூடாது எனல் நுதலிற்று.*

*குறிப்புரை :-* "வைகி" என்பது முதலாகப் போந்த எச்சங்கள், பக்குவம் படிமுறையான் முதிர்ந்து வருமாற்றை உணர்த்திநின்றன. முன்னை மந்திரத்தில் ஒட்டணி வகையாற் கூறியதனையே இங்கு, ''அவ்வாறு'' எனச் சுட்டினார். பித்துப் போதலும் பற்றிப் பேதைமையை, "பித்து" என்றார். பெறுவாரது பன்மையால் விளக்கும் பலவாம் ஆதலின் "ஈயப்பெறா" எனப் பன்மையாக ஓதினார். பித்தான சீடன் - உய்யுநெறியும், உறுதுணையும் கிடைத்தும், அவற்றைக் கொண்டு கடைத்தேறாதவன் பித்தனேயாம்.

இதனால், அபக்குவர்க்கு ஞானமும், ஞானத்தின் பயனும் கிடையாமை கூறப்பட்டது. ''ஈயப் பெறா'' என்பது ஆசிரிய ராயினார்க்கும் அறிவித்ததாம்.

**1666.** *தெளிவுரை :-* அசற்சீடன் இயல்பு அறிவித்தல் நுதலிற்று. நிலைபெற்ற ஐவகை மலத்தையும் அகற்றும் உபாயங்களை ஆராய்ந்தறியான்; பொருந்திய காம முதலானவற்றுள் மூழ்கும் தொழிலிலிருந்தும் பிரியான்; பின்னிக் கிடக்கின்ற பொய்மை யுடையவன்; பிறப்பிறப்புகளுக்கும் அஞ்சான்; இவனே அசற்சீடன். இவன் அன்னியனாவன் என்றவாறு.

ஐவகை மலங்களாலும் கட்டுண்டு, காமாதிகளில் தோய்ந்து பொய்யே பேசி, பிறப்புக்கும் இறப்புக்கும் அஞ்சாதிருப்பவன் அசற்சீடன்; அவன் அன்னியன் என்பது கருத்து.

*மலம் ஐந்தாவன : ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. இவை ஆன்மாவின் அறிவை மறைத்துப் போகத்தின்கண் முனைப்பித்துச் செலுத்துவன. அவற்றை உண்மைச் சரியையாதிகளால் நீக்கி உய்யும் முயற்சியில் தலைப்படான் என்பார். 'மாற்றும்வகை ஓரான்' என்றார்.*

*காமாதி - காமம், குரோதம் மோகம், லோபம், மதம், மாற்சரியம் என்ற ஆறு வகையான பகைக் குணங்கள். இவை உள்ளவரை ஞானஒளி விளக்கம் பெறாதலானும், இவற்றை ஆன்மா ஆலயவழிபாடு, அடியார் கூட்டம், சாதனங்களைத் தரித்தல் இவற்றால் நீக்கிக்கொள்ள முயற்சிக்க வேண்டுமாதலானும் இவற்றைச் செய்யான் என்பார் "தோயுந்தொழில் நீங்கான்" என்றார்.*

*சிலந்தியின் வலைபோலப் பொய் ஒன்றற்கொன்று ஆதரவாய்ப் பின்னிக்கொண்டு, தன்னகப்பட்டாரை விடுவியாது ஆதலின் பின்னிய பொய் எனப் பட்டது.*

*பிறப்பும் இறப்பும் மாறிமாறி இடையறாது வருவனவாதலின். அவற்றிற்கு அஞ்சவேண்டியது இன்றியமையாததாகவும் அது செய்யாதான் அசற்சீடன் ஆனான். அசற்சீடன் உண்மைஞானிகட்குப் புறம்பானவன் ஆதலின் அன்னியன் ஆவன் எனப்பட்டது. இதனான் அதிகார இயைபும் அறிக.*

*இங்ஙனம் பத்து மந்திரங்களானும் அபக்குவனாகிய குருவும், அபக்குவனாகிய சீடனும் கூடின் அது குருட்டாட்டமாம் என்பதும், புறம்போவாரும், மலமாயைகளை நீக்கிக்கொள்ள விரும்பாதாரும், திரிகரணசுத்தி இல்லாதாரும், சினம் முதலிய தீக்குணம் உள்ளாரும், சரியையாதிகளைப் பற்ற விருப்பில்லாதாரும் அபக்குவர். அவர்களுக்கு உபதேசம் செய்தலாகாது என்பதும் உணர்த்தப் பெற்றமை காண்க.*

## 14. பக்குவன்

*அஃதாவது, ஆன்மாக்களின் அறிவு தத்தமக்குரிய சோபான முறையில் தூலமும் சூக்குமமுமாய் நிகழ்வதால் ஆன்மாக்கள் அபக்குவன் என்றும் பக்குவன் என்றும் இருவகைப்படுமாதலின் முன்னதிகாரத்தான் அபக்குவனை உணர்த்தி, இவ்வதிகாரத்தால் மலம் நீங்கித் தன் வியாபகம் முற்றும் விரிய விளங்கும் பக்குவான்மாவின் இயல்பைப் பதினான்கு மந்திரங்களான் உணர்த்த எடுத்துக் கொண்டார் ஆசிரியர்.*

**1667.** தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாளர்
அழிவறி வார்மற்றை யல்லா தாரே. 1

---

**1667.** *தெளிவுரை :- குற்றத்தைப் பொருந்துதல் சிறிதும் அறியாத மேலான ஆசிரியரை நூல்முறை வழியே வழிபட்டு அவர்பால் உய்யும் வழியை அறிபவரே நல்வழியை அறிபவராவர். அல்லாதாரெல்லாம் ஏனைக்கெடும் வழியை அறிபவரேயாவர்.*

*குறிப்புரை :- சுருதி - எழுதாக் கிளவிகளாகிய வேதாகமங்கள். அவற்றைக் கண்களாகக் கொண்டமையால் தம்மாட்டு என்றும் குற்றம் பொருந்தாதவர்களே பரம குரு ஆவர். அவர்களே மாணவனுடைய மல மாயை கன்மங்களைக் கண்நோக்காலும், பரிசத்தாலும், கிரியைகளாலும் நீக்கும் தொழிலை ஆள்பவர்கள். அவர்களை வழிபடும் முறையை அறிவார்களே தாம் உய்தற்குரிய நல்வழியை அறிந்தவர்கள் என்பதாம். பழுது - காமக் குரோதாதிகளால் விளையும் குற்றம். அவர்களுக்கு வேதாகமமே கண்ணாக இருத்தலின் பழுதே வாராது ஆகையால், அவர்களைப் பழுதறியாத பரமகுரு என்றார்.*

*வழி அறிவார் - வழிபடுதலை அறிபவர்கள்; ஆசாரியனையும், சிவலிங்கத்தையும், சிவாலயத்தையும், சிவனடியாரையும் சிவனெனவே கருதிவணங்குக என்ற விதிப்படி, குருவைச் சிவனெனக் கும்பிடுதலை அறிந்தவர். குருவே சிவனெனக் கூறினன் நந்தி ஆதலான்.*

**1668.** *தெளிவுரை :- யாவர்க்கும் மேலானவரே, உம்மை அடைய*

**1668.** பதைத்தொழிந் தேன்பர மாஉனை நாடி
அதைத்தொழிந் தேன்இனி ஆரொடுங் கூடேன்
சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர
உதைத்துடை யாய்உகந் தாண்டரு ளாயே. **2**

---

*விரும்பியே அடியேன் துடித்தேன்; அவ்விருப்பத்தின் படி உம்மை அடைந்துவிட்டமையால் இனி ஒருவரோடும் சேரமாட்டேன்; அவரது சேர்க்கையை எல்லாம் அறுத்து விட்டேன். ஆகையால் அடியேனது வினைகள் அழிந்தொழியும்படி போக்கி என்னை ஏற்று, என் தலையிலும், உள்ளத்திலும் உமது திருவடிகளைச் சூட்டி என்னை ஆட்கொண்டருள்வீர்.*

***குறிப்புரை :-*** *தலையில் தீப்பற்றியவன் பதைப்பதுபோல் மாலையும், மாதரும் போகமுமாக வந்து பற்றும் மாயாகாரியங்களின் மயக்கும் வன்மையைக் கண்டு எங்ஙனம் தீருவேம் எப்போது தீருவேம் எனப் பதைபதைத்து அடைக்கலத்தானமாக உனைநாடி ஓடிவந்தேன் என்பார் 'பரமா உன்னைநாடி பதைத்தொழிந்தேன்' என்றார்.*

*அசைத்து - அலைந்து. சார்பாகாதாரையும் சார்பு ஆகாதன வற்றையும் சார்பெனக்கொண்டு, அதனால் வருந்தி அலைந்தேன் என்பதாம்.*

*சிதைத்தல் - வலியை ஒடுக்கி அழித்தல். சிந்தனை - கவலை. உதைத்து - திருவடியால் உதைத்து. திருவடி திருவருள்மயமான பரிசவேதி போல்வதாகலின் அது பட்டவுடன் என்னுடைய வினையும் சிந்தனையும் தேயும் என்பதாம்.*

*இதனால், அதிபக்குவர்கள் அருட் பேராசிரியரைக் கண்டவழி அவரை அடையும் வகை கூறப்பட்டது.*

***1669. தெளிவுரை :-*** *உள்ளமாகிய நிலத்தில் ஆசிரியராகிய உழவர் விதைக்கின்ற விதையை முளைத்து வளர ஒட்டாது தின்றொழிக்கின்ற ஐம்புல ஆசையாகிய கிருமியை உடைய மனமாகிய மேல்மண்ணை யோக முயற்சியால் ஆஞ்ஞையும், அதனைக் கடந்த ஏழாந்தானமும் ஆகிய வானத்தில் நின்று நோக்கும் மெய்யுணர்வாகிய வெயிலால் அக்கிருமிகளை அழித்துச்*

**1669.** பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேல்நின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி
இசைக்கின்ற அன்பருக்கீயலு மாமே. 3

---

*செம்மைப்படுத்தி அம்மனத்தைத் தம்மோடு ஒத்துவரச் செய்கின்ற அடியவருக்குச் 'சிவஞானம்' என்னும் விதையை உள்ளத்தில் ஊன்றக் கொடுத்தல் தக்கது.*

***குறிப்புரை :-*** *பிணியால் வருந்துகின்றவர்கட்கு வருந்துங் காலத்திலேதான் மருந்தில் ஈடுபாடும் மிகும். எத்துனை வருத்தம் நேரினும் மருந்தைப் பல்லாற்றானும் தேட முயல்வர். அதுபோலப் பிறப்பும் இறப்பும் துன்பமும் இன்பமுமாகிய சுழலிற்பட்டு அலைகின்றபோது அடியேன் பரலோகம் என்னும் விதையை விதைக்கின்ற ஆதிகாரணனாகிய அரனைக் காண நேரும் என்பார் மேல் நின்று நோக்கி என்றார். மேல் - சகஸ்ராரமாகிய உச்சிநிலை.*

*சிதைக்கின்ற சிந்தை - புலன்களில் சென்று பற்றிச் சிதறிய மனம். செவ்வே நிறுத்தலாவது திருவடி ஒன்றையே பற்றிப் பிரியாது நிற்கப் பழகுதல்.*

*பரம் - சிவம். இஃது ஆகுபெயராய் அதனை உணரும் ஞானத்தைக் குறித்தது. ஞானத்தை 'வித்து' என ஏகதேச உருவகமாகக் கூறியதனால், ஏனையவும் ஏற்றபெற்றியால் ஆகும் உருவகமாதல் பெறப்பட்டது.*

*மெய்ம்மையாம் உழவைச் செய்து*
*விருப்பெனும் வித்தை வித்திப்*
*பொய்ம்மையாம் களையை வாங்கிப்*
*பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
*தம்மையும் நோக்கிக் கண்டு*
*தகவெனும் வேலி யிட்டுச்*
*செம்மையுள் நிற்ப ராகில்*
*சிவகதி விளையு மன்றே.* *- தி.4 ப.76 பா.2*

*என்னும் திருநேரிசையும் இங்கு அறியத்தக்கது. "ஈயலும்" என்னும் உம்மை, சிறப்பு.*

1670. கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்க
உள்ள பொருள்உடல் ஆவி யுடன்ஈக
எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று
தெள்ளி அறியச் சிவபதந் தானே. 4

---

*இதனால், பக்குவிகள் ஆசிரியன் அருளைப் பெற்றபின், அதனைப் போக்கிக்கொள்ளுமாறு கூறப்பட்டது. இதனைப் பயன் நோக்கி, 'ஆசிரியராவார் போற்றுந்தன்மையில்லார்க்கு விரைந்து அருளுதலும் கூடா' என்னும் முகத்தாற் கூறினார்.*

1670. ***தெளிவுரை :-*** *கொண்டால் நல்ல குருநாதனைக் கொள்க; உடைமையாயுள்ள உடல் பொருள் ஆவி மூன்றினையும் காணிக்கையாகக் கொடுக்க; எள்ளளவு காலமும் இடைவிடாமல் அவருபதேச வழியிலேயே நின்று தெளிந்துணர சிவபதம் தானே விளையும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *"கொள்ளின்" என்பது, நல்லாசிரியரை அடையும் பக்குவத்தினது அருமையுணர நின்றது. உம்மை உயர்வு சிறப்பு. உள்ள பொருள் - தம்மிடம் உள்ள அனைத்துப் பொருளும், உடலையும், உயிரையும் நோக்க இப்பொருள் மிகச் சிறிதாகலின், "உடல் ஆவி யுடன்" என உயர்பின்வழித்தாய (தொல். சொல். வேற்றுமையியல்) மூன்றாவதன் ஒருவினை ஒடுஉருபுச் சொல் கொடுத்துக் கூறினார். 'இப்போது நுகர்வனவும், நுகருங்காற் செய்வனவுமாய வினைகளும் பொருளேயாம்' என்பது சித்தாந்தமாதலை இவ்விடத்து நினைக. இடைவிடாமல் ஆசிரியரை தெள்ளுதல் - சிந்தித்தல். அறிதல் - தெளிதல். இவை உபதேச மொழியினை இடைவிடாமை இவற்றின் பொருட்டேயாம். "சிவபதம்" என்பதன் பின் 'உளதாம்' என்பது சொல்லெச்சமாய் நின்றது. "தான்" என்பது தேற்றப்பொருள் தந்தது.*

*இதனால், ஆசிரியரை அடையும் பக்குவர் அவரை அடையுமாறும், அடைந்த பயன் கொள்ளுமாறும் கூறப்பட்டன.*

1671. ***தெளிவுரை :-*** *'விருச்சிகமும், கற்கடகமும் என்னும் இரண்டு இலக்னங்களையுடைய 'சுவாதி, விசாகம்' என்னும் இரு நட்சத்திரங்கள் பொருந்திய, முன்னோர் சொல்லிய இருநாட்களே குருமொழியை உணர்தற்கு உரிய நாள்கள்' என்று மரபு நெறியின் சிறப்பை எண்ணுவாருள் அங்ஙனம் உணர்ந்து ஒழுகுவார்க்குக் கூறியதல்லது, இறைவனும் அதற்குரிய காரணம் எதனையும் எங்கும்*

**1671.** சோதி விசாகம் தொடர்ந்திரு தேள்நண்டு
ஓதிய நாளே உணர்வது தானென்று
நீதியுள் நீர்மை நினைந்தவர்க் கல்லது,
ஆதியும் ஏதும் அறியகி லானே. **5**

**1672.** தொழிலார மாமணித் தூய்தான சிந்தை
எழிலால் இறைவன் இடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலார் திருவடி கண்டரு ளாமே. **6**

---

*சொல்லி வைக்கவில்லை.*

*குறிப்புரை :- தேள் - விருச்சிகம். நண்டு - கடகம். கற்கடேசுவரர் - திருந்துதேவன்குடி இறைவன் பெயர். 'அதனால், இன்றியமையாத பொழுது ஆசிரியர் எந்த நாளையும் நாளாக, எந்த ஓரையையும் ஓரையாகக் கொள்ளலாம்' என்பதாம். 'தேள், நண்டு தொடர்ந்த சோதி விசாகம் ஓதி இருநாளே உணர்வது' எனக் கூட்டுக. 'தொடர்ந்த' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. உபதேசித்தற்கு ஆசிரியர் தாம் கொள்ளும் ஓரை தேளும், நண்டும் ஆதல் வேண்டும்' என்றமையால் அவற்றிற்கு ஏற்ற மாதம் தாமே அமையுமாதலின், அது கூற வேண்டாதாயிற்று. நீர்மை, ஆசிரியர் ஆணைவழியே நிற்றல். ''நினைந்தவர்க்கு'' என்பதன்பின், 'உணர்த்தியது' என ஒரு சொல் வருவிக்க. ஆதி - முதல்வன், இறைவன். உயிர்வர மூன்றாமடி யிறுதியிலும் குற்றுகரம் கெடாது நின்றது. 'அவ்வாதியும், என ஓதலுமாம். 'அறிவிக்ககிலான்' என்பதில் பிறவினை விகுதி தொகுக்கப்பட்டது. இந்த நாட்கள் ஏன் உபதேசம் கேட்டற்குரியன என்றும், எது முதல் யார் இங்ஙனம் குறித்தார்கள் என்றும் ஏதுக்களானும் எடுத்த மொழியானும் மிக்கு சோதிக்க வேண்டாம் என்பதாம்.*

*இதனால், பக்குவிகட்குப் பயன்படுவன சிலகால மரபுகள் கூறப்பட்டன.*

**1672.** *தெளிவுரை :- சரியை முதலிய பணிகள் நிரம்பிவர, அதனால், சிறந்த முத்துப்போலும் தூயதான மனத்தில் உண்டாகும் எழுச்சி காரணமாக இறைவன் அதனைத் தனக்கு இடமாகக் கொண்டருளுவான். அப்பொழுது வீணரது வெற்றிப்பாடாம் வினை*

**1673.** சாத்திக னாய்ப்பர தத்துவந் தானுன்னி
ஆத்திக பேத நெறிதோற்ற மாகியே
ஆர்த்த பிறவியின் அஞ்சி அறநெறி
சாத்தவல் லானவன் சற்சீட னாமே. 7

---

*நீங்கிப் போக, அப்பணிகளில் நின்றோன் சிவனது வீரக்கழலை அணிந்த திருவடியை நேரே கண்டு, அவனது அருளேயாய் நிற்பன்.*

***குறிப்புரை :-*** *தொழில், இங்கு இறைவன் பணி. மணி, இங்கு முத்து. வெண்மை தூய்மையைக் குறிக்குமாதலின், தூய்மை பெற்ற மனத்திற்கு முத்து உவமையாயிற்று. 'சிந்தை தூயதாதல் பணி நிரம்புதலாம்' என்றதனால், சரியை முதலிய பணிகளால் பக்குவம் முதிர்தல் கூறப்பட்டதாம். 'பக்குவ முதிர்ந்தவழித் திருவடிப்பேறு கிடைக்கும்' என்றதனால், 'பக்குவ முதிர்ச்சி வேண்டுவோர் மேற்கூறிய இறைவன் பணியை மேற்கொண்டு செய்க. என்றதாயிற்று.*

*விழல் - ஒருவகைப்புல். விளைந்து பயன்படாமையோடு நெல்லின் விளைவையும் களையாய் வளர்ந்து கெடுப்பது. அதனைப் போன்ற மக்கள் விழலார் எனப்பட்டனர். மக்களில் பயன்படாதாரே பலர். அவர்களும் முயன்று அடியைச் சாரின் அருளையெய்தலா மென்பது. திருவடியின்கண் விருப்பத்தையுடையவர் எனலுமாம். வீழல் - விரும்புதல். வணங்குதலுடையவர் எனினுமாம்.*

*விறலாம் வினை - வலிய வினை. பசு போத முனைப்பால் செய்யப்பட்டுக் கழிவின்கண் நீங்காது வளரும் மேலை வினை. இறைவன் இடங்கொண்டபோதே விளக்குப் புக இருள் மாய்ந்தாங்கு கெட்டன என்பார் 'இடங்கொண்டபோதே வினையது போக' என்றார்.*

*கழல் - வெற்றிக்காக அணியும் காலணி; வீரக்கழல் எனப்படுவது. இங்ஙனம் அடியார்களின் வினைகெடுத்து ஆட்கொள்ளும் வெற்றியின் சின்னமாக அணியும் அணி.*

*இதனால், பக்குவம் வருமாறு கூறப்பட்டது.*

**1673. *தெளிவுரை :-*** *சத்துவ குணம் மிக்கவனாய், பரம்பொருளை அடைய எண்ணி, அப்பரம் பொருள் முதலிய நுண்பொருள்களின் உண்மையை அடிமையாகக்கொண்ட சமயங்களே 'சமயங்கள்' என்னும் உணர்வு உள்ளத்தில்*

தோன்றப்பெற்று, தொன்றுதொட்டு விடாது கட்டியுள்ள பிறவிக்கட்டிற்கு அஞ்சி அறநெறியை தளராது மேற்கொள்ள வல்லவனே சற்சீடன் - நன்மாணாக்கன் ஆவான்.

**குறிப்புரை :-** 'சாத்துவிகன்' என்பது மருவி நின்றது. ஆத்திகம் - உண்மைப்பொருள்களை உண்டென்று உடன்படும் நெறி. அவற்றை உண்டென உடன்படாது 'இல்லை' எனப்பிணங்குவது 'நாத்திகம்' எனப்படும். முன்னையது பொது வகையில் ஒன்றாயினும், சிறப்பு வகையில் பலவாதலை, "பேதநெறி" என்றார். தோற்றம் - உள்ளத்தில் தோன்றுதல். இதனையே,

"தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி"

- தி.8 போற்றித். 42

என அருளிச் செய்தார் ஆளுடைய அடிகள். இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேலாகிய "தோற்றமாகி" என்னும் சினை வினை. "அஞ்சி" என்னும் முதல் வினையோடு முடிந்தது. இவ்வாறன்றி, ''ஆகி'' என்பதனை 'ஆக' எனத் திரித்துக் கொள்ளலுமாம். சாத்தல் - தரித்தல்; தாங்கல்; மேற்கொள்ளுதல். ஆத்திக புத்தி உடையவனே அறநெறியை உள்ளவாறு மேற்கொள்வானாகலானும், அவனே மாணாக்கன் ஆதற்கு உரியவன் ஆகலானும், "ஆத்திக பேத நெறி தோற்ற மாகியே.... அறநெறி சாத்த வல்லானவன் சற்சீடனாமே'' என்றார். 'நூல்கேட்கும் மாணாக்கர்க்கும் இந்நிலை வேண்டும்' எனக் கல்வியாசிரியர் வேண்டுதலை இங்கு நினைக. (தொல்காப்பிய உரை, பொதுப் பாயிரம்) 'ஆத்திகம் அடியாக வரும் அறஉள்ளமே பக்குவத்தை வருவிக்கும்' என்பது கருத்து.

சாத்துவிகனாய் ஆத்திக அடிப்படையில் பற்றுக்கொண்டு, சிவ தன்மத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவனே சற்சீடன் என்பது கருத்து.

சாத்திகனாய் - சத்துவிகனாய் என்பதன் திரிபு. சாத்துவகுணம் ஆழ்கடல்போல அலையின்றி அமைதியாய்ப் பொருள் புலப்பாட்டின்கண் தெளிவுறுத்துவதாய் இருக்கும் குணம். அதனை உடையவனே சாத்துவிகன். அவன் மேலான உண்மைப்பொருளை யன்றி, வேறு உலகியலின்பப் பொருள் ஒன்றையும் சிந்தியான் ஆதலின் 'பரதத்துவம் தான் உன்னி' என்றார்.

ஆத்திகநெறி - முதல்வன் ஒருவன் உண்டென்று உறுதியாகக் கொள்கின்ற மார்க்கம். தோற்றமாதலாவது அந்நெறிக்கண் பற்று

**1674.** சத்தும் அசத்தும்எவ் வாறெனத் தான்உன்னிச்
சித்தம் உருக்கிச் சிவனருள் கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்த
சத்தியில் இச்சைத் தகுவோன் சற்சீடனே. **8**

---

*மிகுதல். மாணிக்கவாசக சுவாமிகள் 'தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி, முனிவிலாததோர் பொருளது கருதலும்' என்றருளியது காண்க.*

*இதனால், நன்மாணாக்கராம் பக்குவத்தை எய்துமாறு கூறப்பட்டது.*

**1674. *தெளிவுரை :-*** *சிவனது திருவருள் ஆன்மாவைப் பக்குவப் படுத்தி நன்னெறியை அடைவித்தமையால், 'நிலையுடைய பொருள் நிலையாமையுடைய பொருள்களின் இயல்புகள் யாவை' என்னும் ஆராய்ச்சியைத் தலைப்பட்டு அவற்றை உள்ளவாறுணரும் உணர்வைப் பெறுதல்பொருட்டு ஆசாரியரை அன்போடு வழிபட்டு, சிவனது ஆனந்தசத்தியில் மூழ்குதற்கண் வேட்கை மிக்கவனே சற்சீடனாவன்.*

***குறிப்புரை :-*** *சத்தும் அசத்தும் எவ்வாறெனத் தான் உன்னி - உலகில் நித்தியமாய் அழியாத பொருள் எவை, அநித்தியமாய் அழியும் பொருள் எவை என்று தான் சிந்தித்து உணர்ந்து, சித்தை உருக்கிச் சிவனருள் கைகாட்ட - சிவத்தையே சிந்தித்துச் சிவத்தின் சத்தி பதியப்பெற்றுச் சிவத்தை உணர்த்த உணர்த்த, பத்தியின் ஞானம் பெறப் பணிந்து - நித்தியப் பொருளான சிவத்தினிடம் சிவஞானத்தைப் பெறப் பணிந்து, ஆனந்த சத்தியில் இச்சை தருவோன் சற்சீடன் - ஆனந்தமே வடிவான சிவசத்தியின் இச்சைக்குத் தக்கவாறு தன்னைப் பக்குவப்படுத்திக்கொள்பவனே நல்ல சீடனாவான். சிந்தை, சித்தையென எதுகை நோக்கி வலித்தது. சித்தையுருக்கிச் சிவனருள் கைகாட்டலாவது, நல்ல சிந்தனையால் ஒளி உண்டாகிப் பின்னர் நாதம் சிவமாக வந்து உணர்த்தல். சத்துப்பொருளாவும், சித்துருவாகவும் ஆனந்த சத்தியாகவும் சிவம் உள்ளது. அதையே பக்திகொண்டு சாதகனும் சத்துப் பொருள் விளங்கச் சித்துருவாகி ஆனந்த சத்தியில் பதிந்து அநித்தியப்*

**1675.** அடிவைத் தருளுதி ஆசான் இன்றுன்னா
வடிவைத்த மாமுடி மாயப் பிறவி
அடிவைத்த காய அருட்சத்தி யாலே
அடிபெற்ற ஞானத்தன் ஆசற் றுளோனே. 9

**1676.** சீராரும் ஞானத்தின் இச்சை செலச்செல்ல
ஆராத காதல் குருபரன் பால் ஆகச்
சாராத சாதகம் நான்கும்தன் பால்உற்றோன்
ஆராயும் ஞானத்த னாம்அடி வைக்கவே. 10

---

*பொருளினின்றும் விடுபட்டுச் சற்சீடனாவான். சத்தையே நினைந்து அநித்தியத்தை விட்டு சத், சித் ஆனந்த மயமாய் உயிர் இறையுடன் பொருந்தி நிற்கும்.*

**1675.** *தெளிவுரை :- என்றும் சிவனது திருவடியைத் தாங்கி நிற்கின்ற தனது சீரியதலை, நிலையாமையுடைய பிறவித் தொடர்ச்சியில் மூலங்களைக் காய்ந்தபின் அருட் சத்தியால் ஆசாரியரை அடைந்து, 'ஆசாரியரே, இன்றே அடியேனுக்கு உமது திருவடியைச் சூட்டி அருள்செய்ய வேண்டும்' என வேண்டி நின்று, அவ்வாறே திருவடி சூட்டி அருளப்பட்ட ஞானத்தால் அசைவற நிற்பவனே மலம் நீங்கிய முத்தனாவான்.*

*குறிப்புரை :- சீடனுடைய வேண்டுகோள் 'ஆசான் இன்று அடிவைத்தருளுதி' என்பது. வேண்டுதல்மட்டும் பயனின்று, தியானமும் வேண்டும் என்பார் அடுத்து, வடிவைத் தம் மாமுடி உன்னா என்றார். குருநாதனுடைய திருவுருவைத் தம் முடிமீது அதாவது உச்சியிலும், உச்சிக்கு மேலே துவாதசாந்தத் தானத்திலும் தியானிக்க என்க. உன்னா என்னும் இறந்த கால வினையெச்சத்தை உன்ன எனச் செயவெனெச்ச மாக்கிப் பொருள்கொள்க.*

*மாயப்பிறவி - வினைக்கீடாக மாயையோடு கூடி வருகின்ற பிறவிகள், அது மேன்மேலும் நீரொழுக்குப் போல இடையறா துவராமல், திருவருட்சத்தி காப்பள் என்பார் 'மாயப்பிறவி காய அடிவைத்த அருட்சத்தி யாலே' என்றார்.*

*அடிபெற்ற - பழகிய. சிவஞானம் கற்குஞ் சரக்கன்றாதலின்*

**1677.** உணர்த்தும் அதிபக் குவர்க்கே உணர்த்தி
இணக்கில் பராபரத் தெல்லையுள் இட்டுக்
குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்
டுணர்த்துமின் ஆவுடை யாள்தன்னை உன்னியே. **11**

---

*திருவருள் துணையோடு பலநாட்பழகி நிலைபெறவேண்டிய தொன்று என்ற உண்மையை உணர்த்தியவாறாம்.*

*முதலடியை மூன்றாம் அடியின்பின் கூட்டி யுரைக்க. முடியில் வைத்த அடியினது தொழிலை அம்முடியின் மேல் ஏற்றிக் கூறினார். அவ்வடியாவது திரோதான சத்தி. அதுவே பிறவியின் மூலமாகிய ஆணவாதி பாசங்களைக் காய்ந்தொழிப்பது. திரோதான சத்தி அருட்சத்தியாவதன்றிப் பிறிதில்லையாயினும் மறுதலைப்பட்டு நிற்றல் பற்றி வேறுபோல ஓதினார். இந்நிலையே 'சத்திநிபாதம்' எனப்படுவது. "ஆசான்" அண்மை விளி. பின்னின்ற "வைத்த" என்பது அஃறிணைப் பன்மை வினைப்பெயர். அஃது இரண்டாவதன் தொகை பட வந்தது.*

*இதனால், சிவனது அருள் ஆன்மாவிற்கு இருநிலையிலும் உபகரிக்குமாற்றால் ஆன்மா பக்குவம் எய்திப் பயன்பெறுமாறு கூறப்பட்டது.*

***1676. தெளிவுரை :-** சிறப்புப் பொருந்திய ஞானத்தின் கண் விருப்பம் மிக மிக, அது காரணமாக ஞானாசிரியன்பால் அடங்காத அன்பு உளதாக. அதனால், அவ்வாசிரியன் அவன் மேல் தனது திருவடியைச் சூட்டி அருள்செய்ய, அவ்வாற்றானே, 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல்' என்னும் நான்கு சாதனங்களையும் முற்றி உலகியலில் நீங்கினவனே அறிவுடையோரால் 'ஞானி' என ஆராய்ந்து கூறப்படும் முதிர்ந்த ஞானியாவான்.*

***குறிப்புரை :-** ஆசாரியன் திருவடிதீட்சை புரியச் சிவஞானம் பெறுபவன் பக்குவன் என்பது கருத்து.*

*சீராரும் ஞானம்* - **உண்மை ஞானம். அதுவே சிவத்தை உணர உதவுவதாகலின் அது சீராரும் ஞானம் எனப்பட்டது.** *இச்சை* - **விருப்பம்.** *செலச்செல* - **உண்டாக உண்டாக.** *அடுக்கு*

**1678.** இறையடி தாழ்ந்து ஐவணக்கமும் எய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்
சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே. 12

---

*இடைவிடாமைப் பொருளின் வந்தது.*

*ஆராத காதல் - போதும் என்றமையாத முறுகிய அன்பு. குருபரன் யாரும் பெறாத பேற்றினை அருளியவனாதலின் அமையாத காதல் அவன் பாலதாயிற்று. ஆகவே அவன் உபதேசித்தவழியே நின்று நால்வகை உபாயங்களும் பயின்றோன் ஞானத்தனாம் என்றவாறு.*

*சாராத சாதகம் - உலகியல் நோக்கோடு சார்ந்த உபாயச்சரியையும், உபாயக்கிரியையும், உபாய யோகமும், உபாயஞானமுமின்றி உண்மைச் சரியையாதிகள் சிவத்தைச் சார்ந்தன வாதலின் அவை (உலகியலைச்) "சாராத சாதகம்" எனப்பட்டன. சாதகம் நான்கும் முற்கூறப் பெற்றன. தன்பால் உற்றோன் - தன்னிடம் பொருந்தியவன்.*

**1677.** *தெளிவுரை :- உண்மை ஞானாசிரியனாயுள்ளவன் சிவ ஞானத்தை உணரத்தக்க அதிபக்குவர்கட்கே அதனை முன்பு கேள்வியளவான் உணர்த்தி, அதன்பின் அவர்கள் அதனைச் சிந்தித்துத் தெளிந்த தெளிவு நிலையில் சிவனது வியாபகத்துள் அவர்களை வியாப்பியமாகச் செய்தலாகிய நிட்டையை எய்துவித்து, அந்நிட்டை நிலைபெற்ற வழி கிழக்கு முதலிய திசைப் பாகுபாடுகளுள் யாதும் இல்லாதவாறு சிவனது வியாபகத்தை முற்றுமாகத் தலைப்படுவிப்பன். அங்ஙனம் அச்செயல் அனைத்தையும் அவன் செய்வது, அனைத்துயிர்களையும் உடைய அருட்சத்தியைத் தியானித்தே.*

*குறிப்புரை :- சிவகுருநாதன் சீடனுக்கு உணர்த்துமுறை உணர்த்துதல் நுதலிற்று. குருநாதன் சத்தியோடுகூடிய பசுபதியைத் தியானித்து, மிகப் பரிபாகமுற்ற சீடர்க்கே உபதேசிப்பன்; அங்ஙனம் உபதேசித்துப் பராபரப்பொருளாகிய சிவத்தின் அருள் வரம்பிலகப்படுத்திப் பொருத்துமாயின் நாற்றிசையிலும் நின்று உணர்த்துவன் என்றவாறு.*

*சிவகுருநாதன் சிவோகம் பாவனையிலிருந்து தான் எங்குமாயிருந்து சீடனைச் சிவத்தோடு இணக்குவன்; உபதேசிப்பன் என்பது கருத்து.*

*மின் : ஆகுபெயர்; பராசத்தியை உணர்த்திற்று. மின்னொளிபோல யோகியர் உள்ளத்துத் தோன்றலின் மின் என்றாளெனலுமாம்.*

*ஆ உடையான் - பசுக்களை அநாதியே அடிமையாகப் பெற்ற பசுபதி. அவனை நினைத்தலாவது திருவருளோடு கூடிய சிவத்தை நினைத்தல். அதாவது சிவோகம் பாவனை செய்தல்.*

*அதிபக்குவர் - தீவிரதர சத்திநிபாதமுடைய சீடர்கள் உணர்த்தும் என்ற வினையால் பெறும் பெயராகிய தத்துவமசியை என்ற செயப்படுபொருள் வருவித்துரைக்க, அதுவே உண்மைப் பொருளாம் என்க.*

*அங்ஙனம் உணர்த்தியவுடனே பரிபாகம் உற்ற ஆன்மா இறைவனுடன் இணங்க விரையும் விட்டிடுதி கண்டாய் எனப் பரபரக்கும். அஞ்ஞான்று அந்த ஆன்மாவைச் சிவத்தோடு பொருத்தத் திருவுள்ளங் கொள்ளின் என்பார் "இணக்கின்" என்றார்.*

*பராபரம் - மேலானவற்றுக்கு எல்லாம் மேலான சிவம். அதன் எல்லையுள் இட்டு இணக்கின் - அதன் வியாபகத்துள் வியாப்பியமாக ஆன்மா இருத்தலை அறியச்செய்தல் என்க.*

*குணக்கு - கிழக்கு. உத்தரம் - வடக்கு. பச்சிமம் - மேற்கு. இவ்வண்ணம் நாற்றிசையும் கூறவே மேலும் கீழும் கோணற்றிசைகளும் மடங்கும். ஆகவே எங்குமாயிருந்து உணர்த்தும் என்க. குருநாதன் எங்குமாயிருத்தலாவது சிவகுருவும் சிவனைப்போலவே எங்குமாயிருக்கும் தன்மையுடையன்; முத்தன் ஆகையால் என்னும் ஆகம வாக்கியங்கொண்டு தெளிக.*

*இம்மந்திரம் அதிபக்குவர்க்கு ஆசான் அறிவித்து எங்குமாயிருக்கை உணர்த்துவதால் அதிகார இயைபு அறிக.*

*இதனால், அதிபக்குவம் உடையார் குருவருளால் முத்தி நிலையை விரையப் பெறுதல் கூறப்பட்டது. இதனானே, ஞானாசிரிய ராவார், அதிபக்குவர்க்கு விரைய அருளல் வேண்டும் என்பதும் குறிப்பாற் பெறப்பட்டது.*

**1679.** வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புனல்வழி மாற்றிச் சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்கும் தலையினோன் சற்சீட னாமே. **13**

**1680.** சற்குணம் வாய்மை தயாவிவே கம்தண்மை
சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே
சிற்பர ஞானம் தெளியத் தெளிவோர்தல்
அற்புத மேதோன்றல் ஆகும்சற் சீடனே. **14**

---

1678. ***தெளிவுரை :-*** *குருவருளை விரும்பும் மாணவனே, உன்முன் குருவாய் வந்து நிற்கும் சிவனை அங்ஙனமான சிவனாகவே கண்டு அவனது திருவடிகளில் வீழ்ந்து, ஏகாங்க, திரியங்க, பஞ்சாங்க, சடங்க, அட்டாங்கங்களாகிய ஐந்து வணக்கங்களையும் செய்து, பிறவித் துயரால் வருந்தும் உனது குறையை விண்ணப்பித்து, அச்சிவனது அருட்குணங்கள் பலவற்றையும் எடுத்துக்கூறிப் புகழ்ந்தபொழுது, நீயிருக்கும் சிறைக்கூடமாகிய உடம்பையே நீ என மயங்கியிருக்கும் உனது மயக்கத்தைப் போக்கி உனது உண்மையை உனக்குத் தெளிவித்து, நீ சிவத்தோடு ஒன்றாகும் நிலையை உன் அறிவு அறியும்படிச் செய்பவனே உண்மை ஞானாசிரியனாவான்.*

***குறிப்புரை :-*** *"இறை", குருவாய் வந்து நிற்கும் இறை என்பது அதிகாரத்தால் விளங்கிற்று. ஏகாங்க வணக்கமாவது கைகட்டித் தலையால் மட்டும் வணங்குவது. திரியங்க வணக்கமாவது, இரு கைகளையும் தலைமேற் குவித்துக் கும்பிட்டுத் தலை தாழ்த்து வணங்குதல். பஞ்சாங்க வணக்கமாவது மோவாய் இரு தோள் இரு முழந்தாள் இவ் ஐந்துறுப்பும் நிலத்தில் தோய வணங்குதல். சடங்க வணக்கமாவது, மோவாய் இரு கைகள், மார்பு, இரு கால்கள் இவ் ஆறுறுப்பும் நிலத்தில் தோய வணங்குதல், அட்டாங்க வணக்கமாவது, மேற்கூறிய ஆறுறுப்புக்களுடன், இருகாதுகளும் நிலத்தில் தோய வணங்குதல். வணக்கம் நமஸ்காரம் எனப்படும். எட்டுறுப்போடு கூடிய வணக்கத்தை 'சாட்டாங்க நமஸ்காரம்' என்பர். பல 'வகையாலும் வணங்கி' என்றவாறு, "நீ" என்பதன்பின் 'ஒன்றாக' என்பதும், "அறிவுக்கு" என்பதன்முன் 'உனது' என்பதும், எஞ்சி நின்றன. அறிவித்தல் அறியும் தன்மையை உளதாக்கல்.*

*இதனால், பக்குவி நல்லாசிரியனை அனுபவத்தில் தெளியுமாறு கூறப்பட்டது. பக்குவம் இன்மையால் நல்லாசிரியனைத்*

*தலைப்படாது, ஆசிரியன் அல்லாதானைத் தலைப்பட்ட வழி அதனை அனுபவத்தால் உணர்ந்து நீங்குமாறும் இதுவேயாதல் அறிக. ஆசிரியன் அல்லாதானை அடைந்து பயன் பெறாது, எய்த்த மாணவன் அவனை வருத்தத்தோடு விட்டு நீங்கி நல்லாசிரியனை நாடிச் செல்லுதற்கு, தேன் இல்லாத மலரை அடைந்த தேனீ பின்னர் அதனைவிட்டுத் தேன் உள்ள மலரை நாடிச் செல்லுதலை உவமையாகக் கூறுவர்.*

**1679. *தெளிவுரை :-*** *காமியத்தை நிரப்பும் நெறி வேத நெறியாக, அதனை விடுத்து நிட்காமியமாவது சிவனிடத்துச் செய்யும் பத்தியே யாதலாலும், ஒழுக்கமாகிய நீரை உலகியலாகிய மடையினின்றும் மாற்றிச் சித்தாந்த நெறியாகிய மடையிற் பாய்ச்சி ஆசையை ஒழிக்கும் உண்மை வேதாந்தியையே குருவாகத் தெளிந்து அவன் திருவடிகளில் தாழ்ந்து வணங்கி, அவன் வழி நிற்பவனே சற்சீடனாவான்.*

***குறிப்புரை :-*** *உலகியல் ஆசையை உவர்ப்பதான வேதாந்த நெறியினும் சீவகரணங்களைச் சிவகரணமாகச் செய்யுஞ் சித்தாந்த நெறி செலுத்தும் ஆசாரியன் திருவடிகளை வணங்குபவன் சற்சீடன் என்பது கருத்து.*

*வேட்கை - பொருள்களின் மேற்றோன்றும் பற்றுள்ளம். மாலை மாதர் போகம் இவற்றில் தோன்றும் காதன்மை யென்க. இவைகள் மேற்செல்லும் பற்றுள்ளத்தை விடு என்று உபதேசிப்பதே வேதாந்தம். பொறிகளை அவியாது, புலன்களில் சென்று பற்றாது, சிவத்தினிடமே பற்றி நிற்கச் செலுத்துவதான முறைமைத் தெரிவிப்பதே சித்தாந்தம். இதனைத் தெரிவிப்பவனே உண்மை வேதாந்தி; அவன் திருவடிகளே பற்றத் தகுவன என்பதாம். சீவகரணங்களைச் சிவகரணமாக, சிவமொன்றே நுகரப்படும் பொருளாகக் கொண்டு அநுபவிப்பதே சித்தாந்தம் என்க.*

*இதனால், சற்குரு (நல்லாசிரியன்) கிடைக்கப் பெற்றோனே பக்குவியான சற்சீடன் (நன்மாணாக்கன்) என்பது கூறப்பட்டது.*

**1680. *தெளிவுரை :-*** *சற்குணம் முதல் அற்புதம் ஈறாக உள்ள ஏழியல்பும் உடையவனே சற்சீடனாவான்.*

***குறிப்புரை :-*** *நல்ல குணம், வாய்மை, தயா, விவேகம், தண்மை, சிவகுருநாதன் திருவடிகளை நிழல்போலப் பிரியாத தன்மை, உண்மை ஞானமேயான பரஞானத்தைச் சிந்தித்துத் தெளிய அறிதல், அற்புதங் காணப் பெறுதல் ஆகிய இவ்வனுபவங்கள் படிப்படியாகத்*

தோன்றப் பெறுபவனே சற்சீடனாவன் என்றவாறு.

சற்சீடனுக்கு முற்கூறிய சற்குணம் முதலிய அனுபவங்கள் நிகழும் என்பதாம்.

சற்குணம் - சுத்த சத்துவகுணம் மிகுந்த தன்மையால், கோமாற்கே யாம் என்றும் மீளா ஆளாய்க் கொய்மலர்ச் சேவடியிணையே குறுகினோம்; யாமார்க்கும் குடியல்லோம் என்ற உறுதி நிலைக்கப்பெறுதல்.

வாய்மை - சிவநாமத்தை அன்றி வாழ்வினும் தாழ்வினும் மறந்தும் பிற சொல்லாமை. மெய்ம்மை என்பாரும் உளர். அஃது உலகியலில் நிற்பார்க்கு உரிய தாமேயன்றி சிவாநுபவத்திற்கு அது சிறியதென்க.

தயா - எல்லா உயிர்களும் இறைவனுறை கோயில் என்று காண்கின்ற கருணை உள்ளம். விவேகம் - இவை பசுபுண்ணியம் இவை பதிபுண்ணியம், இவை பிறவிக்கு ஏது, இவை முத்திக்கு ஏது என்று விவேகித்தறிகின்ற அறிவு. தண்மை - வேற்றுமை நோக்காது எல்லா உயிர்களிடத்தும் செலுத்தப்பெறும் தணிந்த கருணையுள்ளம்.

சற்குருவின் திருவடிகளை நிழல்போல நீங்காமையாவது, நிழல் தன்னை நீங்காது அடி உறைந்தற்று என்று தேவர் கூறியதுபோலக் குருவைவிட்டு நீங்காமலும், குருவின் திருவடிக்கீழே அடங்கி முனைக்காது நிற்றலும் ஆம்.

அற்புதம் - சிவானுபவத்தில் அவ்வப்பொழுது வெளிப்படும், இன்னது என்று விவரிக்க இயலாத அனுபவச் சிறப்பு. "அவற்றை மெய்யனாய் வெளிக்காட்டி நின்றதோர் அற்புதம்" வேந்தனாய் வெளிநின்றதோர் அற்புதம். அடித்து அடித்து அக்காரம் முன் தீற்றிய அற்புதம்" என அனுபூதிமான்கள் அறிவிப்பவாற்றால் அறிக.

இங்ஙனம் அனுபவம் பெறுதலே சற்சீடன் இயல் என்றலின் அதிகார இயைபு அறிக.

பதினான்கு மந்திரங்களானும், சற்குருவை அடுத்து, திருவடிச்சார்பு ஒன்றையே நாடிச் சிவப்பணி செய்து சிவானுபவம் பெறுதலை பக்குவன் இயல்பு என உணர்த்தத் தொடங்கி பக்குவன் சற்குரு இவர்கள் இலக்கணங்களையும், உபதேசத்திற்குரிய நாட்கள், வேதாந்த சித்தாந்த வேறுபாடு, உண்மை அனுபவம் இவற்றை உணர்த்தினார் சிவயோகியாகிய திருமூல தேவநாயனார்.

**ஆறாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.**

***பத்தாம் திருமுறை - திருமந்திரம் 4, 5, 6***

## பாட்டு முதற்குறிப்பகராதி